# இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு

ம. முகம்மது உவைஸ்
பீ. மு. அஜ்மல் கான்

தொகுதி - 3



O-(அ)v
N94
21319

பதிப்புத்துறை
காமராசர் பல்கலைக்கழகம்

# இஸ்லாமிய
# தமிழ் இலக்கிய
# வரலாறு

தொகுதி மூன்று

**சிற்றிலக்கியங்கள்**

ம. முகம்மது உவைஸ்
பீ. மு. அஜ்மல் கான்

பதிப்புத் துறை





மதுரை காமராசர் பல்கலைக் கழகம்
மதுரை-625 021.
1994

(c) பதிப்புத்துறை,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை-625 021.

Publications Division,
Madurai Kamaraj University,
Madurai-625 021.

பதிப்பு எண் : 120 விலை : ரூ. 70/-

நூலகக் குறியீடு : 0 31 (Q7) v
N4

பதிப்பு விவரங்கள் :

1. ஆசிரியர்கள் : அறிஞர் ம. முகம்மது உவைஸ்,
அறிஞர் பீ. மு. அஜ்மல் கான்

2. தலைப்பு : இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு
தொகுதி மூன்று - சிற்றிலக்கியங்கள்.

3. பதிப்பு

(அ) இடம் : மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை-625 021

(ஆ) பதிப்பித்தோர் : பதிப்புத்துறை,
: மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

(இ) ஆண்டு : 1994 (முதற் பதிப்பு)

4. பக்கங்கள் : 8+606
5. பொருள் : இலக்கிய வரலாறு
6. அச்சும் அமைப்பும் : திரீயெம் பிரிண்டர்ஸ், சென்னை-1.



Dr. M. D. K. KUTHALINGAM, D.Sc.
Vice Chancellor
Madurai Kamaraj University

Palkalai Nagar,
Madurai-625 021.

# அணிந்துரை

மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் நிறுவப்பட்டுள்ள இஸ்லாமியத் தமிழிலக்கியத் துறை இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றினை எழுதும் பணியில் ஈடுபட்டுள்ளது. ஏற்கெனவே இரண்டு தொகுதிகள் வெளியிடப்பட்டுள்ளன. தற்போது ''இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாறு - தொகுதி மூன்று'' பல்கலைக் கழகப் பதிப்புத் துறையின் வழி வெளியிடப்பெறுகின்றது.

இத்தொகுதி இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் பற்றி விரிவாக எடுத்துரைக்கிறது. இந்நூலை முன்னாள் பேராசிரியர் டாக்டர் ம மு. உவைஸ் அவர்களும் தற்போதைய இஸ்லாமியத் தமிழிலக்கியத் துறைத் தலைவர் டாக்டர் பீ. மு. அஜ்மல்கான் அவர்களும் ஒருங்கிணைந்து உருவாக்கியுள்ளனர்.

இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள், (1) குறுங்காப்பியங்கள், (2) முஸ்லீம் தமிழ்ப் பிரபந்தங்கள், (3) முஸ்லீம் மரபுப் பிரபந்தங்கள், (4) மக்கள் வழக்குப் பிரபந்தங்கள் என்ற நான்கு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு விளக்கப்பட்டுள்ளன. முதற் பிரிவில் இஸ்லாமியச் சமயத்தை அடிப்படையாகக் கொண்டு தோன்றிய குறுங்காப்பியங்கள் விரிவாக விளக்கப்பட்டுள்ளன. குறுங்காப்பியங்களுக்குரிய அமைப்பும் உள்ளடக்கமும் நன்கு விளக்கப்பட்டுள்ளன. இரண்டாவதாகிய முஸ்லீம் தமிழ்ப் பிரபந்தங்கள் என்னும் பகுதியில் இஸ்லாமியர் தமிழுக் களித்த சிறப்பிலக்கிய வடிவங்களான 'படைப்போர்', 'முனாஜாத்து', 'கிஸ்ஸா', 'மஸ்அலா', 'நாமா' ஆகிய இலக்கியங்கள் பற்றிய ஆய்வுரைகள் தனித்தனியே இடம் பெற்றுள்ளன. மேலும் விரிவான ஆய்வுக்குரியவை இந்நூல்கள் என ஆசிரியர்கள் சுட்டிக் காட்டியுள்ளனர்.

''முஸ்லீம் மரபுப் பிரபந்தங்கள்'' என்ற மூன்றாம் பகுதியில் கலம்பகம், அந்தாதி, சதகம், கோவை போன்ற தமிழ்ச் சிற்றிலக்கிய

மரபுகளைப் பின்பற்றி அமைந்த இஸ்லாமியத் தமிழ் நூல்கள் பற்றி விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

''மக்கள் வழக்குப் பிரபந்தங்கள்'' என்ற தலைப்பின் கீழ்த் திருப்புகழ், கீர்த்தனை, கும்மி, சிந்து, குறவஞ்சி என்ற பெயர்களில் அமைந்துள்ள இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் நன்கு விளக்கப் பட்டுள்ளன.

முஸ்லீம் புலவர் பெருமக்களின் தமிழ்ப் பற்றினையும் தமிழ்த் தொண்டினையும் அறிந்துகொள்வதோடு மட்டுமன்றி இஸ்லாமியத் தமிழிலக்கியத்தின் பரப்பையும் வீச்சையும் அறிந்து கொள்ளப் பெரிதும் துணை செய்வது இந்நூல். இந்நூலைப் படைத்த ஆசிரியர் இருவரும் நமது பாராட்டுக்குரியவர்கள்.

இஸ்லாமியத் தமிழிலக்கியத் துறை வெளியிடும் ஐந்தாவது நூல் இது. துறையின் பணி பாராட்டுக்குரியது. தமிழ் மக்கள் இந்நூலைப் படித்துப் பயன் பெற வேண்டுகிறேன்.

அன்பன்,

(மே. த. கு. குத்தாலிங்கம்)

மதுரை
10—1—1994

# பதிப்புரை

மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் இயங்கிவரும் இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்துறை, இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாற்றினை ஆறு பெருந்தொகுதிகளில் உருவாக்கும் பணியில் முனைந்துள்ளது. இம் முயற்சியில் வெளிவரும் மூன்றாவது தொகுதி இந்நூல். இத்தொகுதி இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கிய வகைகளை விவரிக்கிறது.

இது இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்துறை, மதுரை காமராசர் பல்கலைக் கழகப் பதிப்புத்துறையின் மூலமாக வெளியிடும் ஐந்தாவது நூல். இந்நூலின் ஆசிரியர்களுள் ஒருவராகிய டாக்டர் ம. முகம்மது உவைஸ் இஸ்லாமியத் தமிழ் இலக்கியத் துறையின் முன்னாள் தலைவராவார். மற்றொருவரான டாக்டர் பீ. மு. அஜ்மல் கான் இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்துறையின் இந்நாள் தலைவராகப் பணிபுரிகிறார். இவ்விரு ஆசிரியர்களுக்கும் எமது நன்றி.

இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாற்றின் மூன்றாம் தொகுதிக்குச் சிறப்பானதோர் அணிந்துரையை எமது பல்கலைக் கழகத் துணை வேந்தர் டாக்டர் மே. த. கு. குத்தாலிங்கம் அவர்கள் நல்கியுள்ளார்கள். அவர்களுக்கு எம் நன்றி.

இந் நூலின் அச்சுப் படிகளைத் திருத்தித் தந்த ஜனாப். எம். சையித் முகம்மது (ஹஸன்) அவர்களுக்கும், சிறப்பான முறையில் அச்சிட்டு நூலுருவாக்கித் தந்த திரீயெம் அச்சகத்தாருக்கும் இதய பூர்வமான நன்றி.

இங்ஙனம்,

மதுரை-625 021, **டாக்டர் அ. விநாயக மூர்த்தி.**

நாள் : 15-3-1994. பதிப்பு அலுவலர்.

## மதுரை காமராசர் பல்கலைக் கழகப் பதிப்புத்துறை வெளியீடுகள்

## இஸ்லாமியத் 'தமிழ் இலக்கியத் துறை' நூல்கள்

| | | விலை ரூ பை |
|---|---|---|
| 1. | தமிழ் இலக்கிய அறபுச் சொல் அகராதி | 23-50 |
| 2. | இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு தொகுதி ஒன்று—தொடக்க காலம் | 46-50 |
| 3. | இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு தொகுதி இரண்டு—காப்பியங்கள் | 70-00 |
| 4 | இஸ்லாமியத் தமிழ் இலக்கிய நூல் விவரக் கோவை | 60-00 |
| 5. | இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு தொகுதி மூன்று—சிற்றிலக்கியங்கள் | 70-00 |

# பொருளடக்கம்

# நன்றியுரை

இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு—மூன்றாந் தொகுதி மதுரை காமராசர் பல்கலைக் கழக இஸ்லாமியத் தமிழ் இலக்கியத் துறையின் ஐந்தாவது வெளியீடாகும்.

இந்த வெளியீடு மலர்வதற்குக் காரணமான அனைவருக்கும் எமது ஆழ்ந்த நன்றி உரித்தாகுக.

இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு மூன்றாந் தொகுதிக்கு சிறந்த ஓர் அணிந்துரை வழங்கிய மதுரை காமராஜர் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் மே. த. கு. குத்தாலிங்கம் அவர்களுக்கு எமது உளமார்ந்த நன்றியைத் தெரிவிக்கக் கடமைப் பட்டுள்ளோம்.

எமது எல்லா வெளியீடுகளையும் சிறந்த முறையில் தயாரித்து பதிப்பித்து வெளிக் கொணர்ந்த மதுரை காமராசர் பல்கலைக்கழக பதிப்புத் துறை அளப்பரிய பணிபுரிந்துள்ளது. அந்தக் கால கட்டத்தில் பதிப்புத்துறை அலுவலர் பலரும் தொண்டாற்றி உள்ளனர். அவர்கள் அனைவருக்கும் நன்றி கூறுவதுடன், தற்போதைய பதிப்பு அலுவலர், டாக்டர் அ. விநாயக மூர்த்தி அவர்களுக்கும் எமது நன்றி உரித்தாகும்.

இந்தத் தொகுதிக்கான சிறப்புச் சொல்லடைவு அகர வரிசையை தயாரித்த சென்னை, புதுக்கல்லூரி தமிழ்ப் பேராசிரியர் மு. இ. அகமது மரைக்காயர் அவர்களுக்கும் எம் நன்றி உரித்தாகும்.

இந்தத் தொகுதியின் அச்சுப் படிகளை திருத்துவதன் மூலம் உதவி புரிந்த எம். சையித் முகம்மது (ஹஸன்) அவர்களுக்கும், சிறப்பான முறையில் அச்சியற்றித் தந்த திரீயெம் அச்சகத்தாருக்கும் எமது உளங்கனிந்த நன்றி.

—ஆசிரியர்

# இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு

## தொகுதி மூன்று

# இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள்

மக்களின் வாழ்க்கைமுறை வேறுபாட்டிற்கும், காலச் சூழ்நிலை மாற்றங்களுக்கும் பின்புலங்களுக்கும் ஏற்பவே எந்தவொரு மொழியிலும் இலக்கியங்கள் மாற்றங்களைப் பெறுகின்றன. காரணம் இலக்கியங்கள் எந்தவொரு காலகட்டத்தில் தோன்றினாலும் அதனுடைய அடித்தளமாக அமைவது அவ்விலக்கியம் தோன்றிய காலத்தின் சமுதாய வாழ்க்கை முறையாகவே இருக்கும். சமுதாயமும், அச்சமுதாயத்தில் வாழ்வோரின் மனப்போக்கும் இலக்கியங்களில் பிரதிபலிக்காமல் இருப்பதில்லை. இவ்வகையில் தமிழ்ச் சமுதாயத்தின் பல்வேறு மாற்றங்களுக்கு ஏற்பவே தமிழிலக்கியம் தன்னகத்தே பல்வேறான வளர்ச்சி நிலைகளைக் கொண்டிலங்குகிறதெனலாம். இலக்கியப் படைப்புக்களுள் பல்வேறு மாற்றங்களைக் காலந்தோறும் பெற்று வந்துள்ள தமிழிலக்கியத்துள் தனிநிலைப் பாடல்களுக்கும் காப்பியங்களுக்கும் இடைப்பட்ட நிலையில் தோன்றிய ஓர் இலக்கியப் பிரிவே சிற்றிலக்கியங்களாகும்.

சங்கப் பாடல்கள் பலவும் தனிநிலைப் பாடல்களில் அடங்கும். சங்க காலத்திற்கு அடுத்த நிலையில் தோன்றிய சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற இன்னபிற இலக்கியங்கள் காப்பியங்களாக் கொள்ளப்பட்டு இவற்றைப் பேரிலக்கியம் என்னும் பிரிவின்கீழ் அடக்குவர். இப்பேரிலக்கியப் பிரிவில் அடங்கும் அனைத்து இலக்கிய்ங்களும் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பொருள் பற்றியும் விரிவாக எடுத்துரைப்பனவாகும். இத்தகைய பொருளமைதியிலிருந்து மாறுபட்டு, இந்நாற்பொருளுள் ஏதேனும் ஒன்று அல்லது இரண்டினை எடுத்துரைக்கும் இலக்கியங்களே சிற்றிலக்கியம் என்னும் பிரிவாகும்.

**சிற்றிலக்கியங்களின் தோற்றமும் வளர்ச்சியும்**

தமிழிலக்கிய வரலாற்றின் இடைக்காலமே சிற்றிலக்கியங்களின் பொற்காலமாகக் கருதப்படுகின்றது. தமிழக வரலாற்றின் சமய எழுச்சி காலத்தில் அதுவும் குறிப்பாகப் பல்லவ மன்னர்கள் காலத்திலேயே பேரிலக்கியங்களிலிருந்து மாறுபட்ட இலக்கிய அமைப்புக்கள் தமிழில் தோன்றிப் பெருகலாயின. சங்க இலக்கியம், காப்பிய இலக்கியங்களுக்குப் பின் தமிழிலக்கிய உலகில் ஏற்பட்ட இருண்டகாலப் பகுதியானது கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டிற்குப் பின்னரே சிற்றிலக்கியங்களின் தோற்றத்தால் ஒளிமயமானது.

சிற்றிலக்கியம் என்பது தமிழுலகில் பிரபந்தம் என்னும் வட சொல்லாலும் குறிக்கப்படுகின்றது. இவ் வடசொல்லின் நேரடியான பொருள் 'நன்கு கட்டப்பட்டது' என்பதாகும். இத்தகைய இலக்கிய அமைப்பில் அடங்கும் தமிழ் இலக்கியங்கள் தொண்ணூற்றாறு என்பதே தமிழ் இலக்கிய உலகில் பெரிதும் நிலவுகின்ற கருத்தாகும். கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் தோன்றத் துவங்கி இன்றைய காலகட்டம் வரை தோன்றிக் கொண்டிருக்கும் சிற்றிலக்கியங்களின் எண்ணிக்கை தொடர்பான இவ்வரையறை பிற்காலத்தில் தோன்றியதாகத்தானிருக்க வேண்டும். காரணம் முந்திய காலத்தில் தோன்றிய எந்தவொரு பாட்டியல் நூல்களும் சிற்றிலக்கியங்கள் தொண்ணூற்றாறு என்று குறிப்பிடவில்லை. பதினெட்டாம் நூற்றாண்டில் தோன்றிய பிரபந்த மரபியலில்,

பிள்ளைக் கவி முதல் புராணம் ஈறாகத்
தொண்ணூற்றாறு என்னும் தொகையதாம்

என்றும், 19-ஆம் நூற்றாண்டில் தோன்றிய பிரபந்த தீபிகை,

பதினாறை யாறிற் பெருக்கிப் பிரபந்தாதி
பலவகை எடுத்துரைக்கின்

என்றும் குறிப்பிடுகின்றன. இவ்விரண்டு இலக்கண நூல்கள் தவிர ஏனைய பாட்டியல் நூல்களுள் பன்னிருபாட்டியல் 61 சிற்றிலக்கியங்கள் பற்றியும், வெண்பாப் பாட்டியல் 55 சிற்றிலக்கியங்கள் பற்றியும், நவநீதப் பாட்டியல் 44 சிற்றிலக்கியங்களைப் பற்றியும், கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் தோன்றிய சிதம்பரப் பாட்டியல் 63 சிற்றிலக்கியங்களைப் பற்றியும், கி.பி. 17இல் தோன்றிய இலக்கண விளக்கப் பாட்டியல் 63 சிற்றிலக்கியங்களைப் பற்றியும் எடுத்துரைக்கின்றன.

எனவே பாட்டியல் இலக்கண நூல்களை அடிப்படையாகக் கொண்டு சிற்றிலக்கியங்களின் எண்ணிக்கை தொடர்பாக ஒரு முடிவுக்கு வரமுடியாத நிலை காணப்படுகின்றதெனலாம். சிற்றிலக்கியங்கள் தொண்ணூற்றாறு என்ற வரையறை தமிழிலக்கிய வரலாற்றின் ஒரு குறிப்பிட்ட காலப்பகுதியில், குறிப்பாக 18-ஆம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றியிருக்க வேண்டும். அதனால்தான் இக்கால எல்கையில் தோன்றிய பிரபந்த தீபிகையில் மட்டும் இவ்வெண்ணிக்கை குறிக்கப்பட்டுள்ளது. மேலும் 18ஆம் நூற்றாண்டிற்கு முன்னர் இத்தனை எண்ணிக்கையில் சிற்றிலக்கியங்கள் இருந்திருக்குமா என்பதும் ஐயமாகவே உள்ளது. அதேபோல் 19 ஆம் நூற்றாண்டு முதல் இன்றைய நிலைவரை பல புதிய சிற்றிலக்கியங்கள் தோன்றிய வண்ணம் இருப்பதை நாம் காணலாம். இத்தொண்ணூற்றாறு

என்னும் எண்ணிக்கையுள் அடங்காத வஞ்சி, வளமடல், பெயர் இன்னிசை போன்ற இன்னபிற இலக்கியங்களும் சிற்றிலக்கிய அமைப் பினையே கொண்டிருப்பதனால் இப்பிரிவுகளையும் சிற்றிலக்கியங்களின் எண்ணிக்கையுள் அடக்க வேண்டியுள்ளது. இவ்வாறாயின் தொண் ணூற்றாறு என்ற எண்ணிக்கை பெருகிவிடும். இது மட்டுமின்றி பாட்டியல் நூல்களில் அடங்காதுள்ள தேவபாணி, யானைத் தொழில், செந்தமிழ் மாலை, மறக்களவஞ்சி, மெய்க்கீர்த்தி முதலான பல இலக்கியப் பிரிவுகளுக்கும் பாட்டியல் நூல்களில் இலக்கணம் கூறப்பட் டுள்ளதால் அக்காலத்திலேயே தொண்ணூற்றாறு என்ற எண் வரை யறைக்கும் அடங்காத பல சிற்றிலக்கியங்கள் இருந்திருக்கின்றன என்பது பெறப்படுகின்றது. இதே போல் தொண்ணூற்றாறு சிற்றிலக்கி யங்களுள் அடங்கியுள்ள இயன்மொழி வாழ்த்து, எழு கூற்றிருக்கை போன்ற பலவற்றிற்குப் பன்னிரு பாட்டியல், வெண்பாப் பாட்டியல் முதலான இன்னபிற இலக்கண நூல்களும் ஏதும் கூறவில்லை என் பதும் இங்குக் குறிக்கத்தக்கதாகும்.

சிற்றிலக்கியங்களில் எண்ணிக்கையில் மட்டுமின்றி சிற்றிலக்கியங் களை வரிசைப்படுத்துதலிலும் பாட்டியல் நூல்களிடையே கருத்து வேறுபாடு காணப்படுகின்றது. சில இலக்கண நூல்கள் 'சதகம் முதலாக காப்பியம் ஈறாகவும்' இன்னும் சில 'பிள்ளைக்கவி முதலாகப் புராணம் ஈறாகவும்' சிற்றிலக்கியங்களை வரிசைப்படுத்துகின்றன. எனவே சிற்றிலக்கியங்கள் தொண்ணூற்றாறு என்னும் எண்ணிக்கைக்கு உட்படாது என்பது தெளிவாகும். காலம், சூழ்நிலை, மக்களின் விருப்பம் இவற்றிற்கேற்ப பல சிற்றிலக்கியங்கள் இனியும் தோன்றக் கூடும். இன்றைய நிலையில் ஏறத்தாழ நூற்றிருபது சிற்றிலக்கியப் பிரிவுகளைத் தமிழ்மொழி தன்னகத்தே கொண்டிலங்குகின்றது எனலாம்.

இன்றைய நிலையில் நூற்றிருபது சிற்றிலக்கியப் பிரிவுகள் காணப் படினும் இவைகள் ஒவ்வொன்றின் தோற்றத்திற்கும் வெவ்வேறான காரணங்கள் காணப்படுகின்றன. தொல்காப்பியரின் நூற்பாக்களான,

குழவி மருங்கினும் கிழவதாகும்
(தொல்: பொருள்: புறத்திணையியல்: 82)

ஊரொடு தோற்றமும் உரித்தென மொழிப
(தொல்: பொருள்: புறத்திணையியல்: 83)

கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறார்க்கு அறிவுற இச்
சென்று பயனெதிர்ச் சொன்ன பக்கமும் (தொல்: பொருள்: 1034)

என்பன முறையே பிள்ளைத் தமிழ், உலா, ஆற்றுப்படை என்னும் சிற்றிலக்கியப் பிரிவுகளாகப் பிற்காலத்தே உருப்பெற்றன என்ற கருத்து நிலவுகின்றது. மேலும் தொல்காப்பியர் புறப்பொருள் துறைகளாகக் குறிப்பிடும் களவஞ்சி, காஞ்சிமாலை, நொச்சிமாலை, புறநிலை வாழ்த்து, வாயுறை வாழ்த்து, இயன்மொழி போன்ற இன்னபிறவும் பிற்காலத்தே அவ்வப் பெயர்களிலேயே சிற்றிலக்கியங்களாகத் திகழ்வதைக் காணமுடிகின்றது. எனவே சிற்றிலக்கியங்களின் பிரிவுகள் தோன்றிப் பெருக தொல்காப்பியம் இரு நிலைகளில் காரணமாக அமைந்திருக்கின்றது. (1) தொல்காப்பியர் கூறியிருக்கும் பொருள் விளக்கங்கள் பிற்காலத்தே வேறு பெயர் பெற்று சிற்றிலக்கியப் பிரிவுகளாகத் திகழுதல். இந்நிலைக்குச் சான்றாதாரமாக ஆற்றுபடை உலா முதலான சிற்றிலக்கியங்களைக் கூறலாம். (2) தொல் காப்பியர் கூறியுள்ள அகத்திணை, புறத்திணைத் துறைகள் அதே பொருள் விளக்கங்களுடனும், அஃதே பெயருடனும் தனித்தனி சிற்றிலக்கியங்களாக வளர்ச்சி பெற்றிருத்தல். இதற்கு எடுத்துக் காட்டாக தொல்காப்பியர் கூறும் பாடாண்துறைகளான இயன்மொழி வாழ்த்து, வாயுறை வாழ்த்து முதலானவைகள் பிற்காலத்து அதே பெயரில் தனித்ததொரு சிற்றிலக்கியமாக வளர்ச்சி பெற்றிருத்தலைக் கூறலாம். எனவே சிற்றிலக்கியப் பிரிவுகளின் பெருக்கத்திற்கு தொல்காப்பியம் ஓர் அடித்தளமாகவே அமைந்துள்ளது எனின் அது மிகையாகாது.

தொல்காப்பியம் சிற்றிலக்கியங்களின் பெருக்கத்திற்குக் காரண மாவது போல் சங்க இலக்கியங்கள் போன்ற இன்னபிற இலக்கியப் பிரிவுகளில் இடம் பெற்றிருக்கும் சிறிய பகுதிகள், பொருள் விளக்கங்கள் முதலானவைகளும் பிற்காலத்தே தனித்த சிற்றிலக்கியங் களாக விளங்குவதைக் காணமுடிகின்றது. இத்தகைய நிலைகளை அடித்தளமாகக் கொண்டு தோன்றிய சிற்றிலக்கியங்களுக்குச் சான்றாக பாதாதிகேசம், குறத்திப்பாட்டு முதலானவற்றைக் கூறலாம். பிற சங்க இலக்கியங்களில் குறத்தி பாடுவதாக அமைந்துள்ள பாடலே பின்னால் குறம் என்னும் சிற்றிலக்கியமாக மலர்ந்துள்ளது. இதே போல் சங்க இலக்கியங்களின் கருப்பொருளாக விளங்கிய அகம், புறம் ஆகிய கருத்துக்களின் கலவைகளும் கலம்பகம், கலம்பகமாலை ஆகிய சிற்றிலக்கியங்களாக உருவம் பெற்றன. இவையன்றி பக்தி எழுச்சி காலத்தே இறைவனைத் தலைவனாகக் கொண்டு பாடல்களின் எண்ணிக்கை வேறுபாட்டிற்கேற்ப பல்வேறு பெயர் பெற்ற சிற்றிலக்கி யங்களும் தோன்றலாயின. சான்றாகக் கலித்துறையால் முப்பது பாடல்கள் பாடுவது மும்மணிக்கோவை என்னும் சிற்றிலக்கியமாகவும், வெண்பாவில் முப்பது பாடல்கள் பாடுவது தண்டகமாலை எனவும் வழங்

கப்படுதலைக் கூறலாம். இடம்பெறும் பாடல் எண்ணிக்கையின் அடிப்படையிலேயே சதகம் போன்ற சிற்றிலக்கியங்களும் உருவாயின.

எனவே, இன்றைய நிலை வரையில் சிற்றிலக்கியப் பிரிவுகளின் வளர்ச்சிக்கு மேலே காட்டிய பல்வேறு நிலைகள் காரணமாக அமைகின்றன எனலாம். எனினும் சிற்றிலக்கியங்களாக இன்றைய நிலையில் உள்ள அனைத்தும் தனித்தனி கருப்பொருளையும் கருத்தமைப்புக்களையும் உடையனவெனக் கூறவியலாது. சான்றாகக் கலம்பக இலக்கியத்துள் உலா, தூ து, குறம் போன்றவைகள் உறுப்புகளாக இடம்பெறுகின்றன. பவனி வரும் தலைவனைப் புகழ்ந்து பாடுதல் உலா; தலைவனைப் பிரிந்து தனித்து வாடும் தலைவி தன் இயலாமையை எடுத்துரைக்க பறவை போன்ற இன்ன பிறவற்றைத் தலைவனிடம் தூதாக அனுப்புதல் தூது; தலைவனைப் பிரிந்து துயருறும் தலைவியின் குறிப்பறிந்து அவளை வந்தடையும் தலைவன் குறித்து குறத்தி, குறி கூறுவதாக அமைவது குறம் என்பதின் பொருளமைதியாகும். இத்தகைய பொருளமைதிகள் ஒவ்வொன்றுமே தனித்த சிற்றிலக்கியங்களாக இடம்பெற்றிருத்தலைக் காணலாம். எனவே காலப் பின்புலத்திற்கு ஏற்பவும் ஒவ்வொரு கருப்பொருள்களும் பல்வேறு தனித்த சிற்றிலக்கியங்களாகத் திகழ்கின்றன எனலாம்.

## தமிழும் இஸ்லாமும்

இவ்வாறு தோன்றிப் பெருகியுள்ள தமிழ்ச் சிற்றிலக்கியங்களின் எல்கைப் பரப்பில் சமயங்கள் முக்கிய இடம்பெறுகின்றன. தமிழ் ஒரு சமயத்தாருக்குரிய மொழியாக அல்லாமல் அனைத்துச் சமயத்தாராலும் பேணி வளர்க்கப்பட்டுள்ளது. சிற்றிலக்கியங்களின் வளர்ச்சியை நோக்குவோமானால் தமிழகத்தில் சமயங்களும் இலக்கியங்களும் ஒன்றை ஒன்று சார்ந்து வளர்ந்துள்ளது நன்கு புலப்படும். தமிழுக்கும், சமயங்களுக்குமிடையே உள்ள சார்புக் கொள்கையை நமக்குத் தெளிவாக எடுத்துக்காட்டுவது தமிழிலக்கிய வரலாற்றின் இடைக்காலப் பகுதியே ஆகும். சமயங்கள் தங்கள் தங்கள் வழிபாட்டுக் கொள்கைகளை எடுத்துரைப்பதற்குத் தமிழ்மொழியைக் கருத்துப் பரிமாற்றச் சாதனமாகப் பயன்படுத்திக்கொண்டன. இவ்வகையில் இந்து சமயங்கள் மட்டுமல்லாமல் அயல்நாடுகளிலிருந்து இங்கு வந்து பரவிய இஸ்லாமிய, கிறித்துவ சமயங்களும் தமிழ்மொழியை நிலைக்களமாகக் கொண்டு தங்கள் சமயக் கோட்பாடுகளை எடுத்துரைத்தன. எனவே பக்தி மார்க்கம் என்ற பின்புலத்தினடிப்படையில் தோன்றிப் பெருகியுள்ள தமிழ்ச் சிற்றிலக்கியங்களுள் இஸ்லாமும் ஒரு முக்கிய

இடத்தைப் பெறுகிறது. இஸ்லாமியச் சிற்றிலக்கியங்கள் பற்றிக் குறிப்பிடுவதற்குமுன் இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றின் தொடக்கத்தை அதன் பின்னணியுடன் இங்குச் சுருக்கிக் குறித்தல் அவசியமாகும். ஏனெனில் இஸ்லாமும் தமிழும் இணைந்த பின்பே இஸ்லாமியச் சிற்றிலக்கியங்கள் என்ற தனிப்பெரும் பிரிவு இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றில் உதயமாயிற்று.

## இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் ஓர் அறிமுகம்

இரண்டாயிரத்துக்கும் மேற்பட்ட தலைப்புக்களைப் பெற்றுள்ள இஸ்லாமியத் தமிழிலக்கியங்களுள் சிற்றிலக்கியங்கள் ஒரு பெரும் பிரிவாகக் காட்சியளிக்கின்றன. எண்ணிக்கை அளவில் மூன்றில் ஒரு பகுதியான இஸ்லாமியத் தமிழிலக்கியங்கள் சிற்றிலக்கியப் பிரிவினையே சார்ந்துள்ளன. இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றின் ஆரம்ப காலம் முதல் இன்றைய காலம் வரையில் பல்வேறு தமிழ்ச் சிற்றிலக்கியப் பிரிவுகளைச் சார்ந்தனவாக எழுநூறுக்கும் குறையாத இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் தோன்றியுள்ளன. இவைகள் பெரும்பாலும் கோவை, சதகம், கலம்பகம், அந்தாதி, மாலை, பிள்ளைத்தமிழ், தூது, பதிகம், இன்னிசை, குறவஞ்சி, தசரத்தினம், அலங்காரம், சரமகவி, பல்சந்தமாலை, வாயுரை வாழ்த்து, திருமண வாழ்த்து, ஒருபா ஒருபஃது, பஃறொடை, ஆற்றுப்படை, பள்ளு, சதுர்ப்பிரபந்தம், மஞ்சரி முதலான இன்னபிற தமிழ்ச் சிற்றிலக்கியப் பிரிவுகளையே சார்ந்துள்ளன. இப்பிரிவுகள் ஒவ்வொன்றிலும் ஒன்று முதல் இரு நூறுக்கும் மேற்பட்ட எண்ணிக்கைகளைக் கொண்ட இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களைக் காணலாம்.

இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கிய வடிவங்களுள் எண்ணிக்கை அளவில் மிக அதிகமான நூல்களைப் பெற்றிருப்பது மாலை என்னும் சிற்றிலக்கிய வடிவமே ஆகும். மாலை இலக்கிய வடிவத்தில் அமைந்த சுமார் இருநூறுக்கும் மேற்பட்ட இலக்கியங்களை இஸ்லாமியத் தமிழ் தன்னகத்தே பெற்றுள்ளது. எனவே இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியப் பிரிவுகளுள் மாலை இலக்கியங்கள் முக்கிய இடம்பெறுகின்றன எனலாம். இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களில் மட்டுமல்லாது இஸ்லாமியத் தமிழிலக்கிய வாலாற்றிலும் மாலை இலக்கியப் பிரிவு சிறப்பிடம் பெறுகிறது. காரணம் இஸ்லாமியத் தமிழுலகில் தோன்றிய முதல் ஐந்து நூல்களுள் மூன்றான பல்சந்தமாலை, மிஃறாஜ் மாலை, கனகாபிஷேகமாலை ஆகியன மாலை என்னும் பெயரைக்

கொண்டுள்ளன. அத்துடன் பல்சந்தமாலை என்னும் இலக்கியமே இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றிற்கு அச்சாரமிட்ட பெருமையையும் பெற்றுள்ளது என்பது இங்குக் குறிக்கத்தக்கதாகும்.

இஸ்லாம், தமிழுலகில் இடம்பெறத் தொடங்கியதும், இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியத்தின் தொடக்கமும் பன்னிரெண்டாம் நூற்றாண்டுக்கு முன்னர் நிகழ்ந்துள்ளது எனலாம். இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் கி.பி. பன்னிரெண்டு, பதினைந்து, பதினாறு, பதினேழு, பதினெட்டு, பத்தொன்பது, இருபதாம் நூற்றாண்டுகளாகிய ஏழு நூற்றாண்டு கால எல்கைக்குட்பட்டன ஆகும்.

**தமிழிலக்கிய வரலாற்றில் இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள்**

மேற்குறித்த அளவில் பரந்துவிட்ட கால எல்லையையும், எண்ணிக்கையில் பல நூறு இலக்கியங்களையும் பெற்றுள்ள இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களுக்குத் தமிழ் இலக்கிய உலகம் உரிய இடம் அளிக்கவில்லை. இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் மட்டுமல்லாது இரண்டாயிரத்துக்கும் மேற்பட்ட பல்வேறு இலக்கியங்களையும், இஸ்லாமிய புதிய தமிழிலக்கிய வடிவங்களையும் (கிஸ்ஸா, மசலா படைப்போர், முனாஜாத்து, நாமா முதலான இலக்கிய வடிவங்கள்), சிற்றிலக்கியங்களையும் பெற்றுச்சிறக்கும் இஸ்லாமியத் தமிழின்மொத்த உருவமே தமிழிலக்கிய வரலாற்றில் மறைக்கப்பட்டிருப்பது மறுக்க முடியாத உண்மை நிலையாகும். இக்கூற்றுக்குச் சான்றாக, தமிழிலக்கிய வரலாறு தொடர்பாக எழுந்துள்ள பல நூல்களிலும் இஸ்லாமியத் தமிழ் பெயரளவில்கூட இடம்பெறாமல் இருப்பதைச் சுட்டிக் காட்டலாம்.

கற்பிட்டி காசிச் செட்டி அவர்கள் 1859-ஆம் ஆண்டில் தமிழ் புளூராக் (Plutarch)என்னும் ஆங்கில நூலை எழுதி வெளியிட்டுள்ளார். இதில் நூற்றித் தொண்ணூற்றேழு தமிழ் பெரியோர்கள் பற்றிக் குறிக்கப்பட்டுள்ளது. இவ்வெண்ணிக்கையில் ஒரு முஸ்லிம் தமிழ்ப் புலவரின் பெயர்கூட இடம்பெறவில்லை. இதேபோல் 1916-இல் ‘தமிழ்ப் புலவர் சரித’த்தை ஆ. குமாரசாமிப் புலவர் எழுதியுள்ளார். இதிலும் 2000க்கும் மேற்பட்ட தமிழ் நூல்களை இவ்வுலகிற்கு அளித்துள்ள முஸ்லிம் புலவர்களின் தமிழ்த் தொண்டு பற்றி ஒரு வரியில்கூட ஆசிரியர் குறிப்பிட்டுக் காட்டவில்லை.தமிழ் இலக்கிய வரலாற்றினை எழுதிய இலங்கையைச் சார்ந்த வி. செல்வநாயகமும் தமது நூலில் இஸ்லாமியத் தமிழுக்கு ஒன்றரைப் பக்கமே அளித்து அதன் முழு இலக்கிய எல்லைப் பரப்பினையும் சுருக்கிக் காட்டியுள்ளார். இது

போன்றே தமிழிலக்கிய வரலாற்றினை எழுதியுள்ள பலரும் இஸ்லாமியத் தமிழின் விரிந்துபட்ட இலக்கியப் பரப்பினை அவர்கள் தம் கண்ணோட்டத்திலேயே மிகமிகச் சுருக்கியே தந்துள்ளனர். டாக்டர் சு. வித்தியானந்தன் அவர்கள் மாத்திரம் தமது இலக்கியத் தென்றல் என்னும் நூலில் உள்ள ஓர் இயலிலும் கலையும் பண்பும் என்னும் நூலில் உள்ள இரண்டு இயல்களிலும் இஸ்லாமியர் தம் தமிழ்த் தொண்டினைக் கோடிட்டுக் காட்டியுள்ளார்.

எனவே இஸ்லாமியத் தமிழின் முழுமையான இலக்கியப் பரப்பே தமிழிலக்கிய உலகில் உரிய இடத்தைப் பெறாததால் இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களும் அவற்றுக்கெனவுள்ள சிறப்பிடத்தைத் தமிழிலக்கிய வரலாற்றில் பெறவில்லை எனலாம். இந்நிலையையும் தமிழ்ச் சிற்றிலக்கியம் தொடர்பாக எழுந்துள்ள பல தமிழ் நூல்கள் நமக்குத் தெளிவாக உணர்த்துகின்றன. இனியும் இந்நிலை தமிழிலக்கிய உலகில் தொடராமல் இருப்பதற்கு இஸ்லாமியத் தமிழுக்கெனவுரிய முறையான இலக்கிய வரலாற்றுச் சுருக்கம் இன்றியமையாத தேவையாகும். இத்தேவையை நிறைவு செய்யும் இஸ்லாமியத் தமிழிலக்கியத்துறை, முன்னாள் துணைவேந்தர் அறிஞர் வ. சுப. மாணிக்கம் அவர்களின் ஆலோசனையின்படி 'இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றினை' சில தொகுதிகளில் வெளிக் கொண்டு வரும் முயற்சியில் ஈடுபட்டுள்ளது இங்குக் குறிக்கத்தக்கதாகும்.

**இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களின் உருவமும் உள்ளடக்கமும்**

இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் அந்தந்த கால தமிழ்ச் சிற்றிலக்கியப் பிரிவுகளின் வடிவத்திற்கேற்ப யாப்பமைதிகளையும், ஏனைய பிற இலக்கண வரையறைகளையும் பெற்றுள்ளது. வடிவம் என்ற நிலையில் இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களை ஏனைய பிற தமிழ்ச் சிற்றிலக்கியங்களிலிருந்து வேறுபடுத்திக் காட்டும் இயல்பு அவற்றின் மொழியே ஆகும். இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் அனைத்தும் அறபு, பாரசீக மொழிகள் கலந்த தமிழ் யாப்பமைதியை பெற்றுச் சிறக்கின்றன. இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களின் பாடுபொருள்கள் பெரும்பாலும் அரபுநாட்டு இஸ்லாமிய வரலாற்றையும், பின்புலத்தையுமே அடிப்படையாகக் கொண்டுள்ளன. எனவே முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள் தம் சிற்றிலக்கியப் படைப்பிற்கு எடுத்துக்கொண்ட பாடுபொருளை நன்கு உணர்த்துவதற்கு அறபு பாரசீகச் சொற்கள் கலந்த மொழியமைப்பை பயன்படுத்திக் கொண்டனர்.

உள்ளடக்கம் என்ற நிலையில் அனைத்து இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களும் அவைகள் சார்ந்துள்ள சிற்றிலக்கிய வடிவத்தின் இலக்கண வரையறைகளுக்கேற்ப ஏதாவது ஒரு விதத்தில் இஸ்லாமியக் கருத்துக்களுடன் தொடர்புடையனவாக அமைந்துள்ளன. எனவே இஸ்லாமியச் சிற்றிலக்கியங்களை அவைகள் சார்ந்துள்ள உள்ளடக்கத்தின் அடிப்படையில் பின்வரும் பத்துப் பெரும் பிரிவுகளுள் அடக்கலாம்.

1. இஸ்லாமிய அடிப்படைச் சமயக் கருத்துக்களையும் நெறி முறைகளையும் மட்டுமே எடுத்துரைக்கும் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் பல உள்ளன. குறிப்பாக இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களின் ஆரம்ப காலகட்டத்தில் இத்தகைய சிற்றிலக்கியங்களே அதிகமாகத் தோன்றின. காரணம் இஸ்லாம் தொடர்பான அறிவுப் பெருக்கத்திற்கு இத்தகைய நூல்களே தேவைப்பட்டன. இவ்வகையிலான இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களில் பாட்டுடைத் தலைவர் என்று யாரையும் சுட்டிக்காட்ட முடியாது. இதன்கண் அமைந்த சிற்றிலக்கியச் செய்யுட்கள் யாவும் முழுக்க முழுக்க சமயக்கருத்துக்களை எடுத்துரைப்பனவாகவே இருக்கும். சான்றாக மச்சரேகைச் சித்தரின் பேரின்ப சதகத்தை எடுத்துக் கொள்வோம். இதில் ஆசிரியர், சதக இலக்கிய வடிவத்திற்குட்பட்டு செய்யுள்களை யாத்துள்ளார். பேரின்ப நிலையை, இஸ்லாத்தின் அடிப்படை இறைவழிபாட்டு நெறியின் மூலமாக அடையும் வழியை வகுத்துக் காட்டுகின்றார். இதேபோல் சாமுநைனா லெவ்வை ஆலிம் அவர்களின் அதபு மாலை என்னும் சிற்றிலக்கியத்தை எடுத்துக் கொண்டால் இதில் இஸ்லாத்தின் அடிப்படையில் தம் வாழ்வை மேற்கொள்ளும் ஒவ்வொருவரும், ஒவ்வொரு நாளும் மேற்கொள்ள வேண்டிய நெறிமுறைகளை ஆசிரியர் விளக்கம் பெறச் செய்துள்ளார். ஒருவர் உண்மையான முஸ்லிம் என்றால் எத்தகைய நெறிமுறைகளை, மார்க்கச் சட்டதிட்டங்களைப் பின்பற்றவேண்டும் என்பதை அதபுமாலை வரையறுத்துக் காட்டுகிறது. இஸ்லாத்தின் அடிப்படைக் கருத்திற்கிணங்க கலிமா (இஸ்லாத்தின் மூலமந்திரம்), ஈமான் (நம்பிக்கை), சக்காத் (தர்மம்) போன்ற ஒவ்வொரு விஷயமும் இந்நூலில் விளக்கம் பெற்றுள்ளன. பெரும்பாலும் இப்பிரிவின் கீழ் எழுந்த இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் முஸ்லிம்களின் சமய அறிவை வளர்க்கும் பொருட்டே இயற்றப்பட்டன. இவ்வாறு இஸ்லாமியச் சமய அறிவினை மட்டுமே புகட்டுவனவாக எண்ணிறந்த இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் பல்வேறு சிற்றிலக்கிய வடிவத்தில் தோன்றியுள்ளன.

2. இஸ்லாமிய வரலாற்று சம்பவங்களை உள்ளடக்கமாகக் கொண்டுள்ள சிற்றிலக்கியங்களாகும். இவ்வகையில் அடங்கும் சிற்றிலக்கியங்களுக்கு இஸ்லாமிய சமயத்தில் குறிப்பிடத்தக்கதாகக் கருதப்படும் ஏதாவது ஒரு வரலாற்றுச் சம்பவமே பாடுபொருளாக அமையும். எடுத்துக்காட்டாக மாலை என்னும் இலக்கிய வடிவத்தி லமைந்த ஆலிப் புலவரால் இயற்றப்பட்ட மிஃறாஜ் மாலையைக் குறிப்பிடலாம். இந்த இலக்கியத்தின் பாடுபொருள் இஸ்லாமிய வரலாற்றில் குறிப்பிடத்தக்க முக்கியத்துவம் பெற்ற நபிகள் நாயகம் (சல்) அவர்களின் விண்ணேற்றப் பயணமாகும். இவ்விண்ணேற்றப் பயணத்தின் போதே நாயகம் (சல்) அவர்களை வானவர் கோன் ஜிப்றயீல் (அலை) அவர்கள் விண்ணிற்கு அழைத்துச் சென்று அங்குள்ள அற்புதங்களைக் காட்டினார்கள். அத்துடன் அறுசிற்கும் (அல்லாஹ்வின் சிம்மாசனம்) நபி (சல்) அவர்கள் சென்று அங்கு அல்லாஹ்வின் பல்வேறு கட்டளைகளையும் பெற்று வந்தார்கள். இஸ்லாமிய வரலாற்றில் இத்தகு காட்சிநிலை யாருக்கும் கிட்டிய தில்லை. இச் சிறப்புப் பெற்ற வரலாற்று நிகழ்ச்சியான விண்ணேற்றப் பயணமே மிஃறாஜ் மாலையில் உள்ளடக்கமாக அமைந்துள்ளது. இதே போல் அபூஷுமா மாலை, திருப்பாலைக்குடி செய்தக் காதிப் புலவர் அவர்களால் இயற்றப்பட்டதாகும். இதில் மூன்றாவது கலிபா (பிரதிநிதி என்று பொருள்படும் இச்சொல் இஸ்லாமிய நெறியில் ஆட்சி செலுத்தியவர்களைக் குறிக்கப் பயன்படுகிறது) உமறு இப்னு கத்தாப் (றலி) அவர்கள் தமது ஆட்சியில் இஸ்லாமிய நீதி முறையை நிலை நாட்டுவதற்காக தமது மகனைத் தண்டித்த வரலாற்றுச் செய்தி இடம் பெற்றுள்ளது. இதுபோன்ற இன்னபிற இஸ்லாமிய வரலாற்று நிகழ்ச்சிகள் பல்வேறு சிற்றிலக்கியங்களுக்கும் உள்ளடக்கச் செய்தியாக அமைந்துள்ளன. இதனடிப்படையில் தோன்றும் இஸ்லாமியச் சிற்றிலக்கியங்களில் இடம்பெறும் பாத்திரங்களைவிட வரலாற்று நிகழ்ச்சியே அதிக முக்கியத்துவம் பெற்றுள்ளது.

3. அல்லாஹ்வின் இறுதித் தூதராம் பெருமானார் நபிகள் நாயகம் (சல்) அவர்களை மட்டுமே பாட்டுடைத் தலைவராகக் கொண்டு எழுந்துள்ள இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களாகும். இஸ்லாமியச் சிற்றிலக்கியங்களுள் எண்ணிக்கை அளவில் அதிகமான சிற்றிலக்கி யங்கள் இவ் உள்ளடக்கப் பிரிவில் அடங்கும். காரணம் இஸ்லாமியச் சகாப்தத்தின் முறையான வரலாற்றுத் துவக்கம் அண்ணல் நபி (சல்) அவர்களின் காலத்திலேயே தொடக்கம் பெறுகிறது. மேலும் ஏனைய பிற தமிழ்ச் சிற்றிலக்கியங்களில் இறைவனைப் பாட்டுடைத் தலைவ ராகக் கொண்டு பாடுவது போல் இஸ்லாமியச் சிற்றிலக்கியங்கள்

எதுவும் இல்லை. காரணம் உருவமற்ற இறைவழிபாட்டு நெறி முறையை அடித்தளமாகக் கொண்டதே இஸ்லாமாகும். எனவே எந்தவொரு இஸ்லாமியத் தமிழிலக்கியத்திலும் அல்லாஹ்வை பாட்டுடைத் தலைவனாகக் கொள்ளவில்லை. பிற சமயத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் பலவும் இறைவனுக்கு முக்கியத்துவம் அளித்து, அவனையே பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு எழுந்தது போல் சிறப்பானதோர் இடத்தை முஸ்லிம் புலவர்கள் அல்லாஹ்வின் தூதுவர்களுள் முக்கிய இடத்தைப் பெற்ற நபி (சல்) அவர்களுக்கு அளித்தனர். இதன் பயனாய் நபி (சல்) அவர்களையே பாட்டுடைத் தலைவராகக் கொண்டு பல்வேறு இஸ்லாமியச் சிற்றிலக்கியங்களை இயற்றியுள்ளனர், முஸ்லிம் புலவர்கள். செய்யது அனபியா சாகிபு அவர்களின் நபிகள் நாயகம் பிள்ளைத்தமிழ், செய்குனாப் புலவரின் மக்காக் கலம்பகம், கவிக்களஞ்சியப் புலவர் அவர்களின் நபியவதார அம்மானை போன்ற இன்ன பல இஸ்லாமியத்தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் பெருமானார் நபி (சல்) அவர்களையே பாட்டுடைத் தலைவராகக் கொண்டுள்ளன. மேலே குறிப்பிட்டுள்ள இஸ்லாமியச் சிற்றிலக்கியப் பிரிவுகளான கோவை, சதகம், அந்தாதி, பதிகம் முதலான இன்னபிற சிற்றிலக்கிய வடிவங்கள் ஒவ்வொன்றிலும் குறைந்த பட்சம் ஒரு சிற்றிலக்கியமாவது அண்ணல் நபி (சல்) அவர்களைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டுள்ளன.

4. அல்லாஹ்வின் அருள்பெற்ற இறைநேசச் செல்வர்களான முகியித்தீன் ஆண்டவர், நாகூர் ஆண்டவர், ஹலறத் சுல்தானுல் லாரிபீன் செய்யிது அகுமதுல் கபீர் றிபாய் ஆண்டவர் போன்ற இன்னபிற ஒலிமார்களைப் பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டு எழுந்துள்ள இஸ்லாமியச் சிற்றிலக்கியங்கள் இப்பிரிவில் அடங்கும். சான்றாக குலாம்காதிறு நாவலரால் இயற்றப்பட்ட குவாலீர் கலம்ப கத்தை எடுத்துக் கொள்வோம். இதில் கலம்பக இலக்கணத்திற் கேற்ப அமைந்த நூறு செய்யுள்கள் இடம்பெற்றுள்ளன. கவுது என்னும் பெயரால் அழைக்கப்படும் அவுலியாவே (இறைநேசச் செல்வர்) இக்கலம்பகத்தின் பாட்டுடைத் தலைவராவார். இவர் வாழ்ந்து மறைந்து விளங்கும் நகரமாகிய குவாலீர் நகரத்தின் பெயரிலமைந்த இக் கலம்பகத்தில் கவுது வலியின் பல்வேறு சிறப்புக் களும் கலம்பக உறுப்புக்களுக்கேற்ப விரித்துரைக்கப்படுகிறது. இது போன்றே பிற ஒலிமார்களைப் பாட்டுடைத் தலைவர்களாகக்கொண்ட இஸ்லாமியச் சிற்றிலக்கியங்களில் அந்தந்த இறைநேசச் செல்வர்களின் பெருமையும், சிறப்பும், வரலாற்று முக்கியத்துவம் விரித்துரைக்கப் படுகின்றன.

5. சில இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் புரவலர்களைப் பாட்டுடைத் தலைவர்களாகப் பெற்றுள்ளன. தமக்குப் பொருள் ஈந்து தம்மை வளப்படுத்தித் தம் புலமையைப் பாராட்டிய பல வள்ளல் களை முன்னிலையாகக்கொண்டு அவர்களது கொடைத் தன்மையையும், அப்புரவலர்களின் நல்லியல்புகளையும் பாடியன இப்பிரிவில் அடங்கும். இதற்குச் சான்றாக மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் புலவராற்றுப் படையைக் கூறலாம். இந்நூல் குலாம் காதிறு நாவலர் அவர்களால் இயற்றப்பட்டதாகும். மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவரிடத்துச் சென்று சிறப்புப் பட்டமும் பரிசிலும் பெற்ற ஒருவர் அச்சிறப்பினைப் பெறாத புலவரிடத்துத் தாம் பெற்று வந்த பெருமையை எடுத்துக்கூறி ஆற்றுப் படுத்துவதாக அமைந்துள்ளது. இது போன்று தனி நபர்களின் வள்ளல் தன்மையை இஸ்லாமியக் கருத்துக்களுடன் இணைத்துப் பாடும் சிற்றிலக்கியங்கள் சிலவே உள்ளன.

6. பல இஸ்லாமியச் சிற்றிலக்கியங்கள் இஸ்லாமிய வரலாற்றில் முக்கியத்துவம் பெறும் புண்ணிய இடங்களைப் புகழ்ந்துரைப்பதையே பொருளாகக் கொண்டுள்ளன. இதனடிப்படையில் முஸ்லிம்களின் புண்ணிய இடங்களான மக்கா, மதீனா, பக்தாத், குவாலீர், அஜ்மீர், நாகூர் போன்ற இன்ன பல நகரங்கள் இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களில் அந்தந்த புண்ணிய இடங்களின் பெருமைகளும் முக்கியத்துவமும் விதந்தோதப்படுகின்றன. அத்துடன் அப்புண்ணிய நகரங்களின் சிறப்புக்குக் காரணமான முஸ்லிம் பெரியாரின் வரலாற்றுப் பின்புலமும் ஆங்காங்கே இச்சிற்றிலக்கியங்களில் இடம் பெற்றிருக்கும். இவ் உள்ளடக்கத்தில் அந்தாதி, கலம்பகம் போன்ற சிற்றிலக்கியப் பிரிவுகளில் அநேக இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்கள் தோன்றியுள்ளன. குலாம் காதிறு நாவலரின் திருமக்காத் திரிபந்தாதியை எடுத்துக்கொள்வோமாகில் இதில் முஸ்லிம்களின் முதல் புண்ணிய நகரமான மக்காவின் எழில் வளமும் வரலாற்றுச் சிறப்பும் எடுத்துக்காட்டப்படுகிறது. இவ் உள்ளடக்கப் பிரிவில் அடங்கும் சிற்றிலக்கியங்களில் பாத்திரங்கள், வரலாற்று நிகழ்வுகள் முதலான வற்றைக் காட்டிலும் அவைகளுக்குக் காரணமான இடத்திற்கே அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது.

7. அகப்பொருளினை அடிப்படையாகக் கொண்ட இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களை உள்ளடக்கத்தினடிப்படையில் தனிப் பிரிவாகக் கொள்ளலாம். இப்பிரிவில் முக்கிய இடம்பெறும் இலக்கிய வகைகள் கோவை, தூது இலக்கியங்களே ஆகும். செவத்த மரைக் காயரால் எழுதப்பட்ட திருமக்காக் கோவை, கோவை இலக்கியத்திற்

குரிய அகப்பொருட் சுவையை உள்ளடக்கமாகப் பெற்றுச் சிறக்கிறது. இதில் மக்கா நகர் வாழும் தலைவன், தலைவியரின் குண நலன்கள் இடம்பெறுகின்றன. மேலும் இஸ்லாமியத் தமிழ்க் கலம்பகங்களிலும் கலம்பக உறுப்புகளுக்கேற்ப அகப்பொருள் சார்ந்த உள்ளடக்கக் கருத்துக்கள் இடம் பெறுவதும் இங்குக் குறிக்கத்தக்கதாகும். மொத்தத்தில் இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களுள் அகப்பொருட் சுவையமைந்த உள்ளடக்கச் செய்யுட்கள் மிகக் குறைவே ஆகும். காரணம் ஏனைய பிற தமிழ்ச் சிற்றிலக்கியங்களைப் போல் அகப் பொருள் கருத்துக்களைப் பாட்டுடைத் தலைவன் தலைவியருடன் தொடர்புபடுத்தி பாடுவதற்கு இஸ்லாமிய மார்க்கம் இடம் தருவ தில்லை. எனவே அகப்பொருட் சுவையில் அமைந்த செய்யுட்களில் கூட நேரிடையாகப் பாட்டுடைத் தலைவர்களை அகப்பொருளுடன் தொடர்புபடுத்தி முஸ்லிம் தலைவர்கள் பாடவில்லை என்பது இங்குக் குறிக்கத்தக்கதாகும்.

8. ஏதேனும் குறிப்பிட்ட இஸ்லாமியச் சமய விழாக்களில் படிப் பதற்காக எழுதப்பட்ட உள்ளடக்கங்களைப் பெற்று சில இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் தோன்றியுள்ளன. சான்றாக நபிகள் நாயகம் (சல்) அவர்கள் பிறந்த மாதமாகிய ரபியுலவ்வலில் (மூன்றாவது இஸ் லாமிய மாதம்) அண்ணல் நபி(சல்)அவர்களின் பெயரில் உணவளிப்பது சிறிய விழாவாக அனைத்து முஸ்லிம்களின் வீட்டிலும் மேற்கொள்ளப் படும். இதனைக் கந்தூரி என்றும் அழைப்பர். இவ்வாறு மேற் கொள்ளப்படும் கந்தூரிவிழாவில் நாயகம் (சல்) அவர்கள் பேரில் மௌலிது ஓதப்படும். மௌலிது என்பதன் நேரடியான பொருள் பிறந்த நாள் என்பதாகும். இச் சொல் பெரும்பாலும் பெருமானார் அண்ணல் நபி (சல்) அவர்களுடையவும் ஏனைய பிற இறைநேசச் செல்வர்களின் பிறந்த நாளைக் குறிக்கவும் பயன்படுத்தப்படுகிறது. இம் மௌலிது, நாயகம் (சல்) அவர்கள் பிறந்த தினமான ரபியுலவ்வல் பிறை பன்னிரெண்டில் ஓதப்படும். அன்றைய தினம் மௌலிதுவிற்கு முன்னர் 'கசீதத்துல் புறுதா' என்னும் அறபு நூல் படிக்கப்பட வேண்டும். இது நபி (சல்) அவர்களின் வாழ்க்கை வரலாற்றினைக் கூறுவதாகும். இதனைப் பாடுவது கடினமென உணர்ந்த காரணத் தினால் இத்தகு வைபவங்களில் மட்டுமே படிக்கத்தக்கதாக 'றசூல் மாலை' என்னும் இஸ்லாமியச் சிற்றிலக்கியம் இயற்றப்பட்டுள்ளது. இந்நூலின் முழுப்பெயர் 'நபியுல்லா மாலை' என்னும் 'றசூல் மாலை' என்பதாகும். இந்நூலை இயற்றியவர் காயற் பட்டினத்தைச் சார்ந்த சாமு நெயினார் லெப்பை என்பவராவர். தற்போது கந்தூரி விழாக்களில் மௌலிது ஓதுவதற்கு முன்னர் அண்ணல் பெருமானாரின் வாழ்க்கை வரலாற்றைச் சுட்டும் 'றசூல் மாலை' என்னும்

சிற்றிலக்கியமே படிக்கப்படுகிறது. இத்தகு முறையில் குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் பயன்படத்தக்க இஸ்லாமியச் சிற்றிலக்கியங்கள் ஒரு சிலவே உள்ளன.

9. முஸ்லிம் மக்கள் வாழ்வின், குறிப்பிட்ட நிகழ்ச்சிகளில் பயன்படத்தக்க பொருள்களை உள்ளடக்கமாகக் கொண்டும் சில இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் தோன்றியுள்ளன. ஒருவர் இறக்கும் தருவாயில் அல்லது இறந்தபின் அவரது உறவினரும், பிள்ளைகளும் கடைப்பிடிக்கத்தக்க நெறிமுறைகளை உள்ளடக்கமாகப் பெற்றதே 'ஒசியத்து மாலை' என்னும் சிற்றிலக்கியமாகும். ஒசியத்து என்னும் அறபுச்சொல் ஒருவன் இறக்கும் தருவாயில் தனது உறவினர் களுக்கு இறுதியாகக் கூறுவதையே குறிப்பதாகும். இந்நூலின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. ஒசியத்து மாலை பொதுவாக மேற் குறித்த சந்தர்ப்பங்களிலேயே பயன்படுத்தப்படுகிறது. இத்தகு உள்ளடக்கங்களைப் பெற்ற இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் ஒரு சிலவே உள்ளன.

10. மேற்குறித்த ஒன்பது உள்ளடக்கப் பிரிவுகளில் அடங்காத பிற இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களை தனித்ததொரு பிரிவாகக் கொள்ளலாம். சில இஸ்லாமியச் சிற்றிலக்கியங்கள் மேற்குறித்த பிரிவுகளில் ஒன்றிற்கு மேற்பட்ட பிரிவுகளுடன் தொடர்புடையதாக இருக்கும். அத்தகைய சிற்றிலக்கியங்களையும் இப்பிரிவில் அடக் கலாம். சான்றாக மதீனக் கலம்பகத்தை எடுத்துக்கொள்வோம். இதன்கண் மதீன நகரம் பல பாடல்களில் பாடுபொருளாக அமைந் துள்ளது. அதேபோல் நபிகள் நாயகத்தின் சிறப்பும் பெருமையும் பல செய்யுட்களில் பாட்டுடைத்தலைவர் என்ற நிலையில் உள்ளடக்கக் கருத்தாக இடம்பெற்றுச் சிறக்கிறது. அத்துடன் கலம்பக உறுப்புக் களுக்கேற்ப ஆங்காங்கே அகப்பொருட் சுவையை மட்டுமே உணர்த்தக் கூடிய பாடல்களும் இடம்பெற்றுள்ளன. எனவே உள்ளடக்கத்தின் அடிப்படையில் அமைந்த மேலே கூறிய பாகுபாட்டுப் பிரிவுகளான மூன்று, ஆறு, ஏழு, ஆகிய மூன்று பிரிவுகளுடனும் தொடர்புடையதாக மதீனக் கலம்பகம் தோன்றுகிறது. இதுபோன்று ஒன்றிற்கு மேற்பட்ட உள்ளடக்கப் பிரிவுகளுடன் தொடர்புடைய இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் பல்வேறு தமிழ்ச்சிற்றிலக்கிய வடிவங்களிலும்

காணப்படுகின்றன. எனவே மேற்குறித்த ஒன்பது பிரிவுகள் ஏதேனும் ஒன்றில் முழுமையாக உள்ளடக்க முடியாத உள்ளடக்கக் கருத்துக் களைப் பெற்றமைந்துள்ள இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களைப் பத்தாவது பிரிவாகக் கொள்ளலாம்.

மேற்காட்டிய உருவம், உள்ளடக்கம் பற்றிய கருத்துக்களின் அடிப்படையில் இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களை வகைப் படுத்தலாம். எனினும் உள்ளடக்கத்தினை அடிப்படையாகக் கொண்டு மேற்கொள்ளப்படும் பகுப்பாய்வு ஒரு குறிப்பிட்ட வரையறைக்குள் அடங்காது என்ற காரணத்தினால் இங்கு இஸ்லாமியத் தமிழிலக் கியங்கள் அவைகள் சார்ந்துள்ள சிற்றிலக்கிய வடிவங்களின் அடிப் படையிலேயே விளக்கம் பெறுகின்றன. தமிழ்ச் சிற்றிலக்கியங்களின் பல்வேறு இலக்கிய வடிவங்களில்அங்கம் வகிக்கும் இஸ்லாம், தமிழ்ச் சிற்றிலக்கியங்களின் முழுமையான எல்லைப் பரப்பில் ஒரு முக்கிய இடத்தைப் பெறுகிறது.

# அறிமுகம்

இலக்கியத்துக்கு அணி செய்வது அதன்கண் தோன்றியுள்ள காப்பியங்களே. தமிழ் இலக்கியமும் அத்தகையதே. தமிழ் இலக்கியத்தில் தோன்றியுள்ள அக்காப்பியங்கள் பெரும்பாலும் தண்டியலங்காரம் வகுத்துள்ள காப்பிய வரைவிலக்கணத்துக்கு அமையவே உருவாகியுள்ளன. தண்டியலங்காரத்தில் தரப்பட்டுள்ள சிறப்பியல்புகளைப் பிரதிபலிப்பனவாகவே அமைந்துள்ளன. தமிழ்க்காப்பிய மரபுக்குத் தகுந்த எடுத்துக்காட்டுக்களாகவே அவை திகழ்ந்து கொண்டிருக்கின்றன. பண்டையத் தமிழ் இலக்கியப்பரப்பிலே ஐம்பெருங் காப்பியங்கள் என்றும் ஐஞ்சிறு காப்பியங்கள் என்றும் காப்பியங்கள் வகுக்கப்பட்டிருந்தன எனக் கூறுவர். அவற்றுள் சிலவற்றைக் காப்பியங்களாகக் கொள்ள சில ஆய்வாளர் மறுக்கின்றனர். வேறுசில இப்பொழுது நமக்கு முழுமையாகக் கிடைத்தில. அவற்றுள் முழுமையான ஒரு காப்பியமாக நமக்குக் கிடைத்திருப்பது திருத்தக்கதேவரால் இயற்றப்பெற்ற சீவக சிந்தாமணி என்னும் காப்பியமே. பிற்காலத்தில் தோன்றிய தமிழ்க் காப்பியங்களுக்கு முன்மாதிரியாக அமைந்து விளங்கியதும் சீவக சிந்தாமணியே. பிற்காலத்தில் தோன்றிய காப்பியக் கவிஞர்கள் சீவக சிந்தாமணியின் நடை, பாவமைப்பு முதலியவற்றைப் பின்பற்றியே தத்தம் காப்பியங்களை யாத்துள்ளனர் எனக் கூறலாம். கவிச்சக்கரவர்த்தி கம்ப நாட்டாரின் இராமாயணம் என்னும் காப்பியமும் அதன் பின்னர் தோன்றிய காப்பியங்களுக்கு வழிகாட்டியாக அமைந்தது எனவும் கருதலாம். 'பத்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவி வலவ' எனப் பாராட்டப்பட்ட சேக்கிழார் சுவாமிகள் 'நவிறொறும் நவிறொறும் நூனயம் பயப்பதும் பயிறொரும் பயிறொறும் பத்தி ஞானம் விளைப்பதும்' எனப் பாராட்டப்பெற்ற பெரிய புராணம் என்னும் காப்பியமும் இத்தகையனவற்றுள் ஒன்றாகக் கணிக்கலாம். ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதி தொடக்கம்பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதிவரையும்(ஏறக்குறைய முந்நூறு ஆண்டுகள்)சோழராட்சி நிலவிய சோழர் காலம் என வருணிக்கப்பட்டுள்ளது.அடுத்த நானூறு ஆண்டுகளைக் கொண்ட கால எல்லையை நாயக்கர் காலம் என்பர். இந்நாயக்கர் காலப் பிற்பகுதியில் தமிழிலக்கியம் மந்த கதியை அடைந்தது என்பது பெரும்பான்மையான தமிழ் இல்க்கிய வரலாற்று ஆசிரியரின் கருத்தாகும். அதற்கான காரணம் முஸ்லிம்களின் ஆட்சி அங்கு நில்வியமையே என்றும் அவர்கள் வாதிப்பர். ஆனால் இந்தக்கால கட்டத்திலேதான் இஸ்ல்ாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ் இல்க்கியம் துரித கதியில் வளர்ச்சியுறத் தொடங்கியது. இந்தக் காலத்திலே தர்ன் இஸ்லாமிய அடிப்படையிலே தோன்றிய தமிழ்க் கர்ப்பியங்கள் பல உருப்பெற ஆரம்பித்தன.

இஸ்லாமிய அடிப்படையில் [தோன்றிய காப்பியங்களுள் சில அள வால் நீண்டவை. வேறு சில அளவால் குறுகியவை. சில காப்பி யங்கள் பாட்டுடைத் தலைவரின் வாழ்க்கையை விவரிப்பன. மற்றும் சில பாட்டுடைத் தலைவரின் வாழ்க்கையில் புலவர் சிறப்பெனக் கருதும் பகுதிகளை மாத்திரம் வருணிப்பன. இன்னும் சில பாட்டுடைத் தலை வரின் சிறப்பியல்புகளை வருணிப்பன.வேறு சில ஒரு பெரியாரின் மறை வுக்குப் பின்னர் அவர் செய்து காட்டிய அற்புதங்களை அடிப்படையாகக் கொண்டு அவற்றை வருணிப்பன.

இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ்க் காப்பியங்களுள் காலத்தால் முந்தியது கனகவிராயர் அவர்களால் இயற்றப்பெற்ற கனகாபிஷேக மாலை ஆகும். ஹளறத் ஹுசைன் (ரலி) அவர்களின் வாழ்க்கையைப் பின்னணியாகக் கொண்டு பாடப்பட்டுள்ளது. கனகாபி ஷேக மாலை என்னும் காப்பியம். அடுத்துத் தோன்றிய சீறாப்புராணம் பெருமானார் முகம்மது (சல்) அவர்களின் அழகிய முன்மாதிரியான வாழ்க்கையின் பெரும் பகுதியை வருணிப்பதாக அமைந்துள்ளது.இங்கு அண்ணல் நபி (சல்) அவர்களின் ஏறத்தாழ ஐம்பத்தெட்டு ஆண்டு வாழ்க்கையின் முக்கியமான நிகழ்ச்சிகள் வருணிக்கப்பட்டுள்ளதைக் காணலாம். சீறாப்புராணம் பாடிய உமறுப்புலவர் விட்ட இடத்தி லிருந்து பெருமானாரின் வாழ்க்கையைப் பனீ அகுமது மரைக்காயர்ப் புலவர் அவர்கள் பாடியுள்ளார். அவர் அதனைச் சீறாவென்கிற புராணம் கிசுறத்துக் காண்டம் என அழைத்துள்ளார். இப்பொழுது அக்காப்பியம் சின்ன சீறா என்று வழங்கப்படுகிறது. நபி இபுறாஹீம் (அலை) அவர்களின் வாழ்க்கை வரலாற்றைத் திருமணி மாலை என்னும் காப்பியத்தின் மூலம் காயல்பட்டணத்து செய்கு அப்துல் காதிறு நெயினார் லெப்பை ஆலிம் புலவர் அவர்கள் உலகத்துக்கு அளித்துள்ளார். முகியித்தீன் அப்துல் காதிறு ஜீலானி (றலி) அவர் களின் வாழ்க்கை வரலாறு பல புலவர்களுக்குத் தத்தம் காப்பியங் களுக்குப் பொருளாய் அமைந்துள்ளது. ஒவ்வொரு புலவரும் முகியித் தீன் ஆண்டவர் அவர்களின் வாழ்க்கையின் வெவ்வேறு அம்சங்களைப் பாடியுள்ளனர். அத்தகைய காப்பியங்களுள் குறிப்பிடத்தக்கவை செய்கு அப்துல் காதிறு நயினார் லெப்பை அவர்களின் குத்பு நாயகமும் மதுரை மீசல் வண்ணக் களஞ்சியப் புலவர் அவர்களின் குத்பு நாயகமும் இலங்கை பத்றுத்தீன் புலவர் அவர்களின் முகியித்தீன் புராணமும், ஐதுறூசு நயினார்ப் புலவர் அவர்களின் நவமணி மாலையும், முகம்மதுப் புலவர் அவர்களின் முகியித்தீன் புராணமும் எனலாம். நபி சுலைமான் (அலை) அவர்களின் வாழ்க்கையை இராஜநாயகம் என்னும் காப்பியத் தாலும் சுல்தான் செய்யிது இப்றாகீம் ஷஹீத் அவர்களின் வீரதீரச் செயல்களை தீன் விளக்கம் அல்லது தீன் நெறி விளக்கம் என்னும்

காப்பியத்தாலும் உலகறியச் செய்துள்ளார் வண்ணக் களஞ்சியப் புலவர் அவர்கள். வட இந்தியாவிலே மாணிக்கப்பூரிலே பிறந்து தென்னிந்தியாவிலே நாகூர் நன்னகரில் நல்லடக்கம் செய்யப்பட்டிருக்கும் நாகூர் ஆண்டகை என்று வழங்கப்பெறும் சாகுல் கமீது (றஹ்) அவர்களின் வாழ்க்கையைக் காப்பியமாக வடித்துத் தந்துள்ளார் செய்குனாப் புலவர் என்றும் புலவர் நாயகம் என்றும் வழங்கப்பட்ட செய்கு அப்துல் காதிறு நயினார் லெப்பை ஆலிம் புலவர் அவர்கள். அதே புலவர் நபிகள் நாயகம் (சல்) அவர்களின் காலத்தில் ஆரம்பிக்கப்பட்டு செய்யிதினா அபூபக்கர் (றலி) அவர்கள் ஆட்சிக் காலத்தில் தொடரப்பட்டு செய்யிதினா உமறிப்னு கத்தாப் (றலி) அவர்களின் காலத்தில் பூரணமாக்கப்பட்ட 'சிறியா' நாட்டின் வெற்றியை அப்பொருள்பட புதூ குஷ்ஷாம் என்கின்ற புராணமாகத் தந்துள்ளார். இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய காப்பியங்களுள் மிக அதிகமான பாடல்களைக் கொண்ட பாரகாவியமாக இது திகழ்கின்றது. நபி மூசா (அலை) அவர்களின் வாழ்க்கை மூசா நபி புராணம் என முகம்மது நூறுத்தீன் என்பவரால் பாடப்பட்டுள்ளது. சாதுலி நாயகம் என்னும் காப்பியம் ஆன்மிகத் தலைவர் அபுல் ஹஸன் சாதுலி (றஹ்) அவர்களின் வாழ்க்கையை வருணிக்கிறது. அதன் ஆசிரியர் முகம்மது முகியித்தீன் புலவர் ஆவார். மற்றொரு ஆன்மிகத் தலைவரான அகமது கபீறு றிபாயி (றஹ்) அவர்களின் வாழ்க்கை ஆரிபு நாயகம் என்னும் பெயரால் ஒரு காப்பியமாகப் பாடப்பட்டுள்ளது. அதனைப் பாடியவர் நாகூர் தர்கா மகா வித்துவான் குலாம் காதிறு நாவலர் அவர்களாவார். நாகூர் ஆண்டகையின் மறைவுக்குப் பின்னர் அவர்கள் செய்து காட்டிய அற்புதங்களை நாகூர் புராணம் என்னும் பெயரால் ஒரு காப்பியமாகக் குலாம் காதிறு நாவலர் அவர்கள்யாத்துத் தந்துள்ளார். அவரால் இயற்றப்பெற்ற மற்றொன்று மூகாஷபா மாலை என்பதாகும். புத்தகப்பட்டியல் ஒன்றில் ஐயூபு நபி காவியம் என ஒரு நூல் குறிப்பிடப்பட்டுள்ளது. இது நபி ஐயூபு (அலை) அவர்களைப் பற்றிய காப்பியமாக இருக்கலாம். ஆனால் இந்நூல் கிடைக்கவில்லை. காதரி சுத்தாரி என்பவரால் இயற்றப்பட்டதாகக் கூறப்படும் சீறாப்புராணம் இரண்டாம் வாலியுமை ஈண்டு குறிப்பிடல் வேண்டும். காப்பியங்களில் பயிற்சி அற்றோரை ஏமாற்றக் கூடிய ஒரு நூலாக அது அமைந்துள்ளது. அந்நூலில் காதரி சுத்தாரி அவர்களின் பாடல்கள் எதுவுமே இல்லை. அங்கு சின்ன சீறாவிலும் புதூ குஷ்ஷாமிலும் உள்ளபாடல்கள் பல்வேறு படலங்களாகப் பிரிக்கப்பட்டு அச்சிடப்பட்ட நூலாக அமைந்துள்ளது. பிறருடைய பாடல்களை ஒன்று சேர்த்து வெளியிடப்பட்ட ஒரு நூலாகவே அது உள்ளது. அத்தகைய பாடல்களைப் பிரித்துக் கமாலத்துக் காண்டம் என்று ஒரு காண்டமாக காதிரி சுத்தாரி அவர்கள் அமைத்துள்ளார்.

பேரிலக்கியங்களில் காப்பியப் பண்புகள் அனைத்தும் இடம் பெற்றிருந்தன. காப்பியப் பண்புகள் இடம் பெற்றிருந்தும் பாடல் களின் எண்ணிக்கை குறைந்து இருந்தமையினால் சில காப்பியங்கள் குறுங்காப்பியங்களாகக் கொள்ளப்பட்டன. அத்தகைய குறுங்காப்பி யங்கள் சிற்றிலக்கியங்கள் என்னும் தலைப்பில் மூன்றாந்தொகுதி யாகிய இத்தொகுதியில் முதற்கண் ஆராயப்பட்டுள்ளன.

தமிழ் இலக்கியத்தில் 96 வகைப் பிரபந்தங்கள் உண்டு என்பர். அவற்றுள் முதன்மையாவது எனக் கருதப்படுவது பேரிலக்கியங்கள் எனப்படும் காப்பியங்களேயாகும். இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ் இலக்கியங்களைத் தவிர்த்து ஆராயும் பொழுதே தமிழ் இலக்கியத்தில் 96 வகைப் பிரபந்தங்கள் உண்டு என்பது பொருந்துவதாகும். இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ் இலக்கியங்களுள் முஸ்லிம்களுக்கே உரித்தான சிற்றிலக்கிய வடிவங் களைக் கருத்தில் கொண்டு பார்க்கும்பொழுது 101 வகையான இலக்கிய பிரபந்தங்கள் தமிழ் இலக்கியத்தை மிளிரச்செய்து கொண் டிருக்கின்றன எனக் கூறிவிடலாம். இங்ஙனம் மேலதிகமாக உள்ள ஐந்து இலக்கிய வடிவங்களுள் ஒன்று தமிழ்ப் பெயராலும் மூன்று அறபுச் சொற்களாலும் மற்றையது பார்சிச் (பாரசீகச்) சொல்லாலும் வழங்கப்படுவதைக் காணலாம். இவ்வைந்து இலக்கிய வடிவங்களும் முறையே படைப்போர், முனாஜாத், கிஸ்ஸா, மஸ்அலா, நாமா என அழைக்கப்படுகின்றன.

'முஸ்லிம்கள் தமிழுக்கு ஆற்றிய தொண்டு' என்பது பற்றிய முதுமாணித் தேர்வுக்கான ஆய்வேடு தயாரிக்கப்படும்பொழுது அதற் கான வழிகாட்டும் பொறுப்பை ஏற்றிருந்த அப்போதைய இலங்கைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியராகக் கடமையாற்றிய டாக்டர் (அறிஞர்) க. கணபதிப்பிள்ளை அவர்கள் முஸ்லிம்களுக்கே உரிய ஐந்து இலக்கிய வடிவங்களை வேறாகவும் ஏனைய தமிழ்ச் சிற்றிலக்கிய வடிவங்களை வேறாகவும் பிரித்து ஆராயும்படி ஆலோசனை வழங்கி னார். தமிழ்ப் பிரபந்த வகைகளான சிற்றிலக்கிய வடிவங்களையும் இரண்டு பிரிவாகப் பகுத்து ஆராய்வது ஏற்றது என்றும் கூறினார். செம்மொழிச் சிற்றிலக்கிய வடிவங்களை (Classical Literary Forms) ஒரு பிரிவாகவும் மக்கள் சுவைக்கும் எளிதான சிற்றிலக்கிய வடிவங் களை (Popular Literary Forms) வேறொரு பிரிவாகவும் வகுத்து ஆராய்வது பொருத்தமானது என்றும் குறிப்பிட்டார். அந்த அடிப் படையிலேயே சிற்றிலக்கியங்கள் பற்றிய இத்தொகுதியிலும் இஸ்லாமிய அடிப்படையிலே தோன்றிய தமிழ்ச் சிற்றிலக்கிய வடிவங்கள் பிரிக்கப்பட்டு ஆராயப்பட்டுள்ளன. இதனாலேயே இத்

தொகுதி நான்கு பிரிவுகளாகப் பகுக்கப்பட்டுள்ளது. எமக்கு இதுவரை கிடைத்துள்ள காப்பியங்களுள் முதலிரண்டு தொகுதிகளிலும் இடம் பெறாத காப்பியங்கள் முதலாம் பிரிவில் குறுங்காப்பியங்களாக ஆராயப்பட்டுள்ளன. முஸ்லிம்களுக்கே உரிய இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வடிவங்கள் இரண்டாம் பிரிவில் இடம் பெற்றுள்ளன. ஏனைய தமிழ்ச் சிற்றிலக்கிய வடிவங்கள் செம்மொழிச் சிற்றிலக்கிய வடிவங்கள் (Classical Literary Forms) என்றும் மக்கள் எளிதாகச் சுவைத்ததற்கான சிற்றிலக்கிய வடிவங்கள் (Popular Literary Forms) என்றும் முறையே மூன்றாம் நான்காம் பிரிவுகளில் விவரிக்கப்பட்டுள்ளன. ஆற்றுப்படை, அந்தாதி, பிள்ளைத் தமிழ், கலம்பகம், கோவை என்பன மூன்றாம் பிரிவிலும் அம்மானை, மாலை, ஏசல், திருப்புகழ், கீர்த்தனை, கும்மி, சிந்து, தாலாட்டு போன்றவை நான்காம் பிரிவிலும் சிறப்பிடம் பெறுவனவாகும்.

முஸ்லிம்களுக்கே உரிய இஸ்லாமிய இலக்கிய வடிவங்களோடு நின்று விடாது இஸ்லாமிய அடிப்படையில் தமிழில் எழுத முற்பட்ட முஸ்லிம் புலவர் தமிழ் மொழிக்குரிய சிற்றிலக்கிய வடிவங்கள் பலவற்றை அடியொட்டி இஸ்லாமிய தமிழ் இலக்கியங்கள் படைத்துள்ளனர். தமிழுக்குரிய 96 வகைப் பிரபந்தங்களுள் எதனையும் முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள் விட்டுவிட்டதாகக் கூறுவது மிக மிகக் கடினமான தொன்றாகும். முஸ்லிம் புலவர்கள் தமிழில் இயற்றிய சிற்றிலக்கிய வடிவங்களைப் பார்க்கும்பொழுது அவர்கள் தமிழ்ப்பாவளம் பெருகவும் தமிழ் இலக்கியம் வளரவும் பெருந்தொண்டாற்றி உள்ளனர் என்பது மிகைப்படக் கூறும் கூற்றாக அமைந்து விட முடியாது. உண்மையிலேயே அத்தகையோரின் தமிழ்த் தொண்டு போற்றற்குரியதொன்றாகும் எனக்கூறின் அது மிகையாகாது. இந்தக்கண்ணோட்டத்தில் பார்க்கும்பொழுது இன்று தமிழ்ச் சிற்றிலக்கிய வடிவங்களின் எண்ணிக்கை 101 ஆக உயர்ந்துள்ளமை புலனாகின்றது.

# வேத புராணம்

அறபுச் சொற்கள் திசைச் சொற்களாய் இஸ்லாம் வழிவந்த தமிழ் இலக்கியத்தில் அமைந்துவிட்டன. அங்ஙனம் அமைந்தமையே அவ் விலக்கியத்தின் சிறப்பம்சமாகப் போற்றப்படுகின்றது. ஆனால் அறபு மொழிப் பயிற்சி அற்ப அளவேனும் இல்லாதோர் அறபுச் சொற்கள் மலிந்துள்ள தமிழ் நூல்களைப் புரிந்துகொள்வதில் இடர்ப்படுகின்றனர். அதே காரணமாக இஸ்லாம் வழிவந்த தமிழ் இலக்கியங்கள் பெரு வழக்கைப் பெறத் தவறிவிட்டன எனலாம். அறபுத் திசைச் சொற் களின் பொருள் புரியாமல் அவ்விலக்கியங்களைப் படிப்பதில் ஆர்வம் செலுத்தவில்லை. அறபு மொழியிலிருந்து நேராக வந்த அறபுச் சொற்கள் விளங்காது இருக்கும் அதே சமயத்தில் தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்தி அவற்றின் கருத்துக்களாக அரபுச் சொற்களைப் பெற் றிருப்பின் அத்தகைய சொற்கள் இடம்பெற்றுள்ள கவிதைகள் விளங்கிக் கொள்வதற்கு மிக மிக கடினமாயிருக்கும். அத்தகைய கவிதைகளை அறபுப் பயிற்சி உடையோர் கூட வலிந்து பொருள் கொள்ள முடியாமல் தயங்கி இருப்பர். ஒரு கவிதையில் இடம் பெற்றுள்ள தமிழ் சொற் களின் பொருளாக அறபுச் சொற்கள் உருவாகும் நிலையை ஏற்படுத்தி உள்ளார் ஒரு புலவர். அங்ஙனம் பாடவேண்டிய ஒரு சந்தர்ப்பம் தோன்றி உள்ளது அப்புலவரின் வாழ்க்கையில்.

ஒருமுறை இரண்டு புலவர்கள் சந்தித்தனர். ஒருவர் முஸ்லிம்; மற்றவர் முஸ்லிம் அல்லாதவர். முஸ்லிம் அல்லாத புலவர் ஒருநாள் முஸ்லிம் புலவரின் கவிதை இயற்றும் திறமையில் சந்தேகங் கொண்டார். முஸ்லிம் புலவருக்குக் கவிதை இயற்றும் ஆற்றல் இல்லை என்றே முடிவுக்கு வந்தார். அத்துடன் முஸ்லிம் அல்லாத அப்புலவர் நின்றுவிடவில்லை. தாம் எத்தனையோ புலவர்களை வாதித்து வெற்றி மாலை சூடியதாகவும் தமக்கு எந்தச் செய்யுளுக்கும் பொருள் கூற முடியும் என்றும் பெருமிதத்துடன் இருந்தார். முஸ்லிம் புலவரைச் சந்தித்த முஸ்லிம் அல்லாத புலவர் தமது சிறந்த ஆற்றலை எடுத்துக் கூறினார். தம்மைப் பற்றிக் குறைவாகவே முஸ்லிம் அல்லாத புலவர் எண்ணங் கொண்டுள்ளார் என்பதை அறிந்த முஸ்லிம் புலவர் முஸ்லிம் அல்லாத புலவரின் செருக்கை அடக்க ஒரு திட்டம் இட்டார். தாம் ஒரு வெண்பா இயற்றி உள்ளதாகவும் அந்த வெண்பாவுக்குப் பொருள் கூறுமாறும் முஸ்லிம் புலவர் அந்த பெருமை தலைக்கேறியிருந்த முஸ்லிம் அல்லாத புலவரை வேண்டிக் கொண்டார். பின்னர் தம்மால் இயற்றப்பட்ட வெண்பாவை முஸ்லிம் அல்லாத புலவருக்கு முஸ்லிம் புலவர் பாடிக் காட்டினார். முஸ்லிம் புலவர் பாடிய வெண்பா இங்ஙனம் அமைந்திருந்தது.

பிரச மருணமுடன் பின்யுக சூதத்தை
வரைசிலைமே லேற்றியே வைத்தால் - சுரருலகில்
பொற்கோ டனையதனப் பாவைருயம் யாமுமே
எக்காலும் வாழ்ந்திருக்க லாம்.

இச்செய்யுளில் இடம்பெற்றுள்ள பிரசம், அருணம், பின்யுகம், சூதம், வரை, சிலை என்ற ஆறு சொற்களும் செய்யுளில் உள்ள ஏனைய சொற்களைப் போன்று தமிழில் வழங்கி வரும் சொற்களே. ஆனால் இச்செய்யுளை இயற்றிய முஸ்லிம் புலவர் இவ் வாறு சொற்களும் சுட்டும் தமிழ்க் கருத்துக்களை இவ்விரண்டாகச் சேர்த்து மூன்று அரபுச் சொற்களை பெற்றுள்ளார். பிரசம் என்றால் ஈயைக் குறிக்கும் அருணம்என்பதன்பொருள்மான்என்பதாகும்.கலிகாலம்,கலிஎன்பதைக் குறிக்க பின்யுகம் என்பது பயன்படுத்தப்பட்டுள்ளது. சூதம் என்பது மா என்பதைச் சுட்டும். மாங்காயைக் குறிக்கும். வரை என்பது மலையைக் குறித்து கல் என்னும் பொருளில் வந்துள்ளது. சிலை என்பது வில் என்பதாகும். இங்கே குறிப்பிடப்பட்டுள்ள ஆறு சொற்களையும் அவை சுட்டும் தமிழ்க் கருத்துக்களை எடுத்துப் பார்த்தால் இச்செய்யுள் பொருளற்ற செய்யுள் ஒன்றாகி விடும். ஆனால் இவ்வாறு சொற்களையும் இவ்விரண்டாகச் சேர்த்துப் பார்த்தால் ஒவ்வொரு அறபுச் சொல் பெறக்கூடியதாக இருக்கும். பிரசம் அருணம் என்பது **ஈமான்** என்னும் அறபுச் சொல்லைத் தந்துள்ளது. அதே போன்று பின்யுகம் சூதம் என்னும் இரண்டு சொற்களும் **கலிமா** என்னும் அறபுச் சொல்லைப் பெற வழிவகுத்துள்ளது.அங்ஙனமே வரைசிலை என்ற இரண்டும் கல்வில் என்பதைக் குறித்து நின்றன. இங்கே பெறப்படவேண்டிய அறபுசொல் **கல்பில்** என்பதாகும். **கல்பு** என்னும் அறபுச்சொல் உள்ளம் என்பதைச் சுட்டிநிற்கும். கல்பு என்பது ஏழாம் வேற்றுமை உருபான இல் என்பதைப் பெற்றுள்ளது. கல்பில் என்று இருக்க வேண்டியது இங்கே கல்வில் எனச் செய்யுளில் இடம்பெற்றுள்ளன. இரண்டு சொற்களின் கருத்தாய் வந்துள்ளது. பொதுவாக உருதுச் சொல்லான பஸ் என்பது தமிழில் வசு என்றும் பாரசீகச் சொல்லான பாங்கு (முஸ்லிம் மக்களின் தொழுகைக்குரிய அழைப்பு) என்பது வாங்கு என முஸ்லிம் பெருவழக்கிலும் அறபுப் பெயர்களான அபூபக்கர் என்பது அவூவக்கர் எனவும் இபுறாகீம் என்பது இவுறாகீம் எனவும் பயன்படுத்தப்படுகின்றன. இங்கே தமிழ் மொழியில் இடம்பெறாத ‘ப’ என்னும் எழுத்தைக் கொண்ட திசைச் சொற்கள் தமிழ் மொழியிலே பயன்படுத்தப்படும்பொழுது ‘வ’ என்னும் உச்சரிப்பைக் கொண்ட சொற்களாகவே வழங்கப்படுகின்றன. இலக்கண அடிப்படையில் பார்க்கும் பொழுது ‘ப’ என்னும் ஒலிப்புடைய வல்லெழுத்து ஒலிப்பில்லாத வல்லெழுத்தாக எழுதப்படுவதோடு வகர மாகவும் எழுதப்படுவதைக்

காணலாம். இதனாலேயே இங்கே குறிப்பிட்ட முஸ்லிம் புலவர் கல்பில் என்பதை கல்வில் என வரத் தமிழ்ச் சொற்களை தத்தமது செய்யுளில் அமைத்துள்ளனதைக் காணலாம்.

முஸ்லிம் அல்லாத புலவரை இடர்ப்படச் செய்து விளக்கம் கூற முடியாமற் செய்யவே முஸ்லிம் புலவர் தமது வெண்பாவைப் பாடி உள்ளார் எனலாம். முஸ்லிம் புலவரின் வெண்பாவுக்கு முஸ்லிம் அல்லாத புலவரால் பொருள் கூறமுடியவில்லை. முஸ்லிம் புலவர் தமது வெண்பாவில் நம்பிக்கை என்னும் ஈமானுடன் இஸ்லாமிய மூலமந்திரமான கலிமாவை உள்ளம் என்னும் கல்பில் பதித்து வைத்தால் (வைத்து அவற்றிற்கிணங்க ஒழுகினால்) சுவன லோகத்தில் பெரிய தனத்தை உடைய விண்ணக மகளிர் என்னும் ஹூறுல் ஈ ன்களுடன் நாமும் எப்பொழுதும் வாழ்ந்திருக்கலாம் என்னும் கருத்தை அமைத்துள்ளார். முஸ்லிம் அல்லாத புலவர் தமது தோல்வியை ஒப்புக்கொண்டார். இந்த வெண்பாவைப் பாடிய முஸ்லிம் புலவர் வேறு யாருமல்லர். வேத புராணம் பாடிய நூஹு ஒலியுல்லாஹ் அவர்களே யாவார்.

வேதபுராணம் சமயச் சார்பான கருத்துக்களையே முதன்மையாகக் கொண்டுள்ளது. அல்குர்ஆனில் பொதிந்துள்ள கருத்துக்கள் பல வேதபுராணத்தின் செய்யுட்களுக்குப் பொருளாக அமைந்துள்ளன. வேத புராணத்தில் காப்புச் செய்யுள் வெண்பாவாக அமைந்துள்ளது. ஏனைய 910 செய்யுட்களும் பெரும்பாலானவை விருத்தப்பாக்க ளாகவே உள்ளன. கொச்சகக் கண்ணிகள் ஒரு படலத்தில் இடம் பெற்றுள்ளன. இடை இடையே வெண்பாக்கள் அமைந்துள்ளன. இருபத்தாறு படலங்களைக் கொண்டுள்ள வேதபுராணத்திலுள்ள பெரும்பான்மையான செய்யுட்களில் அறபுச் சொற்கள் ஏராளமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. வேதபுராணத்தில் அறபுச் சொல் எதுவுமே இடம்பெறாத செய்யுட்களின் எண்ணிக்கை முப்பத் தொன்றாகும்.

வேதபுராணத்தின் இருபதாம் படலம் ஈரடிக் கொச்சகப் படலம் எனப் பெயரிடப்பட்டுள்ளது. அந்தப் படலத்தில் 163 கொச்சகக் கண்ணிகள் இடம்பெற்றுள்ளன. ஆனால் அவற்றுள் முதல் 45 கண்ணிகளும் இறுதியில் அமைந்துள்ள 159 ஆம் 162 ஆம் 163 ஆம் கண்ணிகளுமே நூஹு ஆலிம் ஒலியுல்லாஹ் அவர்கள் பாடி இருத்தல் வேண்டும். ஏனையவை காயல்பட்டணத்து உமறு வொலியுல்லாஹ் வால் பாடப்பெற்று ஞானந்தரத்நம் என்னும் நூல் தொகுப்பில் மெய்ஞ் ஞானப் புலம்பல் என்ற பகுதியில் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். வேதபுராண ஆசிரியர் நூஹு லெப்பை ஆலிம் அவர்கள் காலத்தால் முந்தியவர். அதே போன்று மெய்ஞ்ஞானப் புலம்பல் பாடிய உமறு

வொலியுல்லாஹ் அவர்கள் காலத்தால் பிந்தியவர். ஆக, நூஹுு லெப்பை ஆலிம் புலவர் மெய்ஞ்ஞானப் புலம்பலிலிருந்து எடுத்திருக்க முடியாது. உமறு வொலியுல்லாஹ் அவர்கள் நூஹுு லெப்பை ஆலிம் புலவர் அவர்களின் வேதபுராணத்திலிருந்து எடுத்து மெய்ஞ்ஞானப் புலம்பலை இயற்றி உள்ளார் எனக் கூறுவது உமறு ஒலியுல்லாஹ்வின் ஆற்றலுக்கு இழுக்குக் கற்பித்தலாகும். அது பொருந்தாக் கூற்றாகும். நூஹுு ஒலியுல்லாஹ்வின் கண்ணிகளில் ஏராளமான அறபுச் சொற்கள் இடம்பெற்றிருப்பதைக் காணலாம். ஆனால் மெய்ஞ்ஞானப் புலம்பல் அவ்வாறில்லை.

வேதபுராணத்தை முதலில் பதிப்பித்த கண்ணகுமது மகுதூ முகம்மதுப் புலவர் மெய்ஞ்ஞானப் புலம்பலில் உள்ள செய்யுட்களை வேதபுராணத்தில் சேர்த்துப் பதிப்பித்துள்ளார் என்றே கூறவேண்டி இருக்கிறது. வேறு சந்தர்ப்பங்களிலும் அவர். அவ்வாறு செய்துள்ளார். புதூகுஷ்ஷாமில் உள்ள செய்யுட்களைக் காலத்தால் முந்திய கனகாபிஷேகமாலையிலும் பொன்னரியமாலையிலும் இடம் பெறச் செய்துள்ளார் என்பதை ஈண்டு சான்றாகச் சுட்டிக் காட்டலாம்.

பூவாறு என்னுமிடத்தில் அடங்கி உள்ள நூஹுு லெப்பை ஆலிம் புலவர் அவர்கள் அப்துல் காதிர் வலியுல்லாஹ் அவர்களின் அருமைப் புதல்வராவார். காயல்பட்டணத்தைச் சேர்ந்தவர் அவர். நூஹுு லெப்பை ஆலிம் அவர்கள் ஹிஜ்ரி 1154 றபீஉல் அவ்வல் பிறை 10 அன்று காலமானார் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அந்நாள் கி. பி. 1741 ஆம் ஆண்டு மே மாதம் 21ந் தேதி வெள்ளிக்கிழமை ஆகும். உமறு ஒலியுல்லாஹ் அவர்கள் ஒன்பது ஆண்டுகள் சென்ற பின்னரே பிறந்துள்ளார்கள்.

ஞானசம்பந்த சுவாமிகளுக்கு ஞானப்பால் ஊட்டப்பட்ட பின்னரே தேவாரம் பாடத் தொடங்கினர் எனக் கூறப்பட்டுள்ளது. அதே போன்று நூஹுு லெப்பை ஆலிம் புலவர் அவர்களும் கிளிறு (அலை) அவர்கள் வாயில் உமிழ்ந்ததன் பயனாக அறிவு பெருக்கெடுத்தோட லாயிற்று. இதனையே ஒரு செய்யுளில் நூஹுு ஒலியுல்லாஹ் அவர்கள் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

விரைவாய் எனக்கு இல்ம்இல் லாதநாளில்
வேஷ மாறியோர் சன்யாசி போல்
தெருவில் வரக்கண்டே ஊரிலுள்ளோர்
தெறிகள் பேசித்தான் ஓட்டிவிட்டார்
அருமையுடன் கண்டு சலாமுரைத் தேன்
அப்போது முஹம்மதை எங்கே என்றார்
உரிமையுள நசீப் இல்லை என்றே
உமிழ்நீர் என்வாயில் கிளிறு உமிழ்ந்தார்

(முஷாஹிதாப் படலம் : 1) (397)

அவ்வாறு உமிழ்ந்தவுடன் அறிவுவிருத்தி அடைந்தமைபற்றி அடுத்த பாடலில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

உமிழ்ந்தார் வாயிலெற் குடனறிவு
மோசைப் பகுறுபோல் விரிந்து கல்பும்
நவநீத மதான நபியுல்லாவும்
நாட்டமா முகிய்யித்தீன் குதுபும்
கெவுனமுடன்வந்து வாய்திறந்து
கிருபையுடனெனக் கமுதளித்தார்
தவனமில்லாத முஷாஹிதாத்தா
னன்று மின்று மொன்ருனதுவே
(முஷாஹிதாப்படலம் : 2) (398)

வேதபுராணத்தில் நூலாசிரியர் பற்றிய அகச்சான்றுகள் இடம் பெற்றுள்ளன. நூலாசிரியரின் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது. முன்னுள்ள கிரந்தங்களில் பொதிந்துள்ளவற்றை வேதபுராணத்தில் தாம் கூறிய தாக ஆசிரியர் குறிப்பிட்டுத் தம் பெயரையும் சுட்டி உள்ளார் ஒரு பாடலில்.

அல்லா சொன்னதை அறிய வேண்டி
அலியா ருரைசெய்த கித்தாபானதில்
சொல்லா லறிந்துதான் ஹாலிறாக்கித்
தொண்டன் நூகுதான் துலங்கச் சொன்னேன்.
(இன்சான் படலம் : 12) (588)

மற்றோர் இடத்தில் பெருமானார் முகம்மது (சல்) அவர்களின் பொன்மொழிக்கிணங்கவே தாம் வேதபுராணத்தில் செய்திகளைக் குறிப்பிட்டுள்ளதாகக் கூறி அச்செய்யுளில் தம்மையும் அறிமுகஞ் செய்துள்ளார் :

செப்பமுடன் சொன்னார் நபியிறசூல்
திருவாரு ஹதீதுக் குதுசியிலே
தப்பில் லானூகு நானறிந்து
தகுமா யுரைசெய்தேன் உலகத்தோர்க்கே

கடவுள் வாழ்த்து என்னும் பகுதியில் மூன்று செய்யுட்களே இடம் பெற்றுள்ளன. ஒரு செய்யுளில் அல்லாஹ்வையும் மற்றொன்றில் பெருமானார் முகம்மது (சல்) அவர்களையும் பாடிய ஆசிரியர் மூன்றாம் செய்யுளில் ஏனையோரை பெயர் சுட்டிக் குறிப்பிட்டு முகம்மது (சல்) அவர்களின் பாதுகாவலைத் தேடி உள்ளார் ஆசிரியர். பெருமானார் முகம்மது (சல்) அவர்கள் யார் யாருடைய மருமகன்

என்பதும் யார் யாருடைய மாமனார் என்பதும் யார் யாருடைய பேரனார் என்பதும் அச்செய்யுளில் குறிப்பிடப்பட்டுள்ளன. அபூபக்கர் (ரலி) அவர்களது புதல்வியையும் உமறுகத்தாப் (றலி) அவர்களின் புதல்வியையும் திருமணம் புரிந்தமையால் முகம்மது நபி (சல்) அவர்கள் அவ்விருவரின் மருமகனாராவார். தங்கள் புதல்வியரை உதுமான் (றலி) அவர்களும் அலி (ரலி) அவர்களும் திருமணம் புரிந்தமையால் முகம்மது நபி (சல்) அவர்கள் அவ்விருவரினதும் மாமனாராவார். தங்கள் புதல்வியின் புதல்வரான அசன் (றலி) அவர்களுக்கும் உசைன் (றலி) அவர்களுக்கும் முகம்மது நபி (சல்) அவர்கள் பாட்டனாராவார். இங்கே பாட்டனார் என்பது பேரனார் என்று குறிப்பிடப்பட்டிருப்பது நோக்கற்பாலது. ஒருவரின் தந்தையின் தந்தையையோ, தாயின் தந்தையையோ அவர்தம் பேரனார் என்பது பெரும்பாலும் தமிழ் மக்கள் மரபாகும். முஸ்லிம் மக்கள் பெருவழக்கில் அத்தகைய சந்தர்ப்பங்களில் பேரனார் என்று கூறாமல் பாட்டனார் என்றே கூறுவர். அவ்வாறு குறிப்பிடப்பட்ட செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

ஆதி யபூபக்க ருமறினுக்கு மன்பார் மருமக ரானவராம்
நீதி யுதுமானா ரலியாருக்கும் நேசமாகிய மாம னாராம்
சோதி யசனுசை னார்க்குமிகு துய்ய பேரனா ரானவராம்
சாதி யப்துல்லா திருமகனாம் சாகிபு நபி காப்புத்தானே (3)

இங்கே முகம்மது நபி (சல்) அவர்கள் தந்தையரான அப்துல்லா அவர்களும் குறிப்பிடப்பட்டுள்ளமை ஈண்டு நோக்கற்பாலது. இப்படலத்தைக் கடவுளர் வாழ்த்து என்றே ஆசிரியர் பெயரிட்டுள்ளார்.

வேதபுராணத்தில் இடம்பெற்றுள்ள சில பாடல்கள் அந்தாதித் தொடையாக அமைந்திருப்பதைக் காணலாம். கலிமா முதலிய காரணப் படலம் போன்ற பாடல்களில் இந்த இயல்பு இடம்பெற் றுள்ளது. பெருமானார் முகம்மது (சல்) அவர்களின் சிறப்பைக் கூற வந்த ஆசிரியர் அந்தாதித் தொடையில் அமைந்த இரண்டு திருவிருத் தங்களில் கலிமா முதலிய காரணப்படலத்தில் அதனை இடம்பெறச் செய்துள்ளார். 'அவர்களுடைய பாதம் பூமியில் படவில்லை. அவர் களுக்கு நிழலுமில்லை· மணம் பூசாது நறுமணம் சூழும் மேனியை உடையவர்கள் அவர்கள். மேகம் அவர்களுக்குக் குடையாய் அமைந்தது. அவர்கள் எவ்வளவு தூரம் முன்னுக்குப் பார்க்கிறார்களோ அவ்வளவு தூரம் அவர்கள் பின்னையும் காண்பார்கள். இத்தகைய கருத்துக்களை ஒரு செய்யுளில் இவ்வரறு அமைத்துப் பாடி உள்ளார்,

ஆன முகம்மது நபிதமக்கிங்
கடியுந் தோயாது நிழலுமில்லை
தான மண்பூச்சுத் தொடாதவங்கஞ்
சங்கை யாய்மேகக் குடைமணமும்
பானற் பார்வைமுன் கண்டதூரம்
பார்வை யதுபோல பின்னுங் காணும்
கோனி னறுஷுக்கு மேற்சிரசுங்
குறித்த தகுத்தத றாக்கீழ்பாதம் (8)

பெருமானார் (சல்) அவர்களின் சிறப்புத் தன்மைகளைக் கூறும் அந்தாதித் தொடையில் அமைந்த மற்றச் செய்யுள் இவ்வாறு உள்ளது.

பாதம் ரண்டையுங் கண்டதில்லைப்
பார்வை மேற்சிரங் கண்டதில்லைக்
கோதில் மேனியைக் கண்டதில்லை
கூறுமலஜலங் கண்டதில்லை
நீதத் துயிலாடை களைந்ததில்லை
நிசமாய் நகம்ரோமம் வளர்ந்ததில்லை
போதமொருநாளு மறைந்ததில்லைப்
புகழ் முகம்மதா மண்ணலுக்கே (9)

இதே பாயிரத்தில் உள்ள மற்றொரு செய்யுளின் இறுதி இரண்டு அடிகளிலும் உகுதுப்போரின் போது பெருமானார் (சல்) அவர்களின் பல் ஷஹீதான (விழுந்த) போது அச்செய்தியை வெகு தொலைவில் வாழ்ந்தவரான உவைசுல் கருனைன் (றலி) அவர்கள் கேட்டு தமது பற்களை உடைத்துக் கொண்டார்கள் என்ற நிகழ்ச்சியை இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

போக மிலாவுவை சுல்ககறுனைன்
போரில் நபிபல்லுச் சஹீது கண்டு
வேக முடனவர் பல்லதனை
விரைந்து தகர்த்தனர் மேவாமலே (13)

உவைசுல்கருனைனைப் பற்றிய பிறிதொரு குறிப்பு இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

ஊணு முறக்கமு முண்டும் நாளும்
ஒன்று மில்லாம லுவைசுல்க்கர்னைன்
(முரீதுப் படலம் : 24 (746)

இஸ்லாத்தின் ஐவேளைத் தொழுகை கட்டாயக் கடமையாக விதிக்கப்படுவதற்கு முன்னர் அங்ஙனம் இறைவனைத் தொழும் தொழுகை அமையவில்லை என்பர். பெருமானார் முகம்மது நபி (சல்) அவர்களுக்கு முன்னிருந்த நபிமார் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வேளைத் தொழுகையே தத்தமதென தொழுது வந்தனர். சுபுகுத் தொழுகையான வைகறைத் தொழுகை ஆதநபி (அலை) அவர்களுக்கு சொந்தமானதாயிருந்தது. நண்பகல் தொழுகையான ளுகர்த் தொழுகை இபுறாகீம் நபி (அலை) அவர்களுக்குரியதாய் இருந்தது. பிற்பகல் நடுப்பகுதியில் தொழும் அசறுத் தொழுகையைத் தமதென ஒழுகி வந்தார்கள் யூனுசு (அலை) அவர்கள். சூரியன் மறைந்த உடன் தொழுவதான மகுறிபுத் தொழுகையை ஈசா நபி (அலை) அவர் களும் அதன் பின்னர் ஏறத்தாழ ஒன்றரை மணிக்குப் பின் தொழும் முன்னிரவுத் தொழுகையான இஷாத் தொழுகையை மூசா நபி (அலை) அவர்களும் தத்தமதெனக் கொண்டு ஒழுகிவந்தனர் எனக் கூறப்பட் டுள்ளது. இதனையே நூஹு ஆலிம் புலவர் அவர்கள்,

ஆத நபியவர் சுபு கொகுத்து
மரசரிபுறாஹீம் லுஹறொகுத்தும்
நீத முளநபி யூனுசுதாம்
நிகழ்த்தும் வரிசையார் அசறொகுத்தும்
வேத முணரீசா மஹறிபிலும்
வீரநபி மூசா இஷாவகுத்து
மேத மணுகாத றகுமான்றனை
இறைஞ்சி னாறென்றா ருலமாக்களே

(தொழுகைப் படலம் : 7) (29)

எனக் குறிப்பிட்டுள்ளார்.

அடுத்து இடம்பெற்றுள்ள அல்ஹம்துப் படலத்தில் கலிச்சந்த விருத்தங்களில் ஆசிரியர் அல்ஹம்து என ஆரம்பிக்கும் அல்குர்ஆனில் முதல் அத்தியாயத்தை அமைத்துப்பாடி உள்ளார். அவற்றுள் ஒரு பாடலைப் பார்ப்போம்.

இல்லில்நின் றிறையிசைக ளெங்கு மாகிய
சொல்லில்நின்று நற்சுரூப தோற்றமெங்கு மாகவும்
வல்லநாய கன்னீ யென்று வாழ்த்துஞ் சொல்
அல்ஹம்து லில்லாஹி றெப்பில் ஆலமீன்

(அல்ஹம்துப் படலம் : 3) (53)

அல்குர்ஆன் அத்தியாயங்கள் பலவற்றைத் தொகுத்து இன்னிசைப் படலத்தில் குறிப்பிட்டுள்ளார். 'இல்லி லெழுஞ் சுடரை இறைஞ்சுவது நற்காலம்' (2) என்பன போன்ற சொற்றொடர்களை இறுதி அடியாகக் கொண்டு ஒவ்வொரு செய்யுளையும் இன்னிசைப் படலத்தில் அமைத்துள்ளார். அல்குர்ஆனின் கடைசியிலிருந்து 'வத்தீனி' என ஆரம்பிக்கும் அத்தியாயம் வரையும் இங்ஙனம் பாடிஉள்ளார்.

வேதபுராணத்திலே பல இனிய, எளிய உவமைகளை ஆசிரியர் கையாண்டுள்ளார். சூரியக் கதிர்கள் எரிக்கும் சக்தி வாய்ந்தவை. அத்தகைய சூரியனின் முகத்தில் கண்ணாடி காட்டி அதன் மூலமாகப் பெறப்படும் நெருப்பினை ஒருவன் பிடிப்பதைப் போல என்று ஒரு செய்யுளில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர்.

பருதி முகத்திற்கண் ணாடிகாட்டிப்
பகரும் நெருப்பினைப் பற்றுமாப்போல்
(தௌஹீதுப் படலம் : 3) (164)

பாலும் நீரும் கலந்து இருந்தாலும் அன்னப்பறவை நீரை விட்டுப் பாலை மாத்திரம் பருகும் ஆற்றல் வாய்ந்தது. அதே போன்று தீயதைத் தவிர்த்து நல்லதைப் பெறவேண்டும் இதனையே ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

பாலும் நீருமொன் றாய்க் கலந்து
பருகு மன்னம்பா லுண்பதுபோற்
காலாங் கலிமாலிற் பனாவை நீக்கிக்
கனிந்த அமிர்தத்தைப் பெருகவுண்டு
(வேதவுதிப்புப் படலம் : 1) (309)

மற்றொரு பாடலில் ''ஓடு மீன் ஓட உறுமீன் வருமளவும் வாடியிருக்குமாங் கொக்கு'' என்ற கருத்தினை ஓர் உவமையாக அமைத்து இவ்வாறு பாடி உள்ளார் ஆசிரியர்.

மடைத் தலைக்கொக்குக் காத்திருந்தே
வருமம் மச்சத்தைப் புசிப்பது போல்
(வேதவுதிப்புப் படலம் :10) (318)

மற்றொரு செய்யுளில்,

அல்குற் கேணிமே லாசைவைத்தே
அலர்ந்த கலவடை நாயது போல்
(வேதவுதிப்புப் படலம் : 17) (325)

என இன்னொரு உவமையைப் புகுத்தி உள்ளார் ஆசிரியர். இன்னொரு செய்யுளில் மற்றோர் உவமை இவ்வாறு அமைந்துள்ளது.

பறவை படக்கண்ணி வைத்த வேடன்
பாய்ந்தே யமுக்கல்போல முக்கிக் கொள்வார்
(முரீதுப் படலம் : 159) (881)

இங்கே விரைவைச் சுட்ட இவ்வுவமை பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம்.

பொன்னானி மகுதூம் என்பவரும் சதக்கத்துல்லா அப்பா அவர்களும் ஒரு செய்யுளில் இவ்வாறு சுட்டப்பட்டுள்ளனர்.

போற்றும் பொன்னானி மகுதூ முக்கும்
பொருந்தும் சதக்கத்துல்லா தமக்கும்
(முஷாஹிதாப் படலம் : 6) (402)

அதே போன்று மற்றொரு பாடலில்

காசிமுகம்மது முகியத்தீனுங்
கலந்தர் கிலிறும் வந்தமிர்த மீவார்
(இன்சான் படலம் : 14) (590)

என வேறு பெயர்களை குறிப்பிட்டுள்ளார்.

ஆசிரியர் ஒரு பாடலில் பஞ்சபூதங்களான மண், நீர், காற்று, நெருப்பு, ஆகாயம் என்பனவற்றை அறபு எழுத்துக்களான அலிப், லாம், ஹே, மீம், தால் என்பவற்றுக்கு முறையே ஒப்பிட்டுள்ளார். இவ்வைந்தெழுத்துக்களும் கபுழ் எனப் பொருள்படும் அல்ஹம்து என்னும் அறபுச் சொல்லில் அமைந்துள்ளன. அல்ஹம்து என்பது அல்குர்ஆனின் ஆரம்பச் சொல்லாக அமைந்திருப்பதைக் காணலாம். ஐந்தெழுத்துக்களின் அத்தகைய சிறப்பினை ஒரு செய்யுளின் முதலிரண்டு அடிகளிலும் நூஹு வொலியுல்லா இவ்வாறு பாடி உள்ளார்.

அலிபு மண்ணாகும் லாம்தண்ணீராம்
ஆனஹே காற்று மீமக்கினி
மெலியா தால்வெளி யொன்றாகவே
மேவும் அல்ஹம்தி னைந்தெழுத்து
(தொழுகைப் படலம் : 26) (48)

மற்றோர் இடத்தில் பஞ்சபூதங்களையும் வேறுவிதமாகக் கூறி உள்ளார். பிருதிவி அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என மண், நீர், தீ, காற்று, ஆகாயம் என்பன இவவாறு ஒரு செய்யுளில் இடம் பெற்றுள்ளன.

செப்பினா ரிந்நூலைத் தேசத் தோர்க்குச்
சிறப்பாக இரவிதிங்கள் நிற்கும்நிலை
மெய்ப்புறவே பிருதிவியி லொன்பதாகும்
விரிவான அப்பதனி லேழரையாம்
செப்பமுடன் தேயுதனில் லாறதாகும்
திறமான வாயுதனில் நாலரையாம்
ஒப்பமுட னாகாச மூன்றேயாகும்.
ஒடுங்குநிலை பெற்றோர்க்கிங் குரைத்ததாமே
(முஷாஹிதாப்படலம் : 17) (413)

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன இந்துமதச் சார்புடையன. அத்தகைய நான்கு மார்க்கங்கள் இஸ்லாத்திலும் உண்டு. அவை ஷறீஅத், தறீக்கத், ஹக்கீகத், மஅரிபா என வழங்கப் படும். இந்நான்கு மார்க்கங்களையும், வேதபுராணத்தில் அதன் ஆசிரியர் நூஹு லெப்பை ஆலிம் பல்வேறு இஸ்லாமிய அமிசங்களாக வருணித்துள்ளார்.

ஒரே செய்யுளில் மெய்ஞ்ஞானத்தை அடையக்கூடிய இந்நான்கு மார்க்கங்களையும் ஒரு மரத்தின் இன்றியமையாத நான்கு பாகங் களுக்கும் அதே நேரத்தில் ஒரு மனிதனின் நான்கு உறுப்புக்களுக்கும் சமமானவை எனக் கூறி உள்ளார்.

அவற்றை இவ்வாறு வகைப்படுத்தலாம்

| மார்க்கம் | மரம் | மனிதன் |
|---|---|---|
| ஷறீஅத் | வித்து | தோல் |
| தறீக்கத் | மரம் | தசை |
| ஹக்கீக்கத் | பூ | எலும்பு |
| மஃறிபா | கனி | மூளை |

இக் கருத்துக்கள் ஒரு செய்யுளில் இவ்வாறு அமைந்துள்ளன.

நல்ல ஷறீஅத்து வித்தாச்சுது
நலமாந் தறீக்கத்து மரமாச்சுது
எல்லை ஹக்கீத்ததுப் பூவாச்சுது
இலங்குங் கனியாச்சு மஹறிபத்துச்
சொல்லும் ஷறீஅத்துத் தோலாச்சுது
தோற்றுந் தறீக்கத்துத் தசையாச்சுது
வெல்லும் ஹக்கீகத்து எலும்பாச்சுது
வெண்மூ ளையுமேலு மஹறிபத்தே
(முரீதுப் படலம் : 132) (854)

நான்கு பிரதானமான மலாயிக்கத்துமா (அமர) ரான ஜிபுறீல்(அலை), மீக்காயில் (அலை) இசுறாபீல் (அலை) இசுறாயீல் (அலை) ஆகிய நால்வரும் மேற்குறிப்பிட்ட நான்கு மார்க்கங்கள் என மற்றொரு பாடலில் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். (முரீதுப் படலம்: 134). அதனைத் தொடர்ந்துள்ள 135 ஆம், 136 ஆம், 137 ஆம், 138 ஆம், 140 ஆம் 141 ஆம், 142 ஆம் செய்யுட்கள் இந்நான்கு மார்க்கங்களும் வெவ்வேறு விதமாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.

ஈரடிக் கொச்சகக் கலிப்பாப் படலத்தில் உள்ள முதல் நாற்பத் தைந்து கண்ணிகளிலும் ஆழமான இஸ்லாமியக் கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன. முதல் பத்து ஈரடிகளிலும் அல் குர்ஆன் முதல் அத்தி யாயத்தின் தாத்பரியம் விவரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு கண்ணி யிலும் அவ்வத்தியாயத்தின் ஒவ்வொரு திருவாக்கியமும் ஆளப்பட் டுள்ளமையைக் காணலாம். இங்கே குறிப்பிட்ட நாற்பத்தைந்து கண்ணிகள் உள்ளும் முதல் முப்பத்தொரு பாடல்களில் மாத்திரமே அறபுச் சொற்களும் சொற்றொடர்களும் அதிகமாக ஆளப்பட்டுள்ளன. அடுத்து இடம் பெற்றுள்ள பதின்நான்கு கண்ணிகளிலும் அறபுச் சொல் எதுவுமே இடம்பெறவில்லை. இவற்றுள் ஒன்றில் ஒருவனின் நினைவை எவ்வாறு விரைவாக ஏவலாம் என்பது பற்றிக் குறிப்பிடப் பட்டுள்ளது. வில்லில் உள்ள நாணில் அம்பை ஏற்றி அனுப்பினால் எவ்வளவு விரைவாக அந்த அம்பு செல்லுமோ அவ்வளவு விரைவாக நினைவாற்றலை அனுப்புதல் வேண்டும். இதனையே வேதபுராணக் கண்ணி இவ்வாறு குறிப்பிடுகிறது.

மனதையொரு வில்லாக்கி வான்பொறியை நாணாக்கி
நினைவையொரு அம்பாக்கி நினைவேவ லெந்நாளோ
(ஈரடிக் கொச்சகப் படலம்: 38) (451)

இக் கண்ணிகளை எந்நாட் கண்ணிகள் என்று வகைப்படுத்தலாம்.

ஆக, வேதபுராணத்தில் அல்குர்ஆனை அடிப்படையாகக் கொண்டும் பெருமானார் (சல்) அவர்களின் பொன்மொழிகளைத் தழுவியும் சூபித்துவ மெய்ஞ்ஞானக் கருத்துக்களை ஆதாரமாக வைத்தும் இஸ்லாமியதத்து வார்த்தக் கொள்கைகளைப் பின்பற்றியும் அமைந்துள்ள செய்யுட்களை நூகு லெப்பை ஆலிம் புலவர் அவர்கள் இயற்றி உள்ளார் என்பது புலனாகின்றது.

வேதபுராணத்தின் திருத்தமான புதிய பதிப்பு நூகு லெப்பை ஆலிம் அவர்களின் கீழக்கரையில் வாழும் வழித்தோன்றல்களால் வெளியிடப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

# பொன்னரிய மாலை

முகம்மது நபி (சல்) அவர்களின் பொன்மொழிகளைக் கொண்டது பொன்னரிய மாலை. பொன்மொழிகளால் அருமையாகக் கோக்கப் பட்ட மாலையாக மிளிர்கிறது. பொன்னரிய மாலையின் முன் அட்டையில் இவ்வாறு பொறிக்கப்பட்டுள்ளது.

'இஃது, எப்பொருட்குமிறைவனாகும் அல்லாசுபுகான கூத்தஆலா வுடைய அறுசிற்கு நேரான கஃபாவினையுடைய திருமக்கா நகரி லிருந்தெழுந்தருளித் திருமதின மாநகரிற் போய் அரசாட்சி செய்த மூமீன்களுக்கெல்லாம் நாயகப்பொருளாகிய நபி முகம்மதுமுஸ்தபா றசூல் சல்லல்லாகு அலைகிவ சல்லம் திருவாய் மலர்ந்தருளிய கருத்துக்களை'

கொண்டதாக விளங்குகிறது பொன்னரிய மாலை. அதே பக்கத்தில் உள்ள ஆசிரியரைப் பற்றிய குறிப்பு இவ்வாறு அமைந்துள்ளது.

'மதுரைப் பட்டணத்தில் வாசஞ்செய்த மெய்ஞ்ஞான சொருபராகிய மின்னா நூறுத்தீன் புலவரவர்களால் முத்தமிழின் முதற்றமிழாகிய இயற்றமிழால் செய்யப்பட்ட பொன்னரிய மாலை'

இந்நூலை அச்சிற் பதிப்பித்த வரலாற்றினைக் கூறும் இந்நூலின் பதிப்பாசிரியர் கண்ணகுமது மகுதூ முகம்மதுப் புலவர் நூலாசிரியர் பற்றிய சில விபரங்களைத் தந்துள்ளார். மின்னா நூறுத்தீன் அவர் களின் தந்தையார் பெயர் காதி உசைன் கவுஸ் என்றும் அவர் குணங்குடி மஸ்தான் சாகிபின் தலைமுறைப் பாட்டனார் என்றும் இந்நூலுக்கு ஒசியத் என்னும் பெயரும் உண்டு என்றும் அறம் பொருள் இன்பம் வீடு என்பன உள்ளடக்கப்பட்ட காவியம் இது என்றும் திரு முல்லை வாயிலில் வாழ்ந்த கவி மஸ்தான் புலவரின் வேண்டுகோளுக்கு இணங்கப் பதிப்பிக்கப்பட்டது என்றும் அச்சிற் பதிப்பித்த வரலாறு விரிவாகக் கூறிக்கொண்டு போகின்றது. மின்னா நூறுத்தீன் அவர்கள் பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர் என்று கூறுவர்.

பொன்னரிய மாலை ஒசியத் என்றும் வழங்கப்படுகிறது. முகம்மது நபி (சல்) அவர்கள் விண்ணுலகு எய்த முன்னர் கூறிய பொன்மொழி களைக் கொண்டுள்ளதால் இப்பெயர் வழங்கிற்று எனலாம். பெரும் பாலும் மரணப் படுக்கையில் இருக்கும் ஒருவர் தம் உற்றார் உறவின

ருக்குக் கூறும் புத்திமதிகளையே ஒசியத் என்பர். மின்னா நூறுத்தீன் புலவர் தம் பெயரையும் காதி உசைன் கவுசின் பெயரையும் குறிப் பிடும் ஒரு செய்யுளில் இந்த விவரம் இடம் பெற்றுள்ளது.

மத்தாற் றயிருடைந் துறுநெய் யான
வாறு போலவே மூன்றோடறு
பத்தாம் வயதிலே உபாத்தி திறசூல்
பக்கு வப்பட்ட பயணந் தன்னைக்
கத்தா வருள்கொண்ட காதி உசைன்
கவுசின் பொடியுளக் கருத்திலொரு
வித்தாய் விளங்கிய விளக்கி னாலே
மின்னா நூறுத்தீன் விளம்பலுற்றேன்
(கடவுள் வாழ்த்து : 6)

அவையடக்கம் கூறும்பொழுதும் ஆசிரியர் தமது பெயரைக் குறிப் பிட்டுள்ளார். நபிகள் நாயகம் (சல்) அவர்களின் பொன்மொழிகளை இங்கு கூற முற்பட்டதாகவும் ஆனால் தமக்கு அத்தகைய அருகதை இல்லை என்றும் குறிப்பிட்டு அவையடக்கம் கூறி உள்ளார் ஆசிரியர். பேரறிஞர் முன்னிலையில் தாம் செய்யும் இந்நூல் காயும் சூரியனுக்கு முன்னர் ஏற்றப்பட்ட விளக்கு போன்றதென்றும் பாற்கடலுக்கு ஒரு குடம் பாலைக் காணிக்கையாகக் கொடுப்பதை ஒக்கும் என்றும் இவை தமது புன்சொல் என்றும் குறிப்பிட்டுள்ளார். அச்செய்யுள் வருமாறு :

நாயன் லவுலாக் கெனப்பு கழ்ந்த
நபியை யென்வாக்கி னாற்புகழ்வேன்
காயும் வெயிலோற்கு விளக்கேற் றப்பாற்
கடலுக் கோர்குடம் பால்காணிக்கை
யாயும் புலவர்க்கு மறிவா ளர்க்கு
மஞ்சி லறியாத பிராயத் தோர்க்கு
நோயுந் தலைவர்க்கு மான புன்சொன்
நூறுத்தீன் மின்னா நுவல லுற்றேன்.
(கடவுள் வாழ்த்து : 7)

இப்பாடலில் லவுலாக்க என்பது அறபுச் சொல். அல்லாஹ் கூற்று ''முகம்மதே நீர் உண்டென்கிறது இல்லாதிருக்கில் வானம், பூமி, நரகம், சுவர்க்கம், அறுசு, குறுசு மற்றும் யாதொன்றினையும் படைக்க மாட்டேன்'' என்பது லவுலாக்க என்பதன் பொருளாகும்.

பொன்னரிய மாலையில் பத்து படலங்களும் 552 செய்யுட்களும் இடம் பெற்றுள்ளன. காப்புச் செய்யுளும் இதில் அடங்கும். பொன்னரிய மாலையில் விருத்தப் பாக்கள் மாத்திரமன்றி வெண்பா,

முடுகு விருந்தம், இன்னிசை கொச்சகம், பஃறொடை வெண்பா, தனி முதலியனவும் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். பெருமானார் முகம்மது (சல்) அவர்களின் இறுதி காலப் பொன்மொழிகளைக் கூற வந்த ஆசிரியர்,

நல்லார் புகழல் லாநபி சொர்க்கத்தே
நடந்த சரிதையை நவில லுற்றேன்
(கடவுள் வாழ்த்து : 2)

எனக் குறிப்பிட்டுள்ளமை வியப்பைத் தருவதாக உள்ளது. இந்நூலில் இடைக்கிடையே கதைகளும் கூறப்பட்டுள்ளன. பறுசிசால் என்கிற செய்குடைய கிஸ்ஸா, லாபிரென்கிற ஆலிமுடைய மகளாகிய இசுவா நாச்சியாருடைய கிஸ்ஸா போன்ற கதைகள் இந்நூலில் இடம்பெற்றிருப்பதைக் காணலாம்.

மக்கமா நகரிலே ஹஜ் கடமையை நிறைவேற்றி பெருமானார் முகம்மது (சல்) அவர்கள் மதீனமா நகருக்குச் செல்லும் நிகழ்ச்சியிலிருந்தே பொன்னரிய மாலையின் கதை ஆரம்பமாகிறது. இதிலீருந்து பெருமானார் முகம்மது (சல்) அவர்களின் வாழ்க்கையின் இறுதியாண்டு பற்றியே இப்பொன்னரிய மாலை கூறுகின்றது. ஏழு திருவிருத்தங்களைக் கொண்ட கடவுள் வாழ்த்துக்கு அடுத்ததாக ‘பிரயாணத்துக்குரிய கச்சியற்றி மதீன மீண்ட படலம்’ அமைந்துள்ளது. கடவுள் வாழ்த்திலே புகழப்படாமல் விடுபட்ட நான்கு கலீபாக்களான அபூபக்கர் (றலி), உமறு (றலி), உதுமான் (றலி), அலி (றலி) ஆகியோர் ஒவ்வொரு பாடலில் புகழப்பட்டுள்ளனர். அவர்கள் ஒவ்வொருவரும் பிரயாணத்தின்போது நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களை அணுகிய விதம் குறிப்பிடப்பட்டுள்ளது. அணுகி அவர்கள் சென்ற விதம் விவரிக்கப்பட்டுள்ளது.

மூத்தா என்னும் இடத்துக்குச் செல்ல அசுகாபித் தோழர் அழைக்கப்பட்டனர். நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்கள் முரசறைந்து அசுகாபித் தோழரை அழைக்கும்படி கட்டளை இட்டார்கள். இக்கட்டளையைத் தலைமேற்கொண்ட பறை சாற்றுவோர் வலிமை மிக்க ஒட்டகங்கள் மீது முரசினை ஏற்றி பெருமானாரின் கட்டளையைத் தோழர்களுக்கு அறிவுறுத்தினர். இங்கே பறைசாற்றுவோர், தமிழ் மரபுக்கிணங்க, வள்ளுவர் என்றே குறிப்பிடப்பட்டுள்ளனர். இக்கட்டளையைச் செவிமடுத்த அசுகாபித் தோழர் அனைவரும் பள்ளிவாயிலிலே வந்து திரண்டனர். இதனையே மின்னா நூறுத்தீன் புலவர் இவ்வாறு வருணித்துள்ளார்.

சொற்கொண் டகமகிழ்ந் திரும்பு போன்ற
சோக மேன்முர சேற்றிமறு
கிற்கொண் டரிடி போலு மேள
மிரையப் புடைக்க வள்ளுவன் மதினமா
நற்கொண் டடிய வசுகாபிகள் வாரி
திரண்டன் பள்ளி வாயி
னற்கொண் டபா ரப்பொறை யினின்ற
நபிதான் மரைவந்தன் கினிது கண்டார்

(உசாமாத்திபுனுசைதை தலைமையாக்கும் படலம் : 2)

அனைவரும் வந்து சேர்ந்ததும் சைது என்பவரின் மகனான உசாமா என்பவரை அவர்களுக்குத் தலைமைத் தளபதி ஆக்கினார்கள். அண்ணல் நபி (சல்) அவர்கள் உசாமா (றலி) அவர்களைத் தலைமைப் பதவியில் நியமித்தமை அசுகாபித் தோழரிடையே மனக்கசப்பைத் தோற்றுவித்தது. சிறியவனான ஒருவரை இத்தகைய உயரிய பதவிக்கு நியமித்தமைக்குரிய காரணமென்ன எனப் புரிந்து கொள்ள முடியாதவராய் இருந்தனர். அசுகாபித் தோழரின் இத்தகைய நிலையையே பொன்னரிய மாலை இவ்வாறு கொண்டுள்ளது :

ஆத நபிவெந்நி லமைந்தவீரே ழால நபிய்சு காபிமாரும்
வேதஞ் சுமந்தமு காசிரீனும் விரிந்த மதினத்தன் சாரிகளும்
போதம் பேணிய தலைமையினைப் பொருந்தினா ரெனச் சிறியவனை
நீதந் தாங்கியே யுளுற்றியது நெறிகொள் காரண மேதோ வென்பார்

(உசாமத்திபுனு சைதைத் தலைமையாக்கிய படலம் : 7)

இங்ஙனம் உசாமத்திபுனுசைதைத் தலைமையாக்கிவிட்டுச் சென்ற முகம்மது நபி (சல்) அவர்கள் நோய் வாய்ப்பட்டார்கள். அவர்களுடைய நம்பிராட்டிமாருள் மைமூனா அம்மையாரின் முறைநாள் அன்று. அங்கே எல்லா நம்பிராட்டிமார்களையும் அழைத்து அவர்களிடம் தாங்கள் நோய் வாய்பட்டிருப்பதாகவும் ஆயிஷா அம்மையார் அவர்களின் இல்லத்தில் தங்குவதற்கு இணங்குவீர்களா என்றும் கேட்டார்கள். அனைவரும் இணங்கினர். இருவர் தாங்கிவர பெருமானார் முகம்மது (சல்) அவர்கள் ஆயிஷா அம்மையாரின் இல்லத்தை அடைந்தார்கள் என்பது இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

இனங்கொ ளாக்கைக் கோருயிராய் வந்த விந்தேகதிரே
சிந்தாமணியே
கனங்கொ ணும்மகத் தினங்கிணக்கங் காத்த வடிமைக
ளியாங்களென்று
மனங்கொள் ளமதி அலிஅப்பாசு மகனார் புலைலுமே
யிருமருங்குந்
தனங்கொ ளத்தங்க டாங்கிவரத் தாகா நபியாயி சாமனையிற்
புக்கார்
(உசாமத்திபுனுசைதைத் தலைமையாக்கிய படலம் : 14)

பெருமானார் முகம்மது (சல்) அவர்களின் நோய் கடுமையாகி விட்டது. இறுதி எய்தி விட்டது என்பதை அனைவரும் உணர்ந்தனர். அத்தனை பேரினதும் மனநிலையை பல உவமைகளைத் தந்து இரு சொச்சகக்கலிப்பாக்களில் விளக்கி உள்ளார் ஆசிரியர்.

கோவிழந்த குடியானோம் குடமுடைந்த தயிரானோம்
ஆவிழந்த கன்றானோம் அரசிழந்த பதியானோம்
நாவிழந்த மொழியானே நயனமில்லா முகமானோம்
காவிழந்த குயிலானோம் கதிரிழந்த பகலானோம்
ப்யிரிழந்த நிலமானோம் பகலிருந்த மதியானோம்
உயிரிழந்த உடலானோம் ஒளியிழந்த மணியானோம்
கயிரிழந்த கரமானோம் கடியிழந்த மலரானோம்
அயிரிழந்த வாளானோம் ஐயகோவென அழுதார்
(நபிநாயகத்தின் முன்வாய்மையால் சரதமிட்ட படலம் : 10-11

இரண்டாவது பாடலில் கயிர் என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. இங்கே கயிர் என்னும் அறபுச் சொல்லின் கருத்து ஹைறு என்பதனைச் சுட்டும் கொடை என்பதாகும். நன்மை என்பதையும் குறிக்கும். இன்றும் தமிழ்நாட்டில் பிச்சை எடுப்போர் 'பிச்சை தா' என்று கேட்பதில்லை. 'கையிறு தா' என்றுதான் கேட்பார்கள். 'நன்மை பயக்கும் தருமந் தா' என்பதனையே 'கயிறு தா' என்று கேட்பார்கள்.

ஒரு செய்யுளில் பிள்ளைக்கு பிதா செய்ய வேண்டிய கடமையும் பிள்ளை பிதாவுக்குச் செய்ய வேண்டிய கடமையும் குறிப்பிடப்பட்டுள்ளன. பிள்ளைக்கு நல்லதொரு பெயரிடல் பிதாவின் கடமையாகும். பள்ளிக்கு அனுப்பி வைத்தலும் பிதாவின் கடமையாகும். விருத்த சேதனம் என்னும் சுன்னத்தை வழக்கத்தைப் பயிற்றிடலும் பிதாவினால் பிள்ளைக்கு நிறைவேற்றப்பட வேண்டிய கடமையாகும். அதே போன்று பிள்ளை தனது பிதாவுக்குச் செய்யவேண்டிய கடமைகளும் உள்ளன. பிள்ளை தனது தந்தையின் பெயர் சொல்லக்கூடாது.

பிதாவைப் பிள்ளை கௌரவித்தல் வேண்டும். பிதாவுக்கு நேர் எதிராக பிள்ளை நிற்கக்கூடாது. முன்னால் நடக்கக்கூடாது. முன்னே உட்கார்ந்திருக்கக்கூடாது. வாக்குவாதம் செய்து பிதா முன் பிள்ளை பேசக்கூடாது. பெருமானார் திருவாய் மலர்ந்தருளிய பொன் மொழிகள் இவை என ஆசிரியர் ஒரு செய்யுளில் இவ்வாறு குறிப் பிட்டுள்ளார்.

பிள்ளைக்குப் பிதா செய்யுங் கடன்
பேணியே நல்லபேர் பார்த்திடல்
பள்ளிக்கு வைத்தல் சுன்னத்திடல்
பயிலு மடவுகள் படிப்பித்திடல்
பிள்ளை பிதாவுக்கு செய்யுங் கடன்
பேர்சொல்லா மலேபே சியிடல்
முன்னில்லாமல் முன்னடவா மலே
முன்னிராமல் முன்னுரை யாமலே
(இரண்டாம் வாசரமுபதேசித்த படலம் : 74)

என்ன என்ன எவ்வெவற்றுக்கு ஆபத்தாய் அமைகின்றன என்பதைப் பெருமானார் முகம்மது (சல்) அவர்கள் போதித்துக் காட்டியுள்ளார்கள். ஐந்து அடிகளைக் கொண்ட ஒரு செய்யுளில் ஆசிரியர் அவற்றை இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

வார்த்தைக் காபத்துப் பொய்சொல்லுதல்
வடிவுக் காபத்துக் கெறுவிதங்கள்
சேர்த்த கல்விக் குப்பராக் காபத்துச்
செயலுக் காபத்துப் புத்தீயாமற்
தோத்திரஞ் செய்யுந் தவந்தனக்கு
சுற்றிப் பாராட்ட லாபத்தாகும்
ஏத்து மீகைக்குச் செயலாபத்து
எழுந்ததே புத்தியீ னமாகும்
நீத்து நெகிழுதல் வழிக்காபத்து
நிலைமைக் காபத்து பகீலாமென்றார்.
(இரண்டாம் வாசரமுபதேசித்த படலம் : 78)

இங்கே பகீல் என்பது கஞ்சத்தனத்தைக் குறித்து நின்றது.

உவமை உருவகங்கள் பலவற்றை அமைத்து உடலைப் பற்றிப் பெருமானார் முகம்மது (சல்) அவர்கள் போதித்தார்கள். நல்லன செய்தால் நற்பேறு கிட்டும். தீயன செய்தால் தீமையே வரும். ஆகை யினால் மறுமையிலே நற்பேற்றைப் பெற இந்த உடம்பு ஓர் ஓடம் போன்றதாகும். திருடன் திருடாமல் உங்கள் பொருள்களை நீங்கள்

எவ்வாறு காப்பாற்றுகிறீர்களோ அவ்வாறே தீமை அணுகாது உங்கள் உடம்புகளைப் பாதுகாத்தல் வேண்டும், திருடர்களைக் கொண்டு அவற்றைக் காப்பாற்ற முடியாது. அதற்கென உங்கள் புத்தியைப் பயன்படுத்தவேண்டும். மீனை ஓரிடத்தில் வைத்து அதனைப் பாது காக்கப் பூனைக்குச் சொல்லி விட்டால் அது பாதுகாத்துக் கொடுக்குமா? இல்லை. அது மீனைப் புசித்து விடும். இக்கருத்துக்களையே ஒரு செய்யுளில் புலவர் இவ்வாறு பாடியுள்ளார்.

இந்த வுடம்பாவ தாகிறத்துக் கேறிப்போகின்ற ஓடமாகும்
அந்த வுடம்பைக்கொண் டேகாரிய மதுக்கொப்பச் சொல்லக் கேளுநீங்கள்
கந்த மனையுள பண்டந்தனைக் கள்ளர் தனைக்கொண்டே காப்பதொக்கும்
புந்தி தனைக்கொண்டே பாருமீனை பூனை காத்தொப்புக் கொடுக்குமோதான்

(இரண்டாம் வாசரமுபதேசித்த படலம்: 97)

உக்காசு (றலி) அவர்கள் தமக்குப் பெருமானாரிடமிருந்து கிடைக்க உள்ள கடனைத் தீர்க்க வேண்டும் என வாதாடி அக்கடன் இறுக்கப் பெற்றமை உக்காசின் கடனிறுத்த படலத்தில் விவரிக்கப்பட்டுள்ளது. தபூக் என்னும் தலத்தில் தமக்கு பெருமானாரினால் முதுகில் ஓர் அடி பட்டதென்றும் அவ்வடிக்குப் பழிவாங்கத் தாம் எண்ணியுள்ளதாயும் பெருமான் முகம்மது (சல்) அவர்களிடம் உக்காசு (றலி) அவர்கள் கூறினார்கள். சம்மட்டியால் அடிப்பட்டமையையும் ஞாபகப்படுத்தி னார்கள். உக்காசு (றலி) அவர்களின் குறிக்கோளாக இருந்தது அடிக்கு அடி பழி வாங்குவதன்று. முகம்மது நபி (சல்) அவர்களின் முதுகில் பொறிக்கப்பட்ட நபித்துவம் என்னும் முத்திரையைப் பார்க்க வேண்டும் என்பதே அவருடைய பெருவிருப்பமாயிருந்தது. தமது வெற்றுடம்பில் அன்றடித்தமையால் தாமும் முகம்மது நபி (சல்) அவர் களின் வெற்றுடம்பில் அடித்துப் பழிவாங்க வேண்டும் என்று ஒற்றைக் காலில் நின்றார், உக்காசு (றலி) அவர்கள். பெருமானார் வெற்று முதுகைக் காட்ட இயங்கினமையும் அதன் பயனாக உக்காசு (றலி) அவர்கள் பெருமானார் (சல்) அவர்களின் முதுகில் நபித்துவ முத்திரை பொறிக்கப்பட்டிருந்தமையைக் கண்டு மகிழ்ந்தமையையும் ஒரு நேரிசை வெண்பாவிலே இவ்வாறு பாடியுள்ளார் மின்னா நூறுத்தீன் புலவர்.

அவ்வளவி லாலநபி அன்பாங்கு ழாநடுவே
மெய்வளையுங் குப்பாய மேலொதுக்கிக்—கைவளையக்
கண்டாரி லாஞ்சனையைக் கண்ட பொழுதேகளிப்புக்
கொண்டார்நின் றாடினார் கூத்து

(உக்காசின் கடனிறுத்த படலம்: 29)

அந்தக் காட்சி மிகப் பெருமை வாய்ந்தது. யாருக்குங் காணக் கிடையாத காட்சி அது. அதன் மகிமையை எழுதி வைக்க முடியாது. ஆகாயத்தையே ஏடாகக் கொண்டு, விண்ணவரை எழுத்தராக (காத்தி பாக)ப் பயன்படுத்தி, உலகத்தில் உள்ள மரங்கள் அனைத்தையும் எழுதுகோலாக (கலமாக) உபயோகித்து உலகில் உள்ள நீரை எல்லாம் மையாக்கி எழுதினாலும் பெருமானார் (சல்) அவர்களின் முதுகில் பொறிக்கப்பட்டிருந்த நபித்துவ முத்திரையின் மகிமையை எடுத்துச் சொல்ல இயலாது என இவ்வாறு ஒரு செய்யுளில் ஆசிரியர் குறிப் பிட்டுள்ளார்.

விண்ணின் பரப்பெலாம் ஏடாக் கொண்டு
விண்ணோர் குழாமெலாம் காத்தி பாக்கி
மண்ணின் மரமெல்லாம் கலம தாக்கி
வாரிப் புனலெல்லாம் சாயி னாக்கி
எண்ணில் முடிகூ டாதிதன் பெருமை
எழுதித் தொலையா திங்கிறந் தவரை
நண்ணிக் கபன் செய்யி லிதனைவைக்க
நரகமவர் கண்ணினாடா தென்றார்

(உக்காசீன் கடனிறுத்த படலம் : 34)

அபூபக்கர் சித்தீகை முகதாவாக்கிய படலத்தில் தங்களால் தொழுகையை நடத்த முடியவில்லையே என்றுணர்ந்து பெருமானார் முகம்மது நபி (சல்) அவர்கள் தமது அருமைத் தோழரான அபூபக்கர் சித்தீக் (றலி) அவர்களைத் தொழுகையை நடத்தும்படி முன்னிறுத்தி யமை சம்பந்தமான விவரங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. பெருமானார் (சல்) அவர்கள் அபூபக்கர் சித்தீக் (றலி) அவர்கள் தொழுகையை நடத்த ஏற்றுக்கொண்டமையையும் ஒரு செய்யுளில் மின்னா நூறுத்தீன் புலவர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

என்று மொழிந்தபூ பக்கரினை இறைஞ்சிடச் சொலு மெனமசுகூ
தொன்று மகனபு துல்லாவிடத் துடையோன் நபியோதப்
பொருந்தா தாங்நன்
நின்ற கபுசாவுக் குரைக்கவவர் நீதி யாயிசா வேயினியான்
துன்று மொழிநபி முன்பிலுரை தொகுத்தேன் வகுக்கேன்
வாயுகுக்கேனென்றார்

(அபூபக்கர் சித்தீக்கை முகாதர்வாக்கிய படலம் : 15)

நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களின் மறைவு தொண்ணூற் றெட்டுச் செய்யுட்களில் பொன்னரிய மாலையில் இடம் பெற்றுள்ளது. பொன்னரிய மாலையைப் பதிப்பித்த கண்ணகுமது மகுதூ முகம்மதுப் புலவர் தம் விருப்பத்துக்கியைய பிற புல்வர் பாடிய செய்யுட்களையும் பெருமானார் மறைவைப் பற்றிய படலத்தில் இடம்பெறச் செய்துள்ளார்

பொன்னரிய மாலையில் நபிகள் நாயகம் (சல்) அவர்களின் மறைவைப் பற்றிய படலம் 'இறுதி நபியின் மறைவு பற்றிய படலம்' எனப் பொருள்படும். 'முத்திராங்கமான நபி முகம்மது முஸ்தபா சல்லல்லாகு அலைகியொசல்லமவர்கள் உபாத்து படலம்' எனப் பெயரிடப்பட் டுள்ளது. பின்வரும் பாடல்கள் செய்கப்துல் காதிர் நயினார் லெப்பை ஆலிம் புலவர் இயற்றிய புதூகுஷ்ஷாம் என்னும் காப்பியத்தில் இருந்து எடுக்கப்பட்டவையாகத் தோன்றுகிறது.

அச்சிற் பதிப்பித்த வரலாறு கூறும் நயினாமுகம்மது என்பவர்

எடுப்பன வெடுத்துச் செறிப்பன செறித்துப்
படிப்பன படித்து நிறைப்பென நிறைத்து
அதீதீன் முறைப்படி களைகளை யொதுக்கி
அதீதந வமதாய் அணிபெறத் திருத்தி

என ஆங்கு குறிப்பிட்டுள்ளார். நபி முகம்மது சல்லல்லாகு அலைகி வசல்லம் அவர்கள் உபாத்துப் படலம் பெருமானார் முகம்மது (சல்) அவர்களின் மறைவை விவரிக்கிறது. இப்படலத்திலேயே மின்னா நூறுத்தீன் புலவர் பாடாத செய்யுட்களாகக் கருதப்படக்கூடிய பல செய்யுட்கள் இடைச்செருகலாகப் புகுத்தப்பட்டிருப்பதைக் காணலாம். இங்ஙனம் இடைச்செருகல்களாகப் புகுத்தப்பட்டுள்ள பாடல்கள் அனைத்தும் புதூகுச்சாம் என்னும் காப்பியத்தில் பெருமானார் முகம்மது (சல்) அவர்களின் மறைவைக் குறிப்பிடும் படலத்தில் உள்ள செய்யுட் களோடு பெரிதும் ஒத்திருப்பதைக் காணலாம். புதூகுச்சாம் செய்யுட் கள் சிற்சில மாற்றங்களுடன் பொன்னரிய மாலை நபி முகம்மது சல்லல்லாகு அலைகி வசல்லம் அவர்களின் உபாத்துப் படலத்தில் சேர்க்கப்பட்டிருப்பதைக் கரணலாம். எடுத்துக்காட்டாக ஒரு செய் யுளைப் பார்ப்போம். பொன்னரிய மாலையில் ஒரு செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

பாவினை மறந்தது கைகால்கள் பான்முலை மறந்தது பிள்ளைக
ளாவியை மறந்தது வாக்கைக எடுபுகை மறந்தது சுல்லிகள்
காவினை மறந்தது புட்குழாங் கண்படை மறந்தது பள்ளிவாய்த்
தீவிகை மறந்தது வீடுகள் செய்தொழின் மறந்தது மதீனம்

(நபி முகம்மது சல்லல்லாகு அலைகியொசல்லம் உபாத்துப்
படலம் : 49)

இனி, செய்கப்துல் காதிறு நெய்னார் லெப்பை ஆலிம் புலவர் இயற்றிய புதுகுச்சாம் என்னும் காப்பியத்தில் இடம் பெற்றுள்ள பாடலைப் பார்ப்போம்.

பாவினை மறந்த கைகால் பான்முலை மறந்த பிள்ளை
யாவியை மறந்த வாக்கை யடுபுகை மறந்த சுல்லி
காவினை மறந்த புட்கள் கண்படை மறந்த பள்ளித்
தீவிகை மறந்த வில்லஞ் செய்தொழின் மறந்த மூதூர்

(நபிநாயகம் உபாத்துப் படலம் : 48)

இங்ஙனம் ஒத்த கவிகள் இருக்கும் பொழுது எது முந்தினது என்ற வினா எழுகின்றது. புதூகுச்சாம் இயற்றப்படுவதற்கு முன்னர் பொன்னரிய மாலை இயற்றப்பட்டிருக்கலாம். ஆனால் பொன்னரிய மாலையைப் பதிப்பித்தவர் மேற்கூறிய இடைச் செருகலைச் செய்திருக் கலாம். இரண்டு நூல்களையும் பதிப்பித்த ஆண்டைப் பார்க்கும் பொழுது இத்தகைய ஒரு முடிவுக்கு வரவேண்டி இருக்கிறது.

புதூகுச்சாம் அச்சிட்டு வெளியிடப்பட்டது ஹிஜ்றி 1277ஆம் ஆண்டு சபர் மாதம் ஆறாம் நாள் வெள்ளிக்கிழமை ஆகும். அதாவது கி.பி. 1860ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 24ம் தேதி அன்றாகும். பொன்னரிய மாலையை கண்ணகுமது மகுதூ முகம்மதுப் புலவர் கி.பி. 1906ஆம் ஆண்டே பதிப்பித்துள்ளார். புதூ குஷ்ஷாம் வெளிவந்து நாற்பத்தாறு ஆண்டுகள் இடைவெளிக்குப் பின்னர் இடைச் செருகல் உள்ள பொன்னரியமாலையின் இப்பதிப்பு வெளிவந்துள்ளது. கனகவி ராயரால் பாடப்பட்டு கண்ணகுமது மகுதூ முகம்மதுப் புலவரால் பதிக்கப்பெற்ற கனகாபிஷேகமாலையிலும் இத்தகைய இடைச்செருகல் இடம்பெற்றுள்ளது. கனகாபிஷேக மாலையைப் பற்றி எழுதப்பட்ட போது இது பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. கனகாபிஷேக மாலையில் முதன்முறைப் படலத்தில் இடம்பெற்றுள்ள 153வது செய்யுள் இத்தகைய இடைச்செருகலுக்கு எடுத்துக் காட்டாக அமைகின்றது. கனகாபிஷேகமாலைச் செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

பண்மறந்த கைகளால் பகர்பான் மறந்த பிள்ளை
எண்மறந்த உள்ளம் புகையே மறந்த சுல்லி
கண்மறந்த புட்கண் மறந்தார்கள் கண்படுதல்
திண்மறந்த வாக்கை செயலே மறந்த தவ்வூர்

பொன்னரிமாலையில் உள்ள நபி முகம்மது சல்லல்லாகு அலைகி யொசல்லம் அவர்கள் உபாத்துப் படலத்தில் உள்ள சில செய்யுட்கள் புதூகுச்சாமில் உள்ள நபி நாயகம் உபாத்துப் படலத்தில் உள்ள செய்யுட்களை ஒத்திருக்கும் பாங்கினை இரு நூல்களிலுமுள்ள பின் வரும் செய்யுட்களை ஒப்புநோக்கும் பொழுது தெளிவாகக் காணலாம்.

| பொன்னரிய மர்லை | புதாகுஷ்ஷாம் |
|---|---|
| 5............ | 7 |
| 6............ | 8 |
| 7............ | 9 |
| 8............ | 11 |
| 10............ | 12 |
| 12............ | 15 |
| 13............ | 17 |
| 14............ | 18 |
| 16............ | 23 |
| 17............ | 24 |
| 18............ | 25 |
| 19............ | 26 |
| 20............ | 28 |
| 22............ | 31 |
| 33............ | 36 |
| 34............ | 37 |
| 35............ | 38 |
| 36............ | 39 |
| 37............ | 40 |
| 38............ | 41 |
| 39............ | 42 |
| 40............ | 43 |
| 41............ | 44 |
| 43............ | 46 |
| 48............ | 47 |
| 49............ | 48 |
| 50............ | 49 |
| 51 ......... | 50 |
| 52............ | 51 |
| 53............ | 52 |
| 54............ | 53 |
| 56............ | 55 |
| 57............ | 56 |
| 58............ | 57 |
| 59............ | 58 |
| 60............ | 59 |
| 61............ | 60 |
| 62............ | 61 |

| பொன்னரிய மாலை | புதூகுஷ்ஷாம் |
|---|---|
| 63………… | 62 |
| 64………… | 63 |
| 65………… | 64 |
| 66………… | 65 |
| 67………… | 66 |
| 68………… | 67 |
| 69………… | 68 |
| 70………… | 69 |
| 71………… | 70 |
| 72………… | 71 |
| 73………… | 72 |
| 74………… | 73 |
| 75………… | 74 |
| 76………… | 75 |
| 77………… | 76 |
| 78………… | 77 |
| 79………… | 78 |
| 80………… | 79 |
| 81………… | 80 |
| 82………… | 81 |
| 83………… | 82 |
| 84………… | 83 |
| 85………… | 84 |
| 86………… | 85 |
| 87………… | 86 |
| 88………… | 87 |
| 89………… | 88 |
| 90………… | 89 |
| 91………… | 90 |
| 92………… | 91 |
| 93………… | 92 |
| 94………… | 93 |

இவை இடைச்செருகலென முடிவுக்கு வருமிடத்து இவற்றை அகற்ற பழைய பிரதிகள் கிடைப்பின் அவற்றுடன் ஒப்பிட்டுப் பிழைகள் திருத்தி வெளியிடப்பட்டால் இந்நூல் பெரிதும் பயன்படக்கூடிய தொன்று எனக்கூறலாம்.

# யூசுபு நபி காவியம்

நபி என்றால் தீர்க்கதரிசி என்பது பொருள். உலகம் தோன்றிய காலந்தொட்டு முகம்மது நபி (ஸல்) அவர்கள் தோன்றும் வரை ஓரிலட்சத்து இருபத்து நாலாயிரம் நபிமார்கள் தோன்றி மறைந் துள்ளனர். அத்தகைய நபிமார்களுள் ஒருவர் நபி யூசுப் (அலை) அவர்கள். நபி யஃகூப் (அலை) அவர்களின் புதல்வர். நபி இப்றாகீம் (அலை) அவர்கள் புதல்வர் நபி இசுகாக்கு (அலை) அவர்களின் வழி வந்தவர். யூசுப் நபி (அலை) அவர்களின் தாயார் பெயர் றாஹிலா அம்மையார். இவர் தம் உடன் பிறந்தோர் புன்யாமீன் என்பவர். இந்தப்பெயருக்குரிய காரணம் பலவாறு கூறப்பட்டுள்ளது. இவருடைய பெயர் ஆறு விதமாக உச்சரிக்கப்பட்டது என்று அறிஞர் கூறுவர். யூசுப் என்னும் சொல்லுக்கு அழகர் என்றும் ஒரு பொருள் உண்டு என்பர். இவர் அழகில் சிறந்து விளங்கினார். இதனாலேயே இவர் இப்பெய ரைப் பெற்றார் என்றும் அபிப்பிராயப்படுவர். தந்தையார் யஃகூப் (அலை) தமது தனயரான யூசுபு (அலை) மீது அதிகமாக அன்பு செலுத்தினார். அலாதியான பிரியம் வைத்திருந்தார். இதன் காரண மாகவே ஏனைய சகோதரர்கள் இவர் மீது பொறாமை கொண்டனர். இப்பொறாமையே இவர் பாழுங்கிணற்றில் தள்ளப்படுவதற்குக் காரண மாகவும் அமைந்திருந்தது. ஒரு வணிகக் கூட்டத்தினரால் மீட்கப்பட்ட இவர் எகிப்தில் சிறைவாசம் செய்யவும் பின்பு அந்த நாட்டின் அரச ராகத் திகழவும் வழிவகுத்தது, இங்ஙனம் இவர் மீட்கப்பட்டு எகிப்துக்கு எடுத்துச் செல்லப்பட்டமையாகும். எகிப்திய மன்னன் மகள் சுலைகா அம்மையாருடன் தொடர்பு படுத்தி இவரது வாழ்க்கை அமைந்தது என்று கூறுவர். இந்நூலிலும் இச்செய்தி முக்கியத்துவம் பெற்றுள்ளது. மதியன் நாட்டு மாலிக் என்பவரே வணிகர் கூட்டத்தினரிடமிருந்து யூசுபு நபி (அலை) அவர்களை விலைக்கு வாங்கினார் என்றும் குறிப் பிடப்பட்டுள்ளது. இஸ்லாம் வழிவந்த தமிழ்மொழி நூல்கள் பலவற்றில் யூசுபு நபி (அலை) பாட்டுடைத்தலைவராய் அமைந்துள்ளார். மதாறுப் புலவர் இயற்றிய யூசுபு நபி கிஸ்ஸா இதற்கான ஓர் எடுத்துக் காட்டாகும்.

இது யாரால் பாடப்பட்டது எப்பொழுது பாடப்பெற்றது என்பன போன்ற விவரங்கள் யூசுபு நபி காவியத்தில் அகச்சான்றுகளாக அமைந்திருப்பதைக் காணலாம். இந்நூலின் முகப்புப் பக்கத்தில் 'இஃது நபி யூசுபு அலைகிஸ்ஸலாம் அவர்களின் இயற்கையுஞ் செயற்கையு மாகிய காரண சரித்திரத்தை புரையூரென்று வழங்கா நின்ற பூவை மாநகரம் மீறான் பிள்ளை அவர்களின் குமாரர் கந்தப்பிள்ளைப் புலவ ரவர்கள் பாடியிருந்தனர் : பூவடிச்சிந்து, ஐந்து படைப்போர் பாடிய'

அசனலிப் புலவரின் தந்தையாராவார். அதனை, காயற்பட்டணம் கண்ணகுமது மகுதூ முகம்மதுப் புலவரவர்களால் 'நீக்கவேண்டுமவைகளை நீக்கி சேர்க்கவேண்டுமவைகளைச் சேர்த்துப் பாடவேண்டியவைகளைப் பாடி முதற்சரித்திரம்போற் செய்யப்பட்ட யூசுபு நபி காவியம்' என இரண்டு சொற்றொடர்கள் அமைந்துள்ளன. இவற்றிலிருந்து இந்த நூல் பதிக்கப்படும்பொழுது சில மாற்றங்களுக்கு இலக்காகி உள்ளது என்பது புலப்படுகின்றது. மூல நூலுடன் ஒப்ப நோக்கும் வாய்ப்பு எமக்கில்லை ஆதலால் முழுமையாக இதனை ஏற்கவேண்டி உள்ளது. இந்நூலாசிரியர் பூவை மாநகரத்தைச் சேர்ந்தவர் என்பதும் இவருடைய தகப்பனார் மீறான் பிள்ளை அவர்கள் என்பதும் இவருடைய பெயர் கந்தப்பிள்ளைப் புலவர் என்பதும் தெளிவாகின்றது. கந்தப்பிள்ளை என இருப்பதால் இவர் இஸ்லாத்தைச் சாராத வேற்று மதத்தவர் என சிலர் முடிவு கட்டலாம். ஆயிர மசாலா இயற்றிய பரிமளப்புலவர், கனகாபிஷேகமாலை இயற்றிய கனகவிராயர், இராஜநாயகம், குத்புநாயகம் போன்ற காப்பியங்களை இயற்றிய வண்ணக்களஞ்சியப் புலவர் போன்றே இந்நூலாசிரியரும் தம்மை கந்தப்பிள்ளை எனச்சுட்டி இருக்கலாம். கந்தசாமிப்பிள்ளை என்று வராமல் கந்தப்பிள்ளை என வந்திருப்பதால் இந்த கந்தப் பிள்ளை என்பது எங்ஙனம் உருவாகியது என்பதை அறிதல் இன்றியமையாததாகின்றது.

கந்தம் என்னும் சொல்லுக்கு பல கருத்துக்கள் உண்டு. அவற்றுள் ஒன்று வாசனை என்பது. முகவாசப்பண்டம், சந்தனம் என்பன ஏனைய பொருள்கள். கந்தம் என்னும் சொல் பொதிய மலையையும் குறிக்கும். அருமருந்தைய தேசிகரின் அரும்பொருள் விளக்க நிகண்டு அதற்கான பொருள் அன்பு எனச் சுட்டும். பொன் என்பது பொருள் என சிதம்பர ரேவண சித்தரின் அகராதி நிகண்டு குறிப்பிட்டுள்ளது. கந்தப்பிள்ளை என்பதில் இடம் பெற்றுள்ள கந்தம் என்பது இங்கு குறிப்பிடப்பட்டுள்ள பொருள்களுள் ஒன்றினைக் கொண்டிருத்தல் வேண்டும். பரிமளப்புலவரின் பெயரில் உள்ள பரிமளம் என்பது மிகுமணம் எனப் பொருள்படுவது போன்று கந்தப்பிள்ளைப் புலவரின் பெயரில் உள்ள கந்தம் என்பது வாசனை என்பதனைக் குறிப்பிடப் பயன்படுத்தப்பட்டிருக்கலாம்.

முப்பத்தொரு படலங்களையும் ஆயிரத்து நாற்பத்தேழு திருவிருத்தங்களையும் கொண்டது யூசுப் நபி காவியம். கடவுள் வாழ்த்துப் படலத்தோடு தொடங்கி மகிழ்ச்சிப் படலத்தோடு முடிவடைகிறது. சீறாப்புராணத்தில் தலைமுறைப் படலமும் நபியவதாரப் படலமும் முறையே நபிகள் நாயகம் முகம்மது (ஸல்) அவர்களின் மூதாதை

யரையும் அவர்களுடைய பிறப்பையும் வருணிக்கிறது. ஆனால் யூசுபு நபி காவியத்தில் யூசுபு நபி (அலை) அவர்களின் மூதாதையர் பற்றிய விவரங்கள் முதன் முறைப் படலத்திலும் அவர்களுடைய பிறப்பு யூசுப் நபி பிறந்த படலத்திலும் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். ஏனைய காப்பிய ஆசிரியர் அவதாரப்படலம் என்பதனை கந்தப்பிள்ளைப் புலவர் காரணத்தோடு தான் அவதாரம் என்று சுட்டாது பிறப்பு என்று குறிப் பிட்டுள்ளார். அவதாரம் என்ற சொல்லுக்குக் கீழான பிறப்பு என்னும் பொருளும் உண்டு என்பர். அவர் தம் கருத்துப்படி இராமாவதாரம் என்று சொல்லும்பொழுது உயர்ந்த நிலையில் உள்ள கடவுள் என்னும் உச்ச நிலையிலிருந்து அற்பமான கீழான மனிதராய்க் கடவுள் உரு எடுத்தலாலே அவதாரம் என்னும் சொல் அங்ஙனம் பயன்படுத்தப்படு கிறது. இந்தக் கண்கொண்டுதான் நாம் அவதாரம் என்னும் சொல்லைப் பயன்படுத்துவதின் தாத்பரியத்தை உணரவேண்டும். இதனாலே தான் அவதாரப் படலம் என்று குறிப்பிடாது பிறந்த படலம் என்று குறிப்பிட்டுள்ளார் கந்தப்பிள்ளைப் புலவர் என்ற முடிவுக்கு வரலாம். இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய ஏனைய காப்பியங் களில் தொடக்கத்தில் அமைந்துள்ள நாட்டு, நகரப்படலங்கள் யூசுபு நபி காவியத்தில் இடம்பெறவில்லை. கருத்து வேறுபாட்டை ஏற்படுத்தக் கூடிய ஒரு படலம் யூசுபு நபி காவியத்தில் இடம்பெற்றுள்ளது. கிணற்றில் சகோதரர்களால் தள்ளப்பட்ட யூசுபு நபி (அலை) அவர்கள் கிணற்றில் இருக்கும்பொழுது நபி ஹூது (அலை) அவர்களைக் கண்ணுற்றார்கள் என்று கிணற்றில் யூசுபு நபி கூது நபியைக் கண்ட படலம் விவரிக்கிறது. கூது நபி (அலை) அவர்களுடைய காலமும் யூசுபு நபி (அலை) அவர்களுடைய்ய காலமும் வேறுபட்டிருப்பதால் பல ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த ஹூது நபி (அலை) அவர்களை யூசுபு நபி (அலை) அவர்கள் கண்டிருக்க முடியாது. அல்லாஹ்வின் அருளால் ஏற்பட்ட ஓர் அதிசய நிகழ்ச்சியாகவும் அது இருக்கலாம். அதனை வேறுவிதமாக விளக்கமுடியாது. நூலின் முகப்புப்பக்கத்திலே இடம் பெற்றுள்ள காப்பு விருத்தம் இவ்வாறு அமைந்திருப்பதைக் காணலாம்.

சீரார் மலரின் மணமென்னத் திருவார் நாவின் சுவையென்ன
நேரா ருரையின் பொருளென்று நிலையா யெவைக்குங்
கருத்தாவாய்ப்
பேராய் நிறைந்துங் காணரிதாய்ப் பேச வுளதா யுறுபொருளை
ஆரா தனைசெய் தனுதினமு மன்பாய் வாழ்த்திப் புகல்வாமே

யூசுபு நபி காவியம் இயற்றப்பெற்ற காலம் கடவுள் வாழ்த்தில் உள்ள ஒரு செய்யுளில் குறிப்பிடப்பட்டுள்ளது. கொல்லம் ஆண்டு குறிப்பிடப்பட்டுள்ளது. கொல்லம் ஆண்டு தொளாயிரத்திருபத்

தொன்றில் தை மாதம் ஐந்தாந்தேதி புல்லிய வெள்ளிநாளில் அரங்கேற்றப்பட்டது யூசுபு நபி காவியம் என்பது சுட்டப்பட்டுள்ளது. கொல்லம் ஆண்டு கி. பி. 824ஆம் வருடம் செப்தெம்பர் மாதம் ஆரம்பமானது. இந்த ஆண்டோடு 921க் கூட்டினால் 1745பெறப்படுகிறது. எனவே யூசுபு நபி காவியம் கி.பி. 1745ஆம் ஆண்டு இயற்றப்பட்டது எனக் கொள்ளலாம். சீறாப்புராணம் இயற்றப்பட்டு ஏறத்தாழ ஐம்பது ஆண்டுகளுக்குப் பின்னரே யூசுபு நபி காவியம் இயற்றப்பட்டுள்ளது என்று கூறுவது பொருந்தும். இந்நூல் இயற்றப்பட்ட தேதி தை மாதம் ஐந்தாம் நாள் என்பது குறிப்பிடப்பட்டுள்ளது. ஜனவரி மாதம் 14ஆம் நாள் தை மாதத்தின் முதலாம் நாளாக அமைகிறது. எனவே தை மாதம் ஐந்தாம் நாள் ஜனவரி மாதம் 18ஆந் தேதியாகும். ஆங்கில ஆண்டு கணக்கிற்கிணங்க ஜனவரி மாதம் 18ஆந் தேதி திங்கட்கிழமையாகும். எனவே யூசுபு நபி காவியம் கி. பி. 1745ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 18ஆந் தேதி திங்கட்கிழமை அரங்கேற்றப்பட்டது எனக்கொள்ளலாம். இது ஹிஜ்றி 1157ஆம் ஆண்டு துல்ஹஜ் மாதம் 14ஆம் நாளாகும். யூசுபு நபி காவியம் அரங்கேற்றப்பட்ட தேதியைக் குறிப்பிடும் செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது:

சொல்லருங் கொல்ல மாண்டு தொளாயிரத் திருபத் தொன்றில்
நல்லன திங்கட் டையினி லில் ஐந்தாந் தெய்தி மேன்மை
புல்லிய வெள்ளி நாளிற் புகலருஞ் சிறப்பு வாய்ந்த
வல்லவ னருளாற் பாடி வளரரங் கேற்றி னானே.

(கடவுள் வாழ்த்து : 22)

இருபத்தேழு செய்யுட்களைக் கொண்ட கடவுள் வாழ்த்துப் படலத்தில் முதல் பதினாறு செய்யுட்களிலும் ஏனைய காப்பியங்களில் உள்ள முறைமையைப் பின்பற்றி சதக்கத்துல்லா அப்பா வரையுள்ள பெரியார் பாடப்பெற்றுள்ளனர். முதல் மூன்று செய்யுட்களும் அல்லாஹ்வைப் புகழ்ந்து அவனது அருட்கடாட்சம் கோரும் செய்யுட்களாக அமைந்துள்ளன. கடவுள் வாழ்த்துப் பதினேழாவது செய்யுளில் தம்பி மாமுனா லெப்பை ஆலிமும் அவர்தம் சீடரான வேத புராண ஆசிரியர் நூகு லெப்பை ஆலிமும் புகழப்பட்டுள்ளனர். 18ஆம் செய்யுள் மிகுறாஜ் மாலை இயற்றிய ஆலிப் புலவரையும் 19வது செய்யுளில் ஆயிரம் மசாலா, சீறாப்புராணம், சுகபுல்லீமான், ஒசியத்து மாலை, திருப்புகழ், சத்தாது மாலை, திருமணக்காட்சி போன்ற நூல்களை இயற்றியவர்களையும் அவற்றிற்குப் பாயிரம் பாடியவர்களையும் போற்றிப் புகழ்ந்துள்ளார் நூலாசிரியர். 20வது செய்யுளில் நூகு லெப்பை ஆலிமைக் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். அவர் காகிறூரைச் சேர்ந்தவர் என்றும் தமக்கு இந்த யூசுபு நபி காவியத்தைப் பாட இன்றியமையாத உரையைத் தந்தார் என்றும் அதனை தலீல் (ஆதாரம் கொடுத்தல்) செய்தார் என்றும் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

கடவுள் வாழ்த்தில் உள்ள ஒரு செய்யுளில் ஆசிரியர் தாம் பூவை யூரைச் சேர்ந்தவர் என்றும் தமது தந்தையார் பெயர் மீறான் என்றும் தமது பெயர் கந்தப்பிள்ளை என்றும் தாம் இந்த நூலைப் பாடி அரங்கேற்றினார் என்றும் ஒரு செய்யுளில் ஆசிரியர் இவ்வாறு பாடி உள்ளார் :

அந்தமு முடிவு மில்லா ஆதிதன் கிருபை பெற்று
சுந்தரப் பூவை யூர்வாழ் தூயநல் முஸ்லிம் கட்குச்
சந்ததந் தலைமை செய்யுந் தாட்டிற மீறான் மைந்தன்
பந்தமார் கந்தப் பிள்ளை படித்தரங் கேற்றி னானே.

(கடவுள் வாழ்த்து : 23)

ஆசிரியர் அவையடக்கம் கூற இரண்டு செய்யுட்களைப் பயன் படுத்தி உள்ளார். இரண்டிலும் உவமைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. கிரணங்களைப் பரப்பிக் கொண்டிருக்கும் சந்திரன் முன்னிலையில் வெள்ளிகள் நின்றுகொண்டு சந்திரன் தமக்கு இணையாம் என்று கூறுவது போன்றது, சந்திரன் போன்ற கற்றறிந்தோர் முன்னிலையில் நட்சத்திரம் போன்ற தாம் இந்நூலை இயற்றியிருப்பது. அதே போன்று கற்றறிந்தோர் முன்னிலையில் தாம் இந்த நூலை இயற்றி இருப்பது பித்தளையைத் தங்கம் என்று கூறுவது போலாயிருக்கும். தமது நூலைத் தங்க முலாம் பூசப்பட்ட பித்தளைக்கும் சான்றோரின் நூல்களைத் தங்கத்துக்கும் ஒப்பிட்டு இங்ஙனம் அவையடக்கம் கூறி உள்ளார் ஆசிரியர் :

மாசிலாக் கலைகள் வீசு மதிதனக் கிணையா மென்று
நேசமாய் வெள்ளி தன்னை நிறுத்தி வைத்திட் டபோலும்
பூசுபித் தளையைத் தங்கம் போலுமென் றிந்நூல் யானும்
கூசிலாக் கவிஞர் முன்னிற் கூறுத லொத்த மாதோ.

(கடவுள் வாழ்த்து : 24)

மற்றொரு அவையடக்கச் செய்யுளில் தாம் சொல் எழுத்தாம் இலக்கிய இலக்கணங்கள் அறியாதவன் என்றும் ஏனைய சான்றோரின் நூல்கள் நெல் போன்றவை என்றும் தமது நூலோ பதரை ஒத்திருக்கிறது என்றும் கல்வி கேள்விகளில் சிறந்தோர் படைப்புக்களின் முன்னர் தமது இந்த நூல் இருப்பது சூரிய ஒளிக்கு முன்னர் மின்மினிப் பூச்சி அதன் ஒளி சிறந்தது என்று பறைசாற்றுவது போன்றது என்றும் ஒரு செய்யுளில் இவ்வாறு பாடி உள்ளார் ஆசிரியர் :

நெல்லெனப் பதரை யொப்பாய் நிகழ்த்திடு மாறு போலும்
எல்லவ னொளிவென் றேமின் மினியிணை இயம்பல் போலுஞ்
சொல்லெழுத் தறியான் சொன்ன தென்னினுந் தூய நூலோர்
நல்லவே திருத்திக் கொள்வா ரெனவன்பி னவின்றிட் டேனால்.

(கடவுள் வாழ்த்து : 25)

இங்கே தமது நூலில் பிழைகள் இருப்பினும் நல்லனவையாக அத்தகைய பிழைகளைக் கொள்ளுமாறு சான்றோரிடம் ஆசிரியர் வேண்டுகோள் விடுத்துள்ளார். கடவுள் வாழ்த்தில் உள்ள இறுதிச் செய்யுட்கள் இரண்டும் எல்லோரையும் வாழ்த்துவதாக அமைந் திருப்பதைக் காணலாம்.

இந்த நூலை இயற்றுவதற்குத் தமக்குப் பொருள் உதவி புரிந்து தம்மை வழி நடத்திய ஒரு பெரியாரைப் பற்றியும் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். அவரே தமது யூசுபு நபி காவியத்துக்குக் கொடைநாயகராய் விளங்கினார் என்றும் ஆசிரியர் பெருமிதத்தோடு கூறி உள்ளார். அவர்தம் கொடைநாயகரின் பெயர் சின்னவாப்பு என்பதாகும். அவர் மீறான் லப்பை என்பவரின் புதல்வராவார். அவர்கள் திட்டச்சேரியைச் சேர்ந்தவர்கள். கொடைநாயகரின் தந்தையார் பெயரும் நூலாசிரியர் தந்தையார் பெயரும் மீறான் லப்பையாயிருத்தல் ஈண்டு நோக்கற் பாலது. திட்டச்சேரியைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது திட்டச்சேரி மக்கள் இறையருள் பெற்றவர்களாகத் திகழ்ந்தார்கள் என்றும் குறிப் பிடப்பட்டுள்ளது. இக்கருத்துக்களே ஒரு செய்யுளில் இடம் பெற்றுள்ளன :

இறைய வனருள் பராவு மியனகர் திட்டச் சேரி
நறைகமழ் மார்பன் மீறான் லப்பைதன் வரத்தால் வந்த
நிறைதருச் சின்ன வாப்பு நிலவிய நபியூ சுபுவின்
கறையில்காவியத்தைப் பாடக் கருணையாய் தலீல்செய் தானே.

(கடவுள் வாழ்த்து : 21)

கடவுள் வாழ்த்தில் இடம்பெற்றுள்ள குறிப்பைத் தவிர்த்து நூலில் வேறு மூன்று இடங்களில் கொடைநாயகர் போற்றப்பட்டுள்ளமையைக் காணலாம். தமது கொடைநாயகரின் பெயரையும் அவருடைய தந்தையார் பெயரையும் ஒரு செய்யுளின் முதலிரண்டு அடிகளிலும் இங்ஙனம் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார் :

அதிவித மீறான் லப்பை அருந்தவ மைந்த னான
துதியுறுஞ் சின்ன வாப்புத் துரைமனைச் செல்வம் போன்ற.

(யூசுபு நபி மறு விலையிடப்பட்ட படலம் : 35)

மற்றொரு செய்யுளின் கடைசி இரண்டு அடிகளிலும் கொடைநாயகர் இன்னாருடைய மகன் என்பது இங்ஙனம் இடம்பெற்றுள்ளது :

வாலோலி தங்களுற நன்மீறான் லப்பைவர மகவாக வந்த சீலன்
பாலாழி நிகருஞ்சின்ன வாப்புமனைப் பாக்கியம்போல் யூசுபர
சியல்செய் தாரே.

(யூசுபு நபி யரசியல் பெற்ற படலம் : 6)

யூசுபு நபி (அலை) அவர்களும் சுலைகா அம்மையார் அவர்களும் இல்லற வாழ்க்கையை நடத்தியமை கொடைநாயகர் சின்ன வாப்பு அவர்களின் பொலிவு பெற்ற இல்வாழ்க்கை போன்று இருந்தது என ஒரு செய்யுளில் பாடி உள்ளார் ஆசிரியர். அங்ஙனம் ஒப்பிடும்பொழுது அவருடைய கைகளை வரையாது வழங்கும் மழைக்கு உவமிக்கிறார். கடையெழு வள்ளல்களுள் ஒருவரான காரி என்றே கொடைநாயகர் சுட்டப்படுகிறார். அவர்தம் பிறப்பகமாகிய திட்டச்சேரியும் குறிப்பிடப் பட்டுள்ளது. நாகபட்டணத்தை அடுத்தே திட்டச்சேரி என்னும் நகர் அமைந்துள்ளது. இக்கருத்துக்களைக் கொண்ட அந்தச் செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது :

சீர்வளர் திட்டச் சேரி நகரினில் சிறந்து வாழும்
பேர்வளர் மீறான் லப்பை பெட்புறு தவத்தால் வந்த
கார்கரன் சின்ன வாப்புக் காரியின் மகிழ்ச்சி போல
வேர்நபி யொடுசு லைஹா விசையின் வாழ்ந்திருந் தாரன்றே.

(யூசுபு நபி மணம்புரி படலம் : 69)

கந்தப்பிள்ளைப்புலவர் தமது யூசுபு நபி காவியத்தில் பஞ்சத்தின் கொடுமையை பல செய்யுட்களில் படம் பிடித்துக் காட்டி உள்ளார். ஒருவன் உண்ணும் உணவினைப் பெற நினைத்து அந்த உணவின் எடைக்கு வெள்ளியை கொடுத்தாலும் தனக்கு வேண்டிய உணவினைப் பெறமுடியாது என்னும் நிலையிலே வாழ்ந்துவர காரணமாய் அமைந்தது அந்த நாட்டில் ஏற்பட்ட பஞ்சம். பொன்னைக் கொடுத்தாலும் அப் பொன்னின் எடைக்குச் சமமான தானியத்தைப் பெறமுடியாதிருந்த கொடுமையான பஞ்சகாலம் அது. தானியம் உள்ளவர்கள் எள்ளளவும் கொடுக்க மறுத்த காலம் அது. இக்கருத்துக்களே ஒரு செய்யுளில் இவ்வாறு அமைந்துள்ளன.

அள்ளி யுண்ணுமன் னத்திற் கதனெடை
வெள்ளி யீயினும் விற்பதற் கில்லையா
லுள்ள பொன்னெடை யீயினு முள்ளவ
ரெள்ள ளவும்மீ யாக்கொடும் பஞ்சமே.

(பஞ்சம் வந்த படலம் : 6)

அபஷாவிலிருந்து ஷாம் (சிரியா) நாட்டுக்குச் செல்லும் வழியில் யஃகூப் நபி (அலை) அவர்கள் கண்ட காட்சியினையும் ஷாம் நாட்டின் இயற்கையையும் ஒரு செய்யுளில் ஆசிரியர் வருணித்துள்ளார். ஆறு களையும் காடுகளையும் நீண்ட மலைத்தொடர்களையும் தோட்டங் களையும் கிணறுகளையும் சிவந்த நெல் வயல்களையும் குளிர்ச்சி பொருந்திய பூஞ்சோலைகளையும் நீங்கி ஷாம் நாட்டை அடைந்தார் கள். சாறுகள் பாயும் கருப்பஞ் சாலைகளையும் கொண்டு திகழ்ந்தது ஷாம் நாடு. இக்கருத்துக்களே ஒரு செய்யுளில் இவ்வாறு அமைந் துள்ளன :

வீறுறை யஃகூ பன்னை விளம்பிய முறைமை போல
வாறுக ளடவி நீண்ட வசலங்கள் கொடிக்கால் கேணி
கூறிடுஞ் செந்நெற் காடு குளிர்ந்தபூ வனங்க ணீந்திச்
சாறிடுஞ் கருப்பஞ் சாலை தயங்கிய சாமிற் சென்றார்.

(முதன்முறைப் படலம் : 25)

பெரும்பாலும் ஆசிரியர் வழிநடைப் பயணங்களை வருணிக்கும் பொழுதே இயற்கையை வியந்து பாடி உள்ளார். அசீசு மன்னரும் சுலைஹா அம்மையாருடன் மிசிறு (எகிப்து) நாட்டுக்குச் சென்ற மையைக் குறிப்பிடும்பொழுது அத்தகைய இயற்கை வருணனையை மேற்கொண்டுள்ளார் என்பது பொருத்தமான கூற்றாகும். பூக்களைக் கொண்ட மரங்கள் நெருக்கமாக வளர்ந்துள்ள பூஞ்சோலைகளைக் கடந்து அவர்கள் சென்றனர். நீர் நிறைந்த குளங்கள் பல அமைந் துள்ள பகுதியினைக் கண்டு களித்தவர்களாக அவர்கள் சென்றனர். பெரிய மலைகள் பலவற்றைக் கடந்து சென்றனர். காடுகளைத் தாண்டிப் போந்தனர். இங்ஙனம் ஒரு பாடலின் இறுதி இரண்டு அடி களிலும் ஆசிரியர் இக்கருத்துக்களை அமைத்துப்பாடி உள்ளார் :

பூமர நெருங்குஞ் சோலை புனற்றட மலைகா னீந்தித்
தோமறு மிசுறைச் சார்ந்து தூயரண் மனைவந்த துற்றான்

(சுலைஹா கனவு கண்ட படலம் : 27)

மிசுறு நாட்டின் வளம் மிகைபட வருணிக்கப்பட்டுள்ளது. வளம் மிக்க நாடாய் விவரிக்கப்பட்டுள்ளது. அங்கே கட்டுக்கட்டாய் இருப் பவை செந்நெல்க் கட்டுக்களேயாம். சோலை என்று சொல்லக் கூடிய வையாய்த் திகழ்வது பூஞ்சோலையே. அங்கே வெட்டப்படுவன குளங் கள் மாத்திரமே. மிசிறில் வீசப்படுவது நறுமணங்கமழ்ந்த பன்னீரே. அங்கு வேறு எதுவும் தெளிக்கப்படமாட்டாது. தட்டுத்தட்டாக அங்கு அமைந்திருப்பவை பந்தல் தட்டுக்களேயாம். இலையின் சாறு மாத் திரமே அங்கு சாறாகப் பெறப்படுகின்றது. மிசுறு நாட்டில் மணக்கால்

களே நடப்படுகின்றன. வேறெதுவும் நடப்படுவதில்லை. கலியாணப் பந்தலிடுவதற்கு முதலில் நடப்படும் முகூர்த்தக்காலே மணக்கால் என வழங்கப்படுகிறது. சீரும் சிறப்பு மிகுந்ததாய் மிசுறு நாடு திகழ்வதாலேயே அங்கு மணவினைகள் மிகுதியாய் நடைபெறுகின்றன. மிசுறு நாட்டில் செல்வமும் அமைதியும் சிறந்து விளங்குவதைக் குறிக்கவே ஆசிரியர் இக்கருத்துக்களை ஒரு செய்யுளில் அமைத்துப் பாடி உள்ளார்:

கட்டென்றாற் செந்நெற் கட்டுங் காவென்றால் மலரின் காவும்
வெட்டென்றாற் குளங்கள் வெட்டும் வீச்சென்றால் பன்னீர் வீச்சும்
தட்டென்றாற் பந்தற் றட்டுஞ் சாறென்றா லிலையின் சாறு
நட்டென்றான் மணக்கா நட்டு நடந்தன மிசுறி னீதம்.

(யூசுபு நபி யரசியல் பெற்ற படலம் : 15)

தந்தை நபி யஃகூப் நபி (அலை) அவர்களின் கூற்றுக்கு இணங்க அவர்தம் புதல்வர்கள் சகோதரர் யூசுபு நபி (அலை) அவர்களைக் காப்பாற்றி அரவணைப்பு வழங்கிய மிசுறு நாட்டு மன்னனிடம் சென்றார்கள். அவர்கள் சென்ற வழியை வருணிக்க முற்பட்ட ஆசிரியர் அவர்கள் கடந்து சென்ற வழியில் இருந்த இயற்கைக் காட்சியினை எடுத்துக் காட்டி உள்ளார். நெல்வயல்கள் அங்கு இருந்தன. சோலைகள் மிகுந்திருந்தன. இத்தகையது என்று சுட்டிக் காட்ட முடியாத பாலைவனம் ஊடாக அவர்கள் செல்ல வேண்டி இருந்தது. வானத்தையே தொடும் அளவுக்கு உயர்ந்த மரங்கள் வளர்ந்திருந்தன. மலைகள் காட்சி அளித்தன. இவற்றை எல்லாம் கடந்து நீங்கி மிசுறு நாட்டை அடைந்தபொழுது அவர்கள் வருணிக்க முடியாத கோட்டை வாயிலை கண்டனர். இவ்வருணனைகள் அடங்கிய ஒரு செய்யுள் இவ்வாறு அமைந்திருக்கிறது :

செந்நெலங் கழனி சோலை செப்பரும் பாலை வானந்
தன்னையே தொடவ ளர்ந்த தாணுமற் றிடங்க ணீந்தி
நன்னிய மிசுறைச் சார்ந்து நவிலரு மிஞ்சி வாசல்
முன்னியுண் ணுழைந்தார் தந்தை மொழிந்திடு முறைமை போல.

(யஃகூபு மக்கள் மிசுறு புக்க படலம் : 6)

சூரியோதய சந்த்ரோதய வருணனைகளில் தற்குறிப்பேற்ற அணியை ஏனைய புலவர்கள் அமைப்பது போன்று கந்தப்பிள்ளைப் புலவர் அமைக்கவில்லை. பகல் முழுவதும் உலாவி வந்த சூரியன் மேற்குத் திசையை நாடிச் சென்றான். பின்னர் எப்பொழுதும் ஒலித்துக் கொண்டிருக்கும் கடலுக்குள் புகுந்து மறைந்தான். இக்கருத்துக்கள் ஒரு செய்யுளில் இவ்வாறு அமைந்துள்ளது :

..........................................................வய்யோன்
உம்பரி லுலவி மேல்பால் லோசைநீர்க் கடலுட் சார்ந்தான்.
(யஃகூபு நபி கனவு கண்ட படலம் : 25)

சுலைகா அம்மையார் யூசுபு நபி (அலை) அவர்களைக் கனவில் கண்டார்கள். கண்டதும் அவர் மீது சுலைகா அம்மையாருக்குக் காதல் ஏற்பட்டது. கனவிலே உரையாடல் நடைபெறுகிறது. யூசுபு (நபி) (அலை) அவர்கள் யார் என்பதைக் கனவில் நிகழ்ந்த உரையாடல் மூலம் சுலைகா அம்மையார் அறிகிறார். திருமண உடன்பாடு கனவிலேயே ஏற்பட்டது. விழித்தெழுந்த சுலைகா அம்மையார் அழகே உருவெடுத்திருந்த யூசுபு நபி (அலை) அவர்களைக் காணாது வருந்தினார். யூசுபு நபி (அலை) அவர்கள் மீது ஏற்பட்ட பெரு விருப்பங் காரணமாக அவரால் எதுவுமே செய்ய முடியவில்லை. யூசுபு நபி (அலை) அவர்களை என்று அடைகுவன் என்னும் ஆசையே மேலிடப் பெரிதும் வருந்தினார். வர்சநீர் ஆடவில்லை; தலைமயிர் சொருகவில்லை; உணவு உட்கொள்ளவில்லை; மலரால்ன கட்டிலை அடையவில்லை; நித்திரை வரவில்லை: சிந்தூரம் தீட்டவில்லை; பொட்டு வைக்கவில்லை; மகிழ்ச்சி ஏற்படவில்லை; பந்து விளை யாட்டில் ஆர்வங் காட்டவில்லை; கன்னியரைச் சேர்த்துக்கொள் வதை விரும்பவில்லை; தோழியரையாவது பார்க்கவில்லை; கட் டளைகள் எதுவும் இடவில்லை; பாட்டுப் பாடவில்லை; படங்கள் பார்க்கவில்லை; அயல் பாகங்களுக்குச் செல்லவுமில்லை; பாதத்தைப் பஞ்சிட்டு அலங்கரிக்கவுமில்லை; தொங்குகின்ற காதணிகளைக் காது களில் அணியவுமில்லை; நறுமணம் பூசிக்கொள்ளவும் இல்லை; கோவைகள் பூண்டுகொள்ளவுமில்லை; விலை மதிக்க முடியாத ஆடைகள் அணியவுமில்லை; கருமையையும் தோற்கடிக்கக் கூடிய கண்களில் மையினைத் தீட்டிக்கொள்ளவுமில்லை; தலையில் பூக்களைச் சூட்டிக்கொள்ளவுமில்லை! பொன்போன்ற நிறத்தையுடைய கிளிகளுடன் உரையாடவுமில்லை; பாவைப் பிள்ளை போன்று காட்சி யளித்தார் சுலைகா அம்மையார். நான்கு செய்யுட்களில் ஆசிரியர் சுலைகா அம்மையாரின் துயராற்றாத நிலையினை அகப்பொருள் தொனிக்க இங்ஙனம் பாடி உள்ளார் :

வாசநீ ராடி டாது மலர்க்குழல் சொருகி டாது
போசன மருந்தி டாது பூவணைப் பொருந்தி டாது
நேசமா யிரவின் கண்ணே நித்திரை செய்தி டாது
மாசறக் கனவிற் கண்ட மன்னையே விரும்பி நின்றாள்.

சிந்துரந் தீட்டி டாது திருமுக மலர்த்தி டாது
கந்துக மடித்தி டாது கன்னியர்ச் சேர்த்தி டாது
சிந்துகள் பாடி டாது சித்திரம் விழித்தி டாது
விந்தையிற் கனவிற் கண்ட வேந்தையே விரும்பி நின்றாள்.

பாங்கியர்ப் பார்த்தி டாது பணிவிடை பகர்ந்தி டாது
பாங்கினிற் பெயர்ந்தி டாது பதத்திற்குப் பஞ்சி டாது
தூங்குகா தனியி டாது சுகந்தங்கள் பூசி டாது
தாங்குசீர் கனவிற் கண்டோர் தம்மையே விரும்பி நின்றாள்.

கோவைக ளணிந்தி டாது கொலுசுபா டகமி டாது
மாவையும் வென்ற கண்ணில் மையினைத் தீட்டி டாது
பூவையு முடித்தி டாது பொற்கிளி யுரையா டாது
பாவைபோ லுற்றா ளிந்தப் பரிசுதா தியர்கள் கண்டார்.

(சுலைகா கனவு கண்ட படலம்: 5 - 8)

சுலைகா அம்மையாரின் கூற்றாக வேறொரு சந்தர்ப்பத்தில் பெண்களின் பல்வேறு உறுப்புக்கள் வருணிக்கப்பட்டுள்ளன. அங்ஙனம் வருணிக்கும் பொழுது ஒவ்வோர் உறுப்பையும் வேவ்வேறு பொருள் களுக்கு ஆசிரியர் உவமித்துள்ளார். குழலினை மேகத்துக்கும் நெற்றியை இளம் பிறைக்கும் கூர்மையைப் பொறுத்தவரையில் கண்ணினை அம்புக்கும் ஆடும் தன்மையைப் பார்க்கும் பொழுது காதினை ஊஞ்சலுக்கும் மூக்கினை எள்ளின் பூவையும் மிஞ்சிவிடுந் தன் மைக்கும் உதடுகள் சாதிலிங்கம் போன்று சிவப்பு நிறத்துக்கும் பற்கள் முத்துக்களை வென்றுவிடுந் தன்மைக்கும் சொல்லின் உயர்வை பாலையும் தேனையும் கலந்த இனிமையான தன்மைக்கும் ஒப்பிடப் பட்டுள்ளன. அத்தோடு ஆசிரியர் நின்றுவிடவில்லை; பளிச்சிடும் கண்ணாடி போன்றன கன்னம். மூங்கிலைப் பெரிதும் ஒத்திருந்தன தோள்கள். நீர் நிறைந்த பொற்குடம் போன்று காட்சி அளித்தன தனங்கள். உருவமோ தனி அழகுடன் விளங்கியது. அம்மையார் சிறந்த உடைகளை அணிந்திருந்தார். நறுமணம் பூசியிருந்தார். இக் கருத்துக்கள் இரண்டு செய்யுட்களில் இங்ஙனம் வருணிக்கப் பட்டுள்ளன:

மஞ்சிநேர் குழலும் பிள்ளை மதியநேர் நுதலு மம்பை
மிஞ்சிய கண்ணு மூசல் வெருட்டிடு காது மெட்பூ
வெஞ்சிடு மூக்குஞ் சாதிலிங் கநே ருதடு முத்த
மொஞ்சிடு நகையும் பால்தே னொழித்திடு முயர்ந்த சொல்லும்

கருதுகண் ணாடி போன்ற கன்னமும் வேயை யென்றும்
பொருதிடு தோளு நீரார் பொற்குடத் தனமு மற்ற
வுருவத்தி னழகு மேன்மை யுடைகளும் வாசந் தானு
மருவிட விலையோ வெண்பால் வகைசொலுஞ் சொல்லா விட்டால்.

(யூசுபு நபியை சுலைகா தரிசித்த படலம் : 34)

சுலைஹா அம்மையார் விருப்புடன் தம்மிடம் அளிக்கும்படி கோரிய கனிவர்க்கங்களினதும் தாவரங்களினதும் பட்டியல் ஒன்று இந்நூலில் தரப்பட்டுள்ளது. வாழை, பலா, மா, கமுகு, தெங்கு, அசோகு, மாதுளை, செவ்வந்தி, வன்னி, இனிய நெல்லி, புன்னை, சிந்துரம், விளா, வில்வம் என்பவையும் இன்னோரன்ன பிறவும் இருந்ததாக ஆசிரியர் ஒரு செய்யுளில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்:

கதலிகை வருக்கை தேமாக் கமுகுதெங் கரும சோகு
மதுரமா துளைசெவ் வந்தி வன்னிதேக் கினிய நெல்லி
அதிவிதப் புன்னை சிந்து ரம்விளா வில்வ மின்னும்
விதவிதத் தருக்கள் புட்பம் விளைந்துறல் சுலைஹா கேட்டாள்.

(யூசுபு நபியை சுலைஹா தெரிசித்த படலம் : 42)

யூசுபு நபி (அலை) அவர்களின் ஆட்சியின்போது அவருடைய தலைநகரிலே இருந்த பல்வேறு சாலைகள் மண்டபங்கள் ஒரு செய்யுளில் விவரிக்கப்பட்டுள்ளன. உணவளிக்கும் விடுதிகள் அங்கிருந்தன. மார்க்கம் விளக்கும் மண்டபங்கள் அங்கிருந்தன. தருமம் வழங்கும் தரும சாலைகள் மலிந்திருந்தன. மன்னவர் சிரம சாலைகள் இருந்தன. பொன்னையும் செல்வத்தையும் வழங்கும் நிலையங்கள் இருந்தன. அகதிகள் இல்லங்கள் அங்கு நிறைந்திருந்தன. விருந்தாளிகளை உபசரிப்பதற்காகவே அவை அமைக்கப்பட்டிருந்தன. இங்ஙனம் சிறப்புற யூசுபு நபி (அலை) அவர்களுடைய துரைத்தனத்தின்போது அதாவது ஆட்சியின்போது நாட்டில் எல்லா வளங்களும் சிறந்து விளங்கின என்று ஒரு செய்யுளில் ஆசிரியர் இவ்வாறு வருணித்துள்ளார்:

அன்னசத் திரத்தின் சாலை யாரணம் விளக்கச் சாலை
மன்னிய தருமசாலை மன்னவர் சிரம சாலை
பொன்னிதி யளிக்கும் சாலைப் புதியவர் தங்கச் சாலை
துன்னிட வியற்றி யூசுப் துரைத்தனம் பண்ணி னாரே.

(யூசுபு நபி யரசியல் பெற்ற படலம் : 9)

படை முரசு, அற முரசு, மண முரசு என்னும் மூன்று முரசுகளும் எப்பொழுதும் அந்த நாட்டிலே முழங்கிக்கொண்டிருந்தன. வெற்றியை எப்பொழுதும் கூறிக்கொண்டிருப்பது போர் முரசு. தருமம் அளிக்கிறோம் வாரீர் என்று முழங்கிக்கொண்டிருப்பது அற முரசு. பெண்களுடைய மணவினை நடக்கும் அளவுக்கு அமைதி அங்கு நிலவுவதால் அங்கு எப்பொழுதும் மண முரசு முழங்கிக்கொண்டிருந்தது. அங்ஙனம் மூன்று முரசுகளும் எப்பொழுதும் ஒலித்துக்கொண்டிருக்கும் வளம் மிக்க நாடு அது என்பது ஒரு செய்யுளில் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது:

இரவினும் பகலு மிக்க வெழிலுறு மரச மாட
மரண்மனை யிடங்க ளெல்லா மணிபடை முரசங் கீர்த்தி
தருமநன் முரசம் பெண்க டம்மண முரசம் பொங்க
வரசியல் புரிந்தா ராதி யருணபி யூசு பன்றே.

(யூசுபு நபி யரசியல் பெற்ற படலம் : 10)

கந்தப்பிள்ளைப் புலவர் தமது யூசுபு நபி காவியத்தில் உவமை களை அமைக்கும் பொழுது பல புதிய கருத்துக்களைக் கையாண் டுள்ளார். ‘ கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்தது போல’ என ஒருவன் செய்ய முற்பட்ட காரியம் எளிதில் கைகூடியமையைக் குறிப் பிடும் பொழுது பயன்படுத்துவர். ஆனால் அதே கருத்தை ஆசிரியர் வேறுவிதமாகத் தமது நூலில் அமைத்துப் பாடி உள்ளார். ஒருவன் எதிர்பார்த்த காரியம் அல்லது எதிர்பார்ப்பை விட மிக எளிதாக முடிந்ததைச் சுட்டுமுகமாக அத்தகைய பழமொழிகளைப் பயன் படுத்துவர் ஆசிரியர். இங்கே அத்தகைய ஒரு கருத்தை வலியுறுத்தவே,

செய்யுநன் மருந்திற் காகத் தேடிய மூலி காலிற்
பையவே வந்து தட்டும் பான்மைபோ லிருத்த லாற்றம்.

(முதன் முறைப் படலம் : 32)

என்பது அமைந்துள்ளமையைக் காணலாம். மற்றோர் இடத்தில் ஒரு கருமம் எளிதில் முடிவடைவதைச் சுட்ட,

எவ்வித முடியு மோவென் றெண்ணியே கிணறு வெட்டுங்
குவ்வினிற் பூதந் தோற்றுங் கொள்கையாச் சென்னச் சென்றான்.

(முதன் முறைப் படலம் : 86)

எனக் குறிப்பிடப்பட்டுள்ளதைக் காணலாம். அழிக்கும் ஆற்றலைக் குறிப்பிட வந்த ஆசிரியர் ஆட்டுக் கிடையான மந்தையிலே சிங்கம் பாய்ந்து அவ்வாடுகளைச் சின்னாபின்னமாக்குவது போல அழிக்கத் தலைப்பட்டமையைக் குறிப்பிட்டுள்ளார். ஆட்டுக்கிடையை அயக்கிடை எனச்சுட்டி அக்கருத்தை இவ்வாறு ஒரு செய்யுளில் பயன்படுத்தி உள்ளார்.

....................................அயக்கிடை மீதிற் சிங்கந்
தவுமுறை யென்வத் தாவிச் சன்னபின் னங்கள் செய்து

(முதன் முறைப் படலம் : 102)

இதே கருத்தை, யானையின் நெற்றியில் பாய்ந்து சிங்கம் கொல்வது போன்றதென்று ஒரு செய்யுளில் இவ்வாறு அமைக்கப் பட்டுள்ளது ;

மறுத்தமன் னவனைச் சிங்க மத்தக மாமேற் பாயுந்
திறத்திணை பாய்ந்து வெட்டிச் சின்னபின் னங்கள் செய்து.

(முதன் முறைப் படலம் : 103)

பழமொழிகளும் பல சந்தர்ப்பங்களில் யூசுபு நபி காவியத்தில் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். 'தன்வினை தன்னைச் சூழும்; கொடு வினை காலைச் சூழும்' (ஜிஹாமரசன் போர்புரி படலம் : 21), என்றும் 'மன்னும்விதி சூழிலெவர் தான்விலக்க வல்லார்' (யூசுபு நபி பிறந்த படலம் : 10) என்றும் 'மண்ணின்மீது காமவாசை மாய்க்கும் என்ப துண்மையே' (ஜிஹாமரசன் போர் புரி படலம் : 31) என்றும் விதியினை மதியால் வெல்ல வேதத் தொராலு மாகா' (யஃகூபு நபி கனவு கண்ட படலம் : 21) என்றும் 'மன்னிய விதித்தான் வந்தால் மதிமயங் கிடுமென் றோது' (யஃகூபு நபி கனவு கண்ட படலம் : 26) என்றும் 'வரும்விதி வந்துதீரு மிருந்தரை மீதி லென்ன' (யூசுபு நபி சிறை விட்டு மீண்ட படலம் : 9) என்றும் வந்துள்ளவை அதற்கான எடுத்துக்காட்டுகளாகும். அழிந்தது மீளாது என்பது உலக நியதி. அதே போன்று ஓநாய்க்கு இரையாக்கப்பட்ட யூசுபு நபி (அலை) மீண்டும் வரமாட்டார் என தமது தந்தையாரிடம் ஏனைய தனயர்கள் கூறினதாக ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். அங்ஙனம் குறிப்பிடும் பொழுது தமது கூற்றை வலியுறுத்த மூன்று உவமைகளைச் சுட்டிக் காட்டினர் சோதரர் என ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். நெற்பதரைக் குத்தி அரிசி மணி பெற முடியாது; ஆடினாலும் பாடினாலும் அழிந்த பொருளைப் பெற்றுவிட முடியாது. பாலைக் கடைந்து வெண்ணெய் எடுக்கலாமே தவிர காடியைக் கடைந்து வெண்ணெய் பெற முடியாது. இவற்றை எல்லாம் ஒரு செய்யுளில் அமைத்து இங்ஙனம் பாடியுள்ளார் ஆசிரியர்.

பாடியே குத்தினாலும் பதரினின் மணியுண்டாமோ
ஆடியே பாடினாலும் அழிபொருள் மீள்வ துண்டோ
காடியைக் கடைந்தால் வெண்ணெய் கண்டிடுங் கொல்லோ கானிற்
றேடியே திரிந்தா லோநாய் தின்றவன் வருகுவானோ.

(யஃகூபு நபி யூசுபு நபியைத் தேடிப் பரதாபித்த படலம் : 60)

யூசுபு நபி (அலை) அவர்களைக் காண்பதற்காக அவர்தம் தந்தையார் யஃகூபு நபி (அலை) மிசுருக்கு எழுந்தருளினார்கள். தமது சொந்த நாடான கன்ஆன் நாட்டிலிருந்து புறப்பட்டுச் சென்றார்கள். அவர்களுடைய வருகையைக் கேள்விப்பட்ட யூசுபு நபி (அலை) அவர்கள் தந்தையாரை எல்லா மரியாதைகளுடனும் அழைத்து வரும்படி தமது அமைச்சர்களுக்குக் கட்டளை இட்டார்கள். பல்வேறு

வகையான வீரர்கள் புடைசூழ அவர்கள் அழைத்து வரப்பட்டார்கள். யூசுபு நபி (அலை) அவர்கள் தந்தையார் யஃகூபு நபி (அலை) அழைக்கப்பட்டு வருவதற்கு ஒரு காத தூரம் நடந்தார்கள் என்பது ஒரு செய்யுளில் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

மல்லுளவர் வாளுளவர் வாகையணி வீரர்
வில்லுளவர் வேலுளவர் வெற்றிபெறு மன்னர்
சொல்லரிய தேர் சிவிகை தூங்கலுயர் பாய்மா
வெல்லையொரு காதம்வரை யிட்டுநடை செய்தார்.

(யஃகூபு நபி மிசுறுக்கெழுந்தருளிய படலம் : 7)

இயற்கை வருணனை, நாட்டு, நகர வருணனை என்பன போன்ற காப்பிய இயல்புகள் யூசுபு நபி காவியத்தில் சற்றுக் குறைவாகவே இடம் பெற்றிருப்பதைக் காணலாம். இதனாலேயே யூசுபு நபி காவியம் ஒரு குறுங் காப்பியமாகக் கொண்டாளப்பட்டது.

---

# புத்தூகுல் துறூப்

செய்கு அப்துல் காதிறு நயினார்ப் புலவர் அவர்கள் தமது புதூகுஷ்ஷாம் என்னும் காப்பியத்தில் வருணிக்காத ஒரு போரைப் பற்றிக் கூறுகின்றது புத்தூகுல் துறூப் என்னும் நூல் என்பர். துறூபின் வெற்றியைக் கூறும் காப்பியம் புத்தூகுல் துறூப்.

புத்தூகுல் துறூப் என்னும் குறுங்காப்பியத்தில் பதின்மூன்று படலங்களும் 845 திருவிருத்தங்களும் இடம்பெற்றுள்ளன என்பர். பதிமூன்றாம் படலத்தின் கடைசிப்பாடல் வாழ்த்துக்கூறுவதாக அமைந்துள்ளது. நாற்பத்து மூன்று திருவிருத்தங்கள் இடம்பெற்றுள்ள கடவுள் வாழ்த்துப் படலமே பாயிரமாகவும் காணக்கிடக்கின்றது. இப்படலத்திலேதான் நூலைப் பற்றிய வரலாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

இக்குறுங்காப்பியம் ஹிஜ்றி 1282 ஆம் ஆண்டு றபியுல் அவ்வல் பிறை பன்னிரண்டில் இயற்றப்பட்டது என்பது புலனாகின்றது. இது கி.பி. 1865 ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 5ஆம் தேதி சனிக்கிழமையாகும். ஹிஜ்றி 1293 இல் ஹறஜ் கடமையை நிறைவேற்றிய இந்நூலாசிரியர் ஹிஜ்றி 1343 ஆம் ஆண்டு இறையடி எய்தினார் எனக் கூறப்பட்டுள்ளது.

சிறிய நாட்டில் துறூபு என்னும் என்னும் இடத்தில் அசுகாபித் தோழர்கள் நிகழ்த்திய போரினையும் அப்போரில் அவர்கள் சூடிய வெற்றியையும் பற்றிய செய்திகள் இந்நூலில் இடம்பெற்றுள்ளன. இந்நூல் இயற்றப்படுவதற்கு உரை வழங்கியவர் ஹமீதுத்தீன் ஆலிம் என்பவராவார். இவர் காலியாக விளங்கிய மஹ்மூது என்னும் கண்ணாட்டி அப்பாவின் வழி வந்தவர் எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

புத்தூகுத் துறூப் என்னும் நூலின் ஆசிரியர் மகாவித்துவான் காதறலி மரைக்காயர் என்பவரே. இவர் மஹ்மூது பந்தர் என்னும் பறங்கிப்பேட்டையைச் சேர்ந்தவர். இவருடைய தந்தையார் பகாவுத்தீன் என்பவராவார். இவர்தமது குருவாகச் சைய்கு அப்துல் காதிறு நெயினார் ஆலிம் அவர்களைக் கொண்டுள்ளார்.

காப்பிய மரபினைப் பின்பற்றி இவருடைய நூலிலும் கடவுள் வாழ்த்து அமைந்துள்ளது. ஆனால் நாட்டுப் படலமும் நகரப்படலமும் விரிவாய் அமையவில்லை. ஒவ்வொரு படலத்துக்கும் இவ்விரண்டு பாக்களைப் பாடி இப்படலங்களை நிறைவு செய்துள்ளார். இங்ஙனம் காப்பிய அமைதியைப் பேணி உள்ளார். எனினும் நூலிலே நாட்டு நகர வருணனைகள் இடம் பெற்றுள்ளன.

சூரியோதயம் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது. சூரியோதயத்தினால் தாமரை விரிந்தது. ஒன்றாக இருந்த பறவைகள் வெளியே பறந்து சென்றன. இருள் அகன்றது. கடல் ஓசை அதிகரித்தது. வண்டுகள் இசை பாடின. இங்ஙனம் சூரியன் தோற்றினான் என்பது இவ்வாறு ஒரு பாடலில் அமைந்துள்ளது.

கமலம் விரிய பறவை கலைய
திமிரும் அகலத் திரையோ சையெழ
ஞிமிறு மிசைபா டவெழுங் கதிரின்
சமையம் வரக்கண் டனர்சற் குணரே

வஞ்சகம் மிகுந்த மக்களுடைய உள்ளங்களில் புகுந்திருந்த இருள் எல்லாம் அகன்றோடிட சூரியன் உதித்தான் என்பது

வஞ்சமர் மனம்புக்க இருளெல் லாம்கலைத்
தோட்டிட வந்தனன்
...... இரவி என்றிடு பேரோன்

என இந்நூலில் இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

பிணமுண்ணும் பேய்களின் நடத்தையைச் செல்வம் பெற்ற அறிவிலார் தம் நடத்தையுடன் ஆசிரியர் ஒரு பாடலில் இவ்வாறு உவமித்துள்ளார்.

தேறிய வறிவிற் றிறனிலார் ஊழாற்
றிரவியங் கிடைத்திட மகிழ்ந்து
வேறெமர்க் கெதிரி யாரெனச் சொல்லும்
விதிவிலக் கறிவுறார் போன்று
நாறிய பிணமுண் டிடுஞ்சிறு கூளி
நண்ணலார்ப் பிணக்குவை நோக்கி
மீறிய மதங்கொண் டெம்மர செமக்கு
மிஞ்சிடா தெஞ்சுமென் றிசைக்கும்

(3 : 67)

புறப்பொருளைக் கூறும் பழந்தமிழ் நூல்களில் உள்ள வஞ்சினம் கூறும் முறைமையிலும் இந்நூலில் பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

இத்தகைய வஞ்சினம் கூறுதல் இஸ்லாத்துக்கு முரணானதாயிருப்பினும் ஒரு பாடலில் அத்தகைய ஒரு கூற்று இவ்வாறு புதாகுத் துறூபில் இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

பகைவர் ஆவியெலாம் விசும்பு ஏற்றோமாகில்
இதந்தரு மனைவியரை இழிகுலத்
தவருக் கீந்த மதியில ராவோம்

பாம்பு உலகத்தைத் தாங்கிக் கொண்டிருப்பதையும் எட்டுத் திக்குகளிலும் யானைகள் காவல் புரிந்து கொண்டிருப்பதையும் இஸ்லாமிய மரபுக்கு முரண்பாடாய் இருந்தும் கூட தமிழ் மரபைப் பேணும் நோக்கத்துடன் ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்:

பார்முடி தாங்கும் சேடன் பயமுறக்
கயங்க ளெட்டும்
காரிடி யென்ன உள்ளம் கலங்கியே,

திருக்குறட் கருத்துக்களையும் ஆசிரியர் ஆங்காங்கே தமது நூலில் ஆண்டிருப்பதைக் காணலாம். ஒரு குறளை இங்கே எடுத்துக் கொள்வோம்.

ஒலித்தக்கால் என்னாம் உவரி எலிப்பகை
நாகம் உயிர்ப்பக் கெடும் (படைமாட்சி : 3) (763)

இங்கே ஓர் உவமை இடம் பெற்றிருக்கிறது. எலியாய பகை திரண்டு கடல் போல் ஒலித்துக்கொண்டு வந்தாலும அதனால் நாகப் பாம்புக்கு எவ்விதத் தொந்தரவும் ஏற்படாது. ஆனால் அந்த நாகம் மூச்சுவிட்ட உடனே அந்தச் சத்தத்தால் அந்த எலி கெடும். வீரர் பலர் திரண்டு வந்து எதிர்த்தாலும் உண்மையான அஞ்சா நெஞ்சம் படைத்த வீரன் ஒருபோதும் அஞ்சமாட்டான். ஆனால் அந்த ஒரு வீரன் வீறு கொண்டு எழுந்து முற்பட்டால் எதிர்த்த வீரர் அனைவரும் பின்வாங்கி விடுவர். வீரர் எனக் கூறிக்கொள்ளும் வீரர் அல்லாத பலரைவிட உண்மையின் வீரன் ஒருவனே சிறப்புடையது என்பது இதனால் பெறப் பட்டது.

இதே கருத்துக்களைப் புத்தூகுல் துறூப் என்னும் நூலில் அதன் ஆசிரியர் இடம்பெறச் செய்துள்ளார். இக் குறளில் இடம் பெற்ற சொற்களையே பயன்படுத்தி உள்ளார். அறபு மக்கள் எதிரிகளைத் தோற்கடித்து வெற்றி கொண்டமையையே இக்குறள் கருத்துக்களை ஆதாரமாகக் காட்டி விவரித்துள்ளார் ஆசிரியர். எலி போன்றவர்கள் இஸ்லாத்தின் எதிரிகள். ஆனால் அறபு வீரரோ நாகப் பாம்பு போன்றவர்கள். எனவே எலியின் முன் நாகம் வென்றுவிடுவது போன்று பகைவர் முன்பு அறபியர் வெற்றிவாகை சூடினர் என்பதை விளக்கவே இக் குறட் கருத்துக்கள் புகுத்தப்பட்ட புதூகுத் துறூப் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

எலிமிகப் பகைத்தோர் நாகத் தெதிர்புகுங் காலைமூச்சின்
ஒலிபடப் பறியும் வாறே ஒன்னலர்க் கெதிரே நம்மோர்
வலியிழந் திரியா நின்றார் வாகையே யறபி மாக்கள்
மலிவுறக் கொண்டார் கீர்த்தி மானமு மவரே கொண்டார் 12 : 16

ஒவ்வொருவரிடமும் தன்மானம் இருக்க வேண்டியதன் அவசியத்தை ஆசிரியர் வலியுறுத்தி உள்ளார். அக்கருத்தை வலியுறுத்தும் குறளை ஆதாரமாகக் கொண்டுள்ளார் ஆசிரியர்.

மயிர் நீப்பின் வாழாக் கவரிமா வன்னார்
உயிர் நீப்பர் மானம் வரின்
(மானம் : 9) (969)

என்னும் குறளின் கருத்துக்களை ஒரு செய்யுளில்ஆண்டுள்ளார். கவரிமான் அதன் மயிர்த்திரளின் ஒரு மயிர் நீங்கினும் உயிர் வாழாது. அதே போன்று மனிதர் மானம் அகன்று விடுமுன் தம் உயிரையே நீத்து விடுவர். எந்நேரமும் போகக் கூடிய உயிரை நீத்து இறந்தபின்னும் நிலைக்கக்கூடிய மானத்தைக் காப்பாற்றுவர். இக்கருத்துக்கள் அமைந்த புதாகுத்துறாப் கவிதை இவ்வாறு அமைந்துள்ளது.

மயிர்வி டாதுயிரை நீக்கு மானத்தாற் கவரி மாக்கள்
உயிருளப் படைப்பிற் றேறு முணர்விலா விலங்கின் சாதி
நயமிட ரறியும் வல்ல நல்லறி வுடைய மாந்தர்
அயர்வினன் மானம் போக்க வறிவதோ நெறிவல் லீரே
(12 : 19)

பகைவருக்கு அஞ்சியோடினர் போர் வீரர். அச்செய்தியைக் கேட்ட ஊர் மக்கள் மனங் கலங்கினர். அத்தகைய சந்தர்ப்பத்தில் அரசன் வீரமொழி கூறினான். அவ்வாறு கூறியமை பேடியின் கையில் உள்ள வாளுக்குச் சமம் என இவ்வாறு பாடி உள்ளார் ஆசிரியர்.

தகரவிக் கஞ்சி யோடுந் தகைமையா யரசு மைந்தன்
நகர்விடுத் திரவின் கண்ணே நண்ணலர்க் கஞ்சி யோடும்
புகர்மொழி கேட்டவ் வூரார் புந்தியிற் கலங்கி மன்னன்
பகர்ந்த வீரியங் கைப்பேடி பற்றும் வாளொத் ததென்றார்
(12 : 2)

பேடி கையில் கொடுக்கப்பட்ட வாளின் தன்மை பற்றித் திருக்குறள் இவ்வாறு குறிப்பிடுகிறது.

தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும்
(ஆள்வினையுடைமை : 4) (613)

முயற்சி இல்லாதான் உபகாரியாக இருக்க முடியாது. படை கண்டால் அஞ்சும் பேடி கையில் உள்ள வாளை அப்பேடி பயன்படுத்தமாட்டான். பேடி இடத்து உள்ள வாளை அப்பேடி பயன்படுத்த வேண்டும் என்று

கருதினாலும் அப் பேடியின் தன்னச்சத்தால் அந்த வாளைப் பயன் படுத்த முடியாது. அதுபோல முயற்சியில்லாதவன் பலர்க்கு உதவி புரிய முற்பட்ட விடத்தும் அவன் தன் வறுமையால் அவனுக்கு அது முடியாததாகிவிடும்.

வெற்றி வீரர் கண்ட காட்சிகளை வருணிக்கப் புகுந்த ஆசிரியர் அக்காட்சிகளை நாமும் காணக்கூடியதாகச் சொற் சித்திரமாகக் காட்டி உள்ளார். கரிய கூந்தலையுஞ் செங்குவளைக் கண்களையும் முத்துக் களும் மணிகளும் இடையிடையே கோக்கப்பட்ட ஆபரணங்களையும் கொண்டவர்களாக நன்கு அலங்கரிக்கப்பட்ட வாயில்களிலே பெண்கள் காட்சி அளித்தனர். அங்கு அவர்கள் உலவியவர்களாகத் திரிந்த தோற்றம் அன்னங்கள் நடனமாடுவதைப் போன்று இருந்தது. இக் கருத்துக்களையே ஒரு செய்யுளில் ஆசிரியர் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்.

சித்திரக் கரிய கூந்தல் செவ்விதழ்க் குவளைக் கண்ணார்
நித்தில மிடையிற் கோத்த நீலமா மணிபூண் டாங்கி
கொத்தணி வாய றோறுங் குலாவியே திரியுந் தோற்றம்
ஒத்திடு நடன மன்ன மென்னவே உலவக் கண்டார்.

(12 : 45)

பெண்கள் பற்றிய மற்றொரு காட்சியை ஆசிரியர் தத்ருபமாக விவரித்துள்ளார். 'ஆடவருடனே பெண்டிர் ஊடினர். அதன் காரண மாகத் தாம் அணிந்திருந்த மாலைகளை அறுத்து எறிந்தனர். அவை பாதையில் விழவே பாதையில் சென்று கொண்டிருந்த வண்டிகளின் சில்லுகளுக்ககப்பட்டு உடைந்தன. அவை தெருக்களிலெல்லாம் குப்பை யாகக் குவிந்தன. அவற்றை எல்லாம் வாரி எடுத்துச் சிலர் புதுமெரு கூட்டிக் கொண்டிருந்தனர். அத்தகைய நகர்' என ஒரு செய்யுளில் இவ்வாறு அக்காட்சியை அமைத்துத் தந்துள்ளார் மகாவித்துவான் காதறலி மரைக்காயர்.

ஆடவ ருடனே யூடி அறுத்தெறி மணியின் மாலை
ஓடி யேபண் டியின்கா லுருட்பட உடைந்த குப்பை
கூடின தெருக்க ளெல்லாம் கூட்டியே வாரிக் கொட்டத்
தேடுவர் எடுத்துச் சுண்ணஞ் செய்யு மானக ரிலன்றே.

(12 : 46)

இக்குறுங்காப்பியம் போர் பற்றியமையாதலினால் போர் பற்றிய வருணனையிலும் தாம் ஆற்றல் உள்ளவர் என்பதைத் தமது நூலில் காட்டி உள்ளார் அதன் ஆசிரியர். மைசறா என்பவரின் போர்த் திறமை யும் அவர் குதிரையை எவ்வாறு செலுத்தினார் என்பதையும் அவரது இயக்கத்தினையும் ஒரு செய்யுளில் ஆசிரியர் இவ்வாறு பாடி உள்ளார்.

குடதிசை புகுவார் குணதிசை வருவார்
கொடியவர் மடிய வாளெறிந்து
வடதிசைப் புகுந்து வருவார் தென்பாலின்
வரவு வெம்பரிக் குறத்தடியாற்
கொடியவர் முடிக டகர்ந்து வெண்மூளை
கொட்டிடு மட்டி லாவீரக்
கொடியுடை யரசர் மைசறா ஏறும்
குதிரையின் திறமிஃ தொன்றோ

கலிமா வோதல், தொழுகை நிறைவேற்றல், சக்காத்து என்னும் கட்டாய வரி வழங்கல், நோன்பு நோற்றல், வாழ்க்கையில் ஒருமுறை மக்கமாநகர் சென்று ஹஜ்ஜுக் கடமையை நிறைவேற்றல் என்னும் இஸ்லாத்தின் ஐந்து கடமைகளையும் ஒரே செய்யுளில் அமைத்து இங்ஙனம் பாடியுள்ளார் ஆசிரியர்.

அவர்நெறிக் குரிய செய்கை ஐந்துகா ரியம தாகும்.
தவர்கிலாத் தொழுகை நோன்பு தகுதியர் சக்காத் செய்தல்
பவமுற கஞ்சு துல்லா பள்ளியில் கச்சு செய்தல்
இவைகட்கு முன்னே நாவால் இனியநற் கலிமா வோதல்
(10 : 52)

முகம்மது நபி (ஸல்) அவர்களின் தோற்றப் பொலிவையும் ஒரு செய்யுளில் புலவர் பாடியுள்ளார்.

எப்பொழுதும் அருளைப் பொழியும் கண்களை உடையவர்கள். அழகே உருவான முகத்தை உடையவர்கள், நீண்ட கைகளை உடைய வர்கள். பாதங்கள நிலத்திலே படாதவர்கள். அருமையான பெருமைகள் எல்லாம் உடையவர்கள். முகம்மது நபி அவர்களின் வனப்பை ஒரு செய்யுளில் ஆசிரியர் இவ்வாறு வருணித்துள்ளார்.

அருளடை கிடந்த கண்ணும் அழகொளிர் முகமு நீண்ட
கரமிகு முழந்தாட் கீழாய்க் காட்டிய வனப்பும் பாரின்
மருவருக் கமலப் பாதம் வைத்திடா அடியுங் காணா
தருமையாம் பெருமை யுள்ளார் அழகெலாங் கண்ணுற் றேனால்
(11 : 65)

இத்தகைய சிறப்பு மிக்க காப்பியம் அச்சில் வராதது ஒரு பெருங் குறையேயாகும். இந்நூலை அச்சாக்கும் பணி மேற்கொள்ளப் பட்டுள்ளது. குலாம் காதிறு நாவலரின் மேற்பார்வையில் காரைக்கால் முகம்மது சமதானி அச்சுக்கூடத்தில் அச்சுப்பணி மேற்கொள்ளப்

பட்டுள்ளது. ஆனுல் இந்நூல் அச்சுக் கோர்க்கப்பட்டும் அச்சாகாத நிலையில் உள்ளது. அச்சுக் கோர்த்த முதற் பிரதியாகவே நூலாசிரியர் பேரனாரிடம் இருப்பதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இப் பிரதியை யாவது பெற்று இந்நூலினைப் பயன்படுத்த பெருமுயற்சிகள் மேற் கொள்ளப்பட்டன. ஆனால் அவை பயனளிக்கவில்லை. இத்தகைய நூல் ஒன்றிருப்பதை அறிந்ததும் அதுபற்றிய செய்திகளை இஸ்லாமிய தமிழ் இலக்கிய வரலாற்று நூலில் இடம் பெறச் செய்தல் வேண்டும் என்னும் வேணவாவினால் இது எழுதப்பட்டது. முகம்மது ஆரிப் மியான் அவர்கள் தமது இஸ்லாமியத் தமிழ் என்னும் நூலில் 'மகா வித்துவான் காதறலி மரைக்காயர்' பற்றி எழுதியுள்ள அத்தியாயமே இச் செய்திகளை எழுதுவதற்கு ஆதாரமாய் அமைந்தது என்பது ஈண்டு நன்றிப் பெருக்குடன் குறிப்பிடத்தக்கது.

---

# முகாஷபா மாலை

நாகூர் ஆண்டகை சாகுல் கமீது நாயகம் அவர்களின் வாழ்க்கையில் ஒரு சிறுபொழுதில் நடைபெற்ற நிகழ்ச்சிகளே முகாஷபா மாலையின் கருப்பொருளாய் அமைந்துள்ளன. முகாஷபா என்னும் அறபுப் பெயர்ச்சொல் கஷ்ப் என்றும் அறபு அடிச்சொல்லிலிருந்து பிறந்துள்ளது. மறைவானதை வெளிப்படையாக்குதல் என்பது கஷ்ப் என்பதன் பொருளாகும். அல்லாஹ்வின் பேரருளாலும் பேராற்றலினாலும் ஓர் இரகசியமான உண்மையை மனிதனின் உள்ளத்தில் பதியவைப்பதையும் இச்சொல் குறிக்கும். இந்நூலாசிரியரும் இக்கருத்தினையே தமது முகாஷபா மாலையில் 'திருநிலை கஷ்பெனுந் திறவுண்டாகவே' (திறவுகண்ட படலம் : 11) என்றும்

'பிறங்கியல் கஷ்பெனும் பெயரினாகிய
திறங்கிளர் பெருவெளி திறத்த லாயதே'

(திறவுண்ட படலம் : 13)

என்றும் விளக்கியுள்ளமையையும் காணலாம். இத்தகைய இறை வெளிப்பாடு நாகூர் ஆண்டகை அவர்களுக்கு உறக்கத்துக்கும் விழிப்புக்கும் இடையிலான ஒரு நிலையில் ஏற்பட்டது என்பதையும் (திறவுண்ட படலம் : 13) ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

பன்னூலாசிரியரான வா. குலாம் காதிறு நாவலர் அவர்கள் இதனை இயற்றி உள்ளார். காப்பியங்கள், கலம்பகங்கள், கோவைகள், அந்தாதிகள், மாலைகள், உரைநூல்கள் பலவற்றை இயற்றித் தந்த பெருமை நாகூர் குலாம் காதிறு நாவலர் அவர்களைச் சாரும். மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் புலவராற்றுப் படையை இயற்றியவரும் இந்நூல்ாசிரியரே. சீறாப்புராண வசனம், திருமணிமாலை வசனம், ஆரிபு நாயக வசனம் முதலியவற்றையும் இயற்றி அக்காப்பியங்களை மக்கள் எளிதில் புரிந்து கொள்ள வழிவகுத்தும் உள்ளார். கன்ஜுல் கறாமாத் என்பதும் இவர் இயற்றியதே.

இந்நூலின் பெயரைத் தனிமையாக முகாஷபா மாலை எனக் கூறாது கலறத்து சாகுல் கமீது பாத்துசா சாகிபு ஆண்டவர்களின் முகாஷபாவிலுண்டான மிகுறாசுடைய சரித்திரமாகிய முகாஷபா மாலை எனக் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். மிஃறாஜ் என்பதே இங்கு மிகுறாசு எனத் தமிழ்ப்படுத்தப்பட்டுள்ளது. மிஃறாஜ் என்பது இரு வகைப்படும். ஒன்று றூகானிய்யத்தான மிஃறாஜ் என்னும் விண்ணேற்றம். மற்றது ஜிஸ்மானியத்தான மிஃறாஜ் என்னும் விண்ணேற்றம். முன்னது ஆன்மீக அநுபவத்தால் பெறப்படுவது. பின்னது

நேரடியாக ஈடுபடுவதனால் பெறப்படுவது. இறைநேசச் செல்வர் களான அவுலியாக்களின் அனுபவமே றூஹானிய்யத்தான மிஃறாஜ் என அழைக்கப்படுகிறது. நபி பெருமான் (சல்) அவர்களின் விண் ணேற்றம் ஜிஸ்மானியத்தான மிஃறாஜ் என வருணிக்கப்படுகிறது.

முகாஷபா மாலையில் குறிப்பிடப்பட்டுள்ள மிஃறாஜ் பயணம் நாகூர் ஆண்டகை அவர்களின் றூஹானியத்தான மிஃறாஜ் எனவே குறிப்பிடப்பட்டுள்ளது. குலாம் காதிறு நாவலர் தமது நூலில் நாகூர் ஆண்டகையின் றூஹானியத்தான மிஃறாஜ் நிகழ்ச்சி எவ்வாறு ஏற் பட்டது என்பதைக் குறிப்பிட்டுள்ளார். நாகூர் ஆண்டகையின் முகக் கண்கள் மூடப்பட்டுவிட்டன. ஆனால் அவர்களுடைய அகக் கண்கள் மூடப்படவில்லை. அவ்வகக் கண்கள் பளீரெனத் திறக்கப்படலாயின. அகக் கண்கள் ஒளிவிட்டுப் பிரகாசிக்கலாயின.

'முகவிழி முகிழ்த்துமே முகிழ்ப் புறாதொளிர்
அருவிழி பளீரெனத் திறப்பி னாயதே,.

(திறவுண்ட படலம் : 14)

'இலைமறை காயென விருந்த யாவையும்' (திறவுண்ட படலம் : 15) நாகூர் ஆண்டகையின் அகக் கண்களுக்கு 'அங்கையி னெல்லியி னாகி நின்றவே' (திறவுண்ட படலம் : 16)

முகாஷபா மாலையில் பதினைந்து படலங்கள் இடம் பெற்றுள்ளன. அப்படலங்களிலே முன்னூறு கவிதைகள் அமைந்துள்ளன. சில காப்பி யங்களில் உள்ளன போன்று முகாஷபா மாலையிலும் உள்ள கடவுள் வாழ்த்துப் படலத்தை அடுத்துப் பாயிரம் இடம் பெற்றுள்ளது. பாயிரத்திலே குலாம் காதிறு நாவலர் தாம் கூறக் கருதியவற்றைச் சுருக்கமாக விளக்கி உள்ளார். பாயிரத்தில் உள்ள முதற் செய்யுளில் நூல் கருதிய பொருள் குறிப்பிடப்பட்டுள்ளது. அடுத்து இந்நூலுக்கு முதன் நூலாக அமைந்த நூலின் ஆசிரியர் பெயர் சுட்டப்பட்டுள்ளது. முயீனுத்தீன் என்னும் பெரியார் இயற்றிய நூலே முகாஷபா மாலைக்கு முதல் நூலாக அமைந்திருந்தது. குலாசத்துல் கறாமாத் என்பதே அந்த முதனூலாகும். அதற்குரிய உரையை ஆசிரியருக்கு அளித்தவர் முகம்மது கலிபா சாகிபு என்பவராவார். நல்லொழுக்கத்தில் சிறந்தவ ரான முகம்மது கலிபா சாகிபு அவர்கள் வாப்புச்சி சாகிபு அவர்களின் புதல்வராவார். அவர் ஒரு நாட்டாண்மை. நாகூர் ஆண்டகை அவர்களின் புதல்வரின் வழித்தோன்றலாக வந்தவர் அவர். குலாம் காதிறு நாவலர் அவர்கள் முகாஷபா மாலையை ஹிஜ்றி 1316 ஆம் ஆண்டு இயற்றி உள்ளார். இது ஆங்கில ஆண்டு 1898 ஆகும்,

பாயிரத்திலே ஆசிரியர் அவையடக்கம் கூறி உள்ளார். இலக்கிய இலக்கண வல்லுநர் முன்னர் தாம் இந்நூலை இயற்றியது பெரிய தொரு பாம்பு ஆடுவதைக் கண்டு நாக்குப் பூச்சி என்னும் மண்புழு அதன் தலையைத் தூக்கித் தானும் ஆட முயன்றதைப் போன்று இருந்தது எனக் குறிப்பிட்டுள்ளார். (பாயிரம் : 7) மற்றொரு பாடலில் (பாயிரம் : 8) மண்ணாங்கட்டியின் வீரத்துக்கு தமது இந்நூல் முயற்சியை ஒப்பிட்டு அவையடக்கம் கூறியுள்ளார் ஆசிரியர்.

முகாஷபா மாலை இயற்றப்பெற்று ஓராண்டில் அச்சியற்றப் பட்டுள்ளது. இந்நூல் 1899 ஆம் ஆண்டில் அச்சியற்றப்பட்டுள்ளது. காரைக்காலில் இருந்த முஹம்மது ஸமதானி அச்சியந்திரசாலையில் அச்சிடப்பட்டுள்ளது. இந்நூலின் கொடைநாயகராகிய ஐயன்பேட்டை கா. அப்துல் கனி சாகிபு அவர்கள் அனுமதியால் இந்நூல் வெளியிடப் பட்டுள்ளது என ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். கொடை நாயகராய் அமைந்த அப்துல் கனி சாகிபு அவர்கள் தலைசிறந்த ஆன்மிக ஞானியருள் ஒருவராகத் திகழ்ந்துள்ளார். பாயிரத்தின் கடைசிப் பாடல் முத்திரைச் செய்யுளாக அமைந்துள்ளது. இச்செய்யுளில் ஆசிரியர் தம்மை இவ்வாறு அறிமுகஞ் செய்துள்ளார்.

'குலங்குலவு மப்துல்கா திறுபெறுமா னகக்கண்ணிற் கொண்ட
காட்சி
நலங்குலவு முகாஷபா மாலையிதைச் செந்தமிழி னடப்பச்
செய்தான்
றலங்குலவு வளமுடைய நாகூர்வாப் புவந்தீன்ற தனையன் கல்வி
வலங்குலவு தர்காவித் வான்குலாம் காதிறுநா வலனென் போனே'
(10 : 29)

முகாஷபா மாலையை அரங்கேற்றுவதற்கு உறுதுணை புரிந்தவர் அப்துல் கனி சாகிபு அவர்களே. ஆசிரியருக்கு இத்துறையில் பொரு ளுதவி புரிந்தவர்களும் அவர்களேயாவார். இதனையே பாயிரத்தில் உள்ள ஐந்தாம் செய்யுளில் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். 'பனிவகைய பல உணவும் பல நகையாற் பல பொருளும்' வழங்கினார் அப்துல் கனி சாகிபு என்று (நகரப்படலம் : 15) குறிப்பிட்டுள்ளார். அவருடைய பொருள் நயம் (நகரப்படலம் : 20) ஒரு பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது. அவருடைய தகப்பனார் காதிறு சாகிபு என்றும் அவர் கார்கெழும் கமலக்கையர் என்றும் தருமசீலர் என்றும் (வரலாற்றுப்படலம் : 44) வருணிக்கப்பட்டுள்ளது. அவருடைய கொடை கருமையான மேகத் துக்கு (திறவுண்ட படலம் : 17) ஒப்பிடப்பட்டுள்ளது. அவருடைய மாதவமும் (அண்டரண்டப் பிரவேசப்படலம் : 20), வள்ளன்மையும் (ஒலிமார் தரிசனப்படலம் : 22), செல்வமும் சிறப்பும் (குத்பு நாயகர்

தரிசனப்படலம் : 18), இனிமையான மொழியும் (நபிமார் தரிசனப் படலம் : 9), பிழைபொறுக்குந் தன்மையும் (நரகப்படலம்: 22), புகழும் (சுவர்க்கப்படலம் : 27), இரும்பொருளிறைத்தலும் (நபிநாயகர் தரிச னப்படலம் : 9), கையும் வானமும் ஒத்திருந்த தன்மையும் (காட்சிப் படலம் : 15), நிதியம் வாரி வழங்கியமையும் (மீட்சிப்படலம் : 11) வருணிக்கப்பட்டுள்ளன.

## காப்பிய இலக்கணங்கள்

இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய ஏனைய காப்பியங்களில் உள்ளனபோன்று முகாஷபா மாலையிலும் காப்பிய மரபு பின்பற்றப் பட்டிருப்பதைக் காணலாம். முகாஷபா மாலையின் இரண்டாவது படலத்தில் வருபொருள் உரைத்த குலாம் காதிறு நாவலர் முதலாம் படலத்தில் கடவுள் வாழ்த்தை அமைத்துப் பாடியுள்ளார். இக்கடவுள் வாழ்த்திலுக் ஏனைய காப்பியங்களில் உள்ள முறைமையே பின்பற்றப் பட்டுள்ளது. காப்புச் செய்யுளுடன் ஆரம்பமாகிறது முகாஷபா மாலை. காப்புச் செய்யுள் வெண்பாவாக உள்ளது. அது வருமாறு :

''பூமேவு வாசம் பொருவா தியலாறேழ்
தாமேவு நாதன் றனைத்தொழுவாந் — தாமேவு
மூடலாப் பாடும் முகாஷபா வைத்தமிழின்
பாடலாப் பாடும் படிக்கு ''

இங்கே 'இயலாறேழ் தாமேவு நாதன்' எனும் சொற்றொடர் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். ஆறேழ் என்பதன் கருத்து யாது? இது அறுபத்தேழு என்பதைக் குறிப்பதாகக் கொள்ளலாம். இதனை இவ் வாறு விளக்கலாம். அல்லாஹ் என்னும் அறபுச்சொல் ஐந்து எழுத்துக் களைக் கொண்டது. அலிப், லாம், லாம், அலிப், ஹே என்பன அவ் வைந்து எழுத்துக்களுமாம். அறபு அரிச்சுவடியில் உள்ள ஒவ்வோர் எழுத்துக்கும் ஒவ்வோர் எண் தரப்பட்டுள்ளது. இதனை அப்ஜத் கணக்கு என்பர். இந்தக் கணிப்பு முறைமைக்கு இணங்க அலிப் என்னும் எழுத்துக்கு ஒன்றும், ஹே என்னும் இறுதியில் வரும் எழுத் துக்கு ஐந்தும், லாம் என்னும் எழுத்துக்கு முப்பதும் குறிப்பிடப் பட்டுள்ளது. இதனை அடிப்படையாக வைத்துப் பார்க்கும் பொழுது அல்லாஹ் என்னும் அறபுச் சொல்லிலுள்ள அலிப், லாம், லாம், அலிப், ஹே என்னும் எழுத்துக்களுக்குரிய எண்களான ஒன்று + முப்பது + முப் பது + ஒன்று + ஐந்து என்னும் இவ்வைந்தினையும் கூட்டினுல் அறுபத் தேழு வருகிறது. எனவே அறுபத்தேழு என்பதனைக் கூட்டு மொத்த மாகப் பெறக்கூடிய அறபு எழுத்துக்களாலான அல்லாஹ்வைத் தொழுவாம் எனக் குலாம் காதிறு நாவலர் தமது காப்பு வெண்பாவில் குறிப்பிட்டுள்ளார் எனக் கூறலாம்.

காப்புச் செய்யுளைத் தொடர்ந்து கடவுள் வாழ்த்து அமைந்துள்ளது. முதலிரண்டு செய்யுட்களும் அல்லாஹ்வைப் புகழ்வதாய் அமைந்துள்ளன. முதலாவது செய்யுளிலே அல்லாஹ் அஃறிணை ஒன்றன்பாலில் புகழப்பட்டுள்ளதைக் காணலாம். அல்லாஹ்வின் பண்புகள் சிலவற்றை குறிப்பிட்டுவிட்டு அவ்வாறு சிறப்புற்று விளங்கும் 'சிறந்த தேதோ வதைத் தொழுவாம்' (கடவுள் வாழ்த்து : 1) எனக் குறிப்பிட்டுள்ளமையைக் காணலாம். அடுத்த செய்யுளில் அல்லாஹ் உயர்திணை ஆண்பாலில் புகழப்பட்டுள்ளான். படைப்புகளிலெல்லாம் மிக்க அழகுடையவனாக மனிதனை அல்லாஹ் படைத்தான். படைப்புக் களுக்கெல்லாம் உணவு அளிப்பவன் அல்லாஹ். அத்தகைய குறியொடு கோல மில்லானை நாம் வழிபடுதல் வேண்டும். அங்ஙனம் வழிபடாது இருப்பவற்கு வாழுமிடம் நரகமே என 'வெறியொடு பிறழுமோர்க்கு வெந்நர கிருக்கைதானே' (கடவுள் வாழ்த்து : 2) எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

முகம்மது நபி (சல்) அவர்களைப் புகழவந்த ஆசிரியர் அவர்கள் தம் 'கழற்றுணை உளத்தி லணிவாம்' (கடவுள் வாழ்த்து : 3) என்று புகழ்ந்துள்ளார். அடுத்து ஆதம் நபி (அலை) முதல் இறுதி நபி (சல்) அவர்கள் வரை உள்ள 'மற்றநபி மார்களை மனங்கொடு துதிப்பாம்' (கடவுள் வாழ்த்து : 4) என்று வருணித்துள்ளார். கடவுள் வாழ்த்தில் உள்ள ஐந்தாம் ஆறாம் ஏழாம் எட்டாம் செய்யுட்களில் முதல் நான்கு கலீபாக்களையும் முறையே வருணித்துள்ளார் ஆசிரியர். 'போதுற்ற நற்கழலி னார்மிக்க வெற்றியர பூபக்கரைப் பணிகுவாம்' என செய்யிதினா அபூபக்கர் (றலி) அவர்களும், 'கொத்தான மலரினுறு பொற்றாரர் நடனமிடு கொக்காளர் குழுனினொருமா, வொத்தான வுபுறிபுனு கத்தாபி னிருகமல மொப்பான வடிபணிகுவாம்' என செய்யிதினா உமறுப்னு கத்தாப் (றலி) அவர்களும், 'திருமான் மதங்கொள் நபிநாதர் தந்த செழுமானிரண்டுண்முதலா, யொருமான் மணந்து மறுமான் மணந்த வுதுமான் பதம்பரவுவாம்' என செய்யிதினா உதுமான் இப்னு அப்பான் (றலி) அவர்களும், 'தொடுத்த தீனிலை படுத்து மாறுயர் சுடர்த்த கூறுடைவா, ளெடுத்த கோனலி தனித்த சேவடி யிதத்தோடே பணிகுவாம்' என அலீ இப்னு அபீத்தாலிப் (றலி) அவர்களும் புகழப் பட்டுள்ளமையைக் காணலாம்.

அண்ணல் நபி (சல்) அவர்களின் தோழர்கள் அடுத்து கடவுள் வாழ்த்தில், 'பக்கமேவிய சகுபிமார் பதங்களைப் பணிவாம்' (௯) எனப் போற்றப்பட்டுள்ளனர். அலீ (றலி) அவர்களின் மூத்த புதல்வர் செய்யிதினா ஹஸன் (றலி) அவர்கள் பச்சைநிறப் பட்டாடையை விரும்பினார்கள். அவர்கள் இறுதியில் நஞ்சூட்டப்பட்டுக் கொல்லப்பட்டார்கள். இளைய புதல்வரான செய்யிதினா ஹுஸைன் (றலி) அவர்கள்

செந்நிறமான பட்டாடையை விரும்பினார்கள். அவர்கள் கடைசியில் கர்பலாப் போர்க்களத்தில் கொல்லப்பட்டார்கள். இவ்விவரங்களைக் குறிப்பிட்டு குலாம் காதிறு நாவலர் 'உந்துய ரசனைப்பின்னோ ருசை னையும் பணிகுவாமால்' (10) எனப் பாடியுள்ளார். இஸ்லாத்துக்கு 'வேலி' அமைத்தவர்கள் நான்கு இமாம்கள். அத்தகைய வேலி போன்ற வரம்புகளை வகுத்துத்தந்த இமாம் சாபி (றஹ்), இமாம் ஹனபி (றஹ்), இமாம் மாலிக் (றஹ்), இமாம் ஹம்பலி (றஹ்) ஆகிய 'நாலி மாம்களை நாடொறும் போற்றுவோம்' என ஆசிரியர் வருணித் துள்ளமை ஈண்டு குறிப்பிடத்தக்கது.

வலிமார்களைக் குறிப்பிடும்பொழுது வலிமார்களுக்கெல்லாம் நாயகமானவர்கள் எனப் போற்றப்படும் 'பெருந்தகை யொலிகள் கோமான் பிறங்கடி சிரங்கொள்வாம்' (12) என முகியித்தீன் அப்துல் காதிறு ஜீலானி (றலி) அவர்கள் போற்றப்பட்டுள்ளார்கள். அதே போன்று சுல்தானுல்லாரிபீன் அகுமது கபீறு றிபாயி (றஹ்) அவர்கள் 'குளிர்பதம் விழியிற் கொள்வாம்' (13) என அவர்கள் புகழப்பட்டுள் ளார். ஏனைய இறைநேசச் செல்வர்களான ஹாஜி ஷரீபு ஜிந்தனி (14), குவாலியர் முகம்மது கௌது (15), நாகூர் ஆண்டகை (16), அவர்தம் புதல்வர் செய்கு யூசுபு சாகிபு (17), ஆகியவர்களையும் இன் னோரன்ன பிற இறை நேசச் செல்வர்களையும் (18) போற்றிப் புகழ்ந் துள்ளார் ஆசிரியர். கடவுள் வாழ்த்திலுள்ள இறுதிப் பாடலில்,

''சொந்தமாகிய செந்தமிழ் மணமுளந் தூங்கத்
தந்த தந்தைய ரிருவர் தாள்சு மப்பதெந் தலையே.'' (19)

எனத் தமது பெற்றோரையும் மறக்காமல் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். கடவுள் வாழ்த்துப் படலத்தில் மற்றொரு சிறப்பியல்பு உண்டு. பத்தொன்பது விருத்தப் பாக்களைக் கொண்ட கடவுள் வாழ்த்துப் படலத்தில் பத்தொன்பது முறை அவ்விருத்தப் பாக்களின் சந்தங்கள் செய்யுளுக்குச் செய்யுள் மாற்றப்பட்டுள்ளன என்பது ஈண்டு குறிப்பிடத் தக்கது.

காப்பிய இலக்கணங்களுள் ஒன்றாகக் கருதப்படும் மற்றொன்று இயற்கை வருணனையாகும். நாடு, நகரங்களின் இயற்கை வருணனை இவற்றுள் அடங்கும். பாத்திரப் படைப்பும் காப்பியங் களின் சிறப்பினை எடுத்துக்காட்டும் மற்றோர் அம்சமாகும். காப்பியங் களுக்கு மெருகூட்டிக்கொண்டிருக்கும் மற்றொரு சிறப்பு அம்சம் அங்கு இடம் பெற்றுள்ள உவமை நயமாகும். நபிகள் பெருமானாரின் ஜிஸ்மானியத்தான விண்ணேற்றத்தை வருணிக்கும் மிஃறாஜ் மாலை யில் உள்ளன போன்று நாகூர் சாகுல் ஹமீது ஆண்டகையின் றூஹானியத்தான விண்ணேற்றத்தை வருணிக்கும் முகாஷபா மாலை

யிலும் நரகத்தினதும் சுவர்க்கத்தினதும் இயல்புகள் வருணிக்கப் பட்டுள்ளதைக் காணலாம். சொல்லாட்சியும் பொருட் செறிவும் கொண்டு இந்நூல் திகழ்கின்றது. இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ் இலக்கியங்களின் சிறப்பியல்புகளுள் ஒன்றான அறபுத் திசைச் சொற்கள் இடம் பெற்றிருப்பதையும் இங்கு காணக் கூடியதாக இருக்கின்றது.

## இயற்கை வருணனை

இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ்க் காப்பியங்கள் பலவற்றில் அவற்றின் பாட்டுடைத் தலைவர்கள் தமிழ்நாட்டுக்கு வெளியே உள்ளவர்களாகவே திகழ்கின்றனர். அத்தகையோர் அனை வரும் அறபு நாட்டைச் சேர்ந்தவர்களாகவே உள்ளனர். அத்தகைய பாட்டுடைத் தலைவர்கள் அறபு நாடுகளைச் சார்ந்த நகரங்களான மக்கா, மதீனு, டமாஸ்கஸ், பகுதாது, பதாயிகு போன்றவற்றை பிறந்த அல்லது வாழுமிடங்களாகக் கொண்டவர்களேயாவர். அத் தகைய நாடு, நகரங்களையும் இஸ்லாமியத் தமிழ்ப் புலவர்கள் வருணிக்கும்பொழுது அவற்றைத் தமிழ்நாட்டில் உள்ள நாடு நகரங் களாகவே பெரும்பாலும் வருணித்துள்ளனர். சில சமயங்களில் அத் தகைய பாட்டுடைத் தலைவர்கள் வாழ்ந்த நாடு நகரங்களிலுள்ள உயிரினங்களையும் தாவர வருக்கங்களையுங் குறிப்பிட மறந்துவிட வில்லை. ஆனால் தமிழ்நாட்டையே பிறப்பிடமாகவும் அல்லது வாழு மிடங்களாகவும் கொண்ட சில காப்பியத் தலைவர்களை இஸ்லாமியத் தமிழ்ப் புலவர்கள் பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டனர். அத் தகைய சந்தர்ப்பங்களில் அவர்கள் தமிழ்நாட்டையும் தமிழ்நாட்டு நக ரங்களையும் வருணித்துப் போந்தனர். அத்தகைய நூல்களுள் ஒன்று முகாஷபா மாலை.

முகாஷபா மாலையில் உள்ள நாட்டுப் படலம் சோழ நாட்டையே வருணிக்கின்றது. சோழ நர்ட்டின் வளம் விவரிக்கப்படுகின்றது. அங்கு விவசாயம் சிறப்புற்று விளங்குகிறது. அதன் பயனாக அமோக நெல் விளைச்சல் ஏற்படுகிறது. சோற்றுக்குக் குறைவில்லாது விளங்குவது சோழநாடு எனக் குலாம் காதிறு நாவலர் 'சோறுதரும் பெரும் வினையி னொப்பின்றி விளங்குவது சோழநாடே' (நாட்டுப் படலம் : 1 ) எனக் குறிப்பிட்டுள்ளார். சோழ நாட்டை வளமாக்குவது காவேரி. காவேரியில் நின்று பிரியும் ஒரு நதி கொள்ளிடம். 'குங்குமங் களுந்தி வருங் கொள்ளிடத்தின்' என்கிறது தேவாரம். (210, 6) சோழநாட்டில் உள்ள மற்றொரு நதி மண்ணி. 'தென்திரைகள் வரத்திரட்டும் திகழ் மண்ணித் தென்கரைமேல்' என்கிறது நாலாயிரத்திவ்ய பிரபந்தம். (பெரிய திருமொழி : நான்காம் பத்து : 1 ஆம் திருமொழி -

போதலர்ந்த 5 ) இந்நதிகள் மூன்றும் சோழ நாட்டை வளமாக்கு கின்றன. எனவேதான் குலாம் காதிறு நாவலர் தமது முகாஷபா மாலேயில் உள்ள நாட்டுப் படல இரண்டாம் செய்யுளில் இந்நதிகளை உருவகப்படுத்திப் பாடியுள்ளார். காவிரியை சோழநாட்டின் நற்றாய் என்றும் கொள்ளிடத்தைச் சோழநாட்டின் செவிலித்தாய் என்றும் உருவகிக்கப்பட்டுள்ளன. இவற்றோடு சேர்ந்து மண்ணி நதியும் சோழநாட்டிற்கு எப்பொழுதும் அமுது போன்ற நீரை வழங்கிக் கொண் டிருக்கின்றன. பூக்களிலிருந்து விழும் தேன் இந்த ஆற்று நீரிலே கலந்துள்ளது. இவ்வாறு தேன் என்று பொருள் படும் வேரி கலந்த மூன்று நதிகளிலும் உள்ள நீர் அலையாக அடித்துக் கொண்டிருக் கின்றது. இந்த நீரலையை மூதாட்டி ஒருத்திக்கு உவமிக்கிறார் ஆசிரியர். அத்தகைய நீரலையாகிய மூதாட்டி தாலாட்ட இளமை வாய்க்கப்பெற்று விளங்குகிறது சோழ நாடு. அந்தத் தாலாட்டிலே இனிது துயில் கொள்கின்றது, சோழ நாடு. தேன் என்னும் பொருளில் வேரி என்னும் சொல் 'கமலங் கலந்த வேரியும்' எனத் திருக்கோவை யாரின் (301) பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம். இக்கருத் துக்களை வைத்தே ஆசிரியர் 'பாவேரி குளிர்கொடுப்பப் படர்செல்வத் தினிதுதுயில் பயிலுநாடே" என சோழ நாட்டை வருணித்துள்ளார்.

ஏனைய காப்பியங்களில் உள்ள நாட்டுப்படலங்களில் போல் வானங்கறுத்து, இடிஇடித்து, மின்னி, மழை பெய்து, வெள்ளப்பெருக் கெடுத்து, வயலுழுது, நெல் விதைத்து, நாற்று நட்டு, அறுவடை செய்து, தானியம் பெறப்பட்டது என முகாஷபா மாலையில் அதன் ஆசிரியர் குறிப்பிடவில்லை. சோழ நாட்டிலே விளையும் பயிர்களை மாத்திரமே ஆசிரியர் வருணித்துள்ளார். முதலில் நெல்வயல்களை வருணிக்க முற்பட்ட ஆசிரியர் நெல் விளைவதற்கு முன்னிருந்த வயலினை கற்றறியாதார் பெருமைப்படும் தீய குணத்துக்கு ஒப்பிட்டுள் ளார். நெல் விளைந்த பின்னர் நெற்பயிர்களின் தோற்றம் கற்றறிந்த நல்லவர்களின் தாழ்மையான குணம் இது எனத் தெளிவுபடுத்தியது எனச் சுட்டிக் காட்டிய ஆசிரியர் அந்நெல்லின் தன்மை எத்தகையது என்பதனையும் விளக்கியுள்ளார். விளைந்த நெல் பாரபட்சம் காட்டாது. நன்மை சற்றும் இல்லாதார் என்றோ நிறைய நன்மை செய்பவர்கள் என்றோ வேறுபாடு காட்டாமல் பொதுவாக எல்லோருடைய பசியை யும் தீர்த்துவிடுகிறது நெல். அத்தகைய நெல் விளைச்சல் மிக்க பண்ணைகள் மலிந்துள்ள நாடு சோழநாடு என்பதனை, 'எல்லார்தம் மிருதயமும் எதிர்நோக்கீவுறுஞ்செந்நெல் லினங்கடாமே' என ஆசிரியர் வருணித்துள்ளமையைக் காணலாம்.

நாட்டுப்படலத்தில் உள்ள பல பாடல்களில் உலக வழக்கில் காணப் படும் பல உண்மைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. அவ்வுண்மைகளை ஆதாரமாக வைத்து நாட்டில் விளையும் தானியங்கள் விவரிக்கப்பட் டுள்ளன. உயர்ந்தாருக்கு உயர்ந்தாரும் இழிந்தாருக்கு இழிந்தாரும் உறவுமுறை அடிப்படையில் உதவி புரிவர். அவ்வாறே பயறும் உள்ளது என 'பயந்தாரப் படர்கொடியிற் பல்பானுங் குலை முதிரும் பயறு தானே' (நாட்டுப்படலம் : 4) இவ்வாறு பாடியுள்ளார் ஆசிரியர். வேம்பு என்றால் வெறுப்பு என்பது பொருள். 'வேம்புற்று முந்நீர் விழுங்க' (513) என்கின்றது சீவக சிந்தாமணி. உலகிலே வெறுக்க வேண்டியவற்றை விரும்பி அதனுள் விழுந்து துன்புறும் கெட்ட மனத்தை இவ்வாறு அடையாளம் காணலாம் என்பது போல் ஒரு கூற்று ஒரு பாடலில் அமைந்துள்ளது. (நாட்டுப்படலம் : 5) பால் இருக்கிறது. அதனை உறைய வைத்தால் தயிராகும். அத்தயிரைக் கடைந்தால் மோர் பெறப்படும். அந்த மோரை நீக்கி விட்டால் நெய் பெறப்படும். கெட்ட மனத்தினை உடையவனை நெய் போன்ற நல்லவர்களிட மிருந்து வேறுபடுத்திக் காட்டுவதாய் அமைந்துள்ளது இங்கு குறிப் பிடப்பட்டுள்ள உருவகம். இதனையே 'நாம்பார்வை பெறஞான வழிகாட்டிக் கழிபெருகு நறுநெய்தானே.' என ஆசிரியர் குறிப் பிட்டுள்ளார்.

உலுத்தர், லோபி என்பன ஒரு பொருட்சொற்கள். உலுத்தர் ஒன்றுமே ஈயாதோர். தம்மை வருத்துபவர்களுக்கே ஈபவர். அத் தகைய உலுத்தரிடம் பெரும் பொருள் வைக்கப்பட்டால் அவற்றைத் தானும் உண்ணார்; பிறருக்கும் ஈயார். அவருடைய பொருள்களைப் பிறர் எடுத்துக் கொள்வர். தேனீக்களும் அத்தகையனவே. எல்லாப் பூக்களிலிருந்தும் தேன் சேர்த்துப் பிறர் அனுபவிக்க வைக்கின்றன. தேனீக்கள் சேர்க்கும் தேனிறால் தேத்தடை என வழங்கப்படுகிறது. அது தேத்திறால் (தொல்காப்பியம் : எழுத்ததிகாரம் 344 உரை) என்றும் வழங்கப்படுகிறது. அத் தேன் கூட்டை எருதின் மீது வைத் தால் அதனால் எருதுக்கு ஒரு பயனும் இல்லை. பிறரே அதனால் பயனடைவர். இவற்றிற்குக் கரும்பை உவமிப்பர். கரும்பைப் பிழிந்து எடுத்தால்தான் கரும்பிலுள்ள இனிமையான சாற்றினைப் பெற முடியும். இவற்றையே ஆசிரியர் 'கருத்தழிய வேழம்போற் காடு பிறவின் றமருங் கன்ன றானே.' எனக் கடைசி அடியில் சுருக்கமாகக் கூறி உள்ளார். (நாட்டுப் படலம் : 6)

பேய்க்குணத்தில் பிறந்தவர்கள் வழித் தோன்றல்கள் பேய்க்குணத் தையே பெறுவர். தாய்க் கொலை செய்தவர்களும் அத்தன்மையை உடையவரே. அது பரவணியாய் வருவதொன்று. பரம்பரை, வமிசா வளி என்பன பரவணி என்பதன் பொருளாகும். வாழையடி வாழை

யாகத் தாய்க் கொலையில் ஈடுபட்டு வருவது வாழை என்னும் கதலி. இதனையே நாட்டுப் படலத்தில் உள்ள ஒரு பாடல் (7) குறிப்பிட்டுள்ளது. பாலும் தேனும் செஞ்சாறும் மதகு வழியே பல பாகங்களுக்கும் வழிந்து செல்வது மற்றொரு பாடலில் (8) குறிப்பிடப்பட்டுள்ளது. இங்ஙனம் மேலும் ஐந்து செய்யுட்களால் நாட்டினை வருணித்த ஆசிரியர் பதினான்காவது பாடலில் 'எத்தனையோ புலவரெலா மெத்தனையோ வகைப்படுத்தி, யித்தனையென் றடங்காத விருங்கவியி னிசைத்துமா, லத்தனையு மடங்கிலவிவ் வகனாட்டு வளம்' என வருணனைக்கு அப்பாற்பட்டது சோழநாடு என்பதனைக் கூறாது குறிப்பிட்டுள்ளார். சோழநாட்டில் கிடைக்கும் பல உணவு வகைகளையும் ஆசிரியர் நாட்டுப் படலத்தில் விரிவாக எடுத்துக் காட்டி உள்ளார்.

இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ்க் காப்பியங்களில் உள்ளது போலல்லாது முகாஷபா மாலையில் நகரப்படலம் வேறு விதமாக அமைந்துள்ளது. நகரத்தில் உள்ள அகழி, அரண் முதலியவை இங்கு வருணிக்கப்படவில்லை. பொதுக் கூற்றுக்களை அடிப்படையாக வைத்து நகரத்தின் சிறப்புயல்புகள் விவரிக்கப்பட்டுள்ளன. முதலில் நகரின் பழமை குறிப்பிடப்பட்டுள்ளது. பண்டுதொட்டு நாகூர் செய்த அருந்தவத்தின் காரணமாகவே சாகுல் கமீது ஆண்டகையின் இருப்பிடமாகத் திகழும் பேற்றினை அந்நகர் பெற்றது. இதனை வலியுறுத்தும் முகமாகவே குலாம் காதிறு நாவலர் 'அருந்தவஞ் செய்தலா னன்றோ, நந்த நாயகர்க் கிருக்கையா மதுதிரு நாகூர்' எனப் பாடியுள்ளார்.

பெரும் பேற்றை அளிக்க வல்லது நாகூர். பெருமை நல்க வல்லது அது. புகழ் பெற்ற விழாக்களைக் கொண்டது அந்நகர். மேன்மை தர வல்லது. குறைவில்லாமல் நிறையச் சோறு வழங்க வல்லது. வேதங்களை ஓதும் ஒலியை அங்கு எப்பொழுதும் கேட்கக் கூடியது. என்றும் நல்மணம் வீசிக் கொண்டிருக்கும் நகர் நாகூர். இவ்வருணனைகளை 'நாறறாதது நாமிருந் தணிபெறு நாகூர்' (நகரப்படலம் : 2) என ஒரு பாடலில் கூறி முடிக்கிறார். நாகூரிலே மரங்களில் கனிகளும் மலர்களும் விரவி உள்ளன. அவை சான்றோர் இயற்றிய செய்யுட்கள் போல் காட்சி அளிக்கின்றன. கனிகளும் மலர்களும் உள்ள பூஞ் சோலையில் மயில்கள் ஆடுகின்றன, வண்டுகள் பாடுகின்றன. அத்தகை அலங்கிருதம்—சிங்காரம் மிக்குக் காட்சி அளிக்கிறது நாகூர் என்பதனைச் சுருக்கமாக 'சூழ்ந்த லங்கிரு தந்தருந் தென்புறச் சோலை' என வருணிக்கப்பட்டுள்ளமையைக் காணலாம். (நகரப் படலம் : 3)

நாகூரின் தெற்கிலே உள்ள பூஞ்சோலையை வருணித்த ஆசிரியர் அடுத்து நகரின் வட புறத்திலே உள்ள நதியை வருணிக்கிறார். அந்த வட புற நதி நறுமணங்களைக் கொண்ட பூமாலை என விளங்கு கின்றது. அந்த நகருக்கே உரிய நதியெனப் படர்ந்திருக்கிறது. அஃது அவ்வாறு ஏற்படுவதற்கான காரணம் அங்கு சாகுல் கமீது ஆண்டகை அவர்கள் வீற்றிருந்தமையேயாம். எமது தீமைகளை அகற்றவே அவர்கள் அவ்வாறு அங்கு வந்து தங்கி இருந்தார்கள். வெள்ளிய திரைகளையுடைய கடலில் இருந்து எறியப்பட்ட முத் தினங்கள் கடற்கரையிலே பிரகாசித்துக் கொண்டிருந்தன. மலர்கள் செறிந்து தாதோடு போர்க்கப்பட்டிருந்தன. இத்தகைய வளத்தினை உடையது நாகூர். (நகரப் படலம் 4)

எப்பொழுதும் எங்கும் ஒலி முழக்கம் உடையதாய் விளங்கியது நாகூர். யானைகளின் ஒலி ஒரு பக்கம். தேர்களின் சப்தம் மறுபக்கம். வேகமாகச் செல்லும் குதிரைகளின் சப்தம் மற்றொரு பக்கம். நெடிய கழுத்தினை உடைய ஒட்டகங்களின் ஒலி இன்னொரு பக்கம். வரிசையாகச் செல்லும் வண்டிகளின் ஓசை வேறொரு பக்கம். பல்லக்குகள் கொண்டு செல்லப்படுவதனால் ஏற்படும் சப்தம் பிறிதொரு பக்கம். இத்தகைய ஓசைகளுக்கெல்லாம் மேலாக ஒலித்துக் கொண் டிருந்தது அந்நகரிலே உள்ள பள்ளிவாசல்கள் தோறும் எழுப்பப்படும் திருமறையின் முழக்கம். திருமறை ஓதும் ஒலி ஏனைய சப்தங்களை அடக்கக்கூடியதாக இருந்தது. இதனையே 'விரியினாலயந் தொறு மறை வணங்கொலி மிகைக்கும்' என (நகரப் படலம் : 11) ஆசிரியர் வருணித்துள்ளார். எல்லா ஒலிகளையும் மிஞ்சும் மற்றொரு ஒலியும் உண்டு. அதுதான் பாங்கொலி. முஸ்லிம்களைத் தொழுகைக்கு வருமாறு பள்ளிவாசல்களிலிருந்து எழுப்பப்படும் அறபு மொழியிலான அழைப்பொலி. அது கஹர் என்னும் கேடுகளை அகற்ற வல்லது. நாளொன்றுக்கு ஐந்து வேளையும் முஸ்லிம்களைத் தொழுகைக்கு வரு மாறு அழைக்கப்படும் அந்த பாங்கொலி மேகங்கள் தவழ்கின்ற மினாறா என அழைக்கப்படும் தூபிகளிலிருந்து எழுப்பப்படுகின்றன. அந்தத் தூபிகளும் மரங்களிலே தொங்கவிடப்பட்டுள்ள கொடிகளும் எல்லா நோய்களையும் தொலைத்துவிடும். (நகரப் படலம் : 13) அப் பொழுது மாலை நேரம். தமாரை மலர் குவிந்தது. அல்லி மலர் மலர்ந்தது. புள்ளினங்கள் இரை தேட முற்பட்டன. எருமைகள் அவற்றின் கன்றுகளைத் தேடி இரங்கின. சூரியனும் கடலில் புகுந்தான். இரவு காலம் ஆரம்பமானது. இவற்றை எல்லாம் குறிப் பிட்டுவிட்டு, 'வரைபுகப் போந்ததம் மாலை நேரமே' என மாலை நேரத்தை ஆசிரியர் வருணித்துள்ளார். (திறவுண்ட படலம் : 6). அவ்வாறு மாலையின் தோற்றத்தை இவ்வாறு உவமை நயத்துடன் விளக்கி உள்ளார் ஆசிரியர். மாலையின் தோற்றத்தை ஒரு தூதனுக்கு

உருவகப்படுத்தி உள்ளார். அத்தூதன் அங்கு அழைப்பொன்றினை ஏற்று வந்துள்ளான். இருளின் அழைப்பை ஏற்றே வந்துள்ளான். பழைய அகன்ற உலகினை மூடிவிடும்படி இருளின் அழைப்பை ஏற்றே மாலை அங்கு வந்துள்ளது. ஏனெனில் அங்கு பலர் மாதவம் புரிந்து கொண்டிருந்தனர். அத்தகையோரை வஞ்சனையாளர் காணக் கூடாது என்பதற்காகவே இருள் உலகினை மூடிக்கொண்டுவிட்டது. இவ்வாறு மூடுவதற்கே மாலை என்னும் தூதனை இருள் அழைத்தது என இங்கே குறிப்பிடப்பட்டுள்ளது. இங்கு தற்குறிப்பேற்ற அணியும் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். (திறவுண்ட படலம் : 7)

ஐயறிவுடையது நாய். இயல்பினால் குன்றியது அது. ஆனால் அதன் குணமோ உயர்ந்தது. செய்த நன்றியை மறவாதது நாய். நாயுடைய அத்தகைய குணத்தைக் கண்டும் அதனைப் பொருட் படுத்தாது நன்றியை மறப்பவர்கள் மனிதர்களிடையே உள்ளனர். அத் தகையோர், நன்மை இது தீமை இது என உணரத் தவறி விடுகின் றனர். இழிவைத் தேடிக் கொள்கின்றனர். தேடுவதில் முயல்வர். அதன் பயனாக அழிவை நோக்கிச் செல்வர். (நகரப் படலம் : 18)

சாகுல் கமீது ஆண்டகையின் றூஹானிய்யத்தான விண்ணேற்றப் பயணத்தின்போது அவர்கள் நரகிலும் சுவர்க்கத்திலும் கண்ட காட் சிகள் இரண்டு படலங்களில் வருணிக்கப்பட்டுள்ளன. நரக லோகத்திலே அவர்கள் கண்டதாக வருணிக்கப்பட்டுள்ள காட்சி இவ்வாறு அமைந்துள்ளது. வட்டி எடுத்தலும் கொடுத்தலும் தீமை விளைக்க வல்லது, அவ்வாறு வட்டித் தொழிலில் ஈடுபடுவோர் நரகிலே தண்டிக்கப்படுகின்றனர். விபச்சாரத்தில் திளைத்திருந்தவர்கள் அங்கு துன்புறுத்தப்படுகின்றனர். சுய உணர்வை இழக்கச் செய்வது மது. அத்தகைய மதுபானங்களை அருந்தினோர் இன்னல்களுக்கு ஆளாக்கப் படுகின்றனர். நடுநிலைமை தவறி வன்செயலாகக் கொலை முதலிய பாதகங்களைச் செய்தோர் தண்டனைக்கு ஆளாக்கப்பட்டனர். இத் தகையோருக்கு நரகில் அளிக்கப்பட்ட வேதனைகளை அவர்கள் கண் டார்கள் என்பது ‘நோன்மைதீர் தரப்பெறு நோவு நோக்கினார்’ என (நரகப் படலம் : 13) முகாஷபா மாலையில் வருணிக்கப்பட்டுள்ளது.

இருபத்து மூன்று விருத்தப் பாக்களில் நரகத்தை வருணித்த ஆசியர் சுவர்க்கப் படலத்தின் முப்பத்து மூன்று விருத்தப்பாக்களைப் பயன் படுத்தி சுவர்க்கத்தின் தன்மையை விவரித்துள்ளார். சுவர்க் கத்தில் உள்ள உணவு வகைகளை ஒரு பாடலில் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். அங்குள்ள உணவுகள் முன்னர் பார்த்தறியாதவை. அதன் பெயர்களைக் காதுகள் முன்னர்க் கேட்கவில்லை. ஒருபோதும் வாயால் சுவைத்து ருசி பார்க்கப்படாதவை. அத்தகையன அனைத்தும் சுவர்க்

கத்திலே விளங்கும் தரத்தனவாகும். அங்கே அவை 'பேணாக நிறைந்து பிறங்கிடுமால்' என (சுவர்க்கப் படலம் : 20) குறிப்பிடப் பட்டுள்ளது. சுவர்க்கத்தில் உள்ளவர்கள் உடலின் தோல் சுருங்கலை அடையமாட்டார்கள். அவர்களுடைய தலை மயிர் முதலியன நரை யாகாது. அவர்கள் மூப்பினை அடைய மாட்டார்கள். அவர்களுக்கு நித்திரையே வராது. மலம் முதலியவற்றை அடையமாட்டார்கள். எல்லையில்லா நாட்கள் இவ்வாறு சுவர்க்கத்தில் வாழ்வார்கள். இதனையே ஒரு பாடலின் இறுதி அடியில் 'வரைவேயிலை நாட்பல மன்னுறுமால்' என (சுவர்க்கப் படலம் : 24) ஆசிரியர் பாடியுள்ளார்.

சாகுல் கமீது ஆண்டகையின் கனவில் நிகழ்ந்த விண்ணேற்றத்தின் போது அவர்கள் சந்தித்ததாகக் கருதப்படுபவர்களின் பெயர்களும் இப் படலத்தில் தரப்பட்டுள்ளன. (சுவர்க்கப் படலம் : 29 : 32)

## பாத்திரப் படைப்பு

ஓர் இலக்கியத்தின் சிறப்பு அங்கு வருணிக்கப்படும் பாத்திரங்களின் படைப்புத் திறனில் பெரிதும் தங்கி உள்ளது. அவ்விலக்கியத்தின் பாட்டுடைத் தலைவர் தம் சிறப்பியல்புகள் பெரிதும் விதந்தோதப் படுகின்றன. இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய இலக்கியங்களில் ஏக இறைவனான அல்லாஹ்வின் ஏகத்துவம் விதிவில்க்கின்றி விவரிக் கப்படுவதைக் காணலாம். அதே இலக்கிய மரபு முகாஷபா மாலை யிலும் பின்பற்றப்பட்டிருப்பது புலனாகிறது. அல்லாஹ்வைத் தமிழில் வருணிக்கும் பொழுது வேறு வழியின்றி ஆண்பாலிலே சுட்டப்படுவது வழக்காறாக உள்ளது. முகாஷபா மாலையிலும் அத்தகைய சான்று களைக் காணக்கூடியதாக இருக்கின்றது. அல்லாஹ்வைக் குறிப் பதற்காக 'ஒருவன்' என்னும் சொல் (திறவுண்ட படலம் : 3, காட்சிப் படலம் : 13) பயன்படுத்தப்பட்டுள்ளது. அதே கருத்தில் 'ஒருமையன்' என்னும் சொல் (மீட்சிப் படலம் : 10) உபயோகிக்கப்பட்டுள்ளது, 'ஒரு பரன்' என (ஒலிமார் தரிசனப் படலம் ; 4) அல்லாஹ் சுட்டப் பட்டுள்ளமையும் காணலாம். 'இறை' என்பதும் (திறவுண்ட படலம் : 5) 'முதல்வன்' என்பதும் (குத்புநாயகர் தரிசனப் படலம் : 9) 'கத்தன்' என்பதும் (குத்புநாயகர் தரிசனப்படலம் : 24) 'நாயகன்' என்பதும் (சுவர்க்கப் படலம் : 29) 'பெரியோன்' என்பதும் (நபி நாயகர் தரிசனப் படலம் : 6) 'பொருவிலான்' என்பதும் (மீட்சிப் படலம் : 5) 'வல்லோன்' என்பதும் (காட்சிப் படலம் : 14 ; மீட்சிப் படலம் : 9) முகாஷபா மாலையில் அல்லாஹ்வைக் குறிக்கப் பயன் படுத்தப் பட்டுள்ளன. 'ஆண்டிய லொருவன் வல்ல னமல நாயகன்' என்றும் வருணிக்கப்பட்டுள்ளது. மற்றொரு செய்யுளில் அல்லாஹ் இவ்வாறு பாடப்பட்டுள்ளான் :

கருத்தனாயுல காக்கிய கருணையங் கடலாய்
திருத்தனாயொருங் காண்டமர் பெரியனாய்ச் சிறந்த
பொருத்தனாய்நமக் கென்றுமி லாதவோர் பொருளாய்
ஒருத்தனாயவ னாமமே யிடனெலா மொலிக்கும்.

(அண்டரண்டப் பிரவேசப்படலம் : 15)

முகாஷபா மாலையில் அதன் பாட்டுடைத் தலைவர் சாகுல் கமீது ஆண்டகை அவர்களின் பண்புகள் நுணுக்கமாக வருணிக்கப்பட்டுள்ளன. சாகுல் கமீது ஆண்டகை அவர்கள் சூரியனின் பிரகாசம் போன்று சீரும் சிறப்பும் பெற்று விளங்கினார் என (நகரப்படலம் : 20) வருணிக்கப்பட்டுள்ளது. பெருந்தகையார் என அவருடைய பெருந்தன்மையை குறிப்பிடப்பட்டுள்ளது. (வரலாற்றுப் படலம் : 4) அன்பு வழியும் கண்களை உடையவர் சாகுல் கமீது ஆண்டகை அவர்கள் என்பது ஒரு பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது. (வரலாற்றுப் படலம் : 5). அவருடைய வாயிலிருந்து இனிமையான சொற்களே வந்து கொண்டிருக்கும். உண்மையான வேத வசனங்களையே அவர்களுடைய வாய் உச்சரித்துக் கொண்டிருக்கும். அவர் திருவாய் மலர்ந்து அருளியவை பொருளுடைய அமுத வாக்கியங்களாகக் கொப்பளிப்பனவாய் அமைந்திருக்கும். (வரலாற்றுப் படலம் : 6). அவரிடம் அருள் நாறும். பொருள் நாறும். அவருடைய கைகளைப் பிடித்து அவரிடம் அடைந்தவர்களை ஈடேற்றம் அடையச் செய்யும் ஆற்றல் மிக்கவர். (வரலாற்றுப் படலம் : 7). அவருடைய பாதங்களிலே துறவியர்கள் தமது தலைகளைத் தேய்த்துக் கொண்டிருக்கும் தன்மை வாய்ந்தவராய் விளங்கினார். (வரலாற்றுப் படலம் : 8). அடியவருக்கு எப்பொழுதும் அருள் பாலித்துக் கொண்டிருப்பவராக செய்யிது அப்துல் காதிறு என்னும் சாகுல் கமீதொலி அவர்கள் திகழ்ந்தார்கள். (வரலாற்றுப் படலம் : 21). நாகூர் ஆண்டகை அவர்கள் 'மேலாங் கதி தரும் பெரியோன் சாகுல் கமீது' என (வரலாற்றுப் படலம் : 21) வருணிக்கப்பட்டுள்ளார். பல கலைகளையும் கற்றவராக விளங்கினார்கள் சாகுல் கமீது நாயகம் அவர்கள். (வரலாற்றுப் படலம் : 35). அவர்களுடைய வாய் எப்போதும் திருமறையை ஓதிக் கொண்டே இருக்கும். அவருடைய மனம் எல்லாப் புகழுக்கும் உரிய அல்லாஹ்வின் பால் பொருந்துவதாய் ஈடுபாடு கொண்டதாய் இருக்கும். அவர்களுடைய நெற்றியில் வடுப்பதிந்திருக்கும். எப்பொழுதும் அல்லாஹ்வைத் தொழுது கொண்டிருப்பதனால் ஏற்பட்ட வடுவாகும். இங்ஙனம் சிறந்து விளங்கினார்கள் நாகூர் ஆண்டகை அவர்கள் என முகாஷபா மாலை குறிப்பிடுகிறது. (திறவுண்ட படலம் : 2) மண்டலங்களும் விண்டலங்களும் கண்டலங் கொள்ள சாகுல் கமீது அவர்கள் கருத்துறச் சென்றார்கள். (அண்டரண்டப் பிரவேசப்படலம் : 4).

எமது உள்ளங்களிலே மறை பொருளைத் தேட வைத்தவர் சாகுல் கமீது ஆண்டகை அவர்கள். (நபி நாயகர் தரிசனப் படலம் : 10) ஒப்பரும் புகழ் சாகுல் கமீது எனப் பலவாறு புகழப்பட்டவர் சாகுல் கமீது ஒலி அவர்கள். (காட்சிப்படலம் : 3)

நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களைப் பற்றிய குறிப்பும் முகாஷபா மாலையில் இடம் பெற்றுள்ளது. முஸ்லிம் அல்லாதாராய் இருந்து இஸ்லாத்துக்கு மாறு செய்தவர்களை ஒழித்துக் கட்டியவர்கள் அண்ணல் நபி (சல்) அவர்கள். உயர் சுவர்க்கத்தில் இருக்கிறார்கள். அவர்களுடைய திரு மேனியில் நறுமணம் கமழ்ந்து கொண்டிருக்கும். எல்லோராலும் விரும்பப்பட்ட நய நாயகர் அவர்கள். இவ்வாறு நபிகள் நாயகம் (சல்) அவர்கள் வருணிக்கப்பட்டுள்ளார்கள். நபி மார்கள் தரிசனப்படலத்தில் நபிமார்கள் பலரின் பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. (10 : 12).

முகியித்தீ னெனு மன்னிலை நாயகர், (10) என்றும், ஆண்டகை (11) என்றும் முகியித்தீன் அப்துல் காதிறு ஜீலானி (றலி) அவர்கள் குறிப்பிடப்பட்டுள்ளார்கள்.

ஒலிமார் தரிசனப் படலத்தில் இறைநேசச் செல்வர்கள் பலரின் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளன. எல்லா இறைநேசச் செல்வர்களும் 'மாட்சி மேவுசா குல்கமீதேயென மனக்க, ணாட்சிமேவுற விளித்தனர் புகழ்ந்தனரன்பால்' (ஒலிமார் தரிசனப் படலம் 2). 'ஏர்பெறு' 'சீர்பெறும்' 'கூர்பெறு' 'நார்பெறு' என்னும் சொற்றொடர்கள் இறைநேசச் செல்வர்களை வருணிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம். (ஒலிமார் தரிசனப் படலம் ; 6) 'புண்ணிய நிலைமை வாய்ந்த', 'மென்மை நண்ணிய', மாநாடிய', மாவுண்ணிய', 'உயர்', 'தண்ணிய' என்னும் சொற்றொடர்களும் அவுலியாக்களைப் புகழப் பயன்படுத்தப் பட்டுள்ளன. (ஒலிமார் தரிசனப் படலம் : 8). 'ஆசையிற் சிறந்த', 'மாவோசையின்', 'மற்றவமையில்லா மாசை நேரகத்தின்', 'காகையில்', 'மாதவத்தின் முத்தார்' என்பனவும் இறை நேசச் செல்வர் ஒவ்வொருவரினதும் தன்மைக்கேற்ற அடைமொழியுடன் வருணிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளன. (ஒலிமார் தரிசனப்படலம் : 9).

அக்தாபுகள், அவுத்தாதுகள், அப்தாலுகள், அப்றாதுகள், உப்பா துகள், ஜஹ்ஹாதுகள், நுகபாக்கள், நுஜபாக்கள், ஆஷிகீன்கள், வாஸி லீன்கள், ஆரிபீன்கள், ஆபிதீன்கள், சித்தீகீன்கள், முத்தகீன்கள் முஹப்பிபீன்கள், முஹக்கிகீன்கள் முதலிய பலரும் அங்கே சாகுல் கமீதாண்டகையை 'வருக, வருக' எனத் தழுவி வரவேற்றார்கள் என முகாஷபா மாலை கூறுகின்றது. (ஒலிமார் தரிசனப் படலம் : 19-20).

இவர்களும் பிறரும் சாகுல் கமீது ஆண்டகையை வரவேற்றார்கள் என்பதனை இவ்வாறு வருணித்து முடிக்கிறார் முகாஷபா மாலை ஆசிரியர் குலாம் காதிறு நாவலர் அவர்கள்.

ஏனைய ரெல்லா மெங்கட் கிருவிழி யனையார் நண்ணி
வானைசா குல்கமீது வருகெனத் தழுவி யேத்திச்
சோனையி லுவந்த வாசி சோபனத் துயர்த்நிச் சொன்னார்
தேனைய வின்பத் தென்றுநீ திருச்சிறப் புலவ மன்னோ.

(ஒலிமார் தரிசனப் படலம் : 21)

விண்ணேற்றத்தின் பின்னர் சாகுல் கமீது ஆண்டகை அவர்கள் சுய உணர்வுகள் பெற்றமையை 'மீட்சி நிலைமை வாய்ந்து மெல்லென நிமிர்ந்தா ரன்றே'. (மீட்சிப் படலம் : 1)

## சொல்லாட்சியும் பொருட் செறிவும்

சொற்களைச் சிறந்ததோர் ஒழுங்கு முறையில் அமைய எழுதுவது உரைநடை எனப்படும். ஆனல், சிறந்த சொற்களைச் சிறந்ததோர் ஒழுங்கு முறையில் அமைய எழுதுவது கவிதை எனப்படும். கவிதையிலேதான் கவிஞனின் தனித்தன்மை பிரதிபலிக்கின்றது. தமது கருத்தைச் சுருக்கமாகவும் தெளிவாகவும் வெளிப்படுத்தும் முகமாகக் கவிஞர் தமது சொற்களைத் தெரிவு செய்தே பயன்படுத்துவார். அவ்வாறு அக்கவிஞர் மேற்கொள்ளும் சொல்லாட்சியிலேயே கவிஞரின் ஆற்றல் தங்கி உள்ளது. ஏனையோர் அக்கவிஞரின் ஆற்றலை நிர்ணயிப்பதற்கு அவர்தம் சொல்லாட்சியையே அளவுகோலாகக் கொள்வர். இந்த அடிப்படையில் பார்க்கும்பொழுது இஸ்லாமியத் தமிழ் இலக்கியப்பரப்பிலே தமக்கென ஓர் இடத்தை உரித்தாக்கிக்கொண்டவர் குலாம் காதிறு நாவலர் எனக் கூறலாம். அவர்தம் சொல்லாட்சியை அடிப்படையாக வைத்தே அவர் நான்காம் தமிழ்ச் சங்கத்தின் நக்கீரன் எனப் புகழப்பட்டுள்ளார். அவர்தம் இலக்கியப் படைப்புக்களிலே சங்க காலத் தமிழில் பொதிந்துள்ள சிறந்த நடையின் சாயலைக் காணலாம். இந்தக் கண்ணோட்டத்தில் அவருடைய படைப்புக்களில் ஒன்றான முகாஷபா மாலையில் இடம் பெற்றுள்ள அவர்தம் சொல்லாட்சியைப் பார்ப்போம்.

அருமையான சொல்லாட்சி முகாஷபா மாலையில் இடம் பெற்றுள்ளமையைக் காணலாம். குலாம் காதிறு நாவலர் பயன்படுத்தி உள்ள அத்தகைய சில சொற்களை எடுத்துக்கொள்வோம். அளறு என்பது அத்தகைய சொற்களுள் ஒன்று. அளறு என்றால் நரகம் என்ப பொருள். இதே கருத்தில் திருக்குறளில் இச்சொல் 'பூரியர்கள்

ஆழும் அளறு' (919) என்னும் தொடரில் ஆளப்பட்டுள்ளதைக் காணலாம். நாகூர் சாகுல் கமீது ஆண்டகை அவர்களின் விண்ணேற்றப் பயணத்தின்போது அவர்கள் நரகினைக் காணச் சென்றதனை 'பொக்கிடம் பொர விரித்துறுமீ அளறு புக்கினார் (நபிமார் தரிசனப் படலம் : 15) என வருணித்துள்ளார் ஆசிரியர்.

எண்மை என்பது சுலபம். 'எண்மைக் காலத்து' என அதே பொருளில் எண்மை என்னும் சொல் தொல்காப்பியத்தில் (பொருளதிகாரம் 150) வந்துள்ளது. ஆண்டகையின் விண்ணேற்றத்தின் போது எல்லா விவரங்களையும் சுலபமாக அறிந்து கொள்ள இறைவன் ஆண்டகைக்கு அருளினான். (காட்சிப்படலம் : 5).

காசு என்றால் குற்றம். காசில் என்றால் குற்றமற்ற. 'காசறு விரையே' என்கின்றது சிலப்பதிகாரம். (2 : 74). குற்றமற்ற என்னும் பொருளில் 'காசையில்' என ஆசிரியர் இங்கு குறிப்பிட்டுள்ளார். 'காசையில் சைகுவைசுல் கர்னிமா தவத்தின் மூத்தார்'. (ஒலிமார் தரிசனப்படலம் ; 9).

பணிவு என்னும் கருத்தில் கீழ்மை என்னும் சொல்லை சாதாரணமாகப் பயன்படுத்துவது வழக்காறாகும். ஆனால் குலாம் காதிறு நாவலர் அவர்கள் கீழ்மை என்னும் சொல்லினை இரண்டாகக் கீழ்+மை எனப்பிரித்து பின்பு வீரசோழியத்தில் குறிப்பிடப்பட்டுள்ள புணர்ச்சி விதிக்கு இணங்க அவ்விரண்டையும் கீண்மைஎனப் புணர்த்தி 'கீண்மையின் குழுக்களாகக் கெழுமுறத் தரிசித்தாரால்' எனப் பயன் படுத்தி உள்ளார். (ஒலிமார் தரிசனப்படலம் : 18).

கேழ் என்பது பிரகாசமான நிறத்தைக் குறிக்கும். புறநானூற்றிலே, 'ஒண்கேழ் நூற்றித ழலரின்' என (17) வந்துள்ளது. பிரகாசமான நிறத்தையுடையவர்கள் என்னும் பொருளில் கேழினர் என்னும் சொல்லை 'விரவப்படு மேனியர் பன்மணியா, விரவப்படு நீநிபெறு கேழினாரே' என (சுவர்க்கப் படலம் : 16) இவ்வாறு பயன்படுத்தி உள்ளார் குலாம் காதிறு நாவலர் அவர்கள்.

சஞ்சகர் என்பது திரிபவர் என்னும் பொருளில் வந்துள்ளது. பேயாகத் திரிந்தவர்கள் என்பதனைக் குறிப்பிட ஆசிரியர் 'பேய்ச் சஞ்சகர் கொள்ளும் யாதனையு நோக்கினார்' என (நரகப்படலம் ; 14) ஆசிரியர் இங்கு குறிப்பிட்டுள்ளார். கண் இமைப்பொழுதில் என்னும் பொருளில் துளங்குழி என்னும் சொற் பிரயோகம் ஒரு பாடலில் 'சொன்னவ ரிறந்தொரு துளங்குழி விழித்தார்' என (குத்பு நாயகர் தரிசனப் படலம் : 1) என வந்துள்ளது.

துளும்புதல் என்ருல் அசைதல். 'வம்பிற் றுளும்புமுலை வாணெடுங்கண் மடவார்'என அசைதல் என்னும் பொருளில் துளும்புதல் என்னும் சொல் சீவக சிந்தாமணியில் (1867) வந்துள்ளது. இதே சொல்லை அசையாது என்னும் பொருளில் துளும்பா என குலாம் காதிறு நாவலர் 'துய்ய நாயகர் அந்நிலை நின்றனர் துளும்பா' என (அண்டரண்டப் பிரவேசப் படலம் : 20) ஆண்டுள்ளார். ஆரப்பருகுதல் என்னும் பொருளில் நுங்குதல் என்னும் சொல் பயன்படுத்தப்படுகிறது. 'விட நுங்கிய கண்ணுடையார்' என கம்ப இராமாயணத்தில் (ஆரண்ய காண்டம் : சூர்ப்பனகை சூழ்ச்சிப் படலம் : 144) வந்துள்ளமை காண்க. இதே கருத்தில் இச்சொல் 'நூறுபத்தெனுங் கதிர்கெழு ஞாயிறு நுங்கி' என (அண்டரண்டப் பிரவேசப் படலம் : 14) ஆசிரியர் ஆண்டுள்ளார்.

குழுவினர் என்னும் கருத்தில் பாதினர் என்னும் சொல் முகாஷபா மாலையில் பயன்படுத்தப்பட்டிருப்பதைக் காணலாம். தலைவர் என்னும் பொருளில் வரும் செய்கு என்பதின் பன்மையே மஷாயிக் என்பது. 'ஓதின ரிருந்தார் மேலாம் ஒலிகளும் மஷாயிகென்னும்', 'பாதினர்' என இச் சொல்லை குலாம் காதிறு நாவலர் பயன்படுத்தி உள்ளார். (வரலாற்றுப் படலம் : 30)

சோறு அல்லது பாற்சோறு என்பது பாளிதம் எனப்படும். சுவர்க் கத்தில் உள்ள உணவு வகைகளை வருணிக்க வந்த ஆசிரியர் 'நறை பரவத் தரும் பாளிதம்' என (சுவர்க்கப் படலம் : 16) சோற்றினைக் குறிப்பிட்டுள்ளார்,

முகிழ்த்தல் என்னும் சொல் அரும்புதல் அல்லது தோன்றுதல் எனப் பொருள்படும். ஐங்குறு நூற்றில் தோன்றுதல் என்னும் பொருளில் முகிழ்த்தல் என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. 'மூவகை யுலகு முகிழ்த்தன முறையே' என்கின்றது ஐங்குறு நூறு. (கடவுள் வாழ்த்து), குலாம் காதிறு நாவலர் முகிழ்த்தல் என்னும் சொல்லைக் கண்விழித்தல் என்னும் பொருளில் 'முகவழி முகிழ்த்துமே முகிழ்ப் புறாதொளிர், அகவிழி பளீரெனத் திறப்பினாயதே' (திறவுண்ட படலம் : 14) எனப் பயன்படுத்தி உள்ளார்.

அருமையாக உபயோகிக்கப்பட்டுள்ள மற்ருெரு சொல் யாதனை என்பது. யாதனை என்பது வேதனை என்னும் பொருளில் பயன் படுத்தப்பட்டுள்ளது. 'தாயுமான சுவாமிகளும் 'அடைந்தடைந் திங்கி யாதனை யாலழிந்த தல்லார்' என யாதனை என்னும் சொல்லை அதே பொருளில் உபயோகித்துள்ளார். நரகத்தில் செய்யப்படும் வேதனைகளைக் குறிக்கவே குலாம் காதிறு நாவலர் யாதனை என்னும் சொல்லைப் பயன்படுத்தி உள்ளார்.

மீறு செந்தழ லுருக்கொடு யாதனை விதத்தி
னூறு செய்குமென் றெங்கணும்புல்கலி னுலவும்.
(நரகப் படலம் : 5)

அரியவா யெழும் யாதனை யுள்ளவாய் வதியும்
(நரகப் படலம் : 7)

காணிடந் தொறுங் காரிருள் புகையொடு கலந்து
கோணி லைபெறுந் தீயவா நாற்றமுங் குலவிப்
பூணிடந் தொடர் யாதனை அளவறப் பொலிந்து
(நரகப் படலம் : 8)

இன்னவு மினையவு மிருக்கும் யாதனை
யென்னவுங் கண்டுநம் மிறைவர் கோட்படு
மன்னவர் பிழைபொறுக் கென்ன வாள்பவன்
தன்னவ னருளினை யிரந்து சாற்றினார்.
(நரகப் படலம் : 21)

**இவ்வாறு பல அருமையான சொற்பிரயோகத்தைப் பயன்படுத்தித் தாம் கூறக் கருதியவற்றைப் பொருட்செறிவுடன் விளக்குவதில் வெற்றி பெற்றுள்ளார் முகாஷபா மாலை ஆசிரியர் குலாம் காதிறு நாவலர் அவர்கள்.**

# மூசா நபி புராணம்

நான்கு படலங்களே உள்ள ஒரு நூல் மூசா நபி புராணம். கடவுள் வாழ்த்துப் படலம், நாட்டுப் படலம், நகரப் படலம், மூசா நபி அலை கிஸ்ஸலாம் தூரிசினாவில் வசனித்த படலம் என்பனவே நான்கு படலங்களுமாகும். கடவுள் வாழ்த்துப் படலத்தில் இருபத் திரண்டு செய்யுட்களும் நாட்டுப் படலத்தில் ஐந்து செய்யுட்களும் நகரப் படலத்தில் ஐந்து செய்யுட்களும் இடம்பெற்றுள்ளன. நானூற்றெட்டுத் திருவிருத்தங்களைக் கொண்டுள்ளது இறுதிப் படலம். இந்நூலைப் பாடக் கோரிய முகம்மது அப்துல் காதிர் என்னும் காதிர் மரைக்காயர் பேரில் ஒன்பது விருத்தங்களும், அச்சிடப் பொருளுதவி புரிந்த ஆசிரி யரின் பேரர் றகுமான் சாயபு மரைக்காயர் பேரில் ஒன்பது விருத்தங் களும் பாடப்பெற்றுள்ளன. இந் நூலில் மொத்தம் நானூற்றி நாற்பது திருவிருத்தங்களும் மேலதிகமாக பதினெட்டுத் திருவிருத்தங்களும் இடம் பெற்றுள்ளன.

ஏனைய காப்பியப் புலவர்களைப் போன்றே கடவுள் வாழ்த்தை அமைத்த ஆசிரியர் நாட்டுப் படலத்திலே பொதுவாக நாட்டைப் பற்றியே பாடி உள்ளார். நகரப் படலத்திலோ வெனிற் மிசுறு நாட்டைப் பாடி உள்ளார். மிசுறு நாடென்பது தற்போது வழங்கும் எகிப்து நாட்டையேயாம். நகரப்படலத்தில் மிசுறு நன்னாடே எனக் குறிப்பிட்டுள்ளார். இக்குறிப்பு இடம்பெற்றுள்ள செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

நிலங்க ளேழுக்கும் நரர்ப்புகழ்ந் தேத்திடும் பெரிய
நலங்கொ டீவுக்கும் நாயக மிசுறுநன் னாட்டின்
பலங்கொ ளுந்திரு பல்வளஞ் சிறிதையு மெடுத்துக்
கலங்கி டாமலே கருத்துட னிசைத்திடு வாமே

(நகரப்படலம் : 1)

இதனை அடுத்த பாடலில் மிசுறு நகர் வந்துள்ளமை காண்க. அந்நகரின் மற்றொரு சிறப்பு எல்லாப் பண்டங்களையும் நல்லவர்களே விற்பனை செய்கிறார்கள். அவ்வாறு விற்று நன்மைகள் சேரும். அத்தகைய நகரைப் பார்க்கக் கண்கள் கூசிடும். இதனையே ஒரு செய்யுளின் கடைசி அடியில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர்.

நல்லவர் விற்கும் நன்மை சேரழகு நயனங்கள் கூசிடும் நகரே

(நகரப் படலம் ; 5)

இந்நூலின் ஆசிரியர் முகம்மது நூறுத்தீன் என்பவர். இவர் முகம்மது தாஹிர் லெப்பையின் புதல்வர். கூடலூரைச் சேர்ந்தவர். இவருக்குப் பொருளுதவி புரிந்தவர் றகுமான் சாயபு அவர்கள். இவர் பக்கீர் முஅல்லிம் அவர்கள் புதல்வர். மகுமூது பந்தர் என வழங்கும் பறங்கிப் பேட்டையைச் சேர்ந்தவர். இதனைப் பார்வையிட்டவர் நாகூர் தறுகா வித்துவான் புலவர் சிகாமணி வா. குலாம் காதிறு நாவலர். இந்நூல் சிதம்பரம் ஸ்ரீ குஞ்சித சரண அச்சுக் கூடத்தில் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இந்நூலுக்கு நூறுல் கலாம் என்னும் பெயரும் உண்டு: அறிவின் ஒளி என்பது அச் சொற்றொடரின் பொருளாகக் கொள்ளலாம்.

இந்நூலிலே மூசா நபி (அலை) அவர்கள் அல்லாஹ்வுடன் உரை யாடிய — வசனித்த செய்திகளே குறிப்பிடப்பட்டுள்ளன, மூசா நபி (அலை) அவர்களின் வரலாறு விரிவாகப் பேசப்படவில்லை. மூசா நபி (அலை) அவர்கள் அல்லாஹ்வுடன் வசனித்த பாங்கினையும் அவ்வாறு உரையாடிப் பெற்ற உண்மைகளையும் பயின்று பயன்படுத்துவோர் அடையும் நன்மைகள் ஒரு பாடலில் இவ்வாறு விவரிக்கப்பட்டுள்ளன.

நன்னபி மூசா நாயனோ டன்பாய் நலமுற வசனிக் குமிதனை
இன்னிலத் துள்ள வெழில்பெறு மாந்தர் இன்பமாய்ப் படித்திடு வாரேல்
முன்னவன் றகுமத் தணுகியே மேன்மை முங்குமேலாக நற்கருணை
குன்றிடா தோங்கிக் குவலய மீதில் குறைவிலா வாழ்வது நிசமே
(நான்காம் படலம் : 1)

அனசு இப்னு மாலிக்கு (றலி) அவர்கள் வழங்கியது இச்செய்தி. அவர்களுக்கு இச்செய்தியை கஃபுல் அஃபாறு என்பார் வழங்கியதாகச் சொல்லப்பட்டுள்ளது. ஒரு பாடலில் அவர்களுக்கும் அல்லாஹ்வுடைய நற்கிருபை உண்டாவதாக என அல்லாஹ்வை வேண்டி உள்ளார் ஆசிரியர். உமறு கத்தாப் (றலி) அவர்கள் இசுறாயிலின் இச்சரிதையை கஃபுல் அஃபார்—கூறும்படி கேட்டதினாலேயே அறபு மூலம் இயற்றப் பட்டது என்பதையும் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். பல ஹதீதுப் பொன் மொழிகளில் பனீஇசுறாயில்களின் விவரங்கள் தரப்பட்டுள்ளன. மூசா நபி (அலை) அவர்களுடன் அல்லாஹ் வசனித்ததன் பயனாக அந்நபிகளா ரின் உள்ளத்திலே ஏற்பட்ட தாக்கத்தை நேரடியாக அறியவேண்டி பனீஇசுறாயில் குழுவினரின் ஆடு மேய்க்க மூஸாவை இறைவன் ஏற் பாடு செய்தான். இதனையே ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்,

ஆண்டகை மூசா வோடு ஆதி பேசிடு மவ்வேளை
ஆண்டவர் கல்பி லாகு மழகுறுந் தாட்சி தன்னை
ஊண்டியே அறிய வேண்டி உறுதிசேர் பனீயிசு ராயீல்
நீண்டிடுங் குழுவி னாட்டை நெறியுடன் மேய்க்கச் செய்தான்
(நான்காம் படலம் : 7)

அல்லாஹ்வுடன் வசனிக்கச் சென்ற மூசா நபி (அலை) அவர்கள் அவன்தன் கட்டளைக் கிணங்கத் தன்னைத் தூய்மைப்படுத்திக்கொண்டு மிசுறு நாட்டுக்கு அணித்தாயுள்ள தூறுசினா என்னும் மலைக்கு வந்தார்கள். இதனையே ஓர் அடியில் புலவர்.

மகிதலம் புகழுந் தூறுசினான் மலை தனக்கே கிடவெழுந்து
(நான்காம் படலம் : 11)

எனப்பாடி உள்ளார்.

மூஸா நபி (அலை) அவர்கள் பனீ இஸ்றாயில் கூட்டத்தினருக்கு நபியாக - தீர்க்கதரிசியாக அனுப்பப்பட்டார்கள். அல்லாஹ் மூஸா நபி (அலை) அவர்களுக்குத் தௌறாத் வேதத்தை அபறானி (ஹிப்று) மொழியில் அருளினான். முகம்மது நபி (சல்) அவர்களுக்கு இறை கட்டளை கொண்டு வந்த அதே விண்ணவர் கோனே மூஸா நபி (அலை) அவர்களுக்கும் இறைகட்டளை கொண்டு வந்தார்கள். ஆனால் மூஸா நபி (அலை) காலத்தில் ஜிபுறீல் (அலை) அவர்கள் நாமூசு என வழங்கப்பட்டார்கள். மூஸா நபி (அலை) அவர்கள் சம்பந்தமாக நாமூசு (அலை) அவர்களுக்கு அல்லாஹ் அருளிய ஒரு கட்டளையை ஆசிரியர் இவ்வாறு ஒரு செய்யுளில் பாடி உள்ளார்.

நன்னபிக் கிறைவன் நாமூசைக் கூவியே
மன்னர்மூ சாவெனை மகிமை யோடுகண்
டின்னில மலர்முக மிழிந்தி றந்திடா
தன்னர் தம்மையே வணைத்துக் காருமே
(நான்காம் படலம் : 38)

பின்னர் மூசா நபி (அலை) அவர்களுக்கு முகம்மது நபி (சல்) அவர்கள் பேரில் சலவாத்து - புகழுரை ஓதுமாறு அல்லாஹ் பணித்தான். இக்கருத்தை ஆசிரியர்,

மன்னவர் ஹபீபுல் லாமேல் மகிழுடன் சலவாத் தோதாய்
(நான்காம் படலம் : 65)

என அமைத்துப் பாடி உள்ளார். 'முகம்மது யார்' என்று தமக்குத் தெரியாது என்று மூசா நபி (அலை) அவர்கள்கூற அல்லாஹ் முகம்மது என்பவரை

கான்வளர் பூமி தன்னில் கனமுறப் படையே னாகில்
(நான்காம் படலம் : 67)

உலகினையும் அதில் உள்ளவற்றையும் பிறவற்றையும் படைக்காதிருந் திருப்பேன் என அல்லாஹ் கூறினான். (நான்காம் படலம் : 67-75), இக்கூற்றினைச் செவிமடுத்த மூஸா நபி (அலை) கலிமா ஓதி அல்லாஹ்வைப் பணிந்து தொழுதார். இந்நிகழ்ச்சியே ஒரு செய்யுளில் இவ்வாறு அமைந்துள்ளது.

கலைமறை முகம்ம தென்னுங் காரண நயினார் பேரில்
மலைப்பறும் ஆசை பொங்கி மகிழ்ந்துமே கலிமா வோதி
கலைந்திடாக் கருத்துக் கொண்ட காரணத் தாலே மூசா
நிலையிலா துனியா வாளும் நாயனை வணக்கஞ் செய்தார்.
(நான்காம் படலம் : 76)

நபி பெருமானார் முகம்மது (சல்) அவர்கள் மீது ஈமான் நம்பிக்கை வைத்த நல்லுள்ளம் படைத்த அனைவருக்கும் சொல்லி முடிக்க இயலாத பெறு பேறுகளை வழங்குவேன் என்று அல்லாஹ் கூறினான். அத்தோடு அத்தகையோருடைய உள்ளங்களை ஒளி மயமாக்குவேன் என்றும் தொல்லைகள் எதுவுமில்லாத வாழ்க்கையை அத்தகை யோருக்கு அளிப்பேன் என்றும் மூசா நபி (அலை) அவர்களிடம் அல்லாஹ் உறுதி அளித்தான். அல்லாஹ்வின் உறுதிமொழியே ஒரு செய்யுளில் இவ்வாறு அமைந்துள்ளது.

வல்லவன் ஹபீபாய் வந்த வரிசைநேர் நபியுல் லாமேல்
நல்லொளி பிறங்கு மீமான் நன்மனத் துடையோ ருக்கு
சொல்லறா பறக்கத் தீந்து சிந்தையில் சுடருண் டாக்கி
தொல்லையொன் றில்லா வாழ்க்கைத் தருவனென் றிறைவன்
சொன்னான்
(நான்காம் படலம் : 82)

முகம்மது (சல்) அவர்களுடைய உம்மத்தோர்கள் ஒரு நன்மை செய்தால் அதற்குப் பகரமாகப் பத்து நன்மைகளை அல்லாஹ் அருளி உதவி புரிவான். அத்தகையோர் ஒரு தீமை செய்தால் அவர்களுக்கு ஒரு தீமையே பிரதி உபகாரமாகக் கிடைக்கும் என்று அல்லாஹ் கூறினான். இக்கூற்று அல்குர்ஆனிலும் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். இதனையே ஆசிரியர் இவ்வாறு பாடி உள்ளார்,

சொல்லிடும் உம்மத் தோர்கள் செய்தவோர் நன்மைக் காக
தொல்லையொன் றனுகாப் பத்து தூயநன் மையையே தந்து
அல்லலே வணுகும் பவ்வ மருமையா வொன்று செய்தால்
வல்லவ னொன்றுக் கொன்று வழுவிலா கணிப்பே னென்ருன்.

(நான்காம் படலம் : 109)

''லாயிலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுற்ற சூலுல்லாஹ்-வணக்கத் துக்குரிய நாயன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை; அல்லாஹ்வின் தூதர் முகம்மது'' என்னும் மூலமந்திரத்தை ஓது வோர்க்கு அல்லாஹ் அதிக நன்மைகளை அளிப்பான் என்று இறைவன் கூறினான். இதனையே ஆசிரியர் ஒரு செய்யுளில்

இன்னமுங் கேளும் மூசா விறை நபி யும்மத் தோர்கள்
நன்னய வாயி லாக நலமுறு மில்லல் லாகும்
சொன்னய முகம்ம துற்ற சூலுல்லாஹ் என்பாராகில்
நன்மையு மதிக மாக நாயனே தருவே னென்ருன்.

எனப் பாடி உள்ளார்.

(நான்காம் படலம் : 136)

பல பாடல்களில் மூசா நபி (அலை) அவர்கள் அல்லாஹ்விடம் கேட்ட கேள்விகளும் கேள்விகளுக்கு முறையாக அல்லாஹ் வழங்கிய விடைகளும் இடம் பெற்றுள்ளன. அல்லாஹ்வின் அடியார்களுள் மிக்க உறுதியான உள்ளங்களை உடையவர் யாரென மூசா நபி (அலை) அவர்கள் அல்லாஹ்விடம் கேட்டார்கள். அல்லாஹ்வை மிகுதியாக வணங்குவோரும் அல்லாஹ்விடமிருந்தே எல்லாவற்றையும் எதிர்பார்ப்பவருமே அத்தகைய சிறந்த அடியார் ஆவார் என அல்லாஹ் விடை பகர்ந்தான். இந்த வினாவும் விடையுமே ஒரு செய்யுளில் இவ்வாறு அமைந்துள்ளன.

உன்னடியார் தன்னில்மிக வுறுதியுடன் தீனை
நன்னயம னந்தளரா நாடுபவர் தம்மை
மன்னவனே யானறிய மவுலெனவே மூசா
என்னையே மிகவணங்கி யென்னைவழி பார்ப்போர்

(நான்காம் படலம் : 182)

அவ்வாறு மூசா நபி (அலை) அவர்கள் ஒன்றோடொன்று தொடர் புடைய பல கேள்விகளைக் கேட்க ஒவ்வொன்றுக்கும் உரிய பதிலை அல்லாஹ்அருளினான். மற்றொரு வினாவையும் விடையையும் பார்ப் போம்.வீட்டிலே தங்கும் அன்னியர்களுக்கு ஆசையுடன் சங்கை செய்யும்

மனிதர்களுக்கு என்ன கூலி கொடுப்பாய் என்று மூசா நபி (அலை) அவர்கள் அல்லாஹ்விடம் கேட்டார்கள். அதற்கு அல்லாஹ் இவ்வாறு விடை பகர்ந்தான்.

'நன்னபிமார்களுடன் அத்தகையோரை சிறாத்துல் முஸ்தக்கீம் பாலத்தைக் கடக்கச் செய்வேன்' இறுதி நியாயத் தீர்ப்பு நாளில் மக்கள் நடந்து செல்ல வேண்டிய நேரான பாலம் சிறாத்துல் முஸ்தக்கீம் என வழங்கப்படுகிறது. இதனைச் சுட்டவே ஆசிரியர் நெடும்பாலம் என்னும் சொற்றொடரைப் பயன்படுத்தி உள்ளார். மயிரிழை போன்று உள்ளது இந்த சிறாத்துல் முஸ்தக்கீம் பாலம் என்பது ஈண்டு குறிப்பிடத் தக்கது. இந்த வினாவையும் விடையையுமே ஆசிரியர் ஒரு செய்யுளில் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்.

அன்னிய வகத்து ளோர்க்கு ஆசையாய்ச் சங்கை செய்யும்
உன்னித மனுவோர்க் கென்ன வுறுபலன் சொல்வா யென்னா
இன்னில மதனில் மூசா இறையவன் தன்னைக் கேட்க
நன்னபி மார்க ளோடே நெடும்பாலம் கடக்கச் செய்வேன்

(நான்காம் படலம் : 228)

மக்கள் ஈடுபடும் தீய கருமங்களைக் குறிப்பிட்டு அல்லாஹ்விடம் கேட்க அவற்றிற்குரிய தண்டனைகளை விவரமாக அல்லாஹ் விளக்கினான் என்பதைப் பல பாடல்களில் நூறுத்தீன் புலவர் தமது மூசா நபி புராணத்தில் விளக்கி உள்ளார். படைப்புகள் பலவற்றைப் படைத்தமை பற்றி அல்லாஹ் தனது தூதரான மூசா நபி(அலை) அவர்களுக்கு விளக்கினான். ஒவ்வொன்றுக்குமான காரணத்தையும் சுட்டிக் காட்டினான். இவற்றையெல்லாம் கேட்டு விடைகளைப் பெற்ற மூசா நபி (அலை) அவர்கள் தமது உள்ளத்திலே அல்லாஹ் கூறிய அனைத்தையும் நன்கு உணர்ந்ததாகக் கூறினார்கள். மூசா நபி (அலை) அவர்களைப் பின்பற்றும் கவுமுகளுள் ஒருவன் அவன் என்றும் அக்கவுமுகளான பலர் மார்க்கத்தைத் துறந்து குபிரில் - அஞ்ஞானத்தில் மூழ்கி கிடைக்க இருந்த பலன் அனைத்தையும் இழந்து விட்டனர் என்றும் சாமிர் என்பவன் ஒரு மாட்டைச் செய்தான் என்றும் அந்தச் சாமிரால் அவன் செய்த மாட்டுக்கு உயிர் கொடுக்க முடியவில்லை என்றும் குறிப்பிட்டான். அந்த மாட்டுக்கு உயிர் கொடுத்தவன் அல்லாஹ் என்றே கூறினன். மாட்டைச் செய்தமை பற்றிய அல்லாஹ்வின் கூற்று இவ்வாறு ஒரு பாடலில் அமைந்துள்ளது.

நல்பனீ யிசுறா யீலின் நாயக மூசா கேளாய்
தொல்லைக ளில்லா வுந்தன் தூய்மைசேர் கவுமு தன்னில்
பல்லர்கள் குபிரி லாகி பலனழிந் திட்டார் சாமிர்
புல்லினா மரசன் றானும் பூவிலோர் ரிடபஞ் செய்தான்
(நான்காம் படலம் : 363)

மலாயிக்கத்து மார் என்னும் இறை ஏவலர்களைப் பற்றியும் மூசா நபி (அலை) அவர்கள் கேட்க அல்லாஹ் பதிலளித்த விதமும் மூசா நபி புராணத்தில் இடம் பெற்றுள்ளது. இறுதியாக மூசா நபி (அலை) அவர்கள் தம்மையும் முகம்மது நபி (சல்) அவர்களின் நல்ல உம்மத் தோர்களில் ஒருவராக ஆக்கி விடுவாய் என்று இறைவனைப் பிரார்த் தித்தார்கள்: சிரந் தரை தொட சுஜூது செய்து அல்லாஹ்வை வேண்டினார்கள். இந்நிகழ்ச்சியையே நூறுத்தீன் புலவர் ஒரு செய் யுளில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

இந்த நல்வசனந் தன்னை இன்பமாய்க் கேட்ட போது
சிந்தையுள் களிப்புற் றோங்கி சுஜூதுமே மிகுதி செய்து
அந்தநல் லும்மத் தோரில் அடியனை யாக்கு வென்று
சொந்தமாய்க் கேட்டார் மூசா சுக்குறுடன் இறைவன் தன்னை
(நான்காம் படலம் : 407)

அல்லாஹ் தன் அடியனான மூசா நபி (அலை) அவர்களின் வேண்டுகோளை ஏற்றான். எல்லோரையும் அந்த உம்மத்தில் சேர்ப் பாயாக என்று ஆசிரியரும் பிரார்த்தித்துள்ளார். இக்கருத்துக்களே ஒரு செய்யுளில் இவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளன.

அந்தவா றுமக்குத் தானே அருளினேன் என்றா னாதி
சிந்தையில் இரக்க மீறி செப்பினான் மூசா வுக்கே
இந்தநற் கிருபை போல இன்பமாய் கொடுத்தெல் லோரை
முந்தர் நபிவும் மத்தில் சுகமுட னாக்கு ஆமீன்
(நான்காம் படலம் : 408)

தாத்திரி என்னும் சொல்லைப் பல தடவை ஆண்டுள்ளார்ஆசிரியர். தமது மூசா நபி புராணத்தில். தாத்திரி என்றால் பூமி என்கின்றது பிங்கலந்தை நிகண்டு. தாத்திரி என்னும் சொல்லைப் பூமி என்னும் பொருளில் நூறுத்தீன் புலவர் இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்.

விசும்பினி லுறைந்த முகிற்கண மெவையும்
விரிதிரைப் புனலையுண் டெழுந்து
திசைதிசைப் பரவி மின்னியே குமுறித்
தாத்திரி தனில் மழைச் சிதறப்
பசைபயிர் குலங்கள் வளர்தரப் பொழிலும்
பச்செனச் செழித்து மென்மலர்கள்
நசையிலாப் பூத்து நற்செங்காய்ப் பழங்கள்
நயமுடன் மலிந்திடும் நாடே

(நாட்டுப் படலம் : 1)

அகில உலகம் என்னும் பொருளில் தாத்திரி என்னும் சொல்லை ஆசிரியர் பயன்படுத்தி உள்ளார். அகில உலகத்தையும் ஆளும் அல்லாஹ் என்று பொருள்பட இவ்வாறு ஒரு பாடலின் முதலடியில் தாத்திரி என்னும் சொல்லும் பயன்படுத்தப்பட்டிருப்பதைக் காணலாம்.

தாத்திரி தனையாளுந் தற்பர னுனக்கு

(நான்காம் படலம் : 195)

குழந்தை தாயின் வயிற்றில் தங்கி இருந்து வெளியே உலகினில் பிறப்பதைக் கூறவந்த ஆசிரியர் உலகு என்பதனைக் குறிக்கத் தாத்திரி என்னும் சொல்லை இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்.

தாயகடில் தங்கிவெளி தாத்திரி பிறந்த
நேயமுறும் பிள்ளை... ..

(நான்காம் படலம் : 235)

பூமியில் என்னும் பொருளில் தாத்திரி என்னும் சொல் பிறிதொரு செய்யுளிலும் இவ்வாறு ஆளப்பட்டுள்ளது. இச் செய்யுளில் மகன் என்னும் சொல்லின் பன்மையாக மகர் என்னும் சொல் பயன்படுத்தப் பட்டுள்ளமையைக் காணலாம்.

தன்மனைவி தன்மகரைத் தாத்திரியில் வீணாய்

(நான்காம் படலம் ; 274)

துரிசு என்பது குற்றம், குறை எனப் பொருள்படும், குற்றம் என்னும் பொருளில் துரிசு என்னும் சொல்

தொண்டனேன் செய்த துரிசுகள் பொறுக்கும் (549 : 8)

என்று தேவாரத்தில் வந்துள்ளது. நூறுத்தீன் புலவரும் தமது மூசா நபி புராணத்தில் குறை என்னும் பொருளில் துரிசு என்னும் சொல்லை இவ்வாறு ஒரு செய்யுளில் ஆண்டுள்ளார்

துரிசுறா வறுசு நீளந் தனையுமே சாற்று கென்ன

(நான்காம் படலம் : 382)

இங்ஙனம் இந்நூலின் சிறப்பியல்புகளைப் பலவாறாகக் கூறலாம்.

# ஷாதுலி நாயகம்

ஆன்மீக வழி எனப் பொருள்படும் தறீகாக்கள் பல உள. காதிறிய்யாத் தறீக்கா என்னும் ஆன்மீக வழி எவ்வாறு முகிய்யித்தீன் அப்துல் காதிறு ஜீலானி (றலி) அவர்களால் ஆரம்பிக்கப்பட்டதோ அவ்வாறே சாதுலியாத் தறீக்கா என்னும் ஆன்மீக வழி மவுலானா அஸ்ஸெய்யிது அபுல் ஹசன் அலிய்யுஷ் ஷாதுலிய்யி என்பவரால் பரப்பப்பட்டது. சாதுலி (றலி) அவர்களால் பரப்பப்பட்டது என்பத னாலேயே அந்த ஆன்மீக வழி ஷாதுலிய்யாத் தறீக்கா என அழைக்கப் பட்டது. மேற்கு என்பது மகுறிப் எனப்படும். மேற்கே உள்ள நாடுகள் மகுறிபு தேசம் எனப்படும். அத்தகைய மகுறிபு தேயத்திலே கிமாறத்து என்னும் நகரைச் சேர்ந்தவர்கள் சாதுலி நாயகம் என்னும் காப்பியத்தின் பாட்டுடைத் தலைவர். இந்நூலினை சாதுலி நாயகம் என்னும் புராண காவியம் என ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

சாதுலி நாயகம் உற்பவ காண்டம், அற்புத காண்டம் என இரு காண்டங்களையும் இருபது படலங்களையும் கொண்டது. உற்பவ காண்டத்தில் எட்டுப் படலங்களும் அற்புத காண்டத்தில் பன்னிரண்டு படலங்களும் இடம்பெற்றுள்ளன. வண்ணங்கள், சித்திர கவிகள், முனாஜாத்துப் பாடல் பதிகம் என்பவற்றைக் கொண்ட நவரத்தின புஞ்சமும் சாதுலி நாயகத்தின் இறுதியில் இடம்பெற்றுள்ளது. யாழ்ப் பாணம் செய்கு சு. முகம்மது அசனாலெப்பை ஆலிம் புலவர், குத்பு நாயக வநுசாதன புராண முதலிய பிரபந்தங்களை இயற்றிய யாழ்ப் பாணம் சுலைமான் லெப்பைப் புலவர், கீழக்கரை செ. மு செய்யிது முகம்மது ஆலிம், அருள்வாக்கி அப்துல் காதிறுப் புலவர், அதிவீரராம பட்டினம் முகியித்தீன் பக்கீர் புலவர், வண்ணைநகர் க. வைத்திய லிங்கம் பிள்ளை போன்றோர் இயற்றிய சாற்றுகவிகள் சாதுலி நாயகத் தினை அலங்கரித்துக் கொண்டிருக்கின்றன. காப்புச் செய்யுள் உட்பட முதலாங் காண்டமான உற்பவ காண்டத்தில் நூற்றியறுபத்து நான்கு செய்யுட்களும் இரண்டாம் காண்டமான அற்புத காண்டத்தில் முன்னூற் றொரு செய்யுட்களுமாக மொத்தம் நானூற்றியறுபத்தைந்து செய்யுட் களைக் கொண்டது சாதுலி நாயகம். கடவுள் வாழ்த்துப் படலத்துடன் பாயிரம் என்னும் பகுதியும் இங்கு இடம்பெற்றுள்ளது. அபுல்ஹஸன் அலியுஷ் ஷாதுலி (றலி) அவர்களின் பிறப்பகமான கிமாறத்து நகர் நாட்டுப்படலத்திலும் நகரப் படலத்திலும் வருணிக்கப்பட்டுள்ளது.

கடவுள் வாழ்த்துப்படலப் பாடல்கள் ஏனைய காப்பியங்களைப் போன்றல்லாமல் எல்லாம் வாழ்த்துப் பாக்களாகவே அமைந்துள்ளன. மற்றக் காப்பியங்களில் நூல், நூலாசிரியர் பற்றிய விவரங்களும் அவை யடக்கம் முதலியனவும் பாயிரத்தில் இடம்பெற்றுள்ளன. காயல்பட்டி

ணத்தைச் சேர்ந்த நூகு லெப்பை ஆலிம் அவர்கள் இயற்றிய ''நபஹாத்துல் அன்பர்'' என்னும் அறபுக் கிரந்தத்திலுள்ள சில விவரங்களை சாதுலி நாயகத்தில் இடம்பெறச் செய்தார் - ஆசிரியர் என்றும் பாயிரம் கூறுகிறது.

இரண்டு விதமாகப் பாயிரத்தில் அவையடக்கம் கூறியுள்ளார் அதன் ஆசிரியர். அறிஞர் முன்னிலையில் தாம் இருப்பது பிரகாசம் பொருந்திய நவமணிகளின் முன்பே உள்ள செயற்கை மணியான படிகம் போன்றது என்பதை இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

உய்வகை விளக்கு மென்னூ லுயர்நவ மணிக ணேரில்
செய்வகைப் படிகமப்போர் திகழ்க தொத்துள தாமன்னே
(பாயிரம் : 4)

மற்றொரு பாடலில் அரசர்கள் வாழும் அருமையான பசும்பொன்னாலான மாளிகையின் முன்பில் ஓர் அறிவும் இல்லாத சிறுவன் ஒருவன் கட்டிய சிறுவீடு போன்றது பெரும் புலவர்கள் முன்னிலையில் தாம் பாடப்போந்த இச்சிறிய நூல் எனக் குறிப்பிட்டுள்ளார்.

பாரறி யரையர் வைகும் பைம்பொன்மா ளிகையின் முன்பின்
ஓரறி யஞ்சி றாரு முஞற்றுசிற் றில்போன் மன்றே
(பாயிரம் : 5)

இந்நூலினை அச்சியற்றுவதற்கு உதவியவர் முகம்மது முகியித்தீன் என்பவர். அவரின் பொருளுதவியினால் இந்நூல் அச்சியற்றப்பட்டது எனக் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். அவர் இலங்கையில் வருத்தகம் புரிந்து பொருளீட்டிபவர். அவருடைய தகப்பனார் மகுமுது நயினார். அவருடைய தகப்பனாரின் உடன்பிறந்தவர் செய்யது அகுமது மன்னான். அவர்களிருவரும் காயல்பட்டணத்தைச் சேர்த்த ஹபீபு முகம்மது லப்பை என்பவரின் புதல்வர்கள். இதனையே ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

கார்செறிந்த பொழில்சூழுங் காயல் வாழும்
கபீபுமுகம் மதுலப்பை தவத்தில் தோன்றி
பேர்செறிந்த விலங்கைவருத் தகத்தில் மிக்க
பிரபலஞ்சேர் செய்யிதகு மதுமன் னான்றம்
மூர்செறிந்த மாமுநயி னான்செய் பேற்றால்
உதவுமுகம்ம்து மதுமுகியித் தீனுமீந்த
சீர்செறிந்த விருநிதியின் சகாயந் தன்னால்
திருவரங்கச் சியற்றியிந்நூல் திகழ்ந்த தம்மா
(பாயிரம் : 8)

அபுல்ஹஸன் அலியுஷ் ஷாதுலி நாயகம் அவர்களின் வாழ்க்கையைக் கூறும் இந்நூலில் உள்ள பிழைகளைத் திருத்தி உதவி செய்தவர் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்தவர். சுலையுமான் லப்பை என்னும் பெயரை உடையவர். பன்னூலாசிரியர். இருமையும் நற்பலன் பெற்று வாழ்க என சுலையுமான் அவர்கள் இவ்வாறு ஒரு செய்யுளில் வாழ்த்தப்பட்டுள்ளார்.

தொழுதகை நயினார் அபுல்ஹஸன் அலியின்
தொல்பெருங் காரண நூலை
வழுவறத் திருத்தி வரன்முறை யொழுங்கில்
வையகம் விளங்குவான் புரிந்த
செழுமலர்த் தடயாழ்ப் பாணநன் னகர்வாழ்
தெருளுயர் சுலையுமான் லப்பை
எழுமியற் பயனி னிறையருள் பெருகி
இருமையும் வாழிய மாதோ

(பாயிரம் : (10)

மற்றொரு பாடலில் ஆசிரியர் தமது பெயர் முகம்மது முகியித்தீன் என்றும் தமது தந்தையின் பெயர் அகுமது முகியித்தீன் என்றும் தாம் காயல் மாநகரில் வாழ்பவர் என்றும் ஒரு செய்யுளில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

முதுநபி ஹிஜ்றத் தாயிரத் தொடுமுந்
நூற்றிரு பதிற்றொன்பா னாண்டி
னதிவித நவஞ்சே ரபுல்ஹசன் அலியெம்
மாண்டகை யரும்புக ழுறைந்தேன்
பதியினிற் சிறந்த காயல்மா நகர்வாழ்
பண்பகு மதுமுகி யித்தீன்
திருதரப் பயந்த முகமது முகியித்
தீனெனுஞ் சிறுசுத னன்றே

(பாயிரம் : 11)

அபுல்ஹஸன் சாதுலி நாயகமவர்கள் பிறந்த மாதம் ஹிஜ்றி 593 சவ்வால் மாதம் என்று ஒருசெய்யுளில் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். இது கி.பி. 1196 ஆகஸ்ட் மாதம் என்பதாகும். கிமாறத் என்னும் நகரில் பிறந்தார் என்றும் ஒரு பாடலில் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

ஆதிதன் னொளியி ன்மைந்துல கெழுந்த அகுமது
முகம்மது நயினார்
நீதியிற் பிறந்த மக்கநீத் தெழுந்த நிகழ்ஹிஜ் றத்துறு வருடம்
ஏதமில் ஐந்து நூற்றுத்தொண் ணூற்றோ டியைந்தமுன்
றினில்சவ்வால் மதியில்
ஆதரந் திகழ்கி மாறத் தென்னகரில் அபுல்ஹஸ னலிபிறந் தனரே
(அவதாரப் படலம் : 22)

மெய்ப்பொருள் நான்கினையும் அளிக்க வல்லவர் சாதுலி நாயகம் அவர்கள் என்பது

அறம் பொரு ளின்பவீ டளிக்கும் சாதுலி
(மேனவப் படலம் : 24)

என்றும் உலகங்கள் அனைத்தையும் காப்பவர் அலியுஷ் சாதுலி (றலி) அவர்கள் என்பது

கடல்புவி யுலகெலாங் காக்குஞ் சாதுலி
(மேனவப் படலம் : 26)

என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. அபுல் ஹஸன் சாதுலி (றலி) அவர்களின் பெருமை ஒரு பாடலில் இவ்வாறு புகழப்பட்டுள்ளது.

குத்துபு களக்பர் கோமா னொலிகளிற் சீமான் குணப்பூமான்
நத்துநற் றவமே நயம்வளர்த் துறுநன் னிதிகலை மகடுன்னிப்
பத்திகொ ளத்தல நனிசிறந் தோங்கின பாங்குயர் மறையாளர்
கத்தன தருள்பெற் றுறுமபுல் ஹஸனலி கருதிய தகைபாலார்
(குமைதர் தறுகாப் படலம் : 12)

சூரியாஸ்தமனமும் சூரியோதம் இரண்டு அடுத்து வரும் செய்யுட்களில் வருணிக்கப்பட்டுள்ளன. ஒற்றைச் சில்லினைக் கொண்ட தேரினை உருட்டிக்கொண்டு சூரியன் மேற்கடலில் குதித்தான் என்பதை

தீட்டிய கதிரோன் ஒற்றைச் சில்லியந் தேரினோடு
மீட்டியல் விழைவினோடு மேற்கடல் குதித்திட் டானால்
(செய்குமார்களிடர் நீக்கிய படலம் ; 6)

என்றும் சூரியன் பல்லாயிரம் கிரணங்களைப் பரப்புமுகமாக கிழக்குத் திசையிலே தோன்றினான் என்பதை

ஆயிரங் கிரணச் சோதி அலர்த்துப் பரிதி வெய்யோன்
காய்கதிர் பரப்பிக் கீழ்பாற் றோன்றினன் கடிதி னன்றே
(செய்குமார்களிடர் நீக்கிய படலம் 7 )

என்றும் ஆசிரியர் வருணித்துள்ளார். மற்றொரு சந்தர்ப்பத்தில் சூரியன் மேற்கடலிலே மறைந்தான் என்பது

வன்றிறத்து வழிகடந் தேகுங்கான்
மின்றருஞ் சுடர் மேற்கடல் ஓடினுன்.
(கள்வர் வழிகொள் படலம் : 13)

என வருணிக்கப்பட்டுள்ளது. இரவு முழுதும் ஏற்பட்ட தொல்லைகளி னின்றும் வெற்றி காட்டும் முகமாக சூரியன் உதித்தான் என்பது தற்குறிப்பேற்றவணி தொனிக்க,

அன்றிரா முழுதும் அலைந்து ஒல்கலின்
வென்றி காட்ட வெளுத்த குணக்கரோ
(கள்வர் வழிகொள் படலம் : 22)

என்றும் சாதுலி நாயகம் அவர்களுக்குப் புதுத் தெம்பினையூட்டும் முகமாக சூரியன் கீழ்த்திசை தோன்றினான் என்பது அதே அணி அமைய

நங்க ணாயகர் சாதுலி நாண்மலர்ப்
பொங்க கத்துட் புதுநல மெய்தலென்
றிங்கி வர்க்குணர் வூட்டு மியானெனத்
துங்க ஞாயிறு கீட்டிசை தோற்றினான்
(கள்வர் வழிகொள் படலம் : 23)

என்றும் விவரிக்கப்பட்டுள்ளது.

இனி, சாதுலி நாயகம் என்னும் கிரந்தத்தில் ஆசிரியரின் சொல் லாட்சியைப் பார்ப்போம். ஆஞ்ஞை என்பது கட்டளை. இச் சொல்லை ஆசிரியர்

அன்னவற் குறுத்து நுந்த மாஞ்ஞைஇன் னனவென் றெற்கு
(கச்சு யாத்திரைப் படலம் : 16)

எனப் பயன் படுத்தி உள்ளார்.

தோழியரைக் குறிக்கும் இகுளையர் என்னும் சொல்லே ஆசிரியர் இங்ஙனம் ஆண்டுள்ளார்.

திருமயி லனைய விகுளைய ரெவருஞ்
சேயிழை மாதர்மற் றெவரும்

(அவதாரப் படலம் : 18)

தோழியரைக் குறிக்க இகுளையர் என்னும் சொல் தொல்காப்பியச் சொல்லதிகார (400) உரையில் வந்துள்ளது.

இரணியம் என்பது பொன்னைக் குறிக்கும். இந்த இரணியம் என்னுஞ் சொல்,

இல்லவ ளிறந்த தோடு மிரணிய மெவையுந் தீவாய்

(தெரிநிலை விளக்கிய படலம் : 41)

இறும்பு என்றால் குறுங்காடு, பதிற்றுப்பத்து என்னும் நூலில்,

வில்பயி லிறும்பிற் றகடுர் நாறி (78 : 9)

என இச்சொல் வந்துள்ளது. இச்சொல்லை அதே கருத்தில் சாதுலி நாயக ஆசிரியர்,

இன்றிறும் பிகந்து பூவி னிழிகுதி ரும்பால் யாமே

(தூனிசு புக்க படலம் : 9)

எனப் பயன்படுத்தி உள்ளார்.

கீழ்+திசைஎன்பது கீட்டிசை எனப் புணர்ந்துள்ளது. வீரசோழியத் திலே இதற்கான விதியைக் காணலாம். முகியத்தீன் லப்பைப் புலவர் தமது சாதுலி நாயகத்தில் கீழ்+திசை என்பதை கீட்டிசை எனப் புணர்த்திப் பயன்படுத்தி உள்ளார்.

துங்க ஞாயிறு கீட்டிசை தோற்றினான்

(கள்வர் வழிகொள் படலம் : 23)

எனக் கீட்டிசை என்பது வந்திருப்பதைக் காணலாம்.

சோடச என்பது பதினாறைக் குறிக்கும். ஆசிரியரும் இச் சொற் றொடரை இதே கருத்துத் தொனிக்க

சோடசவுப சாரமெலாந் தொகுக்கும் குமைதர் தறுகாலே

(குமைதர் தறுகாப் படலம் : 24)

என ஆண்டுள்ளார்.

ஞெகிழி என்பதன் பொருள் கடைக்கொள்ளி என்பதாகும்.

விடுபொறி ஞெகிழியிற் கொடிபட மின்னி (108)

என அகநானூற்றிலே இச்சொல் இடம் பெற்றுள்ளது. இதே ஞெகிழி என்னும் சொல் இதே கருத்தில்

வெம்மையின் ஞெகிழி எங்கும் படர்ந்தகம் விளங்கி மேவும்
(தெரிநிலை விளக்கிய படலம் : 40)

என இந்நூலில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

தவக்கம் என்பது தடை. இச்சொல்

தன்னிலை திரிந்து மாழ்கித் தவக்கங்கொண்
டிணைந்து மன்னோ
(தெரிநிலை விளக்கிய படலம் : 38)

என இடம் பெற்றுள்ளது.

நொச்சியந்தலம் என்பது சிற்றூரைச் சுட்டும். ஒரு குறிப்பிட்ட சிற்றூரைக் கருத்திற்கொண்டு ஆசிரியர் நொச்சியந்தலம் என்று ஒரு செய்யுளில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்,

நொச்சி யந்தலம் விட்டுநு கர்ந்ததே
னிச்சை யோடுண்டி ரைத்தடர் வண்டினம்
(கள்வர் வழிகொள் படலம் : 10)

இங்ஙனம் பல அருமையான சொற்களை முகியித்தீன் புலவர் தமது சாதுலி நாயகத்தில் பயன்படுத்தி உள்ளமையைக் காணலாம்.

# முஸ்லிம் தமிழ் பிரபந்தங்கள்

## அறிமுகம்

தமிழ் இலக்கியத்தில் பல பிரபந்தங்கள் உண்டு என்பர். இத் தகைய பிரபந்த வகைகள் அனைத்தையும் முஸ்லிம் புலவர்கள் பயன் படுத்தி உள்ளனர். இஸ்லாமிய அடிப்படையில் தமிழ் இலக்கியம் படைத்துள்ளனர். இப் பிரபந்த வகைகளைச் சாராத, சார்ந்தவை என வகுக்க முடியாத சில பிரபந்தங்களை முஸ்லிம் புலவர் தமிழில் புகுத்தியுள்ளனர். அவற்றுள் முக்கியமானவை எனக் கருதப்படும் ஐந்து வகையான பிரபந்தங்கள் இருக்கின்றன. ஒரு பிரபந்தம் தமிழ்ப் பெயராலும் மூன்று பிரபந்தங்கள் அறபுப் பெயர்களாலும் மற்றொன்று பாரசீகப் பெயராலும் அழைக்கப்படுகின்றன. முஸ்லிம் புலவர்களால் தமிழிலக்கியத்தின் சிற்றிலக்கிய உலகிற்கு அறிமுகம் செய்விக்கப்பட்ட ஐந்து இலக்கிய வகைகளையே நாம் முஸ்லிம் தமிழ்ப் பிரபந்தங்கள் என இங்குச் சுட்டுகிறோம்.

படைப்போர் என்பது தமிழ்ச் சொற்றொடரால் அழைக்கப்படும் ஒருவகைப் பிரபந்தமாகும். முஸ்லிம்களை முஸ்லிம் அல்லாதோர் எதிர்த்துப் போராடிய நிகழ்ச்சிகளையே பெரும்பாலும் படைப்போர் பிரபந்தம் வருணிக்கின்றது. படை, போர் என்னும் இரண்டு சொற் களாலான இச்சொற்றொடர் அடிப்படையாக ஒரே பொருளையே கூறுவதாக அமைந்துள்ளது. இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய படைப்போர் பிரபந்தங்கள் இஸ்லாத்தை எதிர்த்த பகைவர் தலை வனின் பெயரைக்கொண்டே பெயர் சுட்டப்பட்டுள்ளன. இஸ்லாத்தின் ஆரம்ப காலத்தில் இஸ்லாத்தை எதிர்த்தவன் இறவுசுல்கூல் என்பவன். முஸ்லிம்களை இறவுசுல்கூல் என்பவன் எதிர்த்துப் போராடிய நிகழ்ச்சியை வருணிக்கும் காப்பியம் இறவுசுல்கூல் படைப் போர் எனப் பெயர் பெற்றுள்ளது. ஏனைய படைப்போர் நூல்களும் இவ்வாறே பெயர் பெற்றுள்ளன. இத்தகைய படைப்போர்கள் ஆங்கி லத்தில் உள்ள 'BALLAD' என்பவற்றைப் போன்றவை என்றும் குறிப் பிடுவர். தமிழில் சிற்றிலக்கிய பிரிவுகளுள் ஒன்ருகவே இத்தகு படைப்போர் இலக்கியங்களை முஸ்லிம் புலவர்கள் அறிமுகம் செய்வித் துள்ளனர்.

அறபுப் பெயரால் அழைக்கப்படும் ஏனைய மூன்று முஸ்லிம் பிரபந்தங்கள் முனாஜாத், கிஸ்ஸா, மசலா என்பவைகளாகும்,

முனாஜாத் என்னும் அறபுச் சொல்லுக்குப் பல கருத்துகள் கூறுவர். அறபு மொழியிலே தொழிற்பெயராக அமைந்துள்ளது முனாஜாத் என்னும் சொல் என்பர். 'இரகசியமாகச் சொல்லுதல்' என்பது இச் சொல்லின் பொருளாகும். 'வழிபாட்டுப் பிரார்த்தனை' என்பதையும் இச்சொல் குறிப்பிடுகின்றது. இறையருள் வேட்டல் என்பதைக் குறிக்கவும் இச்சொல் பயன்படுத்தப்படுகிறது. 'இரகசியம் பேசுதல்' என்றும் இது பொருள்படுகிறது. ஏக இறைவனான அல்லாகுத் தஆலாவை இரந்து பாடுதலையும் இச்சொல் குறிக்கின்றது. அல்லாஹ்வின் நல்லடியார்களைப் புகழ்ந்து பாடும் பாடல்களைக் கொண்ட பாடற்றொகுதியையும் முனாஜாத் என்னும் சொல் சுட்டுகின்றது, அல்லாஹ்விடத்து குறையிரக்கும்பொழுது அவனது நல்லடியார்கள் மூலம் வேண்டப்படுவதும் உண்டு. எண் வரையறுக்கப்படாத செய்யுட்களைக் கொண்டவை முனாஜாத்துப் பாடல்கள். முனாஜாத்துப் பாடல்களுக்கு வரையறை கூறும்பொழுது 'அவை பிற்கால வழக்கில் அல்லாஹுத் தஆலாவிடத்திலும் அவனது திருவருளைப் பூண்ட மகான்கள் ஒவ்வொருவரிடத்திலும் மன்றாடி வேண்டி நிற்றற் பொருளில் பாடப்படும் வரையறுக்கப்படாத தமிழ் செய்யுட்களுக்கு பக்தி சிகாமணிகளாய் விளங்கிய பெரியோர்களால் வழங்கலாயிற்று. என்று செ. மு. செய்யிது முகம்மது ஆலிம் புலவர் குறிப்பிட்டுள்ளார்.

அறபுச் சொல்லால் வழங்கப்படும் மற்றொரு வகையான பிரபந்தம் கிஸ்ஸா என அழைக்கப்படுகிறது. கிஸ்ஸா என்பது கதை எனப் பொருள்படும். கதை சொல்வதை அது குறிக்கின்றது. அறபு நாட்டு முஸ்லிம் மக்கள் கதை சொல்லக் கேட்டு மகிழ்ந்தனர். அவர்களின் ஓய்வு நேரம் கழிந்தது. அக்கதைகள் இஸ்லாம் சம்பந்தமானவையாக இருந்தன. நகைச்சுவையும் அவற்றில் அமைந்திருந்தது. மக்கள் கிஸ்ஸாக்களை விரும்பினபடியால் அவை பொது வழக்கிலே வேரூன்றிவிட்டன. தமிழ் பேசும் முஸ்லிம்களிடையேயும் இவ்வழக்கம் பரவலாகியது. கிஸ்ஸா என்பதன் பன்மை 'கஸஸு' என்பதாகும். நபிகள் பலரின் வரலாற்றைக் கூறும் நூல் 'கஸஸுல் அன்பியா' என வழங்கலாயிற்று.

மசலா என்பதும் ஓர் அரபுச் சொல். கேள்வி கேட்டல் என்பதும் அதன் பொருள். கேள்வி என்று பொருள்படும் சுஆல் என்பதின் அடியாக வந்தது இச்சொல். ஒருவர் கேள்வி கேட்க அக்கேள்விக்கு மற்றொருவர் விடை கூறுவதாக அமைவது மசலாவாகும். 'மஸ் அலா' என்பதே தமிழில் மசலா என வந்துள்ளது. புதிர், பிரச்சினை என்றும் இச் சொல் பொருள்படும், தொடக்கத்தில் முகம்மது (சல்) அவர்கள்

இஸ்லாத்தை மக்களுக்குப் போதிக்கும் பொழுது எதிரிகள் இஸ்லாத்தைப் பற்றி பல்வேறு கேள்விகள் எழுப்பலாயினர். யூதர்கள் பெருமானாரிடம் வந்து இஸ்லாத்தைப் பற்றிப் பல கேள்விகள் கேட்கலாயினர். அக்கேள்விகள் அனைத்துக்கும் திருப்திகரமான பதில் அளித்தார்கள் நபி (சல்) அவர்கள். இந்த மரபே இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்களில் மசலா என்னும் பிரபந்த வகையில் பேணப் பட்டுள்ளதைக் காணலாம். சுருங்கக் கூறின் இஸ்லாமியக் கொள்கைகளை விளக்கும் நோக்கமாக எழுந்தவையே மசலா என்னும் நூல்கள் எனக் கூறலாம். இஸ்லாமிய அறிவு வளர்ச்சிக்கும் இவை பெரிதும் பயன்பட்டன எனலாம்.

பாரசீக சொல்லால் அழைக்கப்படும் இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வடிவம் 'நாமா' என அழைக்கப்படுகிறது. 'நாமே' என்னும் பாரசீகச் சொல், தமிழில் நாமா என வந்துள்ளது. நாமா என்றால் சொல், கதை புத்தகம், வரலாறு என்னும் பொருள்களைக் கொண்டுள்ளது. பாரசீக மொழியில் தோன்றிய 'ஷாநாமா'. போன்றவை இவ்வகையான இலக்கிய வடிவங்கள் தமிழில் தோன்றியமைக்கு முன்னோடியாக அமைந்தன என்று கூறலாம். இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் கொண்டுள்ள நாமா நூற்களும் இஸ்லாமிய மத போதனைகளை விளக்கு முகமாகவே தோன்றி உள்ளன. இத்தகைய நாமா வடிவத்தில் அமைந்த நூல்கள் உருது மொழியிலும் தோன்றி உள்ளன. தமிழில் தோன்றிய நாமா வடிவத்துக்கு இவை முன்னோடியாக திகழ்ந்தன எனலாம்.

இவ்விலக்கிய வடிவங்களை நாம் ஏன் இஸ்லாமிய தமிழ் இலக்கிய வடிவங்கள் எனக் கூறுகின்றோம்? படைப்போரைத்தவிர ஏனைய புது இலக்கிய வடிவங்கள் அறபுப் பாரசீகப் பெயர்களாலேயே அழைக்கப் படுகின்றன. ஆனால் அவற்றின் அமைப்பும்நடையும் தமிழாகவே இருக்கின்றன. தமிழ் யாப்பு மரபு இங்கே பேணப்பட்டுள்ளது. இவ்விலக்கிய வடிவங்கள் கருப்பொருள் மாத்திரமே வேற்று நாட்டிலிருந்து வந்ததாகும். ஆனால் அதனைக் கூறும் பாங்கும் விவரிக்கும் முறையும் தமிழ்ப் பாணியிலே அமைந்துள்ளன, நூலமைப்புப் பெரும்பாலும் விருத்தப்பாக்களாகவே அமைந்துள்ளன. சில புதுவடிவங்கள் கண்ணிகளைக் கொண்டனவாகவும் அமைந்துள்ளன. இஸ்லாம் தோன்றிய அறபு மொழியின் யாப்பு முறையோ கவிதை மரபோ இப்புது வடிவங்களில் இடம் பெறவில்லை. அவை அழைக்கப்படும் பெயர்களைக் கொண்டே அவை புது இலக்கிய வடிவங்கள் எனக் கொண்டுள்ளோம்.

முனாஜாத்தைத் தோத்திரப்பா என்றோ கிஸ்ஸாவைக் கதை என்றோ மசலாவை வினாவிடை என்றோ நாமாவை புத்தகம் அல்லது வரலாறு என்றோ தமிழ்ப்படுத்தி எழுதப்பட்டிருந்தால் ஒருவேளை முஸ்லிம் மக்கள் அவற்னைப் போற்றிப் படித்திருக்கமாட்டார்கள் என்பதை எமது மூதாதையர் உணர்ந்திருக்கலாம். அறபுப் பாரசீகச் சொற்களைப் புகுத்தியிராவிட்டால் ஏற்கனவே இருந்த தோத்திரப் பாக்களிலிருந்தும் கதைகளிலிருந்தும் வினாவிடைகளிலிருந்தும் புத்தகங்கள் அல்லது வரலாறுகளிலிருந்தும் இஸ்லாமியத் தமிழ் நூல்கள் வேறுபட்டன என்பதை முஸ்லிம் மக்கள் உணர்ந்து படிக்கத் தவறி இருப்பார்கள் என்பதை எமது மூதாதையர் அறிந்திருக்கலாம். எனவேதான் தமிழ் யாப்புக்கு அமையக் கவிதை மரபைப் பேணிச் செந்தமிழிலே அவர்கள் இத்தகைய கவிதைகளை இயற்றி அவற்றிற்குப் புதுமையான இத்தகைய பெயர்களை இட்டிருக்கலாம். ஆக, எமது மூதாதையர் இத்தகைய நூல்களைத் தமிழில் வழங்காத பெயர்களைக் கொண்டு அழைத்தனர் எனலாம். இந்நூல்களில் தமிழ் யாப்பமைதி பேணப் பட்டிருப்பதையும், தமிழ் இலக்கண மரபுக்கு மாற்றமான சில நடைமுறைகளையும் முஸ்லிம் புலவர், இத்தகைய புது இலக்கிய வடிவங்களை இயற்றும் பொழுது, பயன்படுத்தி உள்ளனர் என்பதையும் நாம் கருத்தில் கொள்ள வேண்டும். அறபு, பாரசீகத் திசைச்சொற்கள் இப்புதுவகையான இலக்கிய வடிவங்களில் மலிந்திருப்பதையும் நன்குணரலாம். இனி முஸ்லிம் பிரபந்தங்களான ஐந்து பிரிவு களையும் விரிவாக ஒன்றன் பின் ஒன்றாகக் காணலாம்.

# படைப் போர் இலக்கியங்கள்

தமிழிலக்கிய வரலாற்றில் அறிமுகமாகாத இஸ்லாமியத் தமிழ் இலக்கியப் பிரிவுகள் எண்ணற்றவைகள். அவற்றுள் ஒன்றே படைப்போர் என்னும் இலக்கியப் பிரிவாகும். இப் படைப்போர் இலக்கியங்களை அறிமுகம் செய்விப்பதே இங்கு முதன்மை நோக்க மாக அமைந்துள்ளது. இந் நோக்கத்தின் நிறைவு இங்கு நான்கு நிலைகளில் மேற்கொள்ளப்பட்டுள்ளது. முதல் நிலையில் படைப் போர் இலக்கியங்கள் தமிழிலக்கிய உலகில் தோன்றுவதற்கான மூலா தாரம் இஸ்லாமிய மார்க்க வரலாற்று நிகழ்வுகள் என்பதையும் இத் தகைய இலக்கியப் பிரிவுகளுக்கான முன்னோடி இலக்கியங்களாக அறபு இலக்கியங்கள் திகழ்வதையும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. அடுத்து இஸ்லாமிய தமிழிலக்கிய வரலாற்றில் எமக்குக் கிடைத்துள்ள படைப்போர் இலக்கியங்களைக் கால வரிசைப்படி அதன் ஆசிரியர், காலம் உள்ளடக்கம் ஆகிய செய்திகள் சுருக்கமாக இடம் பெற்றுள்ளது. மூன்றாவது நிலையில் படைப்போர் இலக்கியத்தின் உள்ளடக்கச் செய்தியான போர் நிகழ்வுகள் ஏனைய பிற தமிழிலக்கியங்களில் இடம் பெற்றுள்ள போதிலும் அவற்றிலிருந்து மாறுபட்ட நிலையில் படைப் போர் இலக்கியங்கள் அமைந்திருப்பதை, குறிப்பாக பரணி இலக் கியங்களுடன் ஒப்பீடு செய்து காட்டப்பட்டுள்ளது. இறுதிப் பகுதியில் கிடைத்துள்ள படைப்போர் இலக்கியங்களை அடிப்படையாகக் கொண்டு படைப் போர் என்னும் தனி நிலை முஸ்லிம் தமிழ் பிரபந்த வகைக் குரிய இலக்கண வரையறை செய்யும் முயற்சி மேற்கொள்ளப் பட்டுள்ளது.

**இஸ்லாமிய மார்க்கமும் - போர்ச் செய்திகளும்**

இஸ்லாமியத் தமிழ்ப் புலவர்கள் தமக்கென வகுத்துக் கொண்ட இலக்கிய கோட்பாடுகளின் விளைவுகளுள் ஒன்றே படைப்போர் இலக் கியம் என்னும் தனித்துவ இலக்கிய வகை. இவ்விலக்கிய வகை இஸ் லாமிய மார்க்கக் கோட்பாடுகளும், தமிழிலக்கிய மரபுகளும் கலந்த புதியதொரு இலக்கியப் பிரிவு எனலாம். இவ்விலக்கியப் பிரிவின் ஆக்கத்தில் முஸ்லிம் புலவர்கள் பலரும் ஈடுபாடு கொண்டிருந்தனர். தமிழ் இலக்கியம் பற்றிக் குறிப்பிடும் பலரும் மறந்துவிட்ட படைப் போர் இலக்கிய வகையின் தோற்றத்திற்கு இஸ்லாமிய சமய நெறியின் தோற்றம், வளர்ச்சி நிலையில் அமைந்த வரலாற்றுக் கூறுகளே முக்கிய காரண கருவோட்டமாக அமைந்தன. இஸ்லாமிய வர லாற்றுத் தொடக்கமும் ஹிஜ்றி ஆண்டுத் துவக்கமுமான கி. பி, 622

லிருந்து இஸ்லாம் தன் மார்க்கக் கொள்கைகளை இவ்வுலகில் நிலை நிறுத்துவதற்காக எதிர்கொண்ட இன்னல்கள் பற்பல. பல்வேறு சூழல்களில் இவ் இன்னல்கள் போர்க்களமாகவும் உருப்பெற்று வர லாற்று முக்கியத்துவத்தையும் எட்டின. இப்போர்கள் யாவும் இஸ் லாமிய வரலாற்றில் தற்காப்பிற்காக மேற்கொள்ளப்பட்டனவேயன்றி, வலிந்து மேற்கொள்ளப்படவில்லை. தற்காப்பிற்காக மேற்கொள்ளப் படும் யுத்தம்பற்றித் தன் திருமறையில் அல்லாஹ் இவ்வாறு கூறு கின்ருன். 'அல்லாஹ்வுடைய பாதையில் (நீங்கள் செல்வதைத் தடுத்து) உங்களை எதிர்த்தோருடன் நீங்களும் யுத்தம் புரியுங்கள். ஆனால், நீங்கள் வரம்பு கடந்துவிட வேண்டாம். ஏனென்றால், நிச் சயமாக அல்லாஹ் வரம்பு மீறியவர்களை நேசிப்பதில்லை.' (2 : 190) 'அன்றி இஸ்லாத்திற்கு விரோதமாகச் செய்யப்படும் கலகம் முற்றிலும் நீங்கி, மார்க்கம் அல்லாஹ்வுடையதாக உறுதிப்படும் வரையில் அவர்களை எதிர்த்து யுத்தம் புரியுங்கள். ஆனால், அவர்கள் கலகம் செய்யாது விலகிக்கொண்டால், .. ...... அவர்களிலும் அக்கிரமம் செய்தவர்களைத் தவிர மற்றவர்களைத் துன்புறுத்தி வரம்பு மீறாதீர்கள்.' (2 : 193). இதுபோன்று பல்வேறாக இஸ்லாமிய மார்க்க அடிப் படையில் மேற்கொள்ளத்தகும் போர் பற்றிய செய்திகள் அல்குர்ஆனில் நிரம்பக் காணக் கிடக்கின்றன. அறபு நாட்டினை மையமாகக் கொண் டமைந்த இஸ்லாமிய மார்க்க வீர யுகச் செய்திகள் பிற்காலத்து அறபு மொழி இலக்கியங்களுக்குப் பாடுபொருளாக அமைந்தன.

## அறபு மொழியில் போர் செய்திகள்

அறபு மொழி இலக்கியத்தின் வளர்ச்சி நிலையில் இஸ்லாம் மார்க் கத்தின் போர் பற்றிய செய்திகள் பலவும் உள்ளடக்கமாக இடம் பெற்றன.

அல்லாஹ்வின் திருத்தூதராம் பெருமானார் நபி (சல்) அவர்களது வாழ்க்கை வரலாற்றைச் சித்திரிக்கும் அறபு இலக்கியங்கள் பலவும் அன்னாரின் வாழ்வில் எதிர்பட்ட போர் நிகழ்வுகளுக்கு அதிக முக்கியத் துவம் கொடுத்தன. போர் நிகழ்வுகளை மையமாகக் கொண்டு படைக்கப்பட்ட அறபு இலக்கியங்களுக்கு முன்னோடியாக அமைந்தது 'கிதாபுல் மகாசி' என்னும் இலக்கியமாகும். போர்களின் நூல் என்று பொருள்படும் இவ்விலக்கியத்தை முகமது இப்னுல் உமருல் வாக்கிதி என்பவர் கி. பி. 822 இல் இயற்றியுள்ளார். இவ்விலக்கியத்துள் பெருமானர் நபி (சல்) அவர்களது வாழ்வில் நடைபெற்ற போர் நிகழ்வுகளே மையக் கருவாக இடம் பெற்றுள்ளன. இதற்கு அடுத்த நிலையில் தோன்றியுள்ள பிறிதொரு அறபு இலக்கியம் கிதாபுல்

பத்ஹுல் கபீர் ''பெரும் வெற்றிகளைக் கூறும் நூல்'' என்னும் படைப் பாகும். இதனை இயற்றியவர் இபுன் ஷரத் என்பவராகும். இவ் வறபு இலக்கியம் கி. பி. 844 இல் இயற்றப்பட்டது. இவ்விலக்கி யத்தில் பெருமானார் (சல்) அவர்களது தோழர்கள், பின் வழி நடக்கும் அசுகாபிமார்கள், அவர்களுக்குப் பின் தோன்றிய கலீபாக்கள் முதலான வர்களது போர் பங்கேற்பு விவரிக்கப்பட்டுள்ளது. குறைஷியர் குலத் துடன் பெருமானுர் நபிகள் நாயகம் (சல்) அவர்கள் மேற்கொண்ட முதல் மார்க்கப் போரான பத்றுப் போர் கி.பி. 624 இல் மேற்கொள்ளப் பட்டது. பத்றுப் போர் இஸ்லாமிய வரலாற்றில் மட்டுமின்றி உலக வரலாற்றிலும் குறிப்பிடத்தக்க முக்கியத்துவத்தைப் பெற்றது. இப் போரில் நபிகள் திலகம்(சல்) அவர்கள் தம் மார்க்கத்தை எதிர்த்தோரை தோல்வியடையச் செய்து வெற்றியை நிலைநாட்டிய பின்பே அறபு நாட்டிலுள்ள அனைவரது கவனமும் நாயகத்தின் சிறப்பு, ஆற்றல், அவர் வகுத்துக் கூறும் இஸ்லாத்தின் மகிமை ஆகியவற்றின் மீது நாட்டம்கொள்ளச் செய்தது. இதற்கடுத்த நிலையில் கி. பி. 625 இல் குறைசியர் குலத் தலைவனான அபு சுப்யானுடன் நபி (சல்) அவர்கள் எதிர்த்துப் போரிட்ட உகுதுப் போர் அனைவரது கவனத்தையும் ஈர்த்ததுடன் அறபு தேசத்திலுள்ள அனைவராலும் பெருமானார் நபி (சல்) அவர்கள் வகுத்துக் காட்டிய இஸ்லாமிய மார்க்க போதனை ஏற்றுக்கொள்ளப்பட வழி வகுத்தது. இவ்விரு போர்களுக்குப் பின்பே மக்கா, மதீனா முழுவதும், 'அல்லாஹ் ஒருவனே, அவனது திருத் தூதர் முகம்மது நபி (சல்) அவர்களே' என்ற ஏகத்துவக் கொள்கை முழுமையாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. இஸ்லாத்தின் ஆரம்ப காலக் கட்ட போர்ச் செய்திகளான இவ்விரண்டு போர்களும் பிற்கால அறபு இலக்கிய எழுத்தாளர்களது படைப்புக்கள் பலவற்றிற்கும் கருப் பொருளாக அமைந்தது. இத்தகு அறபு இலக்கியங்களே இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாற்றில் தனித்ததொரு இலக்கியப் பிரிவாக வளர்ச்சியுற்றிருக்கும் படைப்போர் இலக்கிய வகைக்கு முன்னோடி யாகவும் மாதிரியாகவும் அமைந்தன.

### தமிழிலக்கியத்தில் படைப் போர் இலக்கிய வகையின் தோற்றம்

இஸ்லாமியக் கருத்துக்களைத் தமிழ் மக்களது உள்ளத்தில் பரப்பிட வேண்டும் என்ற ஆதங்கத்தில் முஸ்லிம் புலவர்கள் இஸ் லாத்தின் வரலாற்றை அதன் பின்னணியுடன் எடுத்துரைக்க முற் பட்டனர். அவ்வாறு முற்பட்ட முஸ்லிம் புலவர்களது மனத்தைப் பெரிதும் கவர்ந்தது இஸ்லாம் எதிர்கொண்ட போர் நிகழ்வுகள் எனலாம். இவர்களது எண்ணத்திற்கு முன் மாதிரியாகத் தமிழ் மரபிற்

கேற்ப செய்யுள்களை இயற்றினர். அவற்றிற்கு ஏனைய இஸ்லாமியத் தமிழிலக்கியங்களைப் போன்ற அறபு, பாரசீக மொழிகளின் பெயர்களையும் ஈட்டாது இதுவரையில் இருந்து வந்த பிற தமிழிலக்கிய வகைகளின் பெயர்களேயும் வைக்காது பொருள் விளக்கமுறும் வகையில் தனித் தமிழில் 'படைப் போர்' என்னும் இலக்கியப் பெயர் சூட்டி தனித்ததொரு இலக்கிய வகையை உருவாக்கினர். இவ்வாறு தனித்ததொரு இலக்கிய வகையை முதன் முதலில் தமிழிலக்கிய உலகில் உருவாக்கிய பெருமை, முஸ்லிம் தமிழ்ப் புலவர் வரிசை முகிய்யித்தீன் புலவர் அவர்களையே சாரும். இவர் ஈராக்கினை ஆண்டு வந்த சக்கூன் என்னும் அரசனுடன் பெருமானார் நபி (சல்) அவர்கள் எதிர்த்துப் போரிட்டு வெற்றி கொண்ட வரலாற்றை 'சக்கூன் படைப் போர் என்னும் தலைப்பில் கி. பி. 1686 இல் அரங்கேற்றினார். இப் படைப்போர் இலக்கியத்திற்குப் பின்பே ஏனைய இத்தகைய இலக்கியங்கள் இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றில் இடம்பெறலாயின.

**இஸ்லாமியப் பிரபந்தம் படைப்போர் இலக்கியங்களின் அறிமுகம்**

படைப்போர் இலக்கியங்களின் அறிமுகத்தை அவற்றின் கால வரிசையின்படி இங்குக் காண்போம். அறிமுகம் என்ற நிலையில் இங்குப் படைப்போர் இலக்கியங்களின் திறனாய்வுப் பகுதி இடம்பெறவில்லை, படைப்போர் இலக்கியங்களுக்குரிய பாடு பொருள் தொடர்பான வரலாற்றுச் சம்பவம், அவ்விலக்கியங்களின் ஆகிரியர், இலக்கியம் தோன்றிய காலம் ஆகியனவே இங்கு சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

**சக்கூன் படைப் போர்**

படைப் போர் இலக்கியங்களுள் காலத்தால் முதன்மை நிலே பெறுவது சக்கூன் படைப்போர் ஆகும். [சக்கூன் படைப் போர், படைப் போர் இலக்கியங்களுள் முதன்மை நிலை பெறுவதுடன் இஸ்லாமிய தமிழ்லக்கிய வரலாற்றின் தொடக்க கால இலக்கியங்களாகக் கருதப்படும் முதல் பத்து இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்களுள் ஏழாவது நிலையும் பெறுகிறது.

சக்கூன் படைப் போர் இயற்றப்பட்டது, ஹிஜ்றி 1098 ஆம் வருடம் என்பதை அறியலாம். இதற்கு இணையான கிறிஸ்தவ ஆண்டு 1686 ஆகும். நூல் இயற்றியுள்ள மாதம், தேதி, கிழமைகளேயும் ஆசிரியர் குறித்துள்ளார். 1686 ஆம் வருடம் ஆவணி மாதம் இருபத்தி ஐந்தாம் தேதி வெள்ளிக்கிழமை நன்பகல் நேர குத்துபா தொழுகைக்குப் பின்னரே வரிசை முகியித்தீன் புலவரவர்களால்

சக்கூன் படைப்போர் அரங்கேற்றம் செய்யப்பட்டுள்ளது. சக்கூன் படைப் போர் முஸ்லிம் அல்லாத கூட்டத்தாருக்கும் முஸ்லிம்களுக்கும் இடையே நடைபெற்ற போரினையே விவரிக்கின்றது. சக்கூன் என்பவனே முஸ்லிம் அல்லாத கூட்டத்திற்குத் தலைவனாகும். இப் போர் நபிகள் நாயகம் (சல்) அவர்களது காலத்தில் நடைபெற்ற போர் களுள் ஒன்றாகும். ஈராக் நாட்டின் தலைவனான சக்கூனிடத்து பெருமானார் நபிகள் நாயகம் (சல்) அவர்களது இஸ்லாத்தின் ஏகத்துவ இறைவழிகாட்டு நெறி முறைகளை வலியுறுத்த வேண்டி மேற்கொண்ட முயற்சியின் பயனாகவே இப்போர் நிகழ்கின்றது. போரின் இறுதியில் சக்கூனும் அவனது கூட்டத்தாரும் ஒன்றிறைக் கொள்கையை விருப் பத்துடன் ஏற்றுக்கொள்ள, அவனிழந்த நாடும் அவனிடமே மீண்டும் ஒப்படைக்கப்பட்டு இஸ்லாத்தின் வழியில் சக்கூன் ஆட்சி புரிவதாக இப்படைப்போர் இலக்கியம் நிறைவு பெறுகிறது. சக்கூன் படைப் போர் பற்றிய முழுமையான தனி நிலை ஆய்வு அவ்விலக்கியம் தோன்றிய காலத்தை அடிப்படையாகக் கொண்டு, இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாறு முதலாம் தொகுதியில் மேற்கொள்ளப்பட்டு விட்டதால் இவண் விடுகின்றோம். (பார்க்க : சக்கூன் படைப்போர், எட்டாம் இயல், இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாறு முதலாம் தொகுதி, பக்கம் : 371 - 384).

**ஐந்து படைப் போர்**

படைப்போர் இலக்கிய வரிசையில் காலத்தால் இரண்டாவது நிலையில் தோன்றியது ஐந்து படைப் போர் ஆகும். இதனை இயற் றியவர் காயம்புளிக் கடுத்த பூவைமா நகரத்தைச் சார்ந்த, யூசுபு நபி காவியத்தின் ஆசிரியரான கந்தப்பிள்ளைப் புலவரவர்களின் குமாரர் ஹஸனலிப் புலவராகும். படைப் போர் இலக்கியத்திற்கு இஸ் லாமியத் தமிழிலக்கிய வரலாற்றில் வழிகாட்டியாக இருந்த சக்கூன் படைப் போர் தோன்றியதற்கு ஐம்பத் தொரு ஆண்டுகளுக்குப் பின்பே ஐந்து படைப் போரை ஹஸனலிப் புலவர் இயற்றியுள்ளார். இப் படைப் போர் ஹிஜ்றி 1150 ஆம் ஆண்டு அரங்கேற்றம் செய்யப்பட்ட தற்கான அகச் சான்றுகள் படைப் போர் இலக்கியத்தின் ஆரம்பத்தில் காணப்படுகிறது.

செஞ்சொ லாற்பாடித் திகழரங்க மேற்றிடுநாள்
இஞ்சொல் நபிஹிஜு ரத்தேற்ற வருடமது
ஆயிரத்தி நூற் றைம்பதாம் நல்வருடம்
பாயிரத்தி னம்மானை பாடியரங் கேற்றினனே

(ஐந்து படைப் போர் : இபுனியன் படைப் போர் கண்ணி : 35 - 36)

ஹிஜ்றி 1150 க்கு இணையான கிறித்துவ ஆண்டு 1737 ஆகும். ஐந்து படைப் போர், படைப் போர் இலக்கியத்திற்குரிய இலக்கண வரையறையுடன் பாடப்பட்டுள்ளது. இதில் தலைப்பிற்கு ஏற்ப ஐந்து படைகளது போர் செய்திகள் இடம் பெற்றுள்ளன. இவ் ஐந்து படை களது போர்களும் முஸ்லிம் மக்கட்கும் முஸ்லிம் ஏகத்துவ இறை வழிபாட்டுக் கொள்கைக்கு எதிரான இனத்தவருக்கு மிடையே நடை பெறுவதாகும். ஐந்து படைப் போரில் உட்பிரிவுகளாக இபுனியன் படைப் போர், உச்சி படைப் போர், வடோச்சி படைப் போர், தாகி படைப் போர் இந்திராயன் படைப் போர் என்னும் ஐந்து வெவ்வேறு தலைப்புகளில் போர்ச் செய்திகள் முறையாக விவரிக்கப்பட்டுள்ளன. இவ் உட்பிரிவுகளின் தலைப்புக்களில் இடம் பெற்றிருக்கும் இபுனியன், உச்சி, வடோச்சி, தாகி, இந்திராயன் முதலான பெயர்கள் அந்தந்த உட் பிரிவுகளின் போரில் முஸ்லிம் அல்லாதாரின் கூட்டத்திற்குத் தலைமையேற்று வரும் தலைமை மாந்தர்களின் பெயர்களே. படைப் போர் இலக்கியம், போருக்கு முக்கியத்துவம் தருவதால் போரில் தலைமையேற்று வரும் எதிரிடை மாந்தர்களின் பெயரையே தலைப் புக்களாகப் பெற்றுள்ளன. இப்படைப்போர் இலக்கியங்களில் முஸ்லிம் அல்லாதோரான எதிரிகளின் படைத்தலைவர்களது பெயர்களை தலைப் பாகப் பெற்றுள்ளமைக்கு பிறிதொரு முக்கியத்துவமும் உண்டு. இஸ்லா மிய வரலாற்று சகாப்தத்தில் ஆரம்ப கால கட்டத்திலிருந்து இன்று வரை இடைப்பட்ட போர்க்களங்கள் எண்ணற்றவைகள். ஆனால் அப் போர்களுள் எவையேனும் வலிந்து மேற்கொள்ளப்படவில்லை. அல்லாஹ்வின் அல்குர்ஆன் கட்டளையின்படி 'எவர்கள் விசுவாசங் கொண்டு, தங்கள் ஊர்களிலிருந்து வெளிப்பட்டு அல்லாஹ்வுடைய பாதையில் தங்கள் பொருள்களையும் உயிர்களையும் தத்தம் செய்து யுத்தம் புரிகின்றனரோ அவர்கள் அல்லாஹ்வினிடத்தில் மகத்தான பெரும் பதவி பெற்றவர்கள். இத்தகையோர் தாம் நிச்சயமாக சித்தி யடைந்தோர். (9 : 20) என்பதற்கேற்ப மேற்கொள்ளப்பட்ட தற் காப்புப் போர்களே. எனவே கொள்கை முரண்பாடு காரணமாக பகை வர்கள் மேற்கொண்ட தாக்குதலை எதிர்த்துப் போராட வேண்டிய நிர்பந்தம் இஸ்லாத்திற்கு ஆரம்ப காலத்திலிருந்தே எதிர்ப்பட்டது. இத்தகைய போர்களுக்குரிய அங்கீகாரத்தையும் அல்லாஹ் அல்குர் ஆன் ஆயத்து மூலமாக இஸ்லாமியர்களுக்கு வழங்கியுள்ளான். போர் கள் எதிரிகளால் துவக்கப்படுவதன் காரணத்தினாலே அதற்கு முக்கி யத்துவம் தரும் வகையில் அந்தந்த எதிரிப் படைகளுக்குரிய தலைவர் களின் பெயர்களையே படைப்போர் இலக்கியங்கள் பெற்றுள்ளன.

ஐந்து படைப் போரில் இடம் பெற்றிருக்கும் ஐந்து படைப் போர் களும் வெவ்வேறான பெயர்களில் அமைந்திருப்பினும் இவை ஐந்தும்

ஒன்றோடொன்று தொடர்புடைய, தொடர் போர் நிகழ்வுகளாகவே உள்ளன. இவ்வைந்து படைப் போர்களும் வெவ்வேறானவைகள் என எண்ண முடியாத அளவிற்கு ஒன்றின் முடிவுடன் அடுத்த படைப் போரின்ஆரம்ப நிகழ்வுகள் தொடர்பு கொண்டுள்ளன.

ஐந்து படைப்போரில் முதலாவதாக இடம்பெற்றிருக்கும் இபுனியன் படைப்போர் செய்திகளின் முடிவில் அடுத்த படைப்போரினை தலைமையேற்று நடத்தவிருக்கும் உச்சியன் பற்றிய செய்தியும், உச்சி படைப்போரின் முடிவில் (அடுத்த படைப்போரினை தலைமையேற்று நடத்த விருக்கும் வடோச்சி பற்றிய) மூன்றாவது படைப்போரின் எதிர் தலைவன் வடோச்சியன் பற்றிய செய்தியும் வடோச்சி படைப் போரின் இறுதிக் கண்ணிகளில் நான்காவது படைப்போரின் எதிர் தலைவன் தாகி பற்றிய குறிப்பும் தாதி படைப்போரின் முடிவில் இறுதிப் படைப்போரான ஐந்தாம் படைப்போரில் இஸ்லாம் அல்லா தாரின் கூட்டத்திற்குத் தலைவனான இந்திராயன் பற்றிய கருத்தும் குறிக்கப்பட்டுள்ளது. அடுத்தடுத்து வரும் போர்ச் செய்திகளை அதற்கு முந்திய பகுதிகளில் தெரிவித்து விடுவதால் ஐந்து படைப் போர் செய்திகளை படித்து வருவோர்க்கு ஒரே நிகழ்ச்சியின் தொடர்ச்சி என்ற எண்ணம் ஏற்படுகிறது.

ஒவ்வோர் படைப் போர் செய்திகளையும் விவரிக்கந் தொடங்கும் முன் ஆசிரியர் இது 'ஐந்து படைப்போரில் முதலாவது, இரண்டாவது. மூன்றாவது, நான்காவது, ஐந்தாவது எனக் குறிப்பிடுகிறார். எனவே இவற்றுள் ஒன்றேனும் இடையில் விடுபடுமானால் அது முழுமையான நிறைவு பெற முடியாது. ஏனெனில் ஐந்து படைப் போர் ஆரம்ப காலத்துப் பதிப்புகளில் தொடர்ச்சியாகவே ஐந்து படைப்போர் செய்திகளும் வெளியிடப்பட்டன. இவ் வகையில் முழுமையான ஐந்து படைப் போர் இலக்கியங்களும் சேர்ந்த ஒரே தொகுதி கி. பி. 1878 ஆம் ஆண்டிலேயே வெளியிடப்பட்டுள்ளது. இதற்குப்பின் பல்வேறு பதிப்புகளும் வந்துள்ளன. ஆனாலும்கூட ஐந்து படைப்போர் தொகுதி வெளியிடப்பட்ட 1898 ஆம் ஆண்டிற்கு முன்னரே 1871 ஆம் ஆண்டில் ஐந்து படைப் போருள் முதலாவது படைப்போரான இபுனியன் படைப் போரும் ஐந்தாவது படைப் போரான இந்திராயன் படைப் போரும் தனித் தனியே வெளியிடப் பட்டுள்ளன. முழுமையான பதிப்பையும் வெளியிடுவதற்குரிய சிரமத்தின் காரணமாகவே இவ்வைந்து படைப் போர்களையும் முஸ்லிம் மக்கள் தனித்தனியே பதிப்பித்து வெளியிட்டிருக்க வேண்டும். பிற்காலத்தே ஐந்து படைப் போர்களும் தனித் தனியே பல்வேறு பதிப்புக்களைப் பெற்றுள்ளன. இவைகள் தனித் தனியே பதிப்பிக்கப்

பட்டிருப்பினும் ஹஸனலிப் புலவரின் முழுமையான இலக்கியத் திறத்தை ஐந்து படைப் போர் ஒட்டு மொத்தமாக வெளிப் படுத்துவது போல் வெளிப்படுத்துவதில்லை. ஏனெனில் ஐந்து படைப் போர் செய்திகளை ஒன்றன்பின் ஒன்ருகப் படித்துவரும் போதே முழுமையான் நிறைவு கிடைக்கிறது. மேலும் ஐந்து படைப் போரிலும் ஆரம்பத்தில் காப்பு - வெண்பா மட்டுமே தனித் தனியே இடம்பெற்றுள்ளது. அதே நேரத்தில் முதல் படைப் போராக அமைந்துள்ள இபுனியன் படைப் போரின் தொடக்கத்தில் மட்டுமே கடவுள் துதி, அவையடக்கம், நூல் அரங்கேற்றிய காலம் பற்றி குறிப்பு, அரங்கேற்றம் நிகழ்ந்த சூழல் முதலான பல்வேறு தகவல்கள் குறிக்கப்பட்டுள்ளன. ஐந்து படைப் போரினைப் பற்றிய விபரத்தை அறிந்து கொள்வதற்குரிய இக் குறிப் புக்கள் இதில் அடங்கியுள்ள ஐந்து பகுதிகளுக்கும் பொதுவானவை களாகும். மேலும் இம் முதல் பகுதியான இபுனியன் படைப் போரிலேயே நபி நாயகத்தின் வரலாறு, இபுனியன் வரலாறு, இபுனியன் இஸ்லாமிய மார்க்கத்திலிருந்து புறம்பான பாதையில் நிற்பது, அவனது படைபலம், அவனிடம் நபி நாயகம் கலீது அவர்களை தூதனுப்புதல், அதனை இபுனியன் மறுத்தல், பின் போர்ச் சூழல் அதில் அலியார் பங்கு பெறல் முதலான போருக்கு அடிப்படை யான அனைத்துச் செய்திகளும் இடம் பெற்றுள்ளன. போரின் தொடக்கம் எப்போது? ஏன்? என்ற வினாவுக்குரிய பதில்கள் இபுனியன் படைப் போரின் தொடக்கத்திலேயே அமைந்துள்ளன. ஏனைய நான்கு போர்ப் பகுதிகளிலும் போரின் தொடக்கம் எவ்வாறு ஏற்பட்டது என்பது பற்றிய விவரங்களை அறிய முடியாது. எனவே, ஐந்து படைப்போர் ஐந்து பகுதிகளாக இடம் பெற்றிருப்பினும் அது முழுமை பெற்ற ஒரு படைப் போர் இலக்கியம் என்றே கருதுதல் வேண்டும். அன்றி தனித் தனிப் பதிப்புகள் வெளியிடுவதின் மூலம் அவற்றின் இலக்கியத் தன்மை முழுமை பெறுவதில்லை என்பது ஈங்குக் குறிப்பிடத் தக்கது. இஸ்லாமிய தமிழிலக்கிய வரலாற்றில் ஐந்து படைப் போர் என்பது ஐந்து வேறு இலக்கியமாகக் கருதப்படும் கண்ணோட்டம் இருக்கின்ற காரணத்தினாலேயே இவ்வைந்து பகுதி களும் தனித் தனியே பதிப்பிக்கப்படும் நிலை பெருகி வந்துள்ளது. இவ்வாறு தனிப் பதிப்புக்கள் வெளிவருவது ஐந்து படைப் போர் இலக்கியத்தின் முழுமையை நிறைவு செய்வதாகாது என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது.

பெருமானார் நபிகள் திலகமவர்களது காலத்தில் நடைபெற்ற போர்களுள் ஒன்றே ஐந்து படைப் போர் செய்தியாகும். ஒரு போரின் ஆரம்பம் ஐந்து வெவ்வேறு நிலைகளில் தொடர்வதால் ஐந்து பகுதியாக ஆசிரியர் இதனை அமைத்துள்ளார். பெருமானார் (சல்)

அவர்கள் எல்லாம் வல்ல அல்லாஹ்வின் அருட் தூதர் ஜிப்றயீல் (அலை) அவர்களது கருத்துப்படியே இபுனியன் பற்றிய செய்தியை அறிந்து அவனிடத்து இஸ்லாமின் ஏகத்துவக் கொள்கையை ஏற்றுக் கொள்ளும்படி கலீது என்பவரைத் தூதனுப்ப, அதன் விளைவாகப் போர் உருவெடுக்கிறது. பின் அல்லாஹ்வின் அருட்படியே தற்காப்புப் போர் பெருமானார் அவர்களால் தொடங்கப்படுகிறது. இப்போரில் பெருமானாரின் அணியில் தலைமையேற்று நிற்கும் பாத்திரம் புலி அலி (றலி) அவர்களே ஆகும். ஐந்து படைப் போர் முழுமையும் அலி (றலி) அவர்களே தலைமைப் பாத்திரம் என்று சுட்ட வேண்டும். இதனைப் படைப் போரின் ஆரம்பத்தில் ஆசிரியர், சுட்டியுள்ள கண்ணிகளின் மூலமாகவும் அறியலாம்.

மூமினா னோரையெல்லா முறையாகவே பணிவேன்
ஆமினார் பெற்றெடுத்த ஆலநபி நம்மிறசூல்

பெற்றெடுத்த பாத்திமத்துப் பெண்ணாரி னற்புருடர்
கத்தனரு ளோங்கும்அலி காரணமாம் வென்றபடை

இம்மா நிலமதனி லெல்லெவருங் கேட்பதற்குப்
பெம்மா னினல்ல பெரிய வருளாலே

(ஐந்து படைப் போர் : இபுனியன் படைப் போர்
கண்ணி 20 - 23)

எனவே ஐந்து படைப் போரின் முழுமைக்கும் உள்ள தலைமைப் பாத்திரம் அலி (றலி) அவர்களே. எதிரிகளே போர் தொடக்கம் செய்வதால் எதிரிப் பிரிவுகளுக்கேற்ப ஐந்து பகுதிகளாக ஒரு முழுமை யான போர் நிகழ்வு அசனலிப் புலவரவர்களால் பாடப்பட்டுள்ளது.

ஐந்து படைப்போரின் தொடக்கத்தில் காப்பு - வெண்பா இவ்வாறு உள்ளது.

பூமுதல் யாவையுமே பொற்பா யமைத்தளிக்கும்
மாமுதலே யெங்குநிறை வள்ளலே - கோமகனாம்
ஏதிபுனி யன்படைப்போ ரியான்சொலவே யெவ்வுயிருங்
காதல்கொளு மாண்டவனே காப்பு

இதன்பின் கடவுளர் துதி என்ற பிரிவின்கீழ் பத்தொன்பது கண்ணிகள் உள்ளன. இத்துதியில் 'அவனுக்கே எல்லாப் புகழும்' என்று பொருள் படும் அல்ஹம்து லில்லாஹி எனத் தொடங்கப்பட்டுள்ளது. இதன்பின் முறையாக ஜெகதலத்தில் வந்துதித்த சீர்முஹம்மது, 1,24,000 நபிமார்கள், அபூபக்கர் (றலி), உமர் (றலி), உதுமான் (றலி),

அலி (றலி) முதலான கலீபாக்கள், முகியித்தீன் ஆண்டகை, சதக்கத்துல்லா அப்பா முதலான இறைநேசச் செல்வர்கள் புகழ்ந்துரைக்கப் பட்டுள்ளார்கள். இறுதியாக அசனலிப் புலவர் தம் தந்தையையும் புகழ்ந்துரைத்துள்ளார்.

அந்தமுள தென்பூவைக் கன்பாக வந்துதித்த
கந்தப்பிள்ளை பாதங் கருணையுடனே புகழ்வேன்

(ஐந்து படைப் போர் ; இபுனியன் படைப் போர் : கண்ணி : 19)

இவ்வரிகளின் மூலம் அசனலிப் புலவரது தந்தையின் பெயர் கந்தப் பிள்ளை என அறியப்படுகிறது. அசனலிப் புலவரின் தந்தையார் யூசுபு நபி காவியம் இயற்றி உள்ளார் என்பது ஈண்டு நோக்கற்பாலது.

கடவுள் துதியைத் தொடர்ந்து நூல் அரங்கேற்றம் பற்றிய செய்தியை ஆறு கண்ணிகளில் ஆசிரியர் தந்துள்ளார். இதனைத் தொடர்ந்து ஐந்து படைப்போரின் முறையான உள்ளடக்கக் கருத்துக்கள் தொடர்கின்றன. இவைகள் பற்றிய கருத்துக்களை இங்கு சுருக்கிக் காண்போம்.

முதலாவது படைப் போரான இபுனியன் படைப்போர் ஐந்து படைப் போரின் 49 வது கண்ணி முதல் 922 கண்ணி முடிய விவரிக்கப் பட்டுள்ளது. குறாசான் என்னும் பதிக்கு அரசனாகும், கொடுங்கோலாட்சி செலுத்தும் இபுனியனுக்கு நல்வழி காட்டும் பொருட்டு பெருமானார் நபிகள் நாயகம் (சல்) அவர்கள் காலித் என்பாரைத் தூதனுப்ப அது கண்டு கோபமுற்ற இபுனியன் மதீனாவில் வீற்றிருக்கும் நாயகம் (சல்) அவர்களை நோக்கிப் பெரும் படையுடன் போர் தொடரும் பொருட்டு படையெடுத்துவர, தற்காப்புப் போருக்கான அவசியம் நாயகம் (சல்) அவர்களுக்கு ஏற்பட்டது. இத் தற்காப்புப் போருக்குத் தலைமைப் பொறுப்பு ஏற்கும் பணியை ஹஜ்ரத் அலி (றலி) அவர்கள் ஏற்று நடத்திட போர் மூண்டு இறுதியில் இபுனியன் கொல்லப்படுகிறுன். போரின் இறுதியில் கணவன் இறந்த செய்தியறிந்து இபுனியனின் மனைவி ஒப்பாரி வைப்பதாக உள்ளது.

என்னைவிட்டுப் போனீரே யெப்போ துமைக்காண்பேன்
மன்னவரே யென்று மாரடித்தாள் மாமயிலாள்

இதன்பின் இபுனியன் மனைவி இச்செய்தியை இந்திராயன் என்னும் மன்னனுக்குத் தெரியப்படுத்துவதுடன் முதலாவது படைப்போர் முடிவுறுகிறது. இபுனியன் படைப்போரில் ஆசிரியர் இபுனியன் கொடிய அரக்கனுக வர்ணிக்கப்பட்டுள்ளான். இவனது உருவத்தை

பல கண்ணிகளில் அசனலிப் புலவர் வர்ணித்துள்ளார். அலி(றலி) அவர்களது போர்த் திறமும் சிறப்பாக விவரிக்கப்பட்டுள்ளது. இபுனியன் படைப் போர் மட்டும் பல பதிப்புகளில் வெளியிடப் பட்டுள்ளது.

இபுனியன் படைப்போரைத் தொடர்ந்து இடம்பெற்றிருப்பது உச்சி படைப்போராகும். இது முறுத்தானை ஆட்சி புரியும் இந்திராயன் பற்றிய செய்தியுடன் தொடங்குகிறது. இந்திராயனுக்கு இரு மகள்கள். அவர்களுள் மூத்தவளை தாகி என்பவனுக்கு மண முடித்துள்ளான். இரண்டாமவளான பனி மதியை மணமுடிப்பதற்கான வரன் தேடும் நிலையிலேயே இபுனியன் இறந்த செய்தி அவனது மனைவி மூலமாக இந்திராயனுக்கு வந்தடைகிறது. இந்நிலையில் இந்திராயன் அலி (றலி) அவர்களின் தலையை யார் கொண்டு வரு கின்றார்களோ அவர்களுக்கே பனி மதியை மணமுடித்துக் கொடுக்கப் படும் என அறிவிப்புச் செய்கின்றான்.

... . ... இந்தி ராயனவன்
எந்தன் மகள்நல்ல விசைந்த பனிமதியை
கொள்ளவென்றா லாலிதனை கொண்டுவந்தோர்க்
காகுமென்றான்
(உச்சி படைப்போர் : கண்ணி : 23 - 24)

அத்துடன் பெரும் கோபங் கொண்டு

பேயனலி யென்பவனைப் பேய்க்குவிருந் தாகிடவே
காயந் தனையறுத்துக் கண்டமிட்டுத் தான்தலையை
கொண்டுவந்தார் சீமையிலே கண்டதொரு பாதியும்நான்
இன்றுதரு வேன்மகளை யேற்றுகலி யாணஞ்செய்தே
(உச்சிப் படைப்பேர் : கண்ணி : 60 : 61)

என்று கூற இதனைக் கேள்வியுற்ற உச்சி என்பான் அலியை போரில் தோல்வியடையச் செய்து கொண்டு வருவதாகச் சபதம் ஏற்றுப் போருக்குத் தலைமை ஏற்றுப் புறப்பட்டான்.

சேர்ந்திருக்கு முச்சியென்போன் செப்புவா னப்போது
நேர்தவறு மலிதனை நிமிடங்கொண்டு வாரனென்றான்
(உச்சி படைப்போர் : கண்ணி : 27)

இதன்பின் உச்சி தலைமையில் இந்திராயனின் படை போருக்குப் புறப் பட்டது. இப்படைகள் இபுனியனின் படையைப் போன்று முன்னூறு மடங்கு பெரியன என்புதை 'முன்வந்த சேனையைப் போல் முன்னூறு

பங்கதிகம்' எனக் குறிப்பிடும் அசனலிப் புலவர், உச்சி படைகளுடன் ஹஜ்ரத் அலி (றலி) அவர்களது படைகள் நடத்திய போர் மிகவும் கடுமையானது என்பதை இவ்வாறு வர்ணித்துள்ளார்.

காலாட் படையுடனே காலாள்களு மெதிர்த்தார்
வேலாட் படையுடனே வேலாள்களும் மெதிர்த்தார்
பட்டையத்தார் தம்முடனே பட்டையத்தார் தாம்பொருதார்
ஒட்டகத்தார் தம்முடனே யொட்டகத்தார் தாம்பொருதார்
வேற்காரர் தம்முடனே வேற்காரர் தாம்பொருதார்
மாற்காரர் தம்முடனே மாற்காரர் தாம் பொருதார்
வாட்காரர் தம்முடனே வாட்காரர் தாம்பொருதார்
மாழ்க்காரர் உச்சிபடை, பாரை வளைந்தனபோல்
கார்மழை சொரிந்தனபோற் கடுவாளிதான் சொரிந்தார்
போர் தனிலே நின்று ........

(உச்சி படைப்போர் : கண்ணி : 162 - 166

போரில் காணப்பெறும் எதிரிப் படையின் அழிவினையும் ஆசிரியர் பல கண்ணிகளில் வர்ணித்துள்ளார். அலி (றலி) அவர்களது படைகளிலிருந்து பன்மடங்கு அதிகமுள்ள உச்சி படை அவர்களை வளைத்துக் கொண்டமை 'சிங்கத்தை ஆட்டினங்கள் சேர வளைத்ததுபோல்' இருப்பதாக ஆசிரியர் குறித்துள்ளார். உச்சி படைப் போரினை அசனலி புலவர் 392 கண்ணிகளில் எடுத்துரைத்துள்ளார். இதில் பல கண்ணிகளில் அலி (றலி) அவர்களது குதிரையான 'துல்துல்' என்பதன் ஆற்றல் விளக்கப்பட்டுள்ளது. அலி (றலி) அவர்களது திறமையான போருக்கு முன் ஈடு கொடுக்க முடியாத உச்சி இறுதியில் பின்வாங்கி ஓடி மாண்டுவிட இச்செய்தியை போரிலிருந்து உயிர் பிழைத்து ஓடியோர் மன்னர் இந்திராபனிடத்து எடுத்துக் கூறுவதுடன் உச்சி படைப்போரில் போர்க்களக் காட்சிகளை ஆசிரியர் வர்ணிக்கும் திறம் போற்றலுக்குரியது. பெருமானார் நபிகள் நாயகத்தின் திறம் பற்றிக் குறிப்பிடும்போது, நாயகம் (சல்) அவர்கள் தசை கட்டிக்கு பெண் அளித்தது போன்ற சில வரலாற்று நிகழ்ச்சிகளையும் உச்சி படைப்போரில் ஆசிரியர் குறித்துள்ளார்.

### வடோச்சி படைப்போர்

உச்சி தோற்கடிக்கப்பட்டதைக் கேட்ட இந்திராயன் கோபங் கொண்டான். உள்ளக்கிடக்கையை வெளியிட்டுக் கொண்டிருக்கையில் அங்கே வட்ட மண்டல மன்னன் வடோச்சி என்பவன் வந்தான். இந்திராயன் வடோச்சிக்கு நடந்தவற்றைக் கூறினான். நிகழ்ந்த அனைத்தையும் கேட்ட வடோச்சி இந்திராயன் நிலைமையைக் கண்டு

வருந்தினான். இந்நிகழ்ச்சியுடன் மூன்ருவது படைப்போரான வடோச்சிப் படைப்போரை ஆசிரியர் துவக்கம் செய்துள்ளார்.

படைத்த ஆதிதான் தடுத்தாலும் அலிதனை இங்கு கொண்டு வருவேன் என்று இந்திராயனுக்கு உறுதி கூறினுன். இந்திராயன் அளவிலா மகிழ்ச்சியடைந்தான். தனது மகளை வடோச்சிக்குத் திருமணஞ் செய்வதாகக் கூறினான். வடோச்சி அலியைக் கொன்று வருவதாக முறி எழுதுமாறு இந்திராயன் அமைச்சர்கட்குக் கட்டளை யிட்டான். அப்படியே முறியும் எழுதப்பட்டது. இவ்வாறு எழுதிக் கொடுத்ததன் பிறகு வடோச்சி பின்வருமாறு சப்தமிட்டான்.

கல்லை துளைத்தலிதான் கற்குள்ளிருந் திட்டாலும்
விண்ணே கிலுமவனை விடேனென் றெதிருரைத்து

(வடோச்சி படைப்போர் : கண்ணி : 410 - 411)

வடோச்சி போருக்குப் புறப்படுமுன் போரில் வெற்றி பெற்றால் தனக்குக் கிடைக்க இருக்கும் பெரும் பேற்றினைப்பற்றி எண்ணினான். இப்படி எண்ணிக்கொண்டிருக்கையில் அரச மாளிகையில் பனிமதி உலாவி வருவதைக் கண்டான்; கண்டு உள்ளங் குளிர்ந்தான். அவளின் ஒப்பற்ற அழகு அவன் உள்ளத்தில் படிந்தது. அவ்வழகினை இந் நூலாசிரியர் பின்வருமாறு வர்ணித்துள்ளார்.

கிஞ்சுகம்போலே மொழியும் கீற்றுப்பிறை போல்நுதலும்
மஞ்சு தவழ்குழலு மாமதியைப் போல் முகமும்

முருக்கம்பூ போலிதழு மோகமுற்ற பல்லழகும்
கருக்கெழுதும் கண்ணழகும் கழறுகின்ற கைவீச்சும்

வாழைத்தண்டு போலே வடித்த தடிக்காலும்
கொள்ளைகொள்ளு மாடவரைக் கொந்தளக பாரமதும்

பச்சை முகமதுபோற் பாசக் கழுத்தழகும்
இச்சைபூந் தேன்வார்த்த தேய்ந்தவேய் பொற்றோளும்

காந்தளம்பூக் கையழகும் கையில்வைத்த பசுங்கிளியும்
மாந்தர்களைக் கொள்ளைகொள்ளு மகமேரு வைப்பழிக்கும்

பந்தையொத்த கொங்கைப் பரிமளமாகுஞ் சிமிழும்
விந்தையொத்த ஆலிலைபோல் மேலுதர மும்நடுவில்

உந்திச் சுழியழகும் உரோமத் தொழுங்கழகும்
சந்தித்த சிங்கவிடை தனைப்போ லிடையழகும்

அரம்பைபோ லேதுடையும் அக்மெலாம் பூஷணமாய்
இன்னமவள் பேரழகங் கெவ்விடத்து மில்லையென

(வடோச்சி படைப்போர் : கண்ணி : 418 - 425)

வடோச்சியும் மிக்க அழகுள்ளவன். பலம் வாய்ந்தவன். ஆற்றல் படைத்தவன். அழகில் சீவகனும் ஒப்பாகமாட்டானாம். தண்டாயுத மெடுத்தால் வீமனையும், வில்லெடுத்தால் அர்ச்சுனனையும் தோற்கடிக்கும் ஆற்றல் படைத்தவனாம். நளன்கூட இவன் வடிவுக்கு நிகரற்றவனாம். கொடையில் கர்ணனும் தோற்றுப் போவானாம். இவ்வாறு வடோச்சிப் பலவாறாக வர்ணிக்கப்பட்டுள்ளான். அவ் வர்ணனைகளைப் பின்வருமாறு பாடுகிறார் ஆசிரியர்.

இன்னமதுர சீவகனு மிங்கிவனுக் கொவ்வாது
கனமகுட ராஜர்களுங் கலங்குவா ரேயவர்க்கு

தண்டா யுதமெடுத்தாற் றான்வீமன் தோற்றிடுவான்
நன்றான வில்லெடுத்தால் நல்விஜயன் தோற்றிடுவான்

நளனு மிவன்வடிவி னான்கிலொன்று காணானே
பழகுமிவன் வடிவு பார்க்கிலரிச் சந்திரனாம்
கர்ணனிவன் கொடைக்குக் கால்வாசி காணாது
தர்மமிக னீதந் தனக்குநிகர் காணாது
.. .......
இன்ன்மவன் வெற்றிசொல்லிங் கென்னால் முடியாது
(வடோச்சி படைப்போர் : கண்ணி : 438 - 447)

இத்தகைய பண்புகள் படைத்த வடோச்சி மதிமயங்கினான். உள்ளங் குலைந்தான். செய்வது இன்னதென்றறியாது தடுமாறினான். வடோச்சியின் இந்நிலையை அவன் பாங்கன் கண்டான். கண்டு வடோச்சியின் இந்நிலைக்குக் காரணம் என்ன என்று வினவினான். பனிமதியைக் கண்டு தனதுள்ளம் பறிபோனதை வடோச்சி கூறினான். அசனலிப் புலவர் இவ்விடங்களில் பழைய இலக்கிய உவமைகளை அடுக்கடுக்காகச் சேர்த்திருப்பது ஐந்து படைப்போரின் இலக்கியச் சுவை சிறப்பதற்கு உதவுகிறது. தொடர்ந்து போர்ச் செய்திகளை மட்டுமே விவரிக்காமல் இடையில் இத்தகு வர்ணனைகளை சேர்த்து சுவை உண்டாக்குவதை அசனலிப் புலவர் ஓர் உத்தியாகவும் பயன்படுத்தியுள்ளார் எனலாம். அத்துடன் பழைய இலக்கியங்களின் உவமைகளின் மூலம் ஆசிரியருக்குரிய தமிழிலக்கிய ஈடுபாட்டினையும் அறிந்துகொள்ளலாம்.

போருக்குப் புறப்பட, வடோச்சி புறப்படும்போது, 'பூனையெலிக் கஞ்சிடுமோ புலிமானுக் கஞ்சிடுமோ' என வஞ்சினம் கூறினான். உச்சியின் படையைக் காட்டிலும் பெரிய படையுடன் வடோச்சி போருக்குச் சென்றான். படைகள் ஏழு சமுத்திரமும் ஒன்று திரண்டு போவதுபோல் காட்சியளித்தனவாம். அப்படைகள் போவதினால்

மேலே எழும்பும் தூசி சூரியனையே மறைத்துவிட்டதாம். இக்கருத்துக் களையே பின்வருமாறு கண்ணிகளில் அமைத்துள்ளார்.

வாசமுட னாயுதங்கள் வாய்ப்பா யெடுத்தணிந்து
ஆளுமந்தப் பொற்றேரி லான வடோச்சியர்கோன்
ஏழு சமுத்திரம்போ லேகினான் சேனையோடும்
ஆதித் தனுமறைந்தா னந்தரத்திற் றூசியதாய்
(வடோச்சி படைப்போர் ; கண்ணி : 482 - 484)

வடோச்சியும் படைகளும் அறபு நாட்டினூடாக மக்கமாநகருக்கு வெளியே சென்றனவாம். வடோச்சிக்கும் முஸ்லிம் மக்களின் தூது வர்க்குமிடையே உரையாடல் நடைபெற்றது. வடோச்சி தான் வந்த காரணத்தைக் கூறினான். அலியாரைக் கொன்று அவர்தம் தலையைக் கொண்டுபோய் இந்திராயனுக்குக் காட்டவேண்டும் என்று கூறினான். வெவ்வேறான உரையாடல் நிகழ்ந்தபின் அலியார் அவ்விடம் வந்தார்கள். வந்து வடோச்சி வந்த காரணத்தைக் கேட்ட முறையைப் பின்வருமாறு இந்நூலாசிரியர் கூறுகிறார்.

நாட்டுக் கதிபதியாய் நாடாள் வடோச்சியென்றான்
தேட்ட முடனலியச் சீர்கேட னைப்பார்த்து
நாடாள் வடோச்சி யென்றாய் நாடியிந்த மக்கத்திற்கு
வாடாது வந்ததென்ன வாசகத்தைச் சொல்லுமென்றார்
(வடோச்சி படைப்போர் : கண்ணி : 578 - 579)

வடோச்சியும் தான் வந்த காரணத்தை உள்ளவாறே கூறினான். இவற்றையெல்லாம் கேட்ட பிறகு அலி (றலி) அவர்கள் வடோச்சியை இஸ்லாத்தைத் தழுவும்படி அழைத்தார்கள். வடோச்சியும் இஸ்லாத் தைத் தழுவ உடன்பட்டான். போர் புரிந்து வாகை மாலை சூடவந்த வடோச்சியும் படை வீரர்களும் இஸ்லாத்தைத் தழுவினர். இதனையே ஆசிரியர் பின்வருமாறு கூறுகிறார் :

சூரியனைக் கண்ட துய்யநல்ல தாமரைபோற்
காரியமென்றே யலியைக் கண்டவர்க ளுள்மகிழ்ந்தே
வாரியென வந்த வடோச்சியர்கோ னும்படையும்
கோரியாய்த் தானே குணமான நல்மனதாய்
ஈமான் தனைமனதி லெண்ணியலி யைப்புகழ்ந்தார்
கோமா நபிக்கீமான் கொண்டான் வடோச்சியர்கோன்
(வடோச்சி படைப்போர் : கண்ணி 614 - 616)

இனி, பனிமதியைத் திருமணம் செய்யும் சூழ்ச்சியைப் பற்றி ஆராயலானார். வடோச்சிக்கு ஒன்று தோன்றியது. இந்திராயனின் மூத்த புதல்வியை மணந்த தாகி அவன் நினைவுக்கு வந்தது. தாகி, அலி (றலி) அவர்களைப் போன்ற வடிவம் உள்ளவனாக இருந்தானாம். இவ்வகையான நிலையை வடோச்சி அனைவருக்கும் எடுத்துரைத்தார். தாகி என்பவன் துட்டனில் துட்டன் என்று கூறினார். தீயவன் என்று பழி சுமத்தினார். அலி (றலி) அவர்களைப் பார்த்துப் பின்வருமாறு கூறினார்.

உங்கள்வடி வுங்கள்நிற முங்கள்முகம் போலிருப்பான்
தங்கள் குரலதுபோற் றான்பேசு வானவனும்
அங்கவன்பாற் போவோ மவன்தீனில் வராவிட்டால்
துங்கவனின் கம்மறுத்தே தோகையைநான்
கொள்வேனென்றான்
(வடோச்சி படைப்போர் : கண்ணி : 678 - 679)

வடோச்சி படைப்போரின் நிகழ்வுகள் இத்துடன் முடிவுற அடுத்த நான்காவது படைப்போர் தொடர்கிறது. வடோச்சிப் படைப்போரில் மொத்தம் 315 கண்ணிகள் இடம்பெற்றுள்ளன. ஐந்து படைப்போருள் நடுநாயகமாக அமைந்துள்ள வடோச்சிப் படைப்போர் ஏனைய நான்கு படைப்போர் பகுதியிலிருந்து சற்று மாறுபட்டுள்ளது. இப்படைப் போரில் போருக்கு வடோச்சி ஆயத்தமாகி வரும் நிகழ்வுகள் இடம் பெற்றுள்ளனவே தவிர போர் நிகழ்ச்சிகள் முன்னரே வடோச்சியின் மனமாற்றம் நிகழ்வதால் போர் தவிர்க்கப்படுகிறது. இந்நிலை இஸ்லாம் எதிர்கொள்ளும் போர்கள் அனைத்தும் பகைவரிடம் பகைமை பாராட்ட வல்ல என்பதை மெய்ப்பிக்கிறது. தற்காப்பிற்காகவே இஸ்லாம் போர்களை எதிர்கொண்டது. இஸ்லாம் விரும்பியதும் வலியுறுத்தியதும் பகைவர்களின் மனமாற்றமே. இதனை நன்கு உணர்த்துவது வடோச்சி படைப் போராகும்.

மூன்றாவது படைப்போருக்குப்பின் தாகிப் படைப்போர், நான்காவதாக 707-வது கண்ணியிலிருந்து தொடங்குகிறது. வடோச்சி இஸ்லாத்தைத் தழுவினார். தாகியின் கோட்டையை முற்றுகையிட எண்ணினார். அலி (றலி) அவர்களின் ஒத்துழைப்பை வேண்டினார். எப்படியாவது தன் எண்ணத்தை நிறைவேற்றக் கங்கணம் கட்டினார். தாகியைக் கொன்றால் தன் ஆசை நிறைவேறும் என்று மனப்பால் குடித்தார். தாகியின் கோட்டையைப் படைகளுடன் வளைத்தார்,

தாகிளன்ற மன்னன் தனிநகரை யாண்டிருக்க
ஏகிடு வடோச்சியர்கோ னிசைந்தலியும் படைகளுமாய்
நடந்துசென்று தாகியவ னற்கோட்டை யைவளைந்தே
(தாகி படைப்போர் : கண்ணி : 808-709)

கோட்டையை முற்றுகையிட்ட பின்னர் தாகியிடத்தில் ஒரு தூதன் அனுப்பப்பட்டான். அத்தூதன் நல்வழியைப் பின்பற்றும்படி தாகியிடம் இடித்துரைத்தான். அவ்வறிவுரைகள் அனைத்தும் அவனது காதில் ஏறவில்லை. தாகியின் நிலைமை தூதனுக்கு நன்கு விளங்கியது. அறிவுரைகள் கூறுவதில் பயனில்லை என்று கண்டான். அலி (ரலி) அவர்களையும் தாகியையும் ஒப்புநோக்கிக் கூறினான். பல உவமைகளைக் கையாண்டான். அலி (ரலி) அவர்களை முள்ளுள்ள கொம்பாகக் கொண்டால், தாகி முள்ளில்லாத கொம்பாவான். தாகி தேன் இல்லாத பூவாக ஒப்பிடப்பட்டால் அலி (ரலி) அவர்கள் தேன் நிறைந்த பூவாவார். இக்கருத்துக்களை இந்நூலாசிரியர் அசன் அலிப் புலவர் பின்வருமாறு கூறுகிறார்.

முள்ளுள்ள கொம்பலிகாண் முள்ளில்லாக் கொம்பே நீ
கள்ளில்லாப் பூ நீயே கள்ளுள்ள பூவலிகாண்
(தாகி படைப்போர் : கண்ணி : 750)

இத்தகைய அறிவுரைகள் பயன்படவில்லை. தாகி போருக்கு ஆயத்தமானான். போர்க்கோலம்பூண்டான். இருசாரார்க்கும்இடையே போர் மூண்டது. கடுமையாகப் போர் நடந்தது. பற்பல ஆயுதங்களால் அளவிடற்கரிய இன்னல்கள் நிகழ்ந்தன. உண்டாய சேதங்கள் மிகப் பல. போரில் நடந்ததாகக் கூறப்படும் ஒரு நிகழ்ச்சி ஈண்டு குறிப்பிடத் தக்கது. இரு சாராரும் அம்புமாரி பொழிந்தனர். இவ்வாறு அம்பு மழையை பொழிவதின் பயனாக சூரியனைக் காண முடியவில்லையாம். ஒன்றோடொன்று நெருக்கமான மிகப்பல அம்புகள் எய்யப்பட்டதால் அவ்வம்புகள் ஆதித்தனையே மறைத்து விட்டனவாம்.

ஆயுதங்க ளெல்லா மழியப் பொருதனரே
வாய்மதங்கள் பேசி வலியகணை கொண்டெறிவார்
ஆதித் தனுமறைந்தா னம்புமழை யாலுடனே
(தாகி படைப்போர் : கண்ணி : 766-767)

தாகிக்கு அறிவுரை கூறப்பட்டது. தாகியோ அவ்வுரைகளைப் பொருட்படுத்தவில்லை. போர் புரிவதிலேயே மூழ்கியிருந்தான். அலி (றலி) அவர்களால் கொல்லப்படுமுன் நல்வழியைப் பின்பற்றுமாறு புத்திமதி சொல்லப்பட்டது. ஒரு வழிப்போக்கன் ஒரு வழியில் செல்கிறான். அவ்வழியில் சென்று தனது குறிக்கோளை அடைய அவ்வழிப்

போக்கன் முயலுதல் வேண்டும். தனது குறிக்கோளை அடையப் பல நாட்கள் செல்லக்கூடும். அவ்வாறு செல்லும்போது உணவு தேவைப் படுகிறது. உணவு எளிதில் கிடைக்கமுடியாத வழியில் செல்பவர்கள் உணவைத் தம்முடன் எடுத்துச் செல்ல வேண்டும். அவ்வாறு எடுத்துச் செல்லும் உணவைப் பொதிசோறு என]வழங்குவர். எனவே, ஒரு வழியில் செல்பவனுக்குப் பொதிசோறு இன்றியமையாதது. அதே போன்று இஸ்லாம் என்னும் நேர்வழியில் செல்பவனுக்கு ஈமான் என்னும் பொர்திசோறு தேவைப்படுகின்றது. இத்தகைய மெய் அறிவினையே அசன் அலிப்புலவர் பின்வருமாறு கூறுகின்ருர்.

வழிக்குப் பொதிசோறு வண்மையுள்ள ஈமான்காண்
வழிக்குவந்து நில்லாதே பாழ்படுமுன் தேசமெல்லாம்
(தாகி படைப்போர் : கண்ணி: 780)

போர் தொடர்ந்து நடைபெற்றது. பலர் மாண்டனர். படைகள் அழிக்கப்பட்டன. பிணங்கள் குன்றுபோல் குவிந்து கிடந்தனவாம். யானை வீரர் யானையுடனே மாண்டனராம். குதிரை வீரர் குதிரை யுடன் மாண்டனராம். இத்தகைய பல கொடூரக் காட்சிகள் அப்போர்க் களத்தில் காணக்கிடக்கின்றனவாம். அக்காட்சிகளுள் ஒரு சிலவற்றைப் பின்வருமாறு வர்ணிக்கிறார் அசனலிப் புலவர்.

யானையுடன் வீழ்ந்தே தான்மாண்டு போனவரும்
தானை பரியுடனே தான்மாண்டு போனவரும்

வில்லோடு கையும் வீழ்ந்து மடிந்தவரும்
கல்லோடு கையும் கவிந்து மடிந்தவரும்

அம்பு பிடித்தவர்கை யடியற்று வீழ்வாரும்
கொம்பு பிடித்தவர்கள் குப்புறவே வீழ்வாரும்

நம்புகின்ற புத்தைவிட்டு நாடி மடிந்தவரும்
பம்பரம்போ லாடிப் பதைத்து மடிந்தவரும்

தேரோடு தான்புரண்டு செத்துக் கிடப்போரும்
ஊரோடே போகாம லொன்றிரண்டாய் வீழ்ந்தோரும்

கத்தியொடு கையுங் கரிந்து நீறானவரும்
பற்றியி முக்கநரி பாழாக் கிடப்பாரும்

வேல்பிடித்த கையோடு வீழ்ந்து மடிந்தவரும்
கோல்பிடித்த கையோடே குப்புறவே வீழ்ந்தாரும்

வலுப்பறைந்து கோட்டையின் மேல் வந்துநின்ற மானிடர்கள்
இலுப்பைக்காய் போல்நிலத்தி லெல்லோரும் வீழ்த்தனரே
(தாகி : படைப்போர் கண்ணி: 801-808)

போரின் இறுதியில் தாகி போரில் தோற்கடிக்கப்பட்டான். படையில் வெட்டுண்டான். தாகியின் தலை உடலிலிருந்து துண்டிக்கப்பட்டது. வடோச்சிக்கு அளவிலா மகிழ்ச்சி உண்டாகியது. வடோச்சி இஸ்லாத்தைத் தழுவியவர். புறுக்கான் தீன் என்னும் மார்க்கத்தை உவந்தவர். முகம்மது றசூல் (ஸல்) அவர்களுக்கு அனுப்பப்பட்டது புறுக்கான் வேதம். முகம்மது றசூல் (ஸல்) அவர்களோ மானுக்குப் பிணையாய் நின்ற உத்தமத்திருத் தூதர். இக்கருத்தினையே பின் வரும் கண்ணி குறிப்பிடுகின்றது.

மானைப் பிணைமூட்டு முகம்மதுற் றசூல்புறுக்கான்
தீனை யுவந்த சிறந்த வடோச்சியப்போ
(தாகி படைப்போர் ; கண்ணி ; 845).

தன் எண்ணம் நிறைவேறப்போவதாக உள்ளம் குளிர்ந்தார் வடோச்சி. தாகியின் தலை அலி (ரலி) அவர்களின் தலை போல் இருக்கக் கண்டார். தாகியின் துண்டிக்கப்பட்ட தலையைக் கொண்டு இந்திராயனிடம் சென்றார். அலி (ரலி) அவர்களின் தலையெனக் காட்டி பனிமதியை மணக்கவே விரைந்து சென்றார்.

தாகி கொலையுண்டது தாகியின் மனைவியாகிய இந்திராயனின் மூத்த புதல்விக்கு எட்டியது. பொறுக்க முடியாத துக்கம் அவளுக்கு. துக்கத்தை வாய்விட்டுக் கூறினாள். தாகியின் ஆற்றலைக்கூறி உள்ளம் நொந்தாள், பதைபதைத்தாள். இச்செய்தியுடன் தாகி படைப்போர் 886-வது கண்ணியுடன் முடிவுற அடுத்த இந்திராயன் படைப்போர் நிகழ்ச்சிகள் தொடக்கம் பெறுகிறது.

இந்திராயன் கொலுமண்டபத்திலே வீற்றிருந்தான். அலி (ரலி) அவர்களின் தலையைக் கொண்டு வந்திருப்பதாக வடோச்சி வாயில் காப்போன் இந்திராயனிடம் கூறினான். இந்திராயன் அளவிலா மகிழ்ச்சியடைந்தான். உடனே வடோச்சியை உள்ளே கூட்டிவரும் படிக் கட்டளையிட்டான். வடோச்சியின் தீரச் செயலை அனைவரும் மெச்சினர். இந்திராயனின் இளைய புதல்வி பனிமதிக்குத் தானேற் பாங்கான மன்னவன் என்று எல்லோரும் வடோச்சியைப் புகழ்ந்தனர் வடோச்சியின் வெற்றியை முன்னிட்டு முழு நகரமும் மகிழ்ந்தது. நகரத்தவரும் கொண்டாடினர். ‘வீராதி வீரன் வேந்தன் வடோச்சி நிகர் பாராளும் வீரரில்லை’ என இஸ்லாத்தை தழுவிய வடோச்சி புகழப்பட்டார்.

வடோச்சியும் இந்திராயன் கொலுமண்டபத்தை அடைந்தார். நாற்பத்தொண்ணாயிரந் தூண்களைக் கொண்டதாக வர்ணிக்கப்படும் இந்திராயனின் கொலுமண்டபத்தில் வீற்றிருந்த மன்னனைச் சுற்றி அமைச்சர், படைத் தலைவர் வேதியர் முதலாயினோர் குழுமியிருந்

தனராம். வடோச்சி ''அலி தலை பாரும்'' எனத் தான் கொண்டு வந்த தலையை இந்திராயன் முன் வைத்தார். வேல்விழியாள் வல்லி பனிமதிக்குப் பரிசு இது என்று கூறினார். இதனைக் கண்ட இந்திராயன் அகமகிழ்ந்தான். தான் எதிர்பார்த்தவாறு எல்லாம் நடைபெற்றன என்று உள்ளம் குளிர்ந்தான். வடோச்சியால் கொண்டுவரப்பட்ட அத்தலையைப் பார்த்து வசைமாரி பொழிந்தான். அவன் பின்வருமாறு வசைபாடினுன் என்று புலவர் அசன்அலி கூறுகிருர்.

பல்லழகு மீசைப் பருமையிதுங் கண்ணழகும்
நல்லழகுங் கண்டே நகைத்திந்திராயன் சொல்லான்

வெல்லாதபேரை யெல்லாம் வென்றனைநீ யாலிதலை
வல்லமைக் கார வடோச்சிகையால் மாண்ட னையே

இபுனியனைக் கொன்றங் கேற்றபழி வாங்கினையே
அவனிதனி லுச்சிதனை ஆலிநீ கொன்றனையே

இன்னமனே கம்பழியை யேற்றாயே ஆலியேநீ
மன்னர் மன்னரெல்லா மாளவைத்தாய் மண்டபத்தில்

வல்லபங்க ளெங்கேயிப்போ மாண்டாய் வடோச்சிகையால்
சல்லியங்க ளைவிளைக்குஞ் சாமார்த்தியம் எங்கே
என்மகள் பனிமதிக்கா யிவ்வுலகில் நீஇறந்தே
உன்தலை பரியாம விராள் வடோச்சிதந்தான்

இந்தவிதமாய் வசைகள் இந்திராயன் றானிசைத்து
(இந்திராயன் படைப்போர் ; கண்ணி : 919 - 925)

இவ்வாறு கூறிவிட்டு மறுநாளே தன் புதல்வி பனிமதிக்கும் வடோச்சிக்கும் திருமணம் நிறைவேற வேண்டும் என்று எண்ணினான் இந்திராயன். எண்ணியவாறே கட்டளையிட்டான். யானையைஅழைத்து முரசறையச் செய்தான். முரசு அடிப்போரும் இந்திராயன் கட்டளையை நிறைவேற்றினர். இம் முரசொலி பனிமதிக்கு எட்டியது, பனிமதி காரணத்தை உசாவினாள், பனிமதிக்குத் தாலிகட்டவே இம் முரசொலி என்று தாதியர் கூறினர். நிகழ்ந்தவை அனைத்தையும் ஒன்றும் விடாது தாதிமார் பனிமதிக்குக் கூறினர். அலியின் தலே வடோச்சியால் கொண்டுவரப்பட்டது என்ற கூற்றை ஒப்புக்கொள்ள வில்லை பனிமதி. அவள் பின்வருமாறு கூறினாள்.

சும்மா விருங்கள் தோன்றலலி யார்தலையை
இம்மா நிலத்திலுள்ளோ ரெவரேனும் வெட்டுவரோ

அம்மாடி சும்மா அறைந்தார்கள் பொய்யதனைத்
தெம்மாடிப் புத்தி சிறந்தஇந்த இராஜாக்கள்

நிறையா யறிந்திலரோ நீதியுள்ள இராஜாக்கள்
கரைசேருந் தாகிதலை காணுமிதிங் கென்றுசொல்லி

மனமீது தானே மதித்துமங்கை யப்போது
கனமான கன்னியர்க்குங் கன்னி பனிமதிதான்

இன்னமொரு நாளி லிச்செய்கை காண்பீரென
நன்மையாய்த் தானிருந்தாள் நாரி பனிமதிதான்.

(இந்திராயன் படைப்போர் : கண்ணி : 937-940)

தெருக்கள் அலங்கரிக்கப்பட்டன. வாழை, கமுகு முதலியன நடப்பட்டன. வன்னமுடன் கோலங்கள் வடித்தெழுதப்பட்டன. பந்தல்கள் இடப்பட்டன. பன்னீராலும் சந்தனத்தாலும் தரை மெழுகப்பட்டது. நிறை கும்பங்கள் பதிக்கப்பட்டன. இவ்வாறு பற்பல முறைகளில் அலங்காரஞ் செய்து மக்கள் களிப்பெய்தினர். அவர்கள் அடைந்த மகிழ்ச்சியை ஆசிரியர் பின்வருமாறு பாடுகிறார்.

கலியாணமென் றங்கண் களித்தாடிப் பாடிநிற்பார்
அலியானவர் போனார் ஆர்க்கும்பய மில்லை யென்பார்
பாடுவர்கள் பாடிடுவார் பாவையர்க ளாடிடுவார்
நாடு நகரமெல்லாம் நல்லோசை கொண்டிடுவார்

(இந்திராயன் படைப்போர் : கண்ணி ; 948 - 949)

இவ்வாறு ஆடிப்பாடி மக்கள் மகிழ்ந்திருக்கையில் வேதக் குறிகாரரைப் பார்த்து ''பலன் கூறுமாறு'' இந்திராயன் கட்டளையிட்டான். குறிகாரரோ ''பொல்லாங்கு தீவினை வரும்'' என்று கூறினார்கள். அத்தோடு நில்லாது ''நாளை திருமணம் நிறைவேறாது. சில நாட்கள் செல்லும். வடோச்சியே பனிமதியை மணப்பார்'' என்று கூறி முடித்தனர் குறிகாரர். இஃது இவ்வாறு இருக்க, வடோச்சியின் ஒரே ஒரு பிரார்த்தனை தாகியின் நகரிலிருந்து இப்பொழுது செய்தி வரக்கூடாது என்பதே. தன் எண்ணம் நிறைவேறும் அளவும் உண்மையில் நடந்தவை வெளிப்படக்கூடாது என்றே பிரார்த்தித்துக் கொண்டிருந்தார். இவ்வாறு எண்ணிக்கொண்டே மணக் கோலத்துடன் ஊர்சுற்றி வந்தார் வடோச்சி.

இதற்கிடையில் இந்திராயனின் மூத்த புதல்வி, தாகியின் மனைவி எழுதியனுப்பிய ஓலை இந்திராயனுக்கு எட்டியது. தாகி படையில் கொல்லப்பட்டதுவும் தாகியின் தலையையே அலி (றலி) அவர்களின் தலை என்று வடோச்சி கொண்டுவந்ததும் வெளியாயின. இந்திராய னுக்குக் கோபம் பொங்கியெழுந்தது. இவையெல்லாம் வடோச்சியின் சூழ்ச்சி என்று அறிந்தான். வடோச்சியைக் கொல்லும்படி கட்டளை யிட்டான். படைகளைத் திரட்டினான் போர் புரிய. வடோச்சியின் படைகட்கும் இந்திராயனின் படைக்கும் போர் மூண்டது. போர் கடுமை யாக நடைபெற்றது. வடோச்சியின் நிலைமை மோசமாகிவிட்டது. துணைக்கு அழைக்க அங்கு ஒருவருமிருக்கவில்லை. அலி (றலி) அவர்களை அழைக்கலாமோ என்று எண்ணினார்.

இவ்வாறு எண்ணிக் கொண்டிருக்கையில் மக்கமா நகரில் அலி (ரலி) அவர்கள் ஈச்சமரத்தில் ஏறி ஈத்தங்கனி பறித்துக் கொண்டிருந் தார். அப்பொழுது அலி (றலி) அவர்களுக்கு ஓர் ஒலி கேட்டது. அவ்வொலியைக் கேட்டதும் வடோச்சிக்கு துணைபுரிய வேண்டு மென்று தீர்மானித்தார்கள். உடனே விரைந்து சென்றார்கள்; வடோச்சி யின் பக்கத்தில் போய் நின்றார்கள். வடோச்சிக்கு உண்டான மகிழ்ச்சிக்கோர் அளவில்லை. ஏற்ற சமயத்தில் துணை கிடைத்தது என்று அல்லாஹ்வைப் புகழ்ந்தார் வடோச்சி. உடுக்கையிழந்தவன் கைபோலிடுக்கண் களைய வந்த முறையைப் பின்வருமாறு கூறுகிறார் இந்நூலாசிரியர் :

வாடும் பயிரதற்கு மழைவந்த வாறதுபோற்
றேடும் பொருள்வலியச் சிக்கினது போற்றினமும்

கண்குரு டானவர்கள் கண்பெற்ற வாறதுபோற்
புண்புகுதா ஈங்குரலிற் புண்புகுத்தி வாறதுபோல்

உண்டுடுக்க லொன்றுமில்லா துற்ற வெளியோர்கள்
கண்டெடுத்த நற்புதையல் கைசேர்ந்த வாறதுபோல்

பிள்ளையில்லா மானிடர்க்குப் பிள்ளைவந்த வாறதுபோல்
கொள்ளை வரும்போது கோவலிநீர் இங்குவந்தீர்

உயிர்போ யிருந்தா ருயிர்பெற்ற வாறதுபோல்
கைர்பெற்றுக் கொள்ளக் கத்தனலி யிங்குவந்தீர்

(இந்திராயன் படைப்போர் : கண்ணி : 1077-1081)

அலி (றலி) அவர்களின் வருகையின் பின்னர் கடுமையாகப் போர் நடைபெற்றது. இந்திராயன் இஸ்லாத்தைத் தழுவினான். சுல்தான் முகம்மது தீன் எனப் பெயர் பெற்றாராம். வடோச்சி பனிமதியை

திருமணம் புரிந்தார். எல்லாம் இன்பமாய் நிறைவேறின. இப்படைப் போர் 844 கண்ணிகளைக் கொண்டுள்ளது. இதுவே ஐந்து படைப் போருள்ளும் மிகுதியான கண்ணிகளை உடையது.

இவ்வாறு ஐந்து படைப்போரில் ஐந்தாவதாகிய இந்திராயன் படைப் போரில் கூறப்பட்டுள்ளது. இப்படைப்போரில் முஸ்லிம் அல்லாத ஒருவன் இஸ்லாத்தைப்பற்றிக் கேட்கக்கூடிய கேள்விகளை இந்திராயன் மூலமாகவும் அவற்றிற்கு ஒரு முஸ்லிம் இறுக்கக்கூடிய பதில்களை அலி (றலி) அவர்கள் வாயிலாகவும் ஆசிரியர் அசன் அலிப் புலவர் கூறுகின்றார்.

## இறவுசுல்கூல் படைப்போர்

படைப் போர் இனத்தைச் சேர்ந்த நூல்களுள் இறவுசுல்கூல் படைப்போரும் ஒன்று.

இந்நூல் சல்கா படைப்போர் என்றும் வழங்கும்.

சல்கா என்னும் பெயரை உடைய பெண்ணின் வரலாற்றினையே இந்நூல் சிறப்பாகக் கூறுகின்றது.

இப்பெண்ணைக் கற்பு நாயகி என்று அழைப்பர். இப்பெண் அல்லாஹுத் தஆலாவின் உண்மைத் திருத்தூதர் முஹம்மது (ஸல்) அவர்களுடைய இயற்கை ஆற்றலை அறிந்து ஈமான்கொண்டு இஸ்லாத்தை தழுவியதைப் பற்றியும் இந்நூல் குறிப்பிடுகின்றது.

இந்நூல் குஞ்சுமூசு லெப்பை ஹாஜி ஆலிம் புலவரவர்களால் பாடப்பட்டது. இவர் செய்யிது முகம்மதென்பவரின் புதல்வர். பூவாறு என்னும் நகரைச் சேர்ந்தவர். இவர் கல்வி கேள்விகளிற் சிறந்தவர்.

இந்நூலில் முதன்முதலில் அவையடக்கம் கூறப்படுகின்றது. அக்காப்புப் பாவில் எல்லாத் துதியும் புகழும் அல்லாஹ்வுக்கே உரியன என்றும், எல்லாப் படைப்புக்களையும் படைத்தவன் அல்லாஹ் என்றும் கூறப்பட்டுள்ளது. காப்பியங்களைப் பற்றிக் குறிப்பிடும் இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு இரண்டாந் தொகுதியில் இதுபற்றி விரிவாய் ஆராயப்பட்டுள்ளது.

## சையிதத்துப் படைப்போர்

இஸ்லாமிய படைப்போர் இலக்கியங்களுள் காலத்தால் மூன்றாவது தோன்றியது சையிதத்துப் படைப்போர் ஆகும். இதனை இயற்றியவர் தேங்காய்ப் பட்டினத்தைச் சார்ந்த குஞ்சு மூசுப் புலவர். படைப்

போர் இலக்கிய ஆக்கத்தில் குறிப்பிட்டுச்சொல்லத்தக்கபெருமையையும் சிறப்பையும் உடையவர் குஞ்சு மூசுப் புலவர். காரணம் இவர் இயற்றியுள்ள சையிதத்துப் படைப்போர், இரவுசுல்கூல் படைப்போர் ஆகிய இரண்டும் பிற படைப்போர் இலக்கியங்களிலிருந்து வேறுபட்ட பல்வேறு தனித்தன்மைகளைப் பெற்றுள்ளன. படைப்போர் இலக்கியங்களுள் பெண்களை தலைமை மாந்தராகப் பெற்றுச் சிறக்கும் படைப் போர் நூலை இயற்றியுள்ள பெருமை குஞ்சு மூசுப் புலவரையே சாரும். குஞ்சு மூசுப் புலவரின் முதல் படைப்போர் இலக்கியத்துள் தாம் சார்ந்த ஊரின் இயற்கை எழிலினை இவ்வாறு கூறுகிறார்.

தென்னுறுங் குழந்தை யென்னுந்
திருநகர்ச் சிறியே னிந்நூன்
முன்னமோ ரஜபு மாலை
முதியதூ துரையின் மாலை
பன்னுதற் குதவும் அல்லா
வருட்பாடி பாடி னேனே
வடதிசை வயலுந் தென்பால்
வாருதி குணபாலோங்கல்
குடதிசை நதியுஞ் சூழ்ந்த
குழந்தையூர்க் கதிபன் காதி
றுடலினின் றுதித்த மூசா
வுதவிய மீரான் றோன்றல்
திடனுறு முகம்ம தீன்ற
சிறுவனிக் கவிசொன் னானால்

(சையிதத்துப் படைப்போர் : 32, 33)

இக்கவியின் மூலம் குஞ்சு மூசுப் புலவரின் ஊர் வளத்தையும் அவ்வூருக்கு குழந்தை நகர் என்ற பிரிதொரு பெயர் இருப்பதையும், புலவரது பரம்பரை பற்றிய விபரத்தையும் அறிய முடிகிறது. குஞ்சு மூசுப் புலவரது இயற்பெயர் மூசிபுனு செய்யிது முகம்மது என்பதே. இச் செய்தியை சையிதத்துப் படைப் போரின் அகச் சான்றுகள் மூலமே அறிய முடிகிறது.

ஆசுமது ரங்களணி சித்திர வித்தார
மாசில் பஞ்சலக்கண நல்வாரியை நுகர்ந்த
காசி மருள் காதிறுரை கற்றது கொண்டிந் நூன்
மூசிபுனு செய்யிது முகம்மத னுரைத்தான்.

(சையிதத்துப் படைப்போர் : 34)

குஞ்சு மூசுப் புலவர் தம் புலமை சிறக்க திருப்புகழ் காசிம் புலவர், அவர் மகனார் அப்துல் காதிறு புலவர் ஆகியோரிடத்து தமிழ் இலக்கணம் கற்ற செய்தியையும் இதன் வாயிலாக அறியலாம்.

பதினெட்டாம் நூற்றாண்டு முஸ்லிம் புலவர்களுள் குறிப்பிட்டுச் சொல்லத் தக்க ஆழ்ந்த தமிழ்ப் புலமையும், தெளிந்த அறபு மொழி அறிவினையும் பெற்றவர் குஞ்சு மூசுப் புலவர். இவரது இரு படைப் போர் இலக்கியங்களும் இவரது புலமைத் திறத்திற்குத் தகுந்த சான்றுகளாக அமைந்துள்ளன.

குஞ்சு மூசுப் புலவரின் முதல் படைப்போர் இலக்கியம் ஹிஜ்றி 1216 ஆம் ஆண்டு ஷவ்வால் மாதம் அரங்கேற்றம் செய்யப்பட்டது. சையிதத்துப் படைப் போரின் அரங்கேற்றம் பற்றிய செய்தியை நூலின் இரு அகச் சான்றுகளின் மூலம் புலவர் தெரியப்படுத்துகிறார். அரங் கேற்றம் செய்யப்பட்ட கொல்லம் ஆண்டு, தமிழ் மாதம், நாள் ஆகிய செய்திகளை ஒரு விருத்தத்திலும் பிறிதொரு விருத்தத்தின் வாயிலாக ஹிஜ்றி ஆண்டு பற்றிய குறிப்புக்களேயும் ஆசிரியர் தருகின்றார்.

இங்குரை கொல்லந் தொள்ளா யிரத்தெழு பதின்மூன் றாண்டிற்
றிங்கள்பைங் குனியின் றேதி சிறந்திரு பத்து மூன்றின்
மங்கைசையி தத்தின் போரை வண்டமிழ்ப் புலவ ரென்னுங்
கங்கைமுன் குசக்குண் டென்னக் கழறினன் கவிதை தானே

ஈயுமேதனு காமுகம்மதெ ழுந்துசெல்ஹிஜு றத்ததா
மாயிரத்திரு நூறுடன்பதி னாறிலங்கியை யாண்டினிற்
றூயதிங்கள்சவ் வால்பிறந்து துளங்கிடுஞ்சது நாளிலே
பாயிரந்தரு தமிழுரைப்படி பரிவுடன்கவி பாடினான்
(சையிதத்துப் படைப் போர் : 29, 30)

இவ்வகைச் சான்றுகள் அடிப்படையில் சையிதத்துப் படைப்போர் கி. பி. 1801 ஆம் ஆண்டு தமிழ் பங்குனி மாதம் இருபத்தி மூன்றாம் தேதி அரங்கேற்றம் செய்யப்பட்டுள்ள செய்தியை அறியமுடிகிறது. இவ்வரங்கேற்ற ஆண்டு மேலே குறிப்பிட்டுள்ள அகச்சான்று வருடங் களுள் ஹிஜ்ரி ஆண்டிற்கு இணையாவதாகும். ஆனால் கொல்லமாண் டாக குறிப்பிட்டுள்ள 973 வருடத்தைக் கணக்கில் கொள்வோமாகின் சையிதத்துப் படைப் போரின் அரங்கேற்றம் (973+824) கி. பி. 1797 ஆம் வருடமாக இருக்க வேண்டும். எனினும் குஞ்சு மூசுப் புலவரின் பிறிதொரு படைப்போர் இலக்கியமான இறவுசுல்கூல் படைப் போரின் அரங்கேற்ற வருடத்தைக் கணக்கில் கொண்டு ஹிஜ்றி ஆண்டுக் குறிப்பையே சரியானதாகக் கொள்ளலாம்.

பெருமானார் நபிகள் நாயகம் (சல்) அவர்களது வாழ்வுடன் தொடர்புடைய ஒரு போர் செய்தியை அடிப்படையாகக் கொண்டதே சையிதத்துப் படைப் போர். இஸ்லாத்தில் அண்ணல் நபி (சல்) அவர்

களுக்குப் பின் இஸ்லாமிய ஆட்சியை மேற்கொண்டு ஆட்சி நடத்திய முதல் கலீபாவான ஹளரத் அபுபக்ர் சித்தீக் (றலி) அவர்களது மகன் அப்துர் ரஹ்மானால் துன்பமுற்ற யமன் நாட்டு மன்னருக்கும் அவரது மகவிற்கும் அண்ணலெம் பெருமானார் நபி (சல்) அவர்களது கட்டளை யின்படி உதவி அவரை முஸ்லிம்கள் மீட்ட செய்தியையும், மனம் மாறிய அப்துல் ரஹ்மானும் அவர் மனைவி சையிதத்தும் இஸ்லாத் தைத் தழுவி பின் அவர்களை எதிர்த்து அபாசுபியான் படைகளுடன் போராடி வெற்றி கொண்ட வரலாற்றையும் உரைப்பதே சையிதத்துப் படைப்போர். இத் தமிழ் படைப்போர் இலக்கியத்திற்குரிய வரலாற்றுச் சிறப்பு மிக்க இப் பாடுபொருள் போர் நிகழ்வினை விரிவாக அறபு இலக்கியத்தில் ஹஸனுல் பசரி என்போர் எடுத்துரைத்துள்ளார். எனவே சையிதத்துப் படைப் போரின் மூலநூல் அறபு மொழியில் இடம் பெற்றுள்ள ஹஸனுல் பசரியின் இலக்கியமே. இம் மூல நூல் பற்றிய செய்தியையும் குஞ்சு மூசுப் புலவர் தம் சையிதத்துப் படைப் போரில் தெரிவித்துள்ளார்.

இருகாதிரு விழிநாசியு மிருகாலிரு கரமு
மொருநாவொரு தலைவாய்முக மொருதேகமொ ருளமும்
வெருவாதவை யவமானிதம் வினைபாவ மகற்றி
யருள்வாய்மறை முதனூலினு மடங்காவகத் திறையே

அனமேதர வொருமாமுகி லசனுல்பசரிய்யி
னெனவோதிய திருநாமம தியல்பாகிய முதியோர்
சொனகாவிய முறைபாடுதல் சுரரோர்புக ழிறசூல்
தனதானநம் மரபோர்வெகு தயவாகவெ கேண்மோ

(சையிதத்துப் படைப்போர் : 37, 38)

ஹஸனுல் பசரிய்யியின் அறபு போர் இலக்கியத்திற்கு திருப்புகழ் காசிம் புலவரின் மகளார் அப்துல் காதிறு தமிழில் உரை நல்க அதனையே இனியதோர் படைப்போர் இலக்கியமாக நமக்கும் படைத்தளித்துள்ளார் குஞ்சு மூசுப் புலவர்.

மாதிர முத்திச் சோலை வனசமார் மடுவு மேனிக்
கோதற வளங்குன் றாத குழந்தையம் பதியில் வாழ்வோன்
வேதநன் முறைக டேர்ந்த விறலுறுங் காகி றப்துல்
காதிறிந் நூலை யாய்ந்தே கவினுற வுரைதந் தாரால்

அருந்தமிழ் அஜபு மாலை யரியதூ துரையின் மாலை
திருந்திய அறபை யோர்ந்தே தெரிவுறுந் தமிழ தாகப்
பொருந்தவே பகருங் காலி புகழப்துல் காதி றென்போர்
தருந்திரு வுரையின் வண்ணஞ் சாற்றினேன் கவிதை தானே
(சையிதத்துப் படைப்போர் : 24, 25)

இப்பாடற் செய்திகளின் வழி குஞ்சுமூசுப் புலவர் இயற்றியதான பிற இஸ்லாமிய தமிழிலக்கியங்கள் பற்றிய குறிப்பினையும் பெறலாம்.

எனவே சையிதத்துப் படைப்போர் இலக்கியம் தமிழிலக்கிய உலகில் உதயமாவதற்கு முன்னோடியாகவும்; காரணமாகவும் இருந்தவைகள் அறபு இலக்கியமும் இஸ்லாமிய மார்க்க வரலாற்றுப் போர் நிகழ்வுமே எனலாம். அறபு இலக்கியத்தின் போர் செய்திகளை குஞ்சு மூசுப் புலவர் தம் இலக்கியப் படைப்பிற்குரிய மூலாதார தரவு களாகக் கொண்டு அதனை இனியதொரு தமிழிலக்கிய பா வடிவமாக உருவாக்கினார். இப் படைப்போர் இலக்கியத்தில் பெருமானார் நபிகள் நாயகம், அலி (றலி) அவர்கள், முதல் கலிபா அபூபக்கர் சித்திக் (றலி) அவர்கள் இன்னும் பலர் பாத்திரங்களாக இடம்பெற்றிருப்பினும் இதன் தலைமை கதாபாத்திரமாகத் திகழ்வது சையிதத்து என்னும் வீர மங்கை நல்லாளே: சையிதத்து தம் பகைவனான அபாசுபியானுடன் எதிர்த்துப் போரிடும் போர்ச் செய்திகளே முக்கிய அங்கமாக திகழ்கிறது.

காண்டம், படலம், உட்தலைப்புக்கள் போன்ற பாகுபாடுகள் இல்லாத சையிதத்துப் படைப் போர் காப்பு வெண்பாவுடன் 520 பல்சந்த தொங்கல் விருத்தங்களைப் பெற்றுள்ளது. ஏகத்துவ இறையை வணங்கும் காப்பு வெண்பாவுடன் தொடங்கி பெருமானார் நபி (சல்) அவர்கள், அவர் வழி நல்லாட்சி ஏற்ற அடுத்தடுத்த கலீபாக்கள், அசுகாபிமார்கள், இறைநேசச் செல்வர்கள் முதலானவர்கள் நூலின் தொடக்கத்தில் வாழ்த்தப்படுகிறார்கள். பெருமானார் நபி (சல்) பற்றிக் குறிப்பிடும்போது இஸ்லாத்தின் அடிப்படைக் கருத்துக்கள், கடமைகள் அனைத்தையும் ஒரே செய்யுளில் ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

அசுக தென்றுகலி மாமொ ழிந்துபிகு
லகும தாகிய சலாத்தையும்
வசைய கன்றுள சக்காத்து நோன்பினிய
வரிசை கச்சிமரு வாருட
னிசைய நின்றுபொரு பீச பீலிவைக
ளின்மை யின்புரியும் நன்மையோர்
நிசியெ னுங்குழ லரம்பை மின்களுறு
நிதிந கர்க்குமண வாளரே
(சையிதத்துப் படைப்போர் : 9)

இஸ்லாத்தின் அடிப்படை ஐந்து கடமைகளாக ஏகத்துவ இறைக் கொள்கை, ஐந்து நேர வழிபாடு (சலாத்), சக்காத்து, ரமலான் மாத நோன்பு, ஹஜ் கடமை ஆகியவற்றுடன் ஆசிரியர்'மருவாருடன் இசைய நின்று பொறு பீசபில்' என்று குறிப்பிடுவது இஸ்லாமிய மார்க்கத்தி லிருந்து மாறுபட்டவர்களுடன் மேற்கொள்ளும் அல்லாஹ்வின் பாதையிலான மார்க்கப் போரினையே குறிக்கும். தமது இலக்கியத்தின் பாடுபொருளுக்கேற்ப ஆசிரியர் இங்கு பெருமானார் அவர்களைப் பற்றிக் குறிப்பிடும்போது ஐம்பெரும் கடமைகளுடன் அவர்கள் மேற்கொண்ட மார்க்கப் போர் பற்றிய செய்தியையும் குறித்துள்ளார். இவ்வாறு மார்க்கத்தில் சிறப்புப் பெற்ற பெரியோர் களின் வாழ்த்துப்பா முடிவடைந்த பின் இருபத்திநான்காம் செய்யுள் முதல் முப்பத்தி எட்டாம் செய்யுள் வரையில் சையிதத்துப் படைப்போர் இலக்கியத்தின் தோற்றம், காலம் முதலான விபரங் களை ஆசிரியர் தந்துள்ளார். முப்பத்தி ஒன்பதாம் செய்யுள் முதற் கொண்டே படைப்போர் இலக்கியம் தொடக்கம் பெறுகிறது. நபி(சல்) அவர்கள் மதீனா நகரில் தீனெறி வளர்வித்திருக்கும் நாளில் என கதைத் தொடக்கம் பெற்று நபி பெருமானார் (சல்) அவர்களையே படைத் தளபதியாகக் கொண்டு சையிதத்து போரிடும் படைச் செய்தி களை விவரித்து இறுதியில் போரில் வெற்றி கிட்டியவுடன் நபி (சல்) அவர்கள் மதீனா நகரம் திரும்புதலுடன் சையிதத்துப் படைப் போர் நிறைவு பெறுகிறது.

சையிதத்துப் படைபோரின் கதைத் தொடக்கத்தில் அமைந்துள்ள செய்யுளில் பெருமானார் நபி (சல்) அவர்கள் மதீனமா நகரில் தீனெறி யை வளர்த்திருக்கும் காட்சியை புலவர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

அதுனான் கினையெனும் வாருதி மணியா மபுதுல்லா
சுதனா கியநபி நாயகஞ் சுருதிப் படிஇல்மு
பதினா லினுமே லாய்ந்தவர் பயகாம்பர் நம்மிறசூல்
மதினா நகர்மிசை தீனெறி வளர்வித் திடுநாளில்

(சையிதத்து படைப்போர் : 39)

இவ்வாறு தம் அசுகாபிகள் அனைவரும் உடனிருக்க ஓர் அறபி அண்ணலாரை காண வருகின்றார். அவரது கண்களிலிருந்து நீர் பெருகுகிறது. உடல் பதறுகிறது. வேர்த்து உடலெங்கும் வடிகிறது. அவர் வந்தடைந்த தோற்றமோ கானகத்தில் மேய்ந்து கொண்டிருந்த அழகிய மானை கவ்விச் சென்ற கொடிய புலியின் வாயிலிருந்து தப்பி ஓடிவந்த மானை ஒத்திருந்தது. இத்தகு நிலையில் அறபி அங்கு வந்தடைந்தது, அண்ணலாரின் அடைக்கலம் நாடியே!

இருகோவிடை வடிநீர்முகம் வெழிறாமரை நனையப்
பெரிதாயுட லயர்வும்பொடி வெயர்வும்பிறழ் மனமும்
அரிவேங்கையின் வாய்பட்டகல் மானன்னே வொரறபி
யரியோனரு ளிறசூல்நபி யவைநாடிய டைந்தான்.

(சையிதத்துப் படைப்போர் : 41)

நபிகள் (சல்) திலகத்திடம் அடைக்கலம் நாடி வந்தவரே யமன் நாட்டு மன்னரான அசுமத் இப்து கிதாப். இவர் இஸ்லாத்தில் ஈமான் கொண்டு, பெருமானார் அவர்களின் தரிசனத்திற்காக தமது சுற்றத் தாருடன் வரும் வழியில் இஸ்லாத்தின் வழிச் செல்லாத அப்துல் ரஹ்மான் என்பவரின் ஆட்கள் வழி மறித்து இப்னு கிதாப் அவர்களின் பொருட்களையும், உடைமைகளையும் கவர்ந்ததுடன் அவரையும் அவரது மகனையும் சிறைப்பிடித்தனர். இந்நிலேயில் தம்மையும் தம் மகனையும் விடுவிக்கக் கோரினர் அசுமத் இப்னு கிதாப். இவ்வேண்டு கோளுக்குச் செவி சாய்க்காத அப்துர் ரஹ்மான், அசுமத்தை மட்டும் விடுவித்து அவர் மகனை மேலும் பொருள்கள் தந்தால் விடுவிப்பதாகக் கூறினான். இந்நிலேயிலேயே புலியின் வாய்பட்டு தப்பித்த மானாக பெருமானாரிடம் அடைக்கலமாக அசுமத் வந்தடைந்தார். அசுமத் அவர்களது துன்பத்தைச் செவிமடுத்துக் கேட்ட பெருமானார் (சல்) பெரும் துன்பமுற்றார்கள்.

இன்னன மசுமத் தோத வெழினபி யிறசூ லுல்லா
தன்னுளம் பெருக வாடிச் சலித்தன ரவையி லுற்ற
மின்னென வனி யேந்தி விறல் மன நிறைந்த தீனின்
மன்னவ ரெவரு மேங்கி வாய்விடுத் தழுவ தானார்

(சையிதத்துப் படைப்போர் : 69)

அத்துடன் அப்துல் ரஹ்மானின் இஸ்லாத்திற்கு முரண்பட்ட செயல் அறிந்து பெரு சினமும், விழி சிவந்தும் காணப்பட்டார்கள், நபி (சல்) அவர்கள். நபிகள் (சல்) அவர்களின் கடுங் கோபத்தை உணர்ந்த அபூபக்கர் சித்தீக் (றலி) அவர்கள் தம் மகன் அப்துல் ரஹ்மானின் கொடுஞ் செயல் அறிந்து சொல்லொணாத் துயரத்திற்குள்ளானார்கள்.

வள்ளனம் மிறசூலுல்லா மனம்வெகுண் டுரைத்த மாற்றந்
தெள்ளிய கருத்துள் மேவத் திறலபூ பக்கர் கேட்டுக்
கள்ளவிழ் விசனக் கண்ணீர் கவின்மழை சொரித லாகி
விள்ளருந் துயர வாரி மீதடைந் தழுவ தானார்

(சையிதத்துப் படைப்போர் : 80)

அபூபக்கர் சித்தீக் (றலி) அவர்கள் பெரும் துன்பம் அடைந்ததுடன் இஸ்லாமிய மார்க்கத்திற்கு எதிராகச் செயல்பட்டு வரும் அவர்தம் மகன் அப்துர் ரஹ்மானை நேர் வழிப்படுத்தி, தீனின் உத்தம குணங் களை எடுத்துரைத்து இஸ்லாம் வழி நெறிப்படுத்தவும் எண்ணினார் கள். அவர்தம் எண்ணத்தை நிறைவு செய்து கொள்வதற்காக பெரு மானார் நபி (சல்) அவர்களிடத்து அனுமதியும் வேண்டினார்கள். இக் காட்சியை குஞ்சு மூசுப் புலவர் அபூபக்கர் சித்தீக் (றலி) அவர்களின் வாய்மொழி வாயிலாகவே உணர்த்துகிறார்.

முத்திரை நபியே யானு முகிறவழ் சயில மேனிப்
புத்தினை வணங்கி யேத்தும் புதல்வனை நமது தீனி
லுத்தம குணத்தி னாலே யுவப்பொடு மழைப்ப தற்கே
கத்தனைக் குறித்தென் பாலிற் கவின்விடை தருக வேண்டும்

(சையிதத்துப் படைப் போர் : 85)

அப்துர் ரஹ்மான் அருமறை நெறியை உணர்ந்து தீனின் வழி நடக்க இணங்கினால் அவரை பெருமானார் நபி (சல்) அவர்களிடத்து அழைத்து வருவதாகக் கூறினார் அபூபக்கர் சித்தீக் (றலி) அவர்கள். அவ்வாறு நடக்க இணங்காமல், இஸ்லாத்தின் மார்க்கத்தை மறுத்திடு வானாகில் அவனுடன் போரிட்டு வெற்றியை பீசபீல் மார்க்க அடிப் படையில் நிலைநிறுத்துவதாகவும் குறிப்பிடுகிறார்கள். சையிதத்துப் படைப் போரில் இஸ்லாம் வழி வகுத்துக் காட்டும் மார்க்கப் போரின் ஆரம்ப கட்டமாகும், இது.

அங்கவ னிடத்தி லேகி யருமறை நெறியுந் தீனின்
பொங்கறி வெவையுங் கூறிப் பொருந்தயா னழைத்த போதிற்
சங்கையா யெனது கூடச் சார்ந்தன னாகி லன்பா
யெங்கணன் னபியே நும்பா லியல்புட னெய்து வாமே.

அல்லது நமது மார்க்க மவன்மறுத் திருப்ப னாகி
லெல்லையி லுயிர்போய் நெய்த தொகுத்திபோ லெழுந்து பாயக்
கல்லினை வணங்கி யேத்துங் கரத்தொடுஞ் சிரத்தை யென்கை
வில்லுமிழ் வடிவா ளோங்கி வீசியங் கடைவ னையா

(சையிதத்துப் படைப்போர் : 86, 87)

என சூளுரைத்து போருக்குப் புறப்பட்ட அபூபக்கர் சித்தீக் (றலி) அவர்கள் வழியில் முர்ரத்து என்பவரை சந்தித்து அவரை தீனின் வழி நெறிப்படுத்தி பெருமானாரிடம் அழைத்து வந்தார்கள். அதன்பின் அபூபக்கர் சித்திக் (றலி) அவர்கள் தம் மகன் அப்துர் ரஹ்மானின்

நிலையைக் கூறி அவனை இஸ்லாத்தின் பக்கம் கொண்டுவர விரும்பு வதையும் முர்ரத்திடம் தெரிவிக்க அதற்கு முர்ரத்து போர்க்கோலம் முதலில் வேண்டாம் எனவும் கடிதத்தின் மூலம் அவரது விருப்பத்தை எழுதிக் கொடுத்தால் தாமே தூதாகச் சென்று வருவதாகவும் கூறி னார். இதற்கேற்பவே அபூபக்கர் சித்தீக் (றலி) அவர்கள்

பாதக முறுங்குபி ரெனும் பகையகற்றி
வேதரிறசூல் நபிதன் மெல்லடி யிறைஞ்சப்
போதமுட னேவருதல் புந்தியென வெண்ணிக்
காதலொடு வம்மென வரைந்தனர் கரத்தால்
(சையிதத்துப் படைப் போர் 136)

இக்கடித்தின் செய்திகளை ஐந்து செய்யுள்களில் ஆசிரியர் விவரித் துள்ளார். மைந்தனின் மனமாற்றத்தை விரும்பும் தாய் உம்மு ரூமான் அவர்களும் விரிவான கடிதம் ஒன்றினை எழுதி முர்ரத்துவை தூதாக அனுப்பி வைத்தார்கள். உம்மு ரூமானின் கடிதச் செய்தி இது வரையில் சையிதத்துப் படைப் போர் இலக்கியத்தில் இடம் பெற்ற நிகழ்ச்சிகளான அசுமத் வந்து கூறியது - அதனைக் கேட்டு பெருமானார் (சல்) அவர்கள் அப்துர் ரஹ்மான் மீது வெகுண்டது முதலான அனைத்தையும் சுருக்கி பதின்மூன்று பாக்களில் உரைப்பதாக உள்ளது.

பெற்றோரில் மடல் எடுத்து - தூதாகச் செல்லும் முர்ரத்து பல்வேறு நிலங்களைக் கடந்து அப்துர் ரஹ்மானின் இருப்பிடத்தை அடைந்தார். அபாசுபியானின் மகளாகிய சையிதத்தை மணம் புரிந்து மருமகனாகிய அப்துர் ரஹ்மானுக்கு அந்நிலையில் அபாசுபியான் அசுமத்தின் மகனைக் கொன்று விடும்படி கட்டளையிட்டிருந்தான். இத் தருணத்தில் அவ்விடம் சென்றடைந்தார் தூதுவர் முர்ரத்து. அபாசுபி யானின் கட்டளையை நிறைவேற்றக் கருதி அப்துர் ரஹ்மான் அசுமத்தின் மைந்தனது தலையறிந்திடுமின் என ஏவலர்க்கு கட்டளை யிட்டான். இந்நிலையில் அது பெரும் பாவம் என்பதை எடுத்துக் கூறும் முர்ரத்து அப்துர் ரஹ்மானின் தந்தை அபூபக்கர் சித்திக் (றலி) அவர் களது விருப்பத்திற்கேற்ப அவனை விடுவிக்க வேண்டும் எனக்கூறினார்.

மழைமுகி லனைய செங்கை வடிவப்துர் றகுமா னந்த
தளைபடு சிறுவன் றன்னைத் தலையறிந் திடுமி னென்ன
மொழிதலுஞ் சிலர்கொண் டேக முறைமுறை புகழ்ந்து வாழ்த்தி
யழுதிரு விழிநீர் மார்பி லருவிபோற் பாய்ந்த தன்றே

அப்படி யழுது வாடி யரசனே யும்மை யீன்ற
மெய்ப்புக ழுடைய வேத விறல பூபக்க ராணை
யிப்பொழு தெளிய னாவிக் கிரங்கியே யுரிமை யாகச்
செப்பியங் கழைத்துக் காவல் செய்திட வேண்டு மென்றார்.

(சையிதத்துப் படைப்போர் : 205, 206)

முர்ரத்தின் வேண்டுகோளுக்கிணங்க தந்தையின் பொருட்டு அசுமத்தின் மைந்தனை அப்துர்ரஹ்மான் விடுவித்த செய்தியை அறிந்த அபாசுபியான் கடுங்கோபமுற்று அவனை விடுவித்ததற்கான காரணத்தை வினவி அறிந்தபின் இவ்வாறு உரைக்கலுற்றான்.

இவையுரை வழங்க வேந்தனிருவிழி யனலைக் காட்டி
நவையுறு மாவு தன்னை நயந்தவுன் றாதை சென்னி
புவிபடத் தறிப்ப னன்னோன் புன்னெறி விடுநீ யென்னச்
சுவையறு மொழிகள் யாவுந் துணிவுட னுரைத்தா னன்றே

(சையிதத்துப் படைப்போர் : 212)

அபூபக்கர் சித்தீக் (றலி) அவர்களைப் போரிட்டு வெல்வேன் என அபாசுபியான் கூறியதைக் கேட்ட அப்துர் ரஹ்மான் தம் தந்தையின் வீரம், புகழ், ஆற்றல் அனைத்தையும் எடுத்துக்கூறி உங்களில் முப்பது பேர் சென்று அவரைக் கொல்ல நினைத்தாலும் அன்னாரின் சிறு முடியை முறிப்பதியலாது எனக் கூறினார்.

அப்பொழு தவனை நோக்கி யடலரி கடுப்பச் சீறி
மெய்ப்புக ழுடைய தாதை விறல்வலிப் பெருமை வீரஞ்
செப்பியங் கவர்தே கத்தின்சிறுமுடி யொன்று நின்போன்
முப்பது பெயர் சென்றாலு முறிப்பதற் கரிதென் றாரால்

(சையிதத்துப் படைப் போர்: 213)

இம் மொழி கேட்டவுடன் செய்வதறியாது அவ்விடம் விட்டு நீங்கினான் அபாசுபியான். இந்நிலையிலேயே இஸ்லாத்திலிருந்து இதுவரை முரண் பட்ட வாழ்வு மேற்கொண்டிருந்த அப்துர் ரஹ்மானின் மனத்துள் மன மாற்றம் ஒன்றன்பின் ஒன்றாக இடம் பெறத் தொடங்கியது. சையிதத்துப் படைப்போர் இலக்கியத்தின் திருப்பு மையமாகவும் இதனைக் கூறலாம். அப்துர் ரஹ்மானின் மனமாற்றத்தை நாடி வந்திருக்கும் தூதுவர் முர்ரத்து இத்தருணத்திலேயே அப்துர் ரஹ்மானின் பெற்றோர் நிலையை அவலச் சுவையுடன் எடுத்துரைக் கிறார்.

தந்தைதாய் உமைத்தா னாடிச் சஞ்சலக் கடலில் முழ்கி
யெந்தநாட் காண்போ மென்ன வெழில்பெறும் விழிநீர் சிந்தி
மைந்தனே யெனவுங் கூவி வாய்விடுத் தழவே வேலை
விந்தைசே ரினத்தோர் கூடி விலக்கவே வேலை யையா

(சையிதத்துப் படைப்போர் 216)

தமக்காக தம் பெற்றோர் அடையும் இன்னலைக் கேட்ட அப்துர் ரஹ்மான் அவர்கள் இனி அடைந்த துன்பமே அளவில்லாதது.

சிரசினை நிலத்திற் றாக்கிச் செழுமணி மகுடந் தூளாய்க்
கரைவது நிலையில் லாமற் கண்சிவந் துடலம் வேர்த்து
மரைமலர் வதனம் வாடி வழங்குமைம் பொறியொ டுங்கித்
தரைமிசைச் சுழன்று வீழ்ந்து தன்னையே மறப்ப தானார்

(சையிதத்துப் படைப்போர் ; 218)

இந்நிலையில் முர்ரத்து தாம் அங்கு வந்த காரணத்தையும், அவர் கொண்டு வந்த முடங்கலையும் அப்துர் ரஹ்மானிடம் சேர்ப்பித்தார். அதனைக் கண்ட அப்துர் ரஹ்மானோ :

சுந்தர முடங்கள் மீது துலங்குமுத் திரையை நோக்கி
முந்திய வமலை தன்னின் மும்மடங் கழுது வீழ்ந்தார்

(சையிதத்துப் படைப்போர் ;221)

இவ்வாறு பல தடவை அழுது வீழ்ந்த நிலை கண்ட அவரது துணைவியார் சையிதத்து என்ன காரணம் என வினவலுற்றார்.

அடிக்கடி யெழுந்து வீழ்ந்தே யழுகுர லமளி கேட்டுத்
தடக்கடத் தந்தி வீரந் தவிரப்துர் றகுமான் பாரி
திடக்கடு வனைய கண்ணாள் செய்யிதத் தெனுநா மத்தின்
மடக்கொடி விரைவி னோடு வந்தெவை விளைந்த தென்றாள்

(சையிதத்துப் படைப்போர் : 222)

சையிதத்துப் படைப் போரின் தலைமை மாந்தராகத் திகழும் சையிதத்தை இவ்விலக்கியத்தில் இப் பாடல் மூலமே அறிமுகம் செய்வித்துள்ளார், குஞ்சு மூசுப் புலவர். மனைவியின் வினாவிற்கு பதிலளித்த அப்துர் ரஹ்மான் தம் மனம் முற்றிலும் மாறி, அபாசுபியானின் பொருட்டால் தம் மனம் மாறான பாதையில் சென்றதை நினைத்து உள்ளம் வருத்த தம் பாரியாள் சையிதத்துடன் சேர்ந்து முர்ரத்து முன்னிலையில் இஸ்லாத்தைத் தழுவினார்.

ஆகையால் வரிசை மேவு மரியப்துர் ரகுமா னந்த
வாகுசே ரிசுலான் மைந்தன் மலர்க்கரம் பிடித்து வாழ்த்த
யேகனே யுண்மை யென்று மெழினபி யிரசூ லென்று
மோகமாங் கலிமா முற்று மொழிந்தனர் முக்கா லன்றே
(சையிதத்துப் படைப்போர் ; 226)

இச் செய்தி அபாசுபியானின் செவிக்கு எட்டியது. அபாசுபியான் மீண்டும் வந்து அசுமத்தின் மகனை தளையில் பூட்டி கொல்லுமாறு கட்டளை இட அதனை வெகு சினம் கொண்டு களைந்தெறிகிறார் அப்துர் ரஹ்மான். இந்நிலையில் மேலும் அங்கிருக்க மனம் பொறாமல் தமது மனைவி சையிதத்துடன் மதீன மாநகரம் நோக்கிச் சென்று பெருமானார் நபி (சல்) அவர்களை தரிசிக்க விரும்புகின்றார். இவ் விருப்பத்தை மனையாளிடம் இவ்வாறு கூறுகின்றார்.

எங்கள்நன் னயினார் முகம்மது நபியை
இருதயத் திருத்திஎன் தகப்பன்
தங்கிய மதீன வளநகர் அதனில்
சார்வதற்கு இன்றுயான் பயணம்
உங்கள்தன் இனத்தோடு உனையருள் தாதை
உறுமனை சேர்ந்திரும் எனவே
திங்கள்என் றிலங்கு முகமலர் தனக்கோர்
தீயெனச் சுடும்சொல்சொற் றனரால்
(சையிதத்துப் படைப்போர் : 242)

கணவர் அப்துர் ரஹ்மானின் இவ்வுரையைக் கேட்ட மனைவி சையிதத்தோ பெருமானாரின் பெருமைதனை மனத்தில் கொண்டு கலிமா மொழிந்து பயணத்திற்கு தயாரானார்.

அன்னவை உரைப்ப அரிவைசெய் யிதத்தும்
ஐயனை இழந்தனள் தலைவன்
உன்னிய படிஅப் பெரும்புதி புகுத
உமக்குமுன் பயணம்என் றுரைத்தே
மின்னிய வடிவாள் வலிபெறும் கணவன்
விளங்குமென் கரத்தினைத் தீண்டி
நன்னயம் பொருந்து நபிதிருக் கலிமா
நாவினால் நயம்பட நவின்றாள்
(சையிதத்துப் படைப்போர் : 243)

இவ்வாறு அப்துர் ரஹ்மான், தமது மனைவி, அசுமத்தின் மைந்தன், முர்ரத்துடன் மதீன மாநகரம் புறப்படும் செய்தியை அறிந்த அபாசு பியான் அவர்களை போகவிடாமல் தடுக்கவே இதன் நிமித்தமாக

அபாசுபியான் படைகளுக்கும் அப்துர் ரஹ்மான் கூட்டத்தாருக்கும் ஒரு போரே மூண்டுவிடுகிறது. இப்போரினை தலைமையேற்று நடத்தியது அப்துர் ரஹ்மானின் துணைவியார் சைபித்தே. இப்போரில் குறிப்பிடத்தக்க அம்சம் இறைக் கொள்கை முரண்பாடு காரணமாக சையிதத்து அவரது தந்தையுடனேயே போரிடுவதாகும். அப்துர் ரஹ்மானும், சையிதத்தும் பகைவர்களிடமிருந்து தங்களைக் காத்துக் கொள்வதற்காக மேற்கொள்ளப்பட்ட தற்காப்புப் போரே இது. இப்போர் நிகழ்வுகளை குஞ்சு மூசுப் புலவர் மிக விரிவாக எஞ்சியுள்ள இலக்கியப் பகுதியில் காட்டுகிறார்.

இஸ்லாமிய படைப் போர் இலக்கியங்களுள் போர் நிகழ்ச்சிகளை தலைமையேற்று நடாத்தும் பாத்திரங்களாக வருபவர்கள் அநேகம் ஆண்பாற் பாத்திரங்களே. குஞ்சு மூசுப் புலவரது படைப்போர் இலக்கியங்களான சையிதத்துப் படைப்போர், இறவுசுல்கூல் படைப் போர் ஆகிய இரண்டு இலக்கியங்களில் மட்டுமே பெண்கள் போரினை தலைமையேற்று நடத்தும் பாத்திரங்களாக இடம்பெற்றுள்ளனர். இவ்வியல்பு குஞ்சு மூசுப் புலவரது படைப்போர் இலக்கியத்தின் தனித்தன்மை எனலாம். இஸ்லாமிய படைப்போர் இலக்கியங்கள் மட்டுமல்லாது தமிழிலக்கியத்தின் போர் பாடல் இலக்கியங்களில் பெண்ணைத் தலைமை மாந்தராகக் கொண்ட இலக்கியங்கள் இடம்பெறவில்லை என்பது இங்குச் சுட்டிக்காட்டத்தக்கது. எனவே பெண்ணிற்கு முக்கியத்துவம் அளித்து போர் இலக்கியத்தில் தலைமை மாந்தராக உலவ விட்டிருக்கும் பெருமை குஞ்சு மூசுப் புலவரையே சாரும்.

அபாசுபியானின் பெரும் படைகள் சையிதத்தினை சூழ்ந்து கொள்கின்றன. இக்காட்சியைக் குஞ்சு மூசுப் புலவர் உவமை நயத்துடன் எடுத்துரைக்கிறார்.

அரியை வெல்லுதற் கோரிக ளடர்ந்தது போலும்
வரியி னைத்தகர் வெருட்டிட வளைந்தது போலும்
பெரிய பாந்தளைத் தேரைகள் பிடிப்பது போலும்
பருதி போன்றசை யிதத்தினைப் பற்றலர் வளைந்தார்

எரியை மாய்த்திடப் பஞ்செதிர்ந் தீண்டிய போலுங்
கருட னார்தமைச் சுகத்திரள் கடித்தன போலும்
பருதி யோடுதன் முடவனே பழிப்பது போலும்
வரிவி ழித்திரு மயிலுடன் மன்னர்கள் பொருதார்

(சையிதத்துப் படைப்போர் : 379, 380)

இங்கு புலவர் போர்க்களத்தில் தலைமை மாந்தரை எதிரிப் படைகள் சூழ்ந்த காட்சியை விவரிக்கும் திறத்தில் தலைமை மாந்தரின் போர்த் திறன் திறம்பட வெளிப்படுகிறது. இத்தகு முறையில், சூழ்ந்த

பகைவர்களை முறியடிக்க சையிதத்தின் கைகளிலிருந்து அம்புகள் எங்களைத் தடுக்க எவரால் முடியும் எனக் கூறி புறப்பட்டுச் சென்று சூழ்ந்த பகைவர்களை எமனிடம் ஒப்படைத்துச் சென்றனவாம். அத்துடன் மட்டுமல்லாமல் விடுத்த கணைகள் பகைவர்களின் உட லெங்கும் தேடி அனைத்திடத்திலும் முக விழியிலும்கூட உட்புகுந்து சென்றனவாம்.

மின்னி னுண்ணிடை சையிதத்து அணிவிரல் விடுத்த
கொன்னு னைக்கணைக் கூற்றினைத் துணையெனக் கூட்டி
யொன்ன லார்வயிற் றினுமு ரத்தினும் புயத்தும்
சென்னி நன்முக விழியையுந் தேடியுட் புகுந்தே

எடுத்த வில்லுடன் இடக்கையு மிலங்குசெம் புருக்கின்
தொடுத்த சட்டையும் உரத்தையும் துளைத்தகத் துயிரை
அடுத்து வெளவியப் புறம்புகுந் தெமன்காத் தளித்தே
தடுத்தது ஆரெனத் தாவின தையல்கைச் சரங்கள்

(சையிதத்துப் படைப்போர் : 373, 375,)

இத்தகு கொடும் போரினை, சையிதத்து பெரும் படையை எதிர்த்துப் போரிடும் செய்தியை, பெருமானார் நபி (சல்) அவர்கள் அறிந்து தற்காப்புப் போருக்குத் துணை நிற்க அடலேறு போன்ற அலீ (றலி) அவர்கள், ஆமிர் (றலி), சுபைர் (றலி), மிக்தாது (றலி) ஆகிய நால்வ ரையும் பரிவாரங்களுடன் சையிதத்திற்கு உதவியாக அனுப்பி வைத் தார்கள். இந்நால்வரும் படைகளுடன் வரும் காட்சி கடலும் ககனமும் வானக் கோள்களும் வயப்படை வீரர்களும் மாநிலமும் இன்ன பிறவும் நடுங்கும்படியாக இருந்தனவாம். சையிதத்தின் போர்த் திறத்துடன் உதவிப் படைகளும் வந்துறவே அதன்பின் எதிரிப் படைகளின் நிலையை புலவர் மிகவும் சிறப்பாக எடுத்துரைத் துள்ளார்.

கால றுந்துவிழ ஆயு தத்தினொடு
கைய றுந்துவிழ மன்னர்கள்
மேல றுந்துவிழ மோலி குட்டுமுடி
மிகஅ றுந்துவிழ வாயுறுந்
தால் அறுந்துவிழ வாக்ர மித்துநடை
தாவும் வெம்பரிக டாளிணை
நால றுந்துவிழ வள்ளலா ரலியும்
நால்வ ரும்படை முருக்கினார்

(சையிதத்துப் படைப் போர் : 395)

இவ்வாறு அபாசுபியானின் எதிரிப் படைகள் கையறுந்தும், புயம் அறுந்தும், காலறுந்தும், வாயறுந்தும் விழச் செய்த வீராங்கனை சையிதத்தின் போர்த் திறத்தால் அங்கு ஓர் இரத்த ஆறு தோன்றியதோ, என்னும் அளவிற்கு இரத்தப் பெருக்கு காணப் படுகிறது.

கைய றுந்துபுய வரைய றுந்துபய
காலறுந்துவிழ வாயற
மெய்ய றுந்துவிரி யுரம றுந்துகடை
நடைவெப் பரிக்கள மறுந்திடச்
செய்யி தத்தெனுமி சைந்த நாமமுறு
திருவ ருள்பொருத செங்களம்
வைய கத்திலொரு புதிய சோரிநதி
வந்து தோன்றுவது போன்றதே
(சையிதத்துப் படைப்போர் : 402)

இந்தகு முறையில் பெருக்கெடுத்து ஓடும் இரத்த வெள்ளம் மலையி லிருந்து ஆற்று நீர் பெருக்கெடுத்தோடுவது போன்றிருந்ததாம். போர்க்களத்தில் சையிதத்து போர்ப் படைகளை நடத்திய விதத்தை படிப்போர் உள்ளத்திலும் அச்ச உணர்வைத் தூண்டும் வண்ணம் ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

பலிகொள்சை யிதத்துமோர் பஞ்ச வாசியைப்
புலியென நடத்தினள் புவி நடுங்கவே
(சையிதத்துப் படைப்போர் : 435)

குஞ்சு மூசுப் புலவர் போர்க்களக் காட்சியை விவரிக்கும் திறன் அவரே நேரிடையாக இருந்து கண்டுற்ற காட்சிகளைக் கூறுவது போல் அமைந்துள்ளது. போர்க் களத்தில் ஒவ்வொரு விஷயங்களையும் மிக நுண்ணியமாக விவரித்துள்ளார். போர் வீரர்கள் உடம்பில் எத்தனை காயங்கள் பெற்றனர், ஒவ்வொரு காயங்களும் எந்தெந்த போர்க் கருவிகளின் காரணமாக ஏற்பட்டன. போருக்கு என்னென்ன கருவிகளைக் கொண்டு சென்றனர், போரில் பங்கு பெற்றோரின் எண்ணிக்கை, போரில் இறந்தவர்கள் எத்தனைபேர் என்பது போன்ற ஒவ்வொரு விபரங்களும் விரிவாகவும் உணர்வுப் பூர்வமாகவும் சையி தத்துப் படைப் போரில் தரப்பட்டுள்ளது. இவற்றிற்குரிய சில சான்று களைக் காண்போம்.

போரிடுவதற்காக வரும் போர் வீரர்கள் என்னென்ன வாத்தியங் களைக் கொண்டு வந்தனர் என்பதை ஒரு பாடலில் ஆசிரியர் குறிப்பிட்

டுள்ளார். இதில் சங்க காலத்தில் பயன்படுத்திய பல்வேறு வாத்தியக் கருவிகளின் பெயர்கள் இடம்பெற்றுள்ளன.

முரசு துந்துமி திமிலை பம்பைகள்
முருடு திண்டிம மத்தளம்
குரை செய் பூரிகை நவுரி காகளம்
கொம்பு மோகர வீணைகள்
பெருவ ணப்பறை சின்ன முந்துடி
பேரி கின்னர மும்தவில்
அரவம் மிஞ்சிய கடல மைந்திட
ஆர்த்த டர்ந்தன சேனையே

(சையிதத்துப் படைப்போர் : 265)

கடும்போரில் ஈடுபட்டு மயக்கமடைந்ததால் அப்துர் ரஹ்மானின் உடலிலிருந்து ஆடைகள் அகற்றப்படும்போது அவர் உடம்பில் உள்ள காயங்கள் நூறு எனவும் அவைகள் எந்தெந்த கருவிகளால் உண்டாயின என்பதையும் ஆசிரியர் கூறுகிறார்.

அன்ன காலை அகும தண்ணல்
அரிய மாமன் மைந்தனார்
மின்னு சட்டை முற்றத் தென்னும்
வீரியர் கழற்றருங்
கொன்னு னைக்க வண்கல் லம்பு
கொண்டு புண்கள் அறுபதும்
பின்னு மிக்க வாளினுற்ற
பெரிய காயம் நாற்பதே

(சையிதத்துப் படைப்போர் : 298)

இவ்வாறு போர் நிகழ்வுகள் ஒவ்வொன்றையும் புலவர் விவரித்துச் சொல்லுவதால் படிப்போரும் இலக்கியத்துடன் மனம் ஒன்ற முடிகிறது. குஞ்சு மூசுப் புலவரின் போர் வர்ணனையில் குறிப்பிடத்தக்க பிறிதொரு அம்சம் அவர் பயன்படுத்தும் உவமை சார்ந்த வர்ணனைத் திறமாகும். போர் நிகழ்ச்சிகளைப் பல்வேறு சுவை மிகுந்த வர்ணனைகளால்விளக்குகிறார். சையிதத்துப் போரிடும் திறத்தால் எண்ணற்ற போர் வீரர்கள் வயிறுஅறுபட்டு கடலை யொத்த செந்நீரில் மிதந்தனராம். அவ்வாறு மிதந்த பிணங்களின் வயிற்றிலிருக்கும் குடல்களைப் பருந்துகள் வந்து பற்றிக் கொண்டு மேலே பறந்தனவாம். இக்காட்சி புவியில் இளைஞர்கள் நின்று பட்டம் விடுவது போன்றிருந்ததாம்.

வாரி நிகர்த்த செந்நீரில் உறும்பிண
வல்லுத ரக்குடலை
நேரொடு பற்றி யெடுத்து பருந்து
நெடுந்தொலை வின்செலவே
தாரணி மீது தரித்திளை ஞோர்கள்
சமைத்துள பட்டமதைச்
சீரொடு கட்டிய நூலொடும் விட்டுச்
சிறந்துப றந்தன போல்

(சையிதத்துப் படைப்போர் ; 484)

இத்தகு போர்க் களக் காட்சியைக் கண்ட எஞ்சியிருந்த ஒருசில பகைவர் கூட்டமும் தப்பித்தோம் என்ற நினைப்பில் வெருண்டு ஓடி ஒளிந்தனர்.

எறிந்தகல் வரவு கண்டங்
கெழுந்தகல் காகம் போலும்
பறந்தசெம் பருந்தைக் கண்ட
பஞ்சுகம் வெருண்ட போலும்
மறந்திகழ் புலியைக் கண்ட
மானினம் வெகுண்ட போலும்
தறிந்துயிர் போய் வெருண்ட
தரியலர் ஓடி னாரால்

(சையிதத்துப் படைப்போர் ; 487)

புலியெனப் பாய்ந்து போர் செய்திட்ட சையிதத்தின் அடலேறு போன்ற வீரத்திற்கு இணை கொடாத பகைவர் கூட்டம் இறுதியில் வீழ்ந்துவிடவே இஸ்லாம் வெற்றி பெறுகிறது. போருக்குப்பின் அனைவரும் மகிழ்ச்சி ஆரவாரத்தால் தற்காப்புப் போரின் வெற்றிக்குக் காரணமான சையிதத்தை போற்றிப் புகழ்ந்தனர். இதனை ஆசிரியர் இவ்வாறு குறிப்பிடுகிறார்.

கண்கள்செம் முகந்தாள் வாய்ந்த
கமலமென் றிலங்கித் தோன்றும்
பெண்கனி சையி தத்தைப்
பெலன்தரு சோகின் மீதே
வெண்கதிர் மணியின் கற்றை
வீசிய படங்கி லேற்றி
மண்கடல் வரையும் மெய்க்க
வாக்கிய முழக்கல் செய்தார்.

(சையிதத்துப் படைப்போர் ; 500)

இதன் பின் அனைவரும் மதீன மாநகரம் புகுந்து பெருமானார் நபி (சல்) அவர்களைத் தரிசனம் செய்து

வள்ளலிற சூலெ னமன் றாடிநதி நீர்தந்
தெள்ளியவிண் ணூர்வதுவை யின்னுணவு நல்கித்
தெள்ளு முசு லீம்களொடு செம்பொன்நகர் சேர்ப்பாய்
விள்ளும்மறை நாலையும் விதித்த முதலோனே

(சையிதத்துப் படைப்போர் : 513)

என வேண்டி நின்றனர். இத்துடன் சையிதத்துப் படைப்போர் இலக்கியத்தை நிறைவு செய்திருக்கின்றார் குஞ்சு மூசுப் புலவர்.

சையிதத்துப் படைப்போர் தலைமை மாந்தராக பெண்பாற் பாத்திரம் இடம் பெற்றிருத்தல் என்ற நிலையில் ஏனையபிற படைப்போர் இலக்கியங்களிலிருந்து மாறுபட்டுள்ளது. அத்துடன் ஒரு போர் இலக்கியத்தை சுவைபட எடுத்துரைப்பதிலும் குஞ்சு மூசுப் புலவரின் சையிதத்துப் படைப்போர் சிறந்திருக்கிறது. பல்வேறு தமிழிலக்கிய மரபுகளை முறையாக குஞ்சுமூசுப் புலவர் தம் இலக்கியத்தில் பின்பற்றியுள்ளார். இது ஒரு இஸ்லாமியத் தமிழிலக்கியம் என்று படிப்போர் உணர முடியாத அளவிற்கு அறபு சொல்லாட்சிகள் மிக மிக குறைவே ஆகும். பெயர்ச் சொற்கள் மற்றும் கலிமா போன்ற ஒரு சில அறபுச் சொற்களே சையிதத்துப் படைப்போரில் இடம்பெற்றுள்ளது. வரலாற்றுப் பின்புலத்தை படிப்போர் முன் நிலைநாட்டவும், இலக்கியத் தலைமை மாந்தரின் பெருமையை வலியுறுத்தவும் புலவர் தம் மொழி ஆற்றலை நன்கு பயன்படுத்தியுள்ளார்.

படைப்போர் இலக்கிய வரிசையில் நான்காவது நிலையில் தோன்றியுள்ள இறவுசுல்கூல் படைப்போரினை இயற்றியதும் சையிதத்துப் படைப்போர் ஆசிரியரான குஞ்சு மூசுப் புலவரே. ஏனைய படைப்போர் இலக்கியங்களிலிருந்து அளவிலும் உள்ளடக்க அமைப்பு முறையிலும் மாறுபட்ட இறவுசுல்கூல் படைப்போரை சையிதத்து படைப்போருக்கு பதினேழு ஆண்டுகளுக்குப் பின் கி.பி. 1818 ஆம் ஆண்டு குஞ்சு மூசுப் புலவர் இயற்றியுள்ளார். சல்கா என்னும் பெண் மணியே இப் படைப்போர் இலக்கியத்தின் தலைமைப் பாத்திரமாகும். ஏகத்துவ இறை எதிர்ப்பாளரான தந்தை இறவுசுல்கூலை எதிர்த்து பெருமானாரின் பின் பலத்துடனும் நற்றுணையுடனும் போரிட்டு வெற்றி பெறும் வீராங்கனை சல்காவின் வரலாறே இந் நூலின் உள்ளடக்கமாக அமைந்துள்ளது.

இதற்குப்பின் அப்துல் காதிர் புலவர் அவர்களால் 1874 ஆம் ஆண்டில் காசிம் படைப்போர் வெளியிடப்பட்டுள்ளது. இமாம் ஹசனாரின் இளஞ் செல்வர் காசிம் எசீதை எதிர்த்து நின்று வெற்றி

பெற்ற வீர வரலாற்றினையும் பின் வஞ்சகத்தாரின் சதியில் அகப்பட்டு வீழ்ந்து வீர மரணம் எய்திய அவல நிலையையும் இப்படைப்போர் இலக்கியம் எடுத்தியம்புகிறது. இது 218 ஈரடிப் பாக்களால் அமைந்துள்ளன.

காசீம் படைப்போருக்கு அடுத்துத் தோன்றியுள்ளது மலுக்கு முலுக்கின் படைப்போர் ஆகும். வாலை அப்துல் காதிர் சாகிப் புலவர் இதனை கி.பி. 1876-ம் ஆண்டில் வெளியிட்டுள்ளார். பெருமானார் நபிகள் நாயகம்(சல்) அவர்கள் தம் தோழர்களுடன் இணைந்து நடத்திய ஒரு போரினை அடிப்படையாகக் கொண்டமைந்ததே இவ்விலக்கியம். (இது மலுக்கு முலுக்கு ராஜன் கதை என்றும் அழைக்கப் படுகிறது).

அ. லெ. அ. அமீது அவர்களால் 1883 ஆம் ஆண்டில் இபுலீசு படைப் போர் என்னும் நூலும் பூவார் செய்யது முஹம்மது புலவரவர்களால் 1909 ஆம் ஆண்டில் நபுஸூ படைப்போரும் இயற்றப் பட்டுள்ளது. இபுலீசை எதிர்த்து ஈமான் போர் புரிந்து வெற்றி கொள்வதாகவே மேற்சொன்ன இரு படைப் போர் நூல்களும் அமைந்துள்ளன.

வரலாற்றுப் பிரசித்தி பெற்ற கர்பலா களப்போரினை விவரிப்பதே ஹுசைன் படைப் போர். பெருமானாரின் நற்பேரர் இமாம் ஹுசைன் அவர்களது போர்த் திறனையும் வெற்றி மரணத்தையும் படைப்போர் இலக்கியமாக காளை ஹஸனலிப் புலவர் உருவாக்கியுள்ளார்.

மேற்சொன்ன படைப் போர் இலக்கியங்களை அடிப்படையாகக் கொண்டு தமிழிலக்கிய வரலாற்றினை அணுகும்போது படைப்போர் இலக்கியங்களின் உருவ உள்ளடக்க அமைப்பு முறை இதற்கு முந்திய நிலையில் தோன்றியுள்ள பிற தமிழிலக்கியங்களிலிருந்து மாறுபட்டிருப்பதை அறியலாம்.

திறனாய்வுக்குட்படுத்தப்பட்டுள்ள படைப்போர் இலக்கியங்களை அடிப்படையாகக் கொண்டு படைப் போர் என்னும் புதுவகை இலக்கிய வகை இவ்வாறு இருத்தல் வேண்டும் என்று வரையறை செய்யலாம்.

இஸ்லாமிய நெறியும் தமிழ் இலக்கிய மரபும் இணைந்ததின் பயனாய் முஸ்லிம் தமிழ்ப் புலவர்களால் இயற்றுவிக்கப்பட்ட ஒரு புதுவகை இலக்கியப் பிரிவே படைப் போர் இலக்கியங்களாகும்.

இத்தகு புதுவகை இலக்கியப் பிரிவிற்குரிய பாடுபொருள் இஸ்லாமிய மார்க்கத்துடன் தொடர்புடைய ஏதாவது ஒரு போர்ச் செய்தியாக அமைதல் வேண்டும்.

போருக்கான அடிப்படைக் காரணம் மண், பொன், முதலான ஆதிக்க ஆசைகளாக இருத்தல் கூடாது. அதற்குப் பதிலாக இஸ்லாமிய மார்க்கக் கொள்கை முரண்பாடுகளே காரணமாக இருத்தல் வேண்டும்.

இதனடிப்படையில் மேற்கொள்ளப்படும் போரின் நோக்கம் அநீதியை அகற்றுவதும், ஒன்றிறைக் கொள்கையை நிலைநாட்டுவதும் தற்காப்புமாக இருக்கலாம்.

போரின் நோக்கம் நிறைவுறும் வகையில் எதிர்த் தலைவர்கள் பலரும் ஏகத்துவத்தை இறுதியில் மனமுவந்து ஏற்கின்ற பொது நிலையும் வேண்டும்.

படைப்போர் இலக்கியங்கள் அனைத்திலும் அடி நாதமாக எவ்வாறு ஒன்றிறைக் கொள்கை விளங்குகிறதோ அதேபோல் படைப் போர் இலக்கியங்களின் தலைமை மாந்தர் யாராக இருந்தாலும் தலைமைச் சிறப்புக்கு அப்பாற்பட்டு பெருமானார் நபிகள் நாயகம் அவர்களுக்குத் தனிச் சிறப்பு வழங்கப்படுதல் வேண்டும்.

படைப் போர் இலக்கியங்கள் அனைத்திலும் அவற்றின் தலைப் பிற்கேற்ப போர் நிகழ்வுகளே மேலோங்கி இருத்தல் வேண்டும். இப் போர் நிகழ்வுகளில் தலைமை மாந்தரின் போர்த் திறன் முக்கியத் துவம் பெற்று அதனைச் சிறப்பித்துப் பாடப் பெறுதல் வேண்டும்.

படைப்போர் இலக்கியங்கள் அறபு, பாரசீக மொழிகளில் அமைந்த அம்மொழி இலக்கியங்களின் தழுவலாகவும் இருக்கலாம்.

பரணி போன்ற பிற தமிழ் இலக்கியப் போர் பாடல்களின் அதீதக் கற்பனைக்கும், நம்பத் தகாத நிகழ்வுகளுக்கும் படைப்போர் இலக்கியங்களுள் இடம் இருத்தல் கூடாது.

வீரயுகப் பாடல்களின் தன்மையும் காப்பியக் கூறுகளும் நாட்டுப் புறவியல் இயல்புகளும் படைப்போர் இலக்கியத்தில் கலந்திருக்கலாம்.

மேற்கூறிய தன்மைகள் அனைத்தும் படைப்போர் இலக்கியங் களுக்கிருக்க வேண்டிய சிறப்புப் பண்புகளாகும். இனி படைப்போர் இலக்கியங்களின் பாடுபொருள் அமைப்பு முறையில் சில பொதுமைக் கூறுகளும் உண்டு. படைப்போர் இலக்கியத்தின் உள்ளடக்க அமைப்பு முறை இவ்வாறு இருத்தல் வேண்டும்.

"கடவுள் வாழ்த்து- இஸ்லாமிய மார்க்க வரலாற்றுச் சுருக்கம் அல்லாஹ்வின் கட்டளையும் இறைத்தூதர் ஜிப்றயீல் (அலை)

அவர்களின் வரவும்- பகைவர்களின் அறிமுகம் -அல்லாஹ்வின் கட்டளைக்கேற்ப தூது அனுப்புதல் -தூது மறுப்பு -பகைவர் போர்க் கோலம் -தற்காப்பு எழுச்சி -போர்க்களக் காட்சி -தலைமை மாந்தரின் போர்த் திறன் -எதிரிப் படைகளின் வீழ்ச்சி -இறுதியில் பகைவரின் அகமாற்றம் -ஒன்றிறைக் கொள்கையை ஏற்றுப் போற்றுதல்''.

கடவுள் வாழ்த்துப் பகுதியில் ஏகத்துவ இறைவனைப் போற்றுவதுடன் அவனது திருத்தூதர் பெருமானார் (சல்) அவர்களையும் அவருக்குப் பின் இஸ்லாமிய ஆட்சியை மேற்கொண்ட கலிபாக்களான அபூபக்கர் சித்தீக் (றலி), உமர் (றலி). உதுமான் (றலி) அலீ (றலி) ஆகியோரையும் வாழ்த்துதல் வேண்டும். இவர்களது வாழ்த்திற்குப் பின் படைப்போர் ஆசிரியர்களின் எண்ணத்திற்கேற்ப இறைநேசச் செல்வர்களது வாழ்த்தும் இடம்பெறலாம்.

இஸ்லாமிய மார்க்க வரலாற்றுச் சுருக்கத்தில் பெருமானார் நபிகள் நாயகத்தின் பிறப்பு, அவர் மக்கா மதீன நகரில் மார்க்கத்தை நிலை நாட்டிய செய்திகள் இடம்பெற்றிருத்தல் வேண்டும். படைப்போர் இலக்கியத்திற்கு அடிப்படையான போர்ச் செய்தி இஸ்லாமிய மார்க்க வரலாற்றில் எந்தச் சூழலில் இடம்பெற்றது என்பதைச் சுட்டிக் காட்டவே இப்பகுதி இடம்பெற்றுள்ளது.

எல்லாம்வல்ல அல்லாஹ்வின் கட்டளையின்படியே இஸ்லாமிய மார்க்க வரலாறு அமைந்துள்ளது. அவனது வழி:பின்படியே இஸ்லாத்திற்கு எதிர்பட்ட இன்னல்கள் நீங்கி அது இவ்வுலகில் வேரூன்றியது இதற்கேற்பவே படைப்போர் இலக்கியத்தில் இடம்பெற்றிருக்கும் போருக்குக் காரணமாக விளங்கும் எதிரிகள் பற்றிய செய்தியும் அல்லாஹ்வின் கட்டளையாக ஜிப்றயீல் மூலமாக படைப்போர் இலக்கியத்தின் தலைமை மாந்தருக்கு வந்தடையும் செய்தியை அனைத்து படைப்போர் இலக்கியங்களிலும் சுட்டப்படுதல் வேண்டும்.

இத்தகு முறையில் தலைமை மாந்தருக்கு வந்தடையும் கட்டளையே தூதுவர் மூலமாகப் பகைவருக்கு அறிவித்தலும் அவர்கள் மறுத்ததின் பயனாய் போர்க்களம் உருவாவதும் படைப் போர் இலக்கியங்களுள் இடம்பெறுதல் வேண்டும்.

படைப்போர் இலக்கியங்களின் உருவம் தொடர்பாக எந்தவொரு வரையறையையும் கூறுதல் இயலாது. படைப்போர் இலக்கியங்கள் குறிப்பிட்ட உறுப்புகளை தலைப்பாகக் கொண்டு அமைதல் வேண்டும் என்ற கட்டுப்பாடு இல்லை. அதேபோல் இத்தனை செய்யுட்களைப் பெற்றுவர வேண்டும் என்றோ இன்ன யாப்பில்தான் பாடப்பெறுதல் அவசியம் என்றோ கூறுதற்கியலாது.

# முனாஜாத்து

அறபுச் சொல்லான முனாஜாத்து என்பதன் நேரடியான பொருள் 'இரகசியமாகச் சொல்லுதல்' என்பதாகும். இஸ்லாமிய தமிழ்ச் சிற்றிலக்கியப் பரப்பில் தனித்ததொரு இலக்கிய வடிவமாகத் திகழும் முனாஜாத்து என்னும் பிரிவின்கீழ் பல்வேறு இலக்கியங்கள் அடங்கி யுள்ளன. இவ்விலக்கியங்கள் பெரும்பாலும் அல்லாஹ்வின் நல்லடி யார்களைப் புகழ்ந்து பாடும் பாடற் தொகுதிகளை உள்ளடக்கமாகப் பெற்றுள்ளன. இப்பாடற் தொகுதிகளை நோக்கும்போது 'வழிபாட்டுப் பிரார்த்தனை, என்ற பொருளும் முனாஜாத்து நூல்களுக்குப் பொருந்து மெனலாம். முனாஜாத்துப் பாடல்களுக்கென்று பாடல் வரையறையோ ஏனைய பிற இலக்கண வரம்பினையோ கூறவியலாது.

முனாஜாத்துப் பாடல்கள் பாடாத முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள் இல்லை என்றே கூறிவிடலாம். காப்பியம் இயற்றிய புலவர்கள் கூட முனாஜாத்துப் பாடல்கள் பாடி உள்ளனர். பெரும்பாலும் அவை புகழ்ச்சிப் பாடல்களாகவே அமைந்துள்ளன. பாவளம் மிக்க தமிழ் மொழியின் செய்யுள் வளம் பெருக முனாஜாத்துப் பாடல்கள் பெரிதும் பயன்படுத்தப்பட்டுள்ளன. பாவளத்தினைப் பெருக்கிய முனாஜாத்துப் பாடல்களில் இஸ்லாமிய போதனை பொதிந்திருந்தது. பாமரமக்களும் இஸ்லாத்தை தெளிவாகப் புரிந்து கொள்ளும் வாய்ப்பைப் பெற்றினர்.

குத்பு நாயகம், திருக்காரணப் புராணம், திருமணிமாலை, புது குஷ்ஷாம் என்னும் நான்கு காப்பியங்களையும் மக்ககாக் கலம் பகம், நாகையந்தாதி போன்ற பல சிற்றிலக்கியங்களையும் சித்திர கவிகள் உட்பட தனிப்பாடல்கள் பலவற்றையும் இயற்றிய புலவர் நாயகம் என்னும் சேகுனாப் புலவர் என்றும் வழங்கப்பெற்ற செய்கு அப்துல் காதிர் நெயினார் லெப்பை ஆலிம் புலவர் பல முனாஜாத்துப் பாடல்களைப் பாடி உள்ளார். எந்த ஒரு புலவரும் அல்லாஹ்வின் பேரில் முனாஜாத்து பாடியே ஆரம்பிப்பது வழக்கம். சேகுனாப் புலவரும் முதலில் ஹக்குபேரில் முனஜாத்துப் பாடி உள்ளார். இங்கே ஹக்கு என்பது உண்மை. உண்மையானவன் எனப் பொருள்படு கின்றது. எனவே இது அல்லாஹ் மீது பாடப்பட்ட முனாஜாத்தாகும். இம் முனாஜாத்துப் பாடலுக்குப் பின்புலமாய் அமைந்தது சென்னை மாநகரில் ஏற்பட்ட ஓர் அபாயம். கி.பி. 1843-ம் ஆண்டு சென்னையில் பேதி நோய் ஏற்பட்டது. அது உபா என்று அழைக்கப்பட்டுள்ளது. அந்த நோயின் அபாயம் உணரப்பட்டது. முஸ்லிம் மக்கள் ஒருங்கு கூடி சேகுனாப் புலவரை அண்டி இந்த நோயினால் ஏற்படக்கூடிய கேடு-பலாய்-நீங்கிட அல்லாகுத்த ஆலாவைப் புகழ்ந்து ஒப்பாகத் தங்களுக்கு ஒரு முனாஜாத்துப் பாடித்தரவேண்டும் என்று கேட்டுக் கொண்டனர்.

புலவர் நாயகமும் இணங்கினரார்கள். அவ்வாறே பாடிக் கொடுத்தார்கள். நோய் அபாயமும் நீங்கிவிட்டது. எல்லோரும் மகிழ்ந்தனர். இங்கே குறிப்பிடப்பட்ட 'புகழ்ந்திரப்பு' என்பதையும் முனாஜாத்துக்குரிய கருத்தாகக் கொள்ளலாம். பதினொரு பாடல்களைக் கொண்டுள்ளது இம்முனாஜாத்து. முதலாவது பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

காவலாய் நிற்கும் வல்லோன் கத்தனாய்ச் சீவனெல்லாம்
ஆவலாய்ப் போற்றி வாழ்த்தி யதற்குண வளித்த கோமான்
நாவினா லெளியோர் கேட்கு நாட்டத்தின் படியே தந்து
தாவிலா றகுமத் தாலே தற்காக்கும் பொருள தாமே.

அல்லாஹ்வின் அடியார்களை அல்லாஹ்வே பாதுகாக்கவேண்டும் என்பதனை வலியுறுத்தி அடியார்கள் நோயிலிருந்து தப்பித் தங்கடங் அணுகாமல் அவர்களைக் காப்பாற்றும்படி இறைஞ்சினார்கள். முகம்மது நபி (சல்) அவர்கள் போதித்த மார்க்கத்தைப் பின்பற்றி ஒழுகுகிறவர் களைக் காப்பாற்றும்படி வேண்டினார்கள். இஸ்லாமிய மார்க்கத்தவ ரான தீனோரைக் காப்பற்றும்படி மன்றாடி பாடினார்கள். வரக்கூடிய ஆபத்திலிருந்து அவர்களைக் காப்பாற்றும்படி கோரி ஒரு பாடலில் இவ்வாறு பாடியுள்ளார்.

வள்ளன் மகுமூ தெனுநயினார் வழியி லொழுகி உன்னுடைய
விள்ளு மார்க்கந் தனையெடுத்து விளக்குந் தீனோ ரானகயினால்
தெள்ளு மறிவே மெய்ப்பொருளே தெளிவே எங்கள் கண்மணியே
எள்ளு மாபத் தணுகாமல் இன்பம் புரிவாய் றகுமானே. (9)

இவை கழிலடியாசிரிய விருத்தங்களாக அமைந்துள்ளன.

ஆசிரிய அகவலிலும் சேகுனாப்புலவர் அல்லாஹ்வைப் 'புகழ்ந் திரத்தல்' செய்துள்ளார். முனாஜாத்தும் பாடி உள்ளார். முதல் நான்கு அடிகளும் இவ்வாறு அமைந்துள்ளன.

ஆதியே மெய்மை யரும்பொரு ளனைத்தும்
நீதியே யோங்கு நிராதரத் துறையே
மன்னுயிர்க் கெல்லா மனவுயி ராகி
இன்னுயிர்க் கின்ப மிரங்குமா தவமே.

பின்னர் அல்லாஹ்வின் அழகுத் திருப்பெயர்கள் எனும் அஸ்மாவுல் ஹுஸ்னா சிலவற்றை அமைத்துப் பாடியுள்ளார். இத்தகைய அழகுப் பெயர்கள் பத்தினை இங்கு பயன்படுத்தி உள்ளார். றகுமான், றஹீம் என்னும் அல்லாஹ்வின் அழகுத் திருநாமங்கள் இரண்டனை இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார்.

உள்ளத் தறிவா லுணர்தற் கரியதோர்
வள்ள றகுதி வாழ்றகு மானே.
நேர்மையிற் சிறந்த நீதியிலாக்கிச்
சீர்மைக ளுதவுஞ் சிறப்பின் றஹீமே.

கடைசி அடிக்கு முந்திய அடியை மூன்று சீர் கொண்டதாக அமைத்து இவ்வாறு பாடி உள்ளார்.

ஆதரவேது மறியேன்
போதர வாகப் பொருளருண் மன்னே.

மற்றொரு 'புகழ்ந்திரத்தல்' பாடலின் நாகூர் ஆண்டகையை முற்படுத்தி அல்லாஹ்விடம் இவ்வாறு குறை இரங்கி உள்ளார் புலவர் நாயகம்.

தோத்திரஞ் செய்யத் துணையா யிணையில்
பாத்திரம் பெற்றுப் பாக்கியம் பெறவே
முத்திசேர் நாகை முதுநகர்
தத்துவம் பூண்ட ஷாகுல் ஹமீதே.

பூபாளக் கண்ணிகளில் மற்றொரு புகழ்த்திரத்தல் பாடல் அமைந் துள்ளது. கர்ப்பமுற்ற பெண்கள் ஒன்பது மாதம் நிறைவானதும் அல்லாஹ்விடத்தில் அடைவாய் இரக்கும் பாடலாக அமைந்துள்ளது. முதல் மூன்று பாடல்களிலும் அல்லாஹ்விடம் குறை இரங்கப்படுகிறது.

வள்ளல் முகம்ம திறசூல் தம்மையே - புவியி லனுப்பி
வழியு மொழியு மருளு நாயனே
உள்ள நன்றி தன்னில் மிகவுமே கேட்குமுன்னம்
உதவி செய்யு மெங்கள் நாயனே. (3)

அடுத்து நபிமார்களின் நம் பிராட்டிமார்களின் பொலிவினால் - பறக்கத்தால்-அல்லாஹ்விடம் உதவி கோரப்பட்டுள்ளது,

நீதமுடைய ஆதம் ஸபீயுல்லா-கிருபை கொண்ட
நிதியின் மதியின் ஹவ்வா பறக்கத்தால்
மாத ருலகத்திற் பெற்றுப் பலுகியே துயரமின்றி
வாழ்ந்துண் டிருக்கக் கருணை புரிகுவாய். (4)

நபிகள் செய்கு இபுறாஹீமென்போர் - இன்ப மனைவி
நம்பும் சாறா தேவி பறக்கத்தாற்
புவியிற் றொடர்ந்த போர்கள் கருவினா லிடரில்லாமல்
புகழ்ந்து பெறுக றகுமத் தருளுவாய், (5)

புகழு மெங்கள் முகம்மதுர் றசூல் - தேவிமார்கள்
பொருந்தும் வரிசை யினிய பறக்கத்தால்
மகிழு முலகில் இன்ப மாதர்கள் - வருத்தமின்றி
மக்கள் பயந்து செழிக்க அருள்செய்வாய். (9)

நபிமார்களின் துணைவியரின் பொருட்டால் குறை இரங்கிய புலவர் நாயகம் அடுத்து நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களின் புதல்வியர் நால்வரையும் - ஸைனபு, றுக்கையா, உம்முகுல்தூம், பாத்திமா - குறிப்பிட்டு அவர்கள் பொருட்டால் அல்லாஹ்விடம் குறை இரங்கி உள்ளார்.

வரிசை ஸைனபுடன் றுக்கையத்து - உம்முகுல்தூம்
மருவும் பாத்தி மாதம் பறக்கத்தால்
பிரிச மாகச் சோபனத்துடன் - மடந்தை மார்கள்
பிள்ளைச் செல்வங் கொள்ள அருள்குவாய் (9)

தொடர்ந்து வரும் பதினொரு பாடல்களிலும் பெருமானார் (சல்) அவர்களின் இளைய புதல்வியும் அலி (றலி) அவர்களின் அருமை மனைவியாரும் அசன் (றலி) அவர்களினதும் உசைன் (றலி) அவர் களினதும் தாயாருமாகிய பாத்திமா (றலி) அவர்களைத் தனிமையாகக் குறிப்பிட்டு அவர்கள் தம் பொருட்டால் கர்ப்ப மகளிர் சலிப்பில்லாமல் பிள்ளை பெற அருள் புரியுமாறு அல்லாஹ்விடம் குறை இறங்கப் பட்டுள்ளது.

ஆல நபிதம் மருமை மக்க ளிளைய பிள்ளை
அழகாம் பாத்தி மாதம் பொருட்டினால்
கால காலந் துயர மின்றியே உம்மத்தோர்கள்
களிப்புக் கொள்ளச் சிறப்புப் பெருக்குவாய். (18)

அசனை யுசைனைப் பெற்ற நாயகம் - அன்பும் பண்பும்
அணியும் பாத்தி மாதம் பறக்கத்தால்
இசையும் நாரி மார்கள் கருவினால் - வருத்தமின்றி
ஈடேற்றம் பெற்றிருக்க அருள் செய்வாய்.

முனாஜாத்துப் பாடல்களில் யாப்பமைதி பேணப்பட்டுள்ளதென முன்னர் குறிப்பிட்டோம். இப்பாடல்கள் சிலவற்றில் தமிழ் யாப்பமைதி பேணப்பட்டுள்ள அதே சமயம் இலக்கண வழு இடம் பெற்றுள்ளதைக் காணலாம். அவ்விலக்கண வழுக்கள் தமிழ் மொழி யைப் பொறுத்த மட்டிலேதான் வழுக்கலாகக் கொள்ளலாம். அறபு மொழி அவற்றை வழுக்களாகக் கருதாது. தமிழ் மொழியில் உள்ள உயிர் மெய்யெழுத்துக்கள் ங, ட, ல, ள, ழ, ர, ண, ன, என்பன ஒ

போதும் மொழிக்கு முதலில் வாரா. மற்றும் சில உயிர் எழுத்துக்களைக் கொண்ட உயிர்மெய் எழுத்துக்களே மொழிக்கு முதலில் வரும். ஆனால் அறபு மொழியில் அப்படியில்லை. எல்லா எழுத்துக்களும் அறபு மொழி மொழியில் மொழிக்கு முதலில் வரும். எனவே இந்த நியதியைப் பின் பற்றி சேகுனாப் புலவரும் ஏனைய புலவர்களும் முனாஜாத்துப் பாக் களைப் பாடி உள்ளனர். அறபு அரிச்சுவடியில் அறபு எழுத்துக்கள் இடம் பெற்றுள்ள ஒழுங்கு முறைக்கு இணங்க ஒவ்வோர் எழுத்தையும் முதல் எழுத்தாகக் கொண்டு முனாஜாத்துப் பாடல்கள் பாடப்பட் டுள்ளன. செய்கு அப்துல் காதிறு நயினார் லெப்பை ஆலிம்புலவர் அவர்கள் இம்முறையைப் பின்பற்றி முகம்மது நபி (சல்) அவர்கள் பேரில் முனாஜாத்துப் பாடி உள்ளார். றசூலுல்லா பேரில் முனாஜாத்து என அதனைக் குறிப்பிட்டுள்ளார். அத்தகைய பாடல்களிலே இஸ்லா மியத் தத்துவ ஞானம் பொதிந்துள்ளமையைக் காணலாம். அறபு அரிச்சுவடியில் எழுத்துக்களைக் கொண்டு தொடங்கும் பாடல்கள் அறபு எழுத்துக்களில் எழுதப்பட்டால் அறபு லிபியில் பயிற்சி உடையோர்க்கு படிப்பதே எளிதாயிருக்கும். தமிழில் எழுதப்பட்டிருந்தால் அந்த எழுத்தோ சொல்லோ எதுவென அடையாளங் காண்பது சிரமமா யிருக்கும்.

றசூலுல்லா பேரில் முனாஜாத்து என்னும் பகுதியில் இடம் பெற் றுள்ள 29 செய்யுட்கள் ஒவ்வொன்றும் அகுமது நபியுல்லா என்றும் முகம்மது நபியுல்லா என்றும் முடிவுறுவதைக் காணலாம். அறபு அரிச்சுவடியில் முதலாம் எழுத்தான அலிபு என்னும் எழுத்துடன் முதலாம் செய்யுள் தொடங்குகிறது.

'அலிபெழுத் தொன்று மூன்றா யைந்துமா யேழுமாகி' என் அலிப் என்பது முதற் சொல்லாய் அமைந்துள்ளது. அ என்னும் எழுத்து மொழிக்கு முதலில் வரும் ஆதலால் அலிபு என்று தொடங்கும் செய்யுள் தமிழ் இலக்கண மரபு வழுவாது வந்துள்ளது. இப்பாடல்களின் தொடக்கமான அறபு எழுத்துக்கள் ஒவ்வொன்றும் ஓர் அறபுச் சொல் லுக்கு முதலாய் அமைந்துள்ளன. அவ்வறபுச் சொல்லோ ஒவ்வொரு பாடலுக்கும் முதலாக அமைந்துள்ளது. அறபுச் சொற்களை முதலில் கொண்டு பாடல்கள் தொடங்கிய போதிலும் எதுகை மோனை நயங்கள் யாப்பமைதியுடன் இப்பாடல்களில் விளங்கக் காணலாம்.

அறபு அரிச்சுவடியில் பத்தாம் எழுத்து றே என்பதாகும். தமிழ் இலக்கண மரபுக் கிணங்க றகரம் மொழிக்கு முதலில் வராது. ஆனால் புலவர் நாயகம் அறபு றே என்றும் எழுத்தை வைத்துப் பாடி உள்ளார். அருள் என்னும் பொருளில் வரும், றகுமத் என்னும் அறபுச் சொல் லைக் கொண்டு அமைந்துள்ள அவருடைய பாடல் இவ்வாறு அமைந் துள்ளது.

றகுமத்துக் குரிய பேறும் றியாலத்தும் பொதிந்து நிற்ப
அகமுற்ற மணியாய் நின்ற அகுமதாம் அறுவா குக்கும்
பகுமற்ற மூன்றி னுக்கும் பதவிய பொருளாய் நின்றே
முகமொய்த்த வள்ள லான முகம்மது நபியுல்லாவே. (10)

அறபு அரிச்சுவடியின் 19-வது எழுத்து கயின் (غ) என்பதாகும். இவ்வுச்சரிப்பைத் தமிழில் எழுதமுடியாது. எனவேதான் ககரம் பயன் படுத்தப்பட்டுள்ளது. அறபுச் சொல் (غَار) என்பது குகையைக் குறிக்கும். பெருமானார் முகம்மது (சல்) அவர்களும் அபூபக்கர் (றலி) அவர்களும் தௌர் என்னும் குகையிலிருந்து நிகழ்ச்சி ஒரு பாடலில் முதலடியில் பேசப்பட்டுள்ளது. அறபு அரிச்சுவடியின் 19-வது எழுத்தை (غ) முதலெழுத்தாகக் கொண்டு இவ்வாறு அமைந் துள்ளது. அப்பாடலின் முதலாம் அடி :

காரினி லிருக்கும் போதிற் கலங்கபூ பக்கருக்கு (19)

அறபு எழுத்துக்களில் மூன்று லகரங்கள் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் மூன்றாவது அறபு அரிச்சுவடியில் 23-வது எழுத்து (ل) என்பது ஒரு பாடலின் முதலாம் அடியின் முதல் எழுத்தாய் அமைந் துள்ளது. ஆனால் லகரம் தமிழ் இலக்கணத்திற்கிணங்க மொழிக்கு முதலில் வராது. எனினும் ஆசிரியர் அதனை இங்கே மொழிக்கு முதலில் வர அமைத்துப் பாடி உள்ளார். பெருமான்ார் முகம்மது (சல்) அவர்களைப் படைத்திராவிடில் உலகங்களையே படைத்திருக்கமாட் டேன் என அல்லாஹ் அல்குர் ஆனிலே கூறியுள்ளான். ஆலம் என்னும் அறபுச்சொல் எல்லா உலகங்களையும் குறிக்கப்பயன்படுத்தப்படும் ஒரு சொல்லாகும். 'லவுலாக்க' என்னும் சொல்லுடன் பாடல் ஆரம்பிக் கிறது. அச்சொல்லுக்கமைய நான்கு அடிகளிலும் எதுகை அமைந் துள்ளது. எதுகையாக அமைந்துள்ள நான்கு சொற்களுமே அறபுச் சொற்களாக அமைந்துள்ளமை ஈண்டு நோக்கற்பாலது.

லவுலாக்க ஆல மெல்லா நான்படை யேனென் றோதும்
அவுலாநீ ராகை யாலும் அறுவாகுக் குயிர்நீ ராலே
கவுலான துள்ள நோக்கிக் கட்கடை யென்பா னோக்கு
மவுலா அலா முறாதி முகம்மது நபியுல்லாவே. (23)

வ்வாறு பல பாடல்களை எடுத்துக் காட்டக்கூடியதாக இருக்கிறது. இம் முனாஜாத்திலுள்ள இறுதிப் பாடல் ஆசிரியர் குறிப்பிடப்பட்டுள்ள முத்திரைக் கவியாக அமைந்துள்ளது. அது வருமாறு :

இருவகை யெழுத்து மீனி னினமுமாங் கவிதை சொல்லுந்
திருவகை யருள்ஹ பீபு முகம்மதின் சிறந்த மைந்தன்
கருவகை யுணர்செய் கப்துல் காதிறென் றுரைக்கும் பேரான்
மருவகை கொள்ளு மையா முகம்மது நபியுல் லாவே (20)

செய்கப்துல் காதிறு நெய்னார் லெப்பை ஆலிம் புலவர் அவர்களின் மூன்றாவது முனாஜாத்துப் பாடல் முகியித்தீன் அப்துல் காதிறு (றலி) அவர்களைப் புகழ்ந்து இரந்து பாடப்பட்டதாகும். இம்முனாஜாத்துப் பாடலில் உள்ள ஒவ்வொரு பாடலிலும் அறபு அரிச்சுவடியில் உள்ள ஒவ்வோர் எழுத்தையும் முதலில் அமைத்துப் பாடப்பட்டுள்ளது. தமிழில் மொழிக்கு முதலில் வராத ஓர் எழுத்தைக்கொண்டு தொடங்கப் படும் பாட்டை எடுத்துக் கொள்வோம். புகழ்ந்திரத்தல் என்னும் பொருளிலே முனாஜாத் என்னும் சொல் பயன்படுத்தப்பட்டிருப்பதைக் காணலாம். அறபு அரிச்சுவடியிலே 17 வது எழுத்தாக அமைந்துள்ள லே என்பதனைக் கொண்டு பாடல் தொடங்குகிறது. லுல்ம் என்பது முதற்சொல்லாக அமைந்துள்ளது. பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

லுல்முலே நடந்து நித்தற் சொல்லொணாப் பாவந் தேடி
இல்முலே யிணங்கா தாக்கை எடுத்ததோர் பிணியால் வாடி
நல்முனா ஜாத்துஞ் செய்ய நலந்தெரி யாத பாவி
கன்ம நோய் போக்குமையா கவுதுயா முகியித் தீனே (17)

இம்முனாஜாத்திலுள்ள ஒவ்வொரு பாடலிலும் 'கவுது யாமுகியித்தீனே' என முகியித்தீன் ஆண்டவர் அவர்கள் விளித்துப் பாடப் பட்டுள்ளார்கள்.

சேகுனாப் புலவரின் மூன்றாவது நான்காவது முனாஜாத்துப் பாடல் நாகூர் ஆண்டகை சாகுல் கமீது ஒலியுல்லா அவர்கள் பேரில் பாடப்பட்டுள்ளது. இம்முனாஜாத்திலும் உள்ள ஒவ்வொரு பாடலும் அறபு அரிச்சுவடியில் உள்ள ஒவ்வோர் எழுத்தைக் கொண்டும் ஆரம்பிக் கப்பட்டுள்ளது. அறபு அரிச்சுவடியில் கடைசி எழுத்து யே ஆகும். இந்த யே எழுத்து முதலாக வரும் யாது என்னும் சொல்லை வைத்து றசூலுல்லா பேரில் முனாஜாத்திலும் சாகுல் கமீது ஆண்டகை பேரில் முனாஜாத்திலும் பாடியுள்ளார். யாது என்பது பாரசீகச் சொல். நினைவு என்பது அதன் பொருளாகும். யே எழுத்தை முதலில் கொண்ட யாது என்னும் சொல்லைக்கொண்டு இரண்டு முனாஜாத்துக் களிலும் வரும் 28ஆம் செய்யுளை ஆரம்பித்துள்ளார் ஆசிரியர்.

றசூலுல்லா பேரில் உள்ள முனாஜாத்தில் வரும் அந்தப் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

யாதுட னிணைவும் பூண்டி யாவர்க்கு முதலாய் நின்ற
வேதியர் மூவருக்கும் விளக்கென விளங்கி யெங்கும்
போதரம் பெருகு மையா புன்மையன் றுன்ப மெல்லாம்
மோதிடா தகற்ற வேண்டு முகம்மது நபியுல் லாவே. (28)

சாகுல் கமீது ஆண்டகை பேரில் முனாஜாத்துப் பாடலில் யே என்னும் அறபு எழுத்தை முதலில் கொண்டு யாது என்னும் பாரசீகச் சொல்லோடு ஆரம்பிக்கும் முனாஜாத்துப் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

யாது வளரு முளத்தூடு மினிமை பெருகுங் கண்ணூடும்
போது மமுதக் கனியறிவே பொங்கு மென்றன் றவப்பயனே
கோது விளையாக் கொடுந்துன்பங் கொள்ளா தியாருஞ்
சுகம்பெறவே
தாது மலர்த்தா டரவேண்டும் ஷாகுல் ஹமீது நாயகமே (28)

பக்கீர் மதாறுப் புலவர் இயற்றிய முகியித்தீன் மாலை என்னும் நூலுடன் செய்கப்துல் காதிறு நெயினார் லெப்பை ஆலிம் புலவரால் இயற்றப்பட்ட முனாஜாத்துப் பாடல்கள் ஐந்து முனாஜாத்து என வேறாக அச்சாகியுள்ளது.

மற்றொரு காப்பிய ஆசிரியரான பதுறுத்தீன் புலவரும் முகியித்தீன் ஆண்டகை அவர்கள் பேரில் ஒரு முனாஜாத்துப் பாடல் பாடி உள்ளார். இவர் இரண்டு காண்டங்களாக முகியித்தீன் புராணத்தைப் பாடி யுள்ளார். இவர் சென்னையைச் சேர்ந்தவர் என்றும் இலங்கையில் உள்ள யாழ்ப்பாணத்தில் வாழ்ந்தவர் என்றும் கூறப்படுகிறது. யாழ்ப்பாணத்தில் தமிழ் இலக்கண இலக்கியம் படித்து கலைகளில் சிறந்து விளங்கினார் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. இவர் யாழ்ப் பாணத்தில் வைத்துத்தான் தமது முகியித்தீன் புராணம் என்னும் காப்பியத்தை இயற்றினார் என்றும் பேசப்படுகிறது.

பதுறுத்தீன் டலவரின் முகியித்தீன் முனாஜாத்துப் பாடலில் 35 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் முதல் 30 பாடல்களும் அறபு அரிச்சுவடியில் 29 எழுத்துக்களில் ஒவ்வொன்றையும் முதல் எழுத்தாகக் கொண்டு இயற்றப்பட்டுள்ளது. அறபு அரிச்சுவடியிலுள்ள 21-வது எழுத்தாகிய முதலாவது காப் என்னும் எழுத்து தொடர்ந்து வரும் இரண்டு பாடல்களுக்கு முதல் எழுத்தாய் அமைந்துள்ளது.

எனவே தான் 30 வரையும் உள்ள பாடல்கள் அறபு எழுத்துக்களைக் கொண்டு தொடங்கப்படுகின்றன. பதுறுத்தீன் புலவரின் முகியித்தீன் முனாஜாத்துப் பாடல்கள் அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தமாக அமைந்துள்ளன. ஒவ்வோர் அடியிலும் சராசரி இரண்டு அல்லது மூன்று அறபுச் சொற்கள் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். ஆனால் இவருடைய முகியித்தீன் புராணம் என்னும் காப்பியத்தில் விகிதாசார அடிப்படையில் பார்க்கும்பொழுது இத்துணை அதிகம் அறபுச் சொற்கள் இடம் பெறவில்லை என்றே கூறிவிடலாம். முகியித்தீன் ஆண்டவர் அவர்களை விவரிக்கும் முறையில் ஒவ்வொரு பாடலினதும் இறுதி அமைந்துள்ளது. பெரும்பாலான பாடல்கள் முஹியித்தீன் என்று முடிகிறது. சில பாடல்கள் யாமுஹியித்தீனே என்றும் வேறு சில பாடல்கள் கௌதுல் அஃலம் யா முகியித்தீனே என்றும் மற்றுஞ் சில பாடல்கள் செய்யிதே யா முஹியித்தீனே என்றும் பல்வேறு வகையாக முடிவுறுவதைக் காணலாம்.

முதலாவது பாடலை எடுத்துக் கொள்வோம்.

அலிபதின் அஸ்லாய் நின்ற அட்சரஞ் சுழித்து வீசிப்
பொலிவுறும் இஷ்கு தாத்துட் புதைந்துஹே மீம தாய்நின்
றலிபெனும் இஷ்கு மீறி அஹ்துமீ மஹ்ஹு மதான
மெலிவிலா சிபத்துள் மீமாய் வெளிதரு முகியித் தீனே.

இப்பாடலில் பல அறபுச் சொற்கள் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். ஒவ்வோர் அடியிலும் ஒன்றுக்கு மேற்பட்ட அறபுச் சொற்கள் பயன் படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம்.

பதினெட்டாவது எழுத்தான ஐன் என்னும் எழுத்தை எடுத்துக் கொள்வோம். இந்த எழுத்தினால் ஒரு பாடல் தொடங்குகிறது. இப் பாடலில் ஐனுடன் தொடங்கும் பாடலின் ஐ என்பது முற்றுமடக்காக நான்கு அடிகளில் வரும் அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தப்பாவில் ஒரே விதத்தில் அமைந்துள்ளது. முற்றுமடக்காக வரும் முதல் இரு சீர்களையும் போலல்லாது ஒரு கருத்தைச் சுட்டுவனவாகவே நான்கு அடிகளிலும் உள்ள சொற்கள் ஒரேவிதமாய் அமைந்துள்ளன. இப்பாட லிலும் அறபுச் சொற்கள் மலிந்திருப்பதைக் காணலாம்.

ஐனது தாத்த வைபி னருபமாய் ஸிர்ரி னுள்ளாய்
ஐனது அவ்வ லான அஹ்மது நபியுல் லாவின்
ஐனது ஆரி பான அஹததாம் பொருளை யென்னுள்
ஐனதாற் காட்சி காண அருளும்யா முகியித் தீனே (18)

இம்முனாஜாத்துப் பாடல்களில் வரும் அறபுச் சொற்கள் பெரும்பாலும் கிரந்த எழுத்துக்களில் எழுதப்பட்டுள்ளமையைக் காணலாம். இந்த அடிப்படையில் பார்க்கும்பொழுது முகியித்தீன் புராணத்தை இயற்றியவரே இம் முனாஜாத்துப் பாடல்களேயும் இயற்றி உள்ளாரா என்னும் ஐயம் தோன்ற ஏதுவாகிறது. ஒரு வேளை முனாஜாத்துப் பாடலைப் புதுப்பித்தவர் கிரந்த எழுத்துக்களை உச்சரிப்பு எளிமை கருதி பயன்படுத்தி இருக்கலாம். பதுறுத்தீன் புலவரின் முனாஜாத்துப் பாடலில் இடம் பெற்றுள்ள கடைசிப் பாடல்கள் மூன்றிலும் அறபுச் சொற்கள் அருமையாகவே பயன்படுத்தப்பட்டுள்ளன. அவற்றுள் ஒரு பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

ஆண்டவர் தமக்குண் டான அடிமையின் செயலாற் சொல்லாற்
பூண்டதோர் பிழைக ளெல்லாம் பொருத்தரு ளெந்தாய் தந்தை
மாண்டவர் பிழைபொ றுத்து வல்லவன் லிக்காவிற் சேர்த்தே
ஆண்டருள் கிருபை செய்வீர் அஹதுயா முகியித் தீனே (34)

அறபு எழுத்துக்களை முதலில் கொண்ட அறபுச் சொற்களால் ஆரம்பிக்கப்படாத பாடல்களுள் ஒன்றாய் அமைந்ததினால் இந்தப் பாடலில் அறபுச் சொற்கள் ஏனைய பாடல்களைப் போன்று அதிகமாகப் பயன்படுத்தப்படவில்லை போலும்!

இந்த முகியித்தீன் முனாஜாத்துப் பாடலில் கூடத் தமது ஆசிரியர், போதகர், கிருபை செய்தோர் உதவி புரிந்தோர், உற்றார் உறவினர், எல்லோருடைய பிழைகளையும் பொறுத்துக் கிருபை செய்யுமாறு முகியித்தீன் ஆண்டவரிடம் புலவர் வேண்டி உள்ளார். பதுறுத்தீன் புலவரின் முனாஜாத்துப் பாடலின் இறுதிச் செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

எந்தனக் கறிவு தந்தோர் இறைகுர்ஆ னோதித் தந்தோர்
வந்தனைக் கிருபை வைத்தோர் வரும்பொருள் உள்ள மீந்தோர்
தொந்தமாங் கிளைய யலார் சொற்பிழை பொறுத்தெந் நாளு
தந்தருள் கிருபை செய்வீர் சமதுயா முஹியித் தீனே (35)

கீழக்கரையைச் சேர்ந்த செ.மு. செய்யிது முகம்மது ஆலிம் புலவர் பல முனாஜாத்துப் பாடல்களை யாத்துள்ளார். பன்னிரண்டு முனாஜாத்துப் பாடல்களைக் கொண்டது அவரது முனாஜாத்து மாலிகை. மாலிகை என்றால் தொகுக்கப்பட்ட மாலை என்பது பொருள். மலர்களால் எவ்வாறு மாலை தொடுக்கப்படுகிறதோ அவ்வாறே முனாஜாத்து மலர்களால் தொடுக்கப்பட்டது முனாஜாத்து மாலிகை.

இம்முனாஜாத்து மாலிகையில் அவையடக்கம் கூற வந்த ஆசிரியர் இவற்றைப் பாட முற்பட்டதால் தமது நெஞ்சம் பதைக்கிறது என்று கூறி உள்ளார். இஸ்லாமிய மரபுக்கியைய ஆசிரியர் முதலில் அல்லாஹ்வைப் புகழ்ந்துள்ளார். பின்னர் நபிகள் நாயகம் (சல்) அவர்கள் பேரில் சலவாத்துச் சொல்லி உள்ளார். வாழ்த்தி உள்ளார். இங்ஙனம் புகழ்ந்து வாழ்த்துவதற்குத் தமக்கு ஆற்றல் இல்லை என்பதைக் குறிப்பிட்டுள்ளார். தமது ஆற்றலின்மையை நினைக்கும்பொழுது ஒரு மாபெரும் காரியத்தை மேற்கொண்டேனே எனத் தமது நெஞ்சம் பதைக்கின்றது எனக் கூறி உள்ளார். இக்கருத்துக்கள் அமைந்த கட்டளைக் கலித்துறைச் செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

பூவா ருலகம் புனைக்கும்வல் லோனைப் புகழ்ந்துநின்று
மாவா ருயர்சல வாத்தால் முகம்மதை வாழ்த்தியபின்
நாவா ருசித முனாஜாத்து மாலிகை நன்கியம்பப்
பாவா ரரும்பதந் தேராத நெஞ்சம் பதைக்கின்றதே.

முனாஜாத்து மாலிகையின் முதலாவது முனாஜாத்து அல்லாஹ்வைப் புகழ்ந்து பாடப்பட்டது. அல்லாஹ்வின் அழகுத் திருநாமங்கள் 99 ஐயும் அமைத்துப் பாடப்பெற்ற அஸ்மா உல் ஹுஸ்னா முனாஜாத்தாகத் திகழ்கின்றது. திருக்குர் ஆன் தப்ஸிர்கள் பலவற்றைப் பயின்று அல்லாஹ்வின் அழகுத் திருநாமங்கள் எவ்வாறு அமைந்துள்ளன, அவற்றின் கருத்துக்கள் எவை? அவற்றின் முக்கியத்துவம் யாது? என்பனவற்றை அலசி ஆராய்ந்த பின்னரே இதனை இயற்றி உள்ளார் ஆசிரியர். தாம் பயின்ற அல்குர் விரிவுரைகளாக கஷ்புல் மஹ்ஜுபைன், சாவி, ஜமல் முதலியவற்றைக் குறிப்பிட்டுள்ளார். 'அர்ஹமுர் றாஹிமீனே' என ஒவ்வொரு பாடலும் முடிவுறுகிறது. இச்சொற்றொடர் 'அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனும்' என்பதனையே குறிக்கின்றது. அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தப் பாக்களாலேயே முனாஜாத்து மாலிகை பாடப்பட்டுள்ளது. அல்லாஹ்வின் அழகுத் திருநாமங்கள் வரும் இடங்களில் எல்லாம் அறபு எழுத்துக்களில் அவற்றைச் சுட்டிக்காட்டி உள்ளார் ஆசிரியர்.

இம்முனாஜாத்திலுள்ள முதலாம் செய்யுளில் அல்லா, ரஹ்மான், றஹீம் என்ற அல்லாஹ்வின் அழகுத் திருநாமங்கள் மூன்று இடம் பெற்றுள்ளன. பாடலிலேயே அச்சொற்களுக்குப் பக்கத்திலே அறபு எழுத்துக்களிலே அச்சொற்களைத் தந்துள்ளார் ஆசிரியர். அறுஹமுர் றாஹிமீனே என்பது எல்லாப் பாடல்களிலும் இறுதியில் வருவதாகும். அந்த அறபுச் சொற்கள் குறிக்கும் கருத்தினையும் பாடலிலே அமைத்துப் பாடியுள்ளார் ஆசிரியர். முதலாம் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

வணங்குதற் குறியோன் அல்லா மலர்தனை யுலகமீதில்
இணங்கிடு நல்லார் பொல்லார்க் கிரங்கிடும் றஹ்மான் பின்னாள்
பிணக்கறு முஸ்லிம் கட்கே பேரருள் புரியுமாதி
அணங்கிலா றஹீமென் றோதும் அர்ஹமுர் ராஹி மீனே (1)

உயிர்களுக்கெல்லாம் உணவு ஈந்திடுவதனால் றஸ்ஸாக் என்றும், இம்மை மறுமை நன்மை அளித்திருப்பவன் என்பதனால் பத்தாஹ் என்றும்; எல்லையற்ற அறிவுடையவன் என்பதனால் அலீம் என்றும், பிரிந்திட உயிரை மேவிப் பிடிப்பவன் என்பதனால் காபில் என்றும், அழகுத் திருநாமங்களை உடையவன் அல்லாஹ் என்பதனை ஒரு பாடலில் ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

இரண மீந்திடும் றஸ்ஸாக்கே இகபர நன்மை யாவும்
கரம ளித்திடும் பத்தாஹே கனவறி வுறும் அலீமே
பிரிந்திட உயிரை மேவிப் பிடித்திடும் காபி லான
அருமறை பகரும் ஆதி அர்ஹமுர் ராஹி மீனே (5

இவ்வாறு அல்லாஹ்வின் அழகுத் திருநாமங்கள் 99 ஐயும் அவற்றின் கருத்துடன் 21 பாடல்களில் அஸ்மாஉல் ஹுஸ்னா முனாஜாத்தைப் பாடி உள்ளார் ஆசிரியர். அல்லாஹ் பேரில் மற்றொரு முனாஜாத்தையும் பாடி உள்ளார். 29 பாடல்கள் இடம் பெற்ற இம் முனாஜாத்துப் பாடலில் உள்ள ஒவ்வொரு பாடலும் அறபு அரிச்சுவடியின் எழுத்துக்கள் முதலெழுத்துக்களாய் அமைய முறையாகப் பாடப்பட்டுள்ளது. ஷெய்கு அப்துல் காதிறு நயினார் லப்பை ஆலிம் புலவர் தமது பாடல்களில் அறபு எழுத்துக்கள் முதலில் வரும்பொழுது அவ்வெழுத்தைக் கொண்ட அரபுச் சொல்லே முதலில் வரும். ஆனால் முனாஜாத்து மாலிகையில் உள்ள பாடல்களில் அறபு எழுத்துக்களின் உச்சரிப்பை உடைய எழுத்தை முதலில் கொண்ட தமிழ்ச் சொற்களே முதற்சொல்லாய் அமைந்துள்ளதைக் காணலாம். அரபு அரிச்சுவடியின் முதல் எழுத்து அலிப் என்பதாகும். அதன் உச்சரிப்பு அ என்பதனால் அ வில் தொடங்கும் தமிழ் எழுத்தை உடைய தமிழ்ச் சொல்லே முதல் பாடலில் தொடக்கமாக அமைந்துள்ளது. பாடல்கள் ஒவ்வொன்றும் 'அர்ஹமுர்றாஹிமீனே' என முடிவதையும் காணலாம். முதலாம் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

அகிலமும் பிறவும் ஆக்கும் அலகிலா னாமமோத
முகிலிடும் கவிகை நாதர் முகம்மது நபியுல் லாமேல்
மகிழ்தரும் கிளைஞர் மீதும் வளர்சலாம் சலவாத் தென்றும்
அகிதமொன் றணுகா தோத அர்ஹமுர் றாஹி மீனே. (1)

ற,ல, போன்ற மொழிக்கு முதலில் வராத எழுத்துக்களை அங்ஙனமே வைத்துப்பாடி இருப்பதையும் காணலாம்.

அதே போல் மற்றோர் அறபு எழுத்து நூன் என்பதாகும். அறபு நகரத்தோடு தொடங்கும் சொல்லாக ஒரு தமிழ்ச் சொல்லை ஆசிரியர் பயன்படுத்தி உள்ளார். அறபு நூன் அகர முதலாகக் கொண்டு அப் பாடலை இவ்வாறு பாடி உள்ளார்.

நம்பினே னுனது தூய நலமிகுங் கருணை தன்னை
வெம்பியே புலம்பி வாடி விழுமெனக் கருள்வா யென்று
வம்பிலே விளைநா ளெல்லாம் வளர்பவக் கடலில் வீழ்ந்தேன்
அம்புவி அமைத்த நாதா அர்ஹமுர் றாஹி மீனே. ... (25)

அங்ஙனமே அமைந்துள்ளது வ ா வ் என்னும் அறபு எழுத்தும் அதனையும் வ கரப்படுத்தி

வரமெனுங் கருணை வாவி மடைதிறந் தெழுந்து வோட (26)

என வாவ் உடன் தொடங்கும் பாடல் அமைந்துள்ளது.

முனாஜாத்து மாலிகையின் மூன்றாவது முனாஜாத்து றசூலுல்லா பேரில் பாடப்பட்டது. பதினொரு பாடல்களைக் கொண்ட இம் முனாஜாத்தில் உள்ள ஒவ்வொரு பாடலும் 'முகம்மது நபி யுல்லாவே' என நபிகள் நாயகம் (சல்) அவர்கள் விளிக்கப்பட்டுள்ளார்கள். இஸ்லாத்தைப் பரப்பும் பணியில் முகம்மது நபி (சல்) அவர்கள் மக்காவுக்கு அணித்தாயுள்ள தாயிபுக்குச் சென்றிருந்தார்கள். அப்பொழுது அங்குள்ள முஸ்லிம் அல்லாதோர் கல்லாலும் சொல்லாலும் அடித்து அவர்களைத் துன்புறுத்தினர். அமரர்க்கெல்லாம் அரசரான ஜிபுறீல் (அலை) அவர்கள் தோன்றி அவ்வாறு கொடுமை செய்தோரை அழித்துவிட உத்தரவிடுமாறு அண்ணல் நபி (சல்) அவர்களிடம் வேண்டினார்கள். அவர்கள் எப்போதோ ஒரு நாள் திருந்திவிடுவார்கள். அதனால் அவர்களைக் கொடுமை செய்யாதீர் என்று பகர்ந்தார்கள் நபிகள் நாயகம் (சல்) அவர்கள். இக்கருத்துக்கள் ஒரு முனாஜாத்துப் பாடலில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

கொன் மனக் குபிரர் கூடிக் கொடுமிடர் விளைத்த காலும்
புன்மனத் திவரை யாமும் பொடிபடுத் திட்வுத் தாரம்
சொன்மி னென் றமரர் வேண்டுந் தொடர்மொழி மறுத்துப் பேசு
முன்மறை புகழ வந்த முகம்மது நபியுல் லாவே (8)

அடுத்த முனாஜாத்து பெருமானார் (சல்) அவர்களின் மருகரான அலி (றலி) அவர்களைப் புகழ்ந்து இரந்து பாடப்பட்ட முனாஜாத் தாகும். இம்முனாஜாத்துப் பாடல்களின் இறுதியில் 'அலியுல்லாவே' என்னும் சொற்றொடர் வந்துள்ளது. ஒரு பாடலில் அலி (றலி) அவர்கள் ஐம்புலன்களையும் அடக்கியாண்டவிதம் உருவக நயத்துடன்

பாடப்பட்டுள்ளது. யானையை அடக்கத் துறட்டி அவசியமாகிறது. பொறி எனப்படும் யானைகள் புலன்களில் புகாது தடுக்க அவற்றை அறிவெனப்படும் துறட்டினால் அங்குசத்தினால் குத்தி அடக்கி ஐம்புலன்களையும் அறத்தின்பால் செல்லவிட்டு நன்னெறி என்னும் அரசு வீற்றிருந்தவர் அலி (றலி) அவர்கள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அப்பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

பொறியெனுங் கரிகள் யாவும்
புலன்றொறும் புகுந்திடாது
அறிவெனுந் துறட்டி தன்னால்
அடக்கியே அறத்தில் வீழ்த்தி
நெறியெனுங் கொலுவி லார்ந்து
நிறையருள் சிறந்து நாளு
முறைவழி பிழைத்தி டாத
முர்தலா அலியுல் லாவே (2)

முர்தலா என்பது அலி (றலி) அவர்களுடைய சிறப்புப் பெயர்களில் ஒன்றாகும்.

ஐந்தாவது முனாஜாத்துப் பாடலாக அமைந்துள்ளது பாத்திமா (றலி) அவர்கள் பேரிலான முனாஜாத். இங்கும் பத்துப் பாடல்களே இடம் பெற்றுள்ளன. ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் அர்ஹமுர் றாஹிமீனே' என்பது இடம் பெற்றுள்ளது. ஒவ்வொரு பாடலிலும் பாத்திமா நாயகியின் புகழ் பாடப்பட்டுள்ளது.

ஒளிர்தவக் கடலி னூடே
உதித்திடும் ஒருமுத் தென்னக்
களிதரும் இறசூ லுல்லா
கதிர்க்குல மணியாய்த் தோன்றி
மிளிர்தரும் பாத்தி மாதம்
மேதகை பறக்கத் தாலே
அளிபெற அருள வேண்டும்
அர்ஹமுர் றாஹி மீனே. (2)

அலி (றலி) அவர்களினதும் பாத்திமா (றலி) அவர்களினதும் அன்புப் புதல்வர்களான இமாம் ஹஸன் (றலி) அவர்களையும் இமாம் ஹுஸைன் (றலி) அவர்களையும் முன்னிலைப்படுத்தி அவர்களுடைய சிபாரிசைக் கொண்டு அல்லாஹ்விடத்தில் வேண்டி நிற்றற் பொருளில் பாடப்பட்டுள்ளது. இதனை அஹ்ஸனுல் முனாஜாத்து எனப் பெயரிட்டுள்ளார் ஆசிரியர். மிக்க அழகான புகழ்ந்திரத்தல் என்பது அச்சொற்றொடரின் பொருளாகும், இந்த அஹ்ஸனுல் முனாஜாத்துப் பாடல்களும் அறபு அரிச்சுவடியில் உள்ள ஒவ்வொரு எழுத்தையும் கொண்டு

ஆரம்பிக்கும் அறபுச் சொற்கள் ஒவ்வொன்றையும் முதலில் கொண்டன வாக அமைந்துள்ளன. அர்ஹமுர்றாஹிமீனே என் ஒவ்வொரு பாடலும் முடிவடைகிறது. முதல் அறபு எழுத்தான அலிபுடன் சேர்ந்த அறபுச் சொல்லால் தொடங்குகிறது அஹ்ஸனுல் முனாஜாத்து என்னும் நூல்.

அஹதெனு மொருவ னானோ னருள்திரு நாம மோத
சகம்புகழ் சலவாத் தாதி சலாமுயர் நபியுல்லாவின்
அகமுறுங் கிளைஞ ரால்கள் ஹஸன்ஹுசைன் மற்றோர்க்
கெல்லாம்
அகன்றிடா தருள்க வேண்டும் அர்ஹமுற் றாஹி மீனே. (63)

ஏழாவது முனாஜாத்து முகியித்தீன் ஆண்டகை அப்துல் காதிறு ஜீலானி அவர்களைப் புகழ்ந்து அவர் மூலமாய் அல்லாஹ் இடத்தில் வேண்டி நிற்றல். இம் முனாஜாத்துப் பாடலும் அறபு அகர வரிசையில் பாடப்பட்டுள்ளது. ஒவ்வொரு பாடலும் 'அர்ஹமுர்றாஹிமீனே' என முடிவுறுகிறது. அறபு றே உடன் தொடங்குகிறது ஒரு பாடல். றப்பு என்னும் பெயர் அல்லாஹ்வைக் குறிக்கும் ஒரு அறபுச்சொல். படைப்புக்களையெல்லாம் பேணிப் பாதுகாத்து அவற்றிற்கெல்லாம் உணவு வழங்குபவன் என்பனவற்றுடன் கூடிய தன்மையை றப்பு என்னும் சொல் சுட்டுகிறது. மொழிக்கு முதலில் வராத றகரத்தை மொழிக்கு முதலில் வரச் செய்துள்ளார்.

றகரத்தோடு தொடங்கும் முனாஜாத்துப் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

றப்பெனும் படைத்துக் காக்கு
நிருமலா நிறைந்த பாவ
ஒப்பிலாக் கடலைத் தாண்டி
யுனதருட் கரையிற் சேர்க்கும்
கப்பலாய் வந்த அப்துல்
காதிறு முகியித் தீன்பால்
அப்பியே யருள வேண்டும்
அர்ஹமுர் றாஹி மீனே (10)

அஹ்ஸனுல் முனாஜாத்திலும் முகியித்தீன் ஆண்டவர் பேரிலான முனாஜாத்திலும் லாம்அலிப் ஹம்ஸா என்னும் அறபு எழுத்தும் சேர்க்கப்பட்டு அவ்வெழுத்தோடு ஆரம்பிக்கும் ஒவ்வொரு பாடலும் இடம் பெற்றுள்ளது.

முகியித்தீன் ஆண்டவர் மீது பாடப்பட்ட மற்றொரு முனாஜாத் 11 பாடல்களைக் கொண்டு உள்ளது. இவை சாதாரண விருத்தப்பாக்

களாகவே அமைந்துள்ளன. இப்பாடலில் உள்ள ஒவ்வொரு பாடலும் 'கௌதுயா முகியித்தீனே' என முடிகிறது. இங்கு இடம் பெற்றுள்ள பாடல்கள் பெரும்பாலும் முகியித்தீன் ஆண்டகையின் மூதாதையரான முகம்மது றசூலுல்லா (சல்) அவர்களைப் புகழ்ந்து முகியித்தீன் அப்துல் காதிறு ஜீலானி (றலி) அவர்கள் மூலம் அல்லாஹ்விடம் குறை இரங்குவதாக அமைந்துள்ளன. மானுக்குப் பிணையாய் நின்று மான் இனத்தைக் காப்பாற்றி வேடனுக்குப் புதுவாழ்வு அளித்த முகம்மது நபி (சல்) அவர்களின் மரபு வழியினர் முகியித்தீன் ஆண்டவர்கள் என முனாஜாத்து மாலிகையில் அதன் ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

நவ்விதன் பிணையாய் நின்றே
நலிவுறுங் கிளையைக் காத்து
வவ்விய துயரை நீக்கி
வனசர னிருளை யோட்டுந்
செவ்விய விறசூ லுல்லா
திருமர புதித்த கோவே
கவ்வையங் கருணை வாரி
கௌதுயா முஹ்யித் தீனே. (3)

மீறான் சாகிபு என்னும் சாகுல் கமீது ஆண்டகை மீது பாடப்பட்ட முனாஜாத்து ஒன்பதாவது முனாஜாத்தாக முனாஜாத்து மாலிகையில் இடம் பெற்றுள்ளது. மீறான் என்பது சேர்ந்தும் சேராமலும் 'சாஹமீ தொலியுல் லாவே' என்னும் சொற்றொடர் இம்முனாஜாத்தில் இடம் பெற்றுள்ள ஒவ்வொரு பாடலிலும் இடம் பெற்றுள்ளது. ஒரு பாடலில் தஞ்சை மன்னனின் பிணியைத் தீர்த்து வைத்தமை இவ்வாறு பேசப் பட்டுள்ளது.

பூவலர் நறவஞ் சிந்தும் பொழில்வளைந் தொளிரு தஞ்சைக்
காவலன் பிணியைத் தீர்த்தே ககனுறும் புகழை வேய்ந்து
நாவலர் புகழு நாகை நகர்தனி லமைந்து யார்க்கும்
தாவர மான மீறான் சாஃஹமீ தொலியுல் லாவே. (3)

எல்லோர்க்கும் நிழல் வழங்கும் மரம் போன்று பயனுடைய வாழ்க்கையை நடத்தி வந்தார்கள் மீறான் ஆண்டகை அவர்கள் என்பது குறிப்பிடப்பட்டுள்ளது.

அறபு அரிச்சுவடியில் உள்ள எழுத்துக்களை முதலில் வரப் பாடப் பட்டுள்ள ஒரு முனாஜாத்துப் பாடல் கீழக்கரை கல்வத்து நாயகம் அவர்களின் சிபாரிசைக் கொண்டு அல்லாஹ்விடத்தில் குறை இரங்குவதாக அமைந்துள்ளது. முனாஜாத்து மாலிகையில் இடம் பெற்ற பத்தாவது முனாஜாத்தாகும்.

பதினொராவது முனாஜாத்து கொழும்பு ஆலிம் எனப் பெயர்பெற்று விளங்கிய செய்யிது முகம்மது அவர்களின் மூலமாக அல்லாஹ்விடம் வேண்டுவதாக அமைந்துள்ளது. இம் முனாஜாத்திலும் கல்வத்து நாயகம் பேரிலான முனாஜாத்தில் இருப்பது போன்று ஒவ்வொரு பாட லிலும் 'அர்ஹமுர் றாஹி மீனே' என்று முடிவுறுகிறது. பத்தாவது முனாஜாத்தில் 29 செய்யுள்களும் பதினொராவது முனாஜாத்தில் 30 செய்யுட்களும் இடம் பெற்றுள்ளன.

கீழக்கரை செய்கு சாகுல் கமீது ஆலிம் அவர்கள் பேரில் பாடப் பட்ட முனாஜாத்து 12 வது முனாஜாத்துப் பாடலாக இடம் பெற் றுள்ளது. இம் முனாஜாத்து பாடலைப் பாடிய ஆசிரியர் தமது பெயரைக் குறிப்பிட விரும்பவில்லை என செய்யிது முகம்மது ஆலிம் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். ஒவ்வொரு பாடலும் 'சாகுல் கமீதாலிம் சாகிபுவே' என முடிவுறுகிறது. 37 பாடல்களைக் கொண் டுள்ளது இம்முனாஜாத்துப் பாடல்.

பல பாடல்களைக் கொண்டது நவநீதபுஞ்சம் என்னும் நூல். திருப் புகழ் பிள்ளைத்தமிழ், மாணிக்கமாலை முதலியன இதில் அடங்கும். முனாஜாத்துப் பாக்கள் பலவும் நவநீதபுஞ்சத்தில் இடம் பெற்றுள்ளன. செய்யிது முகியித்தீன் கவிராயர் அவர்கள் இயற்றிய பல பாடல்கள் இடம் பெற்றது நவநீத புஞ்சம். இவர் முகம்மதுசைன் புலவர் அவர் களின் புதல்வர். இவரது சொந்த ஊர் திருநெல்வேலியைச் சார்ந்த மேலப்பாளையம். இவர் மரபினரான சாகுல் கமீதுப் புலவர் பாடிய முனாஜாத்துப் பாடல்களும் இந்நவநீதபுஞ்சத்தில் இடம் பெற்றுள்ளன.

நவநீதபுஞ்சத்தில் இடம் பெற்றுள்ள முனாஜாத்துப்பாக்கள் பெரும்பாலும் முனாஜாத்துப் பதிகங்களாகவே அமைந்துள்ளன. பப்பத்துப் பாடல்களாக அமைந்துள்ளது. வழக்கம்போல் நவநீத புஞ்சத்தில் இடம் பெற்றுள்ள முனாஜாத்துப் பதிகம் றகுமான் பேரி லானது. அல்லாஹ் பேரிலானது. இரட்டை ஆசிரிய விருத்தமாகப் பாடல்கள் அமைந்துள்ளன. செய்யத்தகாத, குற்றம் வருத்தும் கிரியை களை ஒரு பாடலில் குறிப்பிட்டுள்ளார். அத்தகைய செய்யத்தகாதன வற்றைத்தாம் செய்துள்ளதாகவும் ஆகையினால் தம்மை ஆட்கொள்ளு மாறும் அல்லாஹ்வை வேண்டியுள்ளார். அவ்வாறு ஆட்கொள்ளும் நாள் எந்நாளோ எனப் புலம்பி அல்லாஹ்விடம் குறை இரங்கி உள்ளார். பொதுமக்களிடையே பொதுவாக உள்ள குறைகளைத் தன்னிடம் உள்ள குறையாகக் கருதிப் பாடி உள்ளார்.

உள்ளத்தை அடக்க முடியாதவன் பாவி. உலகிலுள்ள மாய வித்தைகளில் கை தேர்ந்த பெண்களைத் தொடருபவன் வஞ்சகன் ஐந்து வேளையும் தொழாதவன் தோஷி. மறதியுடையவன் மூடன். எல்லையில்லாத மெய்ஞ்ஞானத்தை அறியாதவன் முரடன், ஆணவத் துக்கு ஆளாகும் ஒருவன் ஆணவத்தால் துன்பம் உண்டாக்குபவன் வண்டன். தெளிவாகத் தெரிய இருக்கின்றவற்றை கண் இருந்தும் பாராதவன் கட்குருடன். பணம், பணம் என பணத்தில் ஆசை வைத்து அதனைச் சம்பாதிக்கும் வழிவகைகளையே நிதமும் சிந்தித்தவனாய்க் கவலையில் மூழ்கி உள்ளவன் அழுகல். இத்தகைய தீய பண்புகள் தம் மிடத்தே உண்டென்றும் ஆகவே அவற்றை அகற்றிவிட தம்மை ஆட் கொள்ளும்படியும் வேண்டியுள்ளார். மற்றவர்களை ஆட்கொள்ளுமுன்னர் தம்மை ஆட்கொள்ளும்படி வலியுறுத்தி உள்ளார். அவ்வாறு தம்மை ஆட்கொள்ளுவது எந்நாளோ எனக் கேட்டுள்ளார். 'எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே. (அவன்) அகிலங்கள் அனைத்தையும் படைத்துப் போஷித்துப் பரிபக்குவப்படுத்துவோன்' எனப் பொருள்படும் 'அல் ஹம்து லில்லாஹி றப்பில் ஆலமீன்' என்றும் 'எல்லாவற்றிற்கும் முத லானவனும் அன்புடையோனுமாகியவனே' என்பதாகப் பொருள்படும் 'ஆதிறகுமானியே' எனவும் அல்லாஹ்வை விளித்துப் பாடியுள்ளார். இங்கே தரப்பட்டுள்ள அறபுச் சொற்றொடர் முனாஜாத்துப் பதிகத்தின் இறுதிப் பாடலில் அமைந்துள்ளது. இக்கருத்துக்கள் அடங்கிய பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

மனவரம் பில்லாத பாவியைப் புவிமாயை
    மாதரைத் தொடரு மிந்த
வஞ்சகனை யஞ்சொகுத் துந்தொழாத் தோஷியை
    மறப்பி னாலிரு மூடனை
இனவரம் பில்லாத மெய்ஞ்ஞான போதம
    தெள்ளள விலா முரடனை
எந்நேர முங்கொடிய ஆணவத் தாலே
    யிரும்புசெய் யுமுழு வண்டனைக்
கனவரம் பூவின்மே லந்தரமு முண்டெனக்
    காணுத கட்கு ருடனைக்
காசாசை யானிதமு மேதுசெய் வேனென்ற
    கவலையி லழுந்த மூகலை
அனைவருந் துதிசெயுமு னின்பாத சேவைதந்
    தாட்கொள் வதெந்த நாளோ
அல்ஹம் துலில்லா கிறப்பி லால
    மீதி றகுமானியே, (5)

நவநீத புஞ்சத்தில் இடம் பெற்றுள்ள அடுத்த முனாஜாத்துப் பாடல் முகம்மது றசூலுல்லாஹ் பேரில் பாடப்பட்டது. 31 செய்யுட்களைக் கொண்ட இன்னிசையாக அமைந்துள்ளது. ஒவ்வொரு பாடலும் ஹாமிதுறசூல் நபியே என முடிகிறது. றசூல் நாயகம் (சல்) அவர்கள் பொருட்டால் அல்லாஹ்விடம் குறை இரங்குவதாய் அமைந்துள்ளது. இப்பாடல்களிலே நபிகள் நாயகம் (சல்) அவர்களின் புகழ் பேசப்படுவதோடு தமக்கு அருள்புரியுமாறு அண்ணலார் (சல்) அவர்களை வேண்டுவதாகவும் கருத்துக்கள் அமைந்துள்ளன.

பெருமானார் அவர்களின் வாழ்க்கையில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் ஆங்காங்கே குறிப்பிடப்பட்டுள்ளன. ஒவ்வொரு பாடலும் 'ஹாமிதிறசூல் நபியே' என முடிவுறுகிறது. இது பெருமானார் (சல்) அவர்களைப் புகழ்ந்து பாடப்பட்டது. வானவர் தலைவர் ஜிபுறீல் (அலை) அவர்கள் நபிகள் நாயகம் (சல்) அவர்களிடம் வஹி மூலம் கூறினார்கள் என்பதைச் சுட்டிக் காட்டி ஒரு செய்யுளில் அதனை இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

விண்ணோர்க் கரசரென வேண்டும்ஜிபு றீல்இறங்கி
வண்ணமு டனேவஹியை வழுத்தவரு மாதவரே
கண்ணகன்ஞா லத்திலுங்கள்
கஞ்சமலர்ப் பாதமென்றன்
கண்ணினெதிர் காட்டியருள் ஹாமிதிற சூல்நபியே (1)

சாகுல் அமீதுப் புலவர் என்பவரும் நபிகள் நாயகத்தின் பேரில் முனாஜாத்துப் பாடல் ஒன்றைப் பாடி உள்ளார். இப்பாடலும் நவநீத புஞ்சத்தில் இடம் பெற்றுள்ளது. சாகுல் கமீதுப் புலவர் நவநீத புஞ்ச ஆசிரியர் முகியித்தீன் கவிராஜர் என்பவரின் புதல்வரின் புதல்வராவார். முப்பத்தொரு பாடல்கள் இந்த முனாஜாத்தில் இடம் பெற்றுள்ளன. அறபு அரிச்சுவடியில் உள்ள எழுத்துக்கள் ஒவ்வொன்றும் வரிசைக் கிரமப்படி ஒவ்வொரு பாடலின் முதற் சொல்லுக்கு முதலெழுத்தாய் அமையப் பாடியுள்ளார். அறபு அரிச்சுவடியில் வரும் 18 ஆம் எழுத்து 'அயின்' என்பதாகும். அதனை முதலாகக் கொண்டுள்ள பாடலில் தௌர் குகையில் நடந்த நிகழ்ச்சி குறிப்பிடப்பட்டுள்ளது.

மக்காவைத் துறந்து மதீனமாநகர் செல்லும் வழியில் தௌர் குகையில் முகம்மது நபி (சல்) அவர்களும் அவர்களின் அருமைத் தோழரான அபூபக்கர் (றலி) அவர்களும் ஒளிந்திருந்தார்கள். அப்போது அபூபக்கர் (றலி) அவர்களின் காலை அரவம் தீண்டியது. பாம்பு கடித்த இடத்தில் தடவி இன்னலைத் தீர்த்து விட்டார்கள் நபிகள் நாயகம் (சல்) அவர்கள். இந்நிகழ்ச்சியையே ஆசிரியர் ஒரு பாடலில் இங்ஙனம் குறிப்பிட்டுள்ளார்,

அமலிற் சிறந்த அபூபக்கரின்
அடியி லரவங் கடித்தவிடம்
தமது கரத்தாற் சலவாத்தைச்
சாற்றி நீக்கும் பார்த்திபரே

விமல நிதியே கண்மணியே
வினவு மடியேன் முகம்பார்த்துக்
கமலப் பதந்தந் தருள்புரியும்
ஹாமீ முகம்ம துறசூலே. (18)

நபிகள் பெருமானார் (சல்) அவர்களின் திருப் பேரர்களான இமாம் ஹஸன் (றலி) அவர்களையும் இமாம் ஹுசைன் (றலி) அவர்களையும் புகழ்ந்து பாடப்பட்ட மற்றொரு முனாஜாத்துப் பாடலின் ஆசிரியர் சாகுல் கமீதுப் புலவராவார். இம் முனாஜாத்துப் பாடலும் நவநீத புஞ்சத்தில் இடம் பெற்றுள்ளது. ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் 'இமாம் ஹஸன் என்னும் தீபமே' என்னும் சொற்றொடர் இடம் பெற்றுள்ளது.

முகம்மது நபி (சல்) அவர்களுக்குப் பின்னர் இஸ்லாமிய அரசினை வழி நடத்தியவர்கள் நான்கு கலீபாக்களுமாவர். நான்கு கலீபாக் களுக்குப் பின்னர் இஸ்லாமிய அரசு கட்டிலில் அமர்ந்தவர்கள் இமாம் ஹஸன் (றலி) அவர்களும் இமாம் ஹுஸைன் (றலி) அவர்களும் ஆவர். இருவரும் ஒருவர் பின் ஒருவராக ஆட்சி புரிந்தனர். முன்னையவர் நஞ் சூட்டப்பட்டுக் கொல்லப்பட்டார்கள். மற்றவர் கர்பலாப் போர்க்களத் தில் உயிர் நீத்தார்கள். இவர்கள் இருவரும் அரசுரிமை பெற்ற முறைமையினையே ஒரு முனாஜாத்துப் பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

முகம்மது நபி (சல்) அவர்களைக் குறிப்பிடும்பொழுது 'வாடிய பயிர் களுக்கோர் மழையென' வந்தவர்கள் நபிகள் நாயகம் (சல்) அவர்கள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

பொதுவாக முனாஜாத்துப் பாடல்கள் எவ்வாறு ஒரு நூலில் அமை கின்றனவோ அவ்வாறே நவநீத புஞ்சத்திலும் அமைந்துள்ளன. நபிகள் பெருமானார் (சல்) அவர்கள் மீதும் அவர்களின் பேரர்கள் மீதும் பாடிய பின்னர் முகியித்தீன் ஆண்டவர் அவர்கள் பேரில் முனாஜாத்துப் பாடல் பாடப்பட்டுள்ளது. முப்பது இன்னிசைச் செய்யுட்களாக இம்முனா ஜாத்து பாடல் அமைந்துள்ளது. ஒவ்வொரு செய்யுளும் 'செய்கு முகியித் தீனே' என முடிவுறுகிறது. இம்முனாஜாத்தின் முதலாம் பாடல் இவ் வாறு அமைந்துள்ளது.

பூவே மதுவே பொருளே யருளேயென்
நாவே நலமே நடுவிரங்கு நாயகமே
கோவே யிறசூல் குறைசிக் குலக்கொழுந்தே
தேவே யரசர்பணி செய்கு முகியித்தீனே. (1)

எப்பொழுதும் எவ்விடத்தும் அன்புடையவர்களுக்கு உதவி புரிப வர்கள் முகியித்தீன் அப்துல் காதிறு ஜீலானி (றலி) அவர்கள். அத் தகைய தன்மை வாய்ந்த முகியித்தீன் ஆண்டவரிடம் தமக்கும் உதவி புரியுமாறு ஆசிரியர் சாகுல் கமீது வேண்டியுள்ளார். இக்கருத்துக்களைக் கொண்ட பாடல் இவ்வாறு இடம் பெற்றுள்ளது நவநீதபுஞ்சத்தில்.

எங்கே திரிந்தாலும் எவ்வழியில் சென்றாலும்
அங்கே உதவிசெய்யும் அன்புடையார் தாங்கள் அல்லோ
இங்கே அடிமைக் கிரங்கிரட்சித் தாண்டருளும்
செங்கமலப் பாதச் செய்குமுகி யித்தீனே. (25)

நவநீதபுஞ்சத்தில் இடம்பெற்றுள்ள மற்றொரு முனாஜாத்துப் பாடல் நாகூர் மீறான் சாகிபு ஆண்டகையவர்கள் பேரில் முனாஜாத்துப் பதிகம். இரட்டை ஆசிரிய விருத்தமாக அமைந்துள்ள பத்து செய்யுட் களைக் கொண்டுள்ளது. சாகுல் கமீதுப் புலவரே இதனையும் இயற்றி உள்ளார். நாகூர் ஆண்டகையின் வரலாற்றினைச் சுருக்கமாக ஒரு செய்யுளில் பின்வருமாறு அமைத்துப் பாடியுள்ளார்.

திருவுலாவிய செல்வ மெந்நாளுங் குடிகொண்ட
திருமக்க நகரமீதில்
திண்ணமுறு வெற்றி கொண்டப்துல்லா மாதவந்
திரண்டவொளி வானயிறசூல்

கருவுலா வியமார்க்க நெறிமுறை தவறாத
கதிமேவு பகுதாதில்வாழ்
காரணக் கடலார் முகியித்தீ னாண்டகைக்
காம்பீர மரபில்வந்த

மருவுலா வியதுடவை சென்னிலங் கழனிசூழ்
மாணிக்கப் பூரியதனில்
மன்னசன் குத்தூசு புத்திரரத் தினராக
மாநிலம் விளங்கு மணியே

தருவுலா வியமாட மேடைசூழ் நாகைநகர்
தங்கியாள் கின்ற குருவே
தயவுவைத் தென்முகம் பார்த்திரட் சித்தருளுஞ்
சாகுல் கமீது ஒலியே. (1)

கட்டளைக் கலித்துறைப் பாடல்களில் மற்றொரு முனாஜாத்துப் பாடல் நாகூர் மீரான் ஆண்டகை பேரில் பாடப்பட்டுள்ளது. 37 பாடல் களைக் கொண்டது இம்முனாஜாத்துப் பாடல். நாகூர் ஆண்டகை அவர் களின் தனிப்பெரும் ஆற்றல்கள் இங்கு புகழப்பட்டுள்ளன. தமது பெயரும் பாட்டுடைத் தலைவரின் பெயராக இருத்தலால் தமக்குச் சிறப்பாக அருள் புரியுமாறு நாகை ஆண்டவரை ஒரு பாடலில் ஆசிரியர் வேண்டி உள்ளார்.

கத்தன ருள்பெறு முத்தம ராகிய காட்சியரே
இத்தல மீதுங்க னாமம் தரித்திடு மேழைதனக்
குற்றவ முவுங்கள் நாமக் கிருபைகொண் டோடச்செயு
நற்றவ மாகிய சாகுல் ஹமீதொலி நாயகமே. (19)

37 பாடல்களைக் கொண்ட முனாஜாத்துப் பாடல்கள் ஒவ்வொன் றும் 'சாகுல் கமீதொலி நாயகமே' எனக் கொண்டு முடிகின்றது.

ஆநந்த சாகித்யம் என்னும் நூலிலும் பல முனாஜாத்துப் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இவற்றை இயற்றியவர் சாகுல் கமீதுப் புலவர். இவர் திருநெல்வேலியைச் சார்ந்த மேலப்பாளையக் குடிமகன் மீறா சாகிபுப் புலவரின் புதல்வரின் புதல்வர்.

சாகுல் கமீதுப் புலவர் இயற்றிய சங்கீத சிந்தாமணியில் வேறெந்தப் புலவரும் பாடாத பெரியோர்களின் பேரில் பாடப்பட்ட முனாஜாத்துப் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. அங்குள்ள முதலாவது முனாஜத்து இரண்டு நபிமார்கள் பேரில் பாடப்பட்டது. கிளிறு நபி (அலை) அவர்கள் பேரிலும் இல்யாசு நபி (அலை) அவர்களின் பேரிலும் ஒரு முனாஜாத்துப் பாடி அதனை கிலுறில்யாசு நபி பேரில் முனாஜாத்து எனப் பெயரிட்டுள்ளார். இம்முனாஜாத்தில் உள்ள முதற் பாடல் சீறாப் புராணக் காப்புச் செய்யுளை நினைவூட்டுவதாக அமைந்துள்ளது. முதலரவது பாடல் இவ்வாறு அமைந்துள்ளது,

திருவினுந் திருவாய் எங்குஞ் சிறந்தமெய்ப் பொருளா யோங்கி
திருவினுந் திருவாய் உள்ள திருநபி கிலிறில் யாசைத்
திருவினுந் திருவாய்க் காண்கச் செய்முனா ஜாத்துக் காதி
திருவினு மொருவ னான ஜெயப்பொருள் காப்ப தாமே. (1)

கிளிறு, இல்யாஸ் (அலை) ஆகிய இரண்டு நபிமார்களையும் 'காண்குநா ளெந்த நாளோ' என்ற வினாவுடன் ஒவ்வொரு பாடலும் முடிகிறது. எழுபத்தாறு பாடல்களைக் கொண்டது இம் முனாஜாத்து, ஒவ்வொரு பாடலிலும் 'கிளிறில்யாசு' என இரண்டு நபிமார்களும் ஒன்று சேர்ந்தே குறிக்கப்பட்டுள்ளனர். மற்றொரு குறிப்பிடத்தக்க

அமிசம் ஒவ்வொரு பாடலிலும் உள்ள முதற்சீர் மடக்காக வந்திருப்பதே யாம். இத்தகைய சிறப்பியல்புகள் வாய்ந்த ஒரு செய்யுளாக இதனை எடுத்துக் காட்டலாம்.

சிறப்புறும் நபிமார்க் கெல்லாம் செய்யிதா யுதித்தென் னாளும்
சிறப்புறு மிறசூ லுல்லா திவ்விய வாக்குப் போலும்
சிறப்புறுந் தீனோர்க் கன்பு செயும்நபி கிலிறில் யாசும்
சிறப்புறுஞ் சரண முத்தி செயம்பெறு நாளெந் நாளோ. (53)

இம்முனாஜாத்து ஆசிரியர் ஒரு பாடலில் தமது பெயர் அசன் அலி என்றும் தமது தந்தையின் தந்தை பெயர் கந்தப் புலவர் என்றும் அவர் வகுதையைச் சேர்ந்தவர் என்றும் குறிப்பிட்டுள்ளார். அத்தோடு இம் முனாஜாத்துப் பாக்களைப் படிப்போர் அனைவரையும் வாழிவாழி என வாழ்த்தியுள்ளார். அப்பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

மலர்மக ளுவகை தாங்கி வருதலை மகளிர் சேர்ந்து
உலவிய வகுதை யின்சீ ருடையவன் பரன்வாழ் கந்தப்
புலவர்பே ரன்யா னென்று புகழசன் அலிமு னாஜாத்
திலகிய அமுதப் பாவை யியம்புவர் வாழி ஆமீன். (74)

இதனைத் தொடர்ந்து வரும் பாடலில் இம்முனாஜாத்தினை எவ் வாறு படிக்கவேண்டும் என்பதும் படிக்கும்போது எங்ஙனம் தம்மைத் தயார் செய்துகொள்ள வேண்டும் என்பதும் அவ்வாறு படித்தால் அத னால் இன்ன நன்மைகள் ஏற்படும் என்பதும் வலியுறுத்தப்பட்டிருப்ப தைக் காணலாம். குதுபு காஜா முகியுத்தீன் அவர்கள் பேரில் பாடப் பட்ட ஒரு முனாஜாத்துப் பாடலும் சங்கீத சிந்தாமணியில் இடம் பெற் றுள்ளது. இப்பெரியார் ஜிஸ்தியாத் தறீக்காவை-வழியை பரப்பியவர்க ளாவார்கள். 68 பாடல்களைக் கொண்ட இம்முனாஜாத்தில் ஒவ்வொரு செய்யுளும் 'முகியுத்தீன் ஒலியுல்லாவே' என்னும் சொற்றொடர் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். இங்கு பாட்டுடைத் தலைவரைப் புகழ்வ தாக அமைந்துள்ள ஒரு பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

காரணக் கடலே என்றன் கண்ணிரு மணியே சோதிப்
பூரண விளக்கே ரத்ந பூசக்ர பதியே இந்தத்
தாரணி மீதில் ஏழை தன்முகம் பாருமையா
மூரிமிக் குடைய காஜா முகினுத் தீனொலி யுல்லாவே. (64)

இந்நூலில் இடம் பெற்றுள்ள மற்றொரு முனாஜாத்து அபுல்ஹசன் சாதிலி (றலி) அவர்கள் பேரில் பாடப்பெற்றது. அபுல்ஹஸன் சாதிலி பேரில் முனாஜாத்து என அழைக்கப்பட்டுள்ளது. 27 கலிவிருத்தச்

செய்யுட்களைக் கொண்ட இம் முனாஜாத்தில் பல பாடல்களின் இறுதிப் பகுதி 'அசன் சாதிலி ஒலியே' என்று முடிகிறது. அபுல்ஹஸன் சாதிலி (றலி) அவர்கள் சாதுலியா தறீக்காவை-வழியை பரப்பியவர்களா வார்கள். அபுல்ஹஸன் சாதிலி அவர்கள் பிறந்த இடம் குமாறா மலை என்றும் தந்தையார் பெயர் செய்யிதப்துல்லாஹ் என்றும் அவர்கள் நல்லடக்கம் செய்யப்பட்ட இடம் ஹுமைதறா என்றும் ஒரு பாடலில் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது:

வையகமெல் லாந்துதிக்க வாழ்ஜபல் குமாறா
செய்யிதப்துல் லாதவச் சேயரே யென்னாறா
மையமற வேகுமைத றாவாழு மணியே
செய்யிதே அபுல்ஹஸன் சாதிலி யொலியே. (18)

சாகுல் கமீது புலவரால் மற்றொரு முனாஜாத்துப் பாடலும் இயற்றப்பட்டுள்ளது. செய்யிது முகம்மது புகாறித்தங்கள் பேரில் பாடப்பட்டது இம் முனாஜாத்துப் பாடல். 41 பாடல்களைக் கொண்ட இம் முனாஜாத்துப் பாடலில் முதல் மூன்று செய்யுட்களையும் தவிர்ந்த ஏனைய செய்யுட்கள் ஒவ்வொன்றும் 'செய்யிது முகம்மது புகாரி ஒலியே கண்மணியே' என்றும் சொற்றொடர் இறுதியில் இடம் பெற்றுள்ளது. செய்யிது முகம்மது புகாறித்தங்கள் அவர்களின் பிறப்பிடம் (4), தந்தை பெயர் (6) முதலியன இம்முனாஜாத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன. இஸ்லாத்தைப் பரப்புவதற்கு அவர்கள் மேற்கொண்ட முயற்சி இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

நல்லோர்க் குரைக்கும் ஹதீதுகளை நாட்டிற் பலரும் கேட்டவையின்
சொல்லாய்ந் துணர்ந்து குபிரகற்றி தூய இசுலாம் வழியொழுகிப்
பல்லோர் கூட்டங் கூட்டமாய் பரவி வந்தும் பதம்புகழ்வர்
பல்சீர் செய்யிது முகம்மது புகாறி வொலியே கண்மணியே. (16)

ஞானாந்தரத்தினம் பல பாடல்களைக் கொண்டது. ஐயன்பேட்டை அப்துல்கனி சாகிபுவின் பல பாடல்கள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. இவர் ஐயன்பேட்டை அப்துல் காதிறு சாகிபு அவர்களின் புதல்வர். செய்கு முகம்மது சாலிகு அவர்களின் பிரதான கலிபா. உமறு ஒலியுல்லாஹ்வின் திருப்பாடல்களும் செய்கு முஸ்தபா ஒலியுல்லாஹ்வின் மெய்ஞ்ஞானத் துதியும் செய்கு முகம்மது ஹக்கீம் அவர்களின் ஞானப் பிரசன்னாகரத்தினம் என்பனவும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

முகியித்தீன் ஆண்டவர் அவர்களின் பேரில் பாடப்பட்ட முனாஜாத்துப் பாடல்கள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன, இன்னிசைச் செய்யுளாக அவை அமைந்துள்ளன. முகியித்தீன் என்னும் சொல் பல்வேறு அடைமொழிகளுடன் ஒவ்வொரு பாடலின் இறுதியிலும்

அமைந்துள்ளது. 34 செய்யுட்களைக் கொண்டு இம்முனாஜாத்துப் பாடல் அமைந்துள்ளது.

எவரிருந்தும் எப்பயனுமில்லை. உதவிபுரியக் கூடியவர் முகியித்தீன் ஆண்டவர் ஒருவரே. எனவே தமக்குக் கிருபை செய்தருளுமாறு முகியித்தீன் ஆண்டவர் அவர்களை ஒரு பாடலில் இவ்வாறு வேண்டு கிறார் ஆசிரியர்.

ஆரா ரிருந்துமெமக் கணுவுந்துணை யுளதோ
ஓராறு மோரைந்து மூட்டுவது முங்கடனே
நேராருஞ் திவ்யமணி நெஞ்சகத்தின் மெய்விளக்காம்
சீரா மருட்கிருபை செய்யுமு கியித்தீனே. (8)

ஈமானின் ஆறு அமிசங்களும் இஸ்லாத்தின் ஐந்து கடமைகளும் 'ஓராறும் ஓரைந்தும்' என்று சுட்டப்பட்டிருப்பதைக் காணலாம்.

திருப்பத்தூரில் பிறந்தவரும் இலங்கையில் வாழ்ந்தவருமான அருள்வாக்கி அப்துல் காதிறுப் புலவர் அவர்களால் இந்நூலாசிரியர் அப்துல் கனி சாகிபு அவர்கள் பேரில் இயற்றப்பட்டுள்ளது முனாஜாத் துப் பதிகம் என்னும் ஒரு பாடல். பத்துப் பாடல்களும் அறுசீரடி விருத் தங்களாக அமைந்துள்ளன. முகியித்தீன் ஆண்டவர் அவர்கள் அப்துல் கனி சாகிபு அவர்கள் பால் அன்பும் கிருபையும் சொரிய வேண்டும் என்று ஒவ்வொரு பாடலிலும் பாடி உள்ளார். ஒவ்வொரு பாடலிலும் முகியித்தீன் என முகியித்தீன் அப்துல்காதிறு ஜீலானி அவர்கள் விளிக் கப்பட்டிருப்பதைக் காணலாம். ஒரு பாடலில் உவம உருவக நயங் களைக் கொண்டு இவ்வாறு அமைந்துள்ளது.

ஞானமாக் கடலி னோடி நடுநிலை முத்தம் வாரித்
தானமா மாரி பெய்து தவநிதி பூத்த பூமான்
கானமார் போச னப்துல் கனிமனத் தென்று முங்கள்
தேனரு ளூட்டி யாள்வீர் செய்யிது முகியித் தீனே. (9)

ஞானாந்தரத்தினத்துக்கு 'திருமணி உரை' என்னும் பெயரால் உரை வழங்கியவர் எம். ஏ. நயினார் முகம்மது பாவலர் அவர்கள். தமது ஆன்மிகத் தலைவரான இந்நூலாசிரியர் பெயரில் இப்பாவலரே சற்குரு தோத்திர முனாஜாத்து மஞ்சரி என்னும் பெயரால் 19 செய்யுட் களை வெண்பாகமாகப் பாடி உள்ளார். இப்பாடல்களிலும் அப்துல் கனி என்பது பல அடைமொழிகளுடன் ஒவ்வொரு பாடலின் இறுதி யிலும் அமைந்துள்ளது.

ஒரு பாடலில் அப்துல்கனி சாகிபு அவர்கள் கொழும்பு புதிய சோனகத் தெருவில் அமைந்துள்ள சாலிஹ் தைக்காவில் வாழ்ந்தவர் என்பது இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

மாத மூன்று மாரி பொழியும்
வான்வறந் திகழும் கொழும்பதில்
சோதி மின்னிய புதிய சோனகர்
வீதியில்பிர காசஞ்செய்

கீத கிரணமணி சாலிஹுதைக்
காவிலிங்கி பீடங்கொள்
போத ஞானசிந் தாமணி யெங்கள்
புனிதசெல்கப் துல்கனி. (8)

ஹாஜி வி. எம். சம்சுந்தீன் அவர்கள் சில முனாஜாத்துப் பாடல்களைப் பதிப்பித்துள்ளார். அதன் பெயர் முனாஜாத்து மஹ்றி பத்துல் இல்ஹாமியா என்பதாகும். இதனைக் கோட்டாரைச் சேர்ந்த செய்கு முகம்மது என்பவர் இயற்றி உள்ளார். இவர் செய்கு முகம்மது அப்துல் கரீம் அவர்களின் சீடராவார். பொதக்குடி நூறுல் முஹம்மதியா மதீரசாவில் அதிபராக விளங்கியவர். இலவசமாக வழங்கிய இதனை வ. மி. சம்சுத்தின் ஹாஜியார் அவர்கள் வெளியிட்டுள்ளார். இஸ்லாமிய ஏக தத்துவத்தைக் குறிக்கும் இல்முத் தெளஹீதை அறித்தவர்கள் மாத்திரமே இந்நூலை ஆராய்தல் வேண்டும் என்று பதிப்பாசிரியர் குறிப்பிட்டுள்ளார். 113 கண்ணிப் பாடல்களைக் கொண்டுள்ளது இம்முனாஜாத்து நூல், ஒவ்வொரு பாடலும் 'யாஹய்யுன் கையூம்' என முடிவுறுகிறது.

மாஹீன் அபூபக்கர் ஒலியுல்லா பேரில் பாடிய முனாஜாத்து என்று ஒன்று உள்ளது. திருவனந்தபுரம் பூத்துறை பீமாப்பள்ளியில் நல்லடக்கம் செய்யப் பட்டவர்கள் இவர்கள். அதே பள்ளியில் சார்ந்த முகம்மது அப்துல் காதிறுப் புலவர் அவர்கள் இம்முனாஜாத்துப் பாடலை இயற்றி உள்ளார். இரட்டை ஆசிரிய விருத்தமாக முதற்செய்யுள் அமைந்துள்ளது ஈரடிச் செய்யுள்களாக 22 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. 51 பாடல்கள் விருத்தப்பாக்களாக அமைந்துள்ளன.

இன்னும் பல முனாஜாத்துப் பாடல்கள் தோன்றியுள்ளன. ஒரு சிலவற்றின் பெயர்களையும் அவற்றின் ஆசிரியர் பெயர்களையும் தருகின்றோம். பாடப்பட்டவர்களின் பெயர்கள் முனாஜாத்துக்களின் பெயர்களிலே அமைந்திருக்கக் காணலாம்.

| | | |
|---|---|---|
| 1. | பத்ருத்தீன் முனாஜாத்து | - மெய்ஞ்ஞானக் குஞ்ஞாலி சாகிபு |
| 2. | தற்கலைபீர் முகம்மது சாகிபவர்கள் பேரில் முனாஜாத்து | - ,, ,, |
| 3. | சிந்தா சாகிபு மதாறுசாகிபு அவர்கள் பேரில் முனாஜாத்து | - ,, ,, |
| 4. | முகியித்தீன் ஆண்டவர் பேரில் முனாஜாத்து | - எக்கீன் சாகிபு |
| | | - ,, ,, |
| 5. | செய்யிது மஹ்கூது சாகிபு பேரில் முனாஜாத்து | - ,, ,, |
| 6. | காஜா பந்தேனவாசவர்கள் பேரில் முனாஜாத்து | - ,, ,, |
| 7. | ஹக்குபேரில் முனாஜாத்து | - கோட்டாற்று அபூஸாவிகு |
| 8. | செய்யிதப்துற் றகுமான் ஐதுறூசுத் தங்கள் முனாஜாத்து | - எக்கீன் சாகிபு |
| 9. | செய்குசிந்தா ஷாகு மதார் ஒலி பேரில் முனாஜாத்து | - சாகுல் கமீதுப் புலவர் |
| 10. | செய்யிது மஸ்ஊது சாகிபு பேரில் முனாஜாத்து | - முகம்மது இப்றாகீம் கலிபா சாகிபு |
| 11. | கவுதியா சலவாத்துடைய முனாஜாத்து | - செய்யிது அகமது லெப்பை ஆலிம் சாகிபு |
| 12. | ஞான முனாஜாத்து | - செய்கு முகம்மது காஜா லெப்பை |
| 13. | காஜாபந்தே நவாஸ் ஒலி பேரில் முனாஜாத்து | - ,, ,, ,, ,, |
| 14. | செய்கு உதுமான் சாகிபு பேரில் முனாஜாத்து | - ,, ,, ,, ,, |
| 15. | செய்யிதினா மஸ்ஊதிபுனி ஷாஹுஹமதானி பேரில் முனாஜாத்து | - பக்கீர் முகம்மது புலவர் |

சில சமயங்களில் ஒரே முனாஜாத்துப் பாடல் பல நூல்களில் இடம் பெறுவதும் உண்டு. இங்ஙனம் பார்க்கும் பொழுது இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்தில் உள்ள முனாஜாத்துக்கள் எண்ணிலடங்கா. இலட்சக் கணக்கான முனாஜாத்துப் பாடல்கள் இஸ்லாமிய தமிழ் இலக்கியத்தின் பாவளத்தைப் பெருக்கி உள்ளது எனின் அது மிகையாகாது.

# கிஸ்ஸா

இஸ்லாமியத் தமிழிலக்கிய வடிவங்களுள் கிஸ்ஸா என்பதும் ஒன்று. அறபு மொழியின் செல்வாக்கால் இஸ்லாமியத் தமிழ் பெற்ற பல பயன்களுள் ஒன்றே தமிழகத்தில் கிஸ்ஸா இலக்கியங்களின் தோற்ற மெனலாம். எனவே புதுவகைப் பிரபந்தங்களான மசலா, நாமா, முனாஜாத்து, படைப்போர் போன்று இதனையும் இஸ்லாமியப் புது வகைப் பிரபந்தங்களுள் ஒன்றாக அடக்குவர். இக்கட்டுரை கிஸ்ஸா இலக்கியங்களின் அறிமுகம் என்ற நிலையில் பலகருத்துக்களையும் ஆராய முற்படுகிறது.

கிஸ்ஸா என்னும் சொல் அறபுச் சொல்லை வினையாகக் கொண்டு தோன்றியதாகும். 'கஸஸ்' என்னும் அறபு அடிச் சொல்லிருந்து தோன்றியதே கிஸ்ஸா என்னும் சொல். கஸஸ் என்பது அறபு மொழியில் 'கதையுரைத்தல்' எனப்பொருள்படும். கிஸ்ஸா என்பதன் நேரடியான பொருள் கதை என்பதாகும்.

தமிழுலகில் நாட்டுப்புறக் கதைகள், கதைப்பாடல்கள் என்பன எங்ஙனம் பழமையும், முதுமையும் பெற்று இலக்கியத் தன்மைகளுடன் சிறந்து விளங்குகின்றனவோ அதுபோலவே அறபு மொழியிலும் கிஸ்ஸா என்பது இலக்கியங்களை உள்ளடக்கியுள்ளது.

நாட்டுப்புறக் கதைகள் அந்தந்த இடத்திற்கும் சூழலுக்கும் ஏற்ற உள்ளடக்கக் கருத்துகளைப் பெற்று விளங்குவனவாகும். இதுபோலவே அறபு மொழியில் தோன்றிய கிஸ்ஸா இலக்கியங்களும் அந்நாட்டின் வரலாற்றுச் சூழலுக் கேற்ப இஸ்லாமியப் பெரியோர்களின் வரலாறு களையும் இஸ்லாமிய மார்க்கக் கருத்துக்களையும் உள்ளடக்கமாகப் பெற்றமைந்துள்ளன. தமிழகத்தில் தோன்றிய நாட்டுப்புறக் கதை களுக்கு மதுரை வீரன், வீரபாண்டிய கட்டபொம்மன் போன்ற வரலாற்றுப் பாத்திரங்களும், நல்லதங்காள் சரித்திரம், ஐவர் ராசாக்கள் சரித்திரம் போன்ற சரித்திர நிகழ்வுகளும் கருப்பொருளாக அமைந்தன. இதுபோலவே அறபு மொழியில் தோன்றிய கிஸ்ஸாக்களை பெரு மானார் காலத்துத் தோன்றிய மார்க்கப் பெரியோர்களான ஷம்ஊன் (றலி) தமீமுல் அன்ஸாரி போன்றோர்களின் வரலாறுகளும், சைத்தூன், அபூஷஹ்மா போன்றோர் வாழ்வில் நடைபெற்ற சரித்திர நிகழ்வுகளும் கருப்பொருளாக அமைந்துள்ளதைக் காண முடிகிறது. தமிழகத்தில் தோன்றிய முஸ்லிம் புலவர்களுக்குத் தங்கள் சமயக் கருத்துக்களை மக்கள் மத்தியில் எடுத்துரைக்க மேலே கூறிய இரு இலக்கியச் சூழல்களுமே முன்னோடியாக அமைந்ததின் பயனே தமிழகத்தில் கிஸ்ஸா இலக்கியங்களின் தோற்றமாக அமைந்தது.

ஆனால் தமிழகத்தில் தோன்றிய தொன்மை வாய்ந்த நாட்டுப்புற இலக்கியப் பிரிவிற்கும் கிஸ்ஸா இலக்கியங்களுக்கும் ஒரு வேறுபாடு உண்டு. இங்கு தோன்றியுள்ள நாட்டுப்புற கதைகளுக்கோ கதைப் பாடல்களுக்கோ எந்தவொரு தனிப்பட்ட சமயமும் சொந்தம் கொண்டாட முடியாத நிலையில் அனைத்துப் பிரிவினருக்கும் உரியது என்று கூறத்தக்க வகையில் பல்வேறு வரலாற்றுப் பாத்திரங்களையும் சரித்திர நிகழ்வுகளையும் உள்ளடக்கமாகப் பெற்றமைந்துள்ளன. கிஸ்ஸா என்னும் இலக்கிய வகையின்கீழ் அடங்கும் அனைத்துக் கருத்துக்களும் இஸ்லாமிய சமயக் கருத்துக்களை மட்டுமே உள்ளடக்க மாகக் கொண்டுள்ளன.

இஸ்லாமியத் தமிழ் தோன்றி வளர்ந்த 17, 18, 19 ஆம் நூற்றாண்டுகளில் முஸ்லிம் புலவர்கள் பெரிதும் இங்குள்ள தமிழ்ச் சிற்றிலக்கிய வடிவங்களின் பெயர்களைத் தழுவியே முகையதீன் ஆண்டவர் பிள்ளைக் தமிழ் என்றோ, இறசூல் சதகம் என்றோ மக்கள் கலம்பகம் என்றோ நாகையந்தாதி என்றோ தமிழ் இலக்கிய மரபு தழுவிய பெயர்களையே பெரிதும் சூட்டியுள்ளனர். இதைப் போலவே கிஸ்ஸா இலக்கிய வகைகளுக்கும் கதை என்றோ கதைப்பாடல் என்றோ பெயர் சூட்டியிருக்கலாமே என்ற எண்ணம் தோன்றலாம். அவ்வாறு முஸ்லிம் புலவர்கள் தமிழ் இலக்கிய வடிவங்களின் பெயர்களைச் சூட்டியது போல் கதை தழுவிய ஓர் இலக்கியப் பிரிவிற்கு கதை அல்லது கதைப்பாடல் என பெயர் சூட்டாமல் கிஸ்ஸா எனப் பெயர் சூட்டியிருப்பதற்கு இரு காரணங்களை இங்கு கூறலாம்.

முதலாவதாகத் தாங்கள் எழுத நினைத்த ஓர் சிற்றிலக்கிய வடிவத் திற்கான முன்னோடி, அறபு மொழியில் இருந்திருக்குமானால் அதற்கே முன்னுரிமை அளித்து முஸ்லிம் புலவர்கள் தமிழில் இலக்கியவடிவத்தை அமைத்துள்ளனர். இக்கருத்து இஸ்லாமியச் சிற்றிலக்கியப் பரப்பினைப் பார்க்கும்போது நன்கு தெரிகிறது. இக்கருத்தை அரண் செய்வதற்கு இவர்கள் படைத்தளித்திருக்கும் முனாஜாத்து, நாமா, மசலா, படைப்போர் போன்ற இஸ்லாமியத் தமிழிலக்கிய பிரிவுகளின் பெயர்களை இங்குக் கூறலாம். முஸ்லிம் புலவர்கள் படைத்துள்ள பிள்ளைத்தமிழ், கலம்பகம், சதகம் போன்ற இலக்கிய வடிவங்கள் அறபு மொழியில் இல்லாததினால்தான் அவற்றைத் தமிழ் இலக்கிய மரபினைப் பின்பற்றிப் படைக்கிறார்கள் என்பதை அறிய முடிகிறது.

இரண்டாவது காரணம் இஸ்லாமியத் தமிழ் யாருக்காக எழுதப் படுகிறது என்ற கருத்தை அடியொற்றி அமைகிறது. வேற்றுநாட்டை சார்ந்த ஒரு சமயம் பிறிதொரு நாட்டில் நிலைகொள்ளவேண்டுமானால் அந்நாட்டு கலாசாரப் பின்னணியை கடைப்பிடித்தொழுகும்போதே

எளிதில் வெற்றி கொள்ள முடியும். இவ்வகையில் அறபு நாட்டில் தோன்றிய இஸ்லாமிய சமயம் தமிழகத்தில் நிலை கொள்ள உதவியவர்களுள் முஸ்லிம் தமிழ்ப்புலவர்கள் பெரும் பங்கு பெறுகின்றனர். இஸ்லாமியக் கருத்துக்களைப் பரப்புவதை நோக்கமாகக் கொண்டு தமிழிலக்கியம் படைத்த முஸ்லிம் புலவர்களது நோக்கம் இரு நிலைகளில் அமைந்திருப்பதை நன்குணர முடிகிறது. பொது நிலையில் இஸ்லாமியக் கருத்துக்களை பரப்புவதை மட்டுமே நோக்கமாகக் கொண்டு பல இலக்கிய வடிவங்களை படைக்கலாயினர். இதற்குரிய வாசகர்கள் இஸ்லாமியர் அல்லாதவராகவும் இருக்கலாம். இவ்வகையில் முஸ்லிம் புலவர்கள் படைத்தளித்துள்ள மரபு நிலை சிற்றிலக்கியப் பிரிவுகளான பிள்ளைத் தமிழ், சதகம், கலம்பகம் போன்றவை அடங்கும். இனி சிறப்பு நிலையில் முஸ்லிம் புலவர்கள் சில தமிழிலக்கியங்களை படைத்தளித்துள்ளனர் இவ்வகை தமிழிலக்கியங்கள் முஸ்லிம்களுக்கு தங்களது சமயத்தைப் பற்றி மென்மேலும் பல்வேறு வரலாற்று நிகழ்வுகளையும், மார்க்கம் பற்றிய போதனைகளையும் அறிய துணை நின்றன. இந்நிலையிலான தமிழிலக்கியங்கள் பெரிதும் அறபு, பாரசீக மொழியிலக்கியங்களை அடியொற்றியே தமிழில் அமைந்தன. இத்தகு இலக்கியங்களுள் ஒன்றாகவே கிஸ்ஸா இலக்கியங்களும் காட்சி தருகின்றன. முஸ்லிம் புலவர்களின் நோக்கம் நிறைவுற கிஸ்ஸா என்னும் அறபுச் சொல்லே முஸ்லிம் புலவர்களுக்கு முன்னோடியாக இருந்திருக்க வேண்டும். கிஸ்ஸா இலக்கியங்கள் தோன்றி வளர்ந்த 19-ஆம் நூற்றாண்டு காலத்து முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள் தமிழக நாட்டுப்புறக் கதைகள் பற்றிய கருத்துக்களை அறிந்திருக்கலாம். எனினும் கிஸ்ஸா என்ற தலைப்பில் ஓர் இலக்கிய வகையை உருவாக்கியதற்கான காரணம் இவ்விலக்கியங்கள் படைக்கப்பட்டது முஸ்லிம்களை இஸ்லாமிய மார்க்கத்தில் மேலும் ஈடுபாடு உடையவர்களாக்குவதே ஆகும். வாசகர்களை அடிப்படையாகக் கொண்ட இவர்களது நோக்கமே கிஸ்ஸா என்னும் இலக்கிய வகைக்கு இணையான ஒரு வடிவத்தினைத் தமிழிலிருந்தும் அறபு மொழியிலிருந்து முஸ்லிம் புலவர்களை பெறத்தூண்டியது.

மேலும் முஸ்லிம்களைப் பொறுத்தவரையில் உலகில் உள்ள அனைத்து மொழிகளிலும் அறபு மொழிக்கு ஒரு புனிதத் தன்மை இருப்பதாகக் கருதுகின்றனர். இதற்கு காரணம் இஸ்லாமியர்களின் ஏகோபித்த மறை நூலாம் அல்குர்ஆன் அல்லாஹ்வால் அருளப்பட்டது அறபு மொழியில் என்பதேயாகும். எனவே அறபு சொல்லாட்சியை எங்கெல்லாம் இயன்றவரையில் பயன்படுத்த முடியுமோ அங்கெல்லாம் முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள் தங்கள் தங்கள் இலக்கியங்களில் பயன்படுத்தியுள்ளனர். இஸ்லாமிய சமயத்துடன் தொடர்புடைய ஒரு வரலாற்று

கதைப் பகுதியை சைத்தூன் கதை என்றோ சைத்தூன் கதைப்பாடல் என்றோ கூறுவதைக் காட்டிலும் சைத்தூன் கிஸ்ஸா என்று கூறும் போது முஸ்லிம்களுக்கு அதனைப் படிக்கவேண்டும் என்ற ஆர்வம் மிகுதியாக இருப்பதை நடைமுறையில் நன்குணர முடிகிறது. இன்றளவும் இஸ்லாமியக் கதை ஒன்று கூறுங்கள் என்றால் சொல்லத் தெரியாத, படிப்பறிவில்லாத வயது முதிர்ந்த பல முஸ்லிம்கள் கிஸ்ஸா ஒன்று கூறுங்கள் என்றால் எண்ணற்றவைகளை கதையாகவும், கதைப் பாடல்களாகவும் எடுத்துரைப்பதைக் காணலாம். கிஸ்ஸா என்பதும் கதை என்பதும் ஒன்றுதான் என்ற உண்மையுணர்வில்லாமலேயே கிஸ்ஸா என்னும் அறபுச் சொல் தமிழக முஸ்லிம்களுக்கிடையே மார்க்கத்தில் ஓர் ஈடுபாட்டினை உண்டாக்கியுள்ளது.

எனவே தமிழகத்தில் தோன்றிய முஸ்லிம் புலவர்கள் அறபு மொழியில் தோன்றிய கிஸ்ஸா என்னும் இலக்கிய வடிவங்களையே முன்னோடியாகக் கொண்டு அதே பெயரில் முஸ்லிம் சமயச் சான்றோர்களின் வரலாறுகளையும் சரித்திர நிகழ்வுகளையும் எடுத்துரைத்துள்ளனர். இன்று கிஸ்ஸா இலக்கியங்களுக்கு முஸ்லிம் மக்கள் மத்தியில் உள்ள செல்வாக்கு ஏனைய பிற இஸ்லாமிய சிற்றிலக்கியங்களைக் காட்டிலும் அதிகமுள்ளதைப் பார்க்கும் போது அன்றைய சூழலில் இஸ்லாமிய சமயக் கருத்துக்கள் தமிழகத்து முஸ்லிம்கள் மத்தியில் பரவுவதற்கு கிஸ்ஸா இலக்கியங்கள் பெரிதும் துணை செய்திருக்கவேண்டும்.

## கிஸ்ஸா இலக்கியங்களின் தோற்றமும் வளர்ச்சியும்

தொடக்க காலத்தில் முஸ்லிம்களுக்கிடையே ஏராளமான கிஸ்ஸாக்கள் வாய்மொழியளவிலேயே வழங்கப்பட்டு வந்தன. தங்கள் சமயக் கருத்துக்களை எளிய முறையில் கதை கூறும் பாணியில் எடுத்துரைத்து சமயக் கல்வி புகட்ட கிஸ்ஸாக்கள் பிரச்சார சாதனமாகவே பெரிதும் பயன்பட்டன. முஸ்லிம்களுக்கிடையே வாய்மொழியாகவே வழங்கப்பட்டு வந்த கிஸ்ஸாக்கள் பொழுதுபோக்கு நிலையிலும் அமைந்திருந்தன என்பதை அறிய முடிகிறது. 'காலியாருக்கும் கள்ளனுக்கும் நடந்த கிஸ்ஸா' என்ற நூலின் முகப்பில் 'பூர்வீகக் காலத்திற் சில புத்திமான்கள் கூடியிருந்து மானுடர்களுக்கு மன மகிழ்ச்சியையும் சிரிப்பையும் வருத்தி வைக்கத் தக்கவைகளாக அநேகம் கிஸ்ஸாக்களை அறபு பாஷையிற் கோவை செய்திருக்கின்றவைகளில்

நின்றும்' எடுத்துக் கூறுவதாகச் சுட்டப்பட்டுள்ளது. எனவே கிஸ்ஸா இலக்கியங்கள் தோன்றிப் பெருகுவதற்கு இலக்கிய ரசனை அடிப் படையில் அமைந்த பொழுதுபோக்கு எண்ணமும் ஒரு காரணமாக அமைந்ததெனலாம். தமிழக முஸ்லிம் மக்களது மனநிலைக்கு ஏற்ப சமயச் சான்றோர்கள் பல்வேறு கிஸ்ஸாக்களையும் அறபு மொழி இலக்கியங்களை முன்னோடியாகக் கொண்டு அறிந்து அவற்றை தமிழாக்கம் செய்து வாய்மொழியாகப் பரப்பி வந்தனர். நாளடைவில் வாய்மொழியாக வழங்கப்பட்டு வந்த கிஸ்ஸாக்கள் அறபுத் தமிழிலும், தமிழிலும் வடிவம் பெறத் தொடங்கின.

கிஸ்ஸா என்னும் இலக்கிய வடிவத்தின் கீழ் தமிழில் தோன்றிய முதல் இலக்கியம் என்ற பெருமை சைத்தூன் கிஸ்ஸாவையே சாரும். இதனை ஷேக்லெப்பை கி. பி. 1874 ஆம் வருடம் இயற்றியுள்ளார். கிஸ்ஸா என்னும் இலக்கிய வடிவத்தில் எமக்குக் கிடைத்துள்ள தகவல் அடிப்படையில் இருபது இலக்கியங்கள் இருப்பதை அறிய முடிகிறது. இவற்றுள் சில ஒரே கதைக் கருவினையும் ஒரே பெயரினையும் பெற்று சிற்சில கதையம்ச வேறுபாடுகளை உள்ளடக்கி வெவ்வேருன ஆசிரியர் களால் வெவ்வேறு வருடங்களில் இயற்றப் பட்டிருக்கின்றன. எனவே அத்தகு கிஸ்ஸாக்களை இங்குத் தனித்தனி இலக்கியங்களாகக் கருதப் படுகிறது. இதற்குச் சிறந்த சான்றாக ஷம்ஊன் றலியல்லாஹு அன்ஹு உடைய கிஸ்ஸாவைக் குறிப்பிடலாம். இத்தலைப்பில் நான்கு கிஸ்ஸாக்கள் வெவ்வேறான காலங்களில் தோன்றியிருக் கின்றன. மேலும் ஒரே ஆசிரியரும் ஒன்றுக்கு மேற்பட்ட கிஸ்ஸாக் களையும் இயற்றியுள்ளதைக் காண முடிகின்றது. இவ்வகையில் குறிப் பிடத்தக்கவர்கள் ஆம்பூர் அப்துல் காதர் சாஹிப் அவர்களும், அய்யம் பேட்டை அப்துல் றஜாக் அவர்களுமாகும். இவ்விருவரும் தலா நான்கு கிஸ்ஸாக்களை இயற்றியுள்ளார்கள்.

தமிழிலுள்ள கிஸ்ஸாக்களும் அவற்றின் ஆசிரியர் பெயர், வெளி யிடப்பட்டுள்ள வருடங்களும் பின்வருமாறு அமைகிறது. இதுவரையில் வெளிவந்துள்ள கிஸ்ஸா இலக்கியங்களை, தோன்றிய காலத்தின் அடிப்படையில் பின்வருமாறு முறைப்படுத்தலாம். இவ்வட்டவணையில் வருடங்கள் என்ற பிரிவில் வினாக்குறி இருக்குமானுல் அக்கிஸ்ஸா தோன்றியுள்ள வருடம் குறித்துத் தெளிவாகத் தெரியவில்லை என்று பொருள்படும். எனவே, அத்தகு ஐந்து கிஸ்ஸாக்களை அவற்றின் ஆசிரியர் பெயருடன் அட்டவணையின் இறுதியில் அமைத்துள்ளோம்.

| | கிஸ்ஸாவின் பெயர் | ஆசிரியர் பெயர் | வருடம் |
|---|---|---|---|
| 1. | சைத்துன் கிஸ்ஸா | ஷேக் லெப்பை | கி. பி. 1874 |
| 2. | அய்யூப் நபியினுடைய கிஸ்ஸா | அப்துல் வஹாப் | 1882 |
| 3. | முகம்மது அனீபு கிஸ்ஸா | முகம்மது இப்றாகீம் | 1902 |
| 4. | சுல்தான் இபுறாகிமுடைய கிஸ்ஸா | ஷாகுல் ஹமீது | 1912 |
| 5. | ஷம்ஊன் றலியல்லாஹு அன்ஹு உடைய கிஸ்ஸா | முகம்மது இப்றாகீம் | 1915 |
| 6. | ஷம்ஊன் றலியல்லாஹு அன்ஹு உடைய கிஸ்ஸா | முகம்மது இஸ்மாயில் | 1916 |
| 7. | காலியாருக்கும் கள்ளனுக்கும் நடந்த கிஸ்ஸா | முகம்மதப்துல்லா லெப்பை | 1925 |
| 8. | யூசுப் நபி கிஸ்ஸா | மதாரு சாஹிபு | 1925 |
| 9. | அலி றலியல்லாஹு அன்ஹு கிஸ்ஸா | காளி முகம்மதுஜான் லெப்பை | 1925 |
| 10. | குலேபகாவலி கிஸ்ஸா | அப்துல் காதர் சாகிபு | 1936 |
| 11. | விறகு வெட்டியார் கிஸ்ஸா | அப்துல் றஸாக் | 1950 |
| 12. | காலி கோரி கிஸ்ஸா | அப்துல் றஸாக் | 1952 |
| 13. | ஷம்ஊன் றலியல்லாஹு அன்ஹு உடைய கிஸ்ஸா | ஷாஹுல் ஹமீது | 1952 |
| 14. | இசுவத்து நாச்சியுடைய கிஸ்ஸா | மகுதூ முஹம்மது புலவர் | 1953 |
| 15. | தமிமுல் அன்ஸாரி அவர்களின் கிஸ்ஸா | அப்துல் காதிர் சாஹிபு | 1952 |
| 16. | கபன் கள்ளன் கிஸ்ஸா | அப்துல் றஸாக் | ? |
| 17. | அபூ ஷஹ்மா கிஸ்ஸா | அப்துல் றஸாக் | ? |
| 18. | ஷம்ஊன் றலியல்லாஹு அன்ஹு உடைய கிஸ்ஸா | மெய்தீன் பிச்சை | ? |
| 19. | பீவி மறியமுடைய கிஸ்ஸா | அப்துல் காதர் சாகிப் | ? |
| 20. | சைத்தூன் கிஸ்ஸா | அப்துல் காதர் சாகிப் | ? |

இக்கிஸ்ஸா இலக்கியங்களுள் தமிழகத்து முஸ்லிம்களிடையே மிகவும் பிரசித்தமானவைகளுள் முதல்நிலை பெறுவது யூசுப் நபி கிஸ்ஸா என்றே கூற வேண்டும். காரணம், யூசுப் நபியின் கதை அல்குர்ஆனில் இடம் பெறத்தக்க முக்கியத்துவத்தைப் பெற்றதே யாகும். எனவே, யூசுப் நபியின் கதை பொதுவாக முஸ்லிம்களுக் கிடையே மிகவும் போற்றிப் பாராட்டப்பட்டது. கிஸ்ஸா இலக் கியங்கள் ஒவ்வொன்றின் தனி நிலை ஆய்வும் இங்கு மேற்கொள்வது இயலாததாகும். எனவே, கிஸ்ஸா இலக்கியங்களின் உருவம் உள்ளடக்கம் பற்றிய ஒட்டுமொத்தமான கருத்துக்களைத் தொகுத்துக் காண்போம்.

## கிஸ்ஸா இலக்கியங்களின் உருவம்

பொதுவாகத் தமிழிலக்கிய உருவங்களை வகைப்படுத்தும்போது முதல் நிலையில் செய்யுள் வடிவம், உரைநடை வடிவம் என்றே பிரிப்பர். இவ்வகையில் கிஸ்ஸா இலக்கியங்களை செய்யுள் அல்லது உரைநடை என்று வரையறுத்துக் கூறமுடியாத நிலையில் கிஸ்ஸா இலக்கியங்களின் உருவம் அமைந்துள்ளன. சில கிஸ்ஸாக்களை செய்யுள் வடிவத்திலும், சில உரைநடை வடிவத்தில். சில பாட்டிடை யிட்ட செய்யுள், உரைநடை, உரை நடைச் செய்யுள் என்று கூறுவதும் இரண்டும் விரவிக் காணப்படுகின்றன. யூசுப் நபி கிஸ்ஸா, முகம்மது அனிபு கிஸ்ஸா போன்றன செய்யுள் வடிவத்திலும், காலி கோரி கிஸ்ஸா, அலி றலியல்லாஹுஅன்ஹு கிஸ்ஸா போன்றவைகள் உரை நடை வடிவத்திலும், சைத்தூன் கிஸ்ஸா: ஷம்ஹுன் றலியல்லாஹு அன்ஹுடைய கிஸ்ஸா போன்றவைகள் செய்யுள், உரைநடை ஆகிய இரண்டும் விரவியும் காணப்படுகின்றன. இருபது கிஸ்ஸாக்களுள் பெரும்பாலான உரைநடை வடிவத்திலேயே அமைந்துள்ளன. எனினும், கிஸ்ஸா இலக்கியங்களுக்குரிய வடிவம் இன்னதுதான் என்று வரையறுக்க முடியாதபடி செய்யுள், உரைநடை ஆகிய இரண்டும் அமையப் பெற்று இருத்தல் ஏனைய பிற இஸ்லாமிய இலக்கியப் பிரிவுகளிலிருந்து இவ்வகை இலக்கியங்களை பெரிதும் வேறுபடுத்துகின்றன. மேலும் ஒரே பெயரில் அமைந்துள்ள கிஸ்ஸாக் களில்கூட உருவத்தில் ஒற்றுமையைக் காண முடியவில்லை. ஷேக் லெப்பை எழுதியுள்ள 'சைத்தூன் 'கிஸ்ஸா' முழுவதும் செய்யுள் வடிவ திலும் அப்துல் காதர் சாகிபு எழுதியுள்ள சைத்தூன் கிஸ்ஸா முழு வதும் செய்யுள் வடிவத்திலும் அப்துல் காதர் சாகிபு எழுதியுள்ள சைத்தூன் கிஸ்ஸா செய்யுள், உரைநடை ஆகிய இரண்டும் விரவியும் அமைந்துள்ளன. எனவே ஒரே பெயரில் ஒரே கதை யம்சத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட கிஸ்ஸாக்கள் இருந்தாலும் அவை உருவத்தாலும், காலத்தாலும் வேறுபட்டிருப்பதால் தனித்

தனி இலக்கியங்களாகக் கொள்ளப்பட்டுள்ளன. செய்யுள் வடிவில் அமைந்துள்ள கிஸ்ஸாக்கள் விருத்தங்களாகவே உள்ளன. உருவ அடிப்படையில் இருபது கிஸ்ஸாக்களுள் மிகவும் சிறியது கபன் கள்ளன் கிஸ்ஸாவும், பெரியது இசுவத்து நாச்சியுடைய கிஸ்ஸாவும் ஆகும்.

## கிஸ்ஸா தமிழிலக்கியங்களின் உள்ளடக்கம்

உள்ளடக்கம் என்ற நிலையில் கிஸ்ஸா தமிழிலக்கியங்கள் முழுக்க முழுக்க இஸ்லாமிய மார்க்கத்தையே அடிப்படையாகக் கொண்டுள்ளன. கிஸ்ஸாக்களின் நோக்கங்களுள் மார்க்கக் கருத்துரைகளையும், மார்க்க வழி நின்ற முன்னையோர் வரலாற்றினையும் பரப்புதல் என்பதே முதன்மையாக இருப்பதால் இருபது கிஸ்ஸாக்களும் இஸ்லாமியக் கருத்துக்களையே மையமாகக் கொண்டுள்ளன. பொதுவாக இவ்விருபது கிஸ்ஸாக்களையும் அவற்றின் உள்ளடக்கத்தை மையமாகக் கொண்டு இரண்டு பிரிவுகளுக்குள் அடக்கலாம்.

1. இஸ்லாமிய மார்க்க வரலாற்று நிகழ்ச்சிகளை மையமாகக் கொண்ட கிஸ்ஸாக்கள்.
2. வரலாற்று தொடர்பில்லாது இஸ்லாமிய கருத்துக்களை மட்டுமே மையமாகக் கொண்ட கிஸ்ஸாக்கள்.

## இஸ்லாமிய மார்க்க வரலாற்று நிகழ்ச்சிகளை மையமாகக் கொண்ட கிஸ்ஸாக்கள்

இங்கு வரலாறு என்பது நபிமார்களின் வரலாற்றினையும், இறைத்துவம் பெற்ற இறைநேசச் செல்வர்களின் வரலாற்றையும், அறபு நாட்டில் சில மன்னர்களது வரலாற்றினையும் குறிப்பதாகும். இதனடிப்படையில் பதினைந்து கிஸ்ஸாக்கள் அமைந்துள்ளன. இப்பதினைந்து கிஸ்ஸாக்களுள் குர்ஆனில் இடம் பெற்றுள்ள நபிமார்களுள் விளங்கும் அய்யூப் நபி, யூசுப் நபி ஆகிய இருவரது வரலாற்றினையும் அடிப்படையாகக் கொண்ட இரு கிஸ்ஸாக்கள் (கிஸ்ஸா எண் 2, 8) காணப்படுகின்றன. அல்குர்ஆனின் 12-வது அத்தியாயம் யூஸுஃப் என்ற தலைப்புடன் 111 வசனங்களைக் கொண்டுள்ளது. இக்கதையே குர்ஆனில் இடம் பெற்றுள்ள கிளைக் கதைகளிலேயே விரிவானதும் முழுமையானதுமாகும். இக்கதை முழுக்க மனிதர்களின் நிலை மாற்றத்தையே குறிப்பதாகும். இதனையே கருவாகக் கொண்டு விருத்தப்பாவில் யூசுப் நபி கிஸ்ஸா அமைந்துள்ளது. இக்கிஸ்ஸாவினை ஓர் உருவகக் கதையாகவே ஆசிரியர் இயற்றியுள்ளார். அய்யூப் நபி நோய்வாய்ப்பட்டதும், அது அல்லாஹ்வின் கருணையால் குணமானதும் போன்ற இன்னபிற நிகழ்ச்சிகள்

குர்ஆனில் இடம் பெற்றுள்ளது. (4:163; 6:84; 21:83; 38:41-44) இவற்றினை மையமாகக்கொண்டே அய்யூப் நபி கிஸ்ஸா அமைகிறது. நபிமார்கள் அன்றி குர்ஆனில் இடம் பெற்றுள்ள மரியம் உடைய வரலாற்றினை (3:35-37; 3:42-47; 4:156 பிற) அடிப்படையாகக் கொண்டே பீவி மர்யமுடைய கிஸ்ஸா காணப்படுகின்றது.

இனி பெருமானார் அடியொற்றி ஆட்சி நடத்தி 'நேர் வழி நடந்த நால்வர்' எனச் சிறப்புப் பெற்றவர்களுள் ஹஸரத் உமர், ஹஸரத் அலி ஆகிய இருவரது வரலாற்றினையும் ஒட்டியே இரண்டு கிஸ்ஸாக்கள் காணப்படுகின்றன. (கிஸ்ஸா எண் 9, 17) ஹலரத் அலியார் பரம் பரையான முகம்மது அனிபாவை கதை நாயகராக மூன்று கிஸ்ஸாக்கள் (கிஸ்ஸா எண் : 1, 3, 20) கொண்டுள்ளன. இம் மூன்றிற்குள்ளும் முகம்மது அனிபா, சைத்தூன் கலந்துகொண்ட போர் நிகழ்ச்சிகள் விரிவாக இடம் பெறுவதுடன் ஏனைய ராஜாக்களான செண்டுல் ராஜன் போன்றோர் இஸ்லாமைத் தழுவிய நிக்ழ்ச்சிகளும் விவரிக்கப் படுகின்றன.

இறைவனுடைய கருணையைப் பெற்ற அவுலியா என்னும் இறை நேசர்களின் வரலாற்றையும் அடிப்படையாகக் கொண்டு சில கிஸ்ஸாக்கள் தோன்றியுள்ளன. இத்தகைய கிஸ்ஸாக்களின் கதைத் தலைவராக இருப்பவர்கள் அரசர்களாகவே இருந்திருக்கின்றனர் என்பது குறிப்பிடத் தக்கதாகும். சுல்தான் இபுறாகீமுடைய கிஸ்ஸா (கிஸ்ஸா எண் : 4) இப்றாகீம் அவுலியாவின் கதையை எடுத்துரைக் கின்றது. இறை நேசரான அரசர் காலிதிப்துல் வலீது அவர்களின் மகனான ஷம்ஊன் றலியல்லாஹு அன்ஹு அவர்களை தலைவராகக் கொண்டு நான்கு கிஸ்ஸாக்கள் (கிஸ்ஸா எண் : 5, 6, 14, 18) உள்ளன.

மதீனமாநகரில் வாழ்ந்த இருவரது வாழ்க்கை நிகழ்ச்சிகளை மையமாகக் கொண்டு இரு கிஸ்ஸாக்கள் (கிஸ்ஸா எண் : 13, 15) காணப்படுகின்றன. இவற்றுள் ஒன்று லாபிர் என்னும் ஆலிம் மகளான இசுவத்து நாச்சியார் என்னும் கற்புநாயகி தமது கற்பைக் காத்த சரித்திரத்தை அடிப்படையாகக்கொண்டதாகும். இந்நூலுள் உட்தலைப்புக்கள் 16-ம் வெவ்வேறான தலைப்புகளைப் பெற்று வரலாறு என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. இதில் உள்ள மற்றொரு அம்சம் கதையில் வரும் அறபுச் சொற்களுக்கு ஆங்காங்கே அடிக் குறிப்பில் தமிழ் விளக்கம் அளித்திருப்பதாகும். மற்றொரு கிஸ்ஸா மதினமாநகரில் உள்ள அசுஹாபுமார்களுள் ஒருவரான தமீமுல் அன்ஸாரி அவர்களை தலைவராகக் கொண்டதாகும். இக்கிஸ்ஸாவில் உள்ள 13 உட்தலைப்புகளும் 13 கிஸ்ஸாவாக தலைப்பிடப்பட்டிருத்தல் குறிப்பிடத் தக்கதாகும்.

பொதுவாக வரலாற்று நிகழ்ச்சிகளை மையமாகக் கொண்டுள்ள இப் பதின்மூன்று கிஸ்ஸாக்களும் கதைத் தலைவர்களின் முழுமையான வரலாற்றினைத் தருகின்றன என்று கூறவியலாது. யூசுப் நபி கிஸ்ஸா போன்றன ஓரளவுக்கு முழுமையான வரலாற்றினையும் சைத்தூன் கிஸ்ஸா போன்றவைகள் கதை நாயகரின் வாழ்வில் நடந்த சில நிகழ்ச்சிகளையும் எடுத்துரைப்பனவாக உள்ளன. எனவே இவ்விரு கிஸ்ஸாக்கள் பற்றிய விரிவான ஆய்வினை இங்குச் சுட்டுகிறோம்.

## யூசுப் நபி கிஸ்ஸாவின் கதையமைப்பு

யூசுப் நபி கிஸ்ஸா ஐயம்பேட்டை மதாரு சாஹிபு அவர்களால் எழுதப்பட்டதாகும். நபிகளுள் ஒருவரான யூசுப் என்பவரே இக் கதையின் நாயகராவர். இது 155 செய்யுள் விருத்தங்களைக் கொண் டுள்ளது. அறபு நாட்டின் கன்னான் நகரில் உள்ள யாகூப் என்பாரின் 12 மகன்களுள் ஒருவரே யூசுப் நபியாகும். தந்தை யூசுப்பிடம் அதிக நேசத்துடன் இருப்பதைக் கண்ணுற்ற ஏனைய சகோதரர்கள் பொறாமை கொண்டு அவரைக் கொல்ல கிணற்றில் தள்ளிவிடு கின்றனர். இறையருள் பெற்ற யூசுப் எகிப்து வியாபாரியான மாலிக் என்பவரால் மிசுர் நகருக்கு கொண்டு செல்லப்பட்டு இந்நகர் மன்னர் அஜீஸ் என்பவரிடம் அடிமையாக விற்கப்படுகின்றார். அஜீஸ் மனைவியான சுலைகா திருமணத்திற்கு முன்பே யூசுப் நபியை கனவில் கண்டு காதல் கொண்டவளாவாள். யூசுப் வயது 16 ஆகும்போது அவரை சுலைகா தம் மோகத்திற்கு இணங்கும்படி முயன்று தோல்வியடைந்ததின் பயனாய் யூசுப் சிறையி லடைக்கப்படுகின்றார். 12 ஆண்டுகள் சிறைவாசத்திற்குப் பின் அரசன் கண்ட கனவின் பலன் கூறும் நிமித்தமாக விடுவிக்கப்பட்டு அரசவையில் முக்கிய இடம் பெறுகின்றார் யூசுப் நபி. பின் நாட்டில் ஏற்பட்ட கடும் பஞ்சத்தின் விளைவாக அரசனும் உயிர் இழக்க யூசுப் அரசராகின்றார். இந்நிலையில் சுலைகா வயது முதிர்ந்து யூசுபிடம் வந்து உணவு கேட்கும் நிலைமைக்குட்படுகிறாள். இதனைக் கண்டுற்ற இறைத்தூதர் ஜிபுரயீல் இத்தனை ஆண்டுகள் உனக்காகவே காத் திருந்து முதுமை அடைந்திருக்கும் விதவை சுலைகாவை திருமணம் செய்து கொள்வதே அல்லாஹ் நாடியதாகும் என்று தெரிவித்து சுலை காவை 16 வயதுப் பெண்ணாக மாற்றி திருமணம் செய்விக்கின்றார். இறுதியில் கொடுமை செய்த சகோதரர்களும் யூசுப் நபியிடமே தஞ்ச மடைகின்றனர். இதுவே யூசுப் நபி கிஸ்ஸா தரும் கதையாகும்.

## யூசுப் நபி கிஸ்ஸாவில் திருமறையிலிருந்து முரண்பட்டுள்ள கருத்துக்கள்

இக்கதை அல் குர்-ஆனிலிருந்து எடுக்கப்பட்டதாகும். அல் குர்-ஆனின் 12-ஆவது அத்தியாயம் 'யூஸுஃப்' என்ற தலைப்புடன் 111 வசனங்களை கொண்டுள்ளது. இக்கதையே குர் ஆனில் இடம் பெற்றுள்ள கிளைக் கதைகளிலேயே விரிவானதும் முழுமையானதுமாகும். இது முழுக்க மனிதர்களின் நிலை மாற்றத்தையே குறிப்பதாகும். நேர்மை உயர்த்தப்படுதல், உண்மையின் வெற்றி ஆகியனவே இக் கதையின் அடித்தளமாகும். குர்ஆனில் இடம் பெற்றுள்ள இக்கதையை பற்பல இடங்களில் மதாரு சாகிபு மாற்றம் செய்திருக்கின்றார். குறிப்பாக சுலைகா தொடர்பான செய்திகளில் மாற்றத்தைக் காணலாம். இப்பெயரே குர்ஆனில் காணப்படவில்லை. இதேபோல் யூசுப்பிற்கு தீனார் என்ற தங்கை இருப்பதாகக் கூறுவது, அஜீஸ் மிசுர் நாட்டின் மன்னராகக் காட்டப்படுவது, யூசுப் சுலைகா திருமணம், கனவு தொடர்பான செய்திகள் முதலானவைகள் குர்ஆனிலிருந்து மாற்றம் செய்யப்பட்டுள்ளவற்றில் சிலவாகும். எனவே மூலத்தில் இல்லாத பல செய்திகளையும் கதை அமைப்பின் நிறைவிற்காகவே ஆசிரியர் சேர்த்திருக்க வேண்டும்.

## யூசுப் நபி கிஸ்ஸாவின் உட்பொருள்

இக்கதையினை உருவகக் கதை என்றே கூற வேண்டும். மக்கள் அனுபவ மென்மை பெற வேண்டும் என்பதே யூசுப் நபி அவர்களது வாழ்வின் மறைபொருளாகும். யூசுப் நபி இளமைக் காலம் முதல் இறையொலியை தன்னகத்தே பெற்று அதனை பல்வேறு இன்னல்களுக்குமிடையே வளர்த்து இறையருள் நற்பணியை தம் வாழ்வில் பிற்காலத்தே முழுமையாக நிறைவேற்றுகின்றார். யூசுப் நபியின் சகோதரர்களது பொறாமையும், வெறுப்பும் நேர்மையற்ற நடைமுறையுமே யூசுபிற்கு இவற்றை எதிர்க்கும் ஆற்றலை வளர்த்து இறையருள் நற்பணிக்கு ஈடுபடத் தூண்டியது.

10 சகோதரர்களும் மனித சமுதாயத்தின் குரூரத் தன்மைகளின் பிரதிபலிப்பாகவே படைக்கப்பட்டுள்ளனர். இவர்களது கொடிய தன்மையை ஆசிரியர்,

'தகப்பனார்க் கண்ணுக் கெட்டாதப்பாற் சங்கையூசுபைக் கீழே போட்டு
நகைப்பாம் வார்த்தைகள்சொல்லி யடித்தே நடவென் றேபிடித்
திழுத்தனரே.
பா. (16)

இழுத்துவனத்திலேதான் கொண்டுபோ யிடக்காம் வார்த்தைகள்
பேசி பேசிப்
பழித்துயூசுபு தன்னைப் பார்த்துப் பட்டமாள்வது நீயோவென்று
கழுத்தை வளைத்தேதான் முதுகிற்குத்தி கவிழ்த்தி மண்புரளக்கா
லாலுதைத்தே
செழித்த முகமது வாடிடவே சினந்து கோபித்தே யடித்தனரே.
பா:17

என்று காட்டுகின்றார். இத்தகைய கொடிய இன்னல்கள் பல வற்றையும் யூசுபின் சகோதரர்கள் புரிந்தபோதிலும் இவ்வின்னல்கள் அனைத்தையும் தாங்கி இறுதியில் மேம்பட்டநிலைக்கு யூசுப் வந்தது மட்டுமின்றி தமக்கு துன்பம்புரிந்த தம் சகோதரர்களுக்கும் அடைக்கலம் அளிப்பதாவது குரூரத்தன்மையின் வீழ்ச்சியையும் உண்மையின் வெற்றியையும் பிரதிபலிப்பதாகும்.

தனக்கும் மீறிய உயர்ந்தவற்றின் மீது மனித இனத்திற்குரிய சாதாரண பலஹீனங்களுக்கு எடுத்துக்காட்டாகவே சுலைகாவும், ஏனைய மிசுர் நாட்டுப் பெண்மணிகளும் இடம் பெறுகின்றனர். இந்நிலையை கிஸ்ஸாவில் எடுத்துக் காட்டும்போது யூசுபின் அழகில் மோகம் கொண்ட மிசுர் பெண்கள் அவரைக் கண்டவுடன் கனியை அறுப்பதற்குப் பதிலாக கையை அறுத்துக் கொண்ட காட்சியை மிக உன்னதமாக ஆசிரியர் பின்வருமாறு படைத்துள்ளார்.

'உருசிகள் பெருகிய கனியே நீங்கள் நோக்கி யருந்துங்களென
வுரைத்தார்
திசையா யூசுபைக் கோதைமார்கள் செங்கணோக்கியே காதல் கொண்டு
விசையாக் கரங்களை சூரியாலே மேவியரிந்து கொண்டு திரமோட
மசக்கா யவரவர் விரகமாகி மையற் றலையேறி மயங்கிப் போனார்'
பா : 85

சுலைகாவின் காமத்தை ஆசிரியர் காட்டும்போது,
'ஈரெட் டாண்டின்மே லீசுபுக்கு இலங்கு மழகினால் சுலைகா தானும்
நேரிட் டீசுபை யடரவென்று நெருங்க வவரிடங் கொடாததினால்
போரிட் டனுதினஞ் சலித்திடுவாள் பொங்கி விரகமாய் கறுகி நிற்பாள்
ஏரிட் டவளையும் பார்க்காமலே யூசுபு நபி யிருந்தனர்காண்.
பா:88

என்று சுலைகாவின் விரகத்தையும், யூசுபின் மௌனத்தையும் கிஸ்ஸா வில் காட்டியுள்ளார். சுலைகா, ஏனைய மிசுர் பெண்மணிகள் யூசுபின் மீது மோகம் கொண்டு காம இச்சைக்கு உட்படுவதாவது ஆதம் ஏவாள் பாவத்திற்கு உட்பட்டதைப் போன்றதாகும்.

யூசுபு நபியை மிசுர் நகருக்குக் கொண்டு சென்று அவரை கண் காட்சியாக்கி பொருள் தேடி இறுதியாக ஏலத்தில் விற்ற வணிகர். மாலிக் மனிதர்களின் பொருள் வேட்கைக்கு மறைபொருளாகும் எகிப்து அரசர் அஜீஸ் யூசுப் நபியை தம் மகனாக பாவித்தே வளர்க்கத் தலைபடுகிறார். ஒருவகையில் யூசுப் நபி தம் இறையருட் திருப் பணியை முழுமையாக உலகுக்கு அறிவிக்க ஒரு கருவியாகவே இருந் திருக்கின்றார். அஜீஸ் இல்லத்திலேயே யூசுப் முழு ஆண்மையையும் இறையிடத்திலிருந்து ஞானத்தையும் சக்தியையும் முழுமையாக அடை கின்றார். இதனை குர்ஆன் (12 : 22) 'அவர் தன் வாலிபத்தை அடைந்ததும் நாம் அவருக்கு ஞானத்தையும் கல்வியையும் கொடுத் தோம்' என்று குறிக்கின்றது. மற்றவர்களுக்கு நல்லதைச் செய்யவும் தன்னுடைய நல்லெண்ணத்தை வளர்த்துக் கொள்ளவும் நினைக்கும் நேர்மையுள்ள ஒருவர் மற்றவர்களின் மடமை காரணமாகவும், பாவங் களின் விளைவாகவும் எத்தகைய இன்னல்களை எதிர்கொள்ள வேண்டியதிருக்கின்றது என்பதையே யூசுப் சிறைப்படுத்தப்பட்ட நிகழ்ச்சி உணர்த்துகிறது.

மனித இனங்களுள் இருக்கும் பலஹீனங்களான பொருள் வேட்கை, காம இச்சை, ஆசை முதலான ஒவ்வொன்றுக்கும் எடுத்துக் காட்டாகவே யூசுப் நபி கிஸ்ஸாவில் வரும் பாத்திரங்களான யூசுப் சகோதரர்கள், சுலைகா முதலான ஏனைய மிசுர்நகரப் பெண்மணிகள், வணிகர் மாலிக் முதலானவர்கள் படைக்கப்பட்டுள்ளனர். இப்பல ஹீனங்களுக்கு இடையில் அகப்பட்டுக் கொள்ளும் உண்மையின் வெற்றிக்குச் சான்றாகவே யூசுப் காணப்படுகிறார். எனவே யூசுப் நபி கிஸ்ஸா உணர்த்தும் மறைபொருளானது 'துன்பம், நல்லவற்றிற்காக தம்மைத் தாமே வருத்திக் கொள்ளுதல் ஆகிய நற்பண்புகளன்றி நல்ல மனிதனாலும், இறையருள் பெற்றவராலும் தாம் நினைத்ததை அடைய இயலாது' என்பதையே எடுத்துக் காட்டுகின்றது.

## சைத்தூன் கிஸ்ஸாவின் கதையமைப்பு

சைத்தூன் கிஸ்ஸா என்ற பெயரில் இஸ்லாமியத் தமிழ் இலக்கி யங்களுள் இரு கிஸ்ஸாக்கள் இருப்பதாக அறிய முடிகிறது. கிஸ்ஸா இலக்கியங்களின் தோற்றத்திற்கு வித்திட்ட பெருமை இக்கிஸ்ஸா வையே சாரும். எனினும் ஷேக் லெப்பை இயற்றியதாக அறியப்படும் முதலாவது கிஸ்ஸாவின் காலமான கி. பி. 1874 என்பதை வரலாற்று சான்றுகளுடன் அறிய முடியவில்லை. இரண்டாவதாக பேட்டை ஆம்பூரைச் சார்ந்த அப்துல் காதர் சாகிப் அவர்களும் சைத்தூன் கிஸ்ஸா ஒன்றினை இயற்றுவித்துள்ளார். இதன் காலத்தையும் சரிவர

அறிய முடியவில்லை. இக்கிஸ்ஸாவினைப் பற்றி ஆசிரியர் கூறும் போது இக்கிஸ்ஸா பாரசீக மொழியிலும் உருது மொழியிலும் உள்ள கிஸ்ஸாக்களிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டதாக குறிப்பிட்டுள்ளார். மேலும் பாரசீக, உருது மொழிகளில் பயிற்சியற்றவர்கள் எளிதில் புரிந்துகொள்வதற்காகவே இந்நூல் எழுதப்பட்டது என்றும் அதன் நோக்கம் பற்றிக் கூறுவார். சைத்தூன் கிஸ்ஸாவிற்குரிய பிறிதொரு முக்கிய அம்சம் உரையிடைப்பட்ட பாட்டுடைச் செய்யுள் போன்று அமைந்திருக்கும் அதனுடைய வடிவமாகும், கதைப் பகுதிகளுக்கு இடையிடையே கவிதைப் பகுதிகள் இடம் பெற்றுள்ளன. இதனை ஆசிரியர் 'தமிழில் வெள்ளை மொழியாகவும் கொஞ்சம் வசனமாகவும், கவியாகவும் அனைவரும் வாசித்து இன்புற அருளியது' என்று குறிப்பிட்டுள்ளார்.

பெருமானார் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குப்பின் ஆட்சி புரிந்த கலீபாக்களுள் நான்காவது கலீபா என்ற பெருமைக்குரியவர் அலி (றலி) அவர்களே. அலி (றலி) அவர்களின் நான்கு புதல்வர் களுள் ஒருவரே முஹம்மது ஹனிபு என்பர். இவரது தாயார் பெயர் பீபி ஹனிபா எனப்படும். முஹம்மது ஹனிபு அறிவு ஆற்றலுடன் அஞ்சா நெஞ்சம் படைத்தவர். இவைகள் இஸ்லாமிய வரலாற்று உண்மைகளாகும். இவ்வரலாற்றுப் பின்னணியை மையமாகக் கொண்டு படைக்கப்பட்டதே சைத்தூன் கிஸ்ஸா.

ஒரு நாள் முஹம்மது ஹனிபு அவர்கள் நால்வருடன் வேட்டை யாடக் காடு ஒன்றிற்குச் சென்றார்கள். அந்நால்வருள் இருவர் அபூ பக்கர் சித்தீக் (றலி) அவர்களின் புதல்வராவர். ஏனைய இருவரும் உமறு கத்தாபு (றலி) அவர்களின் புதல்வரர்வர். இவர்கள் ஐவரும் விரைவாக குதிரையில் காட்டின் வழியே செல்வதை சைத்தூன் என்ற பெண் கண்டாள். இவர்கள் வேட்டையாட வந்த காடு சைத்தூனுக்குச் சொந்தமானது. தனது ஆணைக்குள் உள்ள பகுதியில் உலாவும் அவ்வை வரையும் கண்டதும் சைத்தூனுக்குக் கோபமுண்டாகியது. அவர்களைப் போருக்கு அழைத்தாள். போரில் முஹம்மது ஹனிபு மூர்ச்சையுற்றார். இறந்துவிட்டார் என்று நினைத்து முஹம்மது ஹனிபை அவ்விடத்தே விட்டு மற்ற நால்வரையும் கைது செய்து தனது மாளிகைக்கு அழைத்துச் சென்றாள் சைத்தூன்.

பிறகு சைத்தூன் மதீனா செல்ல நினைத்தாள். அங்கு சென்று வெற்றி யீட்ட எண்ணினாள். மதீனா செல்லும் பொழுது விழுந்து கிடந்த முஹம்மது ஹனிபு மூர்ச்சை தெளிந்து மதீனா சென்றார். முஹம்மது ஹனிபைத் தாயார் அன்போடு வரவேற்றார். நடந்தவை அனைத்தையும் அறிந்தார். பின்னர் முஹம்மது ஹனிபு சைத்தூனுடன்

போர் புரியச் சென்றார். போரில் முஹம்மது ஹனிபு வெற்றியீட்டினார். சைத்தூனுக்கும் இஸ்லாத்தைத் தழுவ வேண்டி ஏற்பட்டது. சைத்தூனுடன் நடத்திய போர்களின் பயனாக வேறு பல இன்னல்களைச் சமாளிக்க வேண்டிய நிலைமை முஹம்மது ஹனிபுக்கு ஏற்பட்டது. பல போர்களில் பங்குபெற நேர்ந்தது. ஒரு போரில் சூழ்ச்சிக்கு ஆளாகிப் படுகுழியில் வீழ்ந்தார். நோய்வாய்ப்பட்டார். மாயமாக எடுத்துச் செல்லப்பட்டார். அனைவரும் முஹம்மது ஹனிபைத் தேடிச் சென்றனர். கடலுக்கப்பால் ஷாயாபரியுடைய மகள் ஹரியாபரி என்பவளால் கடத்திச் செல்லப்பட்டார் என்று அறிந்தனர். அங்கு செல்லும் வழியில் பல அரசர்கள் இஸ்லாத்தைத் தழுவினர். முஹம்மது ஹனிபு மீட்கப் பட்டார். இறுதியில் எல்லாம் இன்பமாய் முடிந்தன. அதுவே சைத்தூன் கிஸ்ஸாவின் கதையம்சமாகும்.

சைத்தூன் கிஸ்ஸாவில் முஹம்மது ஹனிபும் சைத்தூனும் போரில் ஈடுபட்டனர் என்ற நிகழ்ச்சி இஸ்லாமிய வரலாற்றில் குறிப்பிடப்பட வில்லை. உண்மையில் இந்நிகழ்ச்சி நடைபெற்ற தென்பதை நிலை நிறுத்த ஒருவிதமான சான்றும் இல்லை. இக்கதை பாரசீக, உருது ஆசிரியர்களின் கற்பனையில் எழுந்திருக்கலாம். அல்லது தமிழ் நாட்டு முஸ்லிம் புலவர்களின் உள்ளத்தில் உதித்திருக்கலாம். இஃது எவ்வா றாயினும் உண்மையில் இந்நிகழ்ச்சி நடைபெற்றது போலவே குறிப் பிடப்பட்டுள்ளது. பல முஸ்லிம் பெரியார்களின் பெயர்கள் இந்நூலில் குறிப்பிடப்பட்டுள்ளன. இப்பெயர்களைக் கேட்டவர்கள் இக்கதை உண்மையில் நிகழ்ந்தது என்றே கொள்வர்.

## சைத்தூன் கிஸ்ஸாவில் இஸ்லாமியக் கொள்கை

இனி, இக்கிஸ்ஸாவில் குறிப்பிடப்பட்டுள்ளவற்றை நோக்கு வோம். குதிரைகள் விரைந்து செல்லும் காட்சி இக்கிஸ்ஸாவின் பல இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. எல்லா இடங்களிலும் இக்காட்சி ஒரே முறையில் வர்ணிக்கப்பட்டுள்ளது. உவமை, சொல்லாட்சி முதலியன ஒரே வகையில் அமைந்துள்ளன.

செந்தூள் பறந்து தூசி யெழும்பிட
சூரர்கள் கண்டார்கள்
கருந்தூள் பறந்து தூசி யெழும்பிட
கண்டா ரந்நேரம்

இன்னோர் இடத்தில் ஓர் அலங்காரக் கண்ணியில் இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கைகளுள் ஒன்று குறிப்பிடப்பட்டுள்ளது. இஸ்லாம்

தற்காப்பின் பொருட்டு நடத்தும் போரையே அனுமதிக்கிறது. ஆக்கிரமிப்பை அங்கீகரிப்பதில்லை. அக்கொள்கையே மிகச் சுருக்கமாக முஹம்மது ஹனிபு வாயிலாக ஓர் அடியில் பின்வருமாறு குறிப்பிடப்படுகின்றது:

எதிரி அடித்தபின் நாங்க ளடிப்பது
எங்கள் வழக்க மென்றார்.

சைத்தூன் கிஸ்ஸாவில் ஒரே வகையான உவமைகள் ஆளப் பட்டுள்ளன. அவை மக்கள் எளிதில் விளங்கக்கூடிய வகையில் அமைந்துள்ளன.

இருவர் போர் புரியும்பொழுது ஒருவர் இன்னொருவரின் ஆற்றலைக் குறைவாகக் கூறி தனது வீரத்தைப் பெரிதாகக் கூறுவது இயற்கை. அத்தகைய சந்தர்ப்பத்தில் பின்வருமாறு பாடுகின்றார்.

புலியைப் பசுவும் வெல்வதுண்டோ
இந்தப் பூமியிலே
பூனையை எலிகள் வெல்வதுமுண்டோ
இந்தப் பூமியிலே
நரியைக் கோழிகள் வெல்வதுமுண்டோ
இந்தப் பூமியிலே

பெண்கள் வெளியில் வரக்கூடாது என்ற வழக்கத்தையும் இந் நூலில் பின்வருமாறு கூறுகின்றார்:

காட்டுக்கு வேட்டையாட நீ வந்த
காரிய மொன்று மில்லை
வீட்டுக்குள்ளிருந்து நீ நூலினை நூற்பது
உனக்குத் தகுந்த வேலை.

இவ்வாறு முஹம்மது ஹனிபைத் தேடித் தாயார் செல்லும்பொழுது சைத்தூனைச் சந்தித்ததும் தாயாரின் கூற்றாக வமைந்துள்ளது குறிப் பிடத்தக்கது.

போர் புரியும் காட்சியும் போருக்குப் பின்னர் வீரர் மடிந்து கிடக்கும் காட்சியும் முன்னர் கூறியவாறு எளிதில் விளங்கக் கூடிய முறையில் உவமைகள் அமைத்து வருணிக்கப்பட்டுள்ளன. இவ்வுவமைகளை மக்கள் அன்றாட வாழ்க்கையில் காணும் காட்சிகளைக் கொண்டே அலங்காரக் கண்ணிகளில் அமைத்துள்ளார்.

கொக்கு குலத்தினில் ராஜாளி போல்
குதித்தாள் சைத்தூ னும்
ஆட்டுக் கும்பலில் புலியைப் போல
புகுந்தாள் சைத்தூ னும்
மலைபோல் வெட்டிக் குவித்தாள் சைத்தூன்
மண்டை மூளை சிதற
தயிரின் குடம்போல் மூளைகள் சிதற
தலைகள் தானுதிர.

இக்காட்சிகள் எங்கெங்கு வருகின்றனவோ அங்கங்கெல்லாம் இதே முறையில் வருணிக்கப்பட்டுள்ளன.

வேறோரிடத்தில் தற்புகழ்ச்சி பின்வருமாறு அமைந்துள்ளது :—

கோழிகள் வந்ததா நரியினைப் பிடிக்கக்
கொக்கரித்துக் கொண்டு
ஆடுகள் வந்ததா புலியைமிரட்ட
ஆங்காரங் கொண்டு
தவளைகள் வந்ததா பாம்பினை வெல்ல
தைரிய மிகவாகி
எலிகள் வந்ததா பூனையைத் தின்ன
ஏக்கமிகக் கொண்டு

இவ்வாறு எளிய நடையில் உண்மையில் நிகழாத ஒரு கதையை இயற்றியதற்கும் ஒரு காரணமுண்டு. பழங்காலத் தமிழர் வாழ்க்கையில் போர் முதலிடத்தைப் பெற்றிருந்தது, அக்காலப் போரிலும் அறப் பண்புகள் மலிந்து இருந்தன. இங்கே எடுத்துக்கொண்ட சைத்தூன் கிஸ்ஸாவிலும் போர் குறிப்பிடப்படுகின்றது. இஸ்லாமிய அறப் பண்புகளும் இடையிடையே புகுத்தப்பட்டுள்ளன. இந்நூலைப் படிப்பதால் முஸ்லிம் மக்கள் பெரிதும் பயன் பெறாவிட்டாலும், தங்களது அறபு மூதாதைகள் இஸ்லாத்துக்காக - நல் வாழ்வுக்காக ஆற்றிய தொண்டினையும், செய்த தியாகங்களையும் அறிய முடிகின்றது.

வரலாறு தொடர்பில்லாத இஸ்லாமியக் கருத்துக்களை மட்டுமே மையமாகக் கொண்ட கிஸ்ஸாக்கள் :

இப்பிரிவின் கீழ் ஐந்து கிஸ்ஸாக்கள் காணப்படுகின்றன. அவைகளாவன: காலியாருக்கும் கள்ளனுக்கும் நடந்த கிஸ்ஸா, குலேபகாவலி கிஸ்ஸா, விறகு வெட்டியார் கிஸ்ஸா, காலி கோரி கிஸ்ஸா, கபன், கள்ளன், கிஸ்ஸா, முதலானவைகளாகும்.

இக் கிஸ்ஸாக்கள் ஐந்தும் இஸ்லாமிய கருத்துக்களை எடுத்துரைப்பதற்காகவே உருவாக்கப்பட்டிருக்க வேண்டும்.

இஸ்லாமிய சமயத்தில் ஒருவர் காலியாக அமைவதற்குரிய தகுதிகள், அவருக்குரிய கடமைகள் முதலானவற்றை விவரிப்பது காலியாருக்கும் கள்ளனுக்கும் நடந்த கிஸ்ஸாவாகும். கிஸ்ஸா

ஆலம் யாவு மமைத்தர சாளுமோர்
மேலவர் பணிந் தேமிகு கல்வியார்
காலி யார்க்குங் கள்ளற்கு நடந்துள
வோல மாரும் கிஸ்ஸாவை யுரைக்குவாம்

என்னும் காப்புக் கலிவிருத்தச் செய்யுளுடன் தொடங்கி கிஸ்ஸா முழுவதும் உரைநடை வடிவத்தில் அமைந்துள்ளது. அனைத்தும் கற்றுத் தேர்ந்த காலியாரும், நாயகம் பெருமானார் (ஸல்) அவர்களது ஹதீதான 'யாதனும் ஒருவன் ஓரிடத்தை நாடிப் பிரயாணப் பாதையில் போவதற்கு முன்னதால் ஓர் தோழனைக் கூடச் சேர்த்துக் கொள்க' என்னும் வாக்கினை மறந்து செயல்பட்டதின் விளைவாக வழியில் ஒரு கள்ளனிடம் அகப்பட்டுக் கொள்ள அவர் தம் உடைமைகளை இழந்து நிற்பதை விவரிக்கிறது. உடைமைகளைப் பறித்த கள்ளன் காலியாரின் தவத்தினையும் சுட்டிக் காட்டுகின்றான். இதற்குரிய மூலக் கதை அறபு இலக்கியங்களில் உண்டா என்பதை உறுதியாகச் கூற முடியாது. நபி (ஸல்) அவர்களது சொல்லை மறந்தவர்களுக்கு கெட்ட விதிதான் வந்து சம்பவிக்கும் என்பதை இக்கிஸ்ஸா உணர்த்துகிறது. அல்குர்ஆன் வாக்குகளும் பெருமானாரின் பொன்மொழிகளும் காலியாருக்கும் கள்ளனுக்கும் நடக்கும் வாக்குவாதத்தில் எடுத்துக் காட்டப்படுகிறது. அறபு வார்த்தைகள் அதிகமாகக் காணப்படுகின் றன. இக்கிஸ்ஸாவில் உள்ள பிறிதோர் அம்சம் கேள்வி பதில் போல் உள்ள அமைப்பாகும்

இஸ்லாமிய ஏழாவது மாதமான ரஜப் 22-ந் தேதி கந்தூரி பாத்திஹா ஹஸ்ரத் இமாம் ஜாபர் ஸாதிக் (றலி) அவர்களது பெயரால் நடத்தப்படுவது வழக்கமாகும். இக் கந்தூரி பாத்திஹாவின் ஆரம்ப சூழலையும், அதன் அவசியத்தையும் ஒரு ஏழை விறகு வெட்டியின் வாழ்வியல் நிகழ்ச்சியுடன் தொடர்புபடுத்தி விளக்குகிறது, விறகு வெட்டி கிஸ்ஸா. ஒரு விறகு வெட்டிக்கு கடும் பஞ்சம் ஏற்பட்டு வேறு நாடு சென்று பொருள் தேடச் சென்றான். அவனது மனைவி ஒரு மந்திரியின் வீட்டில் வேலை செய்து துன்பத்துடன் வாழ்ந்து வந்தாள். இந்நிலையில் ஹஸ்ரத் இமாம் ஜாபர் ஸாதிக் (றலி) அவர்கள் தமது நண்பர்களுடன் விறகு வெட்டியின் மனைவி இருக்கும்

பக்கம் கடந்து சென்றார்கள். அது சமயம் அவர்கள் தமது நண்பர் களிடத்து ஒருவன் எப்படிப்பட்ட துன்பத்தில் சிக்குண்டு கிடந்த போதிலும் அத்துன்பம் நீங்கிட வேண்டுதலைக் கொண்டு ரஜப் மாதம் 22-ந் தேதி அவனது சக்திக்கும் அந்தஸ்துக்கும் தகுந்தபடி மைதா மாவினால் ஆன பூரியான் என்று வழங்கப்படும் பண்டத்தைத் தயா ரித்து அத்துடன் இரண்டு குண்டா சட்டி நிறைய கீர் என்னும் பாயசத் தையும் சமைத்து எங்கள் பெயரால் ஆண்டவன் சன்னிதானத்தில் பாத்திஹா ஓதி, தன் வேண்டுதல் நிறைவேற்றத்திற்காக மன்றாடிக் கொள்வானாகில் நாயன் அவன் வேண்டுதலை அவசியம் பூர்த்தி செய்து வைப்பான், என்று கூறினார்கள். இதனைக் கேட்ட விறகு வெட்டியின் மனைவியும் அவ்வாறே செய்ய, அவளது கஷ்டங்கள் யாவும் நீங்கிற்று. அத்துடன் வெளிநாடு சென்ற அவளது கணவனுக் கும் புதையல் கிடைக்கப்பெற்று திரும்பி வந்தான். இதனைக் கண்டு பொறாமை கொண்ட மந்திரியின் மனைவியும் விறகு வெட்டி கொள்ளையடித்திருப்பான் என்று கூறி மந்திரியையும் தூண்டினாள். இதன் பயனாய் மந்திரி அரசன் மகனைக் கொன்ற குற்றத்திற்கு இலக்காகி தூக்குத் தண்டனையும் பெற்று கடும் துன்பத்திற்கு உள்ளா னான். இறுதியில் மந்திரியின் மனைவி ஜாபர் ஸாதிக் (அலை) அவர்கள் மீது நம்பிக்கையின்றி நடந்த தம் குற்றத்தை உணர்ந்து மன்னிப்புக் கேட்டு தன் குடும்பக் கஷ்டம் நீங்குவதற்கு ரஜப் மாதம் 22-ந் தேதி ஜாபர் ஸாதிக் அவர்களது பெயரில் பாத்திஹா ஓதுவதாக நேற்றிக் கடன் கொண்டாள். அதன் பலனாக மந்திரியும் விடுதலை பெற்றதுடன் அவர் இழந்த செல்வங்களை மீண்டும் பெற்று பழைய நிலைக்கு வந்தார். இதுவே விறகு வெட்டி கிஸ்ஸாவின் கதையம்ச மாகும். இது உருது மொழியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டதாக இதன் ஆசிரியர் அப்துல்ரஸாக் குறிப்பிட்டுள்ளார். இதற்குரிய மூலக் கதை அறபுமொழியிலிருக்க வாய்ப்பில்லை. கதையின் போக்கும், அதன் நிகழ்வுகளும் இங்குள்ள சூழலுக்கேற்பவே அமைந்துள்ளன. இக்கிஸ்ஸா முழுதும் உரை நடையில் அமைந்துள்ளது. உரைநடை அனைவரும் புரியும் வண்ணம் உள்ளது. ஏனைய கிஸ்ஸாக்களுடன் ஒப்பிடும்போது அறபு சொல் கலப்பு மிக்க குறைவு என்றே கூறலாம். இக்கிஸ்ஸாவின் இறுதியில் ரஜப் மாதம் 22-ந் தேதி ஓத வேண்டிய பாத்திஹாவையும் அதன் முறைகளையும் ஆசிரியர் இணைத்துள்ளார். தமிழக முஸ்லிம்கள் இப்பாத்திஹாவை தவறாது பின்பற்ற வேண்டும் என்ற நோக்கத்துடனேயே இக்கிஸ்ஸா இயற்றப்பட்டுள்ளது.

ஆண்டவன் படைப்பில் குறை கண்டால், அது நம்முடைய அறிவீனம் என்பதை எடுத்துரைப்பதே காலி கோரி கிஸ்ஸா. ஹிந்துஸ் தானி மொழியில் கோரி என்றால் சிவத்தவள் என்பதையும் காலி என்றால் கருத்தவள் என்பதையும் குறிப்பதால் இதனடிப்படையில்

இக்கிஸ்ஸா பெயர் பெற்றுள்ளது. கருத்தவள், சிவத்தவள் ஆகிய இருவரின் தர்க்கவாதமாகும் இக்கிஸ்ஸா. இதனை உருது மொழியிலிருந்து அய்யம்பேட்டை அப்துல்ரஸாக் தமிழாக்கம் செய்துள்ளதாகக் குறிக்கப்பட்டுள்ளது. இக்கிஸ்ஸாவின் முன்னுரையில் 'ஆண்டவன் சிருஷ்டித்த பொருள்கள் யாவும் மானிட வர்க்கத்திற்கு அத்தியாவசியமானவை என்றும், அவன் எதை எந்த அமைப்பிலும் நிறத்திலும் படைத்திருக்கிறானோ அதில் நாம் அற்பசொற்ப குறையேனும் கூற முற்படுவோமாகில் அது நம்முடைய, அறியாமையையும் மதியீனத்தையுமே வெளிப்படுத்துவதாகும். அடியிற்கண்ட கிஸ்ஸா அதற்குச் சான்றாகும். இந்த வரலாறு இரு ஸ்திரீகளைப் பற்றியதாகும். ஆதலால் இதை ஆடவர்கள் பொதுவாயும் ஸ்திரீகள் குறிப்பாகவும் செவி சாய்த்து கேட்பது அத்தியாவசியமாகும் என்று ஆசிரியர் குறிப்பிட்டுள்ளது கிஸ்ஸாவின் தொடக்கத்திற்கு முன்னுரை போல் உள்ளது. இக்கிஸ்ஸாவில் சிவத்த நிறமுடையவள் தன் நிறம் கருதி பெருமைப்பட்டுக் கொள்வதுடன் கருத்த நிறமுடையவளை நோக்கி அவளது கருமை குறித்து இழிவாகவும், தாழ்வாகவும் பேசுகிறாள். இதற்கு கருத்தவள் தர்க்கரீதியில் விடை கொடுத்து சிவத்தவளின் செருக்கினைச் சுட்டிக்காட்டி விளக்குகிறாள். பெண்களுள் சிவப்பானவர்கள் சிறப்பானவர்கள் என்றும் கருத்தவர் தாழ்வானவரென்றும் ஒரு கருத்து பரவிய சூழ்நிலையில் அத்தகுநிற வேற்றுமையை மாந்தர் தம் மனத்துள் கொள்ளக்கூடாது என்பதை அறிவூட்டுவதற்காகவே காலிகோரி கிஸ்ஸா தோன்றியிருக்க வேண்டும். இஸ்லாம் இந்தியா போன்ற பிற நாடுகளில் பரவத் தொடங்கியபோது அறபு நாடுகளிலிருந்து சமயத்தைப் பரப்புவதற்காக பல சமயச் சான்றோர்கள் இங்கு வந்து குடியேறினர். அவர்கள் அனைவரும் ஆடவர்களாகவே இருந்தனர். அத்தகு ஆடவர்கள் இங்கு கருமை நிறமுள்ள பெண்களை மணந்தால்தான் இஸ்லாம் பரவி வேரூன்றும் என்ற சூழல் ஒரு கால கட்டத்தில் இருந்திருக்க வேண்டும். அத்தகு நிலையில் சிவப்பு நிறமுள்ள அறபு தேசத்தில் பெண்களை பார்த்துப் பழகியவர்கள் கருப்பு நிறப் பெண்களை ஒதுக்கி விடுதல் ஆகாது என்ற காரணத்திற்காகவே காலிகோரி கிஸ்ஸா போன்றன தோன்றியிருக்க வேண்டும். எனவே இது போன்ற கிஸ்ஸாக்களுக்குரிய மூலம் அறபு மொழியில் இருந்திருக்குமா என்பது ஐயத்திற்குரியதே. இந்திய சூழலுக்கேற்ப இங்குள்ள முஸ்லிம்கள் இத்தகு கிஸ்ஸா இலக்கியங்களை உருவாக்கியிருக்கலாம். இக்கிஸ்ஸாவில் சிவப்பாய் இருப்பவள் தமது நிறங்கருதி கர்வம் கொண்டு தாம் சந்திரனுக்கு ஒப்பு என்று கூற, கருத்தவள் 'நிறத்தின் செருக்கு நரகத்தில் சேர்க்கும் என்றும், ஹஸ்ரத் அலியின் கையிலுள்ள புதை பட்டாக்கத்தி இரும்பாலானதே கருமையானதே என்றும், நகைகள் செய்யப் பயன்படும் கருவிகள் கருநிறமுடைய இரும்பினா

லேயே என்றும், பல்வேறு காரணங்களைச் சொல்லி வாதிடுகிறாள். பின் இறுதியில் இருவரும் காஜி சாஹிபு அவர்களிடம் சென்று பத்வா கேட்க, அவர் எழுதிய பத்வாவில் கருப்பு நிறமும் அல்லாஹ்வுக்குப் பொருந்தத்தக்கதே எனக் காணப்பட்டதைக் கண்டு, கோரி மனம் வருந்தித் திரும்புவதாய் கிஸ்ஸா முடிவுறுகிறது. இக்கிஸ்ஸாவைப் படிப்பவர்கள் 'பிறரைப் பொறுத்தருளும் சாத்வீகத் துறையில் ஒழுகித் தம்மையும் நினைத்துத் தமக்காக, நன்மைக்குரிய துஆச் செய்ய வேண்டுமென ஆசிரியர் வேண்டி முடித்துள்ளார். எனவே இக்கிஸ்ஸா நிற வேற்றுமையை தவிர்க்க வேண்டுமென்பதை வலியுறுத்துவதற் காகவே எழுதப்பட்டதெனலாம். இக்கிஸ்ஸா முழுவதும் உரைநடை யாக அமைந்துள்ளது.

உருது செய்யுளிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டு உரைநடை வடிவத்திலிருக்கும் பிறிதொரு கிஸ்ஸாவே கபன் கள்ளன் கிஸ்ஸா. இக்கிஸ்ஸா அனைத்துக் கிஸ்ஸா இலக்கியங்களுள்ளும் மிகச் சிறியது. கபன் துணியை திருடும் ஒரு திருடனின் இழிசெயல் அவனுக்கும் உணர்த்தப்பட்டு இறுதியில் அவனும் உயிர் துறக்க நேரிடுவதையே கபன் கள்ளன் கிஸ்ஸா குறிப்பிடுகிறது. இதேபோல் குலேபகாவலி கிஸ்ஸாவும் பொதுநிலையில் அமைந்த சில கருத்துக்களை உள்ளடக்க மாகப் பெற்றமைந்துள்ளது. பொதுவாக வரலாறு தொடர்பில்லா கிஸ்ஸா இலக்கியங்களுக்குரிய மூலம் அறபு இலக்கியங்களில் இருப் பதற்கு வாய்ப்பில்லை. காரணம் அவைகள் இங்குள்ள சூழலுக்கேற்ப எழுதப்பட்டிருக்கவேண்டும். இந்நிலை கிஸ்ஸா இலக்கியங்களின் தோற்றத்தில் உள்ள பரிணாம வளர்ச்சியைக் காட்டுகிறதெனலாம்.

புதுவகை இஸ்லாமியத் தமிழிலக்கிய பிரபந்தங்களுள் ஒன்றாகக் காட்சி தரும் கிஸ்ஸா இலக்கியங்கள் இஸ்லாமிய மார்க்கக் கருத்துக் களையும் நபிமார்களின் வரலாறுகளையும் இன்னபிற வரலாற்று நிகழ்வுகளையும் தமிழக முஸ்லிம் மக்கள் மத்தியில் பரப்புவதற்கு ஒரு சிறந்த கருவியாகவே பயன்பட்டிருக்கின்றன என்று கூறின் அது சாலவும் பொருந்தும். மேலும் கிஸ்ஸா இலக்கியங்களில் ஆங்காங்கே பலர் இஸ்லாமிய சமயத்தைத் தழுவியதையும் சுட்டிக்காட்டுவதால் இஸ்லாம் பரவிய சூழல்களையும் ஓரளவுக்கு அறிந்து கொள்ள முடி கிறது. புதுவகைப் பிரபந்தங்களுள் ஏனைய இலக்கிய வடிவங்களைக் காட்டிலும் கிஸ்ஸா இலக்கியங்கள் முஸ்லிம் மக்கள் மத்தியில் செல் வாக்குப் பெற்றுள்ளள எனக் கூறலாம். இதே போல் பிற புதுவகை பிரபந்தங்களைக்காட்டிலும் மிகுதியான அளவில் இஸ்லாமிய சமயக் கருத்துக்களையும் கிஸ்ஸா இலக்கியங்கள் உணர்த்துகின்றன என்றே கூறவேண்டும்.

# மஸ்அலா இலக்கியங்கள்

இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றில் புதுவகை முஸ்லிம் தமிழ்ச் சிற்றிலக்கியப் பிரிவுகளுள் ஒன்றாக காட்சி தருவது மஸ்அலா இலக்கியங்களாகும். அறபுமொழி இலக்கியத்தாக்கத்தால் இஸ்லாமியத் தமிழிலக்கியம் பெற்ற பயன்களுள் மஸ்அலா என்னும் இலக்கிய வகையும் அடங்கும். எனவே மஸ்அலா என்னும் இலக்கியப்பிரிவு முஸ்லிம் தமிழ்ப்புலவர்கள் தமிழிலக்கிய உலகுக்களித்த கொடைகளுள் ஒன்றே.

'மஸஅலா'' என்னும் அறபுச் சொல்லின் (Mas'alat) பொருள் வினா என்பதாகும். இவ்வறபுச் சொல் ஸுஆல் (Su'al) (கேள்வி) என்னும் அறபு வேர்ச்சொல்லிலிருந்து தோன்றியதாகும். அறபில் மஸ்அலா என்பதன் பிறிதொரு பொருள் 'பிரச்சனை' என்பதாகும். எனவே இஸ்லாமியத் தமிழிலக்கிய வடிவங்களுள் ஒன்றாகக் கருதப் படும் மஸ்அ லா என்பதன் நேரடியான பொருள் பிரச்சனை அல்லது வினா என்பதாகும்.

இஸ்லாம் பெருமானார் அண்ணல் நபி (சல்) அவர்களின் காலத் திற்குப்பின் இவ்வுலகில் வேரூன்றிப் பரவத்தொடங்கியது. அன்று முதல் இன்று வரையில் இஸ்லாமிய போதனைகளிலும் அம் மார்க்கம் வகுத்துக்காட்டும் நெறிமுறைகளிலும் ஐயங்கள் ஏற்பட்டு அவ்வையங் கள் வினாவாக எழுகின்றபோது அவற்றை நிவர்த்தி செய்யும் வழி முறையை இஸ்லாம் வகுத்துக்காட்டுகின்றது. அதாவது ஒருவருக்கு இஸ்லாத்தின் பரந்துபட்ட நற்போதனைகளில் எப்பகுதியில் ஐயங்கள் தோன்றினும் அவற்றை மார்க்கப் போதகர்களிடம் வெளிப்படுத்தித் தீர்த்துக் கொள்ள வேண்டும் என்பதே மார்க்கத்தில் பின்பற்ற வேண்டிய வழியாகும். இத்தகைய முறையின் அடிப்படையில் எழும் ஐயப்பாடுகளையே மஸ்அலா என்னும் அறபுச்சொல் குறிக்கிறது. எனவே மஸ்அலா இலக்கியவகை இஸ்லாமிய அடிப்படைக் கொள்கை களை விளக்கும் வகையில் எழும் ஐயங்களையும் அவற்றிற்குரிய விடை களையும் உள்ளடக்கமாகக் கொண்டமைந்துள்ளது எனலாம்.

## மஸ்அலாக்களும் தீர்ப்பதற்குரிய மார்க்க வழிமுறையும்

சமூக வாழ்வில் வெவ்வேறான காலச்சூழல்களில் வேறுபட்ட சிக்கல்கள், ஐயப்பாடுகள், புதிர்கள் தோன்றுவதுண்டு. இவ்வாறு ஏற்படும் ஐயப்பாடுகளுக்கும் சிக்கல்களுக்கும் உரிய தீர்வினை தீர்க்கும் வகையில் இஸ்லாமிய மார்க்கம் அதற்குரிய வழிவகைகளை வகுத்துக் காட்டத் தவறவில்லை. இவ்வாறு ஏற்படும் சிக்கல்கள், புதிர்கள், ஐயப்பாடுகளை பொதுவாக மஸ்அலா என்ற அறபுச்சொல்லால் குறிப்

பிடலாம். இஸ்லாமிய மார்க்கத்தினடிப்படையில் எந்தச் சூழலிலும் எந்தக் காலத்திலும் ஏற்படும் மஸ்அலாக்களுக்குரிய முறையான தீர்வு களுக்கு அணுக வேண்டியது இரண்டு வழிமுறைகளாகும். ஒன்று அல்குர்ஆன். பிறிதொன்று அல்ஹதீது. அல்குர்ஆன் இஸ்லாமிய மார்க்கத்தின் சட்டதிட்டங்கள் அடங்கிய அடிப்படை முழு முதல் வேதமாகும். இஃது அல்லாஹ்வின் இறைத்தூதர் பெருமானார் நபிகள் நாயகம் (சல்) அவர்களுக்கு அருளப்பட்ட திருமறை. அல்ஹதீது அல் குர்ஆனின் சட்டதிட்டங்களுக்குக் கிடைத்த செய்முறை எனலாம். பெருமானார் நபிகள் நாயகம் (சல்) அவர்கள் தம் வாழ்வினை மேற் கொண்டது அல்குர்ஆனின் ஒவ்வாரு கருத்துக்களுக்கும், ஒவ்வொரு வார்த்தைகளுக்கும் ஏற்பவே. பெருமானார் நபி (சல்) அவர்களின் வாழ்க்கை அல்குர்ஆனிற்குரிய விரிவுரை என்றே கூறலாம். இத்தகு சிறப்பினைப் பெற்ற பெருமானாரின் வாழ்வில் அவர் சொன்னவை கள், செயல்படுத்தியவைகள் முதலான அண்ணலாரின் வாழ்வுடன் நேரிடையான தொடர்புடைய செய்திகளே அல்-ஹதீதாகும். எனவே முஸ்லிம்கள் ஒவ்வொருவருக்கும் அல்குர்ஆனும், அல்ஹதீதும் வழி காட்டியாக உள்ளன. இவ்விரண்டையும் பற்றி பெருமானார் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறும்போது 'உங்களிடையே இரண்டினை நான் விட்டுச் செல்கின்றேன். அவ்விரண்டினையும் நீங்கள் பற்றிப் பிடித்துக் கொள்வீர்களானால் வாழ்வில் நெறிகெட்டுப் போகமாட்டீர் கள். இவ்விரண்டும் அல்குர்ஆனும் அல்ஹதீதும் ஆகும் என்று உரைத் துள்ளார்கள். இஸ்லாமிய சரித்திரம் தொடங்கியது முதல் இன்றுவரை யில் அது எதிர்கொண்ட எதிர்ப்புக்கள், இன்னல்கள் எண்ணற்றவை களாகும். இவ் எதிர்ப்புகள் கொள்கை ரீதியாகவும் நடைமுறை ரீதி யாகவும் அமைந்திருந்தன. பல்வேறு கால கட்டங்களில் வாழ்ந்த மக்களின் மனதில் இஸ்லாமிய போதனைகள், நடைமுறைகள் தொடர் பாக ஏற்பட்ட ஐயப்பாடுகளுக்குரிய விடைகளை அல்குர்ஆனும் அல் ஹதீதும் தந்தன. இனி வரப்போகும் காலங்களுக்குரிய ஐயப்பாடு களையும் இவ்விரண்டும் தீர்த்து வைக்கும் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. எனவே அல்குர்ஆனும், அல்ஹதீதும் என்றென்றும் அழியாத கோட்பாடுகளையும் கொள்கை விளக்கங்களையும் உள்ளடக்கி யுள்ளன. எனவே இஸ்லாமிய மார்க்கப் பெரியோர்கள் எந்தவொரு காலச்சூழலிலும் ஏற்பட்ட மஸ்அலாக்களுக்குரிய தீர்வினை நாடும் போது அல்குர்ஆனையும் அல்ஹதீதையும் அடிப்படையாகக் கொண்டே பதில் அளித்து வந்தனர். இந்நெறி முறையின் அடிப்படையிலேயே மஸ்அலா இலக்கியங்களும் அமையப்பெற்றுள்ளன. இது மஸ்அலா இலக்கியங்களுக்குரிய பொதுத்தன்மை எனலாம். இப்பொதுத்தன்மை யின் அடிப்படையிலேயே முஸ்லிம் தமிழ்ப் புலவர்களும் தமது மஸ்அலா இலக்கியப் படைப்புக்களை உருவாக்கியுள்ளனர்.

## மஸ்அலா தமிழிலக்கியங்கள்

மஸ்அலா என்னும் சொல்லினையே முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள் தமது இலக்கிய ஆக்கத்தில் எடுத்தாளும்போது மசலா என்றும் மஸ்அலா அல்லது மஸாலா என்றும் வழங்கலாயினர். இதன் பயனாய் அறபு மூலத்தினடிப்படையில் அமைந்த பெயரை மட்டும் வைத்துக் கொள்ளாமல் அறபு மூலத்தில் உள்ள வடிவ அமைப்பையும் உள்ளடக்கக் கருத்துக்களையும் அப்படியே ஏற்றிப்போற்றி அவற்றிற்குத் தமிழில் பா வடிவம் கொடுத்தனர்.

## ஆயிர மஸ்அலாவின் தனிச்சிறப்பு

இஸ்லாமியத் தமிழ் சிற்றிலக்கியப் பிரிவில் மஸ்அலா என்னும் இலக்கிய வகையின் கீழ் இது வரையிலும் மூன்று இலக்கியங்கள் இடம் பெற்றுள்ளன. இவற்றுள் காலத்தால் முதலில் தோன்றிய மஸ்அலா இலக்கியம் ஆயிர மஸ்அலா ஆகும். அதன் காலம் கி. பி. 1572. இந்நூலின் முழுப்பெயர் 'ஆயிர மஸ்அலாவென்று வழங்கும் அதிஜய புராணம்' என நூலின் முகப்பில் குறிக்கப்பட்டுள்ளது. இம் மஸ்அலா இலக்கியத்தை இயற்றுவித்த பெருமை மதுரை மாநகரினைச் சார்ந்த வண்ணப் பரிமளப் புலவருக்கே சாரும். நூலாசிரியர் பற்றிய குறிப்பினை நூலினுள் அடங்கிய கடவுள் வாழ்த்துப் பாடல் (எண். 32) தெரிவிக்கின்றது. இதில் ஆசிரியர் வகுதை நாடன் எனவும் குறிக்கப்பட்டிருப்பதால் வண்ணப் பரிமளப் புலவர் வகுதை நாட்டினர் எனவும் ஆயிர மஸ்அலாவை இயற்றுவிக்கும்போது மதுரையில் இருந்தார் எனவும் கொள்ளலாம்.

புயலாய்ந்த மதுரை கீழ்பால்
பொருந்திய சுலையு மானிற்
செயலாய்ந்த முல்லா மிய்யா
செயிதுரை செய்ய இந்நூல்
இயலாய்ந்த முதலி செய்கு
இசுகாக்கெனு வகுதை நாடன்
பயகாம்பர் அருள்சேர் வண்ணப்
பரிமளம் பகர லுற்றான்.

(ஆயிர மஸ்அலா கடவுள் வாழ்த்து : 32)

நூலாசிரியரின் செய்தியை விளக்கிக் காட்டும் இச்செய்யுளுக்கு அடுத்த பாடல் நூலின் காலத்தை தெளிவாகக் குறிப்பிட்டுக் காட்டுகிறது.

இயலிறசூல் திருவடி சாய்ந்த தொளாயிரத்தி னுடனெண்ப தாண்டின்
முயலும்ப்ர மாதூதா வருடத்தில் முழங்குபுளி யங்குளத்து
முல்லாமிய்யா செ:பிது மருதூம்
வயதுமுப் பத்தொன்பான் தன்னிலிந்நூ லுரைத்திட முத்தமிழாற்
போற்றிப்
பயிலுமையே ழெனும் வாலப்பி ராயந்தன்னிற் பரிந்துவண்ணப்
பரிமளஞ்சொற் பகர்ந்தவாறே.

(ஆயிர மஸ்அலா : கடவுள் வாழ்த்து : 33)

இச்செய்யுளின் அடிப்படையில் இஸ்லாமிய ஆண்டான ஹிஜ்ரி 980இல் ஆயிர மஸ்அலா இயற்றப்பட்டது தெளிவாகிறது. இதற்கு இணை யான கிறித்துவ வருடம் கி. பி. 1572 ஆகும். வண்ணப் பரிமளப் புலவர் ஆயிர மஸ்அலாவை இயற்றுவித்த இவ்வாண்டானது இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றில் ஓர் உன்னதமான சிறப்பு வாய்ந்த ஆண் டாகக் கருதப்படுகிறது. இத்தகு சிறப்பிற்கு இரண்டு காரணங்கள் உண்டு. முதலாவதாக மஸ்அலா என்னும் புதுவகை இஸ்லாமியத் தமிழிலக்கிய வகையின் தொடக்கம் இவ்வாண்டிலேயே நடைபெற்றுள் ளது. இரண்டாவது நிலையில் ஆயிர மஸ்அலா, மஸ்அலா இலக்கிய வகையில் முதல் நிலை பெறுவதுடன் இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றின் மொத்த எல்லைப் பரப்பில் காலம் என்ற நிலையில் மூன்றாவது தோன்றியதான சிறப்பினையும் பெற்றுள்ளது.

அதாவது இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றின் தொடக்கம் என்பது பல்சந்த மாலை என்னும் இலக்கியத்தின் மூலமே நிகழ்ந் துள்ளதை பல்வேறு சான்றாதாரங்களின் மூலம் நிறுவப்பட்டுள்ள போதிலும் இந்நூலின் முழு வடிவமும் எமக்குக் கிடைத்தில. கிடைத் துள்ள ஒரு சில பாடல்களின் அடிப்படையிலேயே பல்சந்தமாலை கி. பி. 12ஆம் நூற்றாண்டினைச் சார்ந்ததாக இருத்தல் வேண்டும் என்பது நிறுவப்பட்டுள்ளது. அதனுடைய காலமும் இன்னதுதான் என்பதை அறுதியிட்டுக் கூற முடியவில்லை. முஸ்லிம்களுள் முதல் சித்தரான யாகோபுச் சித்தர் பாடல்களின் காலத்தை சில உள்ளடக்கச் செய்திகள் கொண்டும் அவரது மொழி நடையைக் கொண்டுமே நிர்மாணிக்க வேண்டியுள்ளது. தமது பாடல்களில் முகியித்தின் அப்துல் காதிர் ஜய்லானி (றலி) அவர்களைப் பற்றிக் குறிப்பிடுவதால் அன்னாரது காலமான கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டுக்குப் பிற் பட்டவர் யாகோபுச் சித்தர் என்பது தெளிவாகிறது. இவரது மொழி ஆளுமை நடை முதலானவற்றைக் கருத்தில் கொண்டு இவரது பாடல்கள் கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டைச் சார்ந்தது என அனு மானிக்கலாம். இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றின் தொடக்கத் தில் தோன்றிய முதல் இரண்டு இலக்கியங்களின் காலத்தையும் அனு மானத்தின் அடிப்படையிலேயே மேற்கொள்ள வேண்டியதாய் இருக்க

இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றில் நூலின் முழுமையான உள்ளடக்கச் செய்திகளையும், அவ்விலக்கியம் தோன்றிய காலக்கட்டத்தையும் தமிழுலகுக்குச் சரியாக வெளிப்படுத்தி நிற்கும் நிலையில் முதன்மை பெறும் தன்மையை மூன்றாவதாகத் தோன்றிய ஆயிர மஸ்அலாவே பெற்றுள்ளது. எனவே வண்ணப் பரிமளப் புலவரின் ஆயிர மஸ்அலா, மஸ்அலா இலக்கியத்தில் மட்டுமல்லாது இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றிலும் குறிப்பிடத்தக்க முக்கியத்துவத்தையும் சிறப்பையும் பெறவல்லது. இச்சிறப்பினைக் கருத்தில் கொண்டு ஆயிர மசலா பற்றிய விரிவான ஆய்வு இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாறு - முதல் தொகுதியில் (பார்க்க : இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாறு-முதல் தொகுதி, இயல் நான்கு) மேற்கொள்ளப்பட்டிருப்பதால் இவண் விடுகின்றோம். இனி ஏனைய இரு மஸ்அலா இலக்கியங்கள் தொடர்பான செய்திகளைக் காண்போம்.

## வெள்ளாட்டி மஸ்அலா

மஸ்அலா இலக்கிய வகையுள் காலத்தால் இரண்டாவது இடத்தைப் பெறுவது வெள்ளாட்டி மசலா ஆகும். இவ்விலக்கியத்தின் முழுப்பெயர் 'தவத்துது என்ற வெள்ளாட்டி மஸ்அலா' என்பதாகும். இதனை இயற்றியவர் காயல்பட்டணம் ஷெய்கப்துல் காதிறு லெப்பை என்பவராகும். வெள்ளாட்டி மஸ்அலாவின் காலம் கி. பி. 1856. இஸ்லாமியத் தமிழிலக்கியங்களுள் காலத்தை அறுதியிட்டுக் கூறத்தக்க நூல்களுள் முதன்மை நிலையைப் பெற்ற ஆயிர மசலாவின் தோற்றத்திற்குப்பின் மஸ்அலா இலக்கிய ஆக்கத்தில் பெரும் இடைவெளி இருப்பதை வெள்ளாட்டி மஸ்அலாவின் தோற்றம் உணர்த்துகிறது. இம் மஸ்அலாவிற்கு இதுவரையில் ஐந்து பதிப்புக்கள் முறையே 1856, 1884, 1910, 1917, 1953 ஆம் ஆண்டுகளில் வெளிவந்துள்ளன. இப்பதிப்புக்கள் ஒவ்வொன்றிலும் இம் மஸ்அலாவிற்குரிய பெயர் வெவ்வேறுவிதமாக இடம் பெற்றுள்ளது. இரண்டாவது பதிப்பை கீழக்கரையைச் சார்ந்த செய்கப்துல் காதிறு என்பவர் பதிப்பித்து உள்ளார். இப்பதிப்பு 'தவத்துது என்னும் வெள்ளாட்டி மஸ்அலா மறுமொழி வசனம்' என்னும் தலைப்பில் வெளியிடப்பட்டுள்ளது. மூன்றாவது பதிப்பினை அப்துல் அஜீஸ் சாகிப் 'வெள்ளாட்டி மஸ்அலா' என்னும் தலைப்பிலேயே பதிப்பித்துள்ளார். 1917இல் வெளியான நான்காம் பதிப்பை முகம்மது லெப்பை சாஹிப் 'வெள்ளாட்டி மஸ்அலா மறுமொழி விலாசம்' என்னும் தலைப்பில் வெளியிட்டுள்ளார். இறுதிப் பதிப்பான ஐந்தாம் பதிப்பில் மட்டுமே 'ஹதீது விசளம்' என்னும் சொற்றொடரும் தலைப்புடன் இணைக்கப்பட்டு 'தவத்துது என்ற வெள்ளாட்டி மஸ்அலா ஹதீது விசளம்' என்று காணப்படுகிறது. இப்பதிப்பு ஷாஹுல் ஹமீது அவர்களால் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

வெள்ளாட்டி மஸ்அலாவின் காலம் பற்றிய கருத்திற்கு உறுதுணையாக நூலினுள் அகச்சான்றுகள் கிடைக்கவில்லை. மஸ்அலா இலக்கியங்களாக இடம்பெற்றுள்ள மூன்று இலக்கியங்களுள் வெள்ளாட்டி மஸ்அலா மட்டுமே உரைநடை வடிவத்தில் அமைந்துள்ளது. இம்மஸ்அலாவின் தலைப்பில் இடம்பெற்றுள்ள வெள்ளாட்டி என்ற தமிழ்ச் சொல்லின் பொருள் 'பணிப்பெண்' என்பதாகும். தவத்துது என்பது பணிப்பெண்ணின் பெயராகும். மன்னர் ஹாரூன் ரஷீது அரசவையில் உள்ள அறிஞர் நால்வரின் பல்வேறு வினாக்களுககு வெள்ளாட்டி தவத்துது விடையளிப்பதால் தவத்துது என்ற பெயரிலேயே இம்மஸ் அலா இடம்பெற்றுள்ளது.

இந்நூலில் 669 மஸ்அலாக்களும் அதற்கு தவத்துது அளிக்கும் விடைகளும் இடம்பெற்றுள்ளன. இந்நூலின் தொடக்கத்தில் வெள்ளாட்டி தவத்துது பற்றிய வரலாற்று பின்னணி இடம்பெற்றுள்ளது. பகுதாது நாட்டில் தாறுஸ்ஸலாம் என்னும் பட்டணத்தில் வசித்துவரும் பெரும் தனவந்தரான சவுதாக்கர் (வர்த்தகர்) ஒருவருக்கு நீண்ட காலமாக குழந்தைச் செல்வம் இல்லாதிருந்து பின் அல்லாஹ்வின் கருணையால் பதுறுஸ்ஸமான் என்னும் ஆண்மகவு ஒன்று பிறந்திட, தனவந்தர் தம் மகனை நல்வழிப்படுத்தி மார்க்க நெறியில் வளர்ப்பதற்காக ஐந்து வயது வெள்ளாட்டி பெண்ணைத் தேடுகின்றார். அவள் எவ்வாறு இருக்கவேண்டும் என்பதை பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

'எனக்கொரு வெள்ளாட்டியவள் சிறிய வயதானவள் ஐந்து வயதுப் பெண்ணானவள் வர்ணிப்பிலடங்காத மிகுந்த அழகானவள், நல்லவள், குறுஞ்சிரிப்புள்ளவள், உயர்ந்த நிரப்பமுள்ளவள், மதுரவாக்குள்ளவள், வாடை மணமானவள், தலைகனத்தவள், அவள் கால்த்திலவளுக்கு நிகரில்லாதவள், இப்பேர்க்கேற்ற பெண் வேண்டும்' என்கிறார்.

இத்தகு இயல்புகள் அனைத்தும் வாய்க்கப்பெற்ற வெள்ளாட்டியை ஒரு வியாபாரி மூலமாக விலைக்கு வாங்கி அவளுக்கு தவத்துது என்ற பெயரும் இடப்பட்டது. அவ்வெள்ளாட்டி தவத்துது தீனுக்கடித்தளமான அறிவுகள், மார்க்கமுறை விளங்கும் பிக்ஹுடைய அறிவுகள், அக்காயிது, சுலூக்கு, தஸவ்வுபு, மஃரிபாவுடைய அறிவுகள், விரிவு பிரிவான மஸ்அலாக்கள் அறபு நிகண்டு, அகராதி, வயித்தியத்துடைய அறிவு சொல் சூட்சமான நவநீதம், நூதனமான அறிவுகள் கணக்கு ஹிசாபு, வானம் பூமிவுடைய அறிவுகள் முதலான அனைத்தையும், கற்றுத்தேறி அறிவுக்கடலாக விளங்கினாள். அவளின் பயனாய் சவுதாக்கர் மகன் பதுறுஸ்ஸமானும் படித்து அநேக அறிவுகளிலும் தேர்ந்து விளங்கினான்,

இவ்வாறு இருக்கும்போது ஒருநாள் சவுதாக்கர் தம் மகன் பதுறுஸ்ஸமானை அழைத்து இறுதிவரையில் தவத்துது வெள்ளாட்டியை பின்பற்றிக் கொள்ளும்படி அறிவுரை பகர்ந்து இறந்துவிட்டார். அவரின் இறப்புக்குப்பின் பதுறுஸ்ஸமான் தகப்பனாரின் அறிவுரைகளை மறந்து நடந்த காரணத்தினால் சில காலத்தில் சவுதாக்கர் விட்டுச் சென்ற ஆஸ்தி முழுவதையும் தொலைத்துவிடபின் வெள்ளாட்டியிடம் வந்து தன் தவறுகளுக்கு மன்னிப்பு இறஞ்சி அழுதான். அதனைக் கண்ட தவத்துது அவனது குற்றம் முழுவதையும் மறந்து பின் அவனை நோக்கி 'இவ்வெள்ளாட்டி உங்களுக்கு இணக்கமேயல்லாது மற்றொருவருக்கு இணக்கமாக மாட்டாளென்று சொன்னாள். அத்துடன் அவன் இழந்த செல்வங்களை பெற்றுத்தர ஓர் வழியும் கூறினாள். அமீறுல் முமினீன் சுல்தான் ஹாறூன் ரஷீது இடத்தில் தம்மை பதினாயிரம் தங்கக்காசிற்கு விற்று பொருள் பெறுமாறு கூறுகின்றாள். வெள்ளாட்டியின் யோசனையின்படியே பதுறுஸ்ஸமான் தவத்துதுவை மன்னர் ஹாரூன் ரஷீது அரண்மனைக்கு அழைத்துச்சென்று விபரம் கூற அதனைக் கேட்ட ஹாரூன் ரஷீது 'நீர் சொன்னது போலவள் மிகைத்த அறிவுள்ளவளாயிருந்தால் நீர் கேட்ட தொகையிலும் அதிகமாகத் தருவோம். உலமாக்கள் கேட்ட சவால்களுக்கு நேரான மறுமொழி அவள் சொல்லாவிட்டால் நீரும் உம்முடைய வெள்ளாட்டியைக் கூட்டிக் கொண்டு போகலாமென்று (பக் : 16) சொன்னார். அதற்கு ஏற்ப ஒப்புக்கொள்ளவே சுல்தான் எல்லா அறிவுகளிலும் ஆராய்ந்திருக்கிற உலமாக்களை வருத்தித் தன் சமுகத்திலே இருத்தி வைத்தார். அவர்களும் திறம்வாய்ந்தவர்களான நான்கு உலமாக்கள் கேட்கும் கேள்விகளும், அவற்றிற்கு தவத்துது அளிக்கும் பதில்களுமே தவத்துது வெள்ளாட்டி மஸ்அலாவின் உள்ளடக்கமாக இடம்பெற்றுள்ளது.

வெள்ளாட்டி மஸ்அலாவில் இடம்பெற்றுள்ள 669 வினாக்கள் நான்கு உலமாக்கள் கேட்பதாக உள்ளன. முதலில் ஷெய்கு இப்றாகீம் என்பவர் 134 மஸ்அலாக்களை ஒன்றன்பின் ஒன்றாக வினவ (பக் : 17-75) அதற்கு தவத்துது திறம்பட விடையளித்த திறம் கண்ட ஷெய்கு இப்றாகீம் 'இவள் இஸ்லாமிய மார்க்கத்தில் மிகுதமும் அறிந்தவளாயிருக்கிறதின்பேரில் உங்களெல்லாருக்குந் தெரியப்படுத்துகிறேனென்று' சொல்லி தம் தோல்வியை ஒப்புக்கொண்டு மவுனமானார். இதன்பின் ஷெய்கு அஹ்மது என்பவர் 174 மஸ்அலாக்களையும் (பக் : 75-113) மூன்றாவதாக ஷெய்கு றஹ்மத்துல்லா 176 மஸ்அலாக்களையும் (பக் : 113-149) இறுதியாக ஷெய்கு அப்துல்லா என்பவர் 185 மஸ்அலாக்களையும் (பக் : 150-194) ஒருவர் பின் ஒருவராக வினவ அவையனைத்திற்கும் தம் அறிவுத்திறத்தால் வெள்ளாட்டி தவத்துது திறம்பட விடை பகர்ந்து வெற்றி பெற்றாள். இந்நூலில் மஸ்அலாக்கள் 1வது, இரண்டாவது சுவால் என எண் குறியீட்டுடனேயே காணப்

படுகிறது. அதேபோல தவத்துதுவின் பதில்களும் 'ஜவாபு' எனவே குறிக்கப்பட்டுள்ளது. அறபில் சுவால் என்பது வினாவென்றும் ஜவாபு என்பது பதில் என்றும் பொருள்படும். இஸ்லாம் மார்க்கத்தில் திறம் வாய்ந்த அறிவு பெற்ற நான்கு உலமாக்களது ஐயப்பாடுகளையும் யாதொரு தடையும் இல்லாமல் வெள்ளாட்டி தீர்த்து வைத்ததால் இறுதியாக சுல்தான் அமீறுல் மூமின் ஹாறூன் ரஷீது மிகுந்த மகிழ்ச்சி அடைந்து வெள்ளாட்டியின் நாயகன் பதுறுஸ்ஸமானைப் பார்த்து 'நீர் உம்முடைய வெள்ளாட்டியை முஹப்பத்து வைத்திருக்கிறீரோவென்று கேட்டார் (பக் : 194) அதற்குப் பதுறுஸ்ஸமான் ஆம் என பதிலளிக்க இதனைக் கேட்ட சுல்தான் 'நீரும்உமுடைய வெள்ளாட்டியைக் கூட்டிக் கொள்ளும். அவளுக்கு நீர் விலைகூறிப பதினாயிரந் தங்கக்காசும் உமக்கு உறுதியாவென்று சொல்லிக்கொடுத்து அல்லாஹு தஆலா உங்களுக்குப் பறக்கத்துச் செய்வானாக்வுமென்று துவாச் செய்தார்' (பக் : 194) மன்னன் ஆசியின்படி பதுறுஸ்ஸமானும் தவத்துதுவும் மணம்புரிந்து செல்வச்செழிப்புடன் மகிழ்வுடன் வாழ்ந்தார்கள் என்ற செய்தியுடன் வெள்ளாட்டி மஸ்அலா முடிவுறுகிறது.

உள்ளடக்கச் செய்திகளுள் மூன்று மஸ்அலா நூல்களுள் மார்க்கச் செய்திகள் அதிகம் இடம் பெற்றிருப்பது வெள்ளாட்டி மஸ்அலாவிலேயே ஆகும். இதில் இடம்பெற்றிருக்கும் 669 மஸ்அலாக்களும் அவற்றிற்கான விடைகளும் முழுக்க முழுக்க இஸ்லாமிய மார்க்கச் செய்திகளையே அடிப்படையாகக் கொண்டுள்ளன. இஸ்லாமிய மார்க்கத்தின் அடிப் படைச் செய்திகளிலும், மார்க்கத்துள் முக்கியமாகக் கருதப் படும் ஹதீதுகளிலும் ஓரளவு பரிச்சயம் இல்லாதவர்களால் வெள்ளாட்டி மஸ்அலாவின் உள்ளடக்கச் செய்திகளை முழுமையாகப் புரிந்துக் கொள்ளுதல் கடினமாகும். வெள்ளாட்டி மஸ்அலா உரைநடை வடிவத்தில் அமைந்திருப்பினும் செய்யுள் நடையில் அமைந்துள்ள ஏனைய இரண்டு நூல்களான ஆயிரமஸ்அலா, நூறுமஸ்அலா, செய்திகளைப் புரிந்துகொள்வதைக் காட்டிலும் கடினமாகவுள்ளது. சான்றாக, செய்கு இபுராஹீம் அவர்களது ஒரு வினாவும் பதிலும் இவ்வாறு உள்ளது.

8வது சுவால்—தீனென்ப தென்னவென்று கேட்டார். ஜவாபு- தீனாவது மஃரிபாவென்று நாயனையறிகிறதும், தவ்ஹீதென்னு மவனை ஓர்மைப்படுத்துதலும், ஈமானென்னும் ஆறு கருமங்களைக் கொண்டு றுதிகொள்வதும், இஸ்லாமென்னும் ஐந்து கருமங்களைக் கொண்டு வழிப்படுவதும் ஆக இந்நான்கு மஅனாவைப் பொதிந்தது தான் தீனென்னும் மார்க்கம்' (பக் : 24) இங்கு இடம்பெற்றுள்ள தீன், மஃரிபா, தவ்ஹீது, ஈமான், முதலான சொற்கள் ஆழ்ந்த பொருள் உள்ளனவாகும். அவற்றின் முழுப்பொருள் அறிந்தவருக்கே இவ் விடையின் உண்மைப்பொருளைப் புரிந்து கொள்ள இயலும். வெள்

ளாட்டி மஸ்அலாவில் இடம்பெற்றுள்ள அனைத்து வினா விடைகளும் கிட்டத்தட்ட இதேபோன்று ஏராளமான அறபுச் சொற்களையும் மார்க்கத்தில் ஆழ்ந்த பொருளுள்ள கருத்துக்களையும் உள்ளடக்கி யுள்ளன.

பல வினாக்கள் றசூல்மார்கள் பற்றியதாக அமைந்துள்ளன. நபி மார்களின் தோற்றம் அவர்களது சிறப்புக்குணங்கள் தொடர்பான விளக்கங்கள் வெள்ளாட்டி மஸ்அலாவில் விரிவாக இடம்பெற்றுள்ளன. அல்குர்ஆனின் ஆயத்துக்குரிய வினாக்களும், விடைகளும் இஸ்லாமிய மார்க்க அறிவுரைகளைத்தெற்றென விளக்குவதாக உள்ளன.

வெள்ளாட்டி மஸ்அலாவில் ஏனைய இரு மஸ்அலா இலக்கியங் களைக் காட்டிலும் அறபு, பாரசீகச் சொற்கலப்பு மிகுதியாக உள்ளது. இதில் இடம்பெற்றுள்ள எந்தவொரு வினாவிடையும் அறபு மொழி அறிவின்றி முழுமையாகப் புரிந்துகொள்ள முடியாது எனக்கூறலாம். இதில் இடம் பெற்றுள்ள வினாவிடைகளுள் ஒவ்வொன்றிற்கும் சுவால், ஜவாப் எனக்குறிப்பிட்டுக் காட்டுவது இலக்கியத்தன்மையை குறைப்ப தாகவும் உள்ளது. ஏனைய இரு மஸ்அலா இலக்கியங்களிலிருந்து வெள்ளாட்டி மஸ்அலா வடிவம் என்ற நிலையில் உரைநடையில் அமைந்து மாறுபட்டும் உள்ளடக்கம் என்ற நிலையில் முழுக்க முழுக்க ஹதீதுகள் போன்றே அமைந்து இஸ்லாம் அல்லாதவர்கள் பெருமளவில் புரிந்து கொள்ளமுடியாத அளவிற்கு வேறுபட்டும் காணப்படுகிறது.

## நூறு மஸ்அலா

நூறு மஸ்அல்ா இஸ்லாமிய மஸ்அலா இலக்கியங்களுள் காலத் தால் மூன்றாவது தோன்றியது. இம்மஸ்அலா இலக்கியத்தை இயற்றிய ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இதுவரையில் வெளிவந்துள்ள அனைத்துப் பதிப்புக்களிலும் 'முன்னோர்கள் பாடிய நூறு மஸ்அலா' என்றே குறிக்கப்பட்டுள்ளது. கிடைக்கப்பெற்ற பதிப்புக்களில் முதன் மையானது 1876இல் முகம்மது சாகிபு அவர்களால் வெளியிடப்பட்டதே ஆகும். நூறு மஸ்அலாவின் காலம், அரங்கேற்றம் பற்றிய செய்திகளை நூலின் அகச்செய்திகள் மூலம் அறியமுடியவில்லை. எனவே இதன் காலத்தை முதற்பதிப்பு வெளியான ஆண்டாகவே கொள்கிறோம். இதன்பின் ஆறு பதிப்புக்கள் இதுவரையில் வெளிவந்துள்ளன. 1877 இல் மொ.து. சைகு யூசுபும் 1902இல் முகம்மது சாகிபு அவர்களும் 1914இல் முனவ்வர் என்பவரும் முறையே இரண்டாவது, மூன்றாவது, நான்காவது பதிப்புக்களை வெளியிட்டுள்ளனர். ஐந்தாவது பதிப்பும் 1914ஆம் ஆண்டிலேயே தஸ்தகீர் பாஷா என்பவரால் பதிப்பிக்கப்பட் டுள்ளது. ஆறாவது, ஏழாவது பதிப்புக்கள் முறையே 1929,1948ஆம்

ஆண்டுகளில் முகம்மது ஜான் லெப்பை ஆலிம், கண்ணகுமது மகுதூ முகம்மதுப் புலவரவர்களால் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இஸ்லாமிய மஸ்அலா இலக்கியங்களுள் அதிகமான பதிப்புக்களை பெற்றிருப்பது நூறு மஸ்அலாவே.

நூறு மஸ்அலாவில் உள்ள செய்திகள் பகுவீறு நாட்டு மன்னனின் மகள் மெஹர் பானுவிற்கும் அகமதுசா என்ற மன்னனின் மகன் அப்பாஸ் என்பவருக்கும் இடையே நடைபெறும் வினாவிடைகளாக உள்ளன. மன்னர் மகள் மெஹர் பானுவின் நூறு மஸ்அலாக்களுக்கும் திறம்பட அப்பாஸ் விடையளித்து வெற்றி கொள்வதுடன் இளவரசியை மணமுடித்து தான் இழந்த அரசினையும் மீண்டும் பெறுகின்றார். இச்செய்திகள் அனைத்தும் கண்ணிகளாக விரித்துரைக்கப் பட்டுள்ளன.

நூறு மஸ்அலாவில் மொத்தம் 1087 கண்ணிகள் இடம் பெற்றுள்ளன. காப்பு-வெண்பா செய்யுள் ஒன்றும் உள்ளது. முதல் பத்து கண்ணிகள் கடவுளர் துதிஎன்னும் தலைப்பின்கீழ் உள்ளன. இதில்,

ஊனுமின்றி யுறக்கமின்றி நலவுயிர்க்குயிரா யிருப்பவனே
காணவொண்ணா முதலவனே யாவுங் காத்தருளும் றஹ்மானே
(கண்ணி : 4)

எனத் தொடங்கி பெருமானார் நபி (ஸல்) அவர்கள், வையகமெல்லாம் புகழும் அருள்வாரி முஹியித்தீன், நாகைவாழ் ஷாஹுல் ஹமீது முதலானோர்களின் துதி இடம் பெற்றுள்ளன.

கடவுள் துதிக்கு அடுத்த நிலையில் அவையடக்கம் உள்ளது. மல்லிகைப் பூவுடன் முள்முருங்கை அதன் மலரை ஒப்பாக வைத்து எண்ணுவதுபோல தம் இலக்கியப் படைப்பை கவிராஜாக்கள் முன் வைப்பதாகப் புலவர் பாடியுள்ளார். அடுத்ததாக நூறு மஸ்அலாவினைப் படிப்பவர்களுக்குண்டாகும் நூற்பயனை ஒரு கண்ணியின் மூலமாக பின்வருமாறு தருகிறார் ஆசிரியர்.

பூவினிலெல் லாவளமுங் கிட்டிப் பொற்பதியின் பேறுமெய்தும்
மேவுபகு வீறரசன் மகள் மெய்ச்சரிதை சொல்பவர்க்கே
(கண்ணி : 11)

இக்கண்ணியின் மூலமாக நூறு மஸ்அலா ஆசிரியர் பகுவீறு நாட்டரசன் மகளின் சரிதைக்குத்தான் அதிக முக்கியத்துவம் தருகின்றார் என்பதை அறியலாம். நூற்பயனுக்கு அடுத்த நிலையாக நூல் வரலாறு என்னும் பகுதி அமைந்துள்ளது. மெஹர்பானுவின் நூறு மஸ் அலாக்

களுக்கு முன் அமைந்துள்ள இப்பகுதி பன்னிரெண்டாவது கண்ணி முதல் முன்னூற்றி எண்பத்தி ஐந்தாவது கண்ணி வரையிலான முன்னூற்றி எழுபத்தி ஐந்து கண்ணிகளில் விரிவாக எடுத்துக் காட்டப் பட்டுள்ளன.

அந்துமான் என்னும் நகரத்தின் அரசன் அஹமதுஷாவிற்கு நீண்ட காலமாக பிள்ளைச் செல்வம் இல்லாதிருந்து பின் ஆண்மகவு ஒன்று பிறந்தது. அவனுக்கு அப்பாஸ் எனப்பெயரிட்டு வளர்த்து வரும் நாளில் பதினைந்தாவது வயதில் கானகத்திற்கு வேட்டையாடச் சென்றபோது அங்கு நீரின் வேட்கையால் கள் குடித்து பெரும் மயக்க மடைந்தான். அதன் காரணமாக கலக்கம் அடைந்த மன்னன் அஹமதுஷா பல்வேறு அரிய முயற்சிகளால் மயக்கம் தெளிவடையச் செய்து இஸ்லாமிய மார்க்க வழியின்படி கள் அருந்திய தண்டனையாக காட்டிற்கு தம் மகனை அனுப்புவதே என முடிவெடுத்தான். பின் தம் அன்பு மகனை பிரிந்து வாழ மனமில்லாமல் அவன் செய்த தவற்றிற் காக தம் மகன் மனைவியுடன் அரசைத் துறந்து காட்டிற்குச் செல்கின் றான். அங்கு பல்வேறு கடும் துன்பங்களைச் சந்தித்து இறுதியாக பகுவீறு நாட்டுக்கு வந்தடைகிறான். பகுவீறு நாட்டு மன்னன் மகள் மெஹர்பானு தாம் கேட்கும் நூறு மஸ்அலாவிற்கு விடையளிப்ப வரையே திருமணம் புரிவதாக எண்ணம் மேற்கொண்டு அதன்படி செயல்படுத்தினாள். மெஹர்பானுவின் நூறு மஸ்அலாவிற்கு விடை யளிக்க முற்பட்டுத் தோல்வி ஏற்படுமானல் அவர்களது உயிர் பறிக்கப் படும் என்பது நிபந்தனை ஆகும். இந்நிலையில் எண்ணற்ற மன்னர் களின் உயிரை பறித்தவள் மெஹர்பானு. இச்செய்தியை கேள்விப்பட்ட அப்பாஸ் மெஹர்பானுவின் வினாக்களுக்கு விடையளிக்க முற்படுகின் றான். இக்கதைப் பகுதி வரையிலான செய்திகள் நூறு மஸ்அலாவின் நூல் வரலாறு என்ற தலைப்பின்கீழ் இடம் பெற்றுள்ளது. இதன் பின்பே முன்னூற்றி எண்பத்தி ஆறாம் கண்ணி முதல் மெஹர் பானுவின் கதைப்பகுதியும் மஸ்அலாவும் தொடக்கம் பெறுகின்றன.

நூல் வரலாற்றுப் பகுதியில் மன்னன் அஹமதுஷா மகன் அப்பாஸ் ஆகியோரின் இன்னல்களே மிகுதியாக விளக்கம் பெற்றுள்ளன. இப் பகுதிகளை ஆசிரியர் விதிக்கு முக்கியத்துவம் தரும் வகையில் அமைத் துள்ளார். முன் கதைப்பகுதியில் ஒவ்வொரு நிகழ்வுகளுக்கும் விதியே காரணமாகக் காட்டப்படுகிறது. முன்கதைப் பகுதியில் மன்னன் அஹமது ஷாவும் அவனது மனைவி, மகன் அப்பாஸ் ஆகியோர் படும் துன்பத்தை ஆசிரியர் நன்கு எடுத்துக் காட்டியுள்ளார். அவர்கள் கடும் சுரத்தில் நடந்து செல்லும் காட்சி இவ்வாறு அமைந்துள்ளது.

துன்பமொடு மூவருமே யந்தச் சுரநிலத்தில் நடக்கையிலே
வன்மனமார் கரடி புலியிந்த மாண்பினரைப் பார்த்துரைக்கும்
நீதியுள்ள வுங்களுக்கு விதி நேர்ந்ததினாற் சுரத்தின்மிகும்
வேதனைதான் வந்ததை நீங்க வேகன் செய்வானென்றேகும்
இந்தபடி பலமிருகம் இந்த வெழிலினரைப் பார்த்துரைக்க ..

(கண்ணி : 177, 178, 179)

கடும் பசியுடன் நடந்து செல்வதாக ஆசிரியர் குறிப்பிடுகிறுர். இவ்வாறு நீண்ட நாள் பசியுடன் நடந்த காரணத்தினால் நடக்க முடியாத நிலையை அடைந்த அஹமது ஷாவினையும் அவன் மனைவியையும் மகன் தன் துன்பத்தையும் தாங்கித் தம் பெற்றேரையும் சுமந்து செல்கின்றுன்.

இங்கிருக்கி லவஸ்தைமிக நமக்கணுகு மென்றுதாய் தந்தைக்குச்
சங்கையொடுஞ் சொல்லி பாவா தம்மைத் தாங்கி
வலத்தோளினிலும்
மதிமிகுந்த தாயார் தம்மையிடத் தோளிலுந்தான்
வைத்துக்கொண்டு
நேயமுடன் கடுஞ்சுரத்திற் மிகு நெடுந்தொலை ..

(கண்ணி ; 168, 169, 170)

நடந்து செல்லும்போது பெரும் துன்பத்திற்கு அப்பாஸ் உட்படுவதை ஆசிரியர் விதியின் பயன் என்றே விளக்குகிறுர்.

நூறு மஸ்அலாவின் நாயகியாக விளங்கும் மெஹர்பானுவின் அறிமுகத்தை ஆசிரியர் மிக உன்னதமாகப் படைத்துள்ளார். மஸ்அலா துவக்கம் பெறுவதற்கு முன் பகுவீறு நாட்டிற்கு அப்பால் அவனது தாய் தந்தையருடன் வந்தடைந்தவுடன் அங்குள்ள கிழவி ஒருத்தியின் உதவி கிடைக்கப் பெறுகிறது. இக்கிழவியின் மூலமாகவே மெஹர்பானு பற்றிய முதல் அறிமுகத்தை ஆசிரியர் பின்வருமாறு குறித்துள்ளார்.

இந்தவூரி னதிசயந்தான் அம்மே யென்னவென
அவள்மொழிந்தாள்
உந்துபகு வீரரசன் மகள் ஒருத்தியுண்டு மவளோ வென்றுல்
சந்திரனை யுருவமைத்து நாயன் தரணியினி லேவிடுக்க
வந்த பெண்ணோ அல்லது வானிலுள்ள மங்கையரி லொருத்தியோ
தெரிந்திலனே யவளழகை நான்றான் செப்புவதெப்படி மகனே
பரிந்து சொல்ல வொரு நிகருமிந்தப் பாரிலவட்கில்லை மன்னா

(கண்ணி : 338, 339, 340)

இங்கு மெஹர்பானுவின் அழகிற்கு இணையாக எடுத்துக்கூறுவதற்குப் பாரில் ஒன்றுமில்லை எனக்கூறி அவளது நோக்கத்தை அறிமுகம் செய்விக்கும்போதே நூறு மஸ்அலா பற்றிய செய்தியைமுதன் முறையாக அறிய முடிகிறது.

இந்தவித மழகுகொண்ட இந்த ஏந்திழையாள் தன்னை மணஞ்
சொந்த மாகப் புரியவரும் நல்ல தூயரசர் தங்களிடம்
நூறு மஸ்அலாவின் கேள்வி யினை நுவலுகிறா ளெவர்களாலும்
கூறுடனே யொருமஸ்அலா தனக்கும் பொருட்டான் றெரியாமலே
மயங்குகின்றார்களிப் போதிலே வந்த மன்னர்களைக் குறைவு சொல்லிப்
பயங்கரமா யவர்களுயிர் தன்னைப் பரிக்குகின்றா ளெமன் போலவே

(கண்ணி : 341, 342, 343)

இக்கண்ணிகளுக்குப் பின்னேயே நூறு மஸ்அலாவின் முன் கதைப்பகுதி களைப் படித்து வந்தோர் மஸ்அலா இலக்கியத்திற்குரிய உள்ளடக்கச் செய்திகள் இனியுள்ள நூல் பகுதியில் இடம் பெறப்போதை உணர முடிகிறது. காரணம் இந்நூலில் இடம் பெற்றுள்ள நூல் வரலாற்றுப் பகுதி. நூறு மஸ்அலாவின் உள்ளடக்கச் செய்தியே அஹமதுஷா மற்றும் அவர் மகன் அப்பாஸ் ஆகியோரின் கதைப்பகுதிதான் நூறு மஸ்அலாவோ என்று எண்ணத்தக்க அளவில் விரிவாக இடம் பெற்றுள்ளது. நூல் வரலாற்று பகுதி இத்தத அளவில் விரிவாக இடம் பெற்றிருப்பது மஸ்அலா இலக்கியத்திற்குரிய வடிவ, உள்ளடக்கச் செய்திகளின் முக்கியத்துவத்தைக் குறைப்பதாகவும் அமைந்துள்ளது. மூன்று மஸ்அலா இலக்கியங்களுள் நூல் வரலாறு கூறும் பகுதி நூறு மஸ்அலாவிலேயே விரிவாக இடம் பெற்றுள்ளது.

மெஹர்பானுவிற்கும் அப்பாஸிற்கும் இடையே நடைபெறும் மஸ்அலா வினாவிடைப் பகுதியின் முதல் வினா 386வது கண்ணியில் தொடக்கம்பெற்று இறுதி வினாவிடை 808வது கண்ணியில் முடிவு பெறு கிறது. நூறு வினாவிடை பகுதிகள் 522 கண்ணிகளில் விரித்துரைக்கப் பட்டுள்ளன. மெஹர்பானுவின் கேள்விகளுள் பல பொதுவானவை யாகவும் சில குறிப்பிட்ட விஷயங்களுடன் தொடர்பானவைகளாகவும், இன்னும் சில முழுக்க முழுக்க இஸ்லாமிய மார்க்கத்துடன் தொடர் புடையனவாகவும் காணப்படுகின்றன. ஒவ்வொரு வினாவின்போதும் அதற்கு விடையளிக்காவிடில் அப்பாஸ் கொல்லப்படுவான் என அச் சுறுத்தப்படுகிறது. அதேபோல் அப்பாஸின் ஒவ்வொரு விடை விளக் கத்தைக் கண்டும் ஆச்சரியம் அடையும் மெஹர்பானுவின் உள்ளப் பாங்கும் சுட்டிக் காட்டப்படுகிறது. முதலாவது வினாவிடை இவ்வாறு தொடங்குகிறது.

எண்டிசையோர் போற்றுமன்னே நீதான் எங்கிருந்திங்கு
வந்தாயிப்போ
விண்டமச லாவை நீதான் சொல்லா விடுகில்
வெட்டிவிடுவே னென்றாள்
இந்த மஸ்அலாவை மன்னன் கேட்டங் கிளங்சிரிப்புக்
கொண்டு சொன்னான்
பைந்தொடியே வெனக்கிதுவோர் பெரும்பாரமோ
வென்றுரைக்கலுற்றான்
போற்றும் ரஹ்மான் படைத்த அந்தப் போதுமாதா
வயிற்றிலுமற்றுச்
சாற்றும்பூமி தனில் வந்திப்போ வுந்தன் சமுக முன்னில்
வந்தேனென்றான்
(கண்ணி : 386, 387, 388)

இத்தகு பதில் கேட்ட இளவரசி மெஹர்பானுவின் நிலை இவ்வாறு உள்ளது.

சிங்கத்தைக் கண்டஞ்சுகின்ற நல்ல செப்புமிளம் பிடியையொத்தாள்
பங்கம்வரா தங்கிருந்த தோழிப் பாவையர்களிது நினைத்தார்
வெற்றியுள்ள பலமன்னர் முன்னர் வென்ற நந்தமன்புப் புதல்வி
பற்றிலாத வொரு விடையிற்றானே பாவையைப் போ
லாயினளே
(கண்ணி : 390, 391)

இத்தகு முறையிலேயே நூறு மஸ்அலாவில் இடம் பெற்றுள்ள நூறு வினாவிடை அமைப்புக்கள் உள்ளன.

நூறு மஸ்அலாவில் பல வினாக்கள் குறிப்பான சில விஷயங்களுடன் தொடர்பானவைகளாக உள்ளன. சான்றாக சில பறவைகள், மிருகங்கள் முதலானவைகள் பற்றிய விபரங்களும் மெஹர்பானுவினால் மஸ்அலாவாக எழுப்பப்படுகிறது.

ஆனவிந்த துனியாவினி லாதி அவன் படைத்த பறவைகளிற்
றானயன விழிசிமிட்டா துயர் தன்கண் முழித் திறவுகளை
ஒடுக்கிடாமற் பறக்கும்பட்சி தன்னையுரையு மென்றாள் அரசன்
கேட்டங்
கெடுப்புடனே சிரித்துக்கொண்டு நீதா னிதனையொரு
பொருட்டாகவே
எண்ணி யென்பாற் கேட்டனையே சொல்வன் எழிலுடன்
கேளெனவுரைத்தே
அண்ணல் சொன்னான் தும்பியென்றே.
(கண்ணி : 397, 398, 399)

இத்தகைய வினாக்கள் நூறு மஸ்அலாவிலேயே இடம் பெற்றுள்ளன. ஏனைய இரண்டு மஸ்அலா இலக்கியங்களான ஆயிர மஸ்அலா, வெள்ளாட்டி மஸ்அலாவில் இத்தகு வினாக்கள் இடம் பெறவில்லை.

நபிமார்கள் பற்றிய பல செய்திகளும் மெஹர்பானுவின் வினாக்கள் மூலமாக வெளிப்படுகிறது.

கல்வியுள்ள விளவராச இந்தக் காசினியில் நபிமக்கள்தாஞ்
சொல்லுகின்ற பொய்யைச் சொல்லி நல்ல சுவர்க்கமதிற்
புகுந்தவரார்
நல்நபிமக்கள் பொய் சொல்லி யின்ப நற்சுவர்க்கம் புகுத்தவர்கள்
மல்லவிழும் யஃகூப் நபி பெற்ற மக்களென்று மன்னன்
சொன்னான்
(கண்ணி : 478, 479)

இதுபோல் ஆதம் நபி (அலை) அவர்கள் பற்றியும் மூசா நபி (அலை) அவர்கள் பற்றியும் பல நபிமார்கள் தொடர்பாக அவர்களது வாழ்வியல் வரலாற்று நிகழ்வுகளுடன் தொடர்புடைய ஐயப்பாடுகள் மஸ்அலாக் களாக இடம் பெற்று அப்பாஸினால் விடை அளிக்கப்படுகிறது. இறைநேசச் செல்வர்கள் தொடர்பாக சில வினாக்களும் காணப்படு கின்றன.

மெஹர்பானுவின் ஐயப்பாடுகளுள் பல, விடுகதைகள் போன்றே அமைந்துள்ளன. சான்றாக பின்வரும் வினாவைக் குறிப்பிடலாம்.

எல்லாவர்க்கு மதிகமன்னா நீயு மின்னமொரு மஸ்அலாக்கேள்
தொல்புவி யில்மர மொன்றுண்டு மதைச் சூழ்ந்தகொப்பு
பன்னீரதில்
நல்லவிலை முப்பதுண்டு மதில் நற்கறுப்புப் பாதி வெள்ளை
சொல்லுகின்ற பூவைந்துண்டாம் இதைச்சொல்லா விட்டாற்கொல்
வேனென்றாள்
(கண்ணி : 562, 563)

இதற்கு அப்பாஸ் மரம் என்பது ஓர் ஆண்டு என்றும் பன்னிரண்டு கொப்புக்கள் பன்னிரண்டு மாதங்கள் என்றும் கொப்பில் உள்ள முப்பது இலை என்பது முப்பது நாளென்றும் இலையில் உள்ள பாதி வெள்ளை, பாதி கறுப்பு என்பது ஒரு நாளில் பாதி பகல் பாதி இரவினைக் குறிக்கும் என்றும் ஐந்து பூ என்பது முஸ்லிம்கள் அல்லாஹ்வை ஒவ்வொரு நாளும் தொழும் ஐந்து வேளைகளைக் குறிக்கும் என்றும் விடையளிக்கின்றான்.

சொல்லுகின்ற வருஷ மொன்றே அதைச் சூழ்ந்த கொப்பும்
பன்னீர் மாதம்
சொல்லுமிலை முப்பதுநாள் அதைச் சேர்ந்த கறுப்போடு வெள்ளை
நல்லிரவு பகலுமது நீதானாகச் சொன்ன பூவைந்துகேள்
வல்லவனை வணங்குதற்கு வகுத்துமைந்தாமென மொழிந்தான்
(கண்ணி: 564, 565)

இஸ்லாமிய மார்க்கத்தின் அடிப்படையான மையக் கருத்துக்கள் பலவும் வினாக்களாகவும் விடைகளாகவும் நூறு மஸ்அலாவில் இடம் பெற்றுள்ளன. இக்கருத்துக்கள் எந்தவொரு குறிப்பிட்ட விஷயத்தைப் பற்றியும் இல்லாமல் பொதுவான நிலையிலேயே அமைந்துள்ளன.

எல்லவர்க்கும் நல்லவராம் புகழெங்கினுமே யுள்ளவராம்
சொல்லுமவ ரில்லாவிடி லொன்றும் துறப்பதுதா னில்லையதை
இன்னதென் றிங்கறிந்து சொன்னாலாச்சு தில்லையென்றாற்
சொல்வே னென்றாள்
அன்னது கேட் டரசன் குறுஞ் சிரிப்பாக அவள் தனக்குரைத்தான்
இந்த மஸ்அலாச் சொல்லியோ நீதான் என்னை வெல்லப்
போறாயென்றே
அந்தமுள்ள பெண்ணரசே பூமி அல்லாவுன் மஸ்அலாவென்றான்
(கண்ணி: 412, 413, 414)

ஏனைய இரு மஸ்அலா இலக்கியங்களுடனும் ஒப்பிடும்போது நூறு மஸ்அலாவில் முழுக்க முழுக்க மார்க்கக் கருத்துக்களாக இடம்பெற்றிருக்கும் மஸ்அலாக்கள் மிகவும் குறைவே ஆகும். ஆயிர மஸ்அலா, வெள்ளாட்டி மஸ்அலாவில் உள்ள பல வினுக்கள் அல்குர்ஆன் ஆயத்திற்கும் அல்ஹதீதுகளுக்கும் விளக்கம் அளிப்பது போலவே அமைந்துள்ளன. இத்தகு முறையில் நூறு மஸ்அலாவில் வினாக்கள் காண்ப தரிதாகும். எனவே உள்ளடக்கச் செய்திகள் என்ற நிலையில் மார்க்கக் கருத்துகளுக்கு முக்கியத்துவம் தந்து விளக்கம் அளிப்பதில் நூறு மஸ்அலா ஏனைய இரண்டு மஸ்அலா இலக்கியங்களிலிருந்து வேறுபட்டு நிற்கிறது.

மேலும் மஸ்அலாக்கள் ஏனைய இரண்டு நூல்களிலும் தொடர் நிகழ்வுகளாக ஒன்றன்பின் ஒன்ருக இடம் பெற்றிருப்பது போன்ற அமைப்பு முறை நூறு மஸ்அலாவில் காணப்படவில்லை. ஒவ்வொரு நாளிலும் சில வினாக்கள் மெஹர்பானுவினுல் அரசவையில் எழுப்பப்பட்டு அதற்கு அப்பால் விடையளித்த பின் மீண்டும் அடுத்த நாள்தான் மஸ்அலா தொடக்கம் பெறுகிறது. முதல்நாள், இரண்டாம் நாள் மஸ்அலாவிற்கு இடைப்பட்ட நிலையில் ஆசிரியர் வேறு பல நிகழ்வுகளை

விரித்துரைக்கின்றார். இதில் அப்பாஸின் செயல்கள் இடம் பெற்றுள்ளன. மெஹர்பானுவின் அழகு வர்ணனைகளும் அப்பாஸின் அறிவுத் திறம் குறித்த மெஹர்பானுவின் எண்ண ஓட்டங்களும் முதல் நாள் வினாவிற்கும் இரண்டாம் நாள் வினாவிற்கும் இடை நிலையில் விரிவாக எடுத்துக் காட்டப்படுகிறது. மெஹர்பானுவின் வினாக்களுக்கு அப்பாஸ் விடையளிப்பதுடன் மெஹர்பானுவை நோக்கி அப்பாஸ் மஸ்அலா எழுப்புவதாகவும் சில பகுதிகள் காணப் படுகின்றன. அப்பாஸ் மெஹர்பானுவிடம் தம்முடைய வரலாற்றையே வினாவாக மாற்றி விளக்கம் கேட்டான். அவ்வினா இவ்வாறு அமைகிறது.

சொல்லுமஸ் அலாச் சொல்லக்கேள் கன தோகை மயிலே குயிலே
நல்லதொரு அரசனுக்கு முன்னுள் நடு வயதில் மவுத்தடுத்து
மெல்ல நடந்தானவனும் பின்னர் மீண்டுமொரு மவுத்தடுத்து
பல்லுவாயும் நடுநடுங்கியொரு பாழ்கிணற்றில் கிழித்தெறிந்தான்
கிணற்றிலொரு மவுத்தடுத்துப் பின்னால் கிட்டிய மூன்றுமவுத்தில்.
மணத்தரசன் வரிசைபெற்முன் அந்த வண்ணம்சேர்
முப் மவுத்ததனை
கணக்குடனே மொழியுமென்முன்......

(கண்ணி: 604, 605, 606, 607)

இவ்வினாவிற்கு விடைதெரியாமல் மறுநாள் சொல்வதாகக் கூறி எழுந்து செல்கிறாள் மெஹர்பானு. மறுநாள் அரண்மனையின் சந்திப் பிற்கு இடைப்பட்ட நிலையில் பல நிகழ்வுகளை ஆசிரியர் புகுத்தி யுள்ளார். மெஹர்பானு அன்று இரவே அவ்வினாவிற்குரிய விடையை அப்பாஸ் மூலமாகவே அறிந்துகொள்ள விரும்பி அவனிருக்கும் இடம் நாடிச் செல்கிருள். அப்பாஸ் இருக்கும் இடம் செல்லும் முன் அவள் தம் அலங்காரத்தையும் அழகினையும் இலக்கியச் சுவை நிரம்ப நூறு மஸ்அலாவில் ஆசிரியர் வர்ணித்துள்ளார்.

மாடை தங்கத்தாற் சமைத்த ரத்ந மக்கனாவு மெடுத்தணிந்தாள்
ஆடுகின்ற களங்கம் மானை யுவந் தாயிழைதங் கையிற்
கொடுத்தாள்
ஆயிழைகை நீட்டினளே கண்ணில் அஞ்சனத்தைத் தீட்டினளே
காயுமுலைக் கொடியிடைக்குச் சித்ரக் கச்செடுத்துப் பூட்டினளே
வேயமலர் கூட்டினளே இன்ப வெண் மலர்க ளீட்டினளே
தூய மலர் வகைவகையாய் மார்பில் சுந்தரமாய்ச் சூட்டினளே
பூவின் வட்டம் கூட்டினளே வானின் பூரணச்சந் திரனைப்போல
நாவலர்கள் களிகூர முத்து நல்ல வடம் பூட்டிக்கொண்டு

பூவையனீன மயிலென்னவே வெகு பூவைமட வார்சூழக்
காவிக்கயல் விழிமடவாள் செம்பொன் கட்டிலின்மேல்
வீற்றிருந்தாள்.
(கண்ணி: 625-629)

இத்தகு அழகுப் பதுமை, அப்பாஸைக் காண்பதற்காக நடந்துவரும் காட்சி இங்ஙனம் உள்ளது.

அன்னமெனுந் திருநடையாள் மிகும் ஆடவரைக் கொலும்
விழியாள்
சின்னவிடைத் தனங்கள் விம்ம அந்தச் சேயிழையாள் பணிகள்
மின்ன
சொன்னமணிச் சிலம்பு கொஞ்ச அந்தத் தோழியுட னிருவருமாய்க்
கன்னலெனுந் திருமொழியாள் மெல்லக் கடையின் வீதிதனில்
நடந்தாள்
(கண்ணி : 640-642)

இவ்வாறு வீதிகளில் நடந்துவரும் மெஹர்பானு, அப்பாஸ் முன்வந்து நிற்கும்போது அழகுத் திருவுருவமாகவே காட்சியளிக்கின்ருள்.

அஞ்சுகம்போற் திருநுதலாள் வெகு ஆடவரைக் கொலும் விழியாள்
வஞ்சியெனு மிடையுடையாள் புதுவாலையெனு மதிமுகத்தாள்
கிஞ்சுகஞ்சேர் கனிவாயாள் செழுங் கிம்புரிக் கொம் பிளமுலையாள்
மஞ்சணியுங் குழல் சரிய அந்த மன்னவன்முன் வந்து நின்றாள்
(கண்ணி : 656. 657)

அவளின் அழகுத் திருவுருவத்தை வர்ணித்த ஆசிரியர் நூறு மஸ்அலா வின் நாயகன் அப்பாஸ் மெஹர்பாவின் பேரழகினைக் கண்டு வியப் புற்று நிற்கும் காட்சியை ஏழு கண்ணிகளில் வர்ணித்திருக்கும் நயம் சிறப்புடைத்து.

தாம மொத்த மதிமுகமும் அவள் தான் மயக்குங் கெறுவிதமு
வாமமொத்த மன்னன் கண்டே இவள் மானுடமோ ஜின்னோ
வொன்றான்
மானுடமோ மடக்கொடியோ இவள் வஞ்சிக் கொடி யிளமயிலோ
தேனினமோ சிறுகிளியோ செம்பொன் செஞ்சிலைவேள் ரதிமாதோ
ஆனினமோ காமாதி நல்ல ஆடரங்கோ தாமரையோ
யீனினமோ விழிகள் ரண்டுந் துய்ய வெண்ணிலாவோ விவள்மேனி
மேய சீர்கொள் குழல் முகிலே இந்திர வில்லிணையோ விவள்
புருவம்
தூய்மையுள்ள வெள்ளலரோ நல்ல துலக்கமுள்ள விவள்நாசி

நன்மையுள்ள கடைப்பிடியோ கன நாகரீகத் திருமொழிதான்
மன்மதன்றன் கணைவிழியோ செழி மாதளையோ விவள் கனிவாய்
மாதளையோவிவள் கனிவாய் சொல்லும் வன்கமுகோ விவள் கழுத்துக்
கீதமொழி யோவிவள்சொல் மதிக் கிம்புரிக் கொம்பெனுமுலையாள்
போதமுற்ற தாமரையோ செழும் பூரணச் சந்திர முகமோ
ஏதுநிக ரிவளுக் கொவ்வா...

(கண்ணி : 661, 66()

என வினவுவதாக அமைந்துள்ளது. இப்பகுதிகள் நூறு மஸ்அலாவின் இலக்கிய நயத்தை உயர்த்துகின்றன. இத்தகு அழகு பொருந்திய மெஹர்பானுவைக் கண்டபின் அப்பாஸ் தம்முடைய மஸ்அலாவிற்கு விடையாக தன் வரலாற்றையே கூறுகின்றான். தான் தாய் தந்தை யருடன் அரசைத் துறந்தது முதல் மவுத்து என்றும், பின் கானகத்தி ு பெரும் இன்னல் அமைந்தது இரண்டாம் மவுத்து என்றும் இறுதியாக மெஹர்பானுவின் மஸ்அலாக்களுக்கு எதிர்கொண்டு விடை பகர்வது மூன்றாம் மவுத்தென்றும் கூறுகின்றான். இந்நிகழ்வுகளுக்குப் பின்பே அடுத்தநாள் மஸ்அலாக்கள் தொடர்கின்றன. மஸ்அலா இலக்கியங் களுள் வினாவிடைகள் ஒன்றன்பின் ஒன்றாக அடுக்கிச் செல்வதால் சில இடங்களில் இலக்கிய ரசனையிலிருந்து மாறுபட்டுச் செல்வதுபோல் தோன்றும் போக்கு காணப்பெறும். ஆனால் நூறு மஸ்அலாவில் இடையிடையே மேற்குறித்ததுபோல் வேறு வேறு நிகழ்வுகள் புகுத்தப் படுவதால் அந்தப் போக்கைக் காணமுடியவில்லை. இந்நிலையில் ஏனைய இரு மஸ்அலாவான ஆயிர மஸ்அலா, வெள்ளாட்டி மஸ்அலா விலிருந்து நூறு மஸ்அலாவில் இலக்கியச் சுவை மிகுந்து காணப்படு கிறது எனலாம். ஆயிர மஸ்அலா, வெள்ளாட்டி மஸ்அலாவில் இத்தகு வேறு நிகழ்வுகள் இடம் பெறாததற்கு காரணம் அவற்றில் அடங்கி யிருக்கும் மஸ்அலாக்களின் எண்ணிக்கையும், அவற்றின் உள்ளடக்கத் தன்மைகளுமே எனலாம். மூன்று மஸ்அலா இலக்கியங்களுள் குறைந்த எண்ணிக்கையிலான வினாக்களைப் பெற்றிருப்பது நூறு மஸ்அலாவே ஆகும். ஏனைய இரண்டு இலக்கியங்களிலும் அதிகமான மஸ்அலாக் கள் இடம் பெற்றிருப்பதால் நூறு மஸ்அலாவில் உள்ளது போன்று இடையீடு நிகழ்வுகள் இடம் பெறாமல் இருந்திருக்கலாம். மேலும் ஆயிர மஸ்அலா, வெள்ளாட்டி மஸ்அலாவில் அடங்கியுள்ள மஸ்அலாக் கள் பெரும்பாலும் அல்குர்ஆன், அல்ஹதீதுகளுடன் நேரடியான தொடர்பு கொண்டிருப்பதால் நூல் ஆசிரியர்கள் நூறு மஸ்அலாவில் இடம பெற்றிருப்பது போன்ற வர்ணனைகளைத் தவிர்த்திருக்கலாம்.

நூறு மஸ்அலாவில் மெஹர்பானுவின் நூறு வினாவிற்கும் அப்பாஸ் விடையளித்தபின் இறுதியாக மெஹர்பானுவை அப்பாஸ்

திருமணம் புரிந்து கொள்கின்றான். இவர்களது திருமண ஏற்பாடு பற்றிய செய்திகள் நூலின் இறுதிப் பகுதியில் விரிவாகப் பேசப்படுகிறது. மெஹர்பானுவை அப்பாஸ் தாலி கட்டியே நிக்காஹ் செய்து கொண்டதாகக் குறிக்கப்பட்டுள்ளது.

நிக்காஹு செய்து கொடுங்களென்று பகுவீறு நேசமுடன்றா
னுரைக்க
ஒக்குமென்று வேதியர்கள் அன்றங் குவப்புடனே நிக்காஹதற்கே
சக்கில்லாத சாட்சிவைத்தே அப்போ தகப்பனுமே யொலிகொடுக்க
முக்கியமா யெல்லோரு மங்ஙன் முறைமுறையா யிருந்தார்கள்
முறைமுறையாய்த் தானிருக்க அங்கு மொய் குழல் மாதர்கள்
சேர்ந்து
மறையினர்க டான்புகழ ராஜன் மகடனக்குத் தாலிகட்டி
(கண்ணி : 908- 910)

அஹமதுஷா பெற்ற காளை அப்பாஸிடம் மணமகளை ஒப்படைப்பதாக ஆசிரியர் குறித்துள்ளனர். திருமணச் சடங்குமுறை தமிழ்க் கலாசாரத்தின் தாக்கத்திற்கு ஓர் உதாரணமே ஆகும். இவ்வாறு திருமணம் நடைபெற்று முடிந்தவுடன் அப்பாஸ், அவனிழந்த நாட்டினைப் பெற்று மகிழ்வுடன் வாழ்ந்து வருவதாகக் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர்.

விந்தையுள்ள அப்பாசும் தேவி மெகர்பானு மகிழ்ந்திருந்தார்
சுந்தரஞ்சே ரஹ்மதுசா அவர் தோகையரும் வாழ்ந்திருந்தார்.
(கண்ணி: 1083)

நூறு மஸ்அலாவின் இறுதியில் அமைந்துள்ள நான்கு கண்ணிகள் வாழ்த்தாக அமைந்துள்ளன.

மொழிநடை என்ற நிலையிலும் ஏனைய இரண்டு மஸ்அலா இலக்கியங்களிலிருந்தும் நூறு மஸ்அலா வேறுபட்டுக் காணப்படுகிறது. நூறு மஸ்அலா செய்யுள் நடையில் கண்ணிகளாக அமைந்திருப்பினும் அத்தனை கண்ணிகளிலும் அகராதி வேண்டாத பழகு தமிழ்ச் சொற்களே அதிகம் பயின்று வருகின்றன நடைமுறை பேச்சுத் தமிழ்ச் சொற்களை ஆசிரியர் அதிகம் கையாண்டிருப்பதன் பயனாய் நூறு மஸ்அலாவின் கருத்துக்கள் படிப்போர் உள்ளத்தே எளிதில் படிந்துவிடுகிறது. பேச்சு வழக்கில் உள்ள அவஸ்தை, தம்பிடி, தோஷம், சவால், ஜல்தி, திருஷ்டி, சீச்சீ போன்ற பல சொற்கள் கண்ணிகளில் பரக்கக் காணப்படுகின்றன. நூறு மஸ்அலா ஆசிரியரிடம் உள்ள பிறிதொரு மொழியியல்பு ஒலிக்குறிப்புச் சொற்கள், அடுக்குத் தொடர்களை அதிகமாகப் பயன்படுத்துவதாகும். திடில்லென, கூகூவென், ஆஹாவென, போன்ற பல ஒலிக் குறிப்புச் சொற்கள் பயன்படுத்தப்படுவதால் ஆசிரியர் தாம் கூறப்புகும் கருத்துடன்

வாசகர்களை ஒன்றுவிக்கச் செய்கிறார். இதேபோல் பெயர், வினைச் சொற்களை அடுக்குத் தொடர்களாகப் பயன்படுத்துவதன் மூலம் தாம் கூறக் கருதும் கருத்திற்கு அழுத்தத்தையும் ஆசிரியர் தருகிறார். நூறு மஸ்அலாவில் ஆசிரியர் பயன்படுத்தியிருக்கும் நடை, நூறு மஸ்அலா வில் நாட்டுப்புறச் செல்வாக்கின் தன்மையை நன்குணர்த்துகிறது. இதனை நன்குணர்த்தும் வகையில் நூறு மஸ்அலா இன்றும் பேச்சுத் தமிழில் தொண்டி மற்றும் சில இடங்களில் நாட்டு வழக்காகப் பாடப் படும் நிலையைக் குறிப்பிடலாம். மூன்று மஸ்அலா இலக்கியங் களுள்ளும் நூறு மஸ்அலாவே இன்று முஸ்லிம் மக்களிடையே நன்கு பரவியுள்ளது. மலேசியா போன்ற நாடுகளில் நாடாக்(கேஸட்டு) களிலும் பதிவுசெய்து விற்கப்படுகிறது. இந்நிலைக்கு நூறுமஸ்அலாவின் மொழியே காரணமெனலாம்.

நூறு மஸ்அலாவில் மிகுதியான உவமைகள் பயன்படுத்தப் பட்டுள்ளன. அடுக்குவமைகள் பயன்படுத்துவதை மிகுதியாகச் காணலாம். பகுவீறு நாட்டில் அப்பாஸ் சந்தித்த கிழவியானவள் தடுத்தும் மெஹர்பானுவின் மஸ் அலாக்களுக்கு விடையிறுக்க அப்பாஸ் முதல்நாள் சென்று வெற்றியுடன் மீண்டுவந்ததைக் கண்டவள் பெரும் ஆச்சரியமடைவதாக அமைந்துள்ள பகுதி பல தொடருவமைகளைப் பெற்றுள்ளது.

கிழவியந்த தட்சணமே வெகு கிருபையுடனி வன்றனக்கு
விழைவுடனே யாலாத்திதான் சுற்றி விட்டெறிந்து
சொல்லலுற்றாள்
சிங்கத்தின்முன் தப்பிவந்த கருந்தேகமுள்ள ஆனை போலும்
தங்குமயில் வாயிற்றப்பும் நெடும் சர்ப்பமது தன்னைப்போலும்
சர்ப்பவாயிற் றப்கின்குளத் தவளையது தனைப்போலவும்
செப்பிடுமா வேங்கைவாயிற் றப்பும் செம்மறியா டதனைப்போலும்
தூண்டிலிலே தப்புகின்ற சொல்லுந் சுந்தரஞ்சேர் மீனைப்போலும்
சேண்டனிலார் வல்லூறுமுன் தப்பும் திருக்கொள் புறாவதனைப்
போலும்
காறியூமி ழையத்திலே நின்று கடக்கே வந்த ஈயைப் போலும்
மாறிமொழிந் தணுவளவும் ஈயா வம்பரிடம் நற்புலவோர்
பரிசுபெற்று வருதல்போலும்எல்லாம் படைத்தவன் றன்ருளினாலே
வரிசைப்பகு வீறரசன் பெற்ற மாதிடம் போய் மீண்டு வந்தாய்
(கண்ணி: 421-426)

இத்தகு முறையில் ஒரு கருத்தினைக் கூறுவதற்குத் தொடர் உவமைகள் பல பயன்படுத்துவதால் கருத்தழுத்தமும் இலக்கியச் சுவையும் செம்மையுறுகிறது.

அறபு பாரசீகச் சொற்களின் பயன்பாட்டிலும் நூறு மஸ்அலா ஏனைய இரண்டு மஸ்அலா இலக்கியங்களிலிருந்து தனித்து நிற்கிறது. இதில் மிகவும் தேவையான இடங்களிலேயே மிகச் சில அறபுச் சொற்களை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார். இதற்குக் காரணம் ஏனைய இரண்டு மஸ்அலா இலக்கியங்களிலிருந்து மார்க்கச் செய்திகள் நூறு மஸ்அலாவில் குறைவாக இடம் பெற்றிருப்பதே ஆகும்.

## முடிவுரை

இஸ்லாமிய தமிழ் இலக்கிய வடிவங்களுள் ஒன்றான மஸ்அலா இலக்கியங்களுள் தோன்றிய மூன்று நூல்களும் இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றில் குறிப்பிடத்தக்க முக்கியத்துவத்தைப் பெற்று தனித்ததொரு இலக்கியப் பிரிவாகத் திகழ்கின்றன. நூலின் உள்ளடக்கத்தில் மிகுதியான மஸ்அலாக்களைப் பெற்றிருத்தல் என்ற நிலையில் ஆயிரமஸ்அலா முதன்மை நிலை பெறுவதுடன் இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றில் காலத்தை தெளிவாகக் குறித்து நிற்கும் நூல்களுள் முதன்மை நிலை என்ற சிறப்பையும் பெற்றுள்ளது. வெள்ளாட்டி மஸ்அலா உரை நடை வடிவத்தில் அமைந்திருப்பினும் உள்ளடக்கச் செய்திகளை எடுத்துக் கூறுவதில் மார்க்கக் கருத்துக்களை மட்டுமே மிகுதியாக விளக்கிக் கூறும் நிலையில் ஏனைய இரண்டு மஸ்அலாக்களிலிருந்து தனித்து நிற்கிறது. நூறு மஸ்அலாவோ இலக்கியச் சுவை மிகுதியாகப் பெற்றிருக்கும் நிலையில் வேறுபட்டு இருப்பதுடன் மொழிநடையிலும் ஏனைய இரண்டு மஸ்அலாக்களிலிருந்து முற்றிலும் மாறுபட்டு எளிய நடையைப் பெற்றுள்ளது.

# நாமா இலக்கியங்கள்

இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றில் புதுவகை இஸ்லாமியத் தமிழிலக்கியங்கள் எனச் சுட்டத்தக்க சிறப்பிடத்தைப் பெறும் இலக்கிய வடிவங்களுள் ஒன்றே நாமா என்னும் இலக்கிய வகையாகும். நாமா (Nama) என்னும் இச்சொல் நாமே (Nameh) என்னும் பாரசீகச் சொல்லின் தமிழ் வடிவமாகும். பாரசீக மொழியில் நாமே என்பது கதை அல்லது நூல் அல்லது தொடர் வரலாறு எனப் பொருள்படும். நாமே என்னும் இச்சொல் பாரசீக மொழியில் குறிப்பிடத்தக்க ஒருவகை இலக்கியப் பிரிவினைச் சுட்டு வதற்குப் பயன்படுத்தப்படுகிறது. சான்றாக காபூஸ்நாமே, ஸியாஸத் நாமே, ஷா நாமே போன்ற பிரபலமான பாரசீக இலக்கியங்களைக் குறிப்பிடலாம். இவ்விலக்கியங்கள் ஒவ்வொன்றும் வெவ்வேறான தொடர் நிகழ்வுகளை எடுத்துரைப்பனவாகும். எடுத்துக்காட்டாக ஸியாஸத் நாமேவை எடுத்துக்கொள்வோம். இந்நூல் செல்ஜுக்கு களின் அமைச்சரான நிஜாமுல் முல்க் எழுதியதாகும். இதில் இவர் ஒரு நாட்டு அரசருக்குரிய அறிவுரைகளை தொடர் நிகழ்வுகளாக எடுத்துக்கூறுகிறார். தூதுவர்களை நடத்தும் முறை, பிறநாட்டு மன்னர்களை மதிக்கும் பண்பு முதலானவைகள் விரிவாக ஸியாஸத் நாமேயில் இடம்பெற்றுள்ளது. எனவே பல்வேறு செய்திகளை ஒரு தொடர் நிகழ்வுகளாக படைத்துக் காட்டும் ஒரு இலக்கிய வகையைச் சுட்டுவதே 'நாமே' என்னும் பெயராகும். இவ்விலக்கிய வகையில் பல நூல்கள் பாரசீக மொழியில் தோன்றியுள்ளன.

சுல்தான் வலத் என்பவரின் 'இப்திதா நாமா' 'இந்திஹா நாமா' என்னும் இரண்டு இலக்கியங்களும் ஆன்மீக நெறியை எடுத்துரைப்ப தில் புகழ் பெற்றனவாகும். இதேபோல் 'நாமயெ தானிஷ்வரான்' என்னும் இலக்கியம் ஈரானில் வாழ்ந்த மாமேதைகளைப்பற்றி ஏழு தொகுதிகளில் விரிவாக எடுத்துரைக்கிறது நாமே இலக்கியங்கள் பாரசீக மொழியில் குறிப்பிடத்தக்க முக்கியத்துவத்தைப் பெற்றுள்ளன எனலாம். பாரசீகம் இஸ்லாத்துடன் நெருங்கிய தொடர்பினைப் பெற்றிருப்பதால் பார்ஸி மொழியின் தாக்கத்தையும் முஸ்லிம்களிடம் பரவலாக நாம் காண்லாம். பார்ஸி மொழித் தாக்கத்தின் பயன்களுள் ஒன்றே இந்திய மொழி பேசும் முஸ்லிம்கள் இயற்றிய நாமா இலக்கியங் களாகும்.

இந்தியாவில் தோன்றிய பல்வேறு மொழிபேசும் முஸ்லிம் கவிஞர் களும் பார்ஸி மொழியைப் பின்பற்றி நாமா இலக்கியங்களைப் படைத் துள்ளனர். இந்தியாவின் மிகப் பெரும் கவிஞரான அல்லாமா முஹம் மது இக்பாலின் மிகப்பெரும் நூலாகிய ஜாவீத் நாமே குறிப்பிடத்தக்கதாகும்,

முஸ்லிம் தமிழ்ப் புலவர்களும் இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றில் குறிப்பிடத்தக்க எண்ணிக்கையைக் கொண்ட நாமா இலக்கியங்களைப் பாரசீக மொழியைப் பின்பற்றியே தமிழுலகுக்கு அறிமுகம் செய்வித்துள்ளனர். இஸ்லாமிய புதுவகைத் தமிழிலக்கியங்களான கிஸ்ஸா, மஸ்அலா, முனாஜாத்து, படைப்போர் முதலானவைகள் அரபு மொழிச் செல்வாக்கின் காரணமாக தமிழிலக்கிய உலகில் இடம் பெற்றவைகளாக இருக்க, நாமா இலக்கியப் பிரிவு ஒன்றே பாரசீக மொழியின் செல்வாக்கால் தமிழ் இலக்கிய உலகில் இடம் பெற்றுள்ளது இவ்விலக்கியப் பிரிவின் தனிப் பண்பாகும்.

முஸ்லிம் தமிழ்ப் புலவர்களின் இஸ்லாமியக் கருத்துக்களையும், வரலாறுகளையும் தமிழுலகில் பரப்புதல் வேண்டும் என்ற ஆதங்கமே நாமா என்னும் புதுவகை இலக்கியங்கள் தமிழிலக்கிய வரலாற்றில் இடம் பெறுவதற்குக் காரணமாயிற்று. இவ்விலக்கிய வகையின் அறிமுகம் இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாறு தொடக்கம் பெற்ற சில நூற்றாண்டுகளுக்குப் பின்பே நடைபெற்றுள்ளது.

நாமா இலக்கிய வகையை அறிமுகம் செய்வித்த பெருமை ஐயன் பேட்டையைச் சார்ந்த மதார் சாஹிப் புலவர் அவர்களையே சாரும். இவர் முதன் முதலில் 1751-ல் மிஃறாஜ் நாமா என்னும் இலக்கியத்தை அரங்கேற்றம் செய்துள்ளார். பெருமானார் நபிகள் நாயகம் (சல்) அவர்களின் பெரும் பேறு பெற்ற விண்ணேற்றப் பயணத்தை நாமா இலக்கிய வகையில் இந்நூலில் எடுத்துரைத்துள்ளார். இதற்கடுத்த நிலையில் அலி (றலி) அவர்களை மையமாகக் கொண்டு 'அலிநாமா' என்னும் இலக்கியத்தை சையது முஹம்மது அண்ணாவியார் 1753 ஆம் ஆண்டில் இயற்றினார். இதற்குப் பின் நாற்பத்தாறு ஆண்டு காலத்திற்கு நாமா இலக்கியங்கள் எதுவும் இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றில் தோன்றவில்லை. 1799 இலேயே தொழுகை நாமாவை மாலிக்கு சாஹிப் அவர்கள் அரங்கேற்றம் செய்துள்ளார்கள். இதற்கு அடுத்த நிலையில் தோன்றியது ஆகிறத்து நாமாவாகும். இதன் காலம் 1868. இதனைத் தொடர்ந்து பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிவரையில் 11 நாமா இலக்கியங்களும் இருபதாம் நூற்றாண்டில் 1950 வரையிலும் பன்னிரண்டு நாமா இலக்கியங்களும் தோன்றியுள்ளன. இது வரையில் எமக்குக் கிடைத்துள்ள ஆதாரங்களின்படி 1950 வரையிலும் மொத்தம் இருபத்தி எட்டு நாமா இலக்கியங்களை முஸ்லிம் புலவர்கள் அளித்துள்ளார்கள். இவற்றைக் காலவரையறையின் அடிப்படையில் பின்வருமாறு முறைப்படுத்தலாம்.

| | நாமா இலக்கியங்கள் | ஆசிரியர் | காலம் |
|---|---|---|---|
| 1. | மிஃறாஜ் நாமா | மதார் சாஹிப் | 1751 |
| 2. | அலிநாமா | சையது முகம்மது அண்ணாவியர் | 1753 |
| 3. | தொழுகை நாமா | மாலிக்கு சாஹிப் புலவர் | 1799 |
| 4. | சக்கறாத்து நாமா | அப்துல் காதிர் | 1868 |
| 5. | அகாயத் நாமா | அப்துல் காதிர் | 1874 |
| 6. | இபுலீசு நாமா | செய்யது ஆலிம் சாகிபு | 1874 |
| 7. | இபுலீசு நாமா | செய்யிதபூபக்கர்ப் புலவர் | 1874 |
| 8. | தஜ்ஜால் நாமா | முகம்மது இப்ராகீம் சாகிபு | 1874 |
| 9. | நசீகத்து நாமா | அப்துல் காதர் சாகிபு | 1874 |
| 10. | ஹக்கீகத் நாமா | அப்துல் காதர் சாகிபு | 1874 |
| 11. | தஜ்ஜால் நாமா | சைகு யூசுபு | 1876 |
| 12. | பறலு நாமா | அப்துல் வஹ்ஹாப் | 1889 |
| 13. | நூறு நாமா | குலாம் முகமது சாகிபு | 1898 |
| 14. | முனாஜாத் நாமா | முகம்மது இஸ்மாயில் ஆலிம் | 1899 |
| 15. | ஊஞ்சல் நாமா | முகம்மது பஸ்லுல்லா சாகிபு | 1908 |
| 16. | ஒளிவு நாமா | முகம்மத் கமாலுத்தீன் சாகிபு | 1909 |
| 17. | தர்ஜுமா அர்பயீன் ஹதீஸ் நஸீகத்து நாமா | சாகுல் ஹமீது லெப்பை | 1910 |
| 18. | நூறு நாமா | செய்யது அகமது மரைக்காயர் | 1911 |
| 19. | லுக்மான் நாமா | வி. அப்துல் வஹ்ஹாப் சாகிப் | 1911 |
| 20. | லுக்மான் நாமா | ஷேக் அஹமது ஆலிம் சாகிப் | 1911 |
| 21. | இருஷாது நாமா | ஷாமுனா லெப்பை | 1912 |
| 22. | கோஷா நாமா | அப்துல் வகாப் சாகிப் | 1912 |
| 23. | மஜ்மு நாமா | மகுதூம் புலவர் | 1913 |
| 24. | தொழுகை நாமா | அபுல் பார்க் | 1918 |
| 25. | ஊஞ்சல் நாமா | இப்ராஹீம் காதர்சாப் | 1920 |
| 26. | நூறுல் ஹுதாவென்னும் ராட்டை ஷேக் நாமா | இப்ராகிம் காதர் சாகிப் | 1921 |
| 27. | வத்சு நாமா | முகமது கமாலுதீன் | 1922 |
| 28. | கல்ஸர் நாமா | அப்துல் ரஜாக் | 1950 |

மேற்குறித்த நாமா இலக்கியங்களை அணுகும்போது இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றில் பத்தொன்பது, இருபதாம் நூற்றாண்டு காலப்பகுதிகளே நாமா இலக்கிய ஆக்கத்தில் முதன்மை நிலை பெறுகின்றன. முஸ்லிம்கள் தமிழிலக்கிய ஆக்கத்தில் பெரிதும் பங்கு பெற்றது இவ்விரு நூற்றாண்டுகளிலேயே ஆகும். இதற்கேற்ப நாமா இலக்கியங்களும் இக்கால கட்டத்திலேயே அதிகமாக படைக்கப்பட்டுள்ளன. அனைத்து நாமா இலக்கியங்களுக்கும் முன்னோடிகளாகவுள்ள மிஃறாஜ் நாமாவை முதன்முதலில் பதிப்பித்து வெளியிட்டவர் குலசேகரப்பட்டணம் அல்லாபிச்சைப் புலவரவர்களாவர். இப்பதிப்பு மனோண்மணி விலாச அச்சுக்கூடத்தில் 1875-ல் வெளியிடப்பட்டுள்ளது. மிஃறாஜ் நாமாவின் நூல் அரங்கேற்றத்திற்கும் முதல் பதிப்பிற்கும் இடையே ஒரு நூற்றாண்டிற்கும் மேற்பட்ட கால இடைவெளி காணப்படுகிறது. முதல் நாமாவின் அரங்கேற்றம் பற்றிய அகச்சான்றுகள் மூலமாகவே நம்மால் நூலின் காலத்தை சரிவர அறிய முடிகிறது.

திங்கள் நபியுல்லா ஹிஜ்றத்தான சிறந்தவாயிரத் தொருநூற்
றின்மேல்
புங்க மானதோர் அறுபத்தைந்திற் புகலும் வருடமாம்
பிரசோற்பத்தி
சங்கைசேர் றமலான் முப்பதிலே சாற்று மிகுறாசு நாமாத்தன்னை
எங்கள் பிஸ்மில்லா சாஹிபுமுன் னேழை யடியேன்கவி
யிசைத்தனனே

(மிஃறாஜ் நாமா : 6)

இங்கு மதார் சாஹிப் அவர்கள் மிஃறாஜ் நாமாவை ஹிஜ்றி 1165-ஆம் வருடம் றம்ஸான் மாதம் முப்பதாம் தேதி அரங்கேற்றம் செய்வித்ததாகக் குறிப்பிட்டுள்ளார். இதற்கு இணையான கிறித்துவ ஆண்டு 1751 ஆகும். ஆக ஒரு நூற்றாண்டிற்கு மேற்பட்ட கால இடைவெளிக்குப் பின்பே மிஃறாஜ் நாமா பதிப்பிக்கப்பட்டுள்ளது. இம் முதற்பதிப்பினை தொடர்ந்து இந்நூலுக்குப் பல பதிப்புக்கள் வெளிவந்துள்ளன. 1878, 1882-இல் மகுதணராவுத்தர் அவர்கள் இதனைப் பதிப்பித்து வெ்ளியிட்டுள்ளார். 1915-இல் கண்ணகுமது மகுதூ முஹம்மதுப் புலவர் அவர்கள் பதிப்பித்த பதிப்பிற்கிணங்க 1923, 1949 ஆகிய ஆண்டுகளில் மறு பதிப்புகள் வெளியிடப்பட்டுள்ளன. இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றில்உள்ள பல்வேறு இலக்கியங்களில் முக்கியத்துவம் பெறும் பெருமானார் நபி (சல்) அவர்களில் வாழ்க்கை வரலாற்று நிகழ்ச்சிகளை முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள் குறிப்பிடும்போது அவர்கள் தம் வாழ்வியல் வரலாற்று நிகழ்வுகளுள் அதிக முக்கியத்துவம் கொடுக்கும் நிகழ்ச்சி மிஃறாஜ் சம்பவமே ஆகும். இத்தகு சிறப்புச் செய்தியே மிஃறாஜ் நாமாவின் பாடுபொருளாக உள்ளது.

எல்லாம் வல்ல அல்லாஹ்வின் ஆணைப்படி வானவர் தலைவர் ஜிப்றயீல் (அலை) அவர்கள் அண்ணல் நபி (சல்) அவ்ர்களை மேல் உலகுக்கு அழைத்துச் சென்று அங்கு அல்லலாவின் கட்டளைகளை ஏந்தி விண்ணுலகிலிருந்து மண்ணுலகிற்கு மீண்ட செய்திகளை விரிவாக எடுத்துரைத்துள்ளார் ஆசிரியர். பெருமானார் நபி (சல்) அவர்கள் முஸ்லிம் மக்களுக்குரிய இறைக்கட்டளைகளான ஐவேளைத்தொழுகை, முப்பதுநாள் நோன்பு, சக்காத்து முதலான அல்லாஹ்வின் கட்டளை களைப் பெற்று வந்ததும் இவ்விண்ணேற்றப் பயணத்தின்போதே ஆகும். இக்கட்டளைகளை பெருமானார் நபி (சல்) அவர்கள்பெற்றதை மதார் சாகிபு விரிவாகக் குறிப்பிட்டுள்ளார். முதலில் அல்லாஹ் நபி (சல்) அவர்களின் உம்மத்துக்குரிய(முஸ்லிம் மக்களுக்குரிய)கடமையாக நாள் ஒன்றுக்கு ஐம்பது வேளைத் தொழுகையையும் வருடத்திற்கு ஆறு மாத நோன்பையும் ஒரு முஸ்லிமின் வருமானத்தில் நாலில் ஒரு பகுதியை சக்காத்தாக செலவிடுதல் வேண்டும் என்றும் கட்டளையிட் டான். இதனை தன் மனத்தில் ஒப்புக்கொண்ட பெருமானார் நபி (சல்) அவர்கள் அல்லாஹ்வின் ஆணைகளை மூசா நபி அவர்களிடத்து வந்து தெரிவித்தார்கள். இறைக்கட்டளை பெற்ற இச்செய்தியை இவ் வாறு கூறுகின்றார் ஆசிரியர்.

எல்லாப் புகழ்ச்சி யுமுனக்கே
யென்றங் ககங்குளிர்ந்து திரும்பும்போது
வல்லோன் சத்த மொன்றுண்டானது
வரிசை முகம்மமே திரும்பாதேயும்
நல்ல வொருசெய லும்மத்தோர்க்கு
நடக்கத் தருகிறேன் கேளுமென்றான்
சொல்லுமொழி கேட்டு நாயனேநீ
துய்ய செயலினை அருளுவாயே

(மிஃறாஜ் தாமா : 200)

தொழுகை நாளிற் கைம்பது நேரமும்
தொகுத்து நோன்பாறு மாதம்வைக்க
நழுவாச் சக்காத்து நாலிலொன்று
நாடி வருடத்துக் கொரு ஹஜ்ஜுதான்
பழுது வராமலும் உம்மத்தோரைப்
பாங்காய் எல்லாம் செய்யச் சொல்லும்
முழுதும் நபியுல்லா நல்ல தென்று
மூசா நபிக்குவந்து ரைக்கலுற்றார்

(மிஃறாஜ் நாமா 201)

இறைவன், நபி (சல்) அவர்களின் உம்மத்தோர்க்கு அளித்துள்ள கட்டளையை பெருமானார் மூஸாநபியிடத்து வந்து கூறினார்கள். இதனைச் செவியுற்ற நபியவர்கள் பெருமானார் (சல்) அவர்களை நோக்கி அல்லாஹ்விடம் மீண்டும் சென்று அவன் தன் கட்டளைகளை எளிதாக்கும்படி மன்றாடக் கூறினார்கள். மூசா நபி அவர்களின் கருத்துப்படி நபி (சல்) அவர்கள் மீண்டும் அல்லாஹ்விடம் சென்று தம் உம்மத்தோர்களுக்காக மன்றாடி வேண்டினார்கள். இதன் பயனாகவே இன்று நடைமுறையில் இருந்துவரும் முஸ்லிம்களுக்குரிய கடமையான நாள் ஒன்றுக்கு ஐவேளைத் தொழுகை, வருடத்தில் ஓர் மாதம் நோன்பு, வாழ்வில் ஒருமுறை ஹஜ்ஜு செய்தல் முதலான கட்டளைகளைப் பெற்றார்கள். அல்லாஹ்விடமிருந்து இக்கட்டளைகள், பெருமானார் நபி (சல்) அவர்களுக்கு பிறப்பிக்கப்பட்டதை மிஃறாஜ் நாமா இவ்வாறு கூறுகிறது.

என்றுமொரு நாளைக் கைந்து நேர
மிணங்கி தொழுது கொண்டதபுடனே
நன்றாய் சுயிர்செய்து சக்காத்தையும்
நாற்பதுக்கொன்று தானளித்துச்
சென்ற வருடத்தில் றமுலானிலே
தீரவொரு மாதம் நோன்பு வைத்து
நன்றாய் வயதிலே ஒரு ஹச்சுதான்
நடந்து செய்திடப் போதுமென்றான்
(மிஃறாஜ் நாமா : 205)

இஸ்லாத்தில் இத்தகு சிறப்புமிக்க கட்டளைகளை அல்லாஹ்விடமிருந்து பெருமானார் நபி (சல்) அவர்கள் பெற்றுவந்த வரலாற்று நிகழ்ச்சிகளே, மிஃறாஜ் நாமாவில் விவரிக்கப்பட்டுள்ளது. இத்தகு சிறப்புப்பெற்ற மிஃறாஜ் நாமாவை படிப்போர், படித்ததைக் கேட்டோர் அடையும் பயனையும் ஆசிரியர் நூலின் இறுதியில் சுட்டிக் காட்டியுள்ளார்.

இந்த மிகுறாசு நாமாத் தன்னை
யாதோர் அடியானும் படித்தாலுமாம்
சிந்தை மகிழ்ச்சியாய்க் கேட்டாலுமாம்
செப்பும் படிக்கிதை யுவந்தாலுமாம்
அந்த மஜ்லிசி லிருந்தாலுமாம்
அறியும் செவிதனிற் கேட்டாலுமாம்
வந்த கலியெல்லாம் அகன்றுபோகும்
வல்ல பெரியோனும் உதவி செய்வான்
(மிஃறாஜ் நாமா : 231)

மதார் சாகிபு மிஃறாஜ் நாமாவை இருநூற்றி முப்பத்து நான்கு விருத்தப்பாக்களாக ஆக்கியுள்ளார். இந்நாமா, வரலாற்று நிகழ்வினையே முழுக்க முழுக்க ஆதாரமாகக் கொண்டு புனையப்பட்டிருப்பதால், இதில் கற்பனை புனைவுக்கு இடமில்லை. அறபு மொழிக் கலப்பு அதிகமாக உள்ளது.

மிஃறாஜ் நாமாவிற்கு அடுத்த நிலையில் அதன் காலத்தையொட்டியே தோன்றியுள்ள இரண்டாவது நாமா அலி நாமாவாகும். இந்நாமாவை ஹிஜ்றி 1167 இல் சையது முஹம்மது அண்ணாவியார் அவர்கள் யற்றியுள்ளார்கள். இதற்கு இணையான கிறித்துவ ஆண்டு 1753 ஆகும். இந்நாமாவின் ஆசிரியரான சையிது முஹம்மது அண்ணாவியார் அவர்கள் மதுரையைச் சேர்ந்தவராவர். இவர் மதீனக் கலம்பகம் இயற்றிய ஜீவரத்னக் கவிராயரின் தந்தையும் ஆவார். சையது முகம்மது அண்ணாவியார் மதுரையைச் சார்ந்தவர் எனினும் அவர் வாழ்ந்தது மதுக்கூர், மூத்தாக்குறிச்சி, நாகூர், ஐயம்பேட்டை, அதிவீரராமன் பட்டினம் முதலான ஊர்களிலேயே ஆகும். இவர்தம் ஆன்மீகக்குரு வழுத்தூர் வகாபுத்தீன் சாகிபாவர். இதனை அண்ணாவியார் அவர்கள் தம் அலி நாமாவில் உள்ள ஒரு செய்யுள் மூலமாகவே அறிவிக்கின்றார்.

உளந்தெளிந் துணர்ந்த வகாபுதீன் சாகிப்
உயர்பதம் சிரசினிற் அணிந்தே
தெளிந்துமுன் விசய கேசரி எழில்சேர்
சீயகே தனந்திரு மாது
விளங்கிய கூடல் நூறுத்தீன் லெப்பை
மெய்யனாம் சேகுமீ றான்சொல்
வளம்பெறும் செய்து முகம்மதிச் சரிதம்
வழுத்தினன் கவிதை யினாலே
(அலிநாமா : 25)

இதில் சையித் முகம்மது அண்ணாவியார் அவர்கள் கூடல் மாநகர் மதுாயைச் சார்ந்தவர் என்பதும், அவரது தந்தையார் செய்கு மீரான் என்றும், பாட்டனார் பெயர் நூறுத்தீன் லெப்பை என்பதும் பெறப்படுகிறது. சையது முகம்மது ஐயம்பேட்டை நகரத்தில் ஒரு பள்ளிக்கூடம் நிறுவி கல்வி புகட்டியபோதே அண்ணாவியார் என்னும் பட்டத்தைப் பெற்றார். அதன்பின் அதிவீரராமன் பட்டினத்திற்கு வந்து தங்கி இருந்தபோதே ஹஜ்ரி 1167-ஆம் ஆண்டு அலி நாமாவை இயற்றினார். இந்நாமாவிற்கு உரை தந்தவர் மதாறு சாகிபு அவர்களாவர். அதிவீரராமன் பட்டினத்தைச் சார்ந்த லெப்பைத் தம்பி என்பவரே அலி நாமாவின் கொடை நாயகர். அவர் அளித்த கொடையைப்பற்றி பின் வருமாறு அலிநாமாவில் குறிக்கப்பட்டுள்ளது.

பெலம் வளர் அகுமத் பிள்ளையை கிலுறுப்
பிள்ளையைத் துணையென உவந்தே
நலம்வளர் லெப்பைத் தம்பிபூ பதிசீர்
நாடிய தீன்குழாம் சூழ
இலகிய மணியா சனத்தினி லிருந்தே
எனைஎதிர் ஆசனத் திருத்திப்
புலியலி நாம வரவுரை யெனவே
புயலெனச் சொரிந்தனன் கனகம்

(அலி நாமா : 27)

அலி நாமாவின் நாயகர், நாயகம் பெருமானுர் நபி (சல்) அவர்களுக்குப் பின் இஸ்லாமிய ஆட்சி செலுத்திய கலீபாக்களுள் நான்காவது நிலையில் ஆட்சி புரிந்த அலி (றலி) அவர்களாகும். இவர் அபுத்தாலிபு அவர்களின் புதல்வரும் பெருமானுர் (சல்) அவர்களின் மகள் பாத்திமா அவர்களின் கணவரும் ஆகும். அலி (றலி) அவர்கள் ஹிஜ்ரி 35 முதல் 40 ஆம் ஆண்டு வரையில் திறம்பட அரசாட்சி செலுத்தியவர்களாவார். இஸ்லாமிய வரலாற்றில் சந்தித்த பெரும் போர்களான பத்ருப் போர், உஹத் போர், அகழ்ப் போர், கைபர்ப் போர் முதலான அனைத்திலும் வெற்றியை நாட்டியவரும் அலி (றலி) அவர்களே ஆகும். இவர்களைப் பற்றிப் பெருமானுர் நபி (சல்) அவர்கள் கூறும்போது, ''நான் அறிவென்னும் பட்டணம், அலி அதன் வாயில்'' (அல்ஹதீது) என்பர். இத்தகு சிறப்புப் பொருந்திய அலி (றலி) அவர்களைத் தலைமையாகக் கொண்டே சையிது முஹம்மது அண்ணாவியார் அலி நாமாவை இயற்றியுள்ளார்.

அலி நாமாவில் இடம் பெற்றிருக்கும் பாடுபொருள் அலி (றலி) அவர்களது வாழ்வில் நடைபெற்ற ஒரு நிகழ்ச்சியே ஆகும். இரக்கக் குணம் படைத்த அலி (றலி) அவர்கள் ஓர் ஏழையின் கடனைத் தீர்ப்பதற்காக ஓர் அரசனிடம் தம்மையே அடிமையாக விற்று அந்த ஏழையின் துயர் நீக்கியதை அலி நாமாவில் ஆசிரியர் எடுத்துக் காட்டுகிறார். இவ்வாறு அடிமையாக அலி (றலி) அவர்கள் அரசனிடம் இருக்கும்போது, அவ்வரசனின் எதிரிகளை போர்மூலம் வெற்றி கொண்டதுடன் இறுதியாகத் தாம் அடிமையாக இருந்த அரசனுடனேயே போரிட்டு வெற்றிக் கொண்டு அவனையும் இஸ்லாத்தைத் தழுவும்படிச் செய்த கதை நிகழ்ச்சிகளை சையிது முகம்மது அண்ணாவியார் அவர்கள் விரிவாக எடுத்துரைக்கின்றார்கள். அலி நாமாவில் உள்ள செய்யுட்கள் பல அலி (றலி) அவர்களது போர்த் திறம் பற்றியதாகவே உள்ளது. போர்க்களத்தில் அலி (றலி) அவர்கள் போரிடும் நிலையையும் அதன் காரணமாக அங்கு ஏற்பட்ட மாற்றங்களையும் விவரிக்கும் ஆசிரியர் போர்கள் நிலைமையை விவரிப்பது தம்மாலும் வேறு எவராலும் இயலாது என்றே கூறுகிறுர்.

இரதம் உற்றுறு புரவலர் முனையொடும்
எதிர்கு தித்திடு கயலொடு கயலிடி—கொளல்போலும்
விரைவில் உற்றிடு தகரொடு தகருகள்
வினைமி குத்துர மொடும்எதிர் பொருதிடு—வதுபோலும்
வரித னுக்கொடு சுடுகணை சொரிதலின்
மணிஅ ழுத்திய கொடிகுடை சகடுகள்—விருதோடு
புரவி மற்றவும் ஒருநொடி யளவுபல்
பொடிப டுத்தின எவர்களும் இவைசொல—அரிதாமே

(அலி நாமா : 159)

இங்கு போர்க்களக் காட்சியை உவமையுடன் விவரித்திருக்கும் நயம் சிறப்புடைத்தாகும். அலிநாமாவில் உள்ள செய்யுள்கள் 233 திருவிருத்தங்களால் ஆக்கப்பட்டுள்ளன. போர்க்களக் காட்சியில் ஆசிரியர் பயன்படுத்தும் சொற்கள், அவர்தம் பாடு பொருள் வெளிப்பாட்டிற்குத் துணை செய்யும் வகையில் அமைந்துள்ளன.

அலி நாமாவிற்கு அடுத்த நிலையில் தோன்றியுள்ள மூன்றாவது நாமா இலக்கியம் தொழுகை நாமாவாகும். இதனை மதுரையைச் சேர்ந்த புலவரான மாலிக்கு சாஹிப் அவர்கள் 1799-ஆம் ஆண்டில் அரங்கேற்றம் செய்துள்ளார். இச்செய்தியை தொழுகை நாமாவின் கடவுள் துதியில் அமைந்துள்ள செய்யுள் வரிகள் தெரிவிக்கின்றன.

கல்லாதமூடன் கவிதைமொழி யறியேன்
சொல்லால் தொடங்குகின்றேன் தொழுகை வரலாற்றையெல்லாம்
ஹிஜறத்தி ஆயிரத் திரு நூற்றுப் பதினாலில்
ஹஜ்பதலி லே வள்ளல் நபி பொருட்டாற் சொல்லுகிறேன்
மதுரைக் கதிபன்ஜமால் மைந்தன் மாலிக்கு சாஹிப்
துதிசெய்து பாடலுற்றேன் றோன்றுநல்ல மானிடரே

(தொழுகை நாமா : கடவுள் துதி)

இங்கு ஹிஜ்றத் 1214-இல் மாலிக்கு சாஹிப் தொழுகை நாமாவை இயற்றியுள்ள செய்தியை அறிய முடிகிறது. இதற்கிணையான கிறித்துவ ஆண்டு கி. பி. 1799 ஆகும். தொழுகை நாமா 1799-இல் இயற்றப்பட்டிருப்பினும் 1876-ஆம் ஆண்டிலேயே முகம்மது இபுராகீம் சாகிபு அவர்களால் ஸுகவிரஞ்சனி முத்திராக்ஷர சாலையில் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இதற்குப்பின் தொடர்ந்து 1888, 1906, 1916, 1922, 1939 ஆகிய ஆண்டுகளில் ஐந்து பதிப்புக்கள் தொழுகை நாமாவிற்கு வந்துள்ளன. இவற்றுள் இறுதி இரண்டு பதிப்புக்களையும் எம். ஏ. ஷாகுல் ஹமீது தம்முடைய ஷாகுல் ஹமீதியா பிரஸில் பதிப்பித்துள்ளார். ஏனைய மூன்று பதிப்புகளுக்குரிய பதிப்பாசிரியர் விவரம்

அறியமுடியவில்லை. 1916-ல் வெளிவந்த பதிப்பு சென்னை சக்கர வர்த்தி அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டுள்ளது. தொழுகை நாமாவில் காப்புச் செய்யுள் மட்டுமே விருத்தப்பாவாகவும் ஏனையவை கண்ணி களாகவும் உள்ளன. மொத்தம் 180 கண்ணிகள் உள்ளடக்கமாக இடம் பெற்றுள்ளன. தொழுகை என்பது அறபில் ஸலாத் எனக் குறிப்பிடப் படுகிறது. இஸ்லாத்தில் ஐம்பெரும் கடமைகளில் இரண்டாவது முக்கிய கடமையாவது இறைவணக்கமான தொழுகையாகும். தொழு கையின் அவசியத்தையும் முக்கியத்துவத்தையும் அல்லாஹ் தன் திரு மறையில் பல இடங்களில் குறிப்பிட்டுள்ளான். 'நீங்கள் தொழுகை யைக் கடைப்பிடித்தும் "ஜகாத்து" கொடுத்தும் வாருங்கள், ஏனென் றால் மரணத்திற்கு முன்னதாக உங்களுக்காக நீங்கள் என்ன நன்மை செய்து அனுப்பியிருந்தீர்களோ அதனையே அல்லாஹ்விடம் மறுமை யில் பெற்றுக் கொள்வீர்கள்...' (அல்குர்ஆன் 2 : 110) ஆகவே இறப் பதற்குமுன் இயன்ற அளவு நன்மையை தொழுகையின் மூலமாகத் தேடிக்கொள்ளுமாறு வலியுறுத்துகின்றான் அல்லாஹ். பெருமானார் நபி (சல்) அவர்களும் தம் அல் ஹதீதுகளில் தொழுகையின் அவசியத் தையும் சிறப்பையும் பல்வேறாக உயர்த்தியுள்ளார்கள். இத்தகு தொழுகை ஒரு முஸ்லிமின் ஆத்ம பரிசுத்தத்திற்குரிய வழியாகும். இதனை ஒவ்வொரு முஸ்லிமும் நாள் ஒன்றுக்கு ஐந்து வேளையாக முறையே அதிகாலை, நண்பகல், பிற்பகல், அந்திமாலை, முன் இரவு ஆகிய நேரங்களில் மேற்கொள்ளப்படல் வேண்டும். இவ் இறைவழி பாடுகள் அதற்கெனவுரிய வழி முறைகளில் அறபு மொழியிலேயே நிகழ்த்தப்படல் வேண்டும். தொழுகையை எவர் விட்டுவிடுகின்றாரோ அவர் இஸ்லாத்தை விட்டு அப்புறப்படுத்தப்பட்டவராகும் என்பது நபி பெருமானார் திருமொழியாகும். இத்தகு முக்கியத்துவம் உள்ள தொழுகையை மரணம் வரும் முன்னே மனத்தில் கொண்டு உய்வு பெற வேண்டும் என்பதையே பாடு பொருளாகக் கொண்டுள்ளது தொழுகை நாமா. தொழுகையின் அவசியத்திற்கு அழுத்தம் தரும் வகையில் மாலிக்கு சாஹிப் புலவர் தொழுகை நாமாவை இயற்றியுள்ளார். தம் கருத்தை பல்வேறு நிலைகளை எடுத்துரைப்பதன் மூலம் வலியுறுத்து கிறார் ஆசிரியர். வாழ்க்கையின் நிலையாமையை எடுத்துக்கூறி தொழுகையின் அவசியத்தைக் கூறுகிறார்.

மகிழ்ந்து துனியாவின் மயக்கத்தை நம்பாதே
புகழ்ந்து பெரியோனைப் போற்றித் தொழுதிடுங்கள்
இந்நகரம் நிச்சயமென் றிருந்துகொண்டு நீருமுண்டு
பொன்னகரந் தனைவிட்டுப் பொய்யடிக்க வேண்டாங்காண்
அல்லா வொருவன்மட்டு மழியாப் பேறுள்ளவனாம்
எல்லாப் படைப்புகளு மிறப்பதுவுந் தப்பாதே
(தொழுகை நாமா : கண்ணி : 50, 36, 66)

இவ்வுலக வாழ்வின் மயக்கம் நிலையானதல்ல என்று கூறும் ஆசிரியர் நிலையான நித்திய சுகத்திற்கு அல்லா ஒருவனையே நாடும்படி அறிவுறுத்தியுள்ளார். துனியா என்பது உலகம் என்று பொருள்படுவதாகும். உலகில் மக்கள் பெரிதும் விரும்புவதும், தேடி அலைவதும் செல்வத்திற்காகவே. இச் செல்வம் அழியக் கூடியதன்றி இறக்கும் தருவாயில் ஒருவருடன் இணைந்து வந்து உதவுவதுமில்லை என்பதை பல கண்ணிகள் மூலம் இவ்வாறு உணர்த்துகிறார்.

காசினியில் வாழ்வெல்லாங் கண்சிமிட்டிக் கண்விழித்துப்
பேசுமட்டு முண்டோதான் இத்துன்யா மானிடரே
அல்லாதுவிட் டிந்தவுயி ரகன்றிடும்போ துங்கள்பொருட்
செல்லாது மண்ணறைக்குட் சேர்ந்து வரமாட்டாதே
தேடிய மூதல்களெதுந் தேவியருஞ் செல்வர்களும்
கூடவராது கண்டாய்க் குழிதனிலே மானிடரே

(தொழுகை நாமா : கண்ணி : 19, 34, 55)

இவ்வுலக வாழ்வின் நிலையாமையை எடுத்துக்கூறும் ஆசிரியர், ஒருவரின் இறப்பை தவிர்த்தல் அரிது என்பதை எடுத்துக்கூறி அனைவர் மனத்திலும் உலக வாழ்வின் மீதுள்ள பிடிப்பு நீங்கும்படி உணர்த்துகிறார் ஆசிரியர். இஸ்லாத்தில் மரணத்தின் பிடியிலிருந்து எந்தவொரு மனிதனும் தப்ப முடியாது என்பது கொள்கையாகும். அதனை அல்குர் ஆன் 'மனிதர்களே! இதற்குப் பின்னர் நிச்சயமாக நீங்கள் இறப்பவர்களே! (23 : 15) என்றும் '(நபியே!) நிச்சயமாக நீரும் இறந்துவிடக் கூடியவரே; நிச்சயமாக அவர்களும் இறந்துவிடக் கூடியவர்கள்தாம் : (39 : 30) என்றும் குறிப்பிடுகின்றது. பிறிதொரு இடத்தில் 'ஒவ்வோர் ஆத்மாவும் மரணத்தை சுகித்தே தீரும். நன்மை, தீமை செய்யக் கூடிய நிலைமையில் நாம் உங்களை வைத்துச் சோதிக்கிறோம். பின்னர் நீங்கள் நம்மிடமே கொண்டு வரப்படுவீர்கள்' (அல்குர்ஆன் 21 : 35) என அல்லாஹ் கூறுகின்றான். இத்தகைய மரணம் ஒருவருக்கு எவ்வளவு விரைவில் எந்நிலையில் வேண்டுமானாலும் வரலாம் என்பதை தொழுகை நாமா பின்வருமாறு உணர்த்துகிறது.

ஒருகண் ணிமைமுடி மறுகண் விழிக்குமுன்னே
குறுக்கே மவுத்துவலை கொண்டு வந்து வீசிடுவார்
ஒருகால் நிலத்தில்வைத்து மறுகா லெடுக்கமுன்னே
அருகே மலக்கிருந்தே யாவிதனை வாங்கிடுவார்
ஓங்கியொரு மூச்சுவிட்டு மறுமூச் செழும்பும்முன்னே
வாங்கிவிப்பான் றூகுதன்னை வலுப்பமுள்ள வல்லவன்றான்

(தொழுகை. நாமா : கண்ணி : 11, 19, 36)

இத்தகு அவசர நிலையில் வரும் மவுத்து வந்தபின்னரோ,

எண்ணியடி யேழ்வைக்கு முன்னிறையோன் மலக்கிறங்கிக்
கண்ணிரண்டு மக்கினிபோற் கபுறில்வந்து தோன்றிடுவார்

(தொழுகை நாமா: கண்ணி : 64)

என மரணத்திற்குப் பின்வரும் நிலையை எடுத்துக் கூறி, அச்ச உணர்வை ஏற்படுத்துகிறார் ஆசிரியர். மலக்கு என்பது வானவர்களைக் குறிப்பதாகும். ஒருவரின் இறப்புக்குப் பின் அல்லாஹ்வின் கட்டளையின்படி அவரின் நன்மை தீமைகளை எடுத்துரைப்பவர்களும் மலக்குகளே ஆவர். இதனையே இங்கு குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். இறந்தவர்களை அடக்கம் செய்வதற்காக தோண்டப்படும் குழி கபறு எனப்படும். இவ்வாறு கபறில் வானவர்கள் வந்து தோன்றி அவரின் நன்மை தீமைகளை அல்லாஹ்விடம் எடுத்துக் கூறுவர் எனக் கூறும் மாலிக்கு சாஹிப் புலவர் அத்துன்பங்களிலிருந்து விடுபட இவ்வுலக இன்ப துன்பங்களை மறந்து அனைத்தும் அல்லாஹ்வே எனத் தம் வாழ்வை மேற்கொள்ளத் தூண்டுகிறார்.

பேச்சுமவன் மூச்சுமவன் பேசுவதெல் லாமவனே
சூட்சமவனாலே சொல்லக்கேள் மானிடரே

(தொழுகை நாமா : கண்ணி: 134)

இவ்வாறு அவனே கதி என்று தொழுகை மேற்கொள்வதால் வரும் பயன்களும் விரிவாக தொழுகை நாமாவில் இடம் பெற்றுள்ளது.

தொழுகை பரக்கத்தினாற் சுவர்க்க பலன்பெறுவீர்
நழுவாம லைந்தொகுத்து நாடித் தொழுதிடுங்கள்.
மாணிக்க மான வரிசைத் தொழுகைதனைப்
பூணிக்கை யாய்க் கொண்டுவந்தோர் பொற்பதியி லேபுகுவார்

(தொழுகை நாமா : கண்ணி : 23, 25)

பறக்கத் என்பதன் நேரடியான பொருள் முழங்காலிடுதல் என்பதாகும். இச்சொல் எல்லாவிதமான நற்பேறுகளையும் உள்ளடக்கியதாகும். இத்தகைய சிறப்பினையே தொழுபவர்கள் பெறுவர் எனக் குறிக்கப் பட்டுள்ளது. தொழுகையின் இன்றியமையாமையைப் பெருமானார் நபி (சல்) அவர்கள் பல்வேறாகத் தம் அல் ஹதீஸ்களில் வலியுறுத்தி உள்ளார்கள், அத்தகைய பல கருத்துக்களையும் மாலிக்கு சாஹிப் புலவர் தொழுகையை வலியுறுத்தும் தம் பாடு பொருளுக்குச் சிறப் பழுத்தம் தரும் வகையில் மிகச் சுருக்கமாக ஈரடிக் கண்ணிகளில் தருகின்றார்.

மெய்யாத் தொழுகைதன்னை விட்டவர்கள் காபிறென்று
துய்யோ நபியிறசூல் சொன்னார் தொழுதிடுங்கள்
மானிலத்தி லேதொழுக மாட்டார்க்கு நரகமென்று
தீனிறசூல் வாயாலே திருவுள மானாரே

(தொழுகை நாமா: கண்ணி : 21, 67)

எனத் தொழுகையை மறந்தவர்கள் பற்றி நபி (சல்) அவர்களின் கருத்துரைகளை எடுத்துக் காட்டியுள்ளார். தொழுகையை மறந்தவர் முஸ்லிமிலிருந்து அப்புறப்படுத்தப்பட்டவர்கள் என்னும் அல் ஹதீதுவின் கருத்தினையே மேலே உள்ள முதல் கண்ணி குறிக்கிறது. காபிர் என்பது முஸ்லிம் அல்லாதோரைக் குறிப்பதாகும். இவ்வாறு தொழுகை மறந்தவர்களுக்கு அமைதி உண்டாவதில்லை என்றும் நபி (சல்) அவர்களின் கருத்து இவ்வாறு இடம் பெறுகிறது

தக்க தொழுகை விட்டால் சலாமத்தங் கில்லையென்று
மக்கா நபியிறசூல் வாயா லுரைத்தனரே

(தொழுகை நாமா கண்ணி : 57)

அத்துடன் மட்டுமல்லாது இவ்வொருவரின் மறுமையில் அல்லாஹ்வின் முன்னால் தம் சமூகத்தவருக்காக பரிந்துரை செய்து வாதாடும் பெருமானாரின் ஷபாஅத்தென்னும் மன்ருட்டம் தொழுகையை மறந் தோருக்கு கிடைப்பதில்லை. இக்கருத்து இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

அஞ்சொகுத்து நேரா யறிந்துவணங் காதவர்க்கு
என்ஷ பாஅத் தில்லையென் றிறசூல் நபியுரைத்தார்

(தொழுகை நாமா : கண்ணி : 39)

நபி (சல்) அவர்களின் கருத்துரைகளுக்கிணங்க மேற்கொள்ளப் படும் தொழுகையின் நன்மைகள் எடுத்துரைக்கும் தன்மையுடைய தன்றாகும்.

தொழுகையுட நன்மைகளைச் சொல்லத் தொலையாது
எழுதிடவுந் தீராதே யென்று நபியுரைத்தார்

எனவே ஒவ்வொரு முஸ்லிமும் அவரவரின் மரணத்திற்கு முன்பே கட்டாயக் கடமையான தொழுகையினை மேற்கொள்ள வேண்டும் என்பதனையே தொழுகை நாமாவின் 180 உள்ளடக்கக் கண்ணி களிலும் ஆசிரியர் மாலிக் சாஹிப் புலவர் வலியுறுத்தியுள்ளார். தொழுகை நாமாவில் குறிப்பிடத்தக்க சிறப்பியல்பு ஆசிரியரின் பழகு தமிழ் நடையாகும். சமயக் கருத்துக்களை மிகவும் செறிவான எளிய தமிழ்ச் சொற்களில் எடுத்து வைத்துள்ளார். சாதாரண அன்றாட

பேச்சுவழக்கு சொற்களை கையாண்டிருப்பதால் தொழுகை நாமாவின் எந்தவொரு கண்ணியும் பொருள் புலப்படாமல் இருக்கவில்லை. இரவு பகல் என்பதற்கு ரவ்வு பகல் (கண்ணி 23), நாம் என்னும் தன்மைப் பன்மைக்கு நாமள் (கண்ணி: 51) என்ற வடிவத்தைப் பயன் படுத்தியிருப்பது ஒருவரின் செல்வத்தைக் குறிப்பதற்கு முதல்கள் (கண்ணி : 55) என்ற சொல்லைக் கையாள்வது போன்ற பல பேச்சு வழக்குச் சொற்கள் இந்நாமாவில் இடம் பெற்றுள்ளன. ஆசிரியர் தம் கருத்தை படிப்போர் உள்ளத்திலே படியும்படி செய்வதற்கு ஆங்காங்கே எளிய உவமைகளைக் கையாண்டுள்ளார். சான்றாக உடல் இருக்க ஒருவன் உயிர் மட்டும் பிரிந்து செல்வதை

பையிருக்கக் கட்டிவைத்த பணம்போகுமென் வாறதுபோல்
மெய்யிருக்க றூகுமட்டும் விட்டோடிப் போகுங்கண்டாய்

(தொழுகை நாமா : கண்ணி : 82)

எனக் குறிப்பிட்டுள்ளார். அரபுச் சொற்களை மிக அவசியமான இடங்களில் பயன்படுத்தியுள்ளார். அத்துடன் ஆசிரியர் பயன்படுத்தும் நடையால் அவர் தம் அரபுச் சொற்களின் பொருளையும் அரபு மொழியறிவு இல்லாதோரும் புரிந்துகொள்ள முடிகிறது. தொழுகை நாமாவில் மாலிக்கு சாஹிப் பயன்படுத்தியிருக்கும் மொழி நடை அவர்தம் பாடுபொருளுக்கும் நோக்கத்திற்கும் அழுத்தமளிக்கும் வண்ணம் உள்ளது.

தொழுகை நாமாவிற்கு அடுத்த நிலையில் தோன்றிய சக்கறாத்து நாமா 1868 இல் பேட்டை ஆழ்மூரைச் சார்ந்த அப்துல் காதிர் என்பவரால் எழுதப்பட்டதாகும். இதனை ஷேக் முஹம்மது பதிப்பித் துள்ளார். இதற்குப்பின் 1874இல் வெளிவந்த பதிப்பினையும் ஷேக் முஹம்மது அவர்களே பதிப்பித்துள்ளார். 1878 இல் வெளிவந்த பதிப்பினையும் 1924 இல் வெளிவந்த சக்கறாத்துநாமா பதிப்பினையும் முறையே சர்க்கரை அல்லாப் பிச்சைப் புலவரவர்களும் முகம்மது முகம்மது அப்துல் அஜீஸ் சாகிப் அவர்களும் பதிப்பித்துள்ளார்கள். சக்கறாத்து என்பது ஒருவருடைய இறப்பு வேளையைக் குறிப்ப தாகும். பொதுவாக முஸ்லிம்கள் ஒருவரின் இறப்பு தருணத்தை 'சக்கறாத்து ஹால்' என்பர். இத்தகு நிலையில் ஒவ்வொருவருக்கும் வெவ்வேறான அனுபவங்கள் வரலாம். இஸ்லாத்தில் சக்கறாத்திற்கு முக்கியத்துவம் தரப்படுகிறது. அந்நிலையில்தான் இறை நம்பிக்கை யாளர்களின் அனுபவமும் இறை நம்பிக்கையற்றவர்களின் அனுபவமும் வெவ்வேறாக இருக்கும் எனச் சுட்டப்படுகிறது. இறை நம்பிக்கை யாளர்களுக்கு இறப்பு வரும்போது அருளுடைய வானவர்கள் வெண்

பட்டாடைகளைக் கொண்டு வந்து அவர்களை வரவேற்பர். இறை நம்பிக்கையாளர் நெற்றியில் வியர்க்கும் அளவிற்குத் துன்பத்திற்குள்ளாகி இறத்துவிடுகிறார் என்று அண்ணல் நபி (சல்) கூறுகிறார்கள். (அல்ஹதீது பக். 164-165) அல்லாஹ்வின்மீது அவர்கள் கொண்ட பற்றின் காரணமாக அவர்களது ஆன்மாவானது வெகு விரைவாக அவர்களின் உடலை விட்டு நீங்கி விடுகிறது. ஆனால் தீயோர்களின் ஆன்மா மிகவும் கடுமையான துன்பத்துடனேயே உடலை விட்டு நீங்குகிறது. எனவே சக்கறாத்து நிலையில் இன்னல் இன்றி இருப்பதற்கு இஸ்லாம் பல்வேறான வழி முறைகளை வகுத்துக் காட்டுகிறது. ஆசிரியர் அப்துல் காதிர் சக்கறாத்து என்னும் இஸ்லாமிய கொள்கைக்கு நாமா என்னும் இலக்கிய வகையின் மூலமாக உருவமளித்திருக்கிறார். இதில் சக்கறாத்தின் துன்பத்தை பல்வேறாக எடுத்துக்கூறி படிப்போர் உள்ளங்களில் அச்சத்தை ஊட்டி இறை உணர்வினை ஏற்படுத்துகின்றார் ஆசிரியர்.

உலகந் தனிலுள்ள வேம்பன் சாறு
ஒடுக்கக் கடுவான எட்டின் சாறு
பலதுங் கசப்புக ளதையொன் றாக்கி
பான கஞ்செய்தே யீந்திட் டாலும்
மலைபோல் வருஞ்சக் றாத்து டைய
வல்ல கசப்புக்கங் கொவ்வி டாது
கலையாக் கல்பதை யவ்வே ளையிற்
காப்பாற் றிடுவது கஷ்ட மென்றார்

(சக்கறாத்து நாமா : 8)

இத்தகு கடும் துன்பத்தை நீக்கிடுமாறு அல்லாஹ்விடம் வேண்டுவதோடு நபிமார்கள் அனைவரும் தம் உம்மத்தோர்களுக்காக அல்லாஹ்விடம் சக்கறாத்தின் துன்பத்தை அகற்றும்படி வேண்டுவர் என்று ஆசிரியர் குறித்துள்ளார். இறக்கும் தருவாயில் மட்டுமின்றி இறந்த பின் அவரவரின் உலக வாழ்வின் நற்பயன்கள் நன்மையளிப்பதையும் ஆசிரியர் சக்கறாத்து நாமாவில் எடுத்துரைக்கின்றார்.

உலகி லணுப்போலச் செய்த குற்றம்
ஒன்றும் விடாமலே கேள்வி கேட்டு
நிலையாய்த் தராசிலே நன்மை தின்மை
நிறுப்ப தில்நன்மை கனத்த தானால்
தொலையா மகிழ்ச்சியு மின்ப முடன்
சொர்க்க பதவியு மிகவே யுண்டு
கொலையாம் பாவமும் கனத்த தானாற்
கொளுத்தி யெரிக்குவார் நரகத் துள்ளே

(சக்கறாத்து நாமா : 87)

எனவே சக்கறாத்து துன்பத்திலிருந்து விடுபடவும், சக்கறாத்துக் குப்பின் உள்ள இன்னல்களிலிருந்து விடுபட்டு சுவர்க்கப்பதியை அடைவதற்கும் இவ்வுலக வாழ்வில் மேற்கொள்ள வேண்டிய வழிமுறைகளை சக்கறாத்து நாமா வழிவகுத்துக் காட்டுகிறது. அல்லாஹ் மானுடர்களுக்கு நல்லது கெட்டது எனப் பிரித்துப் பார்க்கும் அறிவினை ஈந்தும் தன்னை (இறைவன்) மறந்த நிலையை ஆசிரியர் சுட்டுகின்றார். மானுடர்களைப் படைத்து வழிநடத்தும் அல்லாஹ்வின் கருணையை தாயின் கருணைக்கு உவமித்துக் கூறுகிறார் அப்துல் காதிர் சாயபு.

அன்னை யவள்பெற்ற பாலகன் மேல்
அன்பாய் பிரியம்வைத் திராப்ப கலும்
எவ்வித மாக வளர்க்கின் றாளோ
யெறும்பு ஈயொட்டா ததுபோ லவே
உன்னை யான்படைத் தேனவர்கள்
ஒப்புக் காயிரம் பாற்பிரியத்
தன்னை மறக்காத றஹ்மான்றஹீம்
தனியோ னாகிய வல்லவன்...
(சக்கறாத்து நாமா : 72)

சக்கறாத்து நாமாவில் முஸ்லிம்களின் சமுதாயப் பழக்க வக்கழங்களாக இறப்புச் சடங்குகள் தொடர்பான ஒவ்வொரு விஷயங்களும் விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன. ஆங்காங்கே பெருமானார் நபி (சல்) அவர்கள் பற்றிக் குறிப்பிடும்போது அன்னாரின் வாழ்வியல் வரலாற்று நிகழ்வுகளையும் ஆசிரியர் குறிப்பிடுகின்றார். ஒரு பாடலில் பெருமானார் நபி(சல்) அவர்கள் ஹபீபு ராஜாவின் வேண்டுகோளுக்கு ஏற்ப அமாவாசை இருளில் முழு மதியை அழைப்பித்துக் காட்டிய நிகழ்ச்சியை இவ்வாறு குறிப்பிட்டுள்ளார், ஆசிரியர்.

மக்க நகர்வாழு முஹம்ம தரை
மதியை யழைப்பித்த திருத்தூதரை
(சக்கறாத்து நாமா : 2)

இவ்வரலாற்று நிகழ்ச்சிகளை நபிகள் நாயகம் (சல்) அவர்களின் பெருமைதனை அறிவுறுத்திக் காட்டவே ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார். உள்ளடக்கம் என்ற நிலையில் சக்கறாத்து நாமா முஸ்லிம் மார்க்கக் கொள்கைகளையே எடுத்துரைப்பதாக உள்ளது. ஆசிரியர் அப்துல்காதிர் அவர்கள் சக்கறாத்து நாமாவில் கையாண்டிருக்கும் பாவினம் அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தமாகும். இது தொங்கல் என்னும் பாவினமாகக் குறிக்கப்பட்டுள்ளது. சக்கறாத் நாமாவில் ஆசிரியர் விளக்க நடையினை (Descriptive style) பயன்படுத்தியுள்

ளார். ஒவ்வொரு நிகழ்ச்சியையும் முஸ்லிம் அல்லாத சமூகத்தைச் சார்ந்தவர்களும் புரிந்து கொள்ளும் வண்ணம் எளிய சொற்களால் விவரித்துச் சொல்லுகிறார். சமூக பழக்க வழக்கங்களைக் குறிக்கும் போது அதனைக் குறிக்கும் அரபுச் சொற்களை யாப்பமைதி கெடாத வண்ணம் பயன்படுத்தியுள்ளார். இனி வரும் நாமா இலக்கியங்கள் தொடர்பான கருத்துக்களைச் சுருக்கிக் காண்போம்.

சக்கறாத்து நாமாவிற்கு அடுத்த நிலையில் தோன்றிய அகாயத் நாமாவை இயற்றியதும் சக்கறாத்து நாமாவின் ஆசிரியர் அப்துல்காதிர் அவர்களே ஆகும். இந்நாமா பாவாசாகிபு அவர்களால் திருநெல்வேலி பிரபாகர அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டுள்ளது. சிறந்த அறிவு எனப் பொருள்படும் அகாயித் என்பது 'கலாம்' எனவும் அழைக்கப்படுகிறது. இஸ்லாத்தின் ஈமான் என்னும் நம்பிக்கை பற்றிய விளக்கும் பகுதியாகும். இத்தகு முக்கியமான பகுதிகளே அகாயத் நாமாவில் உள்ளடக்கமாக இடம் பெற்றுள்ளன. இந்நாமாவில் இடம் பெறும் செய்யுள்களுக்கு இடையிடையே பொருளுக்குப் பொருத்தமான தலைப்புக்கள் இடம் பெற்றுள்ளன. ஒரே ஆண்டில் அதிகமான எண்ணிக்கையில் நாமா இலக்கியங்கள் வெளிவந்திருப்பது அகாயத் நாமா வெளியிடப்பட்ட வருடமான 1874 ஆகும். இதே ஆண்டில் அகாயத் நாமாவைத் தவிர்த்து ஐந்து நாமாக்கள் வெளிவந்துள்ளன. இபுலீசு நாமா என்ற பெயரில் இரண்டு நாமாக்கள் முறையே செய்யது ஆலிம் சாகிபு அவர்களாலும் செய்யிது அபூபக்கர்ப் புலவர் அவர்களாலும் இயற்றப்பட்டுள்ளது. கோட்டாறு செய்யிதபுபக்கர் புலவர் இயற்றியுள்ள இபுலீசு நாமாவிற்கு இரு பதிப்புக்கள் வெளிவந்துள்ளன. முதலாவது பதிப்பினை வரிசை முகியித்தீன் ராவுத்தர் பிரபாகர அச்சுக்கூடத்திலும் இரண்டாவது பதிப்பினை 1882-இல் ப. வெ. முகம்மது இபுறாகீம் சாகிபு மனோன்மணி விலாச அச்சுக்கூடத்திலும் பதிப்பித்துள்ளார்கள். இபுலீசு என்பது சாத்தான் என்பதற்கு இணையான சொல்லாகும். இச்சொல் நிராசையுறுதல் என்று பொருள்படும். 'பலஸ' என்னும் சொல்லிலிருந்து பிறந்ததாகும். இதன் நேரடியான பொருள் நிராசை அடைந்தவன் என்பதாகும். இப்லீஸ் அல்லாஹ்வின் பேரருளை விட்டு நிராசையுற்றதால் இப்பெயர் பெற்றான். இறைவனின் கட்டளைகளை ஏற்க மறுத்த காரணத்தினால் இப்லீஸிற்கு அல்லாஹ்வின் அருள் கிடைக்கவில்லை. அல்குர்ஆனில் ஏழு இடங்களில் இப்லீஸ் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. இதில் அல்லாஹ்வின் கட்டளையை அவன் ஏற்க மறுத்த செய்திகள் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் ஒன்றில் 'நாம் மலக்குகளை நோக்கி, ''ஆதமுக்கு நீங்கள் பணிந்து ஸுஜூது செய்யுங்கள்'' எனக்கூறியபோது அவர்கள் யாவரும் ஸுஜூது' செய்தார்கள். இப்லீஸைத் தவிர, அவனோ பெருமை கொண்டு விலகி நம்முடைய கட்டளையை நிராகரிப்பவனாகிவிட்டான்'

அல்குர்ஆன் (2 : 34) என திருகுர்ஆன் கூறுகிறது. இதன் மூலம் அல்லாஹ் கட்டளையை அவன் ஏற்க மறுத்தது பெறப்படுகிறது. இப்லீஸ் ஜின்களின் இனத்தைச் சார்ந்தவனாகும். இதனைப் பின் வரும் திருவசனத்தின் மூலம் அறியலாம். 'மலக்குகளை நோக்கி, ''ஆதமுக்குச் சிரம் பணியுங்கள்'' என்று நாம் கூறியதை நினைத்துப் பாரும். இப்லீஸைத் தவிர அவர்கள் யாவரும் சிரம் பணிந்தார்கள். அவனோ ஜின்களின் இனத்தைச் சார்ந்தவன். அவன் தன் இறைவ னுடைய கட்டளைக்கு மாறு செய்துவிட்டான்.' (18 : 50) எனவே அல்லாஹ்வின் கட்டளையை நிராகரித்தவனாகவும் ஜின்களின் தலை வனாகவும் இப்லீஸ் கருதப்படுகின்றான். இபுலீசு நாமா இரண்டுமே அவனது வரலாற்றினை உரைக்கின்றன. அல்லாஹ் இப்லீஸைப் படைத்தது, அவன் இறைவனின் கட்டளையை ஏற்க மறுத்த நிகழ்ச்சி கள் விரிவாக எடுத்துரைக்கப்படுகின்றன. எனவே இரு நாமாக்களும் இப்லீஸின் வரலாற்றினையே உள்ளடக்கமாகப் பெற்றுள்ளன. அரபுச் சொற்கள் அதிகமில்லை. செய்யிதபூபக்கர் புலவரின் இப்லீசு நாமா அம்மானைப் பாடல் முறையில் அமைந்துள்ளது. இதில் 632 கண்ணிகள் இடம் பெற்றுள்ளன.

1874-இல் வெளிவந்துள்ள அடுத்த நாமா முகம்மது இப்ராகீம் சாகிபு அவர்களின் தஜ்ஜால் நாமாவாகும். இந்நாமாவும் இப்லீஸ் நாமா போன்றே தஜ்ஜால் என்பவனின் வரலாறு பற்றிக் கூறுவதாகும். தஜ்ஜால் என்பதன் பொருள் பொய்யன் என்பதாகும். இப்பெயர் அல் குர்ஆனில் குறிப்பிடப்படவில்லை. அல்ஹதீஸ்கள் மட்டுமே தஜ்ஜால் பற்றிக் கூறுகின்றன. அண்ணல் நபி (சல்) அவர்கள் தமது காலத் திற்குப்பின் முப்பது தஜ்ஜால்கள் தோன்றுவர் என்றும் உலக முடிவு நாளின்போது தோன்றவிருக்கும் தஜ்ஜாலே மிகக் கொடியவன் என்றும் கூறி, அவனது கொடிய செயல்களிலிருந்து தப்பித்துக் கொள்ளுமாறு பல முறை முஸ்லிம்களைத் தம் அல்ஹதீதுகளின் வாயிலாக எச்சரித் துள்ளார்கள்.

மஸீஹுத் தஜ்ஜால் (Masihu'd-Dajjal) என்பவனே இறுதி தஜ்ஜாலாகும். தஜ்ஜால் என்பவன் கிறித்துவ மதத்தில் கிறிஸ்துவின் விரோதி எனக் கூறப்படுபவனுக்கு சமமாகும். சிரிய மொழியில் கிறிஸ் துவின் விரோதிக்கு 'மஸீஹெதஜ்ஜாலெ' என்ற சொல் பயன்படுத்தப் படுகிறது, இதேபோல் நபியென்று தம்மை வாதாடும் பொய்யர்களுக் கும் இம்மொழியில் 'நபியெதஜ்ஜாலா' என வழங்கப்படுகிறது. தஜ்ஜால்பற்றி அல்ஹதீதுக்களின் விமர்சனத்தில் பல்வேறு உருவகக் கதைகள் வழங்குகின்றன. இவன் மஸீஹுத் தஜ்ஜால் என ஹதீதுகளில் அழைக்கப்படுவதற்கும் பல்வேறு விளக்கங்கள் தரப்படுகின்றன. மஸீஹ் என்ற சொல்லுக்கு தொடக்கத்தில் அரக்கன் என்றே பொருள்

கொள்ளப்பட்டு வந்த காரணத்தினால் அத்தன்மைகள் பொருந்திய தஜ்ஜாலுக்கும் அவ்வாறு பெயர் கூறப்பட்டதாக காமூஸில் கூறப் பட்டுள்ளது. தஜ்ஜால் நாமா தஜ்ஜால் என்பவனின் அரக்கக் குணங் களையும் அவனால் இவ்வுலகுக்கு வரும் இன்னல்களையும் விவரிக்கின்றது.

அப்துல்காதர் சாகிபு அவர்களின் மற்றைய இருநாமாக்களான நஸீஹத்து நாமா, ஹக்கீகத் நாமா ஆகிய இரண்டும் 1874 ஆம் ஆண்டிலேயே வெளிவந்துள்ளன. நஸீஹத்து நாமா மேலும் இரு பதிப்புக்கள் 1879, 1886 ஆம் ஆண்டுகளில் வெளியிடப்பட்டுள்ளது. இப்பதிப்புக்களை அ. முகம்மதுசைன் சாயபும் த. இபுராகீம் சாயபும் இணைந்து முறையே பரப்பிரம்ம முத்திராக்ஷர சாலை அச்சுக்கூடத் திலும் சுந்தரவிலாச அச்சுக்கூடத்திலும் பதிப்பித்துள்ளார்கள். நஸீஹத்து என்பதன் பொருள் நேர்மையான அறிவுரைகள் என்பதாகும். இதன் பொருளுக்கு ஏற்ப இந்நாமாவில் இரு பிரிவுகளாக ஆண், பெண்களுக்கு ஏற்ற பல ஒழுகலாறும் அறிவுரைகளும் கூறப்பட்டுள்ளது. அன்றாட வாழ்விற்கு அவசியமான உணவு, உடை, உடல்ஆரோக்கியம் ஆகியவை சிறக்க மேற்கொள்ள வேண்டிய நடைமுறைகள் எடுத்துக்கூறப்படுகிறது. இல்லற வாழ்வு செம்மையாகவும், இல்லறத்தின் பயனாய் தோன்றும் வழித்தோன்றல்கள் சிறப்புப் பெறவும் பல்வேறு நல்வழிமுறைகள் நஸீஹத்து நாமாவில் இடம் பெற்றுள்ளது. இன்னின்ன கிழமை, மாதங்களில் இன்னின்ன ஒழுக்கங்களை இஸ்லாமிய நெறிக்கேற்ப மேற்கொள்ளப்படவேண்டும் என்பதும் சுட்டிக்காட்டப்படுகிறது. நஸீகத்து நாமாவில் குறிப்பிடத்தக்க இயல்பு, இந்நாமா உரைநடையில் அமைந்திருப்பதாகும். இதற்கு முந்திய நாமாக்கள் அனைத்தும் செய்யுள் வடிவத்தில் அமைந்திருக்க உரைநடை வடிவ நாமாக்களுக்கு முன்னோடியாக நஸீகத்து நாமாவே அமைந்துள்ளது. இதில் இடம் பெற்றிருக்கும் ஒல்வொரு அறிவுரையும் 'யாஅலி' என்னும் பதத்துடனேயே தொடக்கம் பெறுகின்றது. சான்றாக பின்வரும் பகுதி களைக் கூறலாம்.

யாஅலி! சனிக்கிழமை தினம் நகத்தை வாங்கும். அதனால் உடல் சுத்தியாகும்.

யாஅலி! பிறைகண்ட முதல் நாளும், 15-ம் நாளும் பெண்ஜாதி யுடன் சேரவேண்டாம் அந்த வேளையில் தரிக்கும் பிள்ளை புத்தி இல்லாதவனாய் கெட்டவனாகி விடும்.

யாஅலி! உஸ்தாதுக்கும் (ஆசிரியர்) அவருடைய பெண்ஜாதி பிள்ளைகளுக்கும் மிகுந்த கிருபை செய்யும். அதனால் இரண்டு

உலகத்தினுடைய பலனும் அல்லாஹுத் தஆலாவின் தீதாரும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமுடைய ஷபாஅத்தும் சுவர்க்க லோகத்தின் பலன்களும் நன்மைகளும் கிடைக்கும்.

யாஅலி! ஆறு காரியம் செய்ய வெட்கப்படவேண்டாம். அதில் முதலாவது தொழுது கொள்ளவும், 2-வது மஜ்லிஸில் சோறுண்ணவும், 3-வது அறிவுகள் படிக்கவும், 4-வது அறிவுகள் கேட்கவும், 5-வது ஹலாலாகிய பெண்ஜாதியுடன் சேரவும், 6-வது காபிர்களுடன் எதிர்த்து பீஸபீல் செய்யவும்

(நஸீஹத்து நாமா)

இவைபோன்ற பகுதிகள் ஒவ்வொரு முஸ்லிமாலும் பின்பற்றப்பட வேண்டியவைகளாக உள்ளன. ஹகீகத்து நாமாவிலும் நசீகத்து நாமா போன்றே பல்வேறு அறிவுரைகள் அடங்கியுள்ளன. ஹகீகத் என்பது உண்மை என்று பொருள்படும். இச்சொல் பொதுவாக ஆன்மீக நெறியின் படித்தரத்தைக் குறிக்கப் பயன்படுத்தப்படுகிறது. அல்லாஹ் வின் உண்மையான உள்ளுணர்வை ஒருவர் அடைய வேண்டுமானல், ஆன்மீக நெறியில் ஹகீகத் என்னும் படித்தரத்தை அடைய வேண்டும். அவ்வாறு அடைவதற்குரிய நல்லுரைகளை வழங்குகிறது இந்நாமா.

1874 ஆம் ஆண்டிற்குப்பின் அடுத்த நிலையில் நாமா இலக்கியங்கள் தொடர்வது 1876 ஆம் ஆண்டிலேயே ஆகும். இக் காலகட்டத்தில் மொ. து. சைகு யூசுபு அவர்களின் தஜ்ஜால் நாமா தோன்றியுள்ளது. தஜ்ஜால் நாமாவிற்கு 1876, 1878, 1882 ஆகிய ஆண்டுகளில் வெளி வந்த மூன்று பதிப்புக்களையும் அல்லாப்பிச்சைப் புலவரவர்கள் முறையே சுகவிரஞ்சறி முத்திராக்ஷரசாலை, பரப்பிரம முத்திராக்ஷரசாலை, மநோன்மணி விலாச அச்சுக்கூடம் ஆகியவற்றில் பதிப்பித்துள்ளார்.

முகம்மது இப்ராகீம் சாகிபு அவர்களின் தஜ்ஜால் நாமாவைப் போன்றே இந்நாமாவும் தஜ்ஜால் என்பவனின் வரலாற்றை நபி பெருமானார் (ஸல்) அவர்களுடன் இணைத்துக் கூறுகிறது. பெருமா னார் நபி (சல்) அவர்களின் திருமொழியான ஹதீதுகளில் உலக முடிவின்போது தஜ்ஜால் என்னும் பொய்யன் தோன்றுவதாக குறிக்கப் பட்டுள்ளது. ‘அல்லாஹ் எந்த நபியையும் தம் சமூகத்தினருக்கு தஜ்ஜாலைப்பற்றி அச்சுறுத்தச் செய்யாது அனுப்பவில்லை’ என்பது நாயகம்(சல்) அவர்களின் திருவசனமாகும். உலக முடிவு நாளின்போது மாபெரும் பொய்யனான தஜ்ஜால் என்பவன் தோன்றி தன்னுடைய சூழ்ச்சியால் உலக மக்களை நல்வழியில் இருந்து திசை திருப்பி அழிவுப் பாதைக்கு இட்டுச் செல்வான் என பெருமானார் நபி (சல்) அவர்கள் தம் அசுகாபிமார்களுக்கு எடுத்துரைத்துள்ளதாக, ஷரகி முஸ்லிம் (பக். 95) தெரிவிக்கின்றது. இத்தகு தஜ்ஜாலின் தனித் தன்மைகள்

பற்றி பல்வேறு கருத்துக்களை அல்ஹதீதுகள் தெரிவிக்கின்றன. தஜ்ஜாலினை தம் அசுகாபிமார்கள் அடையாளம் கண்டுகொள்ளத் தக்கவிதமாக அவன் பருத்த உடலினன், ஒரு கண் குருடானவன், உரத்த குரலினன், நெருப்பால் படைக்கப்பட்டவன், கதிரவன் மேற்குத் திசையில் தோன்றுவதற்கும் பத்து ஆண்டுகளுக்கு முன் யூத இனத்தில் தோன்றும் இவன் தன்னை இறைவனென்று கூறிக் கொள்பவன் ஆகும். இவனிடம் சொர்க்கம் நரகம் போன்று இரண்டும் இருக்கும். ஆனால் உண்மையில் இவன் காட்டும் நரகமே சுவர்க்க மாகும். சுவர்க்கமே நரகமாகும். இவன் தன் சூழ்ச்சியில் மக்களை தவறான பாதைக்கு இழுத்துச் செல்பவனாவான். இது போன்று தஜ்ஜாலின் நாற்பது இன அடையாளங்களை நபிகள் நாயகம் (சல்) அவர்கள் தம் அசுகாபிமார்களுக்குத் தம் அல் ஹதீதுகளில் எடுத்துரைத் துள்ளனர். இத்தகைய அடையாளங்கள் தஜ்ஜால் நாமாவில் விரிவாக எடுத்துக் காட்டப்படுகிறது.

அப்துல் வஹ்ஹாப் அவர்களின் பறுலுநாமா பிரின்ஸ் ஆப் வேல்ஸ் அச்சுயந்திர சாலையில் 1889 இல் முதற்பதிப்பு பதிப்பிக்கப்பட்டுள்ளது. இதற்கடுத்து 1899 இலும் இதே அச்சகத்தில் பதிப்பிக்கப்பட்டுள்ளது. பறுலு என்பது இஸ்லாத்தில் கடைப்பிடிக்க வேண்டிய கட்டாய கடமை களாகும். இவை இறை நம்பிக்கை, தொழுகை, நோன்பு, ஜகாத், ஹஜ் கடமை ஆகிய ஐம்பெரும் பகுதிகளாகும். இக்கடமைகளை நிறை வேற்றுதலே ஒரு முஸ்லிமின் கட்டாயக் கடமை. இதனையே 'பர்ளு' என்றழைப்பர். இந்நாமாவில் நபி நாயகத்தின் புகழ்ச்சியும், பற்லுவின் விளக்கங்களும் இடம் பெற்றுள்ளன. பற்லு நாமா, முனாஜாத்து நாமா, பற்லு நாமாவின் இரண்டாவது பதிப்பு முனாஜாத்து நாமா என்ற பெயரிலேயே வெளியிடப்பட்டுள்ளது. முனாஜாத்து என்பது பிறிதொரு இஸ்லாமிய இலக்கிய வகைக்கு பெயராக இருப்பினும் நாமா என்னும்பெயருடன் இணைந்து ஒருசில இலக்கியங்களில் மட்டுமே காணப் படுகின்றன. பற்லு நாமாவில் அடங்கியுள்ள செய்யுள்களில் சில, நாயகம் பெருமானார் (சல்) அவர்களைப் பற்றிய துதிப் பாடல்களாகவும், இன்றும் சில உலுவின் பற்லு பற்றிய விளக்கங்களாகவும் இடம்பெற் றுள்ளன. ஆங்காங்கே ஆசிரியர் வாழ்க்கை நிலை பற்றிய சிந்தனைக் கருத்துக்களையும் தம் செய்யுள்மூலம் எடுத்துக்காட்டுகிறார்.

பறுலு நாமாவிற்கு அடுத்த நிலையில் நூறுநாமா, முனாஜாத் நாமா என்ற இரு நாமா இலக்கியங்களும் முறையே 1898, 1899 ஆம் ஆண்டுகளில் வெளியிடப்பட்டுள்ளதாக அறிய முடிகிறது. நூறு நாமாவை குலாம் முகம்மது சாகிபு அவர்களும் முனாஜாத் நாமாவை முகம்மது இஸ்மாயில் சாகிபு அவர்களும் இயற்றியுள்ளார்கள். இரு நூல் கள் பற்றிய உள்ளடக்கக் கருத்துகளை நூல்கள் கிடைக்காததால் அறிய

முடியவில்லை. இதேபோல் 1908, 1909 ஆம் ஆண்டுகளில் ஊஞ்சல் நாமா. ஒளிவு நாமா ஆகிய இரு நாமா இலக்கியங்கள் தோன்றியிருப் பினும் அவைகள் பற்றிய முழுமையான விவரங்களை அறியமுடிய வில்லை. ஊஞ்சல் நாமா முகம்மது பஸ்னுல்லா சாகிபு அவர்களாலும், ஒளிவு நாமா முகம்மத் கமாலுத்தின் அவர்களாலும் இயற்றப் பட்டுள்ளன. இதற்கடுத்த நிலையில் 1910 ஆம் ஆண்டு தர்ஜுமா அர்பயீன் ஹதீஸ், மஅநஸீ ஹத்து நாமா என்றஒரு நாமா இலக்கியத்தை சாகுல் ஹமீது லெப்பை இயற்றியுள்ளார். இது சென்னை சாகுல் ஹமீதியா அச்சகத்தில் ஆசிரியராலேயே பதிப்பிக்கப்பட்டுள்ளது. உரைநடையில் அமைந்துள்ள இந்நாமா இலக்கியத்துள் பெருமானார் நபி (சல்) அவர்களது ஆயிரக்கணக்கான நல்லுரைகளுள் நாற்பது அருளுரைகள்மட்டும் விளக்கப்பட்டுள்ளது. ஆங்காங்கே பொருத்தமான அறிவுரைகளும் தரப்பட்டுள்ளன.

நூறு நாமா வெளியிடப்பட்ட 1911 ஆம் ஆண்டிலேயே லுக்மான் நாமா என்ற தலைப்பில் மேலும் இரு நாமாக்கள் இடம் பெறுகின்றன. இந்நாமாக்கள் இரண்டும் 'ஸஆதத்து நாமா' என்றும் அழைக்கப் படுகிறது. இவற்றுள் ஒன்றை பேட்டை ஆமூரைச் சார்ந்த வி. அப்துல் வகாப் சாகிப் அவர்களும் பிறிதொன்றை ஷேக் அகமது ஆலிம் சாகிப் அவர்களும் இயற்றியுள்ளார்கள். அப்துல் வகாப் சாகிப் அவர்களது நாமாவின் முதற்பதிப்பு சென்னை எட்வர்ட் பிரஸில் வாலை அப்துல் அமீத் சாகிப் மற்றும் சி. ஹாஜி நத்தர் சாகிப் ஆகிய இருவரா லும் 1911 ஆம் ஆண்டில் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இரண்டாவது பதிப்பினை 1912 ஆம் ஆண்டில் சென்னை ரஹ்மானி அச்சகத்தில் ஆசிரியரே பதிப்பித்துள்ளார். ஷேக் அகமது ஆலிம் சாகிப் அவர்களின் லுக்மான் நாமாவிற்கு ஒரு பதிப்பு மட்டுமே வெளியாகியுள்ளது. இதுவும் சென்னை எட்வர்ட் அச்சகத்தில் வி. அப்துல் ஹமீது சாகிப் மற்றும் சி. நத்தர் சாகிப் ஆகிய இருவராலும் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

செய்யுள் நடையில் அமைந்துள்ள இவ்விரு நாமாக்களின் உள்ள டக்கங்களும் லுக்மான் என்னும் முஸ்லிம் சமயப் பெரியார்பற்றிய கருத் துக்களைக் கொண்டுள்ளன. இஸ்லாத்தில் லுக்மான் ஒரு தத்துவ ஞானியாகவும் சமய மேதாவியாகவும் விளங்கினார். அல்லாஹ்வால் மெய்யறிவு அருளப்பெற்ற லுக்மானின் முழுப்பெயர் 'லுக்மான் ஹக்கீம்' என்பதாகும். அல்லாஹ் லுக்மானிற்கு ஞானம் அருளியதை திருமறை இவ்வாறு குறிக்கிறது. 'நிச்சயமாக, நாம், லுக்மானு'க்கு ஞானத்தைக் கொடுத்தோம். (அல்குர்ஆன் : 31 : 12) திருமறையின் 31 ஆம் அத்தியாயத்தில் உள்ள எட்டு திருவசனங்கள் (31 : 12-19) லுக்மான் பற்றியதாகவே உள்ளன. லுக்மான் பற்றி பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன. சிலர் இவர் இப்ராஹீம் (அலை) அவர்களின் தந்தை

ஆஸரின் மகன் பாஹூரின் (Baur) மகன் என்றும், ஐயூப் (அலை) அவர்களின் மருமகன் என்றும் குறிப்பிடுவர். இன்னும் சிலர் இவர் சிரியாவில் வாழ்ந்த ஓர் அடிமை என்றும், எதியோப்பியாவைச் சார்ந்த நூபியர் என்றும் கூறுவர். அரேபிய வரலாற்றாசிரியர்கள் அனைவரும் லுக்மான் பற்றிக் குறிப்பிடும்போது லுக்மான் நீதிக்கதை இயற்றுபவர் என்றும், பழமொழிகளை இயற்றும் ஓர் எழுத்தாளர் என்றும் குறிப்பிட்டுள்ளனர். லுக்மான்பற்றி வஹ்ப்பின் முனப்பிஹ் கூறும்போது 'லுக்மானுடைய அறிவுரைகளாக பதினாயிரம் அத்தியாயங்களைத் தாம் படித்திருப்பதாக குறிப்பிடுகிறார். இதேபோல் தஅலபி தம்முடைய மஜாலிஸில், லுக்மானின் அறிவுரைகள் பற்றி ஓர் அத்தியாயமே எழுதியுள்ளார். எனவே லுக்மான் ஓர் சிறந்த அறிவுப்பூர்வமான எழுத்தாளர் என்பதில் ஐயமில்லை. இத்தகு சமயப் பெரியார்பற்றியே 'லுக்மான் நாமா' இரண்டும் எடுத்துரைக்கின்றன. லுக்மான் நாமாவின் உள்ளடக்கக் கருத்துக்கள் லுக்மான் தம் மகனுக்குக் கூறிய சமய அறிவுரைகளாகவும், முஸ்லிம்கள் பின்பற்றவேண்டிய சமயக்கொள்கைகளின் விளக்கங்களாகவுமே உள்ளன. அல் குர்ஆனில் லுக்மான் பற்றிய திருவசனங்கள் லுக்மான் தம் மகன்களுக்குக் கூறிய அறிவுரைகள் என்றே குறிப்பிடுகின்றன. 'லுக்மான் தம் குமாரனுக்கு நல்லுபதேசம் செய்தபோது 'என்னருமை மைந்தனே! நீ அல்லாஹ்வுக்கு இணை வைக்காதே! (ஏனென்றால்) நிச்சயமாக இணைவைப்பது மகத்தான ஓர் அக்கிரமமாகும்' என்று கூறினார். (அல்குர்ஆன் : 31 : 13).

'(பின்னும் லுக்மான் தம் மைந்தனை நோக்கி,) ''என்னருமை மைந்தனே! (நன்மையோ தீமையோ) அஃதொரு கடுகளவாயினும் சரி, அஃது ஒரு கரும் பாறைக்குள்ளோ, அல்லது வானங்களிலோ...பூமியிலோ மறைந்து இருந்த போதிலும் (கணக்குக் கேட்கும்போது) நிச்சயமாக அதையும் அல்லாஹ் கொண்டு வந்துவிடுவான். ஏனென்றால் நிச்சயமாக அல்லாஹ் வெகு நுட்பமான அறிவுடையோனும் யாவையும் நன்கறிந்தோனுமாக இருக்கிறான்'' (அல்குர்ஆன் 31:16). "என்னருமை மகனே! நீ தொழுகையைக் கடைப்பிடித்தொழுகு. நன்மையான காரியங்களைக் கொண்டோ, பாபமான காரியங்களிலிருந்து (மனிதர்களை) விலக்கிவை. உனக்கேற்படும் கஷ்டங்களை நீ பொறுமையுடன் சகித்துக்கொள். செயல்களில் நிச்சயமாக இது மிக்க வீரமுள்ளதாகும்' (அல் குர்ஆன் 31 : 18). இவ்வாறு பல்வேறு இஸ்லாமியக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்ட கருத்துக்களை லுக்மான் தம் மகனுக்கு வழங்கியதாகவே அல் குர்ஆன் குறிப்பிடுகிறது. இது போன்ற நல்லுபதேசங்களையே லுக்மான் நாமா இரண்டும் எடுத்துரைக்கின்றன. லுக்மான் என்னும் சமயப் பெரியார் பற்றிப் பிற இஸ்லாமியத் தமிழிலக்கியங்களில் செய்திகள் இடம் பெறாதிருக்க நாமா இலக்கியங்கள் தனித்ததொரு முக்கியத்துவம் அளித்திருப்பது இந்நாமா இலக்கியங்களின் தனிச்சிறப்பெனலாம்.

லுக்மான் நாமா தோன்றியதிலிருந்து ஓராண்டு இடைவெளியில் தோன்றியதே இருஷாது நாமா. இந்நாமாவை காயற்பட்டணத்தைச் சார்ந்த சுலைமான் லெப்பை அவர்களின் குமாரர் ஷாமுனா லெப்பை அவர்கள் இயற்றியுள்ளார்கள். இருஷாது நாமா கண்ணகுமது மகுதூ முகம்மதுப் புலவர் அவர்களால் பார்வையிடப்பட்டுள்ளது. இதன் பதிப்பை மொ. அ. ஷாஹுல் ஹமீது லெப்பை தமது ஷாஹுல் ஹமீதிய்யா அச்சியந்திரசாலையில் 1912 ஆம் ஆண்டு பதிப்பித்துள்ளார். இருஷாது என்பதன் நேரடியான பொருள் நேர்வழி என்பதாகும்.

இருஷாது நாமாவில் இஸ்லாத்தின் ஐம்பெரும் கடமைகளுள் ஒன்றான இறைவழிபாட்டுக் கொள்கையான தொழுகையே நூல் முழுவதும் வலியுறுத்தப்பட்டுள்ளது. நாமாவின் தொடக்கத்தில் காப்பு-வெண்பா செய்யுள் ஒன்றுள்ளது. தாம் பாடும் இருஷாது நாமாவினை உலக மக்கள் எல்லோரும் இன்பமாக தானறிந்து நலம்பெற வேண்டும் என அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்யும் ஆசிரியர் அதன்பின் இறைத்தூதர் முகம்மது நபி மற்றும் அசுகாபி மார்களையும் நாடி வேண்டுகிறார். நூலின் தொடக்கத்தில் அமைந்த செய்யுளில் இருஷாது நாமா ஆசிரியர் பற்றிய விவரம் அறிய முடிகிறது.

காயற் றனில் வாழுஞ் சுலையு மானார் கருதும் புதல்வராம் சாமு லெப்பை
தூயதிரு நாமம் விளங்கச் செய்து துலங்கக் கலிமாவின் எடுவறிந்து
வாயு மெனமொற்று மென்மே லாக மலர்ப்பாதம் போற்றி யெளியோ னிதை
நாய னருளாலே நடப்பதென நவின்றேன் புவிதனில் நலம் பெறவே

(இருஷாது நாமா : 3)

இருஷாது நாமாவில் தாம் கூறப்போகும் செய்தியையும் ஆசிரியர் நூலில் தொடக்கத்திலேயே கூறிவிடுகிறார். ''ஆனஹாஷிமின் கிளையிலுள்ளோ ரன்பர் முகம்மது நபியுல்லாவும் ஞானமுள்ளவர் ஞானமுள்ள நல்ல வேதத்தின் கரைகண்டவர் ஈனமணுகாத இல்முடையோ ரேகன் றிருகாட்சி மிகப்பெற்றவர் தீனினபி சொன்ன தொழுகை தன்னை திரமா இருஷாதி லெடுத்தோதுவேன் (இருஷாது நாமா 7) இந்நாமா முழுக்க தொழுகையின் அவசியத்தையும் இஸ்லாத்தில் தொழுகைக்குரிய முக்கியத்துவத்தையும், அவ்வாறு தொழாதவர்கள் இம்மை, மறுமையில் அடையும் துன்பங்களையும் பலவேறாக ஆசிரியர் விவரித்துள்ளார். தொழுகைபற்றி அல்லாஹ் தன் திருமறையில் பல்வேறு இடங்களில் பல்வேறான நிலைகளில் வலியுறுத்துகின்றான். 'நீங்கள் தொழுகையைக் கடைப்பிடித்தொழுகுங்கள்..' (அல் குர்ஆன் 2:43) என்று கூறும் அல்குர்ஆனின் இருபத்தி மூன்றாவது அத்தியாயத்தை விசுவாசிகள் என்னும் தலைப்பின்கீழ் அளிக்கும்போது 'தங்கள் (விசுவாசிகள்)

தொழுகைகளையும் குறித்த காலத்தில் தவறாது கடைப்பிடித்தொழுகி வருவார்கள்' (23:9) என்றும் அடுத்து 'இத்தகையோர் தாம் மெய்யான அனந்தரக்காரர்கள்' (23:10) என்றும் குறிப்பிட்டுள்ளான். எனவே அல்லாஹ்வின் கட்டளைக்கேற்ப ஐந்து வேளையும் தொழுது வருபவர் களே இறைவனின் உண்மையான அன்பைப் பெற்ற விசுவாசிகளாகும். இத்தகு விசுவாசிகள் பெறும் பலனை ஷாமுனா லெப்பையவர்கள் இவ்வாறு குறிப்பிடுகின்றார்

கிடைக்கும் மதில் மூன்றாங்கருமங் கேளீர் கிருபை நபியுல்லா மன்றாட்டமும்
படைக்கும் பாலத்தில் மின்வெட்டிபோல் பரிவாய் நடத்திடும் பெலனாகவே
கொடைக்கொள் சுவற்கத்தில் பெரியவாழ்வுங் கோமான் தீதாறுங் காட்சி யுண்டாம்
சடைக்கும் நோய் பிணி மவுத்தில்லாமல் சதா காலமாய் வாழ்வீர்களே'
(இருஷாது நாமா : 23)

ஒருவரின் இறுதிநாளில் பெருமானார் நபி (சல்) அவர்கள் இறந்தவர் தம்முடைய உம்மத்தவராக (நாயகம் (சல்) அவர்களைப் பின்பற்றுபவர் கள்) இருப்பின் அவருக்காக அல்லாஹ்விடத்து பரிந்துரைத்து வேண்டு வார்கள். இதனையே தொழுகையை கடைப்பிடித்தொழுகுபவர் களுக்கு 'கிருபை நபியுல்லா மன்றாட்டம்' கிட்டும் என ஆசிரியர் மேற் சொன்ன செய்யுளில் குறித்துள்ளார். தொழுகையை மறந்தோர் பற்றியும், தொழுகையில் கவனமின்றி இருப்போர் பற்றியும் குறிப்பி டும்போது, ''தங்கள் தொழுகையில் பாராமுகமாயிருக்கும் நயவஞ்சக மான தொழுகையாளிகளுக்கும் கேடுதான்'' (107 : 4) என அல் குர்ஆன் உரைக்கிறது. எல்லாம் வல்ல அல்லாஹ்வின் நல்லருள் கிட்ட ஒரு வழியாக இருக்கும் தொழுகையை மறந்தோர் அடையும் கேடுகளை ஆசிரியர் இருஷாது நாமாவில் விரிவாக கூறுகிறார். நாமா வின் ஆரம்பத்திலேயே

அறிவுடன் றொழுகைதன்னை அதபுடன் றொழாதபேரை
நெறியுடன் துனியாமீதில் நெடியோனை மறந்தோர் தன்னை
பரிவுடன் புவியிலைந்தும் போமவுத்தினிலே மூன்றும்
குறியுடன் கபறில் மூன்றும் கியாமத்தில் மூன்றுமாமே.
மூன்றுடன் மூன்றுமூன்று முறையுடனைந்துங் கூட்டி
பூண்டதே பூண்டு பூண்டு பெரியவன் கோபமாகி
ஆடுடனாண்டுவாண்டு அசாபுகள் மிகவுண்டாக
ஏண்டவன் கொண்டுக்கொண்டு எறிவானே நரகவீட்டில்
(இருஷாது நாமா : 4 : 5)

மவுத்து என்பது இறப்பு என்றும், கபற் என்பது இறந்தவர்களை அடக்கம் செய்வதற்காகத் தோண்டப்படும் குழி என்றும், கியாமம் என்பது இறுதிநாள் என்றும் பொருள்படும். தொழுகை மறந்தோர்கள் இம்மூன்று நிலைகளிலும் கடும் துன்பத்தை அடைவார்கள் என்றே இச்செய்யுளில் வலியுறுத்தப்பட்டுள்ளது. இம்மூன்று நிலைகளில் மட்டுமல்லாது உயிருடன் இருக்கும்போதும் தொழுகையை மறந்தவன் அடையும் இன்னல்கள் பல.

அதிலே தானஞ்சு காரி யந்தான் அல்லா துனியாவி லாக்கிடுவான்
இதிலே முதலொன்றாங் கருமங் கேளீ ரிறங்கும் பறக்கத்து
மாறிப்போகும்
மதிதான் றேய்ந்திடும் வாறுபோல மனமுமிரணமுங் குறைந்து
போகும்
எதுலே யாகிலும் பலன்றராது யான் கெட்டேனென்று
வழுதுசாவான்.
(இருஷாது நாமா : 8)

தொழுகையை மறந்தவர் தம் வாழ்வு, இறப்பு, கபர்நிலை, இறுதிநாள் ஆகிய பல்வேறு நிலைகளில் அல்லாஹ்வின் அருள் கிடைக்காமல் அதன் காரணமாக பல்வேறு கொடிய இன்னல்களுக்கு உட்படுவதையே தொடர்ந்து ஆசிரியர் இருஷாது நாமாவில் விவரித்துள்ளார். தொழுகையின் அவசியத்தை வலியுறுத்த பல்வேறு சிறிய, சிறிய நிகழ்ச்சிகளை பலரது வாழ்விலிருந்து எடுத்துக்காட்டி விளக்கியுள்ளார். இந்த நிகழ்ச்சிகள் இருஷாது நாமாவில் கிளைக் கதைகள் போன்று இடம் பெற்றுள்ளன. சான்றாக, ஒரு தமையன் தன் தங்கையின் மவுத்திற்குப்பின் அவளை கபறில் அடக்கம் செய்துவிட்டு வந்தபின் தம் மடியில் இருந்த பணம் காணாத காரணத்தினால் மீண்டும் அடக்கம் செய்த கபறிற்குச் சென்று தோண்டிப் பார்க்கின்றான். அங்கு அவன் காணும் காட்சி அவனைத் திடுக்கிடச் செய்கிறது. வெடிக்கும் நெருப்புகள் தம், தங்கையை அடக்கம் செய்த கபறில் பார்த்து மனம் பதறி தம் தாயிடம் வந்து அவன் கண்ட காட்சியைக் கூறுகின்றான். தாயிடம் வினாவிய பின்பே தம் தங்கை ஐந்து வேளையும் சரியாகத் தொழாத நிலையே அவளின் கபற் சல்தானத்தின் நிலைக்குக் காரணம் என உணர்கின்றான். இந்நிகழ்ச்சியை ஷாமுனா லெப்பை தம் இருஷாது நாமாவில் உணர்ச்சி பொங்கும் வார்த்தைகளால் பாடியுள்ளார்.

வைத்துஅடக்கிபின் னெல்லோருமாய் வந்தாரவரவர்
மனையிடத்தே
மூத்தோன் மனையினுள் ளிருக்கும்போது வேங்கி திடுக்கிட்டு
மடியைப்பார்த்தான்
சேர்த்த மடிச்சிலைக் காணாதாலே தேடி கபரிடம் வந்துநின்று

மாத்தின் மண்ணதை தள்ளிப்போட்டு மூடும் பலகையை
யெடுக்கும்போது
வெடிக்க நெருப்புதான் கபர் நிறைந்து வெந்துபோகிற விறைத்தல்
கண்டு
துடிக்கப் பதைத்தவன் மண்ணைத் தள்ளி சேர்த்தான் றாயிடம்
மனையணுகி.

(இருஷாது : நாமா 26, 27)

இத்தகைய நிலைக்குரிய காரணத்தையும், இவ்வாறு நாமும் இருக்கக் கூடாது என்பதையும் பின்வருமாறு உணர்த்துகிறார்.

நினவாய் வகத்துடன் றொழுதுக்கொள்ளாள் நிலத்தில்
வேறொன்றுஞ் செய்ததில்லை
கனமா வகத்துடன் தொழாததினால் கபறில் நெருப்பது
வெரியலாச்சு
தினமா மூமின்கள் முகுலீம்களே தீக்கிவுணவாகிப் போகாமலே
மனமாத் தொழுகையை யைந்தொகுத்து மகிழ்ந்துத் தொழுவீர்கள்
வக்துடனே.

மூமின் என்பதன் பொருள் 'இறை நம்பிக்கையாளர்' என்பதாகும். வக்து, ஐவேளைத் தொழுகையின் அந்தந்த தொழுகைக்கென உரிய நேரத்தைக் குறிப்பதாகும். இறைவழிபாட்டிற்கென ஒதுக்கப்பட்ட நேரத்தில் இறைவனை முறையாக வழிபடல் வேண்டும் என்பது மார்க்கம் வலியுறுத்தும் கொள்கையாகும். எனவே இதற்கேற்ப இருஷாது நாமா ஆசிரியர் ஷாமுனா லெப்பை அவர்களும் தொழுகைக் குரிய முக்கியத்துவம் அந்தந்த நேரத்தில் நிவர்த்தி செய்யும்போதே சிறப்படைவதாக குறிப்பிடுகிறார். இருஷாது நாமாவில் மேற்குறித்த நிகழ்ச்சிகள் போன்று பல்வேறு நிகழ்வுகள் தொழுகை மறந்தோரின் நிலையை விளக்குவதற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இவ்வாறு பல்வேறு நிகழ்ச்சிகள் எடுத்துக் கூறப்படுவதால் இருஷாது நாமாவின் செய்யுள்கள் தொடர் நிகழ்வுகளாக இல்லை. ஆனால் நாமாவின் பாடுபொருள் முழுமையும் தொழுகை என்பது அடிநாதமாக ஒவ்வொரு செய்யுளிலும் விளங்குகிறது. தொழுகையின் முக்கியத்துவம் மூசா நபி [அலை] அவர்கள் போன்றோர் வாழ்வில் நடைபெற்ற வரலாற்றுச் சம்பவங்களை எடுத்துக்காட்டுவதன் [இருஷாது நாமா : 114-125] மூலமும் ஆசிரியர் விளக்குகிறார். இவ்வாறு பல்வேறு சம்பவங்கள் வரலாற்று நிகழ்வுகளின் மூலம் தொழுகையை வலியுறுத்தி நாமாவின் இறுதியில்

அல்லாபடைப்பான ஆண்பெண்ணோரே
அல்லாதனைத் தொழவுதவி செய்வான்
பொல்லாப் பெரும்பாவ முள்ளதினால்
பெரியோனிடமாக துஆச் செய்தால்
நல்லாதினந்தோறும் தொழுதுக் கொள்வாய்
நாயன் பிழையெல்லாம் பொறுத்திடுவான
வல்ல நபியுல்லா மன்றாட்டமும்
வல்லோன் தீதாறும் றஹ்மத்தாமே.

[இருஷாது நாமா : 186.]

றஹ்மத் என்பது நன்மை என்பதாகும். இருஷாது நாமாவில் காப்புச் செய்யுளும், இறுதியில் அமைந்துள்ள நூற்பயன் செய்யுளும் நீங்கலாக 186 தொங்கல் விருத்தப்பாக்கள் இடம் பெற்றுள்ளன. அரபுச் சொற்களை இடத்திற்கேற்ப மிகுதியாகவே ஆசிரியர் கையாண்டுள்ளார். உம்மா [27], வார்த்தைப்பாடு [37], விஜனப்பட்டு 12 போன்ற பேச்சுத் தமிழ் வட்டாரச் சொற்கலப்பு ஆங்காங்கே காணப்படுகின்றன. பல்வேறு நிகழ்வுகளை கிளைக்கதைகள் போன்று எடுத்துக்கூறி தாம் எடுத்துக்கொண்ட பாடு பொருளுக்கு அழுத்தம் தந்திருப்பது இருஷாது நாமாவில் குறிப்பிடத்தக்கது.

இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றில் தோன்றியுள்ள நாமா இலக்கியங்களுள் பெரும்பாலானவை இஸ்லாமிய கொள்கை விளக்க நாமாக்களாகவே உள்ளன. மேற்குறித்த 28 நாமாக்களுள் இஸ்லாமிய சமயத்தின் பல்வேறான சமயக் கொள்கைகள் எடுத்துக்கூறும் நிலையில் ஒன்று பட்டு பதிநான்கு நாமாக்கள் [நாமா : 3, 5, 9, 10, 12, 13, 14, 16 17, 18, 21, 22, 23, 24] காணப்படுகின்றன. இந்நாமாக்களில் பெரிதும் வலியுறுத்தப்படுவது இறைவணக்கம், தர்மம், ஈமான் என்னும் நம்பிக்கை முதலான சமயக்கருத்துக்களே ஆகும். எண்ணிக்கை என்ற நிலையில் தனிப்பட்டவர்களது வரலாற்றை அடிப்படையாகக் கொண்ட நாமாக்களே இரண்டாவது இடத்தைப் பெறுகின்றன. இந் நிலையில் ஒன்பது நாமாக்கள் [நாமா : 2, 6, 7, 8, 11, 19, 20, 26, 27] அடங்கும். தனிநபர் வரலாறு என்ற நிலையில் இருநாமாக்கள் இபுலீசு பற்றியும், இருநாமாக்கள் லுக்மான் பற்றியும் சமயப்பெரியார் பற்றியும் எடுத்துரைப்பனவாகும். இஸ்லாமிய தமிழிலக்கிய வரலாற்றில் உள்ள பல்வேறான இலக்கியப் பிரிவுகளிலும் தனிநபர் வரலாறு இடம்பெறுவதில் பெரும்பாலும் முக்கியத்துவம் பெறுவது அண்ணல் நபி (சல்) அவர்களது வாழ்க்கை வரலாறாகவே இருக்க, நாமா இலக்கியங்களுள் பெருமானாரின் வாழ்க்கையை அடிப்படையாகக்கொண்ட ஒருநாமாகூட தோன்றவில்லை என்ற இயல்பு பிற இஸ்லாமியத்

தமிழிலக்கியங்களிலிருந்து நாமா இலக்கியங்களில் காணப்படும் வேறு பட்ட பண்பு எனலாம். இதற்குக் காரணம் பெருமானாரின் அருளுரை கள் அனைத்து நாமாக்களிலும் பரவலாக இருப்பதால் தனித்த முறையில் வரலாற்று பிரதிபலிப்பாக நாமாவை இயற்றாதிருக்கலாம். மேலும் நாமா இலக்கியங்கள் அனைத்தும் பக்கம், பாடல் வரையறை களில் குறுகியே காணப்படுவதால், பெருமானாரின விரிந்துபட்ட வாழ் வியல் நிகழ்வுகளை பாடுவதற்கு முடியாது என்று கருதி முஸ்லிம் புலவர்கள் நாமா இலக்கிய வடிவத்தில் பெருமானாரின் வரலாறு பற்றி எடுத்துரைக்காமல் இருந்திருக்கவேண்டும். பொதுவான நிலையில் இருந்து ஆங்காங்கே இஸ்லாமியக் கருத்துக்களை எடுத்துக்காட்டி நாமா இயற்றும் வகையில் இரண்டு நாமாக்கள் [நாமா : 15, 25] உள்ளன. இவ்விரண்டும் ஊஞ்சல் நாமா என்ற தலைப்பிலேயே வெளி வந்துள்ளன. இந்நாமாக்கள் இரண்டும் நாட்டுப் புறப்பாடல் சாயலில் அமைந்துள்ளன. இஸ்லாமிய மார்க்கப் பெரியோர்களின் வாழ்வியல் நிகழ்வுகளில் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த ஏதாவது ஒரு நிகழ்ச்சியை மட்டும் அடிப்படையாகக் கொண்டு இரு நாமாக்கள் [நாமா : 1, 28] எழுந்துள்ளன. இவ்விரண்டில் ஒன்றுக்கு மிஃறாஜ் நிகழ்வும், பிறிதொன்றுக்கு கல்ஸர் ஆபரணம் வந்த வரலாறும் காரண மாகின்றன. இஸ்லாமிய சமூகத்தின் நடைமுறைப் பழக்க வழக்கங் களை பிரதிபலிக்கும் வகையில் ஒரே ஒரு நாமா [நாமா : 4] மட்டும் அமைந்துள்ளது. இது இறப்பு சடங்குகளை விவரிக்கும் சக்கறாத்து நாமாவாகும்.

நாமா இலக்கியங்களுள் ஒரே ஆசிரியர் அதிகமான நாமாக்களை இயற்றிய நிலையில் முதன்மை நிலையைப் பெறுபவர் அப்துல் காதிர் புலவராகும். இவர் நான்கு நாமாக்களை [நாமா : 4, 5, 9, 10] இயற்றியுள்ளார். இவருக்கு அடுத்த நிலையில் அப்துல் வஹாப் சாகிப் மூன்று நாமாக்களையும் [நாமா : 12, 19, 22], இப்ராஹிம் காதர் சாகிப் இரண்டு நாமாக்களையும் [நாமா : 25, 26] இயற்றி யுள்ளனர். இதேபோல் ஒரே பெயரில் ஒன்றுக்கு மேற்பட்ட ஆசிரியர் களால் இயற்றப்பட்டுள்ள பல நாமாக்கள் காணப்படுகின்றன. தொழுகை நாமா [3, 24] இபுலீசு நாமா [6, 7], தஜ்ஜால் நாமா [8, 11], நூறு நாமா [13, 18], ஊஞ்சல் நாமா [15, 25], லுக்மான் நாமா [19, 20] முதலான ஆறு தலைப்புக்களும் முறையே இருவேறு ஆசிரியர் களால் வெவ்வேறான காலக்கட்டத்தில் இயற்றப்பட்டுள்ளன நாமா இலக்கியங்கள் அதிகமாகத் தோன்றியுள்ள வருடம் 1874ஆம் ஆண்டே. இவ்வருடத்தில் ஆறு நாமாக்கள் [நாமா : 5, 6, 7, 8, 9, 10] தோன்றி யுள்ளன. இந்த ஆறு நாமாக்களும் ஒரே ஆண்டில் தோன்றியிருப்பி னும் குறுகிய கால எல்லை வித்தியாசம் இருக்கலாம். எனினும் இங்கு

இவற்றை ஒரே ஆண்டில் தோன்றிய நாமாக்கள் என்ற நிலையில் நாமாக்களின், பெயரினை அடிப்படையாகக்கொண்டு, அகரவரிசைப்படி இடம்பெறச்செய்துள்ளோம். அடுத்த நிலையில் 1911 ஆம் ஆண்டில் மூன்று நாமாக்களும் [நாமா : 18, 19, 20], 1912 ஆம் ஆண்டில் இரண்டு நாமாக்களும் (நாமா [21, 22] தோன்றியுள்ளன. இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றில் நாமா இலக்கியங்களின் கால எல்கை 199 ஆண்டுகளாகும். இவ்வெல்கைக்குள் தோன்றியுள்ள இருபத்தெட்டு நாமாக்களுள் உருவம் என்ற அடிப்படையில் வெகுசிலவே உரைநடை வடிவத்தினை சார்ந்துள்ளன. ஏனையவை அனைத்தும் செய்யுள் நடையில் அமைந்துள்ளன. செய்யுள் நடையில் அமைந்துள்ள நாமாக்களுள் அதிகமான பாடல் எண்ணிக்கையை கொண்டிருப்பது மிஃறாஜ் நாமாவாகும். செய்யுள் நடையில் அதிகமான ஆசிரியர்களால் கையாளப்பட்டிருக்கும் பாவகை வெண்பாவே.

நாமா இலக்கியங்களுள் பெரும்பான்மையானவைகள் அரபு, பாரசீகச் சொற்களையே தலைப்பாகப் பெற்றுள்ளன. அனைத்து நாமாக்களிலும் வெறும் அரபு, பாரசீகச் சொற்கலப்பு காணப்படுகிறது. இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாற்றில் நாமா இலக்கியங்கள் தோன்றத் தொடங்கியதிலிருந்து இன்றுவரை தமக்கென குறிப்பிட்டுச் சொல்லத்தக்க முக்கியத்துவத்தைப் பெற்றுள்ளன.

# கலம்பக இலக்கியங்கள்

தொல்காப்பியர் குறிப்பிடுவதுபோல் ''மருந்தே தானும் புதுவது கிளைத்த யாப்பின் மேற்றே'' (தொல். பொருள் : 540) என்னும் கூற்றிற்கிணங்க புதிய பல பொருள்களை எடுத்துரைப்பதற்காகப் பூத்த புதுவகையான சிற்றிலக்கிய வகையுள் ஒன்றே கலம்பகமாகும். இத்தகைய இலக்கியப் பிரிவு தமிழில் முதன்முதலில் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டிலேயே தோன்றியது. இது பல்லவ மன்னன் நந்திவர் களைப் பற்றிப் பாடப்பட்ட நந்திக்கலம்பகமாகும். இதனைப் பாடிய ஆசிரியர் பெயர் தெரியவில்லை. எதற்காகப் பாடப்பட்டது என்பதிலும் கருத்து வேறுபாடுகள் காணப்படிலும், இந்நூலின் செய்திகள் அனைத் தும் பல்லவ மன்னனின் புகழினை எடுத்துரைப்பதாகவே உள்ளன. எவ்வாறாயினும் கலம்பகம் என்னும் இலக்கியப் பிரிவு தமிழ் உலகில் தோன்றுவதற்கு இதுவே முன்னோடியானது என்பதில் ஐயமில்லை.

இத்தகைய கலம்பக இலக்கியங்கள் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டி லிருந்து இருபதாம் நூற்றாண்டு வரை தோன்றிப் பெருகியுள்ளன. இதுவரையில் நமக்குக் கிடைத்துள்ள சான்றாதாரங்களின் அடிப்படை யில் எண்பத்திஐந்து கலம்பகங்களைத் தமிழ் உலகம் பெற்றுள்ளது. எந்தெந்த நூற்றாண்டில் எத்தனை கலம்பகங்கள் தோன்றியுள்ளன என்பது கீழே தரப்பட்டுள்ளது.

| நூற்றாண்டு | கலம்பகங்களின் எண்ணிக்கை |
|---|---|
| 9 | 1 |
| 10 | 1 |
| 13 | 1 |
| 14 | 3 |
| 15 | 2 |
| 16 | 4 |
| 17 | 9 |
| 18 | 6 |
| 19 | 39 |
| 20 | 15 |
| வருடம் தெரியாதவைகள் | 4 |
| | 85 |

இவ்வெண்ணிக்கைகளை நோக்கும்போது 19, 20ஆம் நூற்றாண்டு களே கலம்பக இலக்கியங்கள் பெரிதும் தோன்றுதற்குத் துணை புரிந் திருக்கின்றன என்பது பெறப்படுகிறது.

## கலம்பகப் பெயர்க் காரணமும் - இலக்கணமும் விளக்கமும்

கலம்பகம் என்னும் இலக்கியப் பிரிவின் பெயர் காரணத்திற்குப் பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன. சிலர் இதனை வடசொல்லாகக் கொண்டு கலம்பகம் எனப் பிரித்து 'கலம்' என்றால் பன்னிரண்டு 'பகம்' என்பது அதனில் பாதி ஆறு ஆக மொத்தம் பதினெட்டு உறுப்பு களையுடையதாகக் கலம்பகம் என்பர். ஆனால் இக்கருத்து ஏற்புடைய தன்று. காரணம் பதினெட்டுக்கும் அதிகமான உறுப்புககளைப் பெற்ற பல இலக்கியங்களும், குறைவான உறுப்புக்களைப் பெற்ற பல இலக்கி யங்களும் கலம்பகம் என்னும் பெயரினையே பெற்றிலங்கு கின்றன. இத்தகைய சூழ்நிலைக்குச் சான்றினை இஸ்லாமியக் கலம்பகங்களிலிருந்தே எடுத்துக் காட்டலாம். சான்றாக திருக் கோட்டாற்றுக் கலம்பகத்தையும், மதீனா கலம்பகத்தையும் எடுத்துக் கொள்வோமேயாகில் முன்னையதில் இருபத்திரெண்டு உறுப்புகளும், பின்னையதில் பதிமூன்று உறுப்புகளும் இடம் பெற்றிருப்பினும் இரண் டுமே கலம்பகமென அழைக்கப்படுகின்றன. எனவே உறுப்பின் அடிப் படையில் கலம்பகம் என்னும் பெயர் அமைந்தது என்பது ஏற்றுக் கொள்ள முடியாததாகின்றது.

பிறிதொரு நிலையில் காணப்படும் பெயர்க்காரணம் கலப்பு+அகம் என்பது கலம்பு+அகம் என்றாகிப் பின் கலம்பகம் என்று ஒன்றாகி இருக்கவேண்டும் என்பதே ஆகும். இங்கு 'கலப்பு' என்பது பல்வேறு பொருள்களும், யாப்புக்களும் ஒரே இலக்கியத்தில் இடம் பெற்றிருக்கும் நிலையைக் குறிப்பதே ஆகும். அனைத்துத் தமிழ்க் கலம்பகங்களையும் நோக்கும்போது. அவற்றில் பல்வேறு பொருள்களும் யாப்பு வகைகளும் கலந்திருத்தலால் இக்கருத்து ஏற்றுக் கொள்ளத்தக்கதே ஆகும். மேலும் மொழியியல் அடிபபடையில், எளிமை கருதி மொழியில் இரட் டித்த வல்லினம் இன மூக்கின வல்லினமாக, செப்பு என்பது செம்பு என்று மாறுவதுபோல் கணி கலப்பு என்பது கலம்பு என மாறியுள்ளது எனக் கொள்ளலாம்.

கலம்பக இலக்கியத்திற்குரிய இலக்கண வரையறையை முதன் முதலில் செய்த இலக்கண நூல் கி. பி. 12ஆம் நூற்றாண்டிற்கு முன் தோன்றிய பன்னிரு பாட்டியலாகும். கலம்பக இலக்கியங்களுக்குப் பன்னிரு பாட்டியல் இருவிதமான இலக்கண வரையறையைக் காட்டுகிறது, (1) உறுப்புகள் யாப்பு பற்றிய வரையறை (2) பாடல் களின் எண்ணிக்கை தொடர்பான வரையறை.

முதலாவதாக ஒரு போகு, வெண்பா, கலித்துறை ஆகியவை முத லுறுப்பாக அமைய, 1. புயம், 2. அம்மானை, 3. ஊசல், 4. யமகம், 5. களி, 6. மறம், 7. சித்து, 8. காலம், 9. மதங்கு, 10. வண்டு, 11,

மேகம், 12. மருள், 13. சம்பிரதம், 14. தவசு ஆகிய பதினான்கு உறுப்புகளுடன், வெண்டுறை, வஞ்சித்துறை அகவல் விருத்தம் ஆகிய செய்யுட்கள் கலந்து அந்தாதித் தொடர்புடன் வருவது கலம்பகமாகும் (பன்னிரு பாட்டியல் : 45). ஆனால் உரையாசிரியர்கள் பாண், ஊர், தழை, இரங்கல் ஆகிய நான்கு உறுப்புகளையும் சேர்த்துக் கூறுவர் (பன்னிரு பாட்டியல் : கா. ர. கோவிந்தராசு முதலியார் உரை : பக். 63) பெரும்பாலான இலக்கண நூல்களும் இப்பதினெட்டு உறுப்புகளை மட்டுமே கலம்பகத்தின் உறுப்புகளாகக் குறித்துள்ளன. பிற்காலத்தில் தோன்றிய பிரபந்த மரபியல், முத்துவீரியம், பிரபந்த தீபிகை போன்ற பாட்டியல் நூல்கள் குறம், தூது, கார், காற்று முதலானவற்றையும் கலம்பகத்தின் உறுப்புகளாகச் சேர்த்துக் கூறுகின்றன. கலம்பக உறுப்புக்களை வரையறை செய்வதில் இலக்கண நூல்களுள் காணப்பெறும் மாற்றங்களுக்குக் காரணம் பிற்காலங்களில் தோன்றிய கலம்பக இலக்கியங்களின் வளர்ச்சியே ஆகும். பிற்காலத்தில் குறிப்பாக 19ஆம் நூற்றாண்டில் தோன்றிய கலம்பக இலக்கியங்களுள் இலக்கணப் பாட்டியல் நூல்களில் குறிப்பிடாத பல்வேறு கலம்பக உறுப்புக்கள் இடம் பெற்றுள்ளமையைக் காணமுடிகின்றது. யோகினியார், பிச்சியார், கொற்றியார், வலைச்சியார், இடைச்சியார், கீரையார், வெறிவிலக்கு, பள், பாதவகுப்பு, மடல், ஆற்றுப்படை, சிலேடை போன்ற உறுப்புகளும் கலம்பக இலக்கியங்களில் பிற்கால வளர்ச்சியாக இடம் பெற்றுள்ளன என்று கலைக்களஞ்சியம் குறிப்பிடுகிறது எனவே ஒரு இலக்கியத்தில் இத்தனை உறுப்புக்கள் தான் இடம் பெற்றிருக்க வேண்டும் என்பதை அறுதியிட்டுக் கூற முடியாது.

பொதுவாகக் கலம்பக இலக்கியத்தில் பாடுபொருள் என்பது இறைவன், அரசன், முனிவர் அல்லது ஆசிரியர் ஆகிய இருவருள் யாரேனும் ஒருவரைப் பாட்டுடைத் தலைவராகக்கொண்டு புகழ்ந்து பாடுதலாகும். இவ்வாறிருக்க பாட்டுடைத் தலைவர்களின் மாறுபாட்டிற்கேற்ப பாடல்களின் எண்ணிக்கையும் கலம்பக இலக்கியத்துள் மாறி அமைய வேண்டும் என்பது மற்றொரு இலக்கண அமைதியாகும். ஒரு கலம்பக இலக்கியம் தேவருக்குப் பாடப்படுவதாயின் 100, அந்தணர்க்கு 95 அரசர்க்கு 90, அமைச்சர்க்கு 70 வணிகர்க்கு 30 பாடல்களுடனும் அமையப் பெற வேண்டும் என்பது பன்னிரு பாட்டியல் (சூத்திரம் : 46) காட்டும் விதியாகும். இவ்வரையறை தமிழ்ச் சமூக அமைப்பில் இருந்த சமுதாயப் படிநிலைகளைத் தெளிவாக நமக்குக் காட்டி நிற்கின்றன. கலம்பகத்திற்குரிய உறுப்பு, மற்றும் பாடல்களின் எண்ணிக்கை பற்றிய வரையறைகள் தமிழ்க் கலம்பகங்கள் பலவற்றிலும் பின்பற்றப்படவில்லை என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

## இஸ்லாமியக் கலம்பகங்கள் ஓர் அறிமுகம்

தமிழ்ச் சிற்றிலக்கியங்களின் பல்வேறு பிரிவுகளிலும் தங்கள் இலக்கிய ஆக்கத்தினைச் செலுத்திய முஸ்லிம் புலவர்களின் எண்ணத்திலிருந்து கலம்பக இலக்கியப் பிரிவும் தப்பி விடவில்லை. எண்பத்தி

ஐந்து கலம்பகங்களைத் தன்னகத்தே பெற்றுள்ள தமிழ் மொழியில் இஸ்லாமிய சமயத்தைச் சார்ந்தனவாக மக்காக் கலம்பகம், மதீனக் கலம்பகம், திருமதீனக் கலம்பகம், பதாயிகு கலம்பகம், குவாலீர் கலம்பகம், திருக்கோட்டாற்றுக் கலம்பகம், திருபகுதாதுக் கலம்பகம் முதலான ஏழு கலம்பகங்கள் அடங்கியுள்ளன.

மேற்குறித்துள்ள இஸ்லாமியக் கலம்பகங்களுக்கிடையே உருவ, உள்ளடக்க நிலையில் சிற்சில ஒற்றுமைகளும் சிற்சில வேறுபாடுகளும் காணப்பெறுகின்றன. இக்கலம்பகங்கள் அனைத்தும் காலத்தால் பத்தொன்பதாம் நூற்றாண்டினையே சார்ந்துள்ளன. இதேபோல் நூற்பெயரில் இக்கலம்பகங்கள் அந்தந்தக் கலம்பகங்களின் பாட்டுடைத் தலைவர் வாழும் நகரங்களின் பெயரினைப் பெற்றுத் திகழ்வதிலும் ஒன்றுபட்டுக் காணப்படுகின்றன. உள்ளடக்கச் செய்தியைப் பொறுத்த வரையிலும் இஸ்லாமிய மார்க்கக் கருத்துக்களை எடுத்துரைப்பதில் ஒன்றுபட்டுக் காணப்படினும் அவற்றை எடுத்துக் காட்டும் பின்புலங்கள் அந்தந்தக் கலம்பகத் தலைவரின் இயல்புகளுக்கும் அவர்கள் வாழ்ந்த நகரங்களின் சிறப்புத் தன்மைகளுக்கும் ஏற்ப வேறுபட்டுள்ளன. உருவத்தால் ஒவ்வொரு கலம்பகமும் வெவ்வேறான யாப்பு வகைகளைப் பெற்று வருகின்றன. இக்கலம்பகங்கள் ஏழாக இருந்தபோதிலும் அவற்றின் ஆசிரியர்கள் ஆறு பேர்களே ஆவர். காரணம் பதாயிகு, குவாலீர் ஆகிய இரு கலம்பகங்களின் நூலாசிரியரும் ஒருவராவார். இஸ்லாமியத் தமிழ்க் கலம்பகங்களின் நூலாசிரியர்கள் என்ற நிலையில் இங்குக் குறிப்பிடத்தக்க பிறிதொரு அம்சம் உண்டு திருக்கோட்டாற்றுக் கலம்பகம் தவிர்த்த ஏனைய கலம்பகங்களின் நூலாசிரியர்கள் முஸ்லிம்களாக இருக்க, இதன் நூலாசிரியர் மட்டும் ஒரு முஸ்லிம் அல்லாதவராக இருப்பதாகும். ஏழு இஸ்லாமியத் தமிழ்க் கலம்பகங்களையும் ஒன்றன்பின் ஒன்றாகக் காண்போம்.

## மக்காக் கலம்பகம்

இக்கலம்பகம் இஸ்லாம் மதத்தின் ஏகோபித்த முதல்வனுகிய அல்லாஹ்வின் திருத்தூதராம் பெருமானார் நபிகள் நாயகம் (சல்) அவர்களைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டுள்ளது. நபி என்னும் அறபுச் சொல் உயர்த்தப்பட்டவர் என்று பொருள்படும். இறைவனிடமிருந்து 'வஹீ' (இறைச் செய்தி) மூலம் இறைக் கட்டளையைப் பெற்றுத் தருபவர்கள் நபி என்று அழைக்கப்படுகிறார்கள். 'வஹி' பெற்று வருவது நபியின் தனிச் சிறப்பாகும். எனவே அல்லாஹ்வால் மக்களுக்கு நேர்வழி காட்டுவதற்காக அனுப்பி வைக்கப்பட்ட திருத்தூதர்களுக்கே நபி என்னும் சொல் பயன்படுத்தப்படுகிறது. தான் ஒருவன், உருவமற்றவன், தன்னையே வணங்க வேண்டுமென்பதை மக்களுக்கு உணர்த்துவதற்காக அல்லாஹ் இவ்வுலகிற்கு 1,24,000 நபி

மார்களை அனுப்பி வைத்ததாக ஹதீதில் (நபியின் பொன்மொழிகள்) கூறப்பட்டுள்ளது. இவ்வரிசையில் முதலில் தோன்றியது ஆதம்(அலை) அவர்களாவர் இறுதியாகத் தோன்றியவரே நபிகள் நாயகம் (சல்) அவர்களாவர். இறுதித் தூதரான நபி (சல்) அவர்கள் கி. பி. 571 ஏப்ரல் 20ஆம் நாள் திங்கட்கிழமை காலை 5-30 மணிக்கு மக்காவில் பனூ ஹாஷிம் கிளையில் பிறந்தார்கள். இவர்களின் வாழ்வும், வாக்கும் திருக்குர்ஆனுக்கு விளக்கமாகவே அமைந்தது. இவருக்கு முன் தோன்றிய 1,24.000 நபிமார்களின் செயல்களை நிறைவு செய்த பெருமை இவரையே சாரும். இஸ்லாத்தை இவ்வுலகில் நிலைநாட்டிய பெருமையும் பெருமானார் நபி (சல்) அவர்களையே சாரும். இஸ்லாத்தில் இத்தகு சிறப்புப் பெற்ற நாயகம் (சல்) அவர்களே மக்காக் கலம்பகத்தின் பாட்டுடைத் தலைவர். இஸ்லாத்தின், திருக்குர்ஆனின் வாழ்வுக்கு ஒரு வழிகாட்டியாக விளங்கும் அன்னாரின் திருப்பெருமைகள் இக்கலம்பகத்தில் விதந்தோதப்படுகின்றன.

இத்துடன் நாயகம் (சல்) அவர்கள் பிறந்ததும் இஸ்லாமியர்களின் பிறவிப் பயனுள் ஒன்றாகக் கருதக்கூடிய புனித ஹஜ் யாத்திரை நிறைவேற்றக்கூடிய புண்ணியத் தலமுமாகிய மக்கா நகரின் எழில் பெருமைகளும் இந்நூலின்கண் விரித்துரைக்கப்படுகின்றன. இஸ்லாத்தின் முதல் புண்ணிய நகரமான இது அறேபியாவிலுள்ள ஹிஜாஸ் மாநிலத்தில் உள்ளது. உலகில் தோன்றிய முதல் நகரம் இதுவாகவே இருப்பதால் 'இது உம்முல் குரா' (நகரங்களின் அன்னை) என்றும் அழைக்கப்படுகிறது. இங்குதான் முதல் நபியாகிய ஆதமவர்கள் அலை) இறை ஆணைப்படி தொழுவதற்காக முதல் ஆலயமாகிய கருபாவை நிறுவினார்கள், நபி இப்றாகிம் (அலை) அவர்கள். இங்கு கருபாவை நிர்மாணித்து இதனை புனித நகரமாக மாற்றி இங்கு வந்து மக்களை ஹஜ் செய்ய அழைத்ததிலிருந்து ஏராளமான முஸ்லிம் மக்கள் வரலாயினர். மக்காவிற்கு வந்து செல்வதான ஹஜ் என்னும் புனித யாத்திரை இஸ்லாமியரின் அடிப்படையான ஐந்து கடமைகளுள் ஒன்றாகும். இஸ்லாத்தின் இத்தகு சிறப்புப் பெற்றுள்ள இந்நகரத்தின் பல்வேறு சிறப்புக்கள் மக்காக் கலம்பகப் பாடல்களில் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. 'நகரங்களின் தாய்' என அல்குர்ஆனில் அழைக்கப்பட்டுள்ள மக்கா நகர் வாழ் மக்களது நற்குணங்களும், இயல்புகளும் இந்நூலின்கண் விதந்தோதப்பட்டுள்ளன.

மக்காக் கலம்பகத்தில் காப்புச் செய்யுள் நீங்கலாக தொண்ணூற்றியேழு பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இஃது செய்கு அப்துல் காதிறு நெய்னார் லெப்பை ஆலிம் புலவர் அவர்களால் பாடப்பட்டு பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வெளியிடப்பட்டிருக்க வேண்டும்,

## மதீனாக் கலம்பகம்

மதீனக் கலம்பகமும் அண்ணல் நபிகள் நாயகம் (சல்) அவர்களையே பாட்டுடைத் தலைவராகப் பெற்றுள்ளது. பெருமானார் (சல்) அவர்களை இவ்வுலகிற்குத் தந்துதவிய மக்கமா நகரம் முஸ்லிம்களுக்கு எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்ததோ அந்த அளவிற்கு இணையான சிறப்பும் முக்கியத்துவமும் மதீனா நகருக்கும் உண்டு. மதீனா என்பதின் பொருள் பட்டணம் என்பதாகும். இதுவும் சவூதி அறேபியாவிலுள்ள ஹிஜாஸ் மாநிலத்தில் உள்ளது. நாயகம் (சல்) அவர்கள் மக்காவிலிருந்து வலசை கிளம்பி வந்து இந்நகரில் குடியேறியபின் நபியின் பட்டணம் என்ற பொருளில் 'மதீனத் துன்நபீ' என்னும் பெயரைப் பெற்று பிற்காலத்தில் சுருக்கமாக மதீனா என்று அழைக்கப்பட்டது. இந்நகரில்தான் அண்ணல் நபி (சல்) அவர்கள் அடங்கப் பெற்றுள்ள 'ரௌலா ஷரீஃப்' உள்ளது. இது கஃபாவைப்போல் சிறப்புப் பெற்றதாகும். மக்காவைப்போல் இருமடங்கு இதன்மீது பரக்கத் (பேரருள்) பொழியுமாறு அண்ணல் நபி (சல்) அவர்கள் இறைவனிடம் இறைஞ்சியுள்ளார்கள். அதனுல் அல்லாஹ்வின் அருள்மாரி இங்கு பெருமளவில் பொழியப்படுகிறது. ஹஜ் நிறைவேற்ற வருபவர்கள் நாயகம் (சல்) அவர்களின் அடக்கவிடத்தை சியாரத் (தரிசித்தல்) செய்து மறுமையில் அவர்களின் ஷஃபாஅத்தைப் (பரிவுரையை) பெறுவதற்காகவும் இங்கு வந்து கூடுகிறார்கள். முகம்மது நபி (சல்) அவர்கள் தாம் பிறந்த மக்கா நகரிலிருந்து மதீனா நகர் சென்றமையே 'ஹிஜ்றத்' என அழைக்கப்படுகிறது. இஸ்லாத்தின் முறையான வரலாற்றுத் தொடக்கம் ஹிஜ்ரத் பயணத்திற்குப் பின்தான் ஆரம்பமாகிறது. இத்தகைய முக்கியம் வாய்ந்த மதீனா நகரத்தின் எழில் பெருமைகள் இக்கலம்பகத்தில் பின்புலமாக அமைந்துள்ளன. இந்நகரின் சிறப்புக்கள் பல்வேறு செய்யுள்களில் பாடுபொருள்களாக அமைந்துள்ளன.

ஆரம்ப நிலையில் பெருமானாரின் (சல்) புனிதப் போதனைகளை ஏற்றுக்கொள்ள மறுத்த மக்கா நகர்வாசிகள் நாயகத்தை (சல்) பல்வேறு இன்னல்களுக்கும் உட்படுத்தி, பின் மக்கா நகரிலிருந்து துரத்திய போது அவர்களை வரவேற்று, புகலிடமளித்து, புனித இஸ்லாத்தின் போதனைகளை முதன் முதலில் ஏற்றுப் போற்றியது மதீனா நகர் வாழ் மக்களாவர். இதனால் இவ்வூர் மக்களே இறுதி நாளில் முதன் முதலாக எழுப்பப் பெறுவர். அவர்களே முதன் முதலாக அண்ணல் நபி (சல்) அவர்களின் பரிவுரையைப் (ஷஃபாஅத்தை) பெறுவர். இத்தகு சிறப்புப் பெற்றுள்ள மதீனா நகர் மக்களின் ஈகை குணங்களும், செயல்களும் இக்கலம்பகத்தில் விரித்துரைக்கப்படுகின்றன.

இக்கலம்பகத்துள் காப்புச் செய்யுள் நீங்கலாக நூற்றிரெண்டு பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இதனை இயற்றியவர் ஜீவரத்தினக்

கவிராஜர் அவர்கள். இவர் அதிவீரராமன் பட்டணத்தைச் சார்ந்தவர். இக்கலம்பகம் கி. பி 1895ஆம் வருடம் வெளியிடப்பட்டுள்ளது.

## திருமதீனக் கலம்பகம்

மதீனக் கலம்பகம் போன்றே இக்கலம்பகத்திலும் பாட்டுடைத் தலைவராக நாயகம் (சல்) அவர்களே அமைந்துள்ளார்கள். இக்கலம் பகத்தின் பாடுபொருளும் பின்புலமும், மதீன நகர் பற்றியும், அந்நகர் வாழ் மக்கள் பற்றியும் உள்ளது. இக்கலம்பகத்துள் காப்புச் செய்யுள் நீங்களாகநூறு பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இதன் ஆசிரியர் ஆ. கா. பிச்சையிபுறாகீம் புலவர் இவர் அரசங்குடியைச் சேர்ந்தவர் எனினும் தமது பெரும்நாட்களை திருச்சியிலேயே கழித்துள்ளார். நாகூர் பிள்ளைத் தமிழ், மஹ்பூப் சுப்ஹானி மாலை, நாயகத் திருப்புகழ், நத்ஹறொலி ஆண்டகை பிள்ளைத் தமிழ், திருமதீனத்து மாலை, திருமதீனத்து யமகவந்தாதி, திருமதீனத்துப் பதிற்றுப் பத்தந்தாதி போன்ற நூல் களையும் படைத்துள்ளார். திருமதீனக் கலம்பகம் 1894இல் பிரசுரிக் கப்பட்டுள்ளது.

## பதாயிகு கலம்பகம்

இக்கலம்பகம் ஹலறத்து சுல்தானுல் ஆரிபீன் சையிது அகமதுல் கபீர் றலியல்லாகு அன்கு ஆண்டவரவர்களைத் துதித்து அவர்கள் மறைந்து விளங்குந்தலமாகிய பதாயிகு நகரத்தின் பேரில் பாடப்பட்ட தாகும். சையிது அஹ்மதுல் கபீர் றலியல்லாகு அன்கு அவர்கள் இஸ்லாமிய மார்க்கத்தின் இறைநேசச் செல்வர்களுள் ஒருவராவர். சையிது என்பதன் பொருள் தலைவர் என்பதாகும். பிறப்பாலும் பண்பாலும், ஒழுக்கத்தாலும், உடைமையாலும் மேலானவரையே இச்சொல் குறிக்கும். மேலும் இஸ்லாம் மார்க்கத்தில் பெருமானார் நபிகள் நாயகம் (சல்) அவர்களின் வழித் தோன்றல்களைக் குறிக்கவும் இச்சொல் பயன்படுத்தப்படுகிறது. இவர்கள் பச்சை நிறத் தலைப் பாகை அணிந்து கொள்ளும் உரிமையையும் பெற்றிருந்தனர். இத்தகு சிறப்புப் பெற்ற இறைநேசச் செல்வரான சையிது அகமதுல் கபீர் அவர் களின் புகழ் நூலெங்கும் பதாயிகு கலம்பகத்தில் விரிவாக எடுத்துரைக் கப்படுகிறது.

பாட்டுடைத் தலைவர் அடக்கம் செய்யப்பட்ட இடமான பதாயிகு நகரத்தின் பெருமைகளையும் ஆசிரியர் கலம்பக இலக்கணத்திற்கேற்ப கலம்பக உறுப்புக்களின் மூலமாக இந்நூலில் எடுத்துக்காட்டியுள்ளார். இக்கலம்பகம் காப்புச் செய்யுள் நீங்கலாக நூறு பாடல்களைக் கொண் டுள்ளது. இதனை இயற்றியவர் நாகூர் தர்கா மகாவித்துவான் வா. குலாம் காதிறு நாவலர். இந்நூலாசிரியர் நாகூரில் பிறந்து

வளர்ந்தவர். மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளையிடம் தமிழ் பயின்றவர். மதுரைக்கோவை, பிரபந்தத் திரட்டு, நாகூர்ப் புராணம், ஆரிபு நாயகம், கன்ஜுல் கறாமாத்து, திருமக்காத் திரிபந்தாதி, முகாஷபா மாலை, ஆரிபு நாயக வசனகாவியம், ஆகிய இன்ன பிற நூல்களையும் எழுதியுள்ளார். பதாயிகு கலம்பகம் கி.பி 1900 இல் வெளியிடப்பட்டுள்ளது.

## குவாலீர்க் கலம்பகம்

இக்கலம்பகம் குலாம் காதிறு நாவலரவர்களின் மற்றொரு படைப் பாகும் கவுது என்னும் பெயரால் அழைக்கப்படும் அவுலியாவே (இறைநேசச் செல்வர்) இக்கலம்பகத்தின் பாட்டுடைத்தலைவர். 'கௌது' என்னும் அறபுச் சொல்லின் பொருள் உதவி. விடுதலை என்பதாகும் இறைநேசச் செல்வர்களின் படித்தரங்களில் உச்சமான நிலையிலுள்ள மகானுக்கு இச்சொல் பயன்படுத்தப்படுகிறது. இவருடைய உதவியை மக்கள் நாடுவதின் காரணமாக இப்பெயர் இவருக்கு ஏற்பட்டது. இத்தகு சிறப்புப் பெற்ற இவருடைய இயல்புகள் கலம் பகப் பாடல்களில் விரித்துரைக்கப்படுகின்றது.

இப்பெருமகனார் வாழ்ந்து மறைந்து விளங்கும் நகரமாகிய குவாலீர், இக்கலம்பகத்தில் சிறப்பித்துப் பாடப்பட்டுள்ளது. குவாலீர் நகரம் வட இந்தியாவில் உள்ள ராஜஸ்தான் மாநிலத்தில் உள்ளதாகும். இதன்கண் இன்றும் கவுது நாயகமவர்களின் அடக்கவிடம் சிறப்புடன் விளங்குகிறது இக்குவாலீர் கலம்பகம் காப்புச் செய்யுள் நீங்கலாக நூறு பாடல்களைப் பெற்றுள்ளது. இந்நூல் கி.பி. 1882 இல் பிரசுரிக்கப் பட்டுள்ளது.

## திருக்கோட்டாற்றுக் கலம்பகம்

கோட்டாறு நகரில் வாழ்ந்த மெஞ்ஞானியான ஹலறத்து ஞானி யார் சாகிபு வலியுல்லா அவர்களே இக்கலம்பகத்தின் பாட்டுடைத் தலைவராவார். ஞானியார் சாகிபு வலியுல்லா ஹிஜ்றி 1167இல் (கி. பி. 1753) கோட்டாற்றில் பிறந்து ஹிஜ்றி 1209இல் (கி. பி.1794) கோட்டாற்றில் இறப்பெய்தினார்கள். கோட்டாற்றில் உள்ள இவர் களின் அடக்கவிடத்தில் ஆண்டுதோறும் அந்நாளில் விழா நடந்து வருகிறது தாம் இறக்கும் நாளை முன்னறிவிப்புச் செய்த இவர் இளமையி லேயே மெஞ்ஞானத் தன்மையைப் பெற்றார். இவர் பாடிய ஞானப் பாடல்கள் 'மெய்ஞ்ஞானத் திருப்பாடல்கள்' என்ற தலைப்பில் நூலுரு வில் வெளிவந்துள்ளது. இத்தகு ஞானத்தினால் அவரது அடியாராக இருந்த கொட்டாம்பட்டி கருப்பையாப் பாவலரவர்கள் இவரது ஞானத் தின் சிறப்பினை திருக்கோட்டாற்றுக் கலம்பகத்தின் பாடுபொருளாகக் கொண்டுள்ளார்.

இந்நூலின்கண் கோட்டாறில் பிறந்து வாழ்ந்து மறைந்த ஞானி யார் சாகிபு அவர்களின் புகழ் பேசப்படுவதுடன் அன்னாருடன் தொடர் புடைய கோட்டாற்றின் பெருமைகளும் விரித்துரைக்கப்படுகின்றன. கோட்டாறு, நாகர்கோவில் நகராட்சியினைச் சார்ந்த பகுதியாக இன்று விளங்குகிறது. முற்காலத்தில் நாஞ்சில் நாட்டின் தலைநகராக விளங்கியது. இவ்வூரில் ஞானியார் அப்பா, பாதுஷா வலி போன்ற பல இறைநேசச் செல்வர்களும் சான்றோர்களும் அடங்கப் பெற்றுள்ளனர் மிஃராஜ் மாலை எழுதிய ஆலிப் புலவர், சீறா கீர்த்தனம் இயற்றிய சையிது அபூபக்கர் புலவர், சதாவதானம் செய்குத் தம்பி பாவலர் போன்ற இன்ன பிற புலவர் பலரும் இவ்வூரில் வாழ்ந்து அடங்கப் பெற்றுள்ளனர். கோட்டாற்றின் திருப்பெருமைகளை நூலாசிரியர் இக் கலம்பகத்தின்கண் எடுத்துக்காட்டியுள்ளார். இதன்கண் ஆசிரியர் காப்புச் செய்யுள் நீங்கலாக நூறு பாடல்களைப் பாடியுள்ளார். இதன் ஆசிரியர் ஒருவரே இஸ்லாமியக் கலம்பக ஆசிரியர்களுள் முஸ்லிம் அல்லாதவர். எனவே இஃது இக் கலம்பகத்திற்குரிய தனித்தன்மை எனலாம். ஏனெனில் இஸ்லாமியத் தமிழிலக்கிய ஆக்கத்தில் முஸ்லிம் அல்லாதவர்களின் பங்கு மிகச் சொற்பமே ஆகும். அவற்றுள் திருக் கோட்டாற்றுக் கலம்பகமும் ஓர் இடம்பெற்றுச் சிறக்கிறது.

## திருபகுதாதுக் கலம்பகம்

'இஸ்லாம் மார்க்கத்தைப் உயிர்ப்பித்தவர்' என்னும் பொருளை யுடைய முஹ்யித்தீன் ஆண்டவர் என்னும் சிறப்புப் பெயர் பெற்ற அப்துல் காதிர் ஜீலானி அவர்களே இக்கலம்பகத்தின் பாட்டுடைத் தலைவர். இவர் கௌதுல் அஃலம் என்னும் சிறப்புப் பெயரால் அழைக்கப்படுகிறார். இறைநேசச் செல்வரான முஹ்யித்தீன் ஆண்டவ ரவர்கள் பக்தாதில அடங்கப் பெற்றுள்ளார்கள். ஈராக்கின் தலை நகரான பக்தாது நகரமே பகுதாது என்ற பெயரில் கலம்பகத்தின் தலைப்பாக அமைந்துள்ளது. இஸ்லாமியர்களின் புண்ணிய இடமாகக் கருதப்படும் இந்நகரம் ஈராக்கின் திஜ்லா நதியின் இரு கரையிலும் அமைந்துள்ளது.

பக்தாது என்பது பார்ஸிச் சொல்லாகும். இதன் பொருள் 'இறை வனின் அருட்கொடை' என்பதாகும். அப்பாஸிய கலீபா அல் மன்சூர் அவர்களே இந்நகரை நிர்மாணித்தவர். முஸ்லிம் கட்டிடக் கலையை உலகில் எடுத்துக்காட்டிச் சிறப்புறும் பக்தாது நகரில பல இஸ்லாமியப் பெரியோர்கள் அடக்கம் பெற்றுள்ளனர். ஷிஹாபுத்தீன் சுஹ்ரவர்தீ, ஜுனைதுல் பக்தாதி, அபூஹனீபா, மஃரூஃபுல் கர்கீ முதலானவர்கள் அடக்கம் பெற்றவர்களுள் குறிப்பிடத்தக்கவர்களாகும். இஸ்லாத்தில் இத்தகு சிறப்புப் பெற்றுள்ள பக்தாத் நகரின் வளமும், வரலாற்றுச் சிறப்பும் திருபகுதாதுக் கலம்பகத்தில் விரிவாக இடம்பெற்றுள்ளன. பாட்டுடைத் தலைவரான முஹ்யித்தீன் ஆண்டவர் அவர்களின் அருட் பெரும் அற்புத நிகழ்வுகளும் ஆங்காங்கே சுட்டிக்காட்டப்படுவதுடன் அன்னாரின் வரலாற்று முக்கியத்துவமும் பாடுபொருளாகப் பல யாக் களில் இடம்பெற்றுள்ளன.

திருபகுதாதுக் கலம்பகத்தில் காப்புச் செய்யுள் நீங்கலாக நூறு செய்யுள்கள் இடம்பெற்றுள்ளன. நூலின் இறுதியில் இக்கலப்பகத் திற்குப் பொருளுதவி செய்த நாகப்பட்டினம் செ. முஹம்மது கவுது மரைக்காயரவர்களின் நலன் காக்க இறைஞ்சும் 'துஆ' ஒன்றும் உள்ளது. 'துஆ' என்னும் அறபுச் சொல்லின் பொருள் 'ஆசீர்வதித்து இறைஞ்சுதல்' என்பதாகும். திருபகுதாதுக் கலம்பகத்தில் இடம் பெற்றிருக்கும் துஆ அகவல் பாவில் அறுபத்தியொரு அடிகளில் அமைந்துள்ளது. இவ்வமைப்பு பிற இஸ்லாமியக் கலம்பகங்களில் காணப்படவில்லை. திருபகுதாதுக் கலம்பகத்தினை இயற்றியவர் நாகூர் தர்காவின் தலைமை வித்துவானாக விளங்கிய த. செவத்த மரைக்காயசீரியர் ஆகும். இக்கலம்பகம் 1894 ஆம் ஆண்டு சென்னை ஆறுமுகவிலாச அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

மேலே விளக்கப் பெற்றுள்ள ஏழு இஸ்லாமியத் தமிழ் கலம்பகங் கள் தவிர்த்து இன்னும் சில கலம்பகங்கள் இருப்பதாகப் பெயரளவில் அறிய முடிகிறது. அவைகள் நாகூர்க் கலம்பகம், கண்டிக் கலம்பகம், குலாம் காதிறு நாவலரின் மதீனாக் கலம்பகம் என்னும் மூன்றுமாகும், இக்கலம்பக நூல்கள் எமக்குக் கிடைக்காததால் இங்கு ஆய்வுக்குட் படுத்தவில்லை.

## இஸ்லாமியக் கலம்பகங்களின் பொருளமைப்பு

பொருளமைப்பில் அனைத்துக் கலம்பகங்களிலும் ஒரு பாடலுக்கும் அடுத்த பாடலுக்கும் தொடர் இருப்பதாகத் தெரியவில்லை. எத்தனைப் பாடல்கள் ஒரு கலம்பகத்தில் இடம்பெற்றிருந்தாலும் அவையத்தனை யும் வெவ்வேறு பொருளமைப்பினையுடையனவாகவே காணப்படு கின்றன. எனவே பிற இலக்கியங்களைப் போன்று இக்கலம்பக இலக் கியங்களுக்கு ஒரு தொடர் பொருளினைக் கூறுவது இயலாததாகும்.

பொதுவாக ஏழு கலம்பகங்களிலும் பேசப்படும் பொருள்கள் அந்தந்தப் பாட்டுடைத் தலைவர்களின் சிறப்பும் அவரவர் வாழ்ந்த நகர்வாசிகளின் தன்மையும் நகரின் பெருமைகளுமே ஆகும். இவைகள் பாடுபொருள் என்ற நிலையில் ஏழு கலம்பகத்திலும் காணத்தக்க நிலை யாகும். இங்கு இஸ்லாமியக் கலம்பகங்களின் இத்தகைய பாடு பொருளில் பாட்டுடைத் தலைவர்கள், பாடப்படும் நகரம் நகர்வாசிகள் ஆகியவற்றிடையே வேறுபட்ட நிலை இருப்பினும் இவையத்தனைக் கும் அப்பாற்பட்ட நிலையில் ஏனைய பிற தமிழ்க் கலம்பகங்களில் காணமுடியாத ஒரு ஒற்றுமையைப் பாடுபொருளில் காணமுடிகின்றது. இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகளை எடுத்துரைப்பதிலும் 'இறைவன் ஒருவனே', வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர

வேறுயாரும் இல்லை' என்னும் ஏகத்துவ இறைவழிபாட்டுக் கொள்கைகளை வலியுறுத்துவதிலும் அனைத்துக் கலம்பகங்களும் ஒன்றுபட்டுக் காணப்படுகின்றன. சான்றாக மக்காக் கலம்பகத்தில் காப்புச் செய்யுளிலேயே முதலாம் கலிமாவான 'லாஇலாக இல்லல்லாகு' என்பதின் தாத்பரியம்

வல்லான் முற்றும் உணர்ந்தான் தன்னைச்
சொல்லால் உளத்தால் செயலால் தொழுவாம்
(மக்காக் கலம்பகம் : காப்பு)

என்று எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. இதேபோல் இன்ன பிற இஸ்லாமியக் கருத்துக்களும் ஒவ்வொரு கலம்பகத்திலும் ஆங்காங்கே இடம்பெற்றுள்ளன.

மேலே கூறப்பட்டிருப்பது இஸ்லாமியக் கலம்பகங்களின் பாடுபொருள் என்ற நிலையில் நமக்குத் தெரிவதாகும். இத்தகைய பாடுபொருளினை எடுத்துக்காட்டும் தன்மையில் இஸ்லாமியக் கலம்பகங்கள் அனைத்திலும் ஒரு குறிப்பிட்ட நிலையைக் காணத்தான் முடிகின்றது. இஸ்லாமியக் கலம்பக ஆசிரியர்களின் நோக்கமும் பாடுபொருளின் தன்மைகளும் மூன்று விதமான பொருளமைப்பில் வெளிப்படுத்தப் பட்டுள்ளன. 1. அகப்பொருள் மூலமாக வெளிப்படுத்துதல் 2. புறப் பொருள் மூலமாக வெளிப்படுத்துதல் 3. அகம் புறம் இரண்டும் அல்லாத பிறபொருள்களின் மூலமாக வெளிப்படுத்துதல்.

இம்மூன்று நிலைகளில் ஒவ்வொன்றுக்கும் சில சான்றுகளைக் காண்போம். அகப்பொருள் செய்தியான கைக்கிளை, இரங்கல், தூது போன்றவைகள் அனைத்துக் கலம்பகங்களிலும் பரவலாகக் காணப்படுகின்றன. சான்றாக இரங்கல் பொருளினை எடுத்துக் கொள்வோமேயாகில் இது தலைவனைப் பிரிந்து தனித்துறையும் தலைமகள் பிரிவாற்றாது கடல், கழி, பறவைகள் முதலியவைகளை நோக்கி இரங்கிக் கூறுவதாகும். இதனைக் 'காமமிக்க கழிபடர் கிளவி' என்னும் துறையின் கீழ் அடக்குவர். குவாலீர்க் கலம்பகத்தில் தலைவனைப் பிரிந்து வருந்தும் தலைவிக்கு, இரவுப்பொழுது கொடிய துயரத்தைத் தருகின்றது. இத்தகைய துன்பத்தைத் தலைவி அனுபவித்துக் கொண்டு தன் நிழலையும் தலைவன் மறந்துவிட்டான் என்று தன் நெஞ்சோடு இரங்கிக் கூறுகிறாள்.

சுழலும் வளை பலபோய்க் கண்ணுறக்க மின்று
குழலுங் குலைத்தெனக்குக் கூற்றாய் வந்ததிராக் காலம்
குழலுங் குலைத்தெனக்குக் கூற்றாமாயின்
நிழலு மறந்திருந்தார் நெஞ்சையென் செய்ததிராக் காலம்
(குவாலீர்க் கலம்பகம் : 32)

என்ற பாடல் அமைந்துள்ளது. இதே நிலையில் உள்ள தலைவியே மக்காக் கலம்பகத்தில் மாலைப் பொழுதினைக் கண்டு இரங்குவது போலவும் (பா. 74) மதீனக் கலம்பகத்தில் குறித்த காலத்தில் வருவேன் என்று சொல்லிச் சென்ற தலைவன் வராதநிலை கண்டு புலம்பி இரங்குவது போலவும் (பா 56) அமைந்துள்ளது. திருமதீனக் கலம் பகத்தில் (பா. 22) பறவையை நோக்கி இரங்கி கூறுவது போலவும் திருக்கோட்டாற்றுக் கலம்பகத்தில் மெய்ஞானியாரிடத்துச் சென்ற தன் மனம் திரும்பி வராத நிலையினைக் கண்டு மானினை நோக்கி இரங்கி தலைவி கூறுவது போலவும் (பா. 50) பாடல்கள் அமைந்துள்ளன.

இதேபோல் காதல் கொண்ட தலைவியர் தத்தம் தலைவரிடத்து தன்னுடைய காதலை எடுத்துக் கூற பறவை, வண்டு, மேகம் முதலான வற்றைத் தூதாக அனுப்புவது போன்ற செய்திகள் அகப்பொருள் சுவையுடன் திருமதீனக் கலம்பகம் தவிர, ஏனையவற்றில் காணப்படு கின்றன. மக்காக் கலம்பகத்தில் பறவை விடுதூதும், மதீனக் கலம் பகத்தில் நாற் தூதும் புயல் தூதும் காணப்படுகின்றன. மேகம், கிள்ளை முதலானவற்றின் தூது பதாயிகு கலம்பகத்தில் காணப்படு கின்றது. குவாலீர்க் கலம்பகத்தில் குயில், தென்றல், நாரை, மேகம், மயில் போன்றவற்றைத் தலைவி தன் துன்பத்தை எடுத்துரைக்கத் தூதாக அனுப்புகின்றாள். திருக்கோட்டாற்றுக் கலம்பகத்தில் மேகம், பூவை, நத்தை, வண்டு முதலானவைகள் தலைவனிடம் தூதாகச் செல்லும் காட்சிகள் இலக்கிய நயத்துடன் படைக்கப்பட்டுள்ளன. திரு பகுதாதுக் கலம்பகத்தில் கிள்ளை, வண்டு தூது செல்லும் காட்சிகள் காணப்படுகின்றன. இவை தவிர இன்னும் பல அகப்பொருள் பொதிந்த பாடல்கள் இஸ்லாமியக் கலம்பகங்களில் பரந்து கிடக் கின்றன. அகப்பொருள் அமைந்த கலம்பகப் பாடல்கள் அனைத்தும் நமக்குச் சங்கப் பாடல்களையே நினைவுறுத்துகின்றன.

இனி புறப்பொருளமைப்பிற்கு மறம், புயவகுப்பு போன்றவை கலம்பகங்களில் இடம் பெற்றிருத்தலைக் கூறலாம். மறம் என்னும் புறப்பொருளாவது 'ஒரு அரசன் மறவர் மகளைத் தனக்கு மணம் பேசு மாறு ஒரு தூதுவனை அனுப்ப, அத்தூதுவனிடம் மணவினை மறுத்தும் அரசனை 'இகழ்ந்தும் பேசுவதாகப் பாடுவதாகும் இதனைப் புறப் பொருள் நூற்கள் 'மகட்பாற் காஞ்சி' என்று கூறும். இத்தகைய புறப் பொருளமைந்த பாடல்கள் மக்கா, பதாயிகு கலம்பகங்கள் தவிர ஏனையவற்றில் காணப்படுகின்றன. சான்றாக மதீனக் கலம்பகத்தில் பெண் கேட்டுத் தூதாகவரும் தூதுவனை நோக்கி ''நின்னுடைய வேந்தன் முடங்கால் என்று சொன்னாய், அப்படியாயின் சப்பாணிக்கோ எம் மறவர் குலப்பெண்ணைக் கேட்டீர்... உன்னுடைய உடல் ஊனம் தீரவேண்டுமாயின்,

"கொன் வீந்த நபிபாதம் வருடிலுங்கள்
கோமுடங்கறீர்ந்து மிகக் குணமுண்டாகும்"

(மதீனக் கலம்பகம் 59)

என்று எடுத்தியம்புவதாக உள்ளது. இதேபோல் மறவர் குலப் பெண்ணை மணம் பேசத் தூதாக வரும் தூதுவனைப் பழிப்பதாகவே திருமதீனக் கலம்பகம் (பா : 81), பதாயிகு கலம்பகம் (பா : 66). திருக் கோட்டாற்றுக் கலம்பகம் (பா : 14), திருபகுதாதுக் கலம்பகம் (பா : 78) ஆகியவற்றில் காணப்படுகின்றன. மக்காக் கலம்பகத்தில் மறம் என்ற தலைப்பிட்ட பாடல் காணப்படினும், இஃது ஏனைய புறப்பொருளி லிருந்து மாறுபட்ட நிலையில் காணப்படுகின்றது. இதில் மறம் என்பதை வீரம் என்ற பொருள் கொண்டு 'கள்ளக் குறும்பாளர்களை கால்கை தறிப்போம்' என்றும் 'காம இச்சை உடையவர்களை சினப் போம்' என்றும் உள்ளக் குபிரர்க்குத் தலைவணங்க மறுத்து மக்கத்து இறசூல் பாதத்தையே ஏத்தித் துதிப்போம்' என்றும் கூறுவதாக உள்ளது. தீயவற்றை வீரத்துடன் களைவோம் என்பதாக இப்பாடலில் பொருள் உள்ளது. பிறிதொரு சான்று புயவகுப்பாகும். இஃது பாட்டு டைத் தலைவனது தோளின் வனப்பையும், ஆற்றலையும் புகழ்ந்து பாடுவதாகும். அத்தகைய முறையில் பதாயிகு கலம்பகம் தவிர ஏனைய வற்றில் அந்தக் கலம்பகங்களில் பாட்டுடைத் தலைவர்களைப் புகழ்ந்து பாடுவதாகப் பாடல்கள் அமைந்துள்ளன.

அகம், புறம் ஆகிய இரு பொருளமைப்பிலும் சார்ந்திராத பல பாடல்கள் அனைத்துக் கலம்பகங்களிலும் காணப்படுகின்றன. இத் தகைய பாடல்கள் பொதுவாகத் தலைவனுடைய பிறப்பினை எடுத் துரைக்காமல் தலைவன் சார்ந்திருக்கும் நகரின் சிறப்பையோ அல்லது நகர்வாழ் மக்களின் சிறப்பையோ எடுத்துரைப்பதாக உள்ளன. பொதுவாகப் பொருளமைப்பால், இஸ்லாமியக் கலம்பகங்கள் அனைத்திலும் அகப்பொருளமைந்த பாடல்களும் புறப் பொருளமைந்த பாடல்களும் தனித்தனியே இல்லாமல் கலம்பகம் முழுதும் விரவி இருக்கும் நிலையையே காண முடிகின்றது. அனைத்துக் கலம்பகங் களிலும் புறப்பொருளை நோக்கும்போது அகப்பொருள் அமைப்பில் அதிகமான பாடல்கள் காணப்படுகின்றன. அகம், புறம் அல்லாத பொருளமைப்பில் காணப்படும் பாடல்கள் பெரும்பாலும் ஆசிரியர் கூற்றாகவே உள்ளன; ஏனைய பாடல்கள் தலைவி கூற்றாக அமைந் துள்ளன என்பது குறிப்பிடத் தக்கதாகும். இஸ்லாமியக் கலம்பகங் களின் பொருள் அமைப்பில் பாட்டுடைத் தலைவன் கூற்றாக எந்த ஒரு பாட்டும் காணப்பெறவில்லை என்பது ஏனைய பிற தமிழ்க் கலம் பகங்களிலிருந்து இஸ்லாமியக் கலம்பகங்களைப் பெரிதும் வேறு படுத்துகின்றது. இதற்குரிய காரணம் பாட்டுடைத் தலைவர்களாகிய

நாயகம் பெருமானார் (சல்) மற்றும் உள்ள ஏனையோருக்கும் அவர்களது கூற்றில் பாடல் அமையுமானால் ஏதாவது களங்கம் நேர்ந்து விடுமோ என்ற எண்ணத்தினால் இஸ்லாமியக் கலம்பகத்தை உருவாக்கிய ஆசிரியர்கள் அனைவரும் தலைவன் கூற்றினை தவிர்த்திருக்கின்றார்கள் போலும்.

## இஸ்லாமியத் தமிழ்க் கலம்பகங்களில் உறுப்புகள்

கலம்பக இலக்கியத்திற்குரிய உறுப்புகள் இவையிவைதான் என்பதைப் பாட்டியல் இலக்கண நூல்களின் அடிப்படையில் வரையறை செய்து கூற முடியாத நிலை காணப்படுகின்றது. உறுப்புக்களின் வருகை முறையில் இஸ்லாமியக் கலம்பகங்களிலும் ஒற்றுமையைக் காண முடியவில்லை. முன்னர்க் கூறியபடி பன்னிருபாட்டியல் மற்றும் உரையாசிரியர்கள் கூற்றுப்படி பதினெட்டு உறுப்புக்கள் கலம்பக இலக்கியத்தில் இடம்பெற வேண்டும் என்பது பெறப்படினும், இப்பதினெட்டு உறுப்புக்கள் ஒரு கலம்பக இலக்கியத்தில் வந்தாக வேண்டும் என்ற கட்டாயமில்லை என்பதைப் பல கலம்பகங்களும் நமக்குக் காட்டி நிற்கின்றன. வேண்டுமானுல் பன்னிருபாட்டியல் மற்றும் உரையாசிரியர் குறிப்பிடும் கலம்பக உறுப்புகளைக் காலக் கண்ணோட்டத்தில் கலம்பக இலக்கியத்திற்குரிய பழமையான உறுப்புகள் என்று கொள்ளலாம்.

இப்பழமையான பதினெட்டு உறுப்புக்களில் இஸ்லாமியக் கலம்பகங்களுள் எந்த ஒரு கலம்பகத்திலும் அனைத்துப் பதினெட்டு உறுப்புகளும் காணப்படவில்லை என்பது குறிப்பிடத் தக்கதாகும். ஆனுல் பதினெட்டு உறுப்புக்களில் குறிப்பிடப்படாத பல உறுப்புக்கள் இடம் பெற்றுள்ளன. கலம்பகங்களுள் உறுப்புகளின் எண்ணிக்கை என்ற நிலையில் மக்காக் கலம்பகத்தில் பதினைந்தும், மதீனக் கலம்பகத்தில் பதிமூன்றும், திருமதீனக் கலம்பகத்தில் பத்தொன்பதும், பதாயிரு கலம்பகத்தில் பத்தொன்பதும், குவாலீர்க் கலம்பகத்தில் பத்தொன்பதும், திருக்கோட்டாற்றுத் கலம்பகத்தில் இருபத்திரண்டும், திருபகுதாதுக் கலம்பகத்தில் பதினேழும் இடம்பெற்றுள்ளன. இவற்றுள், ஊசல், சித்து, சம்பிரதம் முதலான மூன்று உறுப்புகள் மட்டுமே அனைத்துக் கலம்பகங்களிலும் அமைந்துள்ளன. இவை தவிர ஏனைய இருபத்தி மூன்று உறுப்புகளான கைக்கிளை, இடைச்சியார், கொற்றியார், பிச்சியார், மதங்கியார், வலைச்சியார், குறம், தூது, வண்டு, காலம், தழை, பாண் வெறி விலக்கு, மடல் விலக்கு, புயம், இரங்கல் ஊர், மறம், ஆற்றுப்படை, அம்மானை, மடக்கு, களி, தவம், முதலானவை

களுள் சில ஆறு கலம்பகங்களிலும், சில ஐந்து கலம்பகங்களிலும், சில நான்கிலும், சில மூன்றிலும், சில இரண்டிலும், சில ஒரே ஒரு கலம்பகத்திலும் காணப்படுகின்றன.

இவ்வுறுப்புகளுள் ஊர், ஆற்றுப்படை ஆகிய இரண்டும் திருக் கோட்டாற்றுக் கலம்பகத்தில் மட்டுமே இடம் பெற்றுள்ளன. தலைவன் சார்ந்துள்ள ஊர் பற்றிய செய்திகள் அனைத்துக் கலம்பகங்களிலும் பரவலாகக் காணப்படினும், அதற்கென்று தனித்துவம் அளித்து அதனையே தலைப்பாகக் கொண்டு புனையப்பட்ட பாடல் திருக் கோட்டாற்றுக் கலம்பகத்தில் மட்டுமே காணப்படுகிறது. இஸ்லா மியக் கலம்பகங்களுள் திருக்கோட்டாற்றுக் கலம்பகத்தில் மட்டுமே சங்க இலக்கிய ஆற்றுப்படை இலக்கியத்தை நினைவுறுத்துவது போல் 'ஆற்றுப்படை' என்பது எழுபத்தைந்து அடிகளில் ஓர் உறுப்பாக அமைந்துள்ளது.. இது வறுமையால் வாடும் பாணரை அவர்தம் வறுமை நிலை போக பாட்டுடைத் தலைவராம் திருக்கோட்டாற்று ஹலரத்து ஞானியார் சாகிபு வலியுல்லா அவர்க ளிடத்து ஆற்றுப்படுத்துவதாக உள்ளது. இப்பாணர் ஆற்றுப் படையுள் முதல் ஐம்பத்தைந்து அடிகளில் பாணனின் குடும்பத் துன்பங்களை ஆசிரியர் விரிவாக எடுத்துரைத்து, இறுதிப்பகுதியில் மெய்ஞானியான சாகிபு அவர்களின் பெருமைகளை எடுத்துரைக்கும் போது,

வேண்டுநர் மனத்துள் வேண்டிய வாறே
தந்தருள் செய்ய வெந்தவ நிதியாய்
நிறை மெய்ஞ்ஞானி . . .
அற்புத ஞான விற்பனம் திருமுனை
சென்று வணங்கி நின்றுன் கவலையைச்
செப்பியா ழிசைக்கி லொப்பிலா யாவும்
பெறுதியீ துறுதி யறிதிசெல் குவையே

(திருக்கோட்டாற்றுக் கலம்பகம்: 45)

என ஆற்றுப்படுத்துவதாக உள்ளது. இவ்வாற்றுப்படையைத் திருக்கோட்டாற்றுக் கலம்பகத்திலிருந்து தனியே எடுத்து விடுவோமானால் தனித்ததொரு இலக்கியப் படைப்பாகச், சொல்லத் தக்க வகையில் உள்ளது.

இதேபோல் குவாலீர்க் கலம்பகத்தில் மட்டும் 'மடல் விலக்கு' என்னும் தலைப்பில் ஓர் உறுப்பு காணப்படுகிறது- சங்க இலக்கியத்தில் காணப்படும் 'மடல் ஏறுதல்' என்பதற்கு எதிரான பொருள்நயத்தில் இவ்வுறுப்பு அமைந்துள்ளது. மடல் ஏறுதல் என்பது சங்க இலக்கியத்தில் தான் காதலித்த தலைவி தனக்குக் கிடைக்காதவிடத்துக் காதலன்,

காதலியின் வடிவத்தையும் பெயரையும் தனது பெயருடன் சேர்த்து சித்திரம் எழுதிக் கையிற்கொண்டு பனை மடலினால் ஒரு குதிரையுருவம் செய்வித்து அதன்மேல் தாம் ஏறி அதனைப் பிறரால் இழுப்பித்து வீதி வழியே பொதுவிடங்களில் செல்லுதலாகும்.' இத்தகைய செய்தியை உடைய மடல் ஏறுதலுக்கு இடமளிக்காமல் அதனை விலக்க வேண்டும் என்று வேண்டுவது போல் பின்வரும் பாடல் அமைந்துள்ளது.

குணமா நயத்தார் குவாலீர் வரைமிசைக் கூடுமல்குற்
பணமா மகிழ்மடல் வாஞ்சிக்க நீவிர் பனைமடலில்
எணமா யிவர்தற் கவளாங் கிழியை யெழுதுவீரேன்
மணமா முலைப்புடைப் பாகுங்கொல்லோ சொல்வீர் மன்னவரே
(குவாலீர் கலம்பகம் : 36)

கிளி, தழை ஆகிய உறுப்புகள் மக்காக் கலம்பகம் தவிர ஏனைய வற்றிலும் கைக்கிளை என்னும் உறுப்பு மகீனக் கலம்பகம் தவிர ஏனையவற்றிலும் காணப்படுகின்றன. மதங்கியார் என்னும் உறுப்பு குவாலீர்க் கலம்பகம், திருபகுதாதுக் கலம்பகம் தவிர ஏனைய வற்றிலும் பாண் என்னும் உறுப்பு திருக்கோட்டாற்றுக் கலம்பகம் தவிர ஏனையவற்றிலும் காணப்படுகின்றன.

கலம்பக உறுப்புக்களைப் பொறுத்தவரையில் ஏனைய பிற கலம்பகங்களிலிருந்து அதிகமான உறுப்புகளைத் திருக்கோட்டாற்றுக் கலம்பகம் பெற்றுள்ளது. தமிழ் மரபுச் சாயலும், சங்கத்தின் பிரதி பலிப்பும் ஏனைய கலம்பகங்களிலிருந்து அதிகமாக இக்கலம் பகப் பாடல்களில் காணப்படுகின்றன. இதற்குக் காரணம் ஏனை பிற கலம்பகங்களை எழுதியவர்கள் அனைவரும் முஸ்லிம்களாக இருப்பதால் இஸ்லாமியக் கருத்துக்களும் போதனைகளும் அவர்களது கலம்பகங்களின் பெரும்பாலான பாடல்களில் இடம்பெற்று விடு கின்றன. ஆனால் திருக்கோட்டாற்றுக் கலம்பக ஆசிரியர் முஸ்லிம் அல்லாதவராக இருப்பதால் இஸ்லாமியக் கருத்துக்களை அதிகம் தர இயலவில்லை. அதனால், அவரது கலம்பகத்தின் பாடல்களில் தமிழ் மரபு அதிகம் இடம்பெற்றுவிடுகிறது. இஸ்லாமியக் கலம்பகங் களுள் ஏனைய பிற கலம்பகங்களிலிருந்து அதிகமான உறுப்புகளை திருக்கோட்டாற்றுக் கலம்பகம் பெற்றிருப்பதற்காக காரணமும் ஆசிரியர் இஸ்லாமியரல்லாதவராக இருப்பதே ஆகும்.

கலம்பகங்களின் உறுப்புகளில் பெரும்பாலானவற்றில் சங்க இலக்கிய மரபு போற்றப்பட்டுள்ளது. உறுப்புகளின் எண்ணிக்கையில் இஸ்லாமியக் கலம்பகங்களுள் ஒற்றுமையில்லாததற்குக் காரணம்

கலம்பகம் படைப்பவர்கள் கலம்பக இலக்கியத்துள் புதிய பல்வேறு இலக்கியப் பொருள்களையும் கொண்டு வரவேண்டும் என்று எண்ணு வதே ஆகும். இதற்குச் சிறந்த சான்றாகப் பிற்கால நாட்டுப்புறப் பாடல்களின் செல்வாக்காக 'ஊசல்' என்னும் இலக்கியப் பொருள் இஸ்லாமியக் கலம்பகங்கள் அனைத்திலும் இடம் பெற்றிருப்பதைக் கூறலாம்.

## இஸ்லாமிய கலம்பகங்களில் வரலாற்று நிகழ்ச்சிகள்

எந்தவொரு இலக்கியத்திலும், இலக்கியத்தின் பாடுபொருள் சார்ந்துள்ள காலப் பிரதிபலிப்பு இடம்பெறத் தவறுவதில்லை. நபிகள் பெருமகனார் (சல்) அவர்களது வாழ்வில் நடந்த பல வரலாற்று நிகழ்ச்சிகளும் இஸ்லாமியக் கலம்பகங்களில் ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன. இவ்வரலாற்று நிகழ்ச்சிகள் கலம்பகக் கட்டுக்கோப் பிற்குள் அழகாக எடுத்துரைக்கப்படுகின்றன. இத்தகைய வரலாற்று நிகழ்ச்சிகளாகக் குறிப்பிட்டுச் சொல்லத்தக்க சிலவற்றை இங்குக் காண்போம்.

நபிகள் பெருமானார் (சல்) வாழ்வில் ஒருமுறை ஒரு யூதப் பெண் இறைச்சி சமைத்து நாயகம் (சல்) அவர்களுக்கு விருந்தளித்தாள். இவ்விறைச்சியில் நஞ்சூட்டப்பட்டிருப்பதை உணர்ந்த நாயகம் முகம்மது (சல்) அவர்கள் தங்கள் தோழர்களை இதனை உண்ணாமல் தடுத்தார் கள். அதற்கு முன்னர் இதனை உண்ட ஒரு தோழர் இறந்துவிடவே அந்த யூதப் பெண் தனது நிலையை விளக்கினாள். பின் அவளுக்கு மன்னிப்பளித்தார்கள். இந்நிகழ்ச்சியை மக்காக் கலம்பகத்தில்,

ஆலத்தா லுறுதடியை யமுதம்போ லயின்றவர்தம்
சீலத்தா லிறைமாட்டுத் திருவருளே கொண்டடியார்
பாலத்தாழ் குழியடராப் பரிவுற்றாள் கடல்பூண்டு
ஞாலத்தார் புகழ்மக்கா நகராதித்தார் நிகரென்னே

(மக்காக் கலம்பகம் : 69)

என்றும் மதீனக் கலம்பகத்தில்

ஆலந்தனை உண்டிடும் வென்றியர்ந் தஞ்சுந் தங்கற் தம்
பொங்கிய மெய்க்
கோலஞ் செறிநா யகர்...

(மதீனக் கலம்பகம் : 47)

என்றும் குறிப்பிடப்படுகின்றது. இதே நிகழ்ச்சி பதாயிகு கலம்பகத் திலும் பின்வருமாறு இடம்பெற்றுள்ளது.

நமக்கு வழி காட்டியதி னடந்துவந்த
நபிகணா யகரான அவர் மூதாதை
நஞ்சையெல்லாம் பிரமைபோ தாதென்றுண்டார்

(பதாயிகு கலம்பகம் : 33)

என்று ஒரே நிகழ்ச்சி இம்மூன்று கலம்பகத்திலும் இடம்பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது.

இதேபோல் மற்றொரு வரலாற்று நிகழ்ச்சி 'நபிகள் நாயகம் முகமது (சல்) அவர்களின் விண்ணுலக யாத்திரையாகும். இச்செய்தி மக்கா, மதீனா, பதாயிகு ஆகிய மூன்று கலம்பகங்களிலும் குறிப்பிடப் பட்டுள்ளது. இது அறபியில் 'மிஃராஜ்' என அழைக்கப்படுகிறது. இறை தரிசனத்திற்காக நபிகளாரின் விண்ணுலக யாத்திரையையே இது குறிப்பிடுகின்றது. இந்நிகழ்ச்சி மக்காக் கலம்பகத்தில் ஓரிடத்தில்

சிறுநேர மியாவையும் கண்டிரு இறை சமுகஞ் சென்றது நும்
பெறுநேர்மை ஒன்றென்னும் பெருமையுறு நிலையன்றோ

(மக்காக் கலம்பகம்: 1)

என்றும், பிறிதொரு இடத்தில்,

ககன வெளி யுலவியொளி கால்வீசி நட்பினொடு
சமுகமதி னினியகலி மாவோதி யுட் புகுத . . .

(மக்காக் கலம்பகம் : 5)

என்றும் இரண்டு இடங்களில் குறிக்கப்பட்டுள்ளது. இந்நிகழ்ச்சியை இலக்கிய நயத்துடன் மதீனக் கலம்பகத்தில் பின்வருமாறு குறிக்கப் பட்டுள்ளது.

மானுக்குப் பிணையாகிநின்றீ ரென்னீ மானுக்குப் பிணையாகி
நிற்பீர் உயர்
தீனுக்குத் துணையானது போல வெந் தீனுக்குத் துணையாகி
நிற்பீ ரெழு
வானுக்குள்ளுறச் சென்றீரியற் சொற்பா வானுக்கே வரந்
தந்தது போலடி
யேனுக்கும் அருள் செய்வீர் . . .

(மதீனக் கலம்பகம் : 23)

என்று நபிகள் பெருமானாரின் ஆற்றலை எடுத்துரைத்து, வேண்டுவது போல் அமைந்துள்ளது. இந்நிகழ்ச்சியை,

கத்தனைத் திரையின்றுவாடினார்

(பதாயிகு கலம்பகம் : 23)

என்று பதாயிகு கலம்பகம் குறிப்பிடுகிறது. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தம் வாழ்வில் ஹபீபு ராஜாவிடம் தம் கீர்த்தியை எடுத்துரைக்க அமாவாசை இருளில் சந்திரனை வரவழைத்துக் காட்டினார்கள். இந்நிகழ்ச்சி மக்காக் கலம்பகம் (பா : 35), மதீனக் கலம்பகம் (பா : 60) ஆகிய இரு கலம்பகங்களிலும் இடம்பெற்றுள்ளது.

மற்றும் நபிகள் பெருமானார் வாழ்வில் நடைபெற்ற இரு நிகழ்ச்சிகள் மக்காக் கலம்பகத்தில் மட்டும் இடம்பெற்றுள்ளன. 'மக்கா நகர் வாசிகள் நாயகம் (சல்) அவர்களுக்குச் சொல்லொணாத்துயரம் விளைவித்தார்கள். இறசூலுல்லா அவர்களின் போதனைகளை ஏற்க மறுத்தனர். இஸ்லாமிய போதனை செய்வதற்காக மக்காவுக்கு அணித்தாக இருந்த 'தாயிப்' பட்டணத்துக்கு அவர்கள் சென்றார்கள். அவர்களுக்கு அங்கும் கிடைத்தது கல்லடியும்பொல்லடியுமே. நபிகள் பெருமானாரின் உடலிலிருந்து குருதி வழிந்தோடியது. அப்பொழுது வானவர் தலைவர் ஜிப்றயீல் (அலை) அவர்கள் தோன்றி 'தாயிப்' மக்களை தண்டிக்க உத்தரவு கேட்டார்கள். அதற்கு நபிகள் நாயகம் (சல்) அவர்கள் மறுத்தார்கள். எப்பொழுதோ ஒரு நாள் தாயிப் மக்கள் இஸ்லாத்தைத் தழுவுவார்கள் என்று அவர்களை மன்னித்தருளினார்கள். இந் நிகழ்ச்சியை,

கல்லெறிந்து தொடர்ந்தவர் மேற் கனன்றழா நின்றது நுஞ்
சொல்லணிந்த பொருளினிய தூயவுளத்து அன்பன்றோ
(மக்காக் கலம்பகம் : 1)

என்று நாயகத்தின் பெருமையை எடுத்துரைக்கிறார் ஆசிரியர்.

பிறிதொரு நிகழ்ச்சி 'கஃபுஇப்னு சுஹைர்' என்பவர் நபிகள் நாயகம் (சல்) அவர்கள் பேரில் வசைமாரி பொழிந்தவர். கண்ட இடத்தில் கொல்ல வேண்டும் என்ற கட்டளைக்கு இலக்காகி இருந்தவர். ஒருநாள் மாறுவேடம் பூண்டு மதீனாவில் நபிகள் நாயகம் அவர்களைச் சத்தித்து கஃபு இப்னு சுஹைர் 'இப்பொழுது இஸ்லாத்தைத் தழுவினால் அவனுக்கு மன்னிப்பு உண்டா?' என நாயகத்திடம் கேட்டார். அதற்கு நாயகம் 'ஆம்' எனப் பதிலளித்தார்கள். உடனே தமது மாறுவேடத்தைக் களைந்து இஸ்லாத்தைத் தழுவி நபிகளார் பேரில் புகழ்மாரி பொழியத் தலைப்பட்டார். இதனால் மகிழ்வுற்ற நபிகள் நாயகம் (சல்) அவர்கள் தங்களது மேலங்கியை அவருக்குப் பொன்னாடை போர்த்துவது போல் போர்த்தினார்கள். இவ்வாறு வசைபாடியவர் தம் வாயாலேயே தம்மைப் பற்றிய புகழ்மாலை பொழியச் செய்த நபிகளாரின் கீர்த்தியை

வசைபாடுங் கவிராயன் நசைபாடல் ஏற்றுமிக
இசைபாட்டின் பரிசளித்த தினிய நுந்தம் புகழன்றோ
(மக்காக் கலம்பகம் :1)

என்று குறிக்கப்பட்டுள்ளது.

வரலாற்று நிகழ்ச்சிகள் இடம்பெற்றிருத்தல் என்ற நிலையில் மக்காக் கலம்பகத்திலேயே அதிகமான வரலாற்று நிகழ்ச்சிகள் இடம் பெற்றிருக்கின்றன. குறிப்பிடத்தக்க எந்தவொரு வரலாற்றுச் செய்தியும் குவாலீர், திருமதீன மற்றும் திருக்கோட்டாற்றுக் கலம்பகங்களில் காணப்படவில்லை. இஸ்லாமியக் கலம்பகங்களில் இடம்பெற்றிருக்கும் வரலாற்று நிகழ்ச்சிகளில் காணப்பெறும் பிறிதொரு ஒற்றுமை அனைத்துமே நபிபெருமானார் (சல்) அவர்களது வாழ்வியல் நிகழ்ச்சிகளாகும். இந்நிகழ்ச்சிகள் அனைத்தும் மக்கா, மதீன கலம்பகங்களில் இறசூலுல்லாவின் பெருமைகளை பாட்டுடைத் தலைவர் என்ற முறையில் எடுத்துக் கூறவும், ஏனைய பிற கலம்பகங்களில் பாட்டுடைத் தலைவர் என்ற நிலையில் இல்லாது இஸ்லாத்தின் திருத்தூதர் என்ற நிலையிலிருந்து எடுத்துரைக்கவும் பயன்படுகின்றன.

## இஸ்லாமியக் கலம்பகங்களில் யாப்பு அமைப்பு

பாட்டியல் நூல்கள் கலம்பகத்தின் இலக்கணத்தைக் கூறும்போது முன்னர்க் குறிப்பிட்டபடி உறுப்புகளுடன் யாப்பினையும் இணைத்தே கூறுகின்றன. பெரும்பாலான பாட்டியல் நூல்கள் கலம்பகம் அந்தாதித் தொடர்பு பெற்று வருதல் வேண்டுமெனக் கூறுகின்றன. கலம்பக இலக்கியத்தின் யாப்பு வரையறை என்பதை இலக்கண நூல்களின் அடிப்படையில் தெளிவாகக் கூற முடியாது. இஸ்லாமியக் கலம்பகங்களில் பல்வேறு வகையான யாப்பு பயின்று வருவதைக் காணலாம். ஏறத்தாழ தொண்ணூறு வகையான யாப்பு அமைப்பு இருப்பதை ஏழு இஸ்லாமியக் கலம்பகங்களிலிருந்து பெறப்படுகின்றன. இத்தொண்ணூறு வகையுள் ஒவ்வொரு கலம்பகங்களிலும் ஒவ்வொரு வகையான யாப்பினை பெற்றிருப்பதைக் காணமுடிகின்றது.

இவற்றுள் கட்டளைக் கலித்துறை, கலித்தாழிசை, மருட்பா, வஞ்சி விருத்தம் முதலான நான்கு யாப்பு வகைகளே ஏழு இஸ்லாமியக் கலம்பகங்களிலும் காணப்படுகின்றன. மற்றவற்றுள் இரட்டையாசிரிய விருத்தம், கலிவெண்பா, சந்தக் கலி விருத்தம், சிற்றியல் வெண்பா, தரவினைக் கொச்சகக் கலிப்பா, வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா, முதலான யாப்பு வகைகள் மக்காக் கலம்பகத்தில் மட்டுமே காணப்படுகின்றன. இதே போல் அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா

உயிர்வருக்க அகவல், பஞ்ச பங்கிக் கலித்துறை, மடக்கு, யானை வீதி சதுரங்க வெண்பா, விருத்த தாழிசை, விருத்தம், வீதி சதுரங்க கலித்துறை, வேற்றொலி வெண்துறை முதலான யாப்பு வகைகள் மதீனக் கலம்பகத்தில் மட்டுமே காணப்படுகின்றன. சந்தத்தாழிசை இருவிகற்பநேரிசை வெண்பா ஆகிய இரண்டும் திருமதீனக் கலம்பகத்திலும், சிந்தடி வஞ்சிப்பா, திரிபு கழிநெடிலடி யாசிரிய விருத்தம், பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா, யமகக் கட்டளைக கலித்துறை முதலான யாப்பு வகைகள் பதாயிகு கலம்பகத்தில் மட்டும் காணப்படுகின்றன. ஏனைய பிறயாப்பு வகைகள் ஒன்றிற்கு மேற்பட்ட கலம்பகங்களில் காணப்படுகின்றன. எனவே யாப்பு வகைகள் இஸ்லாமியக் கலம்பகங்களில் அமைந்து வருவதில் ஒற்றுமை காணப்படவில்லை எனலாம்.

இஸ்லாமியக் கலம்பகங்களில் பல செய்யுட்களில் அந்தாதித் தொடர்பு காணப்படுகின்றது. மற்றும் உறுப்புகளையும் யாப்பு வகைகளையும் இலக்கண நூல்கள் இணைத்தே கூறினும், கலம்பகங்களில் உறுப்புக்கள் அமைந்து வருவதற்கும் யாப்பிற்கும் தொடர்பு இருப்பதாகத் தெரியவில்லை. காரணம் ஒரே உறுப்பு பல்வேறு யாப்புகளினாலும், ஒரே யாப்பில் பல்வேறு உறுப்புக்களை எடுத்துரைத்தும் பாடப்பட்டிருப்பதைக் காணலாம். முதல் நிலைக்குச் சான்றாக தவம் என்னும் உறுப்பு மக்காக் கலம்பகத்தில் கலிநிலைத்துறையின் மூலமாகவும் (பா : 11) மதீனக் கலம்பகத்தில் சந்த விருத்தத்தின் மூலமாகவும் (பா : 36) பாடப்பட்டிருப்பதைக் காட்டலாம். இரண்டாவது நிலைக்குச் சான்றாக எண்சீர் கழிநெடிலாசிரிய விருத்தத்தில் திருமதீனக் கலம்பகத்தில் காலம் (பா : 46) வண்டு (பா : 32) ஆகிய இரண்டு உறுப்புகளும் பாடப்பட்டிருப்பதைக் காட்டலாம்.

எனவே யாப்பு அமைப்பில் இஸ்லாமியக் கலம்பகங்களில் எந்த ஒரு வரன்முறையையும் கூறுவது கடினமாகும். மேலும் அனைத்துக் கலம்பகங்களும் 19ஆம் நூற்றாண்டினைச் சார்ந்திருப்பதால் ஏனைய பிற தமிழ்க் கலம்பகங்களில் இல்லாத அளவிற்கு யாப்பு வகைகளை இஸ்லாமியக் கலம்பகங்களில் காணமுடிகின்றது.

நந்திக் கலம்பகத்தில் தொடங்கிய கலம்பக இலக்கியம் இன்றைய நூற்றாண்டுவரை தோன்றிய வண்ணமிருப்பினும், அவற்றுள் இஸ்லாமியக் கலம்பகங்கள் தனித்ததொரு பொருளமைவினைப் பெறுவதால் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெறுகின்றன எனலாம். அத்துடன் இஸ்லாமியக் கலம்பகங்களின் நடையும் அவ்விலக்கியத்தில் இடம்பெற்றுள்ள அரபு, பாரசீகச் சொற்களும் இக் கலம்பகங்களை ஏனைய பிற தமிழ்க் கலம்பகங்களிலிருந்து பெரிதும் வேறுபடுத்திக் காட்டுகின்றன எனலாம்.

# அந்தாதி இலக்கியங்கள்

தமிழிலக்கியத்தின் பழைய பாவடிவங்களைத் தம் படைப்பிற்கு நிலைக்களனாகக்கொண்டுபுதுமைக்கருத்துக்களைக் கூறமுற்பட்டதின் விளைவால் வந்த பயன்களுள் ஒன்றே அந்தாதி இலக்கிய வகையாகும். பக்திச் சுவையூட்டும் கருத்துக்களும் காலத்தின் போக்கிற்கேற்பக் காணப்படும் மானிடர் வாழ்வியல் செயல்களும் எப்படி வாழ வேண்டும் என்ற நியதிகளும் அந்தாதி இலக்கியங்களில் காணப்படினும் இவ்விலக்கிய வகைகள் பெரும்பாலானவற்றில் விஞ்சி நிற்பது பக்தி மார்க்கத்தைச் சார்ந்த கருத்துக்களே ஆகும்.

தமிழிலக்கியத்தில் அந்தாதி இலக்கியப் பிரிவில் ஏறத்தாழ முந்நூறுக்கும் மேற்பட்ட இலக்கியங்களே வெவ்வேறான தலைப்புகளைப் பெற்றுவந்துள்ளன. இம் முன்னூறு இலக்கியங்களுள் பல சைவ, வைணவ சமயங்களை அடிப்படையாகக் கொண்ட சமயக் கோட்பாடுகள், வழிபாடுகள், திருத்தலங்கள் பற்றிய கருத்துக்களை உள்ளடக்கமாகப் பெற்றுள்ளன. இவ்விரண்டு சமயங்களுக்கும் அடுத்த நிலையில் எண்ணிக்கை அளவில் அதிகமான அந்தாதி இலக்கியங்களைப் பெற்றிருப்பது இஸ்லாமிய சமயமே ஆகும். கிறித்துவ சமயத்தைச் சார்ந்தனவாக மூன்றும், சமண சமயம் சார்ந்ததாக நூற்றந்தாதி என்ற ஒன்றும் காணப்படுகின்றது. எனவே பல்வேறு சமயக் கருத்துக்களை எடுத்துரைக்க இடைக்காலத்தே பெரிதும் பயன் பட்ட சிற்றிலக்கியங்களுள் ஒரு முக்கிய இடத்தை இவ்வந்தாதி இலக்கியங்கள் பெறுகின்றன எனலாம். அந்தாதி இலக்கிய வகைக்கு உள்ளடக்கச் செய்திகளில் இதனைத்தான் கூற வேண்டும் என்ற வரையறை கிடையாது. ஆனால் உருவம் பற்றி வரையறைகள் உண்டு. உருவம் தொடர்பான வரையறைகளின் அடிப்படையிலேயே ஓர் இலக்கியம் அந்தாதி என்னும் பெயர் பெறுகின்றதெனலாம்.

அந்தாதி இலக்கியத்தில் பாடப்படும் செய்யுள்களில் முதல் செய்யுளுக்கும் அடுத்த செய்யுளுக்குமிடையே உருவத்தின் அடிப்படையில் தொடர்பிருக்கும். அதாவது ஒவ்வொரு பாடலிலும் உள்ள இறுதி எழுத்து, அசை, சொல், அடி இவற்றுள் ஒன்று அடுத்த பாடலுக்கு முதலாக வரும்படி அமைத்துப் பாடுவதுடன் முதற்பாடலின் முதலும் இறுதிப்பாடலின் இறுதியும் ஒன்றாக இணையும்படி மண்டலித்து மாலைபோலத் தொகுத்துப் பாட வேண்டும். இதனை,

அந்த முதலாத் தொகுப்ப தந்தாதி
அசையினும் சீரினும் அடிதொறும் இறுதியை
முத்தா கிசைப்பின் அஃதந்தாதி தொடையே

என்று கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய காரிகை இலக்கண நூல் குறிப்பிடுகிறது. இத்தகைய உருவ அமைப்பில் உள்ள அந்தாதி இலக்கியங்களில் பல்வேறு சந்தங்களும், பல்வேறு பாக்களாக கொச்சகக் கலிப்பா, கலிவிருத்தம், கலிநிலைத்துறை, அறுசீர் ஆசிரிய விருத்தம், எண்சீர் ஆசிரிய விருத்தம் போன்ற இன்னபிற பா வகைகளும் இடம் பெறலாம்.

மேற்கூறிய உருவ அமைப்பில் பல்வேறு யாப்பு வகைகளைப் பெறுவதற்கேற்ப அந்தாதி இலக்கியங்கள் ஆறு பிரிவுகளாகப் பிரிக்கப் பட்டுள்ளன. 1. வெண்பா அந்தாதி, 2. கலித்துறை அந்தாதி, 3. யமக அந்தாதி, 4. திரிபந்தாதி, 5. நிரோட்டக அந்தாதி, 6. பதிற்றந்தாதி. இப்பிரிவுகள் ஒவ்வொன்றும் அந்தந்த யாப்பமைதி களுக்கேற்ப சிற்சில உருவ வேறுபாடுகளைப் பெற்றமைகின்றன. அந்தாதி இலக்கியங்களின் இவ்வுருவ அமைப்பானது ஏனைய பிற இலக்கியங்களிலிருந்து இவ்வகை இலக்கியங்களை வேறுபடுத்து வதற்கு உதவுவதுடன் இலக்கியம் படிப்போருக்கு உதவும் வகையிலும் அமைந்துள்ளது. ஏனெனில் முதல் செய்யுளுக்கும் அடுத்த செய்யுளுக்கு மிடையே தொடர்பிருப்பதால் தொடர்ந்து படிக்கவும், படிப்பனவற்றை மனதில் நிறுத்திக் கொள்ளவும் உதவியாக உள்ளது.

பொதுவாக அந்தாதி இலக்கியங்களுக்குப் பெயரிடுவதில் மூன்று நெறிமுறைகள் காணப்படுகின்றன. பெரும்பாலான அந்தாதி இலக்கியங்கள் பாடப்படும் திருத்தலங்களின் பெயர்களையே திரு மதீனத்தந்தாதி, நாகையந்தாதி என்பன போன்று பெற்றமைகின்றன. இன்னும் சில அந்தாதி நூல்கள் பாடப்படும் பாட்டுடைத் தலைவர் களின் பெயர்களைத் தலைப்பாகப் பெற்றுள்ளன. இதற்குச் சான்றாக, இஸ்லாமிய அந்தாதிகளுள் ஒன்றான 'முகையதீன் அப்துல் காதிறாண்டவர்கள் பேரில் பதிற்றந்தாதி'யினைக் குறிப்பிடலாம். இவ்விரண்டு வகையும் அந்தாதி இலக்கியங்களின் உள்ளடக்கத்தை அடிப்படையாகக் கொண்டே பெயர் பெறுகின்றன. மூன்றாவது நிலையாக வெகு சில அந்தாதி நூல்கள் வடிவங்களின் அடிப்படையில் ஆறெழுத்தந்தாதி, ஓரெழுத்தந்தாதி என்றும் பெயர் பெறுகின்றன.

## இஸ்லாமிய அந்தாதி இலக்கியங்கள்

தமிழ் அந்தாதி இலக்கிய வடிவத்தினடிப்படையில் எழுந்த பதின் மூன்று நூல்களை இஸ்லாமியத் தமிழிலக்கியப் பிரிவு தன்னகத்தே பெற்றுள்ளது. இவையனைத்தும் இஸலாமியக் கோட்பாடுகளையும்

இக்கோட்பாடுகளை வழிவகுத்துப் பரப்பிய சமயச் சான்றோர்களையும் அச்சான்றோர்களை உலகுக்களித்துத் தம்மைப் பெருமைப்படுத்திக் கொண்ட திருத்தலங்களின் சிறப்புக்களையும் எடுத்துரைப்பனவாக உள்ளன. இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய அந்தாதி இலக்கியங்கள் அனைத்தும் உள்ளடக்கங்களின் அடிப்படையிலேயே தலைப்பினைப் பெற்றுள்ளன. இவற்றுள் எட்டு அந்தாதிகள் உள்ளடக்கங்களின் அடிப்படையிலான தலைப்புக்களுடன் உருவம் பற்றிய கருத்தினையும் இணைத்து திருநாகை நிரோட்டக யமக அந்தாதி, திருநாகூர்த் திரிபந்தாதி என்பது போன்ற தலைப்புகளையும் பெற்றமைகின்றன. பதின்மூன்று அந்தாதி நூல்களுள் முகையதீன் ஆண்டவர் பேரில் பதிற்றந்தாதி, ஞான அந்தாதி ஆகிய இரண்டும் முறையே பாட்டுடைத் தலைவரின் பெயரிலும், பாடப்படும் பொருளின் அடிப்படையிலும் பெயர் பெற்றுள்ளன. ஏனைய பதினொரு அந்தாதி நூல்களும் பாடப்படும் திருத்தலங்களின் அடிப்படையிலே தலைப்பினைப் பெற்றுள்ளன. முஸ்லிம்களின் திருத்தலங்களாவன மக்கா, மதீனா, நாகூர், பதாயிகு பக்தாத் முதலான நகரங்கள். அந்தாதி நூல்களுள் ஆறு மதீன நகரம் பற்றிக் கூறுவதுடன் அந்நகரத்தின் பெயரையே தலைப்பாகவும் பெற்று உள்ளன. இஸ்லாமிய வரலாற்றில் மிக முக்கியமானதொரு இடத்தை மதீன நகரம் பெற்றுள்ளது, எனவே இந்நகரத்தவர்களையும் இந் நகரினையும் சிறப்பிக்கும் முகத்தான் பெரும்பாலான அந்தாதி இலக்கியங்கள் 'மதீன' என்ற பெயரில் எழுந்தன எனலாம். ஏனையவற்றுள் மூன்று அந்தாதி நூல்கள் நாகூர் திருத்தலத்தினையும் ஒன்று மக்கா நகரினையும், ஒன்று பதாயிகு நகரத்தையும், ஒன்று பக்தாத் நகரத்தையும் ஒன்று திருகோட்டாற்றினையும் முன்னிறுத்திப் பாடுவதாக அமைந்துள்ளன.

இஸ்லாமிய அந்தாதி நூல்களுள் பலவிதமான யாப்பு வகைகளும் இடம்பெற்றுள்ளன. யாப்பின் அடிப்படையிலான திரிபந்தாதி, வெண்பா அந்தாதி, பதிற்றுப்பத்தந்தாதி, யமக அந்தாதி முதலான அந்தாதிப் பிரிவுகளையும் காணமுடிகிறது. இவ்வந்தாதி நூல்களை காலவரிசைப்படி இனிக் காண்போம்.

## மதீனத்தந்தாதி

இஸ்லாமிய தமிழிலக்கிய அந்தாதி நூல்களுக்கு முன்னோடி இலக்கியமான இதனை எமனேசுவரத்தைச் சார்ந்த ஜவ்வாதுப் புலவர் இயற்றியுள்ளார். இந்நூல் கிடைக்கவில்லை. எனவே, இதனுடைய காலத்தை அறுதியிட்டுக் கூற முடியவில்லை. எனினும், ஜவ்வாது புலவர் மரணமடைந்தது *1808* ஆம் ஆண்டு என்பதால் இவ்வந்தாதி

நூலை இவர் இவ்வாண்டிற்கு முன்பே இயற்றி இருக்க வேண்டும். இவரும் சக்கரைப் புலவரும் ஒரே காலத்தவர்கள் என்பதால் சிலர் இவ்வந்தாதி நூலை சக்கரைப் புலவர் இயற்றியுள்ளார் எனக் கூறுகின்றனர். இக்கருத்து தவறானதாகும். திரு. பூர்ணலிங்கம் பிள்ளை தமிழ் இலக்கிய வரலாற்றில் மதீனத்தந்தாதியை சக்கரைப் புலவர் இயற்றியுள்ளார் என்றே குறிப்பிட்டுள்ளார். எனினும், ஜவ்வாதுப் புலவரே இவ்வந்தாதி இலக்கியத்தின் ஆசிரியர் என்பதற்கு இவர் இயற்றியுள்ள பிற நூல்களின் அகச் சான்றுகள் நமக்கு உதவுகின்றன. இவர் முகியித்தீன் ஆண்டகை பிள்ளைத் தமிழ், சீட்டுக் கவிகள், வண்ணங்கள் போன்ற பல இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்களைப் படைத்துள்ளார்.

## நாகையந்தாதி

தற்போது கிடைத்துள்ள இஸ்லாமியத் தமிழிலக்கிய அந்தாதி நூல்களுள் காதத்லால் முற்பட்ட இந்நூலை 1842 இல் காயற் பட்டினத்தைச் சேர்ந்த செய்கப்துல் காதிர் நைனார் லெப்பை ஆலிம் புலவரவர்கள் இயற்றியுள்ளார்கள். இந்நூலின் ஆசிரியரே ஒரு நல்ல உரையையும் இவ்வந்தாதிக்கு எழுதியுள்ளார், நாகையந்தாதிக்கு இதுவரையில் ஐந்து பதிப்புகள் வெளிவந்துள்ளன. முதற்பதிப்பினை 1842 ஆம் ஆண்டில் நூலாசிரியரே பதிப்பித்துள்ளார். 1872 ஆம் ஆண்டில் அதன் இரண்டாம் பதிப்பு வெளிவந்துள்ளது. மூன்ருவது நான்காவது பதிப்புக்களை மகுதூ முகம்மதுப் புலவர் முறையே 1872 இல் சென்னை மனோன்மணி விலாச அச்சுக்கூடத்திலும் 1895 இல் சென்னை பத்மநாப விலாச அச்சுக்கூடத்திலும் பதிப்பித்துள்ளார். ஐந்தாவது பதிப்பினை கயத்தாற்றினைச் சார்ந்த எம். கே. எஸ். இப்ராஹிம் சாகிப் அவர்கள் சென்னை கலராத்நாகரம் பிரஸில் 1914 இல் பதிப்பித்துள்ளார்.

இவ்வந்தாதியில் காப்புச் செய்யுள் நீங்கலாக நூறு செய்யுட்கள் இடம் பெற்றுள்ளன. நாகூரில் இருபத்தியெட்டு ஆண்டுகள் வாழ்ந்து அங்கு அடக்கம் பெற்றுள்ள குத்பு நாயகம் ஷாகுல் ஹமீது ஆண்டவர்களை முன்னிலைப்படுத்தி இவ்வந்தாதி அமைந்துள்ளது. உத்தரப் பிரதேசத்தைச் சார்ந்த மாணிக்கப்பூர் என்னும் ஊரில் பிறந்த நாகூர் ஆண்டவர், ஹளரத் செய்யது ஹஸன் குத்தூஸ் அவர்களுக்கும் அன்னை செய்யது பாத்திமா அவர்களுக்கும் பிறந்தவர்.

இவர் நபிகள் நாயகத்தின் இருபத்திமூன்றாவது தலைமுறையைச் சேர்ந்தவர் எனக் கருதப்படுகிறது. நாயகத்தின் பரம்பரை என்ற

சிறப்பினைப்பெற்ற இவர், தம்முடைய அறுபத்தியெட்டாவது வயதில் கி.பி. 1558ஆம் ஆண்டில் நாகூரில் இறப்பெய்தி நல்லடக்கம் செய்யப் பட்டுள்ள காரணத்தினாலேயே நாகூர் இஸ்லாமியர்களின் திருத்தல மாகக் கருதப்படுகிறது. ஏனைய பிற இஸ்லாமிய அந்தாதி நூல்களுக் கில்லாத சிறப்பம்சம் நாகையந்தாதியில் இடம்பெற்றுள்ளது. இதன் கண் உள்ள அத்தனை பாடல்களும் அவற்றின் பொருளமைதிக்கு ஏற்ப சிறுசிறு தொடர்களைத் தலைப்பாகப் பெற்றமைகின்றன. இது திருக் கோவையார் பாடல்களுக்கு அமைந்துள்ள கொலு போன்றதாகும். இவ்வந்தாதிச் செய்யுள்கள் நாகூராண்டவரின் பெருமையை அவரது வாழ்க்கை நிகழ்வுகளுடன் எடுத்துரைப்பதுடன் நாகூரின் மருதநில வளத்தையும் சிறப்புற எடுத்துரைக்கின்றன. இவ்வந்தாதிப் பாடல்கள் தோறும் ஆசிரியர் தம் உடல் பிணியை நீக்க நாகூராண்டவர் ஷாகுல் ஹமீது ஆண்டகையிடம் வேண்டுகின்றார். இந்நூலாசிரியர் சரீஅத்து மாலை போன்ற இஸ்லாமியத் தமிழிலக்கியங்களையும் படைத் துள்ளார்.

## முகையத்தீன் ஆண்டவர்பேரில் பதிற்றந்தாதி

இஸ்லாமியத் தமிழிலக்கிய அந்தாதி இலக்கியங்களுள் பதிற்றந் தாதி பிரிவில்முதற்கண் தோன்றிய இந்நூலை இயற்றியவர் நாகூரைச் சார்ந்த அல்லி மரைக்காயராகும். இவ்வந்தாதி 1878இல் நாகூர் தலைமை வித்துவான் வா.குலாம் காதிறு நாவலரவர்களால் சென்னை கலாரத்நாகர அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இந்நூல் அல்லி மரைக்காயர் இயற்றிய பிரபந்தக் கொத்து என்னும் தொகுப்பு நூலினுள் இடம்பெற்றுள்ளது. இதன்கண் காப்புச் செய்யுள் நீங்கலாக பத்துச் செய்யுட்கள் அடங்கியுள்ளன. காப்புச் செய்யுள், கழிநெடிலடி ஆசிரிய விருத்தப்பாவிலும் ஏனையவை கட்டளைக் கலித்துறையிலும் அமைந்துள்ளன. இவ்வந்தாதியில் அடங்கியுள்ள பத்துப்பாக்களும் ஜீலானில் பிறந்து பக்தாத் நகரில் அடக்கம் பெற்றுள்ள அப்துல் காதிர் முகையதீன் ஆண்டவர் அவர்களின் சிறப்பினை எடுத்துரைப்பனவாக உள்ளன. ஒரு செய்யுளில் 'தீன் விளைத்த குருவாமொலிகட்கு நாயகரே' (பா : 1) என்று தீன் என்னும் இஸ்லாமிய மார்க்கம் விளை வித்த சமயச் சான்றோர்களாகக் கருதப்படும் ஒலிமார்களுக்கெல்லாம் முகையதீன் ஆண்டவரவர்கள் குருவாக புகழப்படுகிறார். இத்தகைய சிறப்புப் பொருந்திய ஆண்டகையிடம் புலவர் தன் குறையைக் கூறி,

கண்டார் மொழியின ராசைக ணெஞ்சங் கதிர்த்தவிதி
கண்டா ரடியன் குறைநீங்கி நற்கதி கண்டிடவே
தண்டார் வனச மலர்பாத மெற்கென்றுந் தந்தருள்வர்
தண்டார் வனஞ் செறியும் பகுதாது தயாபதியே
(முகையத்தீன் ஆண்டவர் பேரில் பதிற்றந்தாதி : 7)

என்று வேண்டுகிறார். இவ்வந்தாதி ஆசிரியரான அல்லி மரைக்காயர் அசன்குசைனாண்டவர் பேரில் தசரத்தினம், ஹலறத்து சாகுல் ஹமீதாண்டவர்கள் பேரில் நவமணிமாலை போன்ற பிற இஸ்லாமிய இலக்கியங்களையும் இயற்றியுள்ளார்.

## பதாயிகு பதிற்றுத் திருக்கந்தாதி

இவ்வந்தாதி 1890 ஆம் ஆண்டு சு. மு. அசனா லெப்பையவர்களால் இயற்றப்பட்டதாகும். பதாயிகு பதிற்றுத் திருக்கந்தாதியை யாழ்ப்பாணத்தைச் சார்ந்த சுலைமான் லெப்பை என்பவர் பதிப்பித்துள்ளார். இவ்விலக்கியம் அசனா லெப்பையவர்கள் பாடிய பாடற்தொகுதியான புகழ்ப்பாவணி என்னும் தொகுப்பினுள் ஓர் அங்கமாக இடம்பெற்றுள்ளது. இத்தொகுப்பிற்குரிய சிறப்புப் பாயிரத்தைப் பதிப்பாசிரியரே இயற்றியுள்ளார். இதன்கண் காப்புச் செய்யுள் நீங்கலாக பத்து வெண்பா செய்யுள்கள் அடங்கியுள்ளன. இந்நூல் இஸ்லாமிய அந்தாதிகளுள் திருக்கந்தாதிப் பிரிவின்கீழ் இடம்பெறும் ஒரே அந்தாதியாகும். இவ்வந்தாதிக்கு விரிவான பதவுரையும், பொழிப்புரையும் நூலுடன் சேர்ந்தே இடம்பெற்றுள்ளது. இதனுடைய பாட்டுடைத் தலைவர் அகமதுல் கபீறுற் றிபாயி ஆண்டகையவர்களாவார். இவரது புகழையும், இவர் அடக்கம் பெற்றுள்ள பதாயிகு நகருக்குரிய சிறப்பையும் இவ்வந்தாதியில் ஆசிரியர் எடுத்துக் காட்டுகிறார்.

திருக்கந்தாதி என்பது அந்தாதி இனங்களுள் ஒன்றாகும். இதில் அந்தாதி இலக்கணங்கள் அனைத்தும் அமைவதுடன் முதல் எழுத்தொழிய ஏனைய எழுத்துக்கள் ஒவ்வொரு அடியாலும் ஒத்திருந்து பொருள் வேறுபட அமைந்திருக்கும். இத்தகு இலக்கணம் பதாயிகு பதிற்றுத் திருக்கந்தாதியில் சிறப்புற அமைந்துள்ளது. இவ்வந்தாதியின் முதல் செய்யுளிலேயே அகுமதுல் கபீறுற்றிபாயி ஆண்டகையவர்களின் புகழையும், பரம்பரையையும் ஆசிரியர் எடுத்துக்காட்டும்போது "மேகக் குடையினையுடைய மாதவராகிய மகுமூது நபியவர்களின் மகளாரும் பேசும் வார்த்தைக்கு இனிமையில் தேனுந் தோல்வியடைகின்ற மாதருமாகிய பாத்திமா நாயகியின் இனிய இளைய பிள்ளையின் மரபிலுதித்தவரே! நறிய பூக்களைக் கிண்டுகின்ற வண்டுகள் மிகுதியும் வண்மையுள்ள தேனைச் சொரிகின்ற அழகிய பதாயிகு நகரிலுள்ளவரே! மிகுதியாயுள்ள மேன்மையானதும் குறைவு படாததுமாகிய வேதத்தினது நீதி நெறியாகிய உண்மையை அருளிச் செய்வீராக!" என்று வேண்டுகின்றார். பதாயிகு ஆண்டவர் மலடிக்கு மகப்பேறளித்த வரலாற்றுச் செய்தியை 'வந்திக்குப் பாலனளித்தோர்' என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார். தம் மனம் இரட்சிப்பில்லாது இருளிலே துயில்

கின்றது, மேன்மேலும் எண்ணற்ற கேடுகளின் முன்பு தானழிந்து விடாமல் கடவுளின் பக்கம் மனமானது நிலைத்தற் பொருட்டு உறவினரும் நட்பினரும் மனமகிழும்படி வலிய யமன் மரணத்தை விளைவிக்கு முன்னரே தேனுள்ள வளப்பமுடைய தாமரை மலர் போன்ற பாதத்தையருள்வீராக! முத்துக்களைப் பெருமை பொருந்திய அழகிய அன்னப் பட்சிகள் தங்கள் முட்டைகளென்றணையா நின்ற பதாயிகிலுள்ளவரே!'' என்ற பொருளில்

இன்ன மனந்த மரிட்டமுன் யானிரியா திறைபான்
மன்ன மனந்த மரிட்டருண் மாழ்க வருத்துமுன்னர்
வன்ன மனந்த மரிட்ட வண்பூம்பத மீதிர்முத்தைக்
கொன்ன மனந்த மரிட்ட மென்றே கொள்...

(பதாயிகு பதிற்றுத் திருக்கந்தாதி : 7)

என்று தன்னைக் காத்தருள வேண்டுகின்றார்.

## திருமதீனத்தந்தாதி

இந்நூலை இயற்றியவர் திருச்சியைச் சார்ந்தவரும் ந, மு. வேங்கடசாமி நாட்டார், கம்பம் பீர்முகம்மது பாவலர், சோம சுந்தரம் பிள்ளை போன்ற தமிழறிஞர்களின் ஆசானுமாகிய இலக்கணக் கடல் ஆ. கா. பிச்சையிபுறாகீம் புலவராவார். இஸ்லாமியத் தமிழ் அந்தாதி இலக்கியங்கள் பதின்மூன்றில் நான்கினை ஆக்கித்தந்த பெருமை இவரையே சாரும்,

இந்நூலுக்கு நாகூர் தலைமை வித்துவான் வா. குலாம் காதிறு நாவலரவர்கள் நல்லதோர் உரை செய்துள்ளார். இவ்வுரையுடன் 1893ஆம் ஆண்டில் திருச்சி சௌத் இந்தியா டைம்ஸ் பிரஸில் முகம்மது செய்குமீரான் இராவுத்தர் திருமதீனத்தந்தாதியைப் பதிப்பித்துள்ளார். இந்நூலுக்குரிய சிறப்புப் பாயிரங்களை குலாம் காதிறு நாவலர், முகம்மது செய்கு மீரான் ராவுத்தர், சோமசுந்தரம் பிள்ளை உபாத்தி யாயர், சாமிநாதபிள்ளை, மதுரை முத்துப்பண்டிதர் முதலானவர்கள் ஆக்கித்தந்துள்ளார்கள்.

## திருமதீனத்து வெண்பா அந்தாதி, திருமதீனத்து யமக அந்தாதி திருமதீனத்துப் பதிற்றுப்பத்தந்தாதி

திருமதீனத்தந்தாதியின் ஆசிரியரான ஆ. கா. பிச்சை யிபுறாகீம் புலவரவர்களே மேற்குறித்த மூன்று அந்தாதிகளின் ஆசிரியருமாவார். இவ்வந்தாதிகள்மூன்றும் 1894ஆம் ஆண்டில் திருச்சி ஞாரனத்திநாகரம் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டுள்ளன. இம்மூன்று அந்தாதிகளும்

பிச்சை யிபுறாகீம் புலவரின் பாடற்தொகுதிகள் அடங்கிய பிரபந்தக் கொத்து என்னும் தொகுப்பில் அடங்கியுள்ளன. இஸ்லாமியத் தமிழிலக்கிய அந்தாதி நூல்களுள் எண்ணிக்கையில் அதிகமானவையும் பல்வேறு வகையினவுமான அந்தாதி நூல்களை இயற்றியவரும் பிச்சையிபுறாகீம் புலவரே ஆவார்.

வெண்பா அந்தாதியாவது அந்தாதி இலக்கணங்களுடன் அமையப் பெற்று, வெண்பா யாப்போடு கூடி அமைந்துள்ள செய்யுள்களைப் பெற்றிருப்பதாகும், யமக அந்தாதியாவது பாட்டின் நான்கடிகளிலும் முதற் சீரில் வந்த எழுத்துக்களே பொருள் வேறுபட அமைவதாகிய மடக்கு என்னும் அணி பொருந்தி ஒரு செய்யுளின் முடிவில் உள்ள எழுத்தோ, அசையோ, சீரோ, அடியோ அடுத்த செய்யுளின் முதலில் அமைந்து வரும் அந்தாதி வகையாகும். பதிற்றுப்பத்தந்தாதியில் அந்தாதி இலக்கண அமைப்புடன் அமைந்த பத்துச் செய்யுட்கள் அமைந்திருக்கும். பிச்சையிபுறாகீம் புலவரின் அந்தாதிகள் அந்தந்த வகைகளுக்கேற்ப இலக்கண பொருத்தங்களைப் பெற்றுள்ளன. இவ்வந்தாதி நூல்களின்கண் நபிபெருமானார் (சல்) அவர்களே பாட்டுடைத் தலைவராவர். உள்ளடக்கம் என்ற நிலையில் மூன்றிலும் நபிகள் நாயகம் (சல்) பற்றிய வெவ்வேறான செய்திகளும் மதீன நகரம் பற்றிய சிறப்புச் செய்திகளும் வெவ்வேறான அணி நலன்களில் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. மதீன நகரின் மீது பிச்சையிபுறாகீம் புலவரவர் களுக்கு உள்ள ஈடுபாட்டினை இவ்வந்தாதிகள் நன்கு உணர்த்து கின்றன.

## திருமக்காத் திரிபந்தாதி

இஸ்லாமிய அந்தாதி நூல்களுள் திரிபந்தாதிப் பிரிவின்கீழ் தோன்றியுள்ள முதல் அந்தாதி இலக்கியமாகும். இதன்ஆசிரியர் நாகூர் தர்கா தலைமை வித்துவான் குலாம் காதிறு நாவலர். இவ்வந்தாதி 1895ஆம் ஆண்டில் யாழ்ப்பாணம் வச்சிர யந்திரசாலையில் பதிப்பிக்கப் பட்டுள்ளது. திருமக்காத் திரிபந்தாதியில் நூறு செய்யுட்கள் அடங்கி யுள்ளன. அந்தாதி இலக்கிய வகையுள் மக்கா மாநகரினைப் பற்றித் தோன்றியுள்ள ஒரே அந்தாதியாகும் இந்நூல். இதற்குரிய சாற்று கவிகளை நாகூர் பக்கீர் முகியித்தீன் ராவுத்தர், ஆ கா. பிச்சை யிபுறாகீம் புலவர், யாழ்ப்பாணம் அசானா லெப்பை, சுலைமான் லெப்பை முதலானவர்களும், முகியித்தீன் பக்கீர், செய்யிது அப்துல் காதிறு ஆகியோரும் ஆக்கித் தந்துள்ளனர். இவ்வந்தாதியின் பாட் டுடைத் தலைவர் நாயகம் பெருமானார் (சல்) அவர்கள். மக்கா நகரினையும், அந்நகர் வாழ் மக்களையும் பாடல்களில் சிறப்புப்படுத்து கின்றார், ஆசிரியர். மக்கத்தாரைப் பின் தொடர்ந்தால் நல்வழி

உய்க்கும் எனவும் மனிதர்களின் பாவத்தை நீக்குங் குறி கருபா எனவும் சிறப்பிக்கப்படுகிறது. ஏனைய பிற இஸ்லாமிய அந்தாதி நூல்களில் இல்லாத அளவிற்கு இறசூலுல்லா அவர்களின் பாதையில் பின் தொடர்ந்து, அவர்களின் பிரதிநிதியாக இருந்து இஸ்லாமிய நன்நெறிப் படி ஆட்சி செய்த கலிபாக்களான அபூபக்கர் சித்தீக்கு (றலி) உமறு (றலி), உதுமான் (றலி), அலி (ரலி) முதலானவர்கள் பற்றிய செய்தி கள் திருமக்காத் திரிபந்தாதியில் இடம்பெற்றுள்ளன. அவற்றுள் ஒன்று

சித்திக் குமறுதுமா னலிதாழ் மக்கச் செல்வரன்றி
இத்திக் குமறு மையிலென் கொடுக்கு மிருங்கடத்து
முத்தீக் குமறு குளம்புதுப் பானையுண் முட்டிநின்று
கத்தீக் குமறு அவையிளொன் நின்றது கண்டிடவே
(திருமக்காத் திரிபந்தாதி : 31)

என இஸ்லாத்தின் முதல் நான்கு கலிபாக்கள் பற்றிக் குறிப்பிடுகிறது.

## காரையந்தாதி

பிறையாற்றினைச் சேர்ந்த மு. செ. சுல்தானப்துல் காதிறு அவர்கள் காரையந்தாதியை இயற்றியவராவார். இவ்வந்தாதி நூலினை 1915 ஆம் ஆண்டு இ. கே. மரைக்கார் என்பவர் மாயவரம் கமலா அச்சுக்கூடத்தில் பதிப்பித்துள்ளார். இந்நூல் அந்தாதி நடையில் இஸ்லாமியப் பெரியார் ஒருவரின் பெருமையை எடுத் துரைக்கும் நூறு செய்யுட்களைக் கொண்டுள்ளது. செய்யுள்கள் கட்டளைக்கலித்துறைப் பாவினால் ஆக்கப்பட்டுள்ளன. இதற்குரிய சிறப்புப்பாயிரத்தை இந்நூலாசிரியரின் ஆசானாகிய அ. முத்துத் தாண் டவராயப் பிள்ளை அவர்கள் எழுதியுள்ளார். ஏனைய பிற இஸ்லாமிய அந்தாதி நூல்களில் இல்லாத அளவிற்கு அதிகமான அகப்பொருள் துறையில் அமைந்த பாடல்கள் காரையந்தாதியில் இடம் பெற்றுள்ளன. இந்நகரில் மஸ்தான் சாஹிபு வலியுல்லா என்னும் சையித் தாவூத் அவர்கள் நல்லடக்கம் செய்யப்பட்டுள்ளார். இவர் ஹுசைன் (றலி) அவர்களின் இருபத்தைந்தாவது தலைமுறையைச் சார்ந்தவர். இவரது நல்லியல்புகளும் இவரால் காரைக்கால் நகருக்கு வந்தடைந்த பெருமைகளும் இவ்வந்தாதியின்கண் எடுத்துக் காட்டப்படுகின்றன.

## ஞான அந்தாதி

ஞான அந்தாதியைக் கோட்டாற்றினைச் சார்ந்தவரும் மெய்ஞ்ஞான சொரூபருமாகிய ஹலறத்து ஞானியார் சாகிபு வொலியுல்லா அவர்களே இயற்றியுள்ளார். இவர் ஞானப்பாடல்கள் பல பாடிச் சிறந்த ஞான மௌன குருவாக விளங்கினர், இந்நூல், இந்நூலாசிரியரவர்களின்

பரம்பரையில் வந்த மௌலவி ஞானியார் ஷெய்கு முஹியித்தீன் ஆலிம் சாகிபு அவர்கள் முயற்சியால் 1936 ஆம் வருடம் சென்னை கேசரி அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இவ்வந்தாதி, ஞானியார் சாகிபவர்கள் இயற்றிய பல மெய்ஞானப் பாடல்களின் தொகுப்பாகிய 'மெய்ஞானத் திருப்பாடற்றிரட்டு' என்னும் தொகுதியுள் ஓர் அங்கமாக இடம் பெற்றுள்ளது.

இஸ்லாமிய அந்தாதி நூல்களுள் ஞான இலக்கியத்தைச் சார்ந்ததாக இருப்பது ஞான அந்தாதி ஒன்றே ஆகும். இதில் பாயிரம் நான்கு, நான்கடி வெண்பாச் செய்யுட்களில் விளக்கம் பெறுகிறது. இவ்வந்தாதி நூலினுள் கட்டளைக் கலித்துறை பாவகையினைச் சார்ந்தனவாகப் பதினைந்து செய்யுட்கள் உள்ளன. இச்செய்யுட்கள் அனைத்தும் அந்தாதி இலக்கணத்துடன் முற்றுமடக்கு அணியையும் அடிதோறும் பெற்றமைகின்றன. கருணை வடிவாகிய அஹ்மதினை நினைவுகொண்டு உள்ளத்தில் நினைப்பதை ஆசிரியர்

உரைத்தே கருணை அஹ்மதென்றே யுன்னினைவு கொண்டும்
உரைத்தே யுரைக்குந் தொனியதி ராலெவ் வுயிருமதில்
உரைத்தே யுரைக்க உருவாய்ச் சமைந்து முளமகிழ்ந்தும்
உரைத்தே யுரைத்தது ஹாமீமென் றன்புகொ ளுண்முடிவே
(ஞான அந்தாதி : 8)

என்று கூறுகிறார். மேலும் ஞானியார் சாகிபு அவர்கள் தம் ஞான குருவை நினைத்தே இவ்வந்தாதியைப் பாடுகின்றார். இது, பாயிரச் செய்யுளில் 'ஹாமீ மந்தாதி ஆவறுதற்கு நின் பாதம்' என்று கூறியிருப்பதிலிருந்து தெரிய வருகின்றது. தன்னை அறிந்தவனே அல்லாஹ்வை அறிய முடியும் என்றும், உடல் உறுப்புக்களை அடக்கி இறைவழியையும் நினைத்து ஞானத் திருவருளாய் நிற்கும் உண்மைப் பொருள் காணும்படியும் கூறுகின்றார். ஞானியார் சாகிபு தத்து வார்த்தங்களை மிக எளிய நடைமுறை வார்த்தைகளில் வடித்திருப்பது இவ்வந்தாதிக்குரிய சிறப்பம்சமாகும். இந்நூலாசிரியர் ஞானக் கும்மி, ஞான ஆனந்தம், ஞானத் தேவாரம், ஞான அம்மானை போன்ற இன்ன பிற ஞானச் செய்யுட்கள் அடங்கிய தொகுப்புகளையும் இயற்றியுள்ளார்.

## நாகூராண்டவர் பற்றிய அந்தாதிகள்

நாகூராண்டவர் சாகுல் ஹமீது ஒலியுல்லாஹ் அவர்களைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு பாடப்பட்ட மேலும் இரண்டு அந்தாதி நூல்களை இஸ்லாமியத் தமிழிலக்கியம் பெற்றுள்ளது. அவை

திருநாகை நிரோட்டகயமகவந்தாதி, திருநாகூர்த் திரிபந்தாதி என்பன வாகும். இவற்றுள் யமக அந்தாதியை அசன் லெப்பை என்பவரும், திரிபந்தாதியை சதாவதானி செய்குத் தம்பிப் பாவலரும் இயற்றி யுள்ளார்கள். இவ்விரண்டு அந்தாதி நூல்களின் காலம்பற்றித் தெளிவாக அறிய முடியவில்லை. இரண்டு அந்தாதி நூல்களும் நாகூர் திருத்தலத்தின் சிறப்புக்களையும் அச்சிறப்புக்குக் காரணமாக அங்கு அடக்கம் பெற்றுள்ள சாகுல் ஹமீது ஆண்டகையவர்களின் பெருமைகளையும் எடுத்துரைக்கின்றன.

மேற்குறித்த பல்வேறு அந்தாதி இலக்கியங்களை இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியம் பெற்றிருப்பினும் விளக்க நிலை ஆய்விற்காக திருமதீனத்தந்தாதியை மட்டும் இங்கு எடுத்துக்கொள்வோம்.

## திருமதீனத் தந்தாதியின் உள்ளடக்கம்

திருமதீனத்தந்தாதியில் காப்புச் செய்யுள் நீங்கலாக நூறு செய்யுள் கள் இடம் பெற்றுள்ளன. இச்செய்யுள்கள் அனைத்தும் அந்தாதி இலக் கணத்திற்கேற்ப அமைந்திருப்பதுடன் முற்று மடக்கு என்னும் சொல்லணியுடன் அமைந்துள்ளன. சான்றாக நபிகள் நாயகம் (சல்) அவர்களின் பெருமையை எடுத்துரைக்கும் பின்வரும் செய்யுளை எடுத்துக் கொள்வோம்.

அண்ண லவனி தனையாளு நாயக ராணையில்வான்
அண்ண லவனி ரண்டாகச் செய்தேவ ரணிநிலையில்
அண்ண லவனி தையர்மின்னைப் போன்மதீ னத்தரருள்
அண்ண லவனி வனாமெனப் பாத மருள்குவரே

(திருமதீனத்தந்தாதி : 28)

இப்பாடலில் முன்னால் உள்ள செய்யுள் 'பித்தனையாக' மதீனத் தமர்ந்த நற்பேறண்ணலே' என்னும் அடியுடன் 'அண்ணலே' என்று முடிந்திருப்பதற்கேற்ப மேற்சொன்ன செய்யுள் 'அண்ணல்' என்று ஆரம்பித்திருப்பது அந்தாதி இலக்கியங்களுக்குரிய உருவ வரை யறையைக் காட்டுகின்றது. மேலும், இப்பாடலில் பதவுரையை நோக்கு வோமேயானால் இச்செய்யுளில் மடக்கு அணி அமையப் பெற்றிருப்பது நன்கு புலனாகும். 'அண்ணல் – பெருமையிற் சிறந்தவரும்; அவனி தனை ஆளும் நாயகர் – பூமியையாள்கின்ற தலைவரும்; ஆணையில் – தமதாக்கினையால்; வான் அண் அலவன் இரண்டு ஆக செய் வேதர் – ஆகாயத்திற் பொருந்திய சந்திரனிரண்டு பாதியாகப் பிளந்த வேதத் தையுடையவரும்; அணி நிலையின் அள் நல வனிதையர் – அழகிய

மேல்மாடத்தின் கண்ணொருங்கிய நல்ல பெண்கள்; மின்னை போன்ற மதீனத்தர்—மின்களை யொக்கும் மதீனமா நகரத்தினருமாகிய நபி பெருமானார்; அருள் அள் நலவன் இவன் ஆம் என தமதருளாகிய சமுத்திரத்திற் கொஞ்சத்தையள்ளிய நல்லவனா மிவ னென்று; பாதம் அருள்குவர் - திருவடிகளை யெனக்குத் தருவார்' என்பதாகும். இப்பதவுரையின் மூலம் 'அண்ணலவனி' என்னும் ஒரே சொற்றொடர் நான்கு அடிகளிலும் நான்கு பொருள் தரும்படி ஆசிரியர் செய்யுள் அமைத்திருப்பது நன்கு புலனாகும்.

திருமதீனத்தந்தாதியில் இறைத் தூதராம் இறசூலுல்லா (சல்) அவர்களே பாட்டுடைத் தலைவராவார். இஸ்லாமிய மார்க்கத்தில் மதீன நகருக்குரிய முக்கியத்துவத்தை நம் மனத்தில் நிறுத்தி அதற் கேற்ப இந்நூலை ஆக்கித் தந்துள்ளார் பிச்சை இபுறாகீம் புலவர். இந்நூலின் உள்ளடக்கம் என்ற நிலையில் மதீனத்தந்தாதியில் கருத் துக்களை நான்கு வெவ்வேறான நிலைகளில் நாம் அணுகலாம். முதலாவதாக நாயகம் பெருமானாரின் (சல்) சிறப்புக்களையும் அதனை எடுத்துரைக்கும் முகத்தான் அன்னாரின் வாழ்வில் நடந்த சரித்திரச் சம்பவங்களையும் தம் செய்யுள்களுக்குரிய பொருளாக அமைத்துக் கொள்ளுதலாகும். இரண்டாவது நிலையில் இஸ்லாத்தில் மதீன மாநகரத்திற்குரிய தனிச் சிறப்பினைக் கூறுதல் பொருட்டு அந்நகரின் எழில் பெருமைகளை உள்ளடக்கச் செய்தியாகக் கொள்ளுதலாம். மூன்றாவது இஸ்லாமியக் கோட்பாடுகளை விளக்கிக் கூறும் பொருட்டு அல்குர்ஆனின் அறக்கருத்துக்களை ஆசிரியர் எடுத்துக்காட்டும் விதத்தில் பாக்களை அமைத்துக் கொள்ளுதலாகும். நான்காவது மானுடர்களின் இழிநிலைகளை அடித்துரைத்துக் காட்டும் நோக்கில் தம்மைத் தாமே ஆசிரியர் பழித்துரைப்பது போன்ற கருத்தமைவில் பா புனைதலாகும். இந்நான்கு நிலைகளையும் ஒன்றன்பின் ஒன்றாகக் காண்போம்.

இறைத்தூதர் நபிநாதர் முகம்மது (சல்) அவர்களின் சிறப்புக்களை எடுத்துரைக்கும் செய்திகளே பெரும்பாலான பாக்களின் உள்ளடக்கச் செய்தியாகும். பாடல்தோறும் 'மதீனத்துக் கொற்றவரே!' என்றும் 'மதீனம் முதல்வரே!' என்றும் நாயகம் (சல்) அவர்கள் புகழப்படு கிறார்கள். மேலும், நபிகள் நாயகம் (சல்) பெருமை பொருந்திய மனமாவது கவர்கின்ற கரும்பினது அருமருந்தன்ன சாற்றையொத்த அல்குர்ஆன் வேதத்தையுடைய மதீன மாநகரத்துத் தலைவரும், திசைகள்தோறும் தமது சரீரத்து அருமையான கஸ்தூரி வாடையை மணக்கச் செய்பவருமாவர். இவ்வுலகில் உள்ள பாவிகள் நரகத்துத் தள்ளப்படினும் நபி பெருமானார் 'ஷபாஅத்' தென்னும் மன்றாட்டத்

தான் அவர்களை மீட்கும் சிறப்புடையவரென்பதும் காட்டப்படுகிறது நாயகம் (சல்) அறபுக்கும் அஜமுக்கும் நபியாதலின் இதனைக் காட்டும் பொருட்டு 'அறபாதிபதிக்கு அத்தர்' (பா : 16) என்றும் சந்திரனுக்கும் சூரியனுக்கும் அவரொளியே ஒளியாகலின் அவற்றிற்கு மேலா மொளியர் என்பதை உணர்த்த 'மதிக்கு அத்து அருணற்கு மேலாம் ஒளியர்' (பா : 16) என்றும் புகழப்படுகின்றார்கள்.

நபிகள் திலகம் (சல்) அவர்களின் வாழ்வில் நடந்த பல அதிசய வரலாற்றுச் சம்பவங்களையும் ஆசிரியர் இவ்வந்தாதியில் எடுத்துக் காட்டுகின்றார். இஸ்லாமிய மார்க்க காலத்தின் ஆரம்பக் கட்டத்தில் நாயகம் (சல்) பிறந்தகமான மக்காவிலிருந்து வெளியேற வேண்டிய காலச் சூழல், அதுதான் ஹிஜ்றி ஆண்டாக நம்மிடையே நிலைபெற் றுள்ளது. அத்தகைய ஹிஜ்றி ஆண்டின் துவக்கத்தில் நாயகத்திற்கு (சல்) ஏற்பட்ட சோதனைகளோ எண்ணற்றவைகள். ஒரு முறை தீனுல் இஸ்லாம் மார்க்கத்தை நிலை நிறுத்தும் பொருட்டு நாயகம் (சல்) அவர்கள் ஹபீபு அரசரைச் சந்தித்தார்கள். அப்போது அண்ணல் நபி (சல்) அவர்களின் நபித்தன்மையில் சந்தேகமுற்று அவரின் புனிதத் தன்மைக்கும் புகழுக்கும் சோதனை செய்ய வேண்டி ஹபீபு அரசர் "அமாவாசை இருளில் அபூகுபைசு என்னும் குன்றின் சிகரத்தில் ஏறி நின்றுகொண்டு பூரணசந்திரன் உதயமாகும்படி நபி (சல்) அவர்கள் செய்யவேண்டும் என்று கூறினார். அத்துடன் உதயமாகும் சந்திரன் கஃபத்துல்லாவையும் நாயகத்தையும் (சல்) வணங்கிவிட்டு நபி பெரு மானார் (சல்) அவர்கள் தரித்திருக்கும் மேலங்கியுள் புகுந்து அங்கிருந்து இரண்டு பிளவாகி ஒரு பிளவு வலக்கைச் சட்டை வழி யாயும், மறுபிளவு இடக்கைச் சட்டை வழியாயும் வெளிவந்து இரு பிளவும் எதிர் நின்று ஒரு பிளவு குண திசையிலும், மறுபிளவு குடதிசை யிலும் சென்று இரண்டும் அவ்வழியே வந்து ஆகாயத்தில் ஒன்றாய்ப் பொருந்தி நின்று பிரகாசிக்க வேண்டும். அதன்பின் மறுபடியும் அச்சந்திரன் வாய்திறந்து 'அல்லாஹுதஆலா ஒருவனே இறைவன். அவனுடைய வேதத்துக்கு உரிய தூதராகிய முகம்மது உண்மையான நபி; அவருடைய இஸ்லாம் என்னும் மார்க்கம் பரிசுத்தமானது' என்று உலகறியச் சப்தமிட்டுச் சொல்ல வேண்டும்" என்று ஹபீபு அரசர் கேட்டுக் கொண்டார். இதனை மெய்ப்பிக்க நபிநாயகம் (சல்) அவர்கள் அபூகுபைசு குன்றின் மீது ஏறி நின்று 'பூரணச் சந்திரன் வரச் செய்வாயாக' என்று அல்லாஹ்விடம் துவா கேட்க உடனடியாக சந்திரன் தோன்றி, நபி (சல்) அவர்களை வழிபட்டு பிளவுபட்டது. இந்நிகழ்ச்சியை பிச்சையிபுறாகீம் புலவர் தம் மனத் திற்கு எடுத்துரைப்பதுபோல்

மலங்க லையப் பதமின்றே பெறுவ மருண்மனனே
மலங்க லையம் மதீனத்தினெந் நாயகர் வாழ்த்தல்செய்யா
மலங்க லையம் மதிபோழ்கெனப் போழ்ந்திட்ட வள்ளன்மிகு
மலங்க லையன் னபலம் பெறுதோளர் மனங்கொள்ளினே

(திருமதீனத்தந்தாதி : 17)

என்று எடுத்துக் காட்டுகின்றார்.

ஒரு முறை நாயகம் (சல்) பயணம் மேற்கொண்டிருந்தபோது கடும் வெப்பத்தினால் பாலை நிலத்தில் தண்ணீர் கிடையாது இன்னல் அடைந்த அனைவரது தாகத்தையும் நீக்கும்பொருட்டு தம் திருவருளால் சுரத்திடையே தண்ணீர் வரவழைத்தார்கள், இச்செய்தியை,

கவனம் தன்அம்பதத் துள்பெறுமா படைகானில் புசிக்க
கவனந் தனம்பதர் மாக்கட் களித்தலின் கையழைத்த
கவல்நந் தனம் பதணம் சூழ் மதீனத்தார்......

(திருமதீனத்தந்தாதி : 10)

என்று குறிப்பிடுகின்றார். இது போன்ற இன்னபிற வரலாற்று நிகழ்வுகளும் இவ்வந்தாதி இலக்கியத்துள் நிரம்பக் கிடக்கின்றது. நபி பெருமானார் (சல்) அவர்களுடைய பெருமைகளையும், காலப் பின்புலத்தையும் வாசகர்கள் நன்கு புரிந்து கொள்வதற்கு ஓர் உத்தியாகவே இவ்வரலாற்றுச் சம்பவங்களைத் தம் செய்யுட்களின் உள்ளடக்கச் செய்தியாக பிச்சைபிபுறாகீம் புலவர் கொண்டுள்ளார் எனலாம்.

நாயகம் சல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் பிறந்ததும், நபிப்பட்டம் பெற்றதும், மார்க்கத்தை முதலில் விளக்கத்தலைப்பட்டதும் மக்காவிலாயினும் மாற்றாரோடு எதிர்த்து நின்று அரசு புரிந்தது மதீன மாநகரமே ஆகும். அத்துடனல்லாமல் மக்காவிலிருந்து பெருமானார் (சல்) இஸ்லாத்தின் ஏகோபித்த இறைவணக்கத்தை ஏற்க மறுத்தவர் களால் துரத்தப்பட்டபோது அண்ணலவர்களை அரவணைத்து அடைக்கலமளித்து, ஏகோபித்த இறை வணக்கத்தை முதலில் ஏற்றுப் போற்றி நடக்கத் துணிந்தவர்களும் மதீன நகர் வாசிகளே ஆகும். அதனால் மக்காவைக் காட்டிலும் சிறப்பினை மதீன நகருக்கு அளிக்கும் பொருட்டு ஆசிரியர் இவ்வந்தாதியின் முதற் செய்யுளிலேயே மதீன நகரின் பிற்பாடே மக்கா நகரின் சிறப்பினை பின் வருமாறு உணர்த்துகின்றார்.

திருமதீ னத்துமின் பேயமையத் திங்கள்சேர் மங்குல
திருமதீ னத்துமின் செய்யகழ் மக்கத்துஞ் செவ்விசெய்கு
திருமதீ னத்துமின் பாதத்தும் வைமெனிற் றேவருண்மு
திருமதீ னத்துமின் மானிடர் காணீர் தினந்தினமே
(திருமதீனத்தந்தாதி : 1)

என்று நாள்தோறும் திருமதீன நகரத்தின் மீது மனம் வைக்க வேண்டும் என்பதை எடுத்துரைக்கின்றார். இத்தகைய மதீனமா நகரம் அயலராக வருகின்றவர்களின் துன்பத்தைப் போக்குமாம். (பா : 3) மானுடர்களின் துன்பத்தை மட்டுமல்ல, தஞ்சமென்று போகின்ற விலங்கு, புள் முதலானவற்றின் துன்பத்தையும் போக்குமாம்.(பா : 45) இத்தகைய முறையில் துன்பம் என்று வருவோரை அரவணைத்துப் போவதாலோ என்னவோ ஒரு செய்யுளில் மதீனமாநகரினை 'தாய் மதீனம்' (பா : 31) என்றே ஆசிரியர் குறிப்பிடுகின்றார். இத்தகு தாய் மதீன நகரின் எழிலும், இயற்கை அழகும் பல பாடல்களில் வர்ணிக்கப்படுகிறது. 'அன்னமானது பவளம்போலும் தனதழகிய கால்களால் தாக்க தாமரை மலர்கள் மலருகின்ற அழகிய வயல்கள் சூழ்ந்திருக்குமாம்'. இதனை 'அனம் துவர் அம்கால் தாக்க வீமலர் ஏர் மதீனம்' (பா : 24) என்பார். மேலும் மதீனமாநகரம் யுகமுடிவின் காலத்தும் தஜ்ஜால், குறுமூசு என்னும் தறுகண்ணரால் ஏனைய நகரங் களைப் போல் அழிவுறாதாகலின் இதனைக் காட்டும் வகையில் கன்னி நகரம் என்னும் பொருளில் 'களி ஆய் அம் பெறு சோ மதீனம்' (பா :50) என்று கூறுகின்றார்.

இத்தகு சிறப்புப் பெற்ற மதீன நகரில் வாழும் மாந்தர்களின் பெருமைகளைப் பல பாடல்களில் ஆசிரியர் எடுத்துரைக்கிறார். 'தடுமாற்றத்தினை அழிக்கும் மதீனத்தீர்!' (பா : 4) 'வெற்றியையும் பெருமையையும் தருக்கையும் புனைந்த மதீனத்தீர்! (பா : 7). 'கடவுளது தூதராகி முதன்மையாக வரும் பெருமையாகிய மதீனத்தீர்!' (பா : 13) என்பது போன்று பலவாறாக தீனுல் இஸ்லாமின் கருத்துக் களை ஏற்றுப் போற்றியமையால் மதீன நகர் மக்கள் பிச்சை யிபுறாகீம் புலவரவர்களல் சிறப்பிக்கப்பட்டுள்ளனர்,

திருமதீனத்தந்தாதியில் ஆங்காங்கே பல பாடல்களில் இஸ்லாமியக் கோட்பாடுகள் சுட்டிக் காட்டப்படுகின்றன, இஸ்லாமியர்களின் கடமைகளுள் ஒன்றான நோன்பு நோற்றலை மறப்பவர் பலர். இத்தகைய பலருள் தன்னையும் சேர்த்துக் கொண்டார் அசிரியர்,

பதிய விரத மலர்த்தாள் வையாது பல தினந்த
பதிய விரத புருளாங் கிணைந்தனன் பற்றுமதி
(திருமதீனத்தந்தாதி : 67)

என்று, 'மறுமைத் துணையாக யாவரும் பற்றிக் கொள்கின்ற அரசரே! விரிந்த பள்ளத்தினையுடைய அகழானது முத்துக்களைப் பிரகாசிக் கின்ற அழகிய மதீன மாநகரத்தினையுடையவரே! பகலினு மிரவினும் முப்பது நோன்புகளுடன் வணக்கத்தையுஞ் செய்யாதவனாகியுள்ளேன்' என்று வருந்துகின்றார்.

பிறிதொரு பாடலில் ஹஜ் கடமையை உணர்த்தும் போது பல தலங்களுக்குத் தாய் போல வந்த மக்கமா நகரத்திற்போய் ஹஜ் ஜையும், நலல சோலைகள் வார்ந்தோடுதலையுடைய அழகிய தேனைக் கொடுத்து ஆராயுமிடத்து அழகிய கற்பகச் சோலையை யொக்குகின்ற மதீன மாநகரத்திற் போய் தங்களது (றசூலுல்லாவின்) பூப்போலுந் திருவடிகளைத் துதித்தலாகிய சியாறத்தையுஞ் செய்ய அடியேன் மனத்திற் கருதுதல் பூமியின் கீழ்ப் பாதாளத்தைக் கடந்து போய் வருத்தத்துடன் இவ்விடத்திலுள்ள பொன்னைப் பெறும்படி விரும்பியதொக்கும் என்ற பொருளமைப்பில்

தலங்க டந்தாயினுறு மக்கத் தச்சுநற் றண்டலைவார்
தலங்க டந்தாயி னங்காப்போன்ம் மதீனத்துந் தாரடியேத்
தலங்க டந்தாயி யைகூடா வகத்துனற் றாசனின்பா
தலங்க டந்தாயி டைப்பொன் பெறவேட்டது தாவத்தினே
(திருமதீனத்தந்தாதி : 91)

எனப் பாடியுள்ளார்.

ஒவ்வொருவருடைய மரணத் தறுவாயிலும் இறசூலுல்லாஹ் வருதல் இஸ்லாமிய மார்க்கத்தில் உள்ளடங்கிய கருத்தாகலின் இதனை உணர்த்தும் வகையில் 'அந்தர் தவறும் களைகேன் என்னை வந்து அளிப்பவர்' என்றும், இஸ்லாம் மார்க்கத்தில் ஒவ்வொரு விஷயமும் அழகியதாகலின் இதனை உணர்த்தும் வகையில் 'அங்கள்' எனப் பன்மை விகுதி கொடுத்து 'நல்மறை விளக்குவார் அம்கள் தலை உறுவழி செல்வம்' என்று நல்ல வேதமாகிய குர்ஆன் விளக்கஞ் செய்வோராகிய நபி பெருமானாரது அழகுகளையுடைய தலைமை பொருந்தின நல்வழியில் போவோமாக!' என வழிபடுத்துகிறார் ஆசிரியர்.

ஓர் இலக்கியப் படைப்பாளனின் எண்ணத்தினுள் அவன் வாழும் காலச் சூழலும் முக்கிய இடத்தைப் பெறுவதால் அதன் பிரதி பலிப்பினைத் தம் படைப்பில் தவிர்க்க முடியாமல் போகின்றது. இவ் வகையில் திருமதீனத்தந்தாதி இலக்கியத்துள் பல செய்திகளைக் காணலாம். பிச்சையிபுறாகீம் புலவர் உலகில் குற்றங்களை எடுத் துரைக்கும் நோக்கில் தம்மைதாமே பழித்துரைப்பதைப்போல் உள்ளது.

தம் மனத்தை ஞானப் பிரகாசமின்மையால் இருளென்றும், எவர்க்குந் தீங்கு செய்கின்றமையால் பாம்பென்றும், அன்பினுக்குருகாமையால் கல்லென்றும் ஒப்புமைப்படுத்துகின்றார் (பா : 3) அத்துடன் உலகின் பொருளாசையில் மயங்கிக் கிடக்கின்ற தம் நிலையை மாற்ற தம்மிடத்துத் தினை அளவும் அறிவு இல்லை (பா : 4) இதனால் நபி பெருமான் (சல்) அவர்களின் தாமரை மலர்போலும் திருவடிகளை மறந்துவிட்டு பூமி காடென்றும் பொருள் அருளென்றும் விடாது நினைத்து வருந்தியிருப்பதோடல்லாமல் (பா : 9) ஒலிக்கின்ற மணி களழுத்திய சிலம்பினையும் மையலையுமுடைய பிரகாசிக்கின்ற செம் பஞ்சுண்ட சிற்றடியாராகிய பெண்களுக்கு மயங்கினோம் (பா ; 20,24). அதனால் இனி பெறுவதென்ன? என்று வினவுகின்றார். எனவே பாவ மாகிய கொடிய நோய் தன்னை வந்தடைவதிலிருந்தும், பாம்பைப் போல் மாயையுடைய பேய் கவ்வுவதிலிருந்தும் காக்கும்படி வேண்டு கின்றார் (பா :25).

தம்மைப் பழித்துரைத்தலைப் போலவே தம் சுற்றத்தாரை நோக்கி 'சுற்றத்தீர்! தானத்தையும் தவத்தையும் மனவுவப்புடன் யாம் செய்தே மல்லேம், இனியும் சோர்வுற்றிருந்தால் நம்முடைய மிக்க குற்றங்கள் தீர்வதெப்படி? மனத்தினாற் இழைத்த வீண் பாவம் போகச் செய்கின்ற மதீன மாநகரத்தினையுடைய நபி பெருமானாரவர்களது திருவடிகளே துணையாம். அத்திருவடிகளை யாம் தலையினும் மனத்தி னும் தாங்குவோமாக என்கிறார்.

தானந் தவம்னவின் பிற்செய் தேமலஞ் சாம்பியிருந்
தானந் தவமறுத் தீர்வதெவ் வாறு தமிரிர்மனத்
தானந் தவமகலச் செய்மதீ னத்தர் தங்கள்பதந்
தானந் தவமய மேதுணை யாமதைத் தாங்குவமே

(திருமதீனத்தந்தாதி : 70)

அவ்வாறில்லையெனில் சுற்றத்தீர் நமருள் ஒவ்வொருவருமாகத் தமது பாவங்களைப் பார்த்தறிதலைச் செய்வோம். இப்பொழுதே நாம் வீணாக இறந்துபடுவோமாயின் அவ்விறப்பின் முடிவில் பெருமானார் நாயகமவர்கள் கிருபை செய்யார். எனவே, இப்பொழுதே அவரது திருப்பதங்களைப் பற்றி அவரது வழி நடப்போமாக என்று மானிடர் களின் நல் வாழ்விற்கு நற்பாதையை அமைத்துக் காட்டுகின்றார் திருமதீனத்தந்தாதி ஆசிரியரான பிச்சையிபுராகீம் புலவர்.

திருமதீனத்தந்தாதி போன்றே ஒவ்வொரு இஸ்லாமிய அந்தாதி இலக்கியங்களும் விரிந்துபட்ட அளவில் இஸ்லாமிய நெறிமுறைகளை உள்ளடக்கியுள்ளன. எனவே, தம் சமயக் கருத்துக்களை எடுத்துரைப் பதற்கு முஸ்லிம் புலவர்கள் அந்தாதி இலக்கிய வகையை நன்கு பயன்படுத்திக்கொண்டனர் எனலாம்.

# ஆற்றுப்படை

சிற்றிலக்கியங்களுள் காலத்தால் முந்தியதும் மிகவும் தொன்மை வாய்ந்த இலக்கிய வகை என்ற சிறப்பைப் பெறுவதும் ஆற்றுப்படை இலக்கியங்கள் எனலாம். ஏனைய தமிழிலக்கிய பிரபந்தங்களுக் கில்லாத சிறப்பு ஆற்றுப்படை இலக்கியங்களுக்குண்டு. தமிழிலக் கியத்துள் சங்கச் சான்றோர்களால் போற்றி வளர்க்கப்பட்ட ஓர் இலக்கிய வகையே ஆற்றுப்படை எனலாம். ஆற்றுப்படை என்பதற்கு வழிப்படுத்துதல் என்பது பொருளாம். புரவலன் ஒருவனிடம் பரிசில் பெற்று வரும் இரவலன் ஒருவன் வறுமையில் வாடும் அவனைப் போன்ற பிறிதொருவனை தாம் பரிசில் பெற்று வந்த புரவலனிடம் வழிப்படுத்துதலே ஆற்றுப்படைச் சிற்றிலக்கியத்தின் பொதுவிலக்கணம் எனலாம். சங்க காலத்துத் தோன்றிய இவ்விலக்கிய வகை தமிழிலக்கிய வரலாற்றின் சிற்றிலக்கிய காலத்தே பல்கிப் பெருகி தனித்ததொரு இலக்கிய வகையாக மலர்ந்து மணம் பரப்பியது.

## ஆற்றுப்படை இலக்கண விளக்கம்

ஆற்றுப்படை இலக்கிய வகைக்குரிய இலக்கண விளக்கம் புறத் திணை இலக்கண நூலாகிய தொல்காப்பியம் புறப்பொருள் வெண்பா மாலை ஆகியவற்றில் நிறைந்துள்ளன. தொல்காப்பியர் கூறிய பாடாண் திணைக்குரிய துறைக்கருத்து ஆற்றுப்படை இலக்கியத்தின் விளக்கமாக அமைந்திருப்பதைக் காணலாம். அஃது பின்வருமாறு அமையும்.

> கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
> ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்
> பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்
> சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்

தொல்காப்பியத்துக்குப் பின் வந்த புறப்பொருள் வெண்பா மாலை போன்றன ஆற்றுப் படையின் உள்ளடக்கக் கருத்துக்களுக்கேற்ப வகைப்படுத்தி அவற்றை பாணாற்றுப்படை, கூத்தராற்றுப்படை, பொருநராற்றுப்படை, விறலியாற்றுப்படை என வேறுபடுத்திக் காட்டின.

தொல்காப்பியர் காலத்தே தமிழிலக்கியத்தின் இலக்கணத்தில் விளக்கப்பட்டுள்ள ஆற்றுப்படை இலக்கியம் சங்க காலத்தே தனித்ததொரு சிற்றிலக்கிய வகையாக உதயம் பெற்றுள்ளது. இதற்குச் சான்றாக சங்க காலத்து பத்துப்பாட்டுச் செய்யுள் களில் உள்ள ஆற்றுப் படையான திருமுருகாற்றுப்படை, சிறு பாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை, கூத்தராற்றுப்படை முதலானவற்றைக் கூறலாம். சங்கதில் இடம்

பெறத்தக்க தொன்மை வாய்ந்த ஆற்றுப்படை இலக்கியங்களின் தோற்றம் இடைக்காலத்தே தொடர்ந்து தமிழிலக்கியப் பரப்பில் தனித்த தொன்மை வாய்ந்த சிற்றிலக்கிய வகை என்னும் பெருமை யையும் பெற்றிருப்பதை நன்கறியலாம்.

## இஸ்லாமிய ஆற்றுப்படை இலக்கியத்தின் தோற்றம்

சிற்றிலக்கிய வடிவங்களின் பலவற்றில் தங்களது இலக்கிய ஆக்கத்தை உருவாக்கிய முஸ்லிம் புலவர்களின் கவனத்தை ஆற்றுப் படை இலக்கிய வகையும் கவர்ந்தது, இதன்பயனாக புலவராற்றுப் படை எனும் பெயரில் இரு நூல்கள் உருவாயின, இவற்றுள் முதல் நூலினை உருவாக்கியவர் நான்காம் தமிழ்ச் சங்கப் புலவராக வாழ்ந்து மறைந்த குலாம் காதிறு நாவலராகும், புலவராற்றுப்படை என்பது மதுரைத் தமிழ்ச் சங்கத்திடமிருந்து பரிசில் பெறாத புலவர் ஒருவரை தாம் பரிசில் பெற்று வந்த தமிழ்ச் சங்கத்தின்பால் வழிப்படுத் துதல் ஆகும், இதற்கேற்பவே குலாம் காதிறு நாவலரின் புலவராற்றுப் படையும் அமைந்துள்ளது, இதனை குலாம் காதிறு நாவலர் மதுரை தமிழ்ச்சங்கத்தில் கி.பி. 1901 ல் அரங்கேற்றம் செய்வித்துள்ளார். இதற்கான அகச்சான்றுகள் நூலினுள் காணக்கிடக்கின்றன. இதற்குப் பின் 1904 இல் ஒரு பதிப்பும் 1938 இல் பிறிதொரு பதிப்பும் புலவராற் றுப்படைக்கு வந்துள்ளது.

## புலவராற்றுப்படையின் பொருளமைதி

ஆற்றுப்படை இலக்கணத்தைப் பிற்காலத்து பன்னிருபாட்டியல் பின்வருமாறு கூறும் :

புரவலன் பரிசில் கொண்டு மீண்ட
இரவலன் வெயில் தோறும் இருங்கானத்திடை
வறுமையுடன் வரூஉம் புலவர் பாணர்
பொருநர் விறலியர் கூத்தர்க் கண்டப்
புரவலன் நாடூர் பெயர் கொடை யராஅய்
அங்கு நீ செல்கென விடுப்ப தாற்றுப்படை

(பன்னிரு பாட்டியல் : நூற்பா : 202)

மேற்குறித்த இலக்கண வரம்பிற்கேற்பவே குலாம் காதிறு நாவலரின் புலவராற்றுப்படையில் பொருளமைதியும் அமைந்துள்ளது. இந் நூலுள் ஆசிரிர்ய பரிசில் பெற்று வந்த புலவன் பிறிதொருவரை சங்கத்தின்பால் ஆற்றுப்படுத்துவதாக அமைந்துள்ளது. ஆற்றுப் படையின் பொருளமைதியில் பாட்டுடைத் தலைவனின் புகழ், பெருமை வீரம், கொடை முதலான இன்னபிற பண்பு நலன்களும் புரவலனின் ஊருக்குச் செல்லும் வழி இயல்புகளும் சிறப்பித்துப் பாடப்படும் என்பதற்கேற்பவே குலாம் காதிறு நாவலரும் தமது ஆற்றுப்படை இலக்கியத்தின் பொருளமைதியை அமைத்துக்கொண்டுள்ளார்.

குலாம் காதிறு நாவலர் தமது புலவராற்றுப்படையில் சங்க காலக் கவி மரபுகளையே ஆண்டுள்ளார். தமிழ் மொழியைப்பற்றிக் குறிப் பிடுகையில், ''தனிமையென் பெயர்த்தா யினிமையென் பொருட்டாய்'' என்று ''தமிழ்'' என்ற சொல்லில் பொதிந்துள்ள கருத்துக்களை விளக்கி யுள்ளார். தமிழ் என்ற சொல் ''தமி''யென்னும் இனிமையைக்குறிக்கும் வினையடியாய்ப் பிறந்து, வினைமுதற்பொருண்மையை யுரைத்தும் விகுதி குன்றி இமிழ், உமிழ் என்பனபோல் ழகரம் பெற்று தமிழ் என நின்றமையினால் ''தனிமையென் பெயர்த்தாய்'' என்றும், தமிழ் எனும் பெயர்க்குப் பொருள் இனிமையென்றிருப்பதினால் இனிமையென்னும் பொருள் என்றும் குலாம் காதிறு நாவலர் உரைத்துப் போந்தார். தமிழ்மொழி அகத்தியருக்கு சிவபெருமானால் போதிக்கப்பட்டது என்பதை நாவலர் தமது புலவராற்றுப்படையில் பின்வருமாறு கூறுகின்றார்.

''கங்கைச் சடைய னொருபாக மங்கையன்
இமயப் பொதியத் தமர்முனி அகத்தியற்
கரய்ந்து தரவுணர்த்திப் போக்க

குலாம் காதிறு நாவலர் தமது காலத்தில் போலிப் புலவர்கள் பலர் திரிகின்றனர் என்பதைக் குறிப்பிட்டு இப்போலிப் புலவர்களின் கொட்டத்தை அடக்க ஒருவரும் இல்லையேயென்று வருந்துகிறார். இதற்குக் காரணம் தமிழ் நாட்டை ஆட்சி செய்வோர் தமிழர் அல்லர் என்பதே.

''அரையரும் தமிழரல்லர்''

என்று சுருங்கச் சொல்லி விளங்கவைக்கிறார் குலாம் காதிறு நாவலர். பழங்காலத்தில் கற்றுணர்ந்த மக்களினருமை இத்தன்மைத்து என்று அளவிட்டறிந்து உள்ளந் தகுதிபட அக்கல்வியைத் தெரிந்து பொன்னையும், இரத்தினங்களையும் பலவாறாக அளித்து இவ் வுலகத்தின்கண் தம் பெயர்களை நிலைநாட்டி வைத்து, மறைந்து போன பாரி, காரி, ஆய், ஓரி, பேகன், நள்ளி, அதிகன் என்னும் தமக்கெனவொன்றும் வையாது கொடுத்த வள்ளல்கள் இக்காலத்தில் வாழ்கின்றனர் அல்லர் என்று உணர்ச்சி ததும்பப் பின்வருமாறு கூறுகின்றார்.

''கற்றுணர் மக்க ளருமை யிற்றென
வளந்தறிந் ததனை யுளந்தகத் தெரிந்து
முன்னாள் பொன்னும் மணியுஞ் சிதறி
தம்பெயர் விட்டன ரிம்பரின் மாய்ந்த
பாரியுங் காரியு மாயு மோரியும்
பேகனு நள்ளியு மதிகனு மல்கி
வரையாது கொடுத்தோர் வானானீ தன்(று)''

செந்தமிழ் நாடென்று வழங்கும் பாண்டி நாட்டின் தலைநகராகிய மதுரை மூதூரின் இயற்கைக் காட்சிகள் நுணுக்கமாகப் புலவராற்றுப் படையில் விவரிக்கப்பட்டுள்ளன, அழகிய சிறகுகளையுடைய வண்டுகள் தங்கி ஊதலால் முறுக்கவிழ்ந்து விரிந்து கோப்பினின்று காம்பு கழன்ற அழகிய பூக்கள் சித்திர கம்பளத்தை விரித்தாற் போலத் தரையில் படர்ந்து விளங்கும் வாசனை மிக்க அழகிய பூஞ்சோலைகள் இரண்டு பக்கத்து மொருங்குபட வளர்ந்து கரையைப் பொருதுகின்ற வையையாற்றினையுடைய பாண்டி நாட்டின் கண்ணுள்ள செல்வம் மிக்க பழைய ஊர் ஆகத் திகழ்ந்தது என்பதைக் குலாம் காதிறு நாவலர் பின்வருமாறு கூறுகின்றார்.

அஞ்சிறைத் தும்பி துஞ்சி யூதப்
பிணியவிழ் பலர்ந்து கழல்காம் பணிமலர்
வன்னக் கம்பளம் விரித்தாங் கன்ன
தரைபடர்ந் திமைக்கும் விரைகெழு பூம்பொழி
லிருமருங் கொழுகிய பொருகரை வையைச்
செந்தமிழ் நாட்டுத் திருத்தகு மூதூர்.

வண்டுகள் தங்கி ஊதலால் மொட்டுக்கள் முறுக்கவிழ்ந்து விரிந்து மலர்களாகின்றன என்ற சங்ககாலத் தமிழ்க் கவிமரபுபோன்ற பல வற்றைத் தமது புலவராற்றுப் படையில் குலாம் காதிறு நாவலர் சேர்த் துள்ளது தமது நூலும் பழங்காலத்து ஆற்றுப்படை நூல்கள் போலத் திகழவேண்டும் என்ற விருப்பத்தினாற் போலும்.

புலவராற்றுப்படையில் இரவலன் ஆற்றுப்படுத்தப்படும் பொழுது ஆசிரியர் சில அறிவுரைகளைக் கூறுகிறார். ஆற்றுப்படுத்தப்படும் இரவலன் கால் நடையில் மதுரைக்குச் செல்ல விரும்பினால் பலநாள் செல்லும் என்பதை ''காலிற் செல்லில் நாளிற் செல்லும்'' என்று கூறுகிறார். காலந்தாழ்த்தாது மதுரைக்குச் செல்வதை இப்புலவர் விரும்பினால் ஒரே ஒரு வழிதான் உண்டு என்கிறார் நாவலர். அவ் வழியை இப்புலவர் பின்பற்றின் இவர் சூடியிருக்கும் நறுமணமுள்ள மாலை வாடாமுன் மதுரையை அடையலாமாம். அச்சுருக்கமான வழியைப் பின்வருமாறு கூறுகின்றார் குலாம் காதிறு நாவலர்.

உருமுறுமோ டுறழொலியின்
இரு புறனு மிருப்புருளை
நான் குருளக் கான்குழும்
வாஅய்க் கொள்ளிப் பேஎயுயிர்ப்பி
னொலித்து மிழுங் கலித்தூ மங்
குழல் வாயிற் சுழல் கொள்ள

மரவட்டைச் செலலொப்பச்
செல்பாண்டில் பல கோத்த
நெடுந் தொடரி னிரை நீண்டு
கடுங் காலிற் கழிலிசையி னெந்திர வூர்தி

இவ்வடிகளில் கூறப்பட்டுள்ள எந்திரவூர்தியில் சென்றால் ஒரே நாளில் மதுரையை அடையலாமாம். இங்கு குறிக்கப்பட்ட எந்திரவூர்தி யாதென நோக்குவாம். இடியின் சத்தத்தோடு மாறுபடுகின்ற சத்தத் தையுடைய இரும்பு உருளைகள் நான்கு இரண்டு பக்கத்து உருளவும் காட்டில் கூடினகொள்ளிவாய்ப்பேயின் மூச்சையொப்ப ஒலித்து எந்திரம் மிக்க புகையைக் கக்குகின்றது. மிக்கபுகை குழலோ வாயிற் சுழன்று ஒலிக்கிறது. மரவட்டையினது நடையைப்போலச் செல்கின்ற வண்டில் கள் பலவற்றைக்கோத்த நெடிய தொடரினையுடைய நிரையாய் நீண்டு கடுமையாக வீசுகின்ற காற்றைப்போல ஓடுகின்ற வேகத்தை யுடைய அத்தகையது அந்த எந்திரவூர்தி என்று இங்கு புகைவண்டி யையே குறிப்பிடுகின்றார் ஆசிரியர். இக்காட்சி புலவராற்றுப்படைக்கே தனிப் பண்பாய் அமைந்துள்ளது. பழங்கால ஆற்றுப்படைகளில் இவ் விதமான போக்குவரத்துச் சாதனங்கள் ஒன்றும் குறிப்பிடப்படவில்லை. அக்காலத்தில் இவ்விதமான வண்டில்கள் இல்லாமையே அதற்குக் காரணமாகும். அக்காலத்து மக்கள் ஓரிடத்திலிருந்து இன்னோரிடத் துக்குச் செல்வதற்குக் கால்நடையாகவே சென்றனர். குலாம் காதிறு நாவலர் தமது புலவராற்றுப் படையை இயற்றிய காலத்தில் தமிழ் நாட்டில் புகைவண்டிகள் மலிந்து இருந்தன. எனவே, நாவலர் புகை வண்டியைத் தமது புலவராற்றுப்படையில் புகுத்தினார். சங்ககால ஆற்றுப்படை நூல்களில் காணப்பெறாத இதுபோன்ற பல புதுக் கருத்துக்களை ஆசிரியர் தமது புலவராற்றுப்படையில் புகுத்தியுள்ளார்.

மதுரைத் தமிழ் சங்கத்துள் நிறுவப்பட்டிருக்கும் அச்சகம் எவ்வாறு இயங்குகின்றது என்பது இவ்வாற்றுப்படையில் குறிக்கப்பட்டுள்ளது தமிழ் எழுத்துக்களுடன் சங்கதி, ஆங்கில எழுத்துக்களையும் அச்செழுத் தின் கீழ்க் கட்டையைத் தமக்காதாரமாகக் கொள்ளும்படி வார்த்து, பகுதி வேறாகச் செய்து ஒரு பிரதி பலபிரதிகளாய் எங்குச் சென்று பொருந்தப் பதிப்பிக்கும் அச்சுக்கூடம் என்பதைப் பின்வருமாறு கூறுகின்றார்.

தென்மொழி யெழுத்தொடு வடமொழி யெழுத்து
மீங்குநனி பாய வாங்கிலாக் கரமுங்
கால்கொள வாக்குபு பால்வேறு படுத்தி
யொன்றுபல வாகிச் சென்றுறப் பதிக்கு
மச்சுச் சாலையும்...

இனி மதுரைத் தமிழ் சங்கத்தாரால் அளிக்கப்படும் பட்டங்கள் பல கூறப்பட்டுள்ளன. அவையாவன : வாயரும் புலவன், பெருங்கவி ராயன், பாவலன், வித்துவான், இயறெரி நாவலன் என்பனவாம். இச்சங்கத்தை அடைந்தவன் பெறும் பரிசில்கள் பலவும் குறிக்கப் பட்டுள்ளன. வெள்ளிய ஒளியையுடைய வயிரக் கல்லிருந்து மின்னச் செய்து விளங்கும் பொன்னாற் செய்த மோதிரத்தையும் பொன்னா லான தகட்டைக் குழியச் செய்து அதிலே பொலிவுற வமைக்கப்பட்ட கட்டின சங்கிலையையுடைய மாட்சிமையையுடையதாய்ப் பழுதிலை யாம் படி சமைந்த பொழுதை அறிதற்குக் காரணமான கருவி யையும் (கடிகாரத்தையும்) நுண்ணிய மயிரைப் பஞ்சு நுனிபோல வாய்ந்து அதனால் நெய்யப்பட்ட மின்னுக்கொடி படர்ந்தாற் போலப் பொன்னாலாகிய நூலையூடே நுழைத்த குற்றமற்ற சிறந்த காசுமீர மாகிய போர்வையையும் நம் அரசனது சிறந்த தலையுரு கழுத்துவரை யமைந்த பணயம் பலவற்றையும் பரிசில்களாகச் சங்க மண்டபத்தை யடைந்த புலவன் பெறுவான் என்பதைப் பின்வருமாறு கூறுகிறார்.

......வானிற வயிர
மின்செய் தொளிரும் பொன்செய்யாழியும்
பொலந்தகடு குழித்துப் பொற்புற வமைத்த
வலந்த பொற்றொடரின் மாண்பிற் றாகிப்
பழுதறச் சமைத்த பொழுதறி கருவியும்
நொய்ம் மயிராய்ந்து துய்யென நெய்த
மின்னிவர்ந் தென்ன பொன்னிழை நுழைத்த
மாசுகெடச் சிறந்த காசு மீரமும்
விழுத்தலை யமைந்த கழுத்தள வரையன்
பணயம் பலவும்......

இவ்வாற்றுப்படை பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் இயற்றப் பட்டதாயினும், பழங்கால ஆற்றுப்படைகளைப்போல் சொல்நயம், பொருள்நயம் பொருந்தியுள்ளது. இக்கால வழக்கிலுள்ள சில கருத்துக்களை குலாம் காதிறு நாவலர் தமது புலவராற்றுப் படையில் வழங்காமல் இருந்திருப்பாரேயானால் இவ்வாற்றுப்படையும் பழங் காலத்தைச் சேர்ந்தது என்றே படிப்போர் எண்ணுவர். நடையும் பெரும்பாலும் சங்ககால ஆற்றுப்படை நூல்களின் நடையையே ஒத்துள்ளது. சொற்சுவை, பொருட்சுவை பொதிந்த இப்புலவராற்றுப் படை இஸ்லாமியத் தமிழிலக்கியங்களுள் குறிப்பிடத் தக்க நூலாக விளங்குகிறது.

# செய்கலாவுதீனின் புலவராற்றுப்படை

இஸ்லாமியத் தமிழிலக்கியத்தில் ஆற்றுப்படை இலக்கியப் பிரிவினுள் குலாம் காதிறு நாவலருக்கு அடுத்த நிலையில் எழுந்த பிறிதொரு ஆற்றுப்படை இலக்கியமுண்டு. இதனை இயற்றுவித்த பெருமை கவி செய்கலாவுதீன் புலவரவர்களைச் சாரும். ஈழம், இஸ்லாமியத் தமிழுக்கு அளித்துள்ள புலவர்களுள் ஒருவரே செய்கலாவுதீன். பிறவியில் குருடரான செய்கலாவுதீன் ஈழத்தின் கரைத்தீவு என்னும் கிராமத்தைச் சார்ந்தவர். இவர் இயற்றியுள்ள பல்வகையான இஸ்லாமியத் தமிழிலக்கியங்களுள் முக்கியத்துவம் வாய்ந்ததாக காட்சி தருவது புலவராற்றுப்படையாகும்.

கவி செய்கலாவுத்தீனின் புலவராற்றுப் படையும் குலாம் காதிறு நாவலரின் ஆற்றுப்படை போன்றே இலக்கணம் நிரம்ப அமைந் துள்ளது. ஆனால் குலாம் காதிறு நாவலரின் ஆற்றுப்படையில் பரிசில் பெற்றுவந்த புலவன் தாம்பெற்ற புரவலரிடத்து பிறிதொரு புலவரை ஆற்றுப் படைத்துவதாக அமைந்திருக்கும், ஆனால் செய்கலாவுதீனின் புலவராற்றுப்படையில் கல்வி வல்லான் ஒருவன் பா யாக்க விரும்பிவர அவனைப் புலவர் இல்லத்திற்கு ஆற்றுப்படுத்துமாறு அமைந்துள்ளது. இலங்கையின் பொன்பரப்பி என்னும் பகுதியில் கரைத்தீவுப் பகுதி அமைந்துள்ளது. இதுவே புலவராகிய செய்கலாவுதீன் வாழும் இல்லம். இவ்வில்லம் வந்து சேர்வதற்கான குறிகளையும் தகவல் களையும் புலவராற்றுப்படை விரிவாகக் கூறுகிறது. இதன் தொடக்கத்தில் இவ்வாறு உள்ளது.

உலக நாயகன் உயர் திரு வருளால்
அகல் பெறு ஞானம் அகத்திலமைக்க.....

இலங்கையின் புத்தள மண்ணைப் பெருவளப் படுத்திப்பாயும் கான் விலங்குறையும் கால ஒயாவையும் மீன்படு கரையுடை மீஒயாவையும் ஆசிரியர் விரிவாகக் குறிப்பிட்டுள்ளார். இதற்கடுத்த நிலையில் தப்போவை என்னும் ஊர் வருகிறது. விஜயன், குவேனியை கடை சியாய் விட்டுச் சென்ற இடம் இதுவென குறிப்பிட்டுள்ளார். விஜயன் குவேனியிடத்து 'தாங்கருங் காதல்' கொண்டிருந்ததையும் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

வீங்கிசை விஜயன் ஈண்டறுத் தன்றைக்
கோங்கணி கொண்டைக் குவேனி தன்பால்
தாங்கருங் காதற் தன்மையைக் காட்டி
அவள்பால் முற்றிய அன்பினை யழையியும்
இவள்மகா ரின்மையின் இவண்விட் டகல்வோம்

எனக் கூறி விஜயன் குவேனியை விட்டகன்ற செய்தியை,

அப்போதவளை அவள் விட்டகன்ற
தப்போவை எனும் தனிப்பதி யொருபால்

என்று வரலாற்றுச் செய்தியாக குறிப்பிடுகிறார். இன்னும் சிறிது சென்றால் 'காப்பிரியர்' வாழும் பகுதி தென்படும். அதையும் ஓர் அடையாளமாய்க் கொள் எனக் கூறுகிறார். கறுப்பு இனத்தவரின் வீரன் சிறப்பையும் அவர்தம் அங்க வடிவையும் 'கறுப்பர்' 'காப்பியர்' என்ற காழ்ப்புச் சிறிதுமின்றி கண்ணியத்துடன் கவியாக்கியிருக்கும் அழகு புலவர் ஆற்றுப்படையின் சிறப்பு மிக்க பகுதி எனலாம். காட்டு மானிடரானாலும் இருண்ட மேனியரேயானாலும் அவர்கள் ''சூட்டிய வாகையர் சுமந்த புகழினர் நாட்டிய பெருமையர்'' எனக் குறிப்பிடு கிறார்.

ஆண்டுகள் முன்னர் ஆபிரிக் காவில்
ஆண்டுள ரவர்க்கும் ஆங்கிலர் தமக்கும்
பூண்ட போரிடைப் பூண்பெறு வாளினர்
சூட்டிய வாகையர் சுமந்த புகழினர்
நாட்டிய பெருமையர் காட்டு மானிடர்
இருண்ட மேனியர் சுருண்ட குஞ்சியர்
அஞ்சனக் கன்னர் வெஞ்சின முகத்தர்
அவரமர் இல்லம் ஆங்கொரு பாலா (அ)

இவற்றையெல்லாம் கடந்து சென்றால் கற்பிட்டி நகர் தோன்றும். கற்பிட்டி சிறு துறைமுகப் பட்டினமாக ஒரு காலத்தில் சிறப்புடன் விளங்கிய நகர், இலங்கையை ஆண்ட ஒல்லாந்தர் அங்கு ஓர் கோட்டையையும் நிறுவியமை அக்காலத்தில் அது பெற்றிருந்த முக்கியத்துவத்தை உணர்த்தும். இது வரலாற்று உண்மை. அதனை புலவர் இவ்வாறு குறிப்பிடுகிறார்.

கடாரமிருந்து கடல் கடந்தெய்திய
ஒல்லாந்தர் கல்லிய உயர்வுறு கோட்டைக்
கற்பிட்டி யென்னும் நற்பிட்டி தன்னில்......

பட்டினமென்றால் ஓசைகளுக்குப் பஞ்சமிராது. இடமறிந்து செல்ல வேண்டிய பாவலனுக்கு ஓசைகள் கொண்ட நகர் கற்பிட்டி என்றால் போதுமா? அந்நகரில் எழும் ஒவ்வொரு வகையான ஓசை களையும் இனங்காட்டி வர்ணித்துள்ளார் புலவர். இவ்விடத்தில் சிறப்பான உவமைகளை கையாளுகிறார்.

எமனை ஒக்கும் ஏர் பெறு வாகனம் 'பீம் பீம் என்னப்' பீரிட்
டோடும் 'மிலிற்றிறி' லொறியின் மின்னனு வோதையும்

பாதையில் கேட்கும் 'நிலைத்த நியமமும் நிறுவிய பாக்கமும்' கொண்ட கற்பிட்டி நகர் 'நாளங்காடி' களில் மீன் கூறும் ஓசை இன்னொரு புறம் கேட்கும்

சூறா சூடை சாளை வேளா
கெழிறு கிளவரன் குறிப்பு கும்பளா
நெய்த் தொலி செப்பலி ஞெண்டு திருக்கை
கட்டா ஒரா கணவாய் கொடுவா
கிளித்திரள் கிளாத்தி கொச்சன் கெண்டை
மண்ணா பன்னா மணலை மருஅ
வாளை திரளி காலை கத்தாளை
கூரல் வாவல் கூனி வராலும்
கூடையிலேந்திக் குனித்த மேனியர்
கூறிக் கூறிக் கூவிடு மோதையும்

இவற்றையெல்லாம் கடந்து சென்றால் கண் மயக்கும் இயற்கைக் கோலமும் உப்பளத்து வளமும் காண்பாய், அவற்றைக் குண்டால் புலவன் செய்கு அலாவுதீன் இல்லம் நெருங்குவதாய்க் கொள் எனப் பாவலனுக்குக் கூறுகிறார்.

செல்வழிக் காண்குவை சொல்லினுக் கடங்கா
மாலை விதானம் மைவண்ண மேகம்
வெண்டுகிற் சேலை விரித்தா லென்ன
கண்டுகளி ஆடியின் காட்டு மதுவே
உப்பள மென்பது தப்பா துணருவை

இவ்வாறு புத்தளப் பகுதியின் வரலாற்றுச் சிறப்பையும் இயற்கை வளத்தையும் மக்கள் இனத்தையும் புலவர் ஆற்றுப்படை எழிலுறக் காட்டுகிறது. கவிஞர் செய்கலாவுதீனின் அப்புலவராற்றுபடை தமிழுலகில் அதிகமாக அறிமுகமாகாத ஓர் சிறந்த ஆற்றுப்படை நூல் எனலாம்.

# கோவை இலக்கியங்கள்

தமிழில் கோவை இலக்கியங்கள் சிற்றிலக்கியங்களுள் தனித்த தொரு இடத்தைப் பெறுகின்றன. காரணம் இவ்விலக்கிய வடிவத் திலடங்கும் செய்திகள்யாவும் நமக்குச் சங்க இலக்கிய அகப்பொருள் துறைகளையே நினைவூட்டுவனவாக உள்ளன. இடைக்காலத்தே திருக் கோவையார் போன்ற இலக்கியங்கள் அகப்பொருள் அன்பினை அடிப் படையாகக் கொண்டு இறை பக்தியை எடுத்துரைத்தன. இவ்வழி வந்த நூல்கள் யாவும் தனித்ததொரு இலக்கியப் பிரிவாகத் தமிழுலகில் மலர்ந்தன.

அகப்பொருள் சார்ந்து விளங்கும் தமிழிலக்கிய வடிவங்கள் பலவற்றுள் கோவை இலக்கியங்களும் ஒன்றெனலாம். அகப்பொருள் துறைகளை நெறிப்பட கோவைப்படுத்தி விளக்குவதாக அமையும் நூல்களே கோவை என்னும் சிற்றிலக்கியப் பிரிவுக்குட்பட்டனவாகும், கோவை நூல்களுள் அகப்பொருள் இலக்கணம் ஐந்திணையிற் திரியா தனவாய்ப் பொருந்தி களவும் கற்புமாகிய கைகோள்கள் இரண்டினுக்கு முரிய கிளவிகளின் கீழ் முறைப்படி நானூறு கட்டளைக் கலித்துறை செய்யுள்களால் எடுத்துரைக்கப்படும். இதனைப் பன்னிரு பாட்டியல்

கோவை என்பது கூறுங்காலை
மேவிய களவு கற்பெனும் கிளவி
ஐந்திணை திரியா அகப்பொருள் தழீஇ
முந்திய கலித்துறை நானூ றென்ப
களவினும் கற்பினும் கிளவி வகையால்
திணை நிலை திரியாச் செம்மைத் தாகி
நாட்டிய கலித்துறை நானூ றுரைப்பது
கோட்டம் இல்லாக் கோவை ஆகும்
ஐந்திணை தழுவிய அகநிலைக் கோவை
தந் நானூறும் தாம் கலித்துறையே

(பன்னிரு பாட்டியல் : 221)

எனவே கோவை இலக்கியங்களைக் காதல் இலக்கியங்கள் என்று சொல்லத்தக்க அளவில் அவற்றில் அகப்பொருட் சுவைகள் விஞ்சி நிற்கும். சங்க இலக்கியங்களில் நாம் கண்ட தலைவன், தலைவி, பாங்கன், பாங்கி, செவிலி முதலான பல பாத்திரப் படைப்புகளும் கோவை இலக்கியத்துள் இடம்பெறும். இப்பாத்திரங்கள் செயற் பாடுகளைக் கோவை ஆசிரியர்கள் துறைகளாக அமைத்துப் பாடுவர். களவியல் காட்சிகள் முறைப்படி கைக்கிளையில் தொடங்கி இயற்கைப் புணர்ச்சியாக வளர்ந்து பல இடர்ப்பாடுகளைக் கடந்து இல்வாழ்வாக

மலர்ந்து மணம் பரப்பும் நாடகப் பாங்கினைக் கோவை இலக்கியங்களில் காணலாம். இக்காட்சிகள் ஒவ்வொன்றிலும் ஒரு துறை அமைக்கப்படுகிறது. துறையின் அமைப்பும், விளக்கமும் சங்கப் பாடல்களையே ஒத்திருப்பினும் பாடல்களின் நோக்கங்களில் கோவை இலக்கியங்கள் சங்கப் பாடல்களிலிருந்து வேறுபடுகின்றன. சங்கத்தில் இடம்பெறும் அகத்துறைப் பாடல்களின் நோக்கம் அகச்சுவையை வெளிக்கொணர்வதாகும். ஆனால் அதே அகத்திதுறைகப் பாடல்கள் கோவை போன்ற சிற்றிலக்கியங்களில் பக்திச் சுவையை வெளிக் கொணர்வதையே நோக்கமாகக் கொண்டுள்ளன. எனவே கோவை நூல்கள் வீடுபேற்றிற்குரிய ஞான நூல்களாக விளங்கின.

இத்தகு நூல்கள் திருத்தலங்கள் பற்றியும் அத்திருத்தலங்களில் எழுந்தருளியிருப்பது பற்றியும் பாடப்பட்டன. இதற்குச் சான்றாக திருக்கோவையார், மக்காக் கோவை போன்றவற்றைக் கூறலாம். இன்னும் சில கோர்வை இலக்கியங்கள் சில குறிப்பிட்ட மன்னர் களையோ கொடை வள்ளல்களையோ பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டு பாடப்பட்டன. இத்தகு பிரிவிற்கு அம்பிகாபதி கோவை, ஷம்சுத் தாசீன் கோவை போன்றவற்றைக் கூறலாம்.

## இஸ்லாமிய கோவை இலக்கியங்கள்

பக்தி மார்க்கம் என்ற நிலையில் தமிழிலக்கியத்தின் பல்வேறு பிரிவி களுடனும் தொடர்புடைய நூல்களை யாத்து தமிழுக்குப் புகழ் சேர்த்த இஸ்லாமியப் புலவர்கள், அகப்பொருள் சுவையுடைய கோவை இலக்கிய வடிவத்திலும் சில படைப்புக்களைத் தந்துள்ளனர்.

இஸ்லாமியப் புலவர்களுள் கோவை ஆசிரியர்கள் செய்யுட்களை ஆக்கும்போது ஏனைய பிற புலவர்களுக்கு இல்லாத அளவு பெரும் கவனத்திற்கு ஆட்பட வேண்டியதாகிறது. காரணம் அந்தாதி, சதகம், கலம்பகம் போன்ற இன்னபிற சிற்றிலக்கியப் பிரிவில் படைப்புக்களை நல்கும் புலவர்கள் அந்தந்த இலக்கிய வடிவங்களின் இலக்கண வடிவங்களின் அமைதியை மட்டும் நெஞ்சில் நிறுத்தித் தம் கருத் துக்களை எடுத்துரைத்தால் போதுமானது. மேலும் இவ்விலக்கியப் பிரிவுகளில் ஆங்காங்கே அகப்பொருட் சுவைகள் இடம் பெறலாமே தவிர முழுமையும் அகப்பொருட் சுவைகளை உடையனவல்ல. ஆனால் கோவை இலக்கியங்களோ முழுமையும் அகப்பொருட் சுவைகளையே மையமாகப் பெற்றுள்ளன. எனவே, இவ்வகப் பொருட் சுவையில் இஸ்லாமிய நெறிக்குட்பட்டு தம் படைப்புக்களை ஆக்குவதான கோவையாசிரியர்களின் முயற்சி கத்தி மேல் நிற்பது போன்ற அரிய தொன்றாகும். இவர்கள் அகப் பொருட் துறைகளுக் கேற்ப தமிழ்

மரபுக்குட்பட்ட நிலையிலும் தம் பாடல்களை ஆக்க வேண்டும். அதே நேரத்தில் தாம் பின்பற்றும் இஸ்லாமிய நெறிக்கோ தம் பாட்டுடைத் தலைவர்களுக்கோ அகப்பொருளமைத்துப் பாடுவதால் எத்தகு களங்கமும் ஏற்படாவண்ணமும் பாடல்களின் கருத்துக்கள் அமைய வேண்டும்.

எனவே இஸ்லாமியக் கோவை ஆசிரியர்கள் தமிழ் இலக்கிய மரபு போற்றுதல் என்ற நிலையுடன் இஸ்லாமிய நெறிக்குட்படுதல் என்ற பெரும் கட்டுப்பாட்டினையும் எதிர்கொள்ள வேண்டியுள்ளது. ஆனால் சில கோவை ஆசிரியர்களுக்கு இத்தகு நிலை இல்லை. சான்றாக சைவத்தை அடிப்படையாகக் கொண்ட திருக்கோவையாருள் தலைவியாவாள் பேரின்ப நிலைக்களனாகிய சிவமேயாகும். ஆனால் இத்தகு அமைப்பு முறைக்கு இஸ்லாம் மார்க்கம் இடம் தருவதில்லை. எனவே, சமயத்தை அடிப்படையாகக் கொண்டு இலக்கியம் புனையும் ஆசிரியர்களின் மரபு போற்றும் நிலை அந்தந்த சமயங்களுக்கேற்ப வேறுபடத்தான் செய்யும். இவ்விரு நிலைகளையும் எதிர்கொண்டு தமிழ் மரபின் வழி இஸ்லாமிய நெறிக்குட்பட்டு இலக்கியம் படைக்கும்போதே இஸ்லாமியக் கோவை ஆசிரியன் அவனது படைப்பில் வெற்றி பெற்றவனாகின்றான். எடுத்துக் காட்டாக, காப்பியங்களில் கேசாதிபாத வருணனையோ பாதாதிகேச வருணனையோ இடம் பெற வேண்டும் என்பது தமிழ்க் காப்பிய மரபுகளுள் ஒன்றாகும். ஆனால் சீறாப் புராண ஆசிரியர் உமறுவுக்கோ இத்தகு வருணனையைத் தம் காவியப் பெண் பாத்திரங்களின் மூலமாக அமைத்துக் காட்டுவதில் இஸ்லாம் குறுக்கே நிற்கிறது. சீறாவில் இடம்பெறும் பெண் பாத்திரங்களான பாத்திமா, ஆயிஷா போன்ற இன்ன பிறரும் இஸ்லாத்தில் ஏகோபித்த இறைவனாம் அல்லாஹ்வின் திருத்தூதரான நாயகம் (சல்) அவர்களின் வாழ்வுடன் தொடர்புடையவர்களாவர். அன்றியும் இஸ்லாமில் பெண்ணழகு என்பது மறைபொருளாகவே கருதப்படுகிறது. எனவே, மேற்கூறிய வருணனையைப் பாத்திரங்களின் மூலமாகக் உமறு அமைப்பாரேயானால் அது இஸ்லாத்திற்கு முரணாக அமைந்துவிடும். எனினும் தமிழ் மரபினைப் போற்றியாக வேண்டும் என்ற எண்ணம் கொண்ட உமறு, 'தசைக் கட்டியை பெண்ணுருவமைத்த படலம்' என்ற பெயரில் ஒரு தனித்த படலத்தினை அமைத்துக் கொண்டு கேசாதிபாத வருணனையை நிறைவு சய்கிறார். இஸ்லாமிய கோவை ஆசிரியர்களுக்கு இது போன்ற இடர்ப்பாடுகள் எண்ணற்ற நிலையில் ஏற்படுகின்றன என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். எனினும் இஸ்லாமியக் கோவை இலக்கியங்கள் இவ்விடர்ப்பாடுகளைக் கடந்து சிறப்பதை நன்குணரலாம்.

## பல்சந்த மாலை கோவை இலக்கியமா?

இஸ்லாமியத் தமிழிலக்கிய வரலாற்றில் முதல் நிலையில் இருப்பது பல்சந்த மாலை என்னும் இலக்கியமாகும். இதன் காலம் சரிவரத் தெரியவில்லையாயினும் ஏறக்குறைய கி.பி. பன்னிரெண்டாம் நூற்றாண்டை முந்தியதாக இருக்கலாம் என்பதை இந்நூலின் அகச் செய்திகள் வாயிலாக அறியலாம். பல்சந்த மாலையின் ஆசிரியர் பெயரும் தெரியவில்லே. இந்நூல் பற்றிய விவரத்தை தமிழிலக்கிய உலகில் முதன் முதலில் வெளியிட்டவர் வையாபுரிப் பிள்ளை ஆவர். இவர் தொகுத்து, பெயரிட்டு வெளியிட்ட களவியற் காரிகை என்னும் இலக்கண நூலிலேயே பல்சந்த மாலையின் செய்யுள்கள் இடம்பெறு கின்றன. களவியற் காரிகையில் அகப்பொருள் துறைகளுக்கு விளக்கமும் சான்றுகளும் தரும்போது எய்துதற்கருமை, ஆற்றான் கிளத்தல், தழை கொண்டு இரந்து நிற்றல், வேழம் வினாதல், கணியெனவுரைத்தல், ஆறு பார்த்துற்ற வச்சக் கிளவி, இயற்பழித்தல், பதியளவுரைத்தல் முதலான எட்டுத் துறைகளுக்குரிய மேற்கோள் களாக பல்சந்த மாலையின் எட்டுச் செய்யுள்களும் இடம்பெற்றுள்ளன. இவ் எட்டுச் செய்யுள்கள் மட்டுமே பல்சந்த மாலை பற்றி நமக்குக் கிடைத்திருக்கும் செய்திகளாகும். இந்நூலினுள் எட்டுப்பாடல்கள் தவிர வேறு செய்யுள்கள் இருந்தனவா? இல்லையா? அல்லது இருந்து அழிந்து விட்டனவா என்பது போன்ற விவரங்கள் நமக்குக் கிடைக்க வில்லை, ஆனால் பாடல்களின் செய்திகள் வகுதாபுரி பற்றியும், யவனராசன் என்ற வின்னன் என்பவனைப் பற்றியும் எடுத்துரைப்பன வாக உள்ளன. வகுதாபுரி என்பது இன்றைய காயல்பட்டிணம் என்றும், கீழக்கரை என்றும் கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன. எவ்வாறாயினும் இவ் எட்டுப் பாடல்களும் இஸ்லாமிய இலக்கியத்தைச் சார்ந்தனவே என்பதற்கு செய்யுள்களின் அகச்சான்றுகள் துணை நிற் கின்றன. மேலும் இவ்எட்டுச் செய்யுள்கள் அடங்கிய நூலின் பெயர் பல்சந்த மாலை என்றிருப்பினும் இதில் பாட்டியல் நூல்கள் குறிப்பிடும் பல்சந்த மாலை என்னும் பிரபந்த வகைக்கான இலக்கணங்கள் ஏதும் இடம்பெறவில்லே என்பது குறிப்பிடத்தக்கதாகும். அத்துடன் கிடைத் திருக்கும் எட்டுப் பாடல்களும் கலித்துறையாய் இருப்பதுடன் திருக் கோவை, பாண்டிக்கோவை போன்றவற்றில் இடம்பெற்றிருக்கும் அகப்பொருட் துறைகளையே இவ் எட்டுப் பாடல்களும் சார்ந்துள்ளன. மேலும் களவியல்காரிகை ஆசிரியர் சூத்திர விளக்கங்களின் போது அகத்துறைகளுக்கான மேற்கோள்களைத் தருமிடத்து முதலில் திருக் கோவை அடுத்து பாண்டிக்கோவை அதற்கடுத்து பல்சந்தமாலை செய்யுட்களை ஆதாரமாகத் தரும் வரன்முறையை நோக்குமிடத்தும் பல்சந்தமாலையும் ஒரு கோவை நூலாக இருந்திருக்க வேண்டும்.

## அகப்பொருள் இலக்கணமல்லாத இஸ்லாமியக் கோவை நூல்கள்

கோவை என்னும் இலக்கிய வகையின் பிரிவில் அதற்குரிய இலக்கண வரையறையுடன் அமைந்த நூல்கள் தவிர மேலும் பல இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்கள் கோவை என்னும் பெயர் பெற்றமைகின்றன. ஆனால் இத்தகு இஸ்லாமிய இலக்கியங்களில் கோவை சிற்றிலக்கியப் பிரிவிற்குரிய இலக்கணங்கள் யாதும் இடம் பெற்றிருக்காது. இத்தகைய நூல்கள் கோர்வை செய்து நூலாகத் தொகுக்கப்பட்டிருக்கும் அடிப்படையிலேயே கோவை என்னும் பெயரினைத் தலைப்புக்களில் பெற்றமைகின்றனவே தவிர கோவை என்னும் இலக்கிய வடிவத்தினைச் சார்ந்தவைகள் என்ற கருத்தினடிப் படையில் அல்ல என்பது முக்கியமாகக் கருதத்தக்கதாகும். ஏனெனில் இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்தில் கோவை பற்றிக் குறித்துள்ளவர்கள் கோவை என்ற தலைப்பின் அடிப்படையில் அகப்பொருள் இலக்கணத் துடன் அமைந்த இஸ்லாமியச் சிற்றிலக்கியங்களையும், அகப்பொருள் இலக்கணமின்றி இஸ்லாமியக் கருத்துக்களை மட்டுமே உள்ளடக்கிய இலக்கியங்களையும் தவறுதலாக ஒரே பிரிவில் உட்படுத்துகின்றனர். இத்தகு பிரிவில் ஏழு கோவை நூல்களை இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் பெற்றுள்ளது. அவற்றைப் பற்றிய குறிப்புக்களையும் இங்குக் குறித்தல் மேற்குறித்த தவறுதலான பகுப்பினை இனியேனும் தவிர்க்க உதவும் எனலாம்.

## மும்மணிக் கோவை

குலாம்காதிறு நாவலரவர்கள் பாடிய இந்நூல் முகம்மது நபி (சல்) அவர்கள் மீது பாடப்பட்டதாகும். முப்பது செய்யுட்கள் கொண்ட இந் நூலில் வெண்பாவும் ஆசிரியப்பாவும் நேரிசையாய் இருக்க அவற்றுடன் கலித்துறையும் இணைந்து வந்துள்ளது. நாயகம் பெருமானார் (சல்) அவர்களின் பெருமைகளை எடுத்துரைக்கும் இச் செய்யுட்கள், பன்னிரு பாட்டியல் குறிப்பிடும்

வெள்ளையும் அகவலும் நேரிசை ஆகக்
கலித்துறைவர அந்தாதி ஆகி
முறைமையின் இயல்வது மும்மணிக்கோவை

(பன்னிரு பாட்டியல் : 156)

ன் னும் இலக்கணத்திற்கேற்ப அமைந்துள்ளது.

## பதானந்தக் கோவை

சிந்திரக்கவி பாடுவதில் வல்லவரான திருச்சியைச் சார்ந்த சையது இமாம் புலவரவர்கள் இக்கோவை நூலை இயற்றியவர். இது 1915 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது. இந்நூல் இறைத்தூதர் நபி பெருமானார் (சல்) அவர்களின் விண்ணேற்றப் பயணத்தை வருணித்துப் பாடுவதாகும். இக்கோவை நூலினுள் எங்கும் அகப் பொருட் செய்திகள் இடம்பெறவில்லை. பல் வண்ணப் பாக்களைக் கோர்வை செய்து பாடப்பட்டிருப்பதால் கோவை என்னும் பெயர் பெற்றுள்ளது. இச்செய்யுள் யாவும் நாயகத்தின் (சல்) பெருமையையும் முக்கியத்துவத்தையும் எடுத்துரைப்பனவாக உள்ளது.

## ஆசாரக் கோவை

1902 இல் பதிப்பிக்கப்பட்டுள்ள இக்கோவை நூலை எழுதியவர் கீழக்கரையைச் சார்ந்தவரும் பல கீர்த்தனங்களின் ஆசிரியருமாண மு. அ. க அப்துல் மஜீது என்பவர். இந்நூலுக்கு நாகூர் மகா வித்துவான் குலாம் காதிறு நாவலர், இலக்கணக் கடல் பிச்சை யிபுறாகீம் புலவர் உட்பட பதினொரு பேர் சிறப்புப் பாயிரங்களை வழங்கியுள்ளார்கள். இந்நூலின்கண் நூறு வெண்பாச் செய்யுட்கள் அடங்கியுள்ளன, இலங்கையைச் சார்ந்தவரும் கொடையுள்ளம் கொண்டவருமான முகம்மது தம்பி மரைக்காயரின் பொருளுதவியால் இந்நூல் அச்சேறியுள்ளது. எனவே, தம்மை அரவணைத்த புரவலரை நினைவுகூரும் வண்ணம் இந்நூலின் ஒவ்வொரு பாடலின் அடியையும் 'முகம்மது தம்பி மாமரைக்காயசகாயனே' என்று புலவர் முடித்துள்ளார். புரவலரைப் போற்றும் இந்தகைய மரபே ஷம்சுத்தாசீன் கோவையிலும் செய்குத் தம்பி பாவலரால் பின்பற்றப்பட்டுள்ளது என்றும் இரு நூல் களிலும் உள்ளடக்க வெளிப்பாடு, வேறுபட்டுள்ளது முக்கியமாகக் கருதத் தக்கதாகும். ஆசாரக் கோவையில் இஸ்லாமிய ஆசாரங்களின் அடிப்படையில் கொடைவள்ளலின் வெவ்வேறான பண்புகள் இணைந்த நன்னெறிகள் கோர்வை செய்யப்பட்டுள்ளன. எனவே, இக் கோவையில் புரவலரின் குணநலச் சிறப்புக்களே உள்ளடக்கச் செய்திகளாக முழுமையாக இடம் பெறுகின்றன, ஆனால் ஷம்சுத் தாசீன் கோவையில் புரவலரின் சிறப்புக்களுடன், அவருடன் நேரிடை யாகத் தொடர்பில்லாத தலைவன் தலைவியரின் அகப்பொருள் கருத்துக்களும் இடம் பெறுகின்றன.

## கொள்கை மணிக் கோவை

இக் கோவை நூலும் ஆசாரக் கோவை போன்றே நன்நெறிகளைப் புகட்டுதல்பொருட்டு இயற்றப்பட்டதாகும். இதன்கண் எங்கும் அகப்

பொருட் செய்திகளைக் காணமுடியவில்லை. இஸ்லாமியக் கொள்கை களை விளக்கும் செய்யுட்களை கோர்வை செய்து பாடப்பட்ட இந் நூலை 1959ஆம் ஆண்டு மீ. உ. கான் முகம்மது அவர்கள் எழுதி வெளியிட்டுள்ளார்.

## முஹம்மது காசிம் பொன் மொழிக் கோவை

வாழ்வு சிறப்பதற்கான வழிமுறைகளை வழங்கும் செய்யுட்கள் அடங்கிய தொகுதி இது ஆகும். ஆசாரக் கோவையைப் பின்பற்றியே இக்கோவை நூலிலும் முஹம்மது காசிம் என்னும் நல்லோரின் நெறி முறைகள் புகட்டப்மடுகின்றன. இப் பண்புகள் யாவராலும் ஏற்றுப் போற்றத் தக்கனவாகும். இக்கோவை நூலின் ஆசிரியர் 'இறைநேசன்' என்பவராவார்.

## செய்குத் தம்பிப் பாவலரின் கோவை நூல்கள்

சதாவதானி செய்குத் தம்பிப் பாவலரவர்கள் ஷம்சுத் தாசீன் கோவை தவிர்த்து கோவை என்ற பெயரில் நான்கு நூல்களை இயற்றியதாக அறிகிறோம். எனினும் அந்நூல்கள் எமக்குக் கிடைத்தில என்பதால் அந்நூல்களின் உள்ளடக்கம் மற்றும் பிற விவரங்களை அறிய முடியவில்லை. கோவை என்னும் பெயர் பெற்ற நூல்களாவன: நாகைக்கோவை, அழகப்பா கோவை, முஹம்மது இஸ்மாயீல் கோவை சசிவோத்தமன் கோவை என்பனவாகும். பெயரளவில் அழகப்பா கோவை என்பதும் சசிவோத்தமன் கோவை என்பதும் இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்தைச் சார்ந்தனவாகக் கொள்ள முடியாது. நாகைக் கோவை என்பது நாகூராண்டவர் ஷாகுல் ஹமீது ஒலியுல்லா மீதும், பிறிதொரு கோவை நூல் முஹம்மது இஸ்மாயீல் என்னும் முகம்மதியப் பெரியார் மீதும் பாடப்பட்டிருத்தல் வேண்டும். இந்நூல்களுள் அகப் பொருட் செய்திகள் இடம்பெற்றுள்ளனவா என்பதையும் அறியமுடிய வில்லை. எனினும் நூல்களில் பெயரளவில் செய்குத் தம்பிப் பாவலர், புரவலர்களுக்காகவே கோவை என்னும் தலைப்பில் நூல்கள் புனைந் திருப்பதை அறியலாம்.

## அகப்பொருள் கோவை இலக்கியங்கள்

மேற்குறித்த செய்திகளால் கோவை என்னும் பெயரினைத் தலைப்பாகப் பெற்றிருப்பினும் அகப்பொருள் சார்ந்தனவாக இல்லை யெனில் அவற்றைக் கோவை என்னும் சிற்றிலக்கியப் பிரிவின்பாற்வி அடக்க முடியாது என்பது பெறப்படுகிறது. அகப்பொருள் கோவை நூல்களாக மூன்றினை இஸ்லாமியத் தமிழ் பெற்றுள்ளது. இவற்றை ஒன்றன்பின் ஒன்றாக விரிவாகக் காண்போம்.

## மக்காக் கோவை

இஸ்லாமிய தமிழ்க் கோவை நூல்களின் முன்னோடியான இந் நூலை இயற்றியவர் நாகூர் தர்கா வித்துவான் செவத்த மரைக்காய சீரியராகும். இந்நூல் திருச்சியைச் சேர்ந்த வெ. நாராயண சுவாமிப் பிள்ளையவர்களால் பார்வையிட்டு, நாகப்பட்டினம் மகாராணி அவர்கள் கைத்தொழில் பாடசாலை அச்சுக்கூடத்தில் 1890ஆம் வருடம் பதிப்பிக்கப்பட்டுள்ளது. மக்காக் கோவை, முதல் இஸ்லாமியத் தமிழ்க் கோவை நூல் என்பதால் இந்நூலினை விரிவான ஆய்வுக்கு எடுத்துக் கொள்கிறோம்.இந்நூலுக்கு வெ. நாராயண சுவாமிப் பிள்ளையவர்கள் சிறப்புப் பாயிரத்தை அளித்துள்ளார்கள். காயல்பட்டினம் பிரபல பதிப்பாசிரியர் கண்ணகுமகுது மகுதூ முகம்மதுப் புலவர் முதலான பதின்மூன்றுபேர் சாத்து கவிகளை இயற்றியுள்ளார்கள். இப்பகுதிகள் கோவை நூலின் இறுதியில் இடம் பெற்றுள்ளன. நூலின் தொடக்கத்தில் நூலாசிரியரால் இயற்றப் பெற்ற காப்புச் செய்யுள் ஒன்றும் முனாஜாத்து என்ற பெயரில் பாட்டுடைத் தலைவர், தோத்திரங்கள், ஆசிரியர் வணக்கம்,அவையடக்கம் என்ற தலைப்புக்களில் பதின்மூன்று செய்யுட்களும் இடம்பெற்றுள்ளன.

இக்கோவை நூலின்கண் அகப்பொருள் துறை சார்ந்தனவாக மொத்தம் நானூற்றிமுப்பத்தேழு கலித்துறை செய்யுட்கள் அடங்கியுள்ளன. இறுதிச்செய்யுளுக்கு அடுத்து 'வாழி' என்ற தலைப்பில் இந்நூலுக்கு பொருளுதவி செய்த நாகூர் தர்கா மேலாளர் சின்ன மரைக்காயர் மாலுமியாரவர்களை வாழ்த்திப் பன்னிரெண்டு செய்யுட்களும் தனித்து இடம்பெற்றுள்ளன. இக்கோவை நூல் இஸ்லாமியர்களின் புண்ணியத்தலமான மக்கா நகரினையும், இறுதித் தூதர் நாயகம் பெருமானார் (சல்) அவர்களையும் சிறப்பித்துப் பாடப் பெற்றதாகும்.

## மக்காக் கோவையின் அமைப்பும் போக்கும்

மக்காக் கோவை களவியல், வரைவியல், கற்பியல் என்று முப் பெரும் பிரிவுகளைப் பெற்றுள்ளது. களவியல் பகுதி நம்பியகப் பொருள் குறிப்பிடும் கிளவித் தொகைகளுள் பிரிவுழிக் கலங்கள் தவிர ஏனையவை முறையே கைக்கிளை முதல் வரைவிடை வைத்துப் பொருள் வயிற் பிரிதல் ஈறாக பதினேழு கிளவித் தொகைகளை இருநூற்றி எண்பத்தி நாலு செய்யுட்களில் பெற்றுள்ளது. வரைவியல் பகுதி வரைவு, மலிவு முதலான எட்டு கிளவித் தொகைகளையும் எண்பத்தி எட்டு செய்யுட்களில் பெற்றமைகிறது. கற்பியல் பிரிவு இல்வாழ்க்கை முதலாக ஒன்பது கிளவித் தொகைகளை அறுபத்து மூன்று செய்யுள் களில் விரித்துரைக்கின்றது. கற்பியல் பிரிவிலுள்ள காவற்பிரிவு,

தூதிற்பிரிவு, துணையிற்பிரிவு ஆகிய மூன்றும் தனித்த கிளவித் தொகைகளாகக் குறிப்பிடப்படவில்லை. எனினும் நம்பியகப்பொருள் கூறும் அகப்பொருள் பிரிவுகள் மக்காக் கோவையில் நிரல்நிறைப்படி அமைந்துள்ளதெனலாம்.

ஒரு கோவை இலக்கியத்துள் நானூறு பாடல்களே இடம்பெற வேண்டும் என்று இலக்கண நூல்கள் வரையறை செய்திருப்பினும் மக்காக் கோவையுள் இதற்கும் மேற்பட்ட நிலேயில் முப்பத்தேழு பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இதற்குக் காரணம் பிற தமிழ்க் கோவை நூல்கள் சுருக்கிக் கூறியவற்றை செவத்த மரைக்காயர் விரித் துரைப்பதாகும். அத்துடன் சில புதிய துறைகளையும் ஒவ்வொரு கிளவித் தொகைகளுடனும் இணைத்துப் பாடுகின்றார். சான்றாகத் திருக்கோவையாரில் இயற்கைப் புணர்ச்சியிற் கலந்த தலைவன் மறுநாள் அவ்விடத்தில் வந்து தலைவியைக் கூடுதலை எடுத்துரைக்கும் இடந்தலைப்பாடு கிளவித் தொகையை ஒரே செய்யுளில் கூறியிருக்க மக்காக் கோவை ஆசிரியர் இச் செய்தியை 'தந்த தெய்வந்தருமெனச் சேறல், முந்துறக் கண்டல், முயங்கல், புகழ்தல், ஆயத்துய்த்தல்' (மக்காக் கோவை 35 - 39) என்னும் ஐந்து துறைகளின் பொரு ளமைப்பில் செய்யுட்களை விரித்துரைப்பதைக் கூறலாம். ஒரு சில இடங்களில் பிற கோவை நூல்கள் கூறியிருப்பதிலிருந்து சுருக்கியும் கூறியுள்ளார். திருக்கோவையாரில் பொருள்வயிற் பிரிவு இருபது துறைச் செய்யுட் பிரிவுகளாகப் பகுக்கப்பட்டுள்ளது. இச் செய்திகளை செவத்தமரைக்காயர் பொருட்பிரிவை பாங்கி தலைவர்க்குணர்த்தல், தலைவி இளவேனிற் கண்டு வருந்துதல், பாங்கியாற்றுவித்தல் என்ற மூன்று துறைகளுடன் நிறைவு செய்கிறார். எனவே, மக்காக்கோவை முன்னோடியாகத் தமிழ்க் கோவை இலக்கிய வடிவம் இருந்திருப்பினும் அவற்றை வடிவம், உள்ளடக்கம் என்ற நிலையில் செவத்த மரைக் காயர் அப்படியே பின்பற்றாமல் தம் எண்ணத்திற்கேற்ப மாற்றம் செய்து அதற்கேற்ப செய்யுட்களை ஆக்கியுள்ளார் எனலாம்.

## தமிழ் மரபு

மக்காக் கோர்வையாசிரியர் தம் படைப்பினை ஆக்கும்போது தமிழ் மரபினை நன்குப் போற்றியுள்ளார் எனலாம். பொதுவாகச் செய்யுள் களில் வர்ணனைப் போக்கின்போது இதற்கு முந்திய கோவை இலக் கியங்களின் பிரதிபலிப்பினைக் காணலாம். தலேவன் தலைவியைக் காண்பதாகிய காட்சி என்னும் துறையை எடுத்துக்கொண்டால், கைக்கிளைக் கிளவித் தொகையின் முதல் நிலையாகிய காட்சி என்னும் துறையில் தலைவன் தலைவியின் உருவ அழகைக் கண்டு வியந்து கூறுங்கால்,

பொன்மேவு பூம்பதமா நபிநாதர், புக்லவருந்
தென்மேவு திங்களிரு மேருவுஞ்சேர்ந்த கொம்பர்
பின்மேவு காந்தளம்பூந் தளிராம்பல் பெரிதமைத்து
மின்மேவு மக்கத்துக் கற்பகப் பக்கத்தின் மேனியதே
(மக்காக் கோவை : 1)

என்று வர்ணிக்கின்றார். இங்குத் தலைவியின் அங்கங்கள் ஒவ்வொன்றையும் இரு மேருவுஞ் சேர்ந்த கொம்பர், காந்தளம், பூ, ஆம்பல் என்று முறையே கொங்கைகள், விரல்கள், வாய் இவற்றிற்கு உவமித்துக் கூறுகின்றார். இக் காட்சி வர்ணனை இதற்கு முந்திய ஏனைய பிற கோவை நூல்களில் இடம் பெற்றிருப்பதைப் போலவே அமைந்துள்ளது. மேலும் இக்காட்சியை அமைத்துப் பாடும்போது செவத்த மரைக்காயர் இயற்கைப் புணர்ச்சிக்கு நிலைக்களனாக விளங்கும் குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல். முல்லை முதலான ஐந்திணைகளுக்கும் உரிய கருப்பொருளை ஒரே பாடலில் அமைத்துக் காட்டுகிறார் ஆசிரியர். தலைவியின் காட்சி வர்ணனையின்போது 'பொன்மேவு திங்கள்' என்பதனால் நெய்தலும், 'இருமேருவுஞ் சேர்ந்த கொம்பர்' என்பதனால் பாலையும், 'காந்தளம்' என்பதனால் குறிஞ்சியும், 'ஆம்பல்' என்பதனால் முல்லையும் ஆகிய ஐந்திணைகளையும் ஆசிரியர் குறிப்பிடுகிறார் எனலாம்.

மேலும் இக்கோவை நூலின்கண் சங்க இலக்கியங்களின் அகப் பொருட் கருத்துக்களும் தமிழ் மரபிற்கேற்ப பழமொழிகளும், திருக்குறள் கருத்துக்களும் பரந்து கிடப்பதைக் காணலாம். களவியலில் முதல் நிலையாகக் கைக்கிளைப் பகுதியில் தலைவியைக் கண்ணுற்ற தலைவன் ஐயம் கொண்டு பின் தலைவியின் குறிப்பறிகின்றான். அதன் பின்பே ஊழ்வினையின் காரணமாக நடைபெறும் புணர்ச்சி நிகழ்வுக்குரிய துறைகள் தொடங்கப்படுகின்றன. தலைவன் தலைவியை யாசித்துப் பின்னிற்றற்கு நினைத்து, அதன்பின் தலைவிக்கு இதஞ் சொல்லிப் பின்னே நிற்றல் என்னும் பொருளில் 'இரந்து பின்னிலை நிற்றல்' என்னும் துறை வருகின்றது. இப்பாடலில் தன் மனத்தைக் கொள்ளை கொண்ட தலைவி யாதும் அறியாதது போல இருக்கும் நிலை கண்ட தலைவன் அவனது நிலையை எடுத்துரைக்கும்போது நாம் அன்றாடம் பயன்படுத்தும் பழமொழியை ஆசிரியர் கையாளுகின்றார்.

கோலுற்ற விற்புதற் பூட்டியென் பான்மதிக் கொள்ளை கொண்டு
மாலுங் கொடுத்தறியார் போற்குனிதன் மகிமை யென்னோ
பாலுக்குங் காவல்வெம் பூனைக்குந் தோழனென் பாரிதுவே
(மக்காக் கோவை : 6)

பிறிதொரு இடத்தில் இரவுக்குறி கிளவித் தொகையில் அமைந்த 'இறைவியிறைவனைக் குறிவரல் விலக்கல்' என்னும் துறையின்கண், தலைவியைக் கூடுதல் பொருட்டு இரவுக்குறியில் நாடிவரும் தலைவனை விலக்கக் கருதிய தலைவி, தலைவனை சமாதானம் செய்யும் வண்ணம் பழமொழி ஒன்றினைக் கூறித் தன் நிலையைத் தெளிவுபடுத்துகின்றாள்.

மணத்துக் குரியவாரலுனை விட்டு மற்றெவையாங்
கிணற்றுத் தண்ணீர் வெள்ளங் கொண்டு
செல்லாதுரை கேட்டருளே
(மக்காக் கோவை : 186)

என மொழிகின்றாள்.

திருக்குறளில் விருந்தோம்பல் அதிகாரத்தில் விருந்தோம்பலில் இல்லாளின் முக்கியத்துவத்தை குறிக்கக் கருதும் வள்ளுவர்,

அகன்அமர்ந்து செய்யாள் உறையும் முகன்அமர்ந்து
நல்விருந்து ஓம்புவாள் இல்
(திருக்குறள் : 84)

இக்கருத்தினை செவத்த மரைக்காயர் இல்லறவியலில் 'பாங்கியல் வாழ்க்கை நன்றெனச் செவிலிக்குரைத்தல்' என்னும் துறையின்கண் தோழியின் கூற்றின் மூலமாக

சேன்மைத் தடக்கண்ணியும் பெண் விருந்தெனச் சேர்ந்தவர் நற்
பான்மை பெற முகமன் புரிந்தோம்பும் பயனுற......
(மக்காக் கோவை : 380)

என அமைத்துக் காட்டுகிறார். அலரறிவுறுத்தல் துறையில் ஊரில் தலைவியைத் தூற்றும் அலர்விரிந்ததென்று தோழி தலைவனுக்கு அறிவுறுத்தும்போது

...... இவ்வூரிலிசைந்த பலர்
மனக்கிசை வாயலர் நாற்றமுண்டாயிற்றென் மன்னவனே
(மக்காக் கோவை : 233)

என்று கூறுவதில்,

தாம்வேண்டி நல்குவர் காதலர் யாம்வேண்டின்
கௌவை யெடுத்தது இவ்வூர்
(திருக்குறள் : 1144)

என்னும் குறட்பாவின் கருத்து மிளிர்வதையும் காணலாம். இது போன்று இன்னபிற முன்னோடித் தமிழிலக்கியப் பகுதிகளின் கருத்துக்களை மரபு போற்றுதல் என்ற அடிப்படையில் இக் கோவை இலக்கியத்துள் காணலாம்.

## பாத்திரங்களின் மனநிலை

மக்காக் கோவையுள் பல்வேறு பாத்திரப் படைப்புகள் இடம் பெறுகின்றன. இப்பாத்திரங்களின் மனநிலைகளை செவத்த மரைக்காயர் நாடகப் பாங்காக அவரவர் தம் கூற்றாய் அழகிய சொற் சித்திரங்களாய் நமக்குப் புலப்படுத்துகின்றார். அகப்பாடல்களில் உணர்வு வெளிப்பாடே முக்கிய இடத்தைப் பெறுகின்றது. இத்தகு வெளிப்பாட்டினை ஆசிரியர் திறம்படச் செய்துள்ளார் என்பதற்குப் பல சான்றுகளைக் காட்ட முடியும். ஒரு உணர்வின் வெளிப்பாட்டினை ஒவ்வொரு காட்சிகளாக ஆசிரியர் அமைத்துக் காட்டுகிறார். சான்றாக 'கற்பொடு புணர்ந்த கௌவை' என்னும் கிளவித் தொகையில் இடம்பெறும் நற்றாயின் உணர்வோட்டத்தை எடுத்துக் கொள்வோம். தலைவியோ தலைவனதுடைமையாய்க் கற்பொடு கூடிச் சென்றுவிடுகின்றாள். இதனை அயலாரும் சேரியரும் பலரும் அறிகின்றனர். இந்நிலையில் அவளை வளர்த்த செவிலியின் மனமோ தவிக்கிறது. புலம்புகின்றாள், இறைவனிடத்து இறைஞ்சுகின்றாள். செவிலித்தாயின் அபலை மனமோ தலைவனுடன் தலைவி சென்ற நிகழ்ச்சியின் காரணமாக தலைவனிடத்துக் கோபம் கொள்ளவில்லை. மாறாக அன்பின் மிகுதியால் தன் மகள் செல்லும் பாலையின் வெப்பந் தணியுமாறு இறையிடத்துப் பிரார்த்தனை செய்கிறது செவிலித் தாயின் உள்ளம். இங்கு செவத்த மரைக்காயர் இஸ்லாத்தின் ஏற்றத்தையும் இணைத்து, நாயகத்தை நற்றாய் வேண்டுவதாகக் காட்சியை அமைக்கின்றார்.

மன்னிய மெய்ம்மைக் கலிமா திரண்டவல் லக்ஷ ரத்தைத்
துன்னியவுட் கமலத்திடை வாசி தொலைத்தலின்றி
யென்னியன் மேவு நபிப்பத மெய் துணை யேந்துருக
பன்னிரு பாலைக்கண் பாலை வெம்பாலை செம்பாலை யென்றே
(மக்காக் கோவை : 341)

இவ்வாறு இறையிடத்து முறையிடும் நற்றாயின் உள்ளத்தில் தன் மகளின் மென்மைத் தன்மை ஊடுருவிப் பாய்ந்து வருத்துகின்றது. 'மெல்லிய தன்மை வாய்ந்த தன் மகள் வெம்பாலை சுரத்தில் எவ்வாறு சென்றாளோ' என்று வருந்தும்போது தலைவியின் இளமைத் தன்மையும் நினைவுக்கு வரப்பெற்றவளாக இரங்கிக் கூறுகின்றாள்,

எல்வாறெனில் 'தலைவியின் மென்மை பொருந்திய பாதம் பஞ்சிற் பட்டால் கூட வருந்தும், மலரில் பட்டாலோ கொப்பளிக்கும். அப்படி யிருக்க நஞ்சிற் (பட்டாற்போல் உள்ள கொடுஞ் சுரத்தே எவ்வாறு நடந்தனையோ' என்று ஏங்குகிறாள். நற்றாயின் ஏக்கத்தில் கொடுஞ் சுரத்தின் வெம்மை ஏழை எளியவர்களை வறுமைக் கவலையானது நெருப்பான இருந்து சுடுவது போன்று தெரிகிறதாம். இத்தகு உணர்வுப் பூர்வமான, கருத்தமைவினை ஆசிரியர் 'தன் மகள் மென் மைத் தன்மைக் கிரங்கல்' என்னும் துறையின்கண் அமைத்துள்ளார்.

பஞ்சிற் பட்டாலும் வருந்து மலர்ப்படிற் கொப்பளிக்கு
நஞ்சிற் பட்டார் விழிகால்வைத் தெவ்வாறு நடந்தனையோ
மஞ்சிற் பட்டார் மக்க மன்னனுடன் வறுமைக்கவலை
நெஞ்சிற் பட்டார் நெருப்போடொத் தெரியு நெடுஞ்சுரத்தே
(மக்காக் கோவை : 344)

இங்கு ஆசிரியர் தாய்மையுள்ளத்தின் மனச் சலனங்களை நாடகப் பாங்காக அமைத்துக் காட்டும் நயம் சிறப்புடைத்தாகும். இதே துறையில் அமைந்த பிறிதொரு பாடலில் நற்றாய் 'மக்காப் பதியை விடுத்தொர் பதியை தொடுத்து வெம்பாலையிலே சென்றனையோ,
(மக்காக் கோவை : 343)

என விளித்து புலம்புவதிலிருந்து தலைவியானவள் மேன்மை பொருந்திய மக்கா நகரினைச் சார்ந்தவள் என்ற குறிப்புப் பெறப் படுகிறது. இத்துறையிலமைந்த பாடல்களின் மூலம் ஆசிரியர் பல்வேறு உணர்வுகளையும் ஒருங்கே வெளிப்படுத்துகின்றார். தலைவியின் மென்மை, கொடுஞ்சுரத்தின் வெம்மை, வறுமையின் கொடுமை இவை யனைத்திற்கும் மேலாக நற்றாயின் பண்பு ஆகிய அனைத்தும் உணர்வுப் பூர்வமாக உள்ளன. தலைவியின் மென்மையை ஆசிரியர் எடுத்துக்காட்டுந் தன்மையால் கொடுஞ் சுரத்தின் வெம்மை படிப்போ ரையும் சுடும் வண்ணம் உள்ளது.

பிறிதொரு துறையில் தலைவியினிடத்து தோழி கொண்டுள்ள அன்பின் வெளிப்பாட்டினை ஆசிரியர் உணர்த்துகின்றார். தலைவனும் தலைவியும் இயற்கைப் புணர்ச்சிக்குப் பின் தனித்தனியே பிரிந்து செல்கின்றனர். இந்நிலையில் தலைவியின் உடற்சோர்வையும் இயற்கைப் புணர்ச்சியின் விளைவால் தலைவியிடத்து உண்டான மாற்றத்தையும் கண்ணுற்ற தோழி வினவுகின்றாள். ஆனால் தலைவியோ பெண்மைக்குரிய அச்சத்தின் விளைவால் தன் உயிர்த் தோழியிடத்துச் சில காரணங்கூறி மழுப்பி விடுகின்றாள். ஆனால் தலைவியின் உயிரைத் தன்னுயிரென எண்ணியிருக்கும் தோழியோ தலைவி பொய்யுரைக்கும் தன்மையை அறிந்து,

... தன்னுயி ரென்னுயி ரொன்றென்றுந் தேர்ந்திருந்தேன்

பாசணித் தோழியிப் போதிரண்டென்னப் படுத்து முழுப்
பூசணிக்காய்தனை சோற்றிற் புதைத்திடற் போலுளதே
(மக்காக் கோவை : 124)

என்று நடைமுறைப் பழமொழியை இணைத்துத் தன் மனமொழியை வெளிப்படுத்துகின்றாள்.

இரவுக்குறியீடு கிளவித் தொகையில் தலைவனது நினைப்பில் வாடும் தலைவியின் நிலை கண்டு ஏதும் புரியாது வருந்தும் பெற்ற தாயின் மனநிலை 'தாய் துஞ்சாமை' என்னும் துறையின் மூலமாக வெளிப்படுகிறது. தலைவனது வரவு குறித்து இரவுக் குறியினை எதிர்பார்த்து ஏமாற்றம் அடைகின்றாள் தலைவி. தலைவனது வருகையை எதிர்பார்த்திருக்கும் தலைவிக்கோ தூக்கம் வர மறுக்கிறது. இந்நிலையில் பெற்ற மகள் துயிலாதிருக்கும்போது எங்ஙனம் தாய்க்குத் தூக்கம் வரும்?

அஞ்சனை தீட்டும் விழிமயிலே யன்னைகண் ணிமையா
வஞ்சனை யாயின ளிவ்வல் லெலாமுள் வருந்திடவே
(மக்காக் கோவை : 206)

என்று தன்மனநிலையை தன் கூற்றின் மூலமாகவே தாய் வெளிப்படுத்துகின்றாள்.

தலைவன் தலைவியரின் அன்பு மிகுதியின் விளைவால் அவர்கள் படும் துன்ப நிலைகள் சிறப்பாக இக்கோவையில் எடுத்துக்காட்டப்படுகின்றன. 'வரைவிடை வைத்துப் பொருள் வயிற் பிரிதல்' என்னும் கிளவித் தொகையில் பாங்கியானவள் தலைவனின் பொருட் பிரிவு குறித்துத் தலைவிக்கு உணர்த்த, அதுகேட்ட தலைவி தானிருக்க பொருள் தேடப் பிரிந்து செல்லும் தலைவனின் நிலைகுறித்து இரங்கும் போது,

தன்னைவிட் டுத்தன்னைக் கண்டவர்காண பித்தண் மக்கவா
யென்னைவிட் டன்பர்பசும் பொனுக் கேகின ரேவுமதன்
றன்னைவிட் டென்னுயிர் போயபி னாருடன்றான் சுகிப்பார்
வெண்ணெய்விட் டேநெய்யைத் தேடுவர் தானமர் வேந்தவரே
(மக்காக் கோவை : 268)

என்று தம் நெஞ்சத்துள் நிறைந்துள்ள தலைவனின் செயல் குறித்துப் புலம்புகின்றாள். இவ்வாறு மக்காக் கோவையில் வரும் ஒவ்வொரு பாத்திரங்களின் மனநிலையும் அவர்களின் சொல்லோவியங்களின் மூலமாக இடம்பெறுகின்றன.

## இஸ்லாமியக் கருத்துக்கள்

தலைப்பிலேயே இஸ்லாமியர்களின் புண்ணிய இடமான மக்காவின் பெயரினைப் பெற்றுள்ள இக்கோவை நூலினுள் பாடல்தோறும் இறைத்தூதர் நாயகம் பெருமானாரின் சிறப்புக்கள் இடம்பெறத் தவற வில்லை. எத்துறையைச் சார்ந்ததாயினும் அல்லது யார் கூற்றில் அமைந்ததாயினும் ஆசிரியர் நாயகத்தின் பெருமையையோ இறை வனுடைய ஆலயம் என்று சிறப்புப்பெற்ற கஅபா அமைந்துள்ள மக்கா நகரின் சிறப்பினையோ எடுத்துரைக்கத் தவறவில்லை.

நாயகம் (சல்) அவர்கள் தம்மை வெறுப்பவருக்கு நன்மை செய்யும் அருட்குணம் பெற்றவர்கள். இத்தகு குணம் நபி பெருமானாரின் நடைமுறை வாழ்வில் பல்வேறு நிகழ்ச்சிகளின்போது மெய்மைத் தன்மை பெற்றிருக்கிறது. இதனை 'பாங்கி கொண்டு நிலை கூறல்' என்னும் துறைத் தலைப்பில்

வெறுத்தார்க் குந்தீனிலை காட்டிச் சுபக்தி மேவசெயும்
பொறுத்தார் துணைநபிநாதர்...

(மக்காக் கோவை : 110)

என்று ஆசிரியர் சுட்டிக் காட்டுகின்றார். பிறிதொரு செய்யுளில் இதே கருத்தினை

தெவுபா யஞ்செய்பவர் தன்னையும் ரக்ஷித்து சீர்நியதித்
தவுபா வைக்கொண் டருணந் நயினார்

(மக்காக் கோவை : 298)

என்றும் சுட்டுகின்றார். இதுபோன்ற நாயகமவர்களின் பல்வேறு சிறப்புக்களும்

பார்கொள் பெரும் புகழ்நன் நபிநாதர் ... (10)
தீதரைக் காத்தும் புவியினைக் காத்துஞ் செங்கோற் புரியு
நீதரைக் காத்துங் கருணை செய்கோன் ... (424)
... முன்பகைச் செய்யிபுலீஸஞ்சு நந்நபி ... (428)

(மக்காக் கோவை)

எனப் பலவாறாக இக்கோவையில் விளக்கம் பெறுகின்றன. நாயக மவர்களைப் பெற்ற பெரும் சிறப்பின் காரணமாக மக்கா நகரமும் 'மட்பாற் சிறந்த திருமக்கா நகர்' (பா: 290) என்றும் 'கொந்தீ ட்டரும் பொற்சீர் மக்கா (பா : 262) என்றும் பல்வேறாகப் புகழப்படுகிறது,

இஸ்லாமியக் கொள்கை விளக்கங்களாக ஏதும் இக்கோவை நூலிலும் இடம் பெறவில்லை. தவிர இபுலீசு, அபுஜகில் போன் றோரின் தவறான செயல்கள் ஆங்காங்கே சுட்டிக்காட்டப்படுகின்றன. ஒரு பாடலில்

மறந்தாங் கபுஜஹில் செய்வினை யாவையு மாய்ந்துலகி
லறந்தாங் குங்கை நபி நாயகர் ...

என்று நாயகமவர்களின் சிறப்பினையும், அபுஜகிலின் தீவினையையும் இணைத்து ஆசிரியர் சுட்டுகின்றார். மக்காக் கோவையுள் ஏனைய பிற இஸ்லாமியக் கோவை நூல்களைவிட அதிகமான அளவிற்கு அரபுச் சொல்லாட்சி காணப்படுகிறது.

## விஜயன் அப்துல் ரகிமான் அகப்பொருள் பலதுறைக் கோவை

இவ்வகப் பொருள் இஸ்லாமியக் கோவை இலக்கியம் சோது குடியைச் சார்ந்த எம். கே. எம். அப்தில்காதிரு ராவுத்தர் அவர்களால் இயற்றப்பட்டதாகும். இஸ்லாமிய கோவை நூல்களுள் காலத்தால் இரண்டாவது இடத்தைப் பெறும் இந்நூல் 1911 ஆம் ஆண்டு பதிப்பிக்கப் பட்டுள்ளது.

இலக்கண நூலார் சுட்டும் கோவை விளக்கங்களுக்கேற்ப பாடப் பெற்றுள்ள இந்நூல் இராமநாதபுரம் மாவட்டம் நத்தம் என்ற ஊரினைச் சார்ந்த விஜயன் அப்துல் ரகுமான் மீது பாடப்பட்டதாகும். இக்கோவை நூல் சிறப்பித்துப் புகழும் அப்துல் ரகுமான் அவர்களின் மூதாதையருள் ஒருவர் அவரது காலத்தில் பல கொள்ளைகளையும் கொடுமைகளையும் செய்து திரிந்த கொடியவனைப் பணிய வைத்து அடக்கியதன் காரணமாக 'விஜயன் அம்பலம்' என்ற சிறப்புப் பெயர் அப்பரம்பரையினரின் பெயருடன் இணைத்துக் கூறப்படலாயிற்று. இதன் காரணமாகவே அப்துல் ரகுமான் பெயருடனும் விஜயன் என்ற சிறப்புப் பெயர் இணைந்துள்ளது. இவரது நல்லியல்புகளும் கொடைத் தன்மையும் இக்கோவை நூலின் கண் அகப் பொருள் துறைகளை மையமாக்க் கொண்டு பலவாறாகச் சிறப்பித்துப் பாடப்பட்டுள்ளது.

## ஷம்சுத்தாசீன் கோவை

மூன்றாவது இசுலாமியக் கோவை நூலான இது பிரபல வர்த்த கரும் வெட்டுவாங்குளமாதிய கிராமங்களுக் கினாந்தாரும் பாளையங் கோட்டை மாஜிஸ்டிரேட்டுமாகப் பதவி வகித்த மேலப்பாளையத்தைச் சார்ந்த கொடை வள்ளல் வ. செ. த. ஷம்சுத்தாசீன் என்பவரின் மீது பாடப்பட்டதாகும். இதனை இயற்றியவர் மதுரை தமிழ்ச் சங்கத்துப் புலவர்களுளொருவரான கோட்டாறு சதாவதானி செய்குத்தம்பிப் பாவலராவார். இந்நூல் வ. சு. மல்க்கான் அலி சாகிப் அவர்களின் அரும்பதவுரையோடு சென்னை ஸ்ரீ பத்மநாப விலாச அச்சுக்கூடத்தில் 1919 இல் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

இக்கோவை நூலுக்கு சென்னை கிறித்துவக் கல்லூரி தமிழ்ப் பேராசிரியர் கா. கோபாலாசாரியார் முதலான ஒன்பது போர் சாத்துக கவிகளை அளித்துள்ளனர். சென்னை பக்சையப்பன் கல்லூரிப் பேரா சிரியர் கோவிந்தராஜ முதலியார் சிறப்புப் பாயிரத்தை எழுதியுள்ளார்.

இக்கோவை இலக்கியம் கொடைவள்ளல் ஷம்சுத்தாசீன்மீது பாடப் பட்டிருப்பினும் கோவை இலக்கணத்திற்கேற்ப இலக்கியத் தலைவன், தலைவி, பாங்கன், பாங்கி, பரத்தை, செவிலித்தாய் முதலான இன்ன பத்திரப்படைப்புக்களைக் கொண்டுள்ளது. ஷம்சுத்தாசீனின் சீரிய பெருமைகளைப் பாடல்தோறும் எடுத்துரைக்கும் இந்நூல் நானூற்றி இருபத்தைந்து கலித்துறை செய்யுட்களைத் தன்னகத்தே பெற் றுள்ளது. தமிழ் மரபுக்குட்பட்ட களவியல், வரைவியல், கற்பியல் என்ற மூன்று பெரும் பிரிவுகளாக அகச் செய்திகள் இடம்பெறு கின்றன. களவியல் கைக்கிளை முதல் வரைவிடை வைத்துப் பொருள் வயிற் பிரிதலீறாகப் பதினெட்டுக் கிளவித் தொகைகள் இருநூற்றி எண்பத்தி நான்கு துறைகளாகப் பகுக்கப்பட்டுள்ளது. தலைவன், தலைவியவர்களின் காதல் வாழ்வின் முதல் பதினான்கு நாள் நிகழ்வுகள் இப்பகுதியில் இடம் பெறுகின்றன. களவிற்கு அடுத்த பகுதியான வரைவியல் பிரிவில் தலைவன் தலைவியைக் குரவர் முதலாயினோர் கொடுப்பவுங் கொடாதொழியவும் கற்பிற்கு நிமித்த மாகிய வதுவைச் சடங்கொடு மணஞ்செய்து கோடல் முதலான நிகழ்ச்சிகள் எட்டு கிளவித் தொகைகளின் மூலம் எடுத்துக்காட்டப்படு கிறது. வரைவியல் பகுதியில் தலைவன் தலைவியர் வாழ்வின் ஐம்பத்தியாறாவது நாள் செய்திகள் வரை இடம்பெறுவதாக ஆசிரியர் குறித்துள்ளார். மூன்றாவது பகுதியான கற்பியலில் பத்து கிளவித் தொகைகளை ஐம்பத்தியாறு துறைத் தலைப்புக்களில் செய்குத்தம்பிப் பாவலர் விரித்துரைக்கின்றார். இப்பகுதிகளில் நாள் நிகழ்ச்சிக் குறிப் புக்கள் காணப்படவில்லை,

செய்குத்தம்பிப் பாவலர் இக்கோவை நூலை நாடகப் பாங்காக ஆக்கித் தந்துள்ளார். இதில் இடம்பெற்றுள்ள நானூற்றி இருபத் தைந்து செய்யுட்களிலும் பாட்டுடைத் தலைவரான ஷம்சுத்தாசீன் பெயர் இடம் பெற்றிருப்பதுடன் எத்துறையைச் சார்ந்த பொருளாயி னும் அங்கு தம் நெஞ்சில் நிறைந்துள்ள புரவலரைப் போற்ற ஆசிரியர் மறந்துவிடவில்லை. சான்றாகத் தெளிவு என்னும் கிளவித் தொகை யின்கீழ் தலைவன் கூறிய சொல்லைத் தலைவி மெய்யெனத் தெளிந் தாற்றுவதாக அமையும் பாடலினை எடுத்துக்கொள்வோம். இதில் ஷம்சுத்தாசீன் தகைமை சான்ற பெரும் குணத்தை ஆசிரியர்,

வான்பிறழ்ந்தாலு மலைபிறந் தாலு மதியிரவி
தான்பிறழ்ந்தாலும் பிறழாத் தகையர்சொற் றான்ற வறி
யேன் பிறழ் வார்பிற ழார்வரு வரர்மன மேங்குறல் பூந்
தேன்பிறழ் மார்பகத் தோள்ஷம்சுத் தாசீன் சிலம்பகத்தே
(ஷம்சுத்தாசீன் கோவை : 28)

என்று தலைவி கூற்றில் எடுத்துரைக்கிறார். இக்கோவையில் வரும் பரத்தையும்கூட ஷம்சுத்தாசீன் பெருமையைப் பேசுகின்றாள். தலைவியை விட்டுத் தலைவன் பரத்தைமேற் காதலாய் சேரியைச் சென்றடைகின்றான். இந்நிலையில் அவனிடத்துத் தோழியைத் தூதனுப்புகின்றாள் தலைவி. பரத்தையர் சேரியிற் போகும் தோழியைப் பார்த்து பரத்தையர் நிந்தித்துக் கூறுவதாகப் பாடல் அமைந்துள்ளது.

பூமக ளாய்ப்பல செவ்வணி பூண்டு புறத்தமைந்த
கோமகளாயிவ் ணுற்றவ ளாருளக் கொள்கையென்னே
நாமக ணாவினெம் மான்ஷம் சுத் தாசீ னலத்தகிரிப
போமக ளீரறி வீருரை கொண்ட பொய்மையையே
(ஷம்சுத்தாசீன் கோவை : 384)

எனவே ஒவ்வொரு பாத்திரங்களும் அகப்பொருள் செய்தியுடனே ஷம்சுத்தாசீன் பெருமையையும் பேசத் தவறவில்லை.

இக்கோவை நூலின் இறுதிப்பாடல் ஷம்சுத்தாசீன் கொடைத் தன்மைக்குப் பெருமை சேர்ப்பதாக உள்ளது. பொருள் வயிற்பிரிந்து சென்ற தலைமகளின் உருவெளிப்படக் கண்டு உள்ளுள்வியக்கின்றாள். பின் தலைமகளின் நினைவு வரப்பெற்ற தலைவன் தேர் செலுத்திய சாரதியை நோக்கி விரைந்து செலுத்தும் வண்ணம் கூறிப், பின் தலைவியைச் சென்றடைந்து அவளோடு கலந்துற்ற தலைவன் கார் காலங் கண்டு மகிழ்ந்து கூறுவ்தாகப் பாடல் அமைந்துள்ளது. 'தலைவியும் நானும் ஒருடலும் அதனிடத்துப் பொருந்திய உயிருமெனச் சேர்ந்தோம். இனி எக்காலத்தும் பொய்க்காத ஆசீர்வாதத்தையுடைய அறிஞனான ஷம்சுத்தாசீன் கைகளைப்போன்று பெருமை பொருந்திய மேகமே மாதத்திற்கு மூன்று மழைகளைப் பொழிவாயாக! பொழிவாயாக !

செய்யா ளெவைருந் தேவியு நானுஞ் செகலத்தோர்
மெய்யா யோருயிரென மேவிக் கலந்தன மேலுமின்றும்
பொய்யா வரத்துர வோன்ஷம் சுத் தாசீன் பொருப் பிலவன்
கையாய்ப் பொழிபொழி மாதமும் மாரி கனமழையே
(ஷம்சுத்தாசீன் கோவை : 425)

எனக் கூறுகின்றான் தலைவன்.

இக்கோவை நூலில் இஸ்லாமியக் கொள்கை விளக்கங்கள் என்று அதிகம் இடம்பெறவில்லை. தமிழ்ப்பா மரபுகளும் பழக்க வழக்கங் களுமே இடம் பெற்றிருக்கின்றன. அறபுச் சொல்லாட்சி மிகவும் குறைவாகும்.

மேற்கூறிய இஸ்லாமிய அகப்பொருள் கோவை நூல்கள் மூன்றும் தலைவன், தலைவியரை தம் இலக்கியத்துள் அமைத்துக்கொள்ளும் நிலையில் ஏனைய பிற தமிழ்க்கோவை நூல்களிலிருந்து வேறுபடு கின்றன. பிற தமிழ்க்கோவை நூல்களைப்போல் தலைவன், தலைவி முதலியவர்களைக் கடவுளாக இஸ்லாமியக் கோவை நூல்கள் கொண் டமையவில்லை. சான்றாக திருக்கோவையாரை எடுத்துக்கொண்டால் தலைவியானவள் பேரின்ப நிலைக்களனாகிய சிவமே ஆகும். ஆனால் இக்கோவை இஸ்லாமியக் கோவை நூல்களுள் அந்தந்தப் பாடற்றுறை களுக்கேற்ப நிலமும் அதற்குரிய கோவைப் பொருளுக்கேற்ப தலைவன் தலைவியும் பொதுமைப்படக் கூறப்படுகின்றனர். இத்தகைய முறை யில் வரும் தலைவனும் தலைவியும் தம் கூற்றுகளின் மூலம் கோவை அகப்பொருள் துறைக்குரிய பொருளை நிறைவு செய்வதுடன் இவற் றிற்கு அப்பால் இஸ்லாமியக் கோவை நூல்கள் யாருக்காகப் பாடப் படுகிறதோ அவர்களுடைய சீரிய பெருமைகளையும் எடுத்துரைக்கின் றனர். இதனடிப்படையில் அமைந்த தலைவன், தலைவியர் மக்காக் கோவையில் இறசூலுல்லா அவர்களின் ஏற்றத்தையும், விஜயன் அப்துல் ரகிமான் அகப்பொருள் பலதுறைக் கோவையில் அப்துல் ரகிமானின் அருங்குணங்களையும், ஷம்சுத்தாசீன் கோவையில் கொடை வள்ளல் ஷம்சுத்தாசீனின் சீரிய சிறப்பையும் எடுத்துரைக்கின்றனர். தலைவன் தலைவியரின் இத்தகு அமைப்பு முறை இஸ்லாமியக் கோவை நூல்களுக்குரிய சிறப்பு எனலாம். இத்தகு அமைப்பிற்குக் காரணம் கோவை நூல்கள் யாருக்காகப் பாடப்படுகின்றனவோ அவர்களையே தலைவனாகக் கொண்டால் அதாவது நாயகம், அப்துல்ரகிமான், ஷம்சுத்தாசீன் முதலானவர்களைத் தலைவராகக் கொண்டு கோவை இலக்கியத்திற்குரிய அகப்பொருட் துறைகளை விரித்துரைத்தால் புலவர்களுக்கு இஸ்லாமிய மார்க்கம் தடைக் கல்லாக அமையும். எனவே தாம் சார்ந்த மார்க்கத்திற்கு ஏற்ப இஸ்லாமியப் புலவர்கள் தலைவன் தலைவியரைத் தம் கோவை நூல் களுள் அமைத்துக் கொள்கின்றனர்.

# மாலை இலக்கியங்கள்

## இரசூல் மாலையின் சிறப்பு

முஸ்லிம் பள்ளிகளிலும் முஸ்லிம் வீடுகளிலும் ஏழைகளுக்கு உணவு அளிப்பது வழக்கம். இவ்வாறு உணவு அளிக்கப்படும் விழா "கந்தூரி" என்று அழைக்கப்படும். "கந்தூரி" என்பது துருக்கி மொழியைச் சேர்ந்தசொல் என்பர். இந்துஸ்தானி மொழியில் "கந்தூரி" என்ற சொல் இஸ்லாத்துடன் தொடர்புள்ள எல்லா விழாக்களுக்கும் வழங்கப் படுகின்றது. இலங்கையிலும், தமிழ்நாட்டிலும் இச்சொல் இக்கருத் திலே பாவிக்கப்படுகின்றது. நபிகள் நாயகம் முகம்மது (ஸல்) அவர்கள் பிறந்த மாதமாகிய "ரபீஉல் அவ்வலில்" நபிகள் நாயகத்தின் பேரில் உணவு அளிப்பு நடைபெறுகின்றது. ஏனைய மாதங்களில் நபி நாய கத்துக்குப் பின்வந்த முஸ்லிம் பெரியோரின் பேரில் அவர்களைப் புகழ்ந்து உணவு அளிக்கப்படுகின்றது. இவையும் "கநதூரி" என்றே அழைக்கப்படுகின்றன.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பிறந்த மாதத்தில் உணவு அளிப்புக்குமுன் நபிகள் நாயகம் பேரில் "மௌலூது" ஓதப்படும். பெரும்பாலும் மௌலூது ஓதுதல் இரவிலேயே நடைபெறுகின்றது. மௌலூது ஓதுவதற்கு முன்னர் "கசீதத்துல் புறுதா" பாடப்படும். இவை அறபு மொழியிலே உள்ளன. இவற்றில் நபிநாயகம் முகம்மது (ஸல்) அவர்களின் வாழ்க்கை வரலாறே கூறப்படுகின்றது. ஆனால் பெரும்பான்மையான தமிழ் நாட்டு முஸ்லிம் மக்கள் இவ்வாறு அறபு மொழியில் கூறப்படும் நபிகள் நாயகத்தின் வாழ்க்கை வரலாற்றை அறியக் கூடியவர்கள் அல்லர். எனவே, இக் "கந்தூரி" விழாக்களில் பெரும்பான்மையான தமிழ்நாட்டு முஸ்லிம் மக்கள் விளங்கக்கூடிய முறையில் நபிகள் நாயகத்தின் வாழ்க்கை வரலாறுகள் ஓதப்படல் வேண்டும் என்று நம் மூதாதையர் எண்ணினர். எண்ணித் திட்டம் வகுத்தனர். அறபு மொழியில் ஓதப்படும் "மௌலூது" "புறுதா" ஆகிறவற்றுக்கு முன்பாகத் தமிழில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் வாழ்க்கை வரலாறு ஓதப்படல் வேண்டும் என்ற முடிவுக்கு வந்தனர். நபியுல்லா மாலை என்னும் இரசூல் மாலை தோன்றிற்று. தற்பொழுது முஸ்லிம் வீடுகளில் "கந்தூரி" விழாக்களில் "மௌலூது" முதலியவை ஓதப்படுவதற்கு முன்னர் இரசூல் மாலை பாடப்படுகிறது. இந்த இரசூல் மாலை என்னும் தமிழ் நூல் அறபு எழுத்திலே எழுதப் பட்டுள்ளது. எனவே, தமிழ்நாட்டு முஸ்லிம் மக்களின் புனித நூல்களில் ஒன்றாக இவ்விறசூல் மாலை திகழ்கின்றது.

## இறசூல் மாலையின் ஆசிரியரும் உள்ளடக்கமும்:

இரசூல் மாலை இயற்றியவர் சாமுநெயினார் லெப்பை என்பவர். இவர் காயபற்பட்டணத்தைச் சேர்ந்த செய்கு சுலைமான் (வலி) என்பவரின் புதல்வர். அறுக்கான் மாலை எழுதியவரும் இவரே.

இரசூல் மாலை பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முதலாம் பகுதியில் கடவுள் வணக்கம் போல் பல முஸ்லிம் பெரியோர்கள் புகழப் பட்டுள்ளனர். அல்லா(ஹ்)வைப் புகழும் பொழுது ஓரிடத்தில அல்லா(ஹ்)வின் இலக்கணங்களைப் பின்வருமாறு கூறுகின்றார்.

கண்ணின்றிக் காண்பவனைக்
காதின்றிக் கேட்பவனை
எண்ணிலடங்கானை எப்பொழுதும்
யான் புகழ்வேன்.

அல்லா(ஹ்)வைப் புகழ்ந்தபின் முகம்மது நபி (ஸல்) அவர் களையும் அவர்களுக்குப் பின் வந்த ''கலீபா''க்களையும் மற்றும் முஸ்லிம் பெரியார்களையும் பல கண்ணிப் பாக்களில் புகழ்கின்றார். இப்பகுதியிலுள்ள கடைசிப் பாவில் காயல் பட்டணத்தில் வாழ்ந்த அறபு அறிஞர் (ஆலிம்)களைப் பின்வருமாறு போற்றுகிறார்.

காயல் நகரிலுள்ள
கருணை உலமாக்கள் தம்மை
வாயால் புகழ்ச்சி செய்வேன்
வல்லானருளாலே.

இனி இவ்வாசிரியர் இந்நூலின் பயன்களை இரு கண்ணிப் பாக்க ளால் விளக்குகிறார். இந்நூலைப் படிப்பவருக்கும் படிக்கும்பொழுது கேட்டுக்கொண்டு இருப்பவர்களுக்கும் கடூரமான கொள்ளை நோய்கள் அணுகாது என்று கூறுகிறார். இம்மட்டன்று, மறுமையில் வரும் துன்பங்களிலிருந்தும் இவர்கள் விடுதலை பெறுவார்களாம். இதையே பின்வருமாறு கூறுகிறார்.

நாட்டமுடன் இம்மாலை நாடி யுரைப்பவர்க்கும்
கூட்டமாய்க் கேட்பவர்க்கும் கோதாரி வாராது
நாலை மஹ்சரிலே நயினார் கொடிக் கீழே
சூழும் பலாயை விட்டும் துய்தாகக் கூடி நிற்பர்.

நபிகள் நாயகம் முகம்மது (ஸல்) அவர்களின் பிறப்பும் வளர்ச்சியும் நான்கு பகுதிகளில் கூறப்பட்டுள்ளன. ஆறாவது பகுதியில் நபிகள் நாயகம் இஸ்லாம் சமயத்தைப் போதித்த பின் இஸ்லாம் சமயத்தைப் பின்பற்றியவர்களின் பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. முதன் முதலில்

இஸ்லாத்தைத் தழுவியவர் நபி நாயகத்தின் வாழ்க்கைத் துணைவி கதீஜா நாயகி அவர்களே. அதைத்தொடர்ந்து அபூபக்கர் (ரலி), அலி (ரலி), உதுமான் (ரலி), தல்ஹா (ரலி) முதலியோர் இஸ்லாத்தில் வந்தனர் என்று ஆசிரியர் பின்வருமாறு கூறுகின்றார்:—

அவ்வல் இஸ்லாமானார் அணங்கு கதீஜத்துத்தான்
செவ்வாகப் பின்பு வந்தார் செய்கு அபூபக்கரும்
அலியும் உதுமானு மான தல்ஹா சகுதும்
அலையாத மார்க்கத்துக்கு அபூபக்கர் பின் வந்தார்கள்.

அடுத்து நபிகள் நாயகத்தின் சீரிய பண்புகள் ஒன்றின் பின் ஒன்றாகக் கூறப்பட்டுள்ளன. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தமது வீட்டுக்குத் தேவைப்பட்ட பொருட்களைக் கடையில் வாங்கிக்கொண்டு செல்லுகையில் சுற்ற இருப்பவர்கள் தாம் சுமக்கக் கேட்டாலும் கொடுக்க மாட்டார் என்பதைப் பின்வருமாறு உணர்த்துகிறது இறசூல் மாலை.

கடையில் சரக்குக் கொண்டு
கையிலிருக்கையிலே
தொடர்ந்தவர்கள் கேட்பார்கள்
துய்யோர் கொடுக்கார் காண்.

இரவில் துயில் எழுந்து ஞாயிறு தோன்றும்வரை ஒருகாலில் நின்று அல்லா(ஹ்)வைத் தொழுவார்களாம் நபிகள் நாயகம் அவர்கள். அதைப் பின்வருமாறு ஆசிரியர் கூறுகிறார்.

இரவில் முழித்து இறையோனை ஒரு காலில்
பருதி அளவும் பரிவாய் வணங்குவர்காண்.

இப்பாவில் முழித்து என்பது விழித்து என்ற பொருளையே குறிப்பிட்டுள்ளது. விழித்தல் என்ற சொல்லே முழித்தல் என்று மாறியுள்ளது.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நாற்பது நாள் உணவு உண்ணாமல் இருந்தார்கள் என்பதை ஆயிஷா நாயகி குறிப்பிட்டுள்ளார். இதையே ஆசிரியர் ஆயிஷா நாயகி வாயால் குறிப்பிடுகிறார்.

நாற்பது நாளளவும் நபி வீட்டிலே நெருப்பு
கூர்ப்பாக இல்லையென்றார் குணமான ஆயிசத்து

இதைத் தொடர்ந்து நபிகள் நாயகம் அருந்திய உணவுப் பொருட்கள் இவையென எடுத்துக் கூறுகிறார் இந்நூலாசிரியர். இவை ஈர வெங்காயம், ''தோல் கோதுமை ரொட்டி'' முதலியன என்று பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

ஈரவெங்காயம் இரசூல் முகம்மதனார்
சீராக வெந்த பின்பு திண்ணமுடன் தின்றார்காண்
தோல் ''கோதும்பு ரொட்டியை''த் துய்ய நபியிறசூல்
ஆருக்கும் கொடுத்து அழகாயருந்துவர் காண்.

இனி நபி நாயகத்தின் பொறையுடைமையை சுட்டிக் காட்டுகிறார். எவன் ஒருவன் கூறத்தகாத ஒன்றை நபிகள் நாயகத்தின் முன்னிலையில் கூறினால் அலி (ரலி), உமர் (ரலி) முதலியோர் அவனை உடனே கொல்லவேண்டுமென்று துணிவர். அப்பொழுது நபிகள் நாயகம் முகம்மது (ஸல்) அவர்கள் ஏனையோரை நோக்கி ''இவன் இவ்வாறு கூறியது இவனது அறியாமையிலானபடியால் இவனை மன்னிப்பதே சாலச் சிறந்தது'' என்று கூறுவார்கள். இவ்வாறு மன்னித்து அவனுக்குப் பொருளும் அளிப்பார்கள். இதனையே ஆசிரியர் பின்வருமாறு கூறுகிறார்.

ஆகாத பேச்சுரையை அலி உமறு கேட்டளவில்
வாகான வாள் பிடுங்கி வதைப்போமே என்றுரைப்பார்
அப்பந் நபி சொல்லா ரறியாத மாந்தனிவன்
ஒப்பாய் கொடை கொடுத்து ஊரே போமென்றுரைப்பார்.

ஈண்டு ''அப்பம்'' என்பது அப்பொழுது என்பதையே குறித்து நின்றது.

நபி நாயகத்தின் அரசாட்சியைப் பற்றிச் சுருங்கிக் கூறிவிட்டு அவர்களின் வபாத்தை (இறப்பை)க் குறிப்பிடுகின்றார். அவர்கள் வபாத்தாகும்பொழுது அவர்களுக்கு அறுபத்து மூன்று ஆண்டுகள் நிறைவேறி இருந்தன என்பதைப் பின்வருமாறு குறிப்பிடுகின்றார் ஆசிரியர்.

அறுபத்து மூன்றாண்டில் அகுமதிரசூல் நயினார்
சிறப்பாய் மௌத்தானார் திங்கட்கிழமையிலே.

கடைசியாக நபிகள் நாயகம் முகம்மது (ஸல்) அவர்களின் வாழ்க்கை வரலாற்றை எழுதி முடிக்க ஒருவராலும் இயலாது என்று கூறுகிறார் ஆசிரியர். கடலை மையாகவும், வானத்தை எழுதும் தாள்களாகவும் கொண்டு எழுதினாலும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் வரிசைகளை எழுதி முடிக்கமுடியாது எனப் பின்வருமாறு கூறுகின்றார்.

ஏழு கடலும் ஏழு வானமும் அருசும்
வாழ்புடையோர் வஸ்பெழுத மாட்டாது வறகாய்

அருசு, வஸ்பு, வறகு என்பன அறபுச் சொற்கள். அவை முறையே இருக்கை, வரிசை, தாள் என்பனவற்றைக் குறித்து நிற்கின்றன.

இந்நூல் எளிய நடையில் எழுதப்பட்டுள்ளது. முஸ்லிம் தமிழ் மக்களிடையே பெரும்பாலும் வழங்குவது. இதனாலேயே இந்நூலில் அறபுச் சொற்கள் மிகப்பல இருக்கின்றன. இரசூல் மாலை அறபு எழுத்தில் எழுதப்பட்டிருப்பதனால் அறபுச் சொற்களை இலகுவாய் இந்நூலில் ஆளப்பட்டுள்ளன. இந்நூலில் உள்ள பல தமிழ்ச் சொற்கள் கூடச் சிதைந்திருக்கக் காணலாம். இவ்வாறு சிதைந்த தமிழ்ச்சொற்கள் உண்மையில் தமிழ்ச்சொற்கள் தாமா என்ற ஐயத்தை விளைவிக்கவும் கூடும்.

# அதபுமாலை ஓர் அறிமுகம்

இஸ்லாத்தைப் பின்பற்றும் ஒவ்வொருவரும் ஒவ்வொரு நாளும் கடைப்பிடித்து ஒழுக வேண்டிய ஒழுக்கங்களை இஸ்லாம் மிக நுண்ணிதாகக் கூறுகின்றது. இவ்வொழுக்கங்கள் ஒரு முஸ்லிம் எவ்வாறு தனது வாழ்க்கையை நடாத்தவேண்டும் என்பதைச் சுட்டிக் காட்டுகின்றன. உலக வாழ்க்கையைச் செவ்வனே நடத்தினால் மட்டுமே மேன்மையான நிலையை அடையலாம் என்று இஸ்லாம் இயம்புகிறது.

இவ்வொழுக்கங்களை முஸ்லிம் மக்களிடையே பரப்பப் பல நூல்கள் எழுந்தன. இந்நூல்கள் அறபு மொழியில் இருந்தமையினால் அறபு மொழியில் பயிற்சி பெற்றவருக்கே அறியக்கூடியதாக இருந்தன. இத்துறையில் தமிழ்நாட்டு முஸ்லிம்களுக்குத் துணை புரியத் தமிழ் நூல்கள் எழுந்தன. இஸ்லாமிய ஒழுக்கங்களைத் தன்னிடத்தே கொண்ட மாலை இனத்தைச் சேர்ந்த பல நூல்கள் முஸ்லிம்களிடையே பரவத் தொடங்கின. அவற்றுள் தலை சிறந்தது, ''அதபுமாலை'' என்னும் நூலே. ''அதபு'' என்னும் அறபுச் சொல் ''ஒழுக்கம்'' என்னும் பொருளை உடைத்து. எனவே அதபு மாலை ஒழுக்கத்தைக் கூறும் நூல் எனலாம். அதபு மாலை சாமுநைனா லெவ்வை ஆலிம் என்பவரால் இயற்றப்பட்டது. இவருக்கு காமில் ஒலி என்ற சிறப்புப் பெயரும் உண்டு. இவர் காயற்பட்டணத்தைச் சேர்ந்த ''காமில் ஒலி'' சுலைமான் லெவ்வை ஆலிமின் புதல்வராவர்.

## அதபு மாலையின் குறிக்கோள்கள் :

அதபு மாலையில் இஸ்லாமிய குறிக்கோள்கள் பல எடுத்துக் கூறப்படுகின்றன. ஈண்டு அவற்றுள் ஒரு சிலவற்றை நோக்குவோம். ''கலிமா''வின் வரிசையையும் ஈமான் கொள்ளுமியல்பையும் முதலிரண்டு படலங்களிற் கூறித் தொழுகையின் இன்றியமையாமையை மூன்றாம் படலத்திற் கூறுகிறார். தொழுகையைப் பற்றிக் கூறியவிடத்து பல செய்யுட்களில் தொழுகையின் இன்றியமையாமையும் தொழுகையை விட்டோர் அடையும் துன்பங்களயும் விரிவாக வர்ணிக்கிறார், அதபு மாலை ஆசிரியர். ஒரு செய்யுளில், ''புறுக்கான்'', ''தௌராத்து'', 'இன்ஜீல்'', ''சபூர்'' ஆகிய நான்கு மறைகளிலும் கூறியாங்கு அல்லா(ஹ்)வைத் தொழாமல் விட்டோர் பொல்லா நரகில் விழுந்து பெருந்துன்பம் அடைவர் என்றும், அவ்வாறு தொழாதவர்கள் பொல்லா நாற்றமுள்ள ஐயறிவுடைய மாக்கள் உடன் ஒப்பிடக் கூடியவர் என்றும் கூறுவர், அச்செய்யுள் வருமாறு

வேதம் குர்ஆனில் தௌராத்தினில்
வெளிச்சமுள்ள இன்ஜீல் சபூறிவையில்
நாதன் தொழுகையை விட்டோர்கள் பொல்லா
நாற்றமுள்ள மாக்களென வோதினான்
காதமணம் வீசு நபிஉம் மத்துக்கான
கதமாந்தொழுகையைப் பழுதாக்கின
மாதை மனதாசை மனதுள் வைத்து
மாந்தர் ஹையினைச் சந்திப்பரே.

புறுக்கான், தௌறாத்து, இன்ஜீல், சபூர் ஆகிய நான்மறையும் முறையே முஹம்மது நபி (சல்) அவர்களுக்கும், மூசா நபி (அலை) அவர்களுக்கும், ஈஸா நபி (அலை) அவர்களுக்கும், தாவூது நபி (அலை) அவர்களுக்கும் இறக்கப்பட்டவையாகும். மேற்கூறப்பட்ட நான்மறைகளிலும் கூறப்பட்ட தொழுகையை விட்டோர்கள் விலங் கினத்தை ஒப்பர் என்பதையே இச்செய்யுள் கூறுகின்றது.

இஸ்லாத்தின் கட்டாய கொடையாகிய ''ஜக்காத்'' தைக் கொடுக் காதவர்கள் கொடும் பாவிகளாவர் என்று திருமறை கூறுகின்றது. ''ஜக்காத்'' கொடுப்பதனால் திருமக்க மாநகர் சென்று ஹஜ்ஜு இயற்றிய பெரும் பேறுகிட்டும் என்று அதபுமாலை ஆசிரியர் கூறு கிறார். இதை விளக்க ஒரு நிகழ்ச்சியைக் குறிப்பிடுகின்றார். ஒரு மனிதன் மக்கா சென்று ஹஜ்ஜு செய்ய பொற்காசுகள் சேர்த்து வைத்தானாம். ஆனால் அப்பணத்தை வேறு வழியில் அம்மனிதன் செலவழித்தானாம். அப்பணத்தைப் பல வறியவர் கட்கு அளித்தானாம். இது உள்ளம் உவந்து அளித்த கொடை என்றமையினால் இவனுக்கும் இன்னும் பலருக்கும் ஹஜ்ஜு செய்ததன் பேறு கிடைத்ததாம். இந்நிகழ்ச்சியையே பின்வரும் செய்யுளில் கூறியுள்ளார்.

ஹஜ்ஜிற்குப்போக வொரு மனுடன்
கனமாய்ப் பொற்காசு தேடியதை
எச்ச இசுலாமா னவர்களுக்கே
இரக்கமாகவே யீய்ந்ததினால்
மிக்கமாகவே இவர்தான் ஹஜ்ஜு
விருப்பின் செய்தா ரென்று சொல்லி
அச்ச மானவ ரவர் பொருட்டால்
அடங்கலுக்கும் ஹஜ்ஜு கபூலானதே.

இப்பாடலில் வரும் கபூலால் என்பது நிறைவேறுதல் என்னும் பொருளுடைத்து.

நோன்பைந் பற்றிக் கூறும்பொழுது நோன்பின் இன்றியமையா மையையும் நோன்பை விட்டோர் படும் துயரங்களையும், நோன்பு வையாதவர் நரகில் வீழ்ந்து அடையும் இன்னல்களையும் ஒன்றன்பின் ஒன்றாக அதபுமாலையில் கூறியுள்ளார். நோன்பு வைப்பதில் வாய்க்கு முதலிடம் அளிக்கப்பட்டுள்ளது. அதையே அதபு மாலை ஆசிரியர் பின்வரும் செய்யுளில் கூறியுள்ளார் :-

பாவம் வருவது வாயினாலே
பாவம் போவதும் வாயினாலே
ஆயுமறிவாள ரெல்லோருந்தான்
அல்லா(ஹ்) வென்பது வாயினாலே
காயமுறுப்பெலாம் வாயைப் போல
கண்ட வரிசைகளொன்று மில்லை
நாயன்றனக்கஞ்சி வாய் பேணினால்
நன்மையுள்ள நோன்பு அழகாமென்றார்.

கட்டைப்பக்கீர்ப்படலம் அதபு மாலையில் ஒரு முதன்மையான படலமாகக் கொள்ளலாம். இப்படலத்திலுள்ள செய்யுள்கள் பெண்கள் முஸ்லிம் பெரியார்களின் கல்லறைகளுக்குப் போவதைக் கண்டித்து இயற்றப்பட்டுள்ளன. இப்படலத்தில் ஒருவன் பெண்கள் முஸ்லிம் பெரியார்களின் கல்லறைக்குப் போகும் ஊழலை நீக்குவதற்குக் கைகண்ட ஒரு நிகழ்ச்சி குறிக்கப்பட்டுள்ளது. ஒருவரும் காணாதவாறு ஒரு மரக்கட்டையைச் சுமந்துகொண்டு போய்க் காட்டில் ஒரு இடத்தில் புதைத்து அவ்விடம் ஒரு முஸ்லிம் பெரியாரின் கல்லறை என்று எல்லோரும் அறியக் கூறி அதற்குப் பக்கத்திலே ஒரு கொடியும் கட்டி னான், ஒரு முஸ்லிம். அவ்விடத்தில் ஒரு பக்கீரையும் இருத்தினான். இவ்வாறு செய்ய அவ்விடத்தில் நேர்த்திக் கடன வைத்துக் கேட்கும் ஒவ்வொரு வரமும் நிறைவேற்றப்படும் என்ற செய்தி எல்லோரிடமும் பரவியது. நேர்த்திக் கடன் வைத்துக் கேட்ட வரங்கள் எல்லாம் அல்லா(ஹ்)வின் கட்டளைப்படி நிறைவேறின. இக் ''கல்லறை''யில் இருந்த பக்கீருக்குப் பல பொருட்கள் கிடைத்தன. கிடைத்த பொருட் களில் சிலவற்றைப் பின்வரும் செய்யுளில் ஆசிரியர் கூறுகிறார்.

கட்டைப் பக்கீறுக்குச் சிலநாள்
கழுத்தேயறுபட்ட கிடாய்கள் மெத்த
முட்டையிடுங் கோழி சேவல்
முழுதுங் காய்கறி பால் பழமும்
கட்டுப்பாடாக உறட்டி சோறு
கலியா விருந்துடன் பாற்சோறுகள்
தட்டுப்படாமலே வர நாடோறுந்
தன்மை கூட்டத்தார் திருநாளாச்சே.

இதை அறியாத பலர் பெரும் ஏமாற்றமடைந்தனர். கடைசியில் இக் ''கல்லறை''யில் புதைப்பட்டது மரக்கட்டை என்றும் அது முஸ்லிம் பெரியாரின் கல்லறை அன்று என்றும் யாவரும் அறிந்து கொள்ளும்படி காட்டப்பட்டது. இந்நிகழ்ச்சியைச் சுட்டிக்காட்டிப் பெண்கள் முஸ்லிம் பெரியாரின் கல்லறைகட்குப் போதல் இஸ்லாமிய கோட்பாடுகட்கு முரண்பட்டது என்று ஈண்டுக் கூறுகிறார் சாமுநைனா லெப்பை ஆலிம்.

மாடாளும் படலத்தில் ''வீட்டு விலங்குகளை'' நடாத்தும் முறைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. அவ்விலங்குகள் எவ்வாறு பாது காக்கப்படவேண்டும் என்றும், செவ்வனே பாதுகாக்கப்படாவிட்டால் பெரும் பிழைகள் செய்தவர்கள் ஆவார்கள் என்றும் மனிதர் எச்சரிக்கப் படுகின்றனர். சிலர் மாடுகளையும், ஆடுகளையும் கன்றுக்குப் பால் விடாமல் கறக்கின்றனர் என்றும் அப்படித் தீங்கு செய்கின்றவர் மறு மையில் பொல்லா நரகில் வீழ்ந்து தத்தளிப்பார்கள் என்றும் அதபு மாலை ஆசிரியர் சாமுநைனா லெவ்வை ஆலிம் அவர்கள் பின்வரும் செய்யுளில் கூறுகின்றார்.

பெற்ற கன்றுக்குப் பால் விடாமல்
    பெருகு மாடாடு கறப்பவர்கள்
உற்ற கியாமத்து நாளினிலே
    யோங்கும் பெரிதான தாகமாகிக்
கத்திக் கதறியே யோடியோடிக்
    கன்று போல நின்றழுவாரதால்
உற்ற வறிவுள்ள நல்லோர்களே
    உவந்து பிள்ளைபோல் வளர்ப்பீர்களே.

# ஒசியத்து மாலையும், இராஜமணி மாலையும்

பொதுமக்களால் விரும்பிப்பயிலப்படும் நூல்கள் பெரும்பாலும் பேச்சு வழக்கு மொழியுடன் நெருங்கிய தொடர்புள்ள நடையில் எழுதப்பட்டிருப்பதைக் காணலாம். இந்நூல்கள் இலகுவில் விளங்கக்கூடிய நடையில் இருப்பதே இதற்குக் காரணம் எனலாம்.

இதேபோன்று மாலை இனத்தைச் சேர்ந்த இஸ்லாமிய நூல்கள் பெரும்பாலும் பேச்சுத் தமிழுடன் நெருங்கிய தொடர்புள்ள நடையிலே எழுதப்பட்டுள்ளன. எனவே இந்நூல்கள் பொது வழக்கில் சிறந்து விளங்குகின்றன. இம்மாலை இனத்தைச் சேர்ந்த நூல்களையும் பல பிரிவுகளாகப் பிரிக்கலாம். முதுமொழிமாலை போன்ற நூல்கள் நபிகள் (ஸல்) அவர்களைப் புகழ்வதையே தமது குறிக்கோளாகக் கொண்டுள்ளன. இரசூல் மாலை போன்றவை இஸ்லாமிய விழாக்களில் ஓதப்படுகின்றன. சில, முஸ்லிம்களின் சமய அறிவை வளர்க்கும் பொருட்டு எழுதப்பட்டுள்ளன. இன்னும் சில, முஸ்லிம் மக்கள் கடைப்பிடிக்க வேண்டிய நன்னெறிகளைப் போதிக்கின்றன. வேறு சில, அவர்களின் பொழுது போக்குக்காகவே பயன்படுகின்றன. மற்றும் சில முஸ்லிம் பெரியார்களின் வாழ்க்கை வரலாறுகளைக் கூறுகின்றன. எஞ்சியவை இழவு வீடு போன்ற இடங்களில் ஆங்குக் கூடியிருக்கும் அனைவரும் அறியும் பொருட்டுப் படிக்கப்படுகின்றன.

இழவு வீடு அல்லது சாவீடு என்பதை முஸ்லிம் மக்கள் மையத்து வீடு என்று அழைப்பார். இறந்த (மௌத்தான) முஸ்லிம் ஒருவன் நல்லடக்கம் செய்யப்பட்டபின் அன்றிரவு அவனது வீட்டில் அவன் உற்றார், உறவினர், அயலார் முதலியோர் கூடுகின்றனர். அவன்மீது தமக்கு முன்னிருந்த அன்பையும் இப்பொழுதுள்ள துன்பத்தையும் தெரிவிக்கவே கூடுவர். இவ்வாறு இறந்த மூன்றாம் நாள்வரை ஒவ்வொரு இரவும் கூடுவர். இங்ஙனம், கூடியிருப்பது முஸ்லிம் பெருவழக்கில் "துக்கம் கொண்டாடுதல்" அல்லது "துக்கங்காத்தல்" என்று அழைக்கப்படும். முஸ்லிம் அல்லாதோரின் தமிழ்ப் பேச்சு வழக்கில் இந்நிகழ்ச்சி "இழவு கொண்டாடுதல்" என்று அழைக்கப்படும். இவ்வாறு "மையத்துவீட்டில்" கூடிய அனைவரும் கண் துயிலாது விடியற்காலை வரை இருப்பர். இவர்கள் கூடி வீண்பொழுது போக்கமால் இருத்தற் பொருட்டு சமய போதனைகள் நடைபெறும். நன்நெறிகள் எடுத்துக் கூறப்படும். முஸ்லிம் பெரியாரின் சீரிய வாழ்க்கை வரலாறுகள் சுட்டிக் காட்டப்படும். இவையேயன்றிச் சீறாப்புராணம் முதலிய நூல்களும் படிக்கப்படுகின்றன. ஒருவர் சீறாப்புராணச் செய்யுள்களைப் படிக்க

இன்னொருவர் அச்செய்யுள்கட்கு உரை கூறி விளங்கப்படுத்துவார். சிற்சில வேளைகளில் இவ்வாறு உரை கூறுதல் போட்டியிலும் முடிகின்றது. இப்போட்டிகளில் உரைகூறி விளங்கப்படுத்தியவர்களுள் சிறந்தவர் கூடியிருந்தவர்களால் தெரிவு செய்யப்படுவர்.

''மையத்து வீடுகளில்'' படிக்கப்படும் மாலைகளுள் பெரும்பாலும் பயிலுவது ''ஒசியத்துமாலை'' என்னும் நூலே. இறக்குந் தறுவாயிலிருக்கும் ஒருவன் தனது உறவினர் முதலியோருக்குக் கடைசியாகக் கூறுவதையே ''ஒசியத்து'' என்பர். தான் இறந்தபின் தனது பொருட்கள் எவ்வாறு தனது உறவினர்களுக்கிடையே பகிர்ந்து கொடுக்கப்படல் வேண்டும் என்றும், தனக்குப்பின் தனது பிள்ளைகள் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டுமென்றும் கூறுவதையே ''ஒசியத்துச்சொல்லல்'' என்று கூறுவர். இவ்வொசியத்து மாலை யாரால் எப்பொழுது இயற்றப்பட்டது என்பது இந்நூலில் குறிப்பிடப்படவில்லை.

அறபு எழுத்திலிருக்கும் இத்தமிழ் ஒசியத்து மாலை இன்னும் ஏட்டு வடிவிலேயே இருக்கின்றது. ஒசியத்து மாலையில் பெரும்பாலும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தமது புதல்வி பாத்திமா நாயகியிடம் கூறிய 'ஒசியத்து'க்களே காணக்கிடக்கின்றன. நபிகள் நாயகம் வபாத்தாகும் (இறக்கும்) முன் பாத்திமா நாயகி தனது தந்தையின் கட்டில் தலைமாட்டிலிருந்து கேள்வி கேட்க, அக்கேள்விகளுக்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அளிக்கும் பதில்கள் இவ்வொசியத்து மாலையில் கூறப்பட்டுள்ளன.

## ஒசியத்து மாலையின் யாப்பு :

ஒசியத்து மாலையில் உள்ள கண்ணிகள் சிலவற்றை இனி நோக்குவோம். பாத்திமா நாயகி நபிகள் நாயகம் முகம்மது (ஸல்) அவர்களிடம் பின்வருமாறு ஒரு கேள்வியைக் கேட்டனர்.

இந்தப் பொய்யூரிலிருந்து நானும்
துன்பப் படாமலே பாவா
அந்த மெய்யூருக்கு எப்போ என்னை
அழைத்துப் போவீர் பாவா

இக்கண்ணியில் பொய்யூர் என்றது இவ்வுலகத்தையும், மெய்யூர் என்பது சுவர்க்கத்தையும் குறிப்பிடுகின்றன. பாவா என்றது தந்தையை, ஆறு மாத காலம் சென்றபின் பாத்திமா நாயகி சுவர்க்கத்துக்கு அழைத்துச் செல்லப்படுவாரென்று நபிகள் நாயகம் (சல்) அவர்கள் பதில் கூறினார்கள். இவ்வாறு நபிகள் நாயகம் வபாத்தாகி (இறந்து) ஆறு மாதமாகும் பொழுதே பாத்திமா நாயகி நபிகள் நாயகம் ஒசியத்து சொன்னது போல் கனவு கண்டார். உடனே தமது இரு புதல்வரையும் அருகில் அழைத்துப் பின்வருமாறு கூறினர்:

என்னுடைய மக்களே என்
கண்மணியே என் அல்லா(ஹ்)
இத்தனை நாள் வரையுமுங்களை
வளர்த்திட்டேன் மக்களே
இன்றைக்குங்களை விட்டு ஆகிறம்
போகிறேன் மக்களே
இன்றைக் காதரித்துப் போகிறேனே
மக்களே என் அல்லா(ஹ்)
நாளைக்கு ஆதரிக்க யாரை
நான் வைப்பேன் அடியாள்
ஆலநபி மகளார் புலம்ப

இவ்வாறு ஒசியத்து மாலையை ஆராயப் புகின் ஒசியத்து மாலையில் உள்ள கண்ணிகள் யாவும் புலம்பற் கண்ணிகளாகவே காட்சியளிக்கின்றன. முதன்முதலாக இயற்றப்பட்ட ஒசியத்து மாலையை ஏனையோர் பிரதி பண்ணினர். அப்படிப் பிரதி பண்ணும் பொழுது அவர்கள் பிழைகள் விட்டிருப்பார்கள். அப்பிழைகள் பெரும் பாலும் எழுத்துப் பிழைகளாகவே காட்சியளிக்கின்றன. இவ்வாறான எழுத்துப் பிழைகள் பின்னர் பிரதி பண்ணப் பட்டவைகளில் திருத்தப் படவில்லை. இப்பிழைகள் எமக்குக் கிடைத்துள்ள பிரதிகளில் காணக் கிடக்கின்றன.

## இராஜமணி மாலை

இராஜமணி மாலையும் ஒசியத்து மாலையைப்போல் முஸ்லிம் மக்களிடையே வழங்கப்படுகின்றது. இம்மாலையில் நபிகள் நாயகம் முகம்மது (ஸல்) அவர்களின் அரசாட்சியும் ''வபாத்தும்'' (இறப்பும்) முதன்முதலாகக் கூறப்படுகின்றன. இப்பகுதியிலும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தமது மகளார் பாத்திமா நாயகிக்குச் சில அறவுரைகள் கூறுகின்றார்கள். அது பின் வருமாறு :

கண்ணீர் தான்விடு மகளார் தம்மை
கபீபு முகம்நோக்கிக் வல்வாரப்போ
விண்ணோர் தாலாட்டும் பேரன்மாரை
விருப்பமாய் வைத்து வளர்ப்பீரென்ன
மண்ணிலம் விட்ட ஆறா மாதம்
வல்லோன் சுவனத்தில் வருவீரம்மா
எண்ணி ஆயாசம் நினைக்க வேண்டா
மெனது கலியாண மகளே என்றார்.

இச் செய்யுளிலும் தாம் ''வபாத்தாகி'' ஆறாம் மாதம் தமது மகள் பாத்திமா நாயகி சுவர்க்கத்தை அடைவார் என்றும் அதுவரை தமது அருமைப் பேரர்களான அசன் (ரலி) அவர்களையும், உசைன் (ரலி) அவர்களையும குறைகள் ஒன்றும் இன்றி வளர்க்க வேண்டும் என்றும் நபிகள் பெருமானார் முகம்மது (சல்) அவர்கள் பாத்திமா நாயகிக்குக் கூறுவதைக் காணலாம்.

இரண்டாம் பகுதியில் அபூபக்கர் சித்தீக்கு (ரலி) அவர்களின் அரசாட்சியும், வபாத்தும், மூன்றாம், நான்காம், ஐந்தாம் பகுதிகளில் மற்ற மூன்று கலீபாக்களான உமறு கத்தாப் (ரலி) அவர்கள், உதுமான் (ரலி) அவர்கள், அலி (ரலி) அவர்கள் ஆகியோரின் அரசாட்சியும் வபாத்தும் முறையே விவரிக்கப்படுகின்றன. பின்னர் அசன் (ரலி) அவர்களதும், செய்னு லாபுதீன் அவர்களது அரசாட்சியும், அவர்கள் புரிந்த போர்களும், அவர்களின் வபாத்தும் குறிக்கப் படுகின்றன இராஜமணி மாலைபக்கீர் மதாறுப் புலவரால் இயற்றப்பட்டது இவர் சோதரகுடியைச் சேர்ந்த ஊ. பிச்சை இறாவுத்தரின் புதல்வர். பக்கீர் மதாறுப் புலவர் இந்நூலை இயற்ற, இளையாங்குடி நயினா முகம்மது ஆலிம் அறபு மொழியிலுள்ள அரசர் வரலாற்றைத் தமிழில் மொழிபெயர்த்துத்துணை புரிந்தார்.

பக்கீர் மதாறுப் புலவர் இயற்றிய இன்னொரு நூல் முகியித்தீன் மாலை. இந்நூலில் பகுதாதைச் சேர்ந்த ஜெயிலானியில் பிறந்த முகியித்தீன் ஆண்டகையின் வாழ்க்கை வரலாறு கூறப்படுகின்றது. இஸ்லாத்தைப் பரப்பி இஸ்லாத்தை நல்ல நிலைக்குக் கொண்டு வர முகியித்தீன் ஆண்டகை புரிந்த அரும்பெரும் செயல்கள் பலவற்றை இந் நூலில் பரக்கக் காணலாம். எடுத்துக்காட்டாக ஒரு நிகழ்ச்சியை ஈண்டு நோக்குவோம். ஒரு நாள் முகியித்தீன் ஆண்டகை தனியே காட்டு வழி யில் நடந்து சென்றார். கள்வர் கூட்டத்தார் ஆண்டகை வருவதை கண்டனர். கண்டு திருட எண்ணினர். இக்கள்வர் முகியித்தீன் ஆண்டகையை அணுகி முகியித்தீன் ஆண்டகையிடம் உள்ள பொருட் களைத் தம்மிடம் ஒப்படைக்கும்படி கூறினர். இச் சொற்களைக் கேட்டு முகியித்தீன் ஆண்டகை பின்வருமாறு கூறினார்கள்.

அந்த மொழி கேட்டு முகியித்தீனு
மருமையாகவே உரை செய்தனர்
எந்தன் ''சொலியா''ப் பையிலேதா
னிருக்கும் நாற்பது தங்கக்காசு
சொந்தமாய் நீங்க ளெடுத்தே கொள்ளும்
சோதரரே என்று முன்னே வைத்தார்
வந்த திருடர்கள் மனமிரங்கி
வழுத்துவாரப்போ துரிமையாக

இவ்வாறு உண்மை கூறியதைக் கேட்க கள்வர் அஞ்சினர். அஞ்சிப் பின்வருமாறு கூறிப் போயினர்.

நல்லோர் குழந்தாய் நீருண்மை சொன்னீர்
நமக்கு மிக வேண்டா முமது காசு
எல்லா பரக்கத்தும் பெற்ற கோவே
இரசூல் முகம்மது பேரனாரே
வல்லோ னருள்பெற்ற தயாபரரே
பகுதாதுக்கு நீர் போகுமென்றே
உல்லாசமதாக திருடரேக
உரைப்பர் முகியிதீ னப்துல் காதிறு

அன்று தொட்டுக் கள்வர் தமது திருட்டுத் தொழிலைக் கைவிட்டனர்; கைவிட்டு நல்ல வழியில் சேர்ந்தனர்.

# அபூஷகுமா மாலையும் பலுலூன் அசுகாபி மாலையும்

மாலை இலக்கியங்களுள் வரலாற்று நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்ட பல நூற்கள் உண்டு. அவற்றுள் அபூஷகுமா மாலையும் பலுலூன் அசுகாபி மாலையும் குறிப்பிடத்தக்கன. இஸ்லாத்தின் உயரிய நீதி முறைகளை உலகிலேயே நிலைநாட்டு வதற்காகத் தனது செல்வப் புதல்வன் அபூஷகுமாவைத் தண்டித்த வரலாறு அபூஷகுமா மாலையில் குறிப்பிடப்பட்டுள்ளது. அபூஷகுமாவின் வாழ்க்கையைக் கூறுவதால் இந்நூல் இப்பெயர் பெற்றது.

அபூஷகுமா மாலை திருப்பாலைக்குடி செய்தககாதிப் புலவரால் இயற்றப்பட்டது. அறபு மொழியிலிருந்த இவ்வரலாற்றைச் செய்தக் காதிப் புலவருக்குத் தமிழில் மொழி பெயர்த்துக் கொடுத்தவர் பீர் முகம்மது என்பவர். இவர் தொண்டியைச் சேர்ந்த சைது லெப்பை என்பவரின் புதல்வர். அறபு அறிஞர் (ஆலிம்) களால் பெரிதும் புகழப் பட்டவர். அபூஷகுமா மாலை ஹிஜ்ரத்து 1148 ஆம் ஆண்டு ஹஜ்ஜுப் பெருநாளன்று அரங்கேற்றப்பட்டதென்று ஆசிரியர் கூறுவர். இவ் வாண்டை ஏறக்குறைய கி.பி. 1738 எனலாம்.

அபூஷகுமாவின் வாழ்க்கையைப் பற்றிக் கூறுமுன் அபூஷகுமா வாழ்ந்த கால ஆட்சி முறையை ஆசிரியர் விளக்கிக் கூறுகிறார். அக் காலத்தில் தீமை செய்பவரே இல்லையாம். புலியும் மானும் ஒரே நிலையில் நீர் பருகினவாம். பருந்தும் கிளியும் ஒரே கூட்டில் இருந் தனவாம். இவற்றையே ஒரு செய்யுளின் முதலிரண்டு அடிகளிலும் ஆசிரியர் பின்வருமாறு கூறுகிறார்.

மானும்புலியுமே யிணங்கியொரு
      மடுவிற் புனலுணவும் வானுலாச்
சேனங் கிளியுமே பொருந்தியொரு
      செழும் பஞ்சரத்தினி லிருந்திடவும்

இவ்வாறு அரசாட்சி நடைபெறும் காலத்தில் முஸ்லிம்களுக்கும் முஸ்லிம் அல்லாதவர்களுக்குமிடையில் போர் மூண்டது. அபூஷகுமா போரில் பங்குபற்றி நோய் வாய்ப்பட்டார். நோய் தீராமல் அபூஷகு மாவை வருத்தியது. அல்லும் பகலும் எல்லோரும் அல்லா(ஹ்)வைத் தொழுது நோயைத் தீர்க்கும்படி வேண்டினார்கள். அல்லா(ஹ்)வும்

வேண்டுகோளை நிறைவேற்றினான். அபூஷகுமா நோய் தீர்ந்த பின் ஒரு போலி வைத்தியனால் ஏமாற்றப்பட்டார், ஏமாற்றப்பட்டு மன்னிக்க முடியாத குற்றம் புரிந்தார். இப்போலி வைத்தியனின் தூண்டுதலினால் கள்ளுக் குடித்து ஒரு பெண்ணின் கற்பையும் அழித் தார். இக்கொடூர செயலை அறிந்தார் அபூஷகுமாவின் தந்தை. நீதி நெறி தவறாத முஸ்லிம் மன்னர் உமறு இபுனுகத்தாபு (ரலி) அவர்கள். உடனே தமது மகன் செய்த குற்றத்தை தண்டிக்கத் துணிந்தார். ''சனா''ச் செய்தோருக்கு நூறு அடி அடித்தல் வேண்டும் என்று இஸ்லா மிய திருமறை கூறுகின்றது என அறிந்தார். அறிந்து தண்டிக்க உத்தரவு இட்டார். இவ்வாறு தமது புதல்வன் அபூஷகுமா புரிந்த குற்றத் திற்காக உமறு இபுனு கத்தாபு (ரலி) அவர்கள் தண்டிக்கத் தீர்மா னித்ததை அறிந்த அபூஷகுமா ஓலமிட்டு அழுதார். இவ்வழுகைக் குரல் அபூஷகுமாவின் தாயாரின் காதை எட்டியது. உடனே அபூஷகுமா வின் தாயார் திடுக்கிட்டுப் போனார். உள்ளந் தடுமாறினார். மதி மயங்கினார். கன்றிழந்த மான் போல் தாயார் முகம்வாடி நெருப்பிலே இட்ட நெய்போல உள்ளம் துடித்தது. கண்ணீர் வழிந்து ஓடியது. இவ்வாறு துன்பமே உருவெடுத்தாற்போலக் காட்சியளித்தார் அபூ ஷகுமாவின் தாயார். இவற்றையே செய்தக்காதிப் புலவர் பின் வருமாறு கூறுகிறார்.

மைந்தனிரங்கி நின்றழுத சத்த
மாதா திருக்காதி னேறிடவே
சிந்தை தடுமாறி மதிமயங்கிச்
சேயிழந்த மான் கன்றுபோல
விந்தையவர் முகஞ் சாம்பியப்போ
வெண்ணெ யழற்பாய்ந்த விதமகமுஞ்
சிந்த விழிநீரு மாக வேங்கிச்
சேம மனை தனி லழுதிருந்தார்.

ஒவ்வோர் அடியும் அபூஷகுமானின் உடலில் படும்பொழுது உடலில் உண்டான வேறுபாடுகளை மிக நுண்ணியதாக ஆசிரியர் கூறி யுள்ளார். நூறு அடியும் அடித்து முடிந்ததும் அபூஷகுமா குற்றுயிருடன் காணப்பட்டார். இத்தண்டனையிலிருந்து தப்பிவிட்டார் என்றே அனை வரும் எண்ணினர். ஆனால் அபூஷகுமா புரிந்த மற்றக் குற்றத்திற்கு தண்டனை விதிக்க வேண்டி நேர்ந்தது ''கள்ளுண்டற் கின்னு மடியுண்டெனக் காவலர் கூறக்'' கேட்டு அத்தண்டனையும் நிறை வேற்றத் துணிந்தார் உமறு இப்னு கத்தாபு (ரலி) அவர்கள். கள் ளுண்டவர்களுக்கு நாற்பது அடி அடிக்க வேண்டும். எனவே, அபூ ஷகுமாவுக்கு மேலும் அடிக்க உத்தரவிட்டார் நீதிநெறி தவறாத வள்ளல். அதன் விளைவாக அபூஷகுமாவின் உயிர் உடலை விட்டுப் பிரிந்தது.

உலகில் செய்த குற்றத்திற்கு உலகிலே தண்டனை பெற்றரா ராதலின், அபூஷகுமா மௌத்தானதும் சுவர்க்க வாழ்வைப் பெற்றார். நபி நாயகம் முகம்மது (ஸல்) அவர்கள் சுவர்க்கத்திலே அபூபக்கர் சித்தீக் (ரலி) அபூஷகுமா முதலியோருடன் வீற்றிருக்கக் கனவு கண்டார் உமறு இப்னுகத்தாபு அவர்கள். கண்டு அகமகிழ்ந்தார்.

பலுலூன் அசுகாபி என்பவர் நபிகள் நாயகத்தின் தோழர்களில் ஒருவர். (அசுஹாபி என்பது தோழர் என்று பொருள்படும்). இவர் மிக்க அழகான தோற்றமுடையவர். ஜின்மீன் என்னும் இளம் பெண் இவர் மீது காதல் கொண்டாள். இதை இவர் சற்றும் பொருட்படுத்த வில்லை. ஜின்மீன் என்பவள் மீண்டும் மீண்டும் கெஞ்சினாள். பலுலூன் அசுகாபி ஓர் அணுவளவும் விட்டும் கொடுக்கவில்லை. இதனால் தூய எண்ணமுள்ள பலுலூன் அசுகாபி மீது பழி சுமத்தத் துணிந்தாள். இவர்மீது மன்னிக்க முடியாத பெரும் பழியையும் சுமத்தினாள் ஜின்மீன். சாட்சியுடன் தனது கட்சியை நிலைநிறுத்தினாள். இஸ்லாமிய நீதி தவறாத அண்ணல் உமறு இப்னு கத்தாபும் குற்றவாளி யாகக் காண்பிக்கப்பட்ட அசுகாபியைத் தண்டிக்க உடன்பட்டார். இந்நிகழ்ச்சியை அறிந்தார் அலி இபுனு அபீத்தாலிபு (ரலி) அவர்கள். உடனே தண்டனை நிறைவேற்றப்படவிருக்கும் இடத்துக்கு விரைந்து சென்றார். சென்று பலுலூன் அசுகாபியின் சீரிய பண்புகளை எடுத்துக் காட்டினார். பலுலூன் அசுகாபி குற்றமே புரியாத தூயவர் என்பதை நிலை நிறுத்தினார். பலுலூன் அசுகாபியும் விடுதலை பெற்றார். ஜின்மீன் குற்றவாளியாக எல்லோராலும் பழி சுமத்தப்பட்டாள்; தண்டனையும் பெற்றாள். இவ்வரலாற்றையே பலுலூ னசுகாபி மாலை எடுத்து ஓதுகிறது.

பலுலூ னசுகாபி மாலை கொந்தாலகான் புலவரால் இயற்றப் பட்டது. இவர் வேதாளையூரைச் சேர்ந்த கப்பல் நயினாரின் புதல்வர். அறபு மொழியிலுள்ள பலுலூனசுகாபியின் வரலாற்றைத் தமிழாக்கி பலுலூ னசுகாபி மாலையைப் பாட கொந்தாலகான் புலவருக்குத் துணை புரிந்தவர் கத்தீபு மதாறு லெப்பை அவர்கள். பலுலூன் அசுகாபியைக் காதலித்த ஜின்மீன் என்பவள் ஏமாற்றமடைந்து வீடு திரும்பும் காட்சியை கொந்தாலகான் புலவர் பல உவமைகளுடன் பாடியுள்ளார். அச்செய்யுள் பின்வருமாறு :

வேட்டை கிடையாத சோட்டையினால்
வேடன் வலைப்பட்ட மயிலது போல்
ஆட்டி விடுகின்ற பம்பரம் போ
லழலின் மெழுகென வுருகியுள்ளம்

பூட்டி லகப்பட்ட புலியது போற்
பொருவில் மதன்கணை யாலடித்தான்
தீட்ட லுடன்வருந் தேன்மொழியாள்
திரும்பி மனைநாடி வந்தனளே

இன்னொரு செய்யுளில் மதீன மாநகர் பின்வருமாறு வருணிக்கப் பட்டுள்ளது. இவ்வருணனையில் பல இயற்கைக் காட்சிகள் இடம் பெறுகின்றன.

ஆறு மருவியுங் காவுகளு
மடர்ந்த தடாகமும் சோலைகளு
மீறு மரசர்கள் மாளிகைய
மிகுந்த பைத்துல்மா லறையுநல்லோர்
பேறுபெறத் தொழும் பள்ளிகளும்
பெருகு மனாராவுந் தெருவில் வாழைத்
தாறு சொரிந்ததே னொழுகு மந்தத்
தலமா மதினமா நகரைக் கண்டார்

என உள்ளது பாடல்.

# பொன்னரிய மாலை

இஸ்லாமிய சட்ட திட்டங்கள் அனைத்தும் திருக்குர் ஆனிலும் ஹதீதுகளிலுமே கூறப்பட்டுள்ளன. திருக்குர்ஆனில் எல்லாக் காலத்துக்கும் எல்லா நாட்டுக்கும் பொதுவான இஸ்லாமிய சட்டங்கள் பொதிந்துள்ளன. இச்சட்டங்களை வெவ்வேறு தருணங்களில் வெவ்வேறு இடங்களுக்குத் தகுந்தவாறு கையாளும் முறையை நபிகள் நாயகம் முகம்மது (ஸல்) அவர்கள் விளக்கிக் கூறியுள்ளார்கள்.

இம்மட்டன்று, இவைகளைத் தருணத்துக்கேற்றவாறு கையாண்டு காட்டியும் உள்ளார்கள். இவ்வாறு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தமது வாழ்க்கையில் பற்பல முறைகளில் இடத்துக்கேற்றவாறு இச்சட்டங்களைக் கையாண்ட முறைகளே பிற்கால ''ஹதீது'' களாக வழங்கலாயின.

''புதியது'' என்ற பொருளை உடைய ''ஹதத'' என்ற அறபுச் சொல்லே ''ஹதீது'' என்ற அறபுப் பெயர்ச் சொல்லாகியது. முகம்மது நபி (ஸல்) அவர்களினால் கையாளப்பட்ட பழக்க வழக்கங்களே ஹதீதுகளில் பொதிந்து உள்ளன. இவையே ''ஸுன்னா'' என்றும் அழைக்கப்படுகின்றன. ''ஹதீது''ம் ''ஸுன்னா''வும் ஒன்றே என்று சிலர் கூறுவர், அவை இரண்டும் வெவ்வேறானவை என்று ஏனையோர் சொல்வர்.

நபிகள் நாயகம் முகம்மது (ஸல்) அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய ''ஹதீது''கள் பொன்னரிய மாலையில் இடம் பெற்றுள்ளன. பொன்னரிய மாலை மதுரையைச் சேர்ந்த மின்னா நூறுத்தீன் புலவரவர்களால் இயற்றப்பட்டது. இப் பொன்னரிய மாலை 'ஒசியத்து'' என்றும் வழங்குகின்றது.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கடைசி முறை ''ஹஜ்ஜு'' இயற்றித் தமது தோழருக்காகத் தாம் இனியும் 'ஹஜ்ஜு' இயற்ற முடியாமலிருக்கும் தன்மையை விளக்கிக் கூறினார்கள். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மக்கத்துக்குச் சென்று மதீனத்துக்குத் திரும்பி வரும் பொழுது மதீனத்திலுள்ள பள்ளியை அடைந்தார்கள். பள்ளியில் இரண்டு ''ரக்அத்து''த் தோழர்களுடன் தொழுதார்கள். இவ்வாறு தொழுது முடிந்த பின் நடந்த நிகழ்ச்சியைப் பொன்னரிய மாலையிலுள்ள பின்வரும் செய்யுளில் மின்னா நூறுத்தீன் புலவர் சுருங்கக் கூறுகிறார்.

மறங்கு லாமற்றத் தோழரெல்லாம்
வந்து பிரியாமன் முகம் பெறவே
இறங்கு மாயத்தின் பொருளை யார்க
ளெவர்க்கு மெடுத்தோதி மனையிற் புக்கார்
அறங்க ணோக்கவே திறங்கொள் ளும்சகா
பாக்க ளவரலினிற் புக்கார்
கறங்கு நீர் சூழ்ந்த புவியில் தீனுங்
கதிர்போற் குபிர்நீங்கி வளர்ந்தமாதோ

இச்செய்யுளில் ''இறங்கும் ஆயத்'' தென்றது, நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மதீனாவிலிருந்து மக்கம் சென்று ''ஹஜ்ஜு'' இயற்றி மீளும் வரை இறங்கிய ஆயத்து என்பதைக் குறித்து நிற்கின்றது. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ''அறபா'' என்னும் மலையின் மேல் ''அஃபா'' என்னும் ஒட்டகத்தின்மீது ஏறி இருந்தார்கள் அப்பொழுது அல்லா(ஹ்)விடமிருந்து ஒஹி பிறந்தது. அவ்வேளையில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைச் சுமக்க முடியாமல் ஒட்டகம் தாழ்ந்தது. நபிகள் நாயகம் தமது தொண்டை நிறைவேற்றி விட்டார்கள் என்பதற்கு இது அடையாளமாகும்.

இவ்வாறு நபிகள் நாயகத்தின் முடிவு அண்மி விட்டது என்று எல்லோரும் வருந்தினார்கள். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் தோழர்கள் வருந்திக் கூறியவற்றைப் பல செய்யுட்களில் மின்னா நூறுதீன் புலவர் பாடியுள்ளார். அவற்றுள் ஒன்று பின்வருமாறு:

கோவிழந்த குடியானேன்
குடிமுடைந்த தயிரானேன்
மாவிழந்த கன்றானே
மரசிழந்த பதியானே
நாவிழந்த மொழியானே
நயனமில்லா முகமானேங்
காவிழந்த குடியானேங்
கதிரிழந்த பகலானேம்.

இங்ஙனம் வருந்தியவர்களைப் பார்த்து நபிகள் நாயகம் முகம்மது (ஸல்) அவர்கள் பின்வரும் அறிவுரைகளைக் கூறித் தேற்றினார்கள். உலகத்திலே பிறந்தவர்கள் இறப்பது திண்ணம். இறவாது இருந்தவர்கள் உண்டோ?

இனி நபிகள் நாயகம் முகம்மது (ஸல்) அவர்கள் திருவாய் மலர்ந் தருளிய ஹதீதுகள் சிலவற்றை நோக்குவோம். பொன்னரிய மாலை யில் குறிப்பிட்டுள்ள ஹதீதுகளே ஈண்டு குறிப்பிடப்படுகின்றன.

''ஒருவன் தனக்கு வறுமை வருவதற்கு முன்னமே நல்லவை புரிய வேண்டும். மவுத்து (இறப்பு) வருமுன்னமே நற்பேற்றைக் கொடுக்கும் தொழுகையைக் கைபிடிக்க வேண்டும். கொள்ளை நோயால் வருந்துமுன் அந்நோய் வராமல் தடுக்க வேண்டும். மறதியினால் பீடிக்கப்படு முன்னர் கற்க வேண்டியவற்றைக் கற்க வேண்டும். இளமை போய் மூப்பு வருமுன்னர் ஹஜ்ஜு இயற்ற முயல வேண்டும்.'' இவற்றையே பொன்னரிய மாலையில் உள்ள ஒரு செய்யுள் பின்வருமாறு குறிப்பிடுகின்றது.

வறுமை வருமுன்னே கைறைச் செய்யும்
மவுத்து வருமுன்னே தவத்தைச் செய்யும்
பறிநோய் வருமுன்னே செயலைச் செய்யும்
பராக்கு வருமுன்னே படியுமில்மை
முறியக் குலவிய வாலிபம் போய்
மூப்பு வருமுன்னே முயலும் கச்சை
யறிவு மிவையைந்து மூமின்றனக்
காமாங் காரிய மேயென்றார்.

இன்னொரு செய்யுளில் பிள்ளைக்குத் தந்தையும், தந்தைக்குப் பிள்ளையும் ஆற்ற வேண்டிய கடமைகள் இன்னவை என்று நபிகள் நாயகம் கூறிய ஹதீது கூறப்பட்டுள்ளது. நல்ல பெயர் வைத்தல், பள்ளிக்கு வைத்தல், சுன்னத்து இடல், பயில வேண்டிய ஒழுக்க முறைகளைப் பயிற்றுவித்தல் முதலியன தந்தை தனது புதல்வனுக்கு ஆற்றவேண்டியவை. இவையே பின்வரும் முதலிரண்டு அடிகளில் கூறப்பட்டுள்ளன :-

பிள்ளைக் குப்பிதா செய்யுங் கடன்
பேணியே நல்ல பெயர் பார்த்திடல்
பள்ளிக்கு வைத்தல் சுன்னத் திடல்
பயிலு மதபுகள் படிப்பித்தல்

(அதபு - ஒழுக்கம்)

நபிகள் நாயகத்தின் வேறொரு ஹதீது இன்னொரு செய்யுளில் பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது. இம்மனித உடம்பு மறு உலகுக்கு ஏறிப் போகின்ற ஓடம் என்றும், அவ்வுடம்பைத் தீய வழியில் செல்லாது காப்பது கள்வனைக் கொண்டு விட்டுப் பொருட்களைப் பாதுகாப்பதுடன் ஒத்திருக்கும் என்றும் இவ்வாறு பாதுகாத்தல் மிகக் கடினமென்றும் பூனை மீனைப் பாதுகாத்துக் கொடுத்தலுடன் ஒக்கும் என்றும் ஆசிரியர் கூறுகிறார். அச்செய்யுள் வருமாறு:

இந்த வுடம்பாவ தாகிறத்துக்
கேறிப் போகின்ற வோட மாக்கு
மந்த வுடம்பைக் கொண்டே காரிய
மதுக்கொப் புச்சொல்ல கேளு நீங்கள்
கந்த மனையுள பண்டந் தனைக்
கள்ளர் தனைக் கொண்டே காப்பதொக்கும்
புந்தி தனைக் கொண்டே பாரு மீனைப்
பூளை காத்தொப்பக் கொடுக்கு மோதான்.

(ஆகறம் - மறுமை, ஓடம் - தோணி, பூளை - பூனை

நபி முகம்மது (ஸல்) அவர்களின் உபாத்துடன் (இறப்புடன்) பொன்னரிய மாலை முடிவடைகிறது. பெரும்பாலும் மதீனத்து மக்களின் உள்ளத் துன்பமே இப்படலத்தில் குறிப்பிடப்படுகின்றது. மதீனத்து மக்களின் கை கால்கள் இயங்கவில்லை. பிள்ளைகள் தாய்ப் பால் குடிக்க மறுத்தன. உடம்பு உயிரை மறந்தது. அடுப்புப் புகைய வில்லை. பறவைக் கூட்டங்கள் பூஞ்சோலையை விட்டு விலகின.

# அகந்தெளியு மாலை

இஸ்லாமிய ஒழுக்க முறைகளைக் கூறும் தமிழ் நூல்களுள் இன்னொன்று அகந்தெளிவு மாலை. இஸ்லாமிய கோட்பாடுகளையும் ஒழுக்க முறைகளையும் முஸ்லிம்களின் உள்ளம் தெளிவு பெறக்கூறும் நூலே அகந்தெளியுமாலை எனப்படும். அகந்தெளியுமாலை முகம்மது கம்சாலெவ்வை அவர்களால் இயற்றப்பட்டது. இவர் குருவித் துறையைச் சேர்ந்த பட்டாணி முகம்மது லெவ்வை அவர்களின் புதல்வர். அகந்தெளியுமாலை ஆசிரியர் முதன் முதலில் இஸ்லாம், ஈமான் ஆகியவற்றை விளக்கிக் கூறுகிறார். ''ஈமான்'' என்பது நம்பிக்கை. ஈமான் ஆறுவகைப்படும். இஸ்லாம் ஐந்து வகைப்படும். ஈமானின் ஆறு வகையையும் பின் வரும் செய்யுளில் சுருங்கக் கூறி விளங்க வைக்கிறார் முகம்மது கம்சாலெவ்வை.

ஈமான் தனிலொன்றா மிறையொருவ
னீமான் தனில்ரண்டா மிறை மலக்காங்
கீமான்தனில் மூன்றா மிறைவன் வேத
மீமான் தனில் நாலா மிறைவன் தூதர்
ஈமான் தனிலேதா னைந்தாவதோ
இறைவன் கியாமத்து நாளதாகும்
ஈமான் தனிலாறிங் கிவர்கள் செய்யு
மோர் நன்மை தீமை யிவை யாறுமே.

இன்னொரு செய்யுளில் இஸ்லாத்தின் ஐந்து வகைகளும் கூறப்பட்டுள்ளன.

இசுலாந்தனிலேதா னைந்துவகை
யியம்பக் கேளுங்கா ளொன்றாவதிங்
கிசுலா மதில் முதற் கலிமாவோதல்
இசுலாத் தில்லிரண்டா வதுதொழுகை
இசுலாத்தில் மூன்றாவது சக்காத்தா
மிசுலாத்தில் நான்காவது நோன்பதாம்
இசுலாத்தி லைந்தாவது ஹஜ்ஜாகு
மிசுலாமான பேரிவை அறிவார்.

(கலிமா - அல்லா(ஹ்) ஒருவனன்றிவேறில்லை, அவன் திருத் தூதர் முஹம்மது நபி (ஸல்) அவர்களே என்ற திருமந்திரம். சக்காத்து, கட்டாயக் கொடை - பொதுவாக நூற்றுக்கு இரண்டரை வீதத்தைக் கொடை கொடுத்தல்).

மரணம் ஒருவராலும் தடுக்க முடியாதது. எல்லோரும் மௌத்தாவது இயற்கை. இப்பொருளை அமைத்தே மரணத்துலக்க மணிமாலை பாடப்பட்டுள்ளது. இந்நூல் ஈழநன்னாட்டைச் சேர்ந்த பகுருத்தீன் ஹுஸைன் அவர்களால் இயற்றப்பட்டது. இவர் கோட்டாறு என்னும் ஊரைச் சேர்ந்த செய்குபாவா செய்கு சுலைமானுல் காதிரிய்யி என்னும் அறிஞரின் மாணவர் ஆவர். இந்நூலை அச்சிடப் பொருள் அளித்தவர் கொழும்பை சேர்ந்த மு. அபூபக்கர் என்பவரே.

உலகத்திலுள்ள எல்லா உயிர்களும் மௌத்தாவது இயற்கை என்று திருக்குர்ஆனிலே கூறப்பட்டுள்ள அறபுச் சொற்றொடரை அமைத்துப் பகுருத்தீன் ஹுஸைன் தனது மரணத்துலக்க மணிமாலையின் முதற் செய்யுளின் முதல் இரண்டு அடியில் கூறியுள்ளார்.

குல்லுநபுசின் தாயிக்கத்துல் மௌத்தெனவே
குறுஆனிலே கோமானுரை
சொல்லுக் கிணக்கமாய் செகந்தனிலே
சகல உயிர்களுப் மௌத்தாகுமே

மௌத்தானவர்கள் திரும்புவதில்லை. எல்லா உலகத்தில் தேடினாலும் மௌத்தானவர்களைக் காண முடியாது. அல்லா(ஹ்) எல்லோரையும் மௌத்துக்கு ஆளாக்கியுள்ளான், மௌத்து வரும் என்றோ அல்லது மௌத்தானவர்களை நினைத்தோ அழுவதில் ஒரு பயனுமில்லை. மௌத்து வரும் வரையும் எல்லாம் வல்ல அல்லா(ஹ்) வைத் தொழுவது மாந்தர்களது கடமையாம். இக்கருத்துக்களையே மரணத்துலக்க மணிமாலையில் பின்வரும் செய்யுள் கூறுகின்றது,

ஆண்டு தோறுமே யழுதிட்டாலும்
அவனி யெலாந்தேடித் திரிந்திட்டாலும்
மாண்டார் வருவரோ மானிலத்தில்
வருவ தில்லைகாண் மலைத்தழுதல்
வேண்டாம் நமக்குமே யிந்தவழி
விதிப்பா னிறைவனென் றிருந்திடுவீர்
தூண்டா மணிவிளக் கிறையோனையே
தொழுது மீளுவீர் மாந்தர்களே.

மௌத்து வரும் நேரத்தை ஒருவராலும் குறிப்பிட முடியாது. அம்மௌத்து எப்படிப்பட்டது என்று தொகுத்துக் கூறவும் முடியாது, இவை அனைத்தையும் அறிந்தவன் அல்லா(ஹ்) ஒருவனே. ஒருவன் கொலுவில் வீற்றிருக்கும் பொழுது அவனுக்கு மௌத்து வரும். இன்னொருவன் தனது மாளிகையில் அகமகிழ்ந்திருக்கும் போது அவனுக்கு

மௌத்துவரும். பிறிதொருவனுக்கு அவன் உணவு கொள்ளும்போது மௌத்துவரும். இவ்வாறு மௌத்து வரும் இடத்தையோ நேரத்தையோ ஒருவராலும் அறிய முடியாது என்று பல செய்யுட்களில் கூறப்பட்டுள்ளது. இக்கருத்துக்கள் பொதிந்த ஒரு செய்யுள்பின்வருமாறு:-

மவுத்துக் கொருகாலம் நேரமென்றும்
மானி லந்தனில் குறிக்கொணாது
தொகுத்து ரைத்திடக் கூடாதுகாண்
துய்யோ னொருவனே யிதையறிவான்
தவிசி லேறியே தானிருந்தே
தரணி யாண்டிடும் போதிலேயோ
வகுத்த மாளிகை தனிலிருந்தோ
வாயி லிரணத்தை யெடுக்கும்போதோ

இஸ்லாத்தின் கோட்பாடுகளில் முதன்மையான "கலிமா" என்னும் மூலமந்திரத்தைப் பற்றிக் கூறும் நூல் மணிமுத்துமாலை. இந்நூலை மனக் கலக்கத்தைத் தெளிவிப்பதாகிய மங்காத் தீபம் என்றும் வழங்குவர். மணிமுத்துமாலை தென்காசியைச் சேர்ந்த மெஞ்ஞானக் குரு செய்து முகம்மது அம்துல் காதிறு செய்னுத்தீன் சா அன்சா ஆலிம் சாகிபு அவர்களால் இயற்றப்பட்டது. செய்குத் தம்பிப் பாவலரால் பிழை திருத்தம் செய்யப்பட்டது.

"கலிமா" என்னும் திருமந்திரத்தின் முதற்பகுதியாகிய "லா இலாஹ இல்லல்லாஹ்" என்ற சொற்றொடரை அமைத்துப் பாடப்பட்ட செய்யுள் மணிமுத்து மாலையில் காணக் கிடக்கின்றது. அச்செய்யுளின் முதலிரண்டு அடியும் வருமாறு :

லாயிலாக வெனும் பொருளானது
லாவேறு நாயனில்லையாச்சு
தூய இல்லல்லா வெனும் பொருள்
தோணும் வஸ்தெல்லா மவனுமாச்சு

ஈண்டு இல்லா(ஹ்) வன்றி வேறு ஒரு நாயனுமில்லை. எல்லாப் பொருளுமவனே என்பது குறிப்பிடப்பட்டுள்ளதைக் காணலாம். இதே போன்று "கலிமா" என்னும் மூலமந்திரத்தினைப் பொது மக்கள் எளிதில் விளங்கக் கூடிய முறையில் மணிமுத்துமாலை ஆசிரியர் விரிவாக விளக்கிக் கூறியுள்ளார்.

மாலை இனத்தைச் சேர்ந்த இன்னொரு நூல் தங்கப் பாட்டு மாலை. இந்நூல் மெஞ்ஞானத் தங்கப்பாட்டு மாலை எனவும்

வழங்கும். இந்நூலினை முஸ்லிம் மக்களின் அஞ்ஞான இருளை நீக்கு வதற்கு எழுந்த நூலென்பர். இந்நூல் செய்கு சுலைமானுல் காதிரிய்யி அவர்களால் இயற்றப்பட்டது. இவர் செய்கு முஹியித்தீனுல் காதிரிய்யி அவர்களின் புதல்வர். கோட்டாறு என்னும் நகரைச் சேர்ந்தவர். செய்கு சுலைமானுல் காதிரிய்யி மரணத்துலக்க மணி மாலை என்னும் நூலை இயற்றிய பகுறுத்தீன் ஹுஸைன் புலவரின் குருவாவார்.

தங்கப்பாட்டு மாலையிலுள்ள செய்யுட்கள் மும்மூன்று அடிகளைக் கொண்டவை. இரண்டாம் அடியின் முதற்பகுதியில் கூறப்பட்டதே மூன்றாமடியிலும் கூறப்படுகின்றது. இதனைத் தங்கப் பாட்டிலுள்ள முதன்மையான பண்பு என்று கூறலாம். எடுத்துக்காட்டாக ஒரு ஒரு செய்யுளை நோக்குவோம்.

அரும் பொருளான அறியாப் பொருளதனை
அறிவாலறிந்துன்னிப்பார் கட்டித் தங்கமே
அறிவாலறிந்துன்னிப் பார்.

இன்னொரு பாட்டில் நபிகள் நாயகம் முஹம்மது (ஸல்) அவர் களின் திருவடியைக் குறிப்பிட்டு அத்திருவடியைச் சங்கையுடன் பார்க்கும்படி வேண்டுகிறார். அத்தங்கப்பாட்டு பின்வருமாறு :

எங்கள் நபி யிரசூல் தங்கள் திருவடியை
சங்கையுடனங்கு பார் கட்டித் தங்கமே
சங்கையுடனங்கு பார்.

தங்கப்பாட்டு மாலை ஆசிரியர் தம்மைப்பற்றிப் பாடியுள்ள தங்கப்பாட்டு வருமாறு :

பாவி செய்கு சுலைமான் பாயில்லாக் கப்பலேறி
பாடித் திரிவதைப் பார் கட்டித் தங்கமே
பாடித் திரிவதைப் பார்.

# இறமளான் மாலையின் தனித்தன்மை

ஈழநாட்டிலும் தென்னிந்தியாவிலும் தமிழ் பேசும் முஸ்லிம் மக்கள் வாழ்கின்றனர் அவர்களுக்கும் தமிழ்மொழிக்குமிடையே பிரிக்க முடியாத தொடர்பு இருந்து வருகிறது. சாணைக்கல் செய்வோன் பிசினால் சேர்த்த இரு கற்கள் எவ்வாறு பிரிக்க முடியாதோ அவ்வாறு.

தமிழ்மொழியை முஸ்லிம் மக்கள் விட்டால் அவர்களின் அன்றாட வாழ்க்கையிலே பெரும் மாறுதல் ஏற்படும். அவர்களின் வாழ்க்கையின் ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் தமிழ் மொழி யின்றியமையாதது. இக்கூற்று எவ்வளவுக்கெவ்வளவு உண்மை என்பதைப் பார்ப்போம்.

முஸ்லிம் பிள்ளைகளுக்குக் குர்ஆன் ஓதிக்கொடுக்கப்படும் இடங்களைப் பள்ளிக்கூடங்கள் என வழங்குவர், முஸ்லிம் மக்கள் நோன்பு நோற்கும் கால எல்லையை இறமளான் மாதம் எனக் கூறுவர். இறமளான் மாதம் முஸ்லிம் மக்களின் புனித மாதமாகும். இம்மாதத்தில் முஸ்லிம் மக்கள் இல்லையென்னாது கொடை கொடுப்பர். குர்ஆன் ஓதிக் கொடுக்கப்படும் பள்ளிக்கூட ஆசிரியர்கள் இறமளான் மாதத்தில் முஸ்லிம் பெற்றோர்களின் நல்லெண்ணங்களைச் சோதிப்பர்.

குர்ஆன் ஓதிக் கொடுக்கும் ஆசிரியர்கள் தமது மாணவருடன் அம் மாணவரின் இல்லங்களுக்குச் செல்வர். அவ்வாறு போகும்பொழுது இரண்டு பேராய் வரிசையாக நடப்பர். பாடத்தில் முந்திய மாணவர் முதலிலும் ஏனையோர் பின்னுமாக நடப்பர். இவர்களிடையே கட்டுப்பாட்டை நிலை நிறுத்த ஒரு ''சட்டம்பி'' இருப்பார். இவர்கள் இவ்வாறு ஒவ்வொரு மாணவனது இல்லத்துக்கும் செல்வர். சென்று அறபுச் சொற்கள் கலக்கப்பட்ட தமிழ்ப் பாக்களைப் பாடுவர். பாடித் தமது ஆசிரியருக்குக் கையுறைகளைப் பெற்றுக் கொடுப்பர். பெரும்பாலும் பணம் கொடுக்கப்படும். ஒவ்வொரு மாணவனும் தலைக்கு ஒரு ரூபாய் அல்லது அரை ரூபாய் கொடுப்பான். ஆசிரியருக்கு வேறு கையுறைகளும் கிடைப்பதுமுண்டு.

இவ்வாறு செல்வதை ''கம்சு'' என்று வழங்குவர். ''ஹம்ஸ்'' என்றும் அழைக்கப்படும். ''கம்சு'' எந்த மொழிக்குரிய சொல் என்று கூறுவது எளிதன்று. அச்சொல் அறபு மொழியைச் சேர்ந்ததாயின் இது பல பொருள்களில் வரும். முன்னே ஒருவரும் பின்னே ஒருவரும் நடுவில் ஒருவரும் இரு பக்கத்தில் இருவருமாக ஐவர் அணி வகுத்துச் செல்வதை அறபு மொழிகில் ''கம்சு'' என வழங்குவர். ''கம்சு'' என்பதற்கு பாட்டு என்ற ஒரு பொருளும் உண்டு. என்பர். சில பகுதிகளில் இவ்வாறு சொல்வதை ''சீந்தி'' என வழங்குவராம். சீந்தி

என்பது பாட்டு என்னும் பொருளையுடைய ''சிந்து'' என்ற சொல்லி னின்றும் மருவி வந்த சொல்லாயிருக்கலாம்: வழக்காற்றிலே மருவி இருக்கலாம்.

இங்ஙனம் வீடுவீடாய்ச் சென்று சமயத் தொடர்புள்ள தமிழ்ப் பாக் களைப் பாடுவர். நன்றாகக் குர்ஆன் ஓதக்கூடியவர்கள் பாடுவர். இவ்வழக்கம் அழிந்து கொண்டு போகின்றது. இன்னும் சில ஆண்டு களில் ''கம்சு'' போகும் வழக்கம் அறவே இல்லாது போய்விடும்.

இவ்வாறு பாடுவனவற்றுள் ''இறமளான் மாலை'' யும் ஒன்று. எமக்குக் கிடைத்தது கையெழுத்துப் பிரதியே. அது யாரால் எப் பொழுது எழுதப்பட்டது என்பது தெரியாது. ''இறமளான் மாலை''யில் அது குறிப்பிடப் படவுமில்லை. இறமளான் மாலை காலியைச் சேர்ந்த காதர் பாவா லெவ்வை அவர்களால் எழுதப்பட்டது எனக் கூறுவர்.

''இறமளான் மாலை'' பாடப்படுமுன் ஒரு மாணவன் இறமளான் மாலையிலுள்ள விருத்தத்தைப் படிப்பான். அவ்விருத்தம் இறமளான் மாலையில் காப்புச் செய்யுளாய் அமைந்துள்ளது. இச் செய்யுள் பின்வருமாறு :

ஆதியா யென்று மஹதாய் அருளுவாய்
சோதியா யெனும் சுப்ஹா னல்லாஹி
நீதி சிறப்பான இறமளான் மாலை
சாசதமாய் நிறைந்த ஹக்கனே நீ இதற்குக் காப்பு.

இச் செய்யுள் அல்லாஹு சுபுஹானஹு வதஆலாவின் பண்பு களைக் குறிப்பிடுகின்றது. அவன் எல்லாவற்றிற்கும் தொடக்க மானவன். தனித்தவன் உருவம் அற்றவன். இத்தகைய பண்பின னான அல்லாஹ்விடத்துத் துணை வேண்டி நிற்கிறார் இறமளான் மாலை ஆசிரியர்.

காப்புச் செய்யுளை அடுத்து நபிகள் நாயகம் (ஸல்) அவர்களையும் அவர்களின் கலீபாக்களான ஆபூபக்கர் (ரலி) அவர்களையும், உமறு கத்தாபு (ரலி) அவர்களையும், உதுமானிபுனு அப்பான் (ரலி) அவர் களையும், அலீ இப்னு அபித்தாலிபு (ரலி) அவர்களையும், இறசூ லுல்லாஹ்வின் பேரர்களான இமாம் ஹசன் (ரலி) அவர்களையும், இமாம் ஹுஸைன் (ரலி) அவர்களையும் இறசூலுல்லாஹ்வின் தோழர் களான அசுஹாபிமார்களையும் புகழும் ஒரு பகுதி இறமளான் மாலை யில் இருக்கிறது. அவர்கள் அனைவரினதும் புகழ்ச்சியுடன் இறமளான்

மாலையைத் தொடங்குகிறார் இம்மாலை ஆசிரியர். இப்பகுதி செய்யுளாகவா அல்லது வசன நடையாகவா அமைந்துள்ளது எனக் கூறல் எளிதன்று. இப்பகுதி சிதைவுற்று இருப்பதே இதற்குக் காரணம்.

ஆலநபி அபூபக்க ருமருது
மானவி வரிசை அசன்
மேலும் உசைன் அசுஹாபி
அடங்கலையும்
போற்றி வசனிப்பேன்
யாஇறமளான் மாலை''

எல்லா உலகங்களுக்கும் நபியானபடியால் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஆலநபி எனப்பட்டார். ஆலம் - வையம், எல்லாப் படைப்பும் யாறமுளான் மாலை என்பது ஓர் றமுளான் மாலை என்பதைக் குறிப்பிடுகின்றது.

இம்மாலைக்குப் பல்லவியாய் பின்வரும் வரிகள் அமைந்துள்ளன.

ஆமீனாமீன் அல்லாஹ்
அருளாமீன்
ஆமீனாமீனஹ்மது
றசூலாமீன்
ஆமினாமீன்
யாறப்பலாலமீன்

## இறமளான் மாதத்தின் சிறப்பு:

இறமளான் மாலையில் உள்ள பல்லவியை அடுத்து இவ்விறமளான் மாலையைப் பாடுவதற்கு எல்லாம் வல்ல அல்லாஹ்வின் அருளையும் துணையையும் இவ்வாசிரியர் வேண்டி நிற்கிறார். இதனையே பின்வரும் முதலிரண்டு அடிகளும் குறிப்பிடுகின்றன.

அல்லாஹ் அருளாலே
ஆதி றமுளான் மாலை
சொல்லத் தொடங்குகிறேன்
துய்யோனுதவினால்

இதைத் தொடர்ந்து இம்மாலை ஆசிரியர் தனதறிவின் எல்லையைக் குறிப்பிடுகிறார். வரிசை பொருந்திய இறமளான் மாதத்தின் சிறப்புக்களைக் கூறும்படி ஆசிரியரைப் பலர் கேட்டுக் கொண்டார்கள். அம்மாதத்தின் சீர் சிறப்புக்களையும் ஆண்டவனே அறிவான் எனக்

கூறுகிறார்கள். அம்மாதத்தின் சிறப்புக்களைக் கூறும் ஆற்றல் தம் மிடம் இல்லையெனக் கூறுகிறார். ஆனாலும் பல உலமாக்கள் திரும்பத் திரும்ப ஆசிரியரைக் கேட்டுக் கொண்டபடியால் ஒருவாறு இம்மாலை யைப் பாடத் தொடங்குவதாக இவ்வாசிரியர் கூறுகிறார். பின்வரும் அடிகள் இதனையே கூறுகின்றன.

வருசை றமுளானின்
வல்லபத்தைச் சொல்லுமென்றார்
அருசும் குருசு மமைத்தோ
னறிவான் காண்
ஒன்றுமறியேன் உலமாக்கள்
சொன்ன தினால்
விண்டேனடியேன் விரும்பி
இதைக் கேளுமெல்லாம்.

அல்லாஹுதஆலா தனது எண்ணப்படி முகம்மது நபி (ஸல்) அவர் களுக்கு ''புர்கான்'' வேதத்தை இறக்கினான். அவ்வேதத்தின் பொருளை நபிகள் நாயகம் பெருமானார் (ஸல்) அவர்கள் உலகுக்குப் போதித்தார்கள். அப்போதனையின் பயன்களை உலமாக்கள் ஏனை யோருக்குச் சொன்னார்கள். இன்னும் சொல்லிக்கொண்டு வரு கிறார்கள். அப் போதனைகளிலே வணக்கத்துக்குள்ள நேர்வழிகள் கூறப்பட்டுள்ளன. இவற்றை அமைத்தே இவ்விறமளான் மாலையை சுலபமாய் விளங்கும் பொருட்டு இதனை இதன் ஆசிரியர் பாடியுள்ளார் இங்கு குறிப்பிடப்படும் அடிகள் இதனை எடுத்துக் காட்டுகின்றன.

முன்னோன் புறுக்கான்
முகம்மதுறசூல் நபிக்கு
எண்ணப்படி யென்றே
இறக்கி இறசூலும்
வேதப்பொரு ளைத்திரட்டி
உலகோர் தமக்கு
ஓதும் பயனை
உலமாக்கள் சொல்வதினால்
இன்னும் இறுசாதில்
இபாதினி லிதன் பொருளை
சொன்னா ரதுலே
சுலபமாய்ச் சொல்லுகிறேன்
சொன்னானிறை யோன் துகை
மாதம் பன்னிரண்டிலும்
என் மாத மாக
இருக்குமிற மளான்மாதம்

இனி இறமளான் மாதத்தின் சிறப்புக்களைக் கூறுகிறார். முஸ்லீம் மக்கள் ''தீனோர்'' என்றும் வழங்கப் படுவர். இறமளான் மாதம் இறை வாக்கின்படி தீனோருக்கே சொந்தமான மாதமாகும். சுபசோன மாதமாகும் இறசூல் (ஸல்) அவர்களைப் பின்பற்றுவோர் ''உம்மத்துகள்'' என அழைக்கப்படுவர். இவ்வும்மத்துக்கள் இறைவனின் திருமாதமான இறமளானைவரவேற்பர். இம்மாதத்தின் முப்பது நாளும் அல்லாஹ்வின் பொருட்டால் முழங்கிக் கொண்டேயிருக்கும். இக்கருத்துக்கள் பின்வரும் அடிகளில் அமைந்துள்ளன.

இந்த றமுளானை
யிறைசொன்னா னென்னுடனே
சொந்தமாய் தீனோர்
சுபசோ பன மாதம்
என்மாதம் வந்து
விறசூலும் மத்தோரை
முன்னோக்கிக் கொள்ளு
முதலோனிறமுளான் மாதம்
முதனாள் தொடுத்து
முப்பது நாளிப்படியே
முதலோன் பொருட்டால்
முழங்குமிறமுளான் மாதம்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இறைவன் திருவாக்கின்படி இறமுளான் மாதத்தை முஸ்லிம் மக்களுக்கு ''பர்ளு'' ஆக்கினார்கள்; கட்டாயப் படுத்தினார்கள். இஷாத் தொழுகைக்கும் பின்னர் நடத்தும் படி தராவீஹ் தொழுகையை ''சுன்னத்தாய்'' ஏற்படுத்தினார்கள். எனவே, ஒவ்வொரு முஸ்லிமும் நோன்பு நோற்க வேண்டியவர்களாகிறார்கள். நோன்பின் இரவுகளில் தறாவீஹ் தொழ வேண்டியவவர்களாகிறார்கள். சுருங்கக் கூறின் இறமுளான் மாதத்தில் எப்பொழுதும் இறைவனைத் தொழுவதிலேயே தமது காலத்தைச் சிறப்பாகக் கழிக்க வேண்டியவர்களாகிறார்கள். இவையே பின் வரும் அடிகளில் குறிப்பிடப்படுகின்றன.

இறையோன்படி மாதமென் மாதமானதினால்
பறுளாச்சுதென்று பகர்ந்த றமுளான் மாதம்
அலங்கார ஆல நபியும் தராவீஹை
அலங்கார சுன்னத் தமைந்த றமுளான் மாதம்.

# சதக இலக்கியங்கள்

தமிழிலக்கிய வரலாற்றில் சதக இலக்கியங்கள் மக்கள் இலக்கியங்கள் என்று சொல்லத்தக்க அளவில் அந்தந்த காலச் சூழல்களுக்கும் புலவர்களின் உளப் பாங்கிற்கும் ஏற்ப பல்வேறு பாடுபொருள்களைக் காலந்தோறும் உள்ளடக்கமாகப் பெற்று வந்துள்ளன. சதகம் என்ற சொல்லாட்சியை தமிழுலகில் அறிமுகம் செய்து வைத்த மாணிக்க வாசகர் காலத்திற்குப்பின் கி, பி. 11ஆம் நூறறாண்டில் முகிழ்ந்த கார்மண்டல சதகம் என்னும் இலக்கிய வகையானது இன்றைய காலம் வரையிலும் நின்று நிலவுகிறது. சதகம் என்ற சொல் சதம் (நூறு) என்ற அடியிலிருந்து பிறந்த வட மொழிச் சொல் என்பர். தமிழ் இலக்கிய உலகில் சதகம் என்னும் இலக்கியப் பிரிவு தோன்றாத காலத்திற்கு முன்பே வடமொழியில் இப்பெயரில் பல்வேறு நூல்கள் இருந்திருப்பதை அறிய முடிகிறது. எனவே, நூறு பாடல்கள் கொண்ட புதுவகை இலக்கிய வகையைத் தோற்றுவித்த தமிழ்ப் புலவர்களும் வட மொழிப் பெயரையே கொண்டனர் எனலாம்.

## சதக இலக்கியங்களின் இலக்கண விளக்கம்

சதக இலக்கியங்கள் தமிழ் உலகில் பல்கிப் பெருகியது கி.பி. 17, 18, 19 ஆம் நூற்றாண்டுகளிலேயே ஆகும். எனினும் பாட்டியல் நூல்களில் சதக இலக்கியங்களுக்குரிய இலக்கண வரையரை காணப்படவில்லை. 17 ஆம் நூற்றாண்டில் தோன்றிய இலக்கண விளக்கத்தில்

விளையும் ஒரு பொருள் மேலொரு நூறு
தழைய வுரைத்தல் சதகமென்ப

என்னும் விளக்கம் ஆசிரியர் வைத்தியநாத தேசிகரால் தரப்பட்டுள்ளது. அகம் அல்லது புறம் பற்றிய ஏதேனும் ஒரு பொருள் குறித்து நூறு பாடல்களைப் பாடுவது சதகமாகும் எனலாம். எனவே, சதக இலக்கியத்தில் உருவம் பற்றிய கருத்தே முக்கியத்துவம் பெறுகிறதென்லாம். உள்ளடக்கம் எத்தகு பொருள் பற்றியும் இருக்கலாம். இது, சதக இலக்கியங்களின் பரிணாம வளர்ச்சியை நோக்குவோமானால் நன்கு புலப்படும். எப்படி உள்ளடக்கத்தில் எவ்வித வரையறையும் சதக இலக்கியங்களுக்குக் கிடையாதோ அதுபோல் இன்ன யாப்பினைத் தான் பெற்றிலங்க வேண்டும் என்ற கட்டுப்பாடும் இல்லை. ஆசிரிய விருத்தம், கட்டளைக் கலித்துறை, கலிவிருத்தம், கலித்துறை, கழிநெடிலடியாசிரிய விருத்தம் போன்ற யாப்பமைப்புகள் சதக இலக்கியங்களில் காணப்படுவதிலிருந்து மேற்குறித்த கருத்துப் புலப்படுகிறது.

## சதக இலக்கியப் பாடுபொருளின் பரிணாம வளர்ச்சி

சதக இலக்கியங்களுக்கு பொருளமைதிக்கும், யாப்பமைதிக்கும் எவ்விதக் கட்டுப்பாடும் இல்லாத காரணத்தால் காலந்தோறும் பல்வேறு பொருள்பற்றி பல்வேறு சதக இலக்கியங்கள் தோன்றியுள்ளன.

சதக இலக்கியங்களுள் பாடுபொருளின் தோற்றத்தில் ஒரு பரிணாம வளர்ச்சியைக் காலத்திற்கேற்பக் காணத்தான் முடிகிறது. சதக இலக்கியத்தின் அமைப்பில் நூறு பாடல்கள் இருக்க வேண்டும் என்ற வரன்முறை இருந்ததே தவிர இன்னின்ன பொருள்பற்றியதாகத்தான் சதக இலக்கியங்கள் அமையவேண்டும் என்ற வரையறை காணப்பட வில்லை. இப் பாடுபொருளில் காணப்படும் மாற்றத்தை கி.பி. 8ஆம் நூற்றாண்டில் தோன்றிய மாணிக்கவாசகரது 'திருச்சதகம்' முதற் கொண்டு இன்றைய காலத்து 'இறசூல் சதகம்' வரையிலும் ஒப்புநோக் கினால் நன்கு புலனாகும்.

முதன்முதலில் பேரின்ப நிலையை எடுத்துரைக்கும் பாடல்கள் தான் சதக இலக்கிய வகையில் இடம்பெற்றன. இதன் முன்னோடி யாக அமைந்தது மாணிக்கவாசகரின் திருவாசகத்தில் காணப்படும் திருச் சதகமாகும். 'தண்டலையார் சதகம்' 'கோவிந்த சதகம்' போன் றவை இதனை அடியொற்றியே வந்தனவாகும். கி.பி. 11ஆம் நூற் றாண்டில் தோன்றியதாகக் கருதப்படும் 'கார்மண்டல சதகம்' சதக இலக்கிய வடிவத்திற்கு ஒரு புதுவகை அமைப்பினை அளித்தது. இச் சதக ஆசிரியர் அவிநாசி ஆறைகிழார் கார்மண்டலத்தின் வரலாற் றினை எடுத்துரைக்க சதக இலக்கிய வகையைப் பயன்படுத்தியுள்ளதை நம்மால் அறியமுடிகிறது. பின் தம்மை அரவணைத்த புரவலர்களை சதக இலக்கிய வகையில் தமிழ்ப் புலவர்கள் பாடலாயினர். இவ் வகையில் 'அண்ணாமலையார் சதகம்', 'திருவேங்கிட சதகம்' போன்ற நூல்களை அடக்கலாம். இது மட்டுமன்றி சோதிடம், அசுவசாத்திரம், காமநூல் முதலானவற்றைக் கலந்து கூறுதலுக்கும் சதக இலக்கிய வகை பயன்பட்டிருப்பதை 'கைலாசநாதர் சதகம்' போன்ற நூல்களைக் கொண்டு அறிய முடிகின்றது. புலவர்கள் தாம் வாழ்ந்து வந்த நாட் டைச் சிறப்பித்துப் பாடுதற்கும் சதக இலக்கிய வகைகளைக் கையாண் டிருப்பதை 'கொங்குமண்டல சதகம்', 'தொண்டைமண்டல சதகம்' போன்ற நூல்கள் காட்டி நிற்கின்றன. காலப்போக்கில் சதகநூல்கள் பெரும்பாலானவை, நீதிக் கருத்துக்களை எடுத்துரைப்பதற்காகவே பாடப்பட்டிருப்பதை தமிழிலக்கிய வரலாறு நமக்குக் காட்டுகிறது. கவிஞர்கள் சமுதாயத்தின்கண் தாம் கண்ட, தாம் எதிர்பார்க்கின்ற அறக் கருத்துக்களை மட்டும் மையமாக்கிப் பல சதக நூல்களைப் பாட லாயினர். இத்தகைய அறக்கருத்துக்களை எடுத்துரைக்க பெரும்பா

லான பழமொழிகளைத் தத்தம் சதக இலக்கியங்களில் கவிஞர்கள் கையாண்டிருப்பதையும் நம்மால் காண இயலும். காரணம் பழ மொழிகள் அந்தந்த சமுதாயத்தில் வாழும் பாமரர்களிடையே வாய் மொழியாக வழங்கப்பெற்று வருதலேயாகும். இததகைய பல்வேறு பாடுபொருளை உடைய இலக்கிய வகையாகிய சதகங்களின் மொத்த எண்ணிக்கை கிட்டத்தட்ட தொண்ணூறு எனலாம். இவ்வெண்ணிக் கையுள் பல்வேறு சமயச்சார்புடைய சதகங்களும் அடங்கும்.

## இஸ்லாமிய சதக இலக்கியங்கள்

தமிழ்ச் சதக இலக்கியங்களுள், பல இஸ்லாமிய சமயத்தைச் சார்ந் தனவாகும். ந. வீ. செயராமன் தம்முடைய 'சதக இலக்கியங்கள்' என்ற நூலில் இஸ்லாமிய சமயத்தைச் சார்ந்தனவாக ஐந்து சதகங் களை மட்டுமே குறித்துள்ளார். ஆனால் இஸ்லாமிய சமயத்தைச் சார்ந்தனவாக ஏறக்குறைய இருபத்தி மூன்று சதகங்கள் காணப்படு கின்றன. சமய அடிப்படையில் சைவத்திற்கு அடுத்த இரண்டாவது நிலையில் அதிகமான சதக இலக்கியங்களைப் பெற்றிருப்பது இஸ்லாமிய சமயமாகும். இஸ்லாமிய சமயத்தைச் சார்ந்தனவாக உள்ள இருபத்தி மூன்று சதக இலக்கியங்களிலும் இஸ்லாமிய சமய நெறி விரித்துரைக்கப்படுகிறது. அந்தந்த சதகங்களின் பாட்டுடைத் தலைவர்களுக்கேற்ப அவரவர்களின் நல்லியல்புகளும் இடம்பெறு கின்றன. சில இஸ்லாமிய சதகங்கள் நபிகள் நாயகத்தைப் பற்றி எழுந்துள்ளன. சில சதகங்கள் இஸ்லாமிய அறிவுரை புகட்டும் பொருட்டும் பல சதகங்கள் இஸ்லாமிய சூபித்துவத்தை விளக்கும் பொருட்டும் இயற்றப்பட்டுள்ளன. இஸ்லாமிய சதகங்களை பின்வரும் நான்கு பிரிவுகளாக வகைப்படுத்திக் காணலாம்.

1. நபிகள் நாயகத்தின்மீது பாடப்பட்ட இஸ்லாமிய சதகங்கள்
2. இறைநேசச் செல்வர்கள் பற்றிய இஸ்லாமிய சதகங்கள்
3. சூபித்துவக் கொள்கை விளக்க இஸ்லாமிய சதகங்கள்
4. பிற இஸ்லாமிய சதகங்கள்

## நபிகள் நாயகத்தின் மீது பாடப்பட்ட இஸ்லாமிய சதகங்கள்

இஸ்லாமிய சதகங்களுள் நான்கு சதகங்கள் பெருமானார் நபி (ஸல்) அவர்களைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டுள்ளன. இஸ்லாமிய சதக இலக்கியங்களுள் மிகவும் பழமையான சதகமான 'மெய்ஞ்ஞானச் சதகம்' இறையின் திருத்தூதராம் நபிகளார் மீதே பாடப்பட்டுள்ளது. இச்சதகத்தை 1801ல் மேலபாளையத்தைச் சார்ந்த தக்கடி ஷெய்கு பஸீர் லெப்பை கலீபா அவர்கள் இயற்றியுள்

ளார்கள். அறபகத்தின் இதயமான மக்கமா நகரிலிருந்து தென்னகம் வந்த நாற்பது ஒலிமார்களுள் சிலர் மேலப்பாளையத்தில் குடியேறி வாழ்ந்து வந்தார்கள். அவர்களில் ஒரு குடும்பத்தினர் 'தக்கடி' என்ற குடும்பப் பெயரால் அழைக்கப்பட்டு வந்தனர், இவ்வழித்தோன்றலில் வந்தவரே ஷெய்கு பஸீர் லெப்பையாகும். இளமையிலேயே வைசூரி நோயின் காரணமாகக் கண்ணிழந்த பஸீர் லெப்பை ஞானக் கண் களால் ஒளி பெற்றவராவர். மேற்குறித்த செய்திகளை மெஞ்ஞான சதகத்தின் காப்புச் செய்யுளில்

அறபிகளாக முன்னால் அழகினாற் பத்துப் பேர் வந்து
விறல்பெறு மங்கை நாடா மேலப்பா ளயத்தில் வாழும்
உறவினர் தீனோர் கோத்ரத் துறும்லெப்பை உதுமான் பாலன்
முறையிரு கண்ணுமற்றேன் முஹ்யித்தீன் எனும்பேர் பெற்றோன்
(மெஞ்ஞானச் சதகம் : 8)

என ஆசிரியர் குறித்துள்ளார். இச்சதகத்தில் முதல் பத்து செய்யுட்கள் காப்புச் செய்யுள்களாக உள்ளன. இவை நீங்கிய ஏனைய தொண் ணூற்றாறு செய்யுட்களும் நாயகத்தைக் காணும் திருநாள் எந்நாளோ? என்னும் அடியுடன் முற்றுப் பெற்றுள்ளன. ஒவ்வொரு பாடல்தோறும் நபி (ஸல்) அவர்களின் சிறப்பினை, அவர்தம் வாழ்வியல் சம்பவங் களுடன் இணைத்துப் பாடிச் சிறப்புப்படுத்துகின்றார். ஒரு பாடலில் நபியின் சிறப்பை முன்னோர் பெருமையுடன்.

ஆதி நபிக்கும் ஆதிமுதல்
ஆன முர்ஸ லீன்களுக்கும்
சோதி நபிமா ரனைவருக்கும்
தோன்ற லாகப் பிறந்தோரைச்
சாதி ஹாஷிம் குலக்கொழுந்தைத்
தக்கோன் கஃபத் துல்லாவாழ்
ஹாதி முஹம்ம திறசூலைக்
காணும் திருநா ளெந்நாளோ
(மெஞ்ஞானச் சதகம் : 15)

என எடுத்துரைக்கின்றார். அறபு மொழிப் பயிற்சி இன்றி இச் சதகத்தை புரிந்து கொள்வது கடினமாகும். எந்த ஒரு செய்யுளும்கூட ஒரு அறபுச் சொல் இன்றி காணப்படவில்லை. ஏனைய இஸ்லாமிய சதகங்களுடன் ஒப்பிடும்போது இதில் மிகுதியான அளவில் அறபுச் சொல்லாட்சி இடம் பெற்றிருக்கிறது.

இம் முதல் சதகத்தை அடுத்து ஒரு நூற்றாண்டு காலத்திற்கு இஸ்லாமியத் தமிழில் எந்தவொரு சதகமும் தோன்றவில்லை. 1911 இல் பகீர்முகம்மது அவர்கள் நீண்ட இடைவெளிக்குப் பின் 'திருமுகம்

மதுநபி சதகம்' என்ற பெயரில் ஒரு சதகத்தை உருவாக்கியுள்ளார், இதனை மதார்சா மரைக்காயர் அவர்கள் திருப்பாதிரிப் புலியூரிலிருக்கும் கிருஷ்ணவிலாச அச்சுக்கூடத்தில் பதிப்பித்து வெளியிட்டுள்ளார். இச்சதகத்தில் உள்ள செய்யுட்கள் சதக இலக்கணங்களுடன் அமைந்திருப்பதுடன் அனைத்து செய்யுட்களும் 'மாதவர் களாதி துதிவோது ஒரு நீதி திருதூதர் மகுமூதுநபியே' என்ற ஈற்றடி கொண்டே முடிவடைந்துள்ளன. ஆக்கை நிலையாமை, உயிரியல்பு, வேசிகள் நடவடிக்கை, கயவர் குணம் முதலிய பலவகைச் செய்திகளைப் பற்றி உரைப்பினும் நாயகத்தையே பாடல்தோறும் பாட்டுடைத் தலைவராகக் கொண்டிருக்கிறது இச் சதகம். இதற்குப்பின் நாயகம் மீது பாடப்பட்டனவாக இரு சதகங்கள் முறையே 1960லும் 1966லும் தோன்றியுள்ளன. இவற்றுள் முதலாவது நூலான 'திருநபியின் சதகம்' என்னும் நூலை பொதக்குடியைச் சார்ந்த அப்துற்றகுமான் என்பவரும் இரண்டாவது சதகமான 'இறசூல் சதகம்' என்னும் நூலை இலங்கையைச் சேர்ந்த கவிஞர் அப்துல்காதர் லெப்பை என்பவரும் இயற்றியுள்ளார்கள். இவ்விரு சதகங்களும் உலக நடைமுறைகளுடன் நாயகத்தின் பெருமையையும் இஸ்லாத்தின் சிறப்பையும் எடுத்துக்காட்டுகின்றன.

## இறைநேசச் செல்வர்கள் பற்றிய இஸ்லாமிய சதகங்கள்

உலக மக்களை நேர்வழியில் இறையச்ச வாழ்க்கை நடத்தும்படி தூண்டுவோர்களே இறைநேசச் செல்வர்களாவர். இத்தகையோர் தன்னை முற்றும் அறிவதுடன் இறைவனையும் அறிந்தவர்களாகும், இறைவனை நேசிப்போருக்கு இறைவனே நேசனாகின்றான் என்பதற்கேற்பவே இத்தகைய இறைநேசச் செல்வர்கள் 'வலிமார்கள்' என்றும், 'ஔலியாக்கள்' என்றும் இஸ்லாமிய சமயத்தில் சுட்டப்படுகிறது. இத்தகைய இறை நேசச் செல்வர்கள் காலந்தோறும் இறை கட்டளைக்கேற்ப தோன்றி உலக வாழ்வை நெறிப்படுத்துவர் என்பது இஸ்லாம் கூறும் போதனையாகும். இத்தகு முறையில் நெறிமுறை புகட்டி மக்களை நேர்வழிப் படுத்தும் பொருட்டு தமிழகத்தில் வாழ்ந்து, மறைந்த முஸ்லிம் சமயச் சான்றோர்கள் பற்றிய சதகங்கள் இஸ்லாமிய தமிழிலக்கியத்தில் தோன்றலாயின. இதனடிப்படையில் தோன்றிய முதல் சதகம் அப்துறகுமானறபிச் சதகமாகும். இதனை 1894ஆம் ஆண்டில் பவானிப் புலவரென்று பேர் வழங்கும் செய்யது புகாரிப் புலவரவர்களியற்றியுள்ளார். இச் சதகம் வேடசந்தூரில் வாழ்ந்து மறைந்து அங்கு நல்லடக்கம் செய்யப்பட்டுள்ள அப்துறகுமான் என்னும் ஔலியாவின் மீது பாடப்பட்டதாகும். இதில் இரட்டையாசிரிய விருத்தத்திலமைந்து நூறு செய்யுட்கள் அடங்கியுள்ளன. ஒவ்வொரு செய்யுளின் இறுதி அடியும் 'ஆடகக் கிரியெனவும் வேடசந்தூரில் வளர் அப்துறகுமானறபியே என்னும்

அடியுடன் முற்றுப்பெறுகிறது. இதிலமைந்துள்ள நூறு செய்யுட்களும் தீனில்லிசுலாத்தியல், புண்ணிய தேகத்தியல், ஊழ்விதியியல், நாடு நகர் சிறப்பியல், மனவியல், துற்பெண்டீரியல், தருமத்தியல், புருஷனுக்குப் பெண்டீர் நடக்குமியல் போன்ற பல்வேறு உலக விஷயங்களைப் பிரதி பலிக்கும் நூறு தலைப்புக்களைப் பெற்றுள்ளன. இத்தலைப்புகளுக் கேற்பவே செய்யுட்களின் உள்ளடக்கமும் அமைந்துள்ளன. இத்தகு முறையிலான தலைப்புகளை வேறு எந்தவொரு இஸ்லாமிய சதகத் திலும் காணமுடியவில்லை. ஒருவரின் வாழ்வு சிறக்க வள்ளுவர் வகுத்துக் காட்டும் அறத்துப்பால் தலைப்புகளை இச்சதகத்தில் இடம் பெற்றுள்ள தலைப்புக்கள் ஒத்துள்ளன. மேலும் சில தலைப்புக்கள் இராஜரியல், மந்திரியரியல், இராஜநீதிச் செங்கோலியல் என்பது போன்று அரசியல் உலகுக்கு அறிவு புகட்டுவனவாக உள்ளன. விருந் தினியல் என்ற தலைப்பில் விருந்தினரை உபசரிக்கும் முறை பற்றி கூறும்போது

விருந்து வருவோருள மனிச்ச மலரினு மதிக
 மெதுவா யிருக்கு மதனான்
மிகவுமக முகமலர்ந்து பசரித் தெதிரிலே
 விரைந்து சென்றினி தழைத்துத்
தருந்தவ மெனத்தமது மனையினு ளிருத்தியே
 தகுதியில் சமயலெனினும்......
அருந்திடச் செய்யும்வித முமதுபத மேவுமில்
 லறத்தோர்க ளுக்கு முறையே

(அப்துறகுமானறபிச் சதகம் : சதகம் 31)

எனச் சுட்டுகின்றார்.

இது போன்று இறைநேசச் செல்வரின் மீது பாடப்பட்ட மேலும் இரு சதகங்களான 'முனாஜாத்து சதகம்' முகையித்தீன் சதகம் என்னும் இரு சதகங்களையும் இஸ்லாமியத் தமிழ் பெற்றுள்ளது. இவ்விரு சதகங்களும் வட இந்திய முஸ்லிம்களால் மஹ்பூபு சுபுஹானி என்றும் அறபு மக்களால் அப்துல் காதிர் ஜீலானி என்றும், தமிழ்கூறும் நல்லுலக மக்களால் முஹ்யித்தீன் ஆண்டவர்கள் என்றும் போற்றிக் கொண்டாடப்படும் ஹலறத் கௌதுல் அஃலம் சையிது அப்துல் காதிர் ஜீலானி அவர்களது வாழ்வையும், வாக்கையும் ஏற்றிப் போற்றுவன வாகும். முனாஜாத்து சதகத்தை சுல்தான் அப்துல் காதிர் மரைக் காயர் அவர்கள் 1914 ஆம் ஆண்டில் எழுதியுள்ளார்கள். இந்நூல் சென்னை கலாரத்நாகரம் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இச் சதகத்திற்கு பறங்கிப்பேட்டை நாராயணசாமிபிள்ளை, பிறையாறு செ. சுல்தான் அப்துல் கறீம் முதலியோர் சாற்று கவிகளை அளித்துள்

ளனர். கட்டளைக் கலித்துறையில் அமைந்த நூறு பாடல்கள் இதன் கண் அமைந்துள்ளன. நபிகள் நாயகத்தின் பதினோறாவது வழித் தோன்றலாகக் கருதப்படும் முகையதீன் ஆண்டவர் அவர்கள் பாரசீக தேசத்தைச் சார்ந்த ஜீலான் என்னும் நகரில் கி. பி. 1078 இல் பிறந்தவ ராவர். இவர் 1169 இல் தமது 91 வது வயதில் இறப்பெய்தியபின் பக்தாத் நகரில் அடக்கம் செய்யப்பட்டுள்ளார். இதன் காரணமாக பக்தாத் நகரம் இஸ்லாமியர்களின் திருத்தலம் என்ற சிறப்பினைப் பெறுகிறது. தமது வாழ்வில் பல்வேறு அற்புதங்களை நிகழ்த்திக் காட்டிய இறைநேசச் செல்வரான முகையித்தீன் ஆண்டவர் 'புதூஹுல் கைப்', 'குன்யத்துத் தாலிபீன்', 'ஸகானில் ஹுப்பு' போன்ற பல ஞான இலக்கியங்களை அறபு மொழியில் ஆக்கித் தந்துள்ளார். இவரது ஞானத்தின் பெருமையையும், இவரின் காரணமாக பக்தாத் நகரம் பெற்ற சிறப்பையும் இவர்மீது பாடப்பட்ட இரு தமிழ்ச் சதகங்களும் நமக்கு எடுத்துக்காட்டுகின்றன. முகையித்தீன் சதகத்தை பேகம் பூரினைச் சார்ந்த அப்துல் காதிர் என்பவர் இயற்றியுள்ளார். இத னுடைய காலம் சரியாகத் தெரியவில்லை. பத்தொன்பதாம் நூற்றாண் டினைச் சார்ந்ததாக இருத்தல் வேண்டும்.

## சூபித்துவ கொள்கை விளக்க இஸ்லாமிய சதகங்கள்

இஸ்லாமிய சதகங்களுள் பெரும்பாலான சதகங்கள் இப் பிரிவினையே சார்ந்துள்ளன. ஞானிகளின் குருவாகக் கருதப்படும் முகையத்தீன் ஆண்டகையின் பேரில் முழுக்க முழுக்க ஞானக்கருத்துக்க ளடங்கிய இரு சதகங்கள் காணப்படுகின்றன. 'முகையித்தீன் சதகம்' 'அகத்தீசர் சதகம்' என்னும் இவ்விரு சதகங்களையும் இயற்றியவர் இஸ்லாமிய தமிழுலகில் தலை சிறந்த சூபியாகக் கருதப்படும் குணங்குடி மஸ்தான் சாகிபவர்களாவர். இஸ்லாத்தில் சூபிகளை 'லா இன்ன வலா அன்த' என்று கூறுகின்றனர். இதன் பொருள் 'நானுமில்லை நீயுமில்லை இருப்பது இறைவன் ஒருவனே' என்ப தாகும். இத்தகு சூபித்துவத்தின் பாதையை இஸ்லாம் ஷரீஅத், தரீகத், ஹகீகத், மஃறிபத் என்ற நான்கு நிலைகளாக வகுக்கிறது. இந்நான்கு நிலைகளையும் சைவ சமயம் குறிப்பிடும் தவநிலைகளான சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு நிலைகளுக்கு ஒப்புமை செய்யலாம். இவற்றுள் முதல் நிலையான 'ஷரீஅத்' என்பது நடைமுறை வாழ்வில் ஒரு இஸ்லாமியன் மேற்கொள்ள வேண்டிய மார்க்க வழியாகும்.

இரண்டாவது நிலையான தரீக்கத் அல்லது 'தரீக்கா' என்பதன் பொருள் பாதை என்பதாயினும் குறிப்பாக இஃது ஞானப்பாதையைத் தான் குறிக்கும். இத்தகு ஆன்மீக வழியான தரீக்காக்கள் காலந்

தோறும் அந்தந்தக் காலங்களில் தோன்றிய ஒலிமார்களுக்கேற்ப சிற்சில நடைமுறை வேறுபாடுகளுடன் இஸ்லாத்தில் பின்பற்றப் பட்டுள்ளன. எத்தனை தரீக்காக்கள் தோன்றினும் அவையத்தனையின் குறிக்கோள் சொர்க்கத்தை அடைதலாகும். இவ்வழியில் முகையித் தீனாண்டவர் அப்துல் காதிர் ஜீலானி அவர்கள் 'காதிரிய்யா தரிக்கா' என்ற ஞானப்பாதையினை வழிவகுத்துக் காட்டியவராகும். முகையித் தீனாண்டகைக்குப் பின்பே நாடெங்கிலும் காதிரிய்யா தரீக்கா பின் பற்றப்பட்டது. இத் தரீக்கா வழியினைப் பின்பற்றி ஆன்மீக நெறியில் வெற்றி கண்டவருள் முக்கியமானவரே குணங்குடி மஸ்தான் சாகி பாவார். எனவே தமது ஆன்மீக குருவான முகையித்தீனாண்டவர் பேரில் இரு சதகங்களை மஸ்தான் சாகிபு இயற்றியுள்ளார். இவ்விரு சதகங்களும் திருப்பாடற்றிரட்டு என்னும் தொகுப்பினுள் அடங்கி யுள்ளன. இச்சதகங்கள் 1812ஆம் ஆண்டு இயற்றப்பட்டுள்ளன. இதற்கு இன்று வரையில் பல்வேறு பதிப்புக்கள் வெளிவந்துள்ளன. முகியித்தீன் சதகத்தில் அனைத்திற்கும் ஏக அறிவாகிய வள்ள லிற சூலைத் தொடர்ந்தவர் அருள் பெறுவது போல் தமக்கு முன்னிலைக் குருவாகிய முகியித்தீனாண்டவரைத் தோத்திரஞ் செய்து குறையிரந்து பாடிய நூறு பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இந்நூறு பாடல்களும் பத்துப் பதிகங்களாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு பதிகமும் பத்துப் பாடல்களைப் பெற்றமைகின்றன. ஒவ்வொரு பதிகத்தின் தொடக்கத் திலும் நான்கடியில்

பன்மையாய் விரிந்த பல்பொரு ளெலாமதன்
றன்மையா யிருந்த தகுதியை விளக்கும்
அருளொளி விளக்கினை யருள்க வென்றாசான்
தெருளொளி பதமலர் சிந்தைசெய் திரத்தல்

(முகியித்தீன் சதகம் பதிகம் 3)

என்பது போன்ற தமது குறிக்கோளை விளக்கியுள்ளார். இச் சதகத்தில் இடம் பெற்றிருக்கும் அனைத்துச் செய்யுட்களும்

வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே

என்னும் அடியுடன் முற்றுப்பெறுகின்றன. முகியித்தீன சதகத்தில் குணங்குடி மஸ்தான் இவ்வுலக ஆசைகளைப் பெரிதும் வெறுக்கின்றார். இவ்வுலக வாழ்வில் உணவு, உடை, உறவு ஆகியவற்றின் மீதுள்ள ஆசையால் உலகம் பெரும் துன்பத்திற்குள்ளாகி அல்லலுற்றுழல்வதை எண்ணி உழல்கின்றார்.

புதல்வரெனு முதலைகள் பிடித்துக் கடித்துக்
புசிக்கக் கொடுத்து ழல்வனோ
பொல்லாத காமக் கடற்புலா லென்னுமோர்
பூவகைப் பட்டு ழல்வனோ
கதகதென்றெரியும் பணத்தீ மிதித்தெனது
கால்கொப் பளித்து ழல்வனோ
கட்டுபட் டாடைக ளெனுநமன் கைவலைக்
கட்டுண்டு நின்று ழல்வனோ...

(முகியித்தீன் சதகம் : 4:7)

என்று குரல் எழுப்புவர் தம் குருவிடத்துக் காத்தருள வேண்டுகின்றார் இச்சகத்தின் ஐந்தாம் பதிகத்திலமைந்த பத்து பாடல்களிலும் சமாதி யின் விளக்கம்பற்றி எடுத்துரைக்கின்றார். ஒரு பாடலில்,

சாதிபே தத்தையும் மாதர்போ கத்தையும்
தள்ளிநிற் பதுச மாதி
சந்தமு மொளிருமருண் ஞானவரு டேசிகன்
தன்னையறி வது சமாதி......
ஏதுமது வானகுரு நாதனிரு பாதமதி
லிச்சைவைப் பதுச மாதி
என்றருள் பிரானே யடியேனு முமை நம்பினே
னிதுவேளை யாளுதற்கே
மாதவர் களுக்குதவி யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிறசூல்வ ருகவே
வளரு மருணிறை குணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே

(முகியித்தீன் சதகம் : 5 : 5)

எனத் தம் குருநாதரை முன்னிறுத்தி எடுத்துரைக்கின்றார். ஆறாம் பத்திதில் அமைந்துள்ள செய்யுட்களில் மக்களின் உளப் பாங்கையும் அவர்கள் எத்தகைய வம்பர்களாக இவ்வுலகில் திரிகின்றனர் என் பதையும் எடுத்துக் காட்டுகிறார் ஆசிரியர். ஏழாம் பத்தில் அமைந்த பாக்களில் மக்கள் அவர்களது தீக் குணங்களின் காரணமாக எத்தகைய பாவிகளாக உள்ளனர் என்பதையும் எட்டாம் பத்தில் அவ்வுலக வாழ்வைச் சூழ்ந்துள்ள கொடுமைகளைக் கண்டு தம் மனம் கலங்குவ தையும் எடுத்துக் காட்டும் குணங்குடி மஸ்தான் இறுதி இரு படலங் களிலும் இவ்வின்னல்களிலிருந்து நீங்கி உலகம் உய்வது எந்நாளோ என்ற தன் ஏக்கத்தையும் வெளிக் காட்டுகிறார்.

அகத்தீசர் சதகத்தில் மஸ்தான்சாகிபு தம் அகத்தில் குடிகொண்டிருக்கும் ஆசானாகிய முகியித்தீனாண்டவரிடத்து 'காதிரிய்யா தறீக்கா' ஞானப்பாதையின் பல்வேறு நிலைகளாகிய குருவருள் நிலை, தவநிலை, துறவுநிலை, நியமநிலை, வளிநிலை, தொகைநிலை, பொறைநிலை, காட்சிநிலை, தியானநிலை, சமாதிநிலை முதலான பத்து அகஞான நெறிகளை அருளுமாறு வேண்டுகின்றார். இச் சதகத்தில் மேற்குறித்த பத்துத் தலைப்புக்களில் பத்துப்பத்துப் பாடல்களாக நூறு பாக்கள் அடங்கியுள்ளன. ஒவ்வொரு பாடலின் இறுதியும் தம் ஞான குருவை நினைத்து

...தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்றனருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநாதனே

என வேண்டுவதாகவே முற்றுப்பெறுகின்றன. முகியித்தீன் சதகத்தில் இல்லாதவகையில் அகத்தீசா சதகத்திலமைந்த பாடல்கள் அனைத்தும் அப்பாடல் கருத்தமைவினைச் சுருக்கி இரண்டு வரிகளிலமைந்த தலைப்புக்களைப் பெற்றுள்ளன. தம் நிலைகளை ஞான குருவிடத்து முறையிடும் மஸ்தான் சாகிபு தம்மை

குருவற்ற சீடன்என ஆகாத வண்ணம் நற்
குணமேற்றி அருள்புரிய...

வேண்டுகின்றார். மனத்தை பேய்க்கு ஒப்பிடும் குணங்குடியார் அப்பேய் தனக்குக் கீழே உலை நெருப்பாய் உலக வாதைகள் இருப்பதை அறியாமல் ஆடிக்களிப்பதை எடுத்துக்கூறி, தம்குருவிடத்து அத்தகைய மனம் நெருப்பிலே வீழ்ந்து அழிந்து போகாமல் காக்கும் படியும் வேண்டுகிறார்.

கொல்லன்உலை மேல்நின்று கூத்தாடுங் குறளிகுறி
கொள்ளாமல் அருள்புரியவும்...

எனப்பாடும்போது மஸ்தான் சாகிபு அவர்களின் ஆன்மீகப் பாதை புலப்படுகிறது. இச் சதகங்களில் பல கருத்துக்கள் தாயுமானவரது பாடற்கருத்துக்களை ஒத்துள்ளன என்பது குறிப்பிடற்பாலதாகும். மஸ்தான் சாகிபு பாடியுள்ள இரு சதகங்களும் ஞானப்பாக்களாக இருப்பினும் புரிந்து கொள்வதற்கான எளிய மொழிநடையைப் பெற்றமைகின்றன.

ஞானநெறியில் குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்களுக்கிணையாக ஆன்மீக இலக்கியங்களை இயற்றியவர் காலங்குடி மச்சரேகை சித்தனாவர். இஸ்லாமியத் தமிழிலக்கியங்களுள் அதிகமான சதகங்களை இயற்றியவர் என்ற பெருமையைப் பெற்ற மச்சரேகை சித்தரின்

இயற்பெயர் செய்யது அப்துல் வாரிது ஆலிம் மௌலானா ஐதரூஸ் என்பதாகும். நெல்லை மாவட்டம் காலங்குடியில் பிறந்தவரான இவரது காலம் 1842-1951ஆகும். இவருடைய முன்னோர்கள் அறபு நாட்டிலிருந்து வந்ததாகக் கருதப்படுகிறது. மச்சரேகை சித்தர் காருண்ய சதகம், மோக்ஷ சதகம், காரண சதகம், மெஞ்ஞான சதகம், பூரண சதகம், பேரின்ப சதகம், வேதாந்த சதகம், நாதாந்த சதகம், சிதானந்த சதகம், எதார்த்த சதகம் முதலான பத்து சதகங்களை இஸ்லாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியத்திற்கு அளித்துள்ளார். ஒரே ஆசிரியர் தமிழுலகில் இத்தனை சதகங்களை இயற்றியுள்ள பெருமை இவரையே சாரும். எனினும் தமிழ்ச் சதக இலக்கியம் பற்றி எழுதி யுள்ள பலரும் இவரது பெயரை மறந்திருத்தல் வியப்பிற்குரியதாகும். இச்சதகங்கள் அனைத்தும் வேதாந்தக் கருத்துக்களடங்கிய ஞானக் கருவூலங்களாகும். மேற்குறித்த பத்து சதகங்களும் காலங்குடி மச்ச ரேகை சித்தரின் திருப்பாடல்கள் என்னும் இவரது நூல் தொகுப்பினுள் அடங்கியுள்ளன. இத்தொகுப்பு நூல் தமிழ்ப்பண்டிதர் ச. கந்தசாமி முதலியார் அவர்களால் பார்வையிடப்பட்டு 1928ஆம் ஆண்டு சென்னை ஸ்ரீமஹந் தேவஸ்தான அச்சகத்தில் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

மச்சரேகை சித்தரின் சதக இலக்கியங்கள் அனைத்தும் பதிகம் என்னும் அமைப்பு முறையைப் பெற்றமைகின்றன. ஒவ்வொரு சதகமும் முறையே பத்து பதிகங்களையும் ஒவ்வொரு பதிகமும் முறையே பத்துப் பத்துப் பாக்களையும் உள்ளடக்கியுள்ளன. வேறு சில பதிகங்கள் பத்துக்கும் மேற்பட்ட ஒன்று அல்லது இரண்டு பாக் களையும் பெற்றமைந்துள்ளன. காருண்ய சதகத்தில் குருநிலைப் பதிகம், மயப்பதிகம், ஜெயப்பதிகம், தீட்சைப் பதிகம், சோஹப் பதிகம், மோனப் பதிகம், வேதனைப் பதிகம், சித்தப்பதிகம், மதிப்பதிகம், சாந்தப் பதிகம், முதலான பத்துத் தலைப்புகளில் நூறு பாடல்கள் இரட்டையாசிரிய விருத்தத்தில் இடம்பெற்றுள்ளன. இப்பதிகத்தில் உள்ள பாக்கள் அனைத்தும்

காட்சிதற் சாக்ஷியே சூழ்ச்சி மெய் யாட்சியே
கருணைகா ருண்ய வாழ்வே

என்னும் அடிகளுடன் முற்றுப்பெறுகின்றன. இச்சதகத்தில் பெரும் பாலும் நிர்வாண நிட்டையில் உள்ள நித்திய சுகத்தினையும், எத் துணையிருந்தும் அத்தகைய சுகம் கிட்டவில்லை என்பதையும்

சூத்திர முணர்ந்தென்ன சாத்திர மறிந்தென்ன
சுயஞானம் பெற்றதில்லை
சுத்தசூ நியவெளி சத்தியம் நிர்வாண
சுயநிட்டை நனவி லில்லை

(காருண்ய சதகம் : 3:5)

என ஆசிரியர் சுட்டிக்காட்டுகிறார். இரண்டாவது சதகமான மோக்ஷ சதகத்தில் சற்குணப் பதிகம், ஏகபுகழ்ப் பதிகம், சுகாநந்தப் பதிகம், சதாநந்தப் பதிகம், சைதன்னியப் பதிகம், ஏகரசப் பதிகம், துரியப் பதிகம், சுலட்சணப் பதிகம், மனோலயப் பதிகம், ஹம்ந்துப் பதிகம் முதலானவைகள் அடங்கியுள்ளன. அனைத்துப் பாக்களும் இரட்டை ஆசிரிய விருத்தமாக உள்ளன. மச்சரேகை சித்தன் சதகங்களில் காருண்ய சதகம் தவிர ஏனைய சதகங்களில் இடம்பெறும் பாக்களின் ஈற்றடியில் ஒற்றுமையைக் காண முடியவில்லை. முதல் சதகம் தவிர ஏனைய ஒன்பது சதகங்களின் உட்பதிகங்களுள் இடம்பெறும் பத்துப் பாக்கள் மட்டுமே ஒரே ஈற்றடியைப் பெற்றுள்ளன. இவ்வியல்பு ஏனைய பிற இஸ்லாமியச் சதகங்களிலிருந்து மாறுபட்ட தன்மையாகும். இரண்டாவது சதகத்தில் அஞ்ஞானங்களை ஆசிரியர் சாடுகின்றார்.

கத்தித் துதித்துக் குதித்துவி ழித்திடுங்
　　கற்பனை யர்த்த வாதங்
காமவி காரங்கள் நேமமுறை யென்றுபேர்
　　கண்டபல னொன்றுமில்லை

(மோக்ஷ சதகம் சுகானந்தப் பதிகம் 10)

என்று எடுத்துக்கூறி மோட்சம் பெறுவதற்குக் முறுக்கே நிற்கும் அஞ்ஞான வாசனை வேஷதாரிகளை இனம் காட்டுகிறார். அடுத்த காரண சதகத்தில் சித்தசுகப் பதிகம், ஆட்சிப் பதிகம் அமிர்தப் பதிகம், தடையறுப் பதிகம், முன்னறிவுப் பதிகம், சித்தன் பதிகம், தன்மய அறிவுப் பதிகம், ஞேயப் பதிகம், பிரகாசப் பதிகம் என்னும் தலைப்புக் களைக் காணலாம்.

இதில் இரட்டையாசிரிய விருத்தம், எழுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம், கலித்துறை போன்ற பல வகையான பா வகைகள் இடம் பெறுகின்றன. இச்சதகத்தில் நம் அறிவானது கலங்குவதற்கான காரணங்களை எடுத்துக்காட்டுவதுடன் அக்கலக்கத்திலிருந்து விடுபட.

திண்டாடும் பொய்மாயத் திரிசியத் திரைநசித்துக்
　　கண்டா லொழியமனக் கலக்கங்கள் தீராவே

(காரண சதகம் : 8;5)

என வழியும் கூறுகிறார்.

மெய்ஞ்ஞான சதகத்தில் அறிவான போதம் அகத்துறவாலே அகந்தெளிந்து நெறியான பாதையில் செல்லத் தூண்டுகின்றார் ஆசிரியர். இக்கருத்துக்களை அருளுருப் பதிகம், சாதனப் பதிகம், திருட்டிப் பதிகம், நித்திய பரப் பதிகம், ஞானோதயப் பதிகம், ஒருமை ஞானப் பதிகம், பூரணப் பதிகம், சாக்ஷிப்பதிகம், பரமாநந்தப் பதிகம், பரமுத்திப் பதிகம் என்னும் பகுதிகளில் நூற்றி ஐந்து செய்யுட்கள்

மூலமாக விளக்குகின்றார். இவற்றுள் ஒருமை ஞானப் பதிகத்தில் மனத்தை ஒருமைப்படுத்தி மெய்ஞான வழியில் திசை திருப்ப மச்ச ரேகை சித்தர் வழிகாட்டும்போது

அல்லாஹுடு அல்லா வென்று
வலறியே யிறையைக் கூவி
சொல்லிய நாம ரூபத்
தொல்லையிற் சாந்த மில்லை
துல்லிய தத்வ ஞானந்
துலங்கிட மனமே சாந்தி
சல்லிய வழக்க மில்லை
தௌஹீது மஅரி பாவே

என இஸ்லாத்தின் நெறியை இணைத்துப் பாடுகிறார். இப்பாடலின் இறுதியில் இடம்பெற்றுள்ள அரபுச் சொல்லான 'தௌஹீது' என்பதன் பொருள் ஒன்றாகச் செய்தல், ஒன்று என வலியுறுத்தல் என்பதாகும். இச்சொல் 'வஹ்த்' என்னும் அடிச்சொல்லிலிருந்து பிறந்ததாகும். இஸ்லாத்தின் மூல மந்திரமான 'லாஇலாஹ இல்லல்லாஹுடு' என்னும் முதல் கலிமாவின் பொருள் இரு நிலைகளில் மார்க்கத்தில் வலியுறுத்தப் பெறுகிறது. முதலாவது 'இறைவன் ஒருவனே' என்னும் ஏகத்துவக் கொள்கை நிலையிலும், இரண்டாவது 'வணக்கத்திற்குரியவன் இறைவன் ஒருவனேயன்றி வேறொருவருமில்லை' என்ற இறைவழி பாட்டு நெறியிலும் விளக்கம் பெறுகிறது. இதில் முதல் நிலை அனைத்துச் சமயங்களுக்கும் பொதுவானது. ஆனால் இரண்டாவது நிலையிலான பொருளே இஸ்லாத்தை ஏனைய பிற சமயங்களிலிருந்து வேறுபடுத்தும் அடிப்படை நாதமாகும். இவ்விரு நிலைகளில் கொள் ளப்படும் பொருளின் முதல் நிலையை 'தௌஹீத் ஃபித் தாத்' என்றும், இரண்டாவது நிலையை 'தௌஹீத் ஃபிஸ் ஸிபத்' என்றும் இஸ்லாம் குறிப்பிடுகிறது. இத்தகைய ஆழமான இறைவழிபாட்டு ஏகத்துவக் கொள்கையை தம் நெஞ்சில் நிறுத்தியே 'தௌஹீது' என்னும் சொல் லாட்சியை மச்சரேகை சித்தர் இங்கு குறிப்பிடுகின்றார். அடுத்து இடம்பெற்றுள்ள 'மஅரிபா' என்னும் சொல்லாட்சியின் பொருள் 'இறை.ஞானம்' என்பதாகும். இச்சொல்லாட்சி குறிப்பாக ஆன்மீகத் துறையில் இறைவனை அறியும் நிலையில் உள்ளோரின் தூய்மையான சிறப்புப் பொருந்திய படிநிலையாகும். சூபித்துவக் கொள்கையில் வலியுறுத்தப்பெறும் நான்கு நிலைகளுள் மஃரிபத் என்பது சைவ சமயம் ஆன்மீகத் துறையில் சுட்டும் இறுதி நிலையான ஞானம் என்பதற்கு ஒப்பாகும். சூபித்துவக் கொள்கையின்படி இறைவன் சாதாரண மனிதர்களுக்கு 'இல்மு' என்னும் சாதாரண அறிவினை அளிக் கின்றான் என்பதும், ஆனால் தான் விரும்பும் சிலருக்குத் தனது பேரொளியை அவர் தம் இதயத்தில் இறக்கி ஞானத்தை அளிக்கின்

நான் என்பதும் ஏற்றுக்கொள்ளப்படுகின்றது. இத்தகைய ஞானத்தை 'இர்ஃபான்' என்பர். இந்நிலை பெற்றவர்களே இறைவனிடம் நெருங்குகின்றனர். மச்சரேகை சித்தர் குறிப்பிடும் இறை ஞானமும் சாதாரண அறிவிலிருந்து வேறுபட்ட 'இர்ஃபான்' என்னும் ஞான நிலையாகும். இப்பதிகத்தில் உள்ள ஒவ்வொரு பாடலிலும் இஸ்லாத்தின் சூபித்துவக் கொள்கையை ஆழமாகப் பதித்துள்ளார் ஆசிரியர்.

ஐந்தாவது சதகமான பூரண சதகம் நூற்றியொரு செய்யுட்களைப் பரமார்த்தப் பதிகம், ஆராய்வுப் பதிகம், நிரயப் பதிகம், வேறில்லைப் பதிகம், நிர்வாணப் பதிகம், நேத்திப் பதிகம், மலினப் பதிகம், புகழ்ப் பதிகம், வஸ்துப் பதிகம், கேவலப் பதிகம் முதலான பத்துப் பிரிவுகளில் பெற்றுள்ளது. இச்சதகத்திலும் பல்வேறு வகையான யாப்பு வகைகளைக் காணலாம். மனிதப் பிறவியின் பூரணத்துவத்தை இச்சதகத்தால் உணர்த்துகின்றார். மானுடர் தம்முன் சாதி பேதம் பேசி தம் கருத்தழிந்தொழிவதைக் கடுமையாகச் சாடுகின்றனர்.

எங்கள் மத முங்கள் மதம் வேறென்றுந்
தனதென்றங்கி ருப்ப தில்லை
பிங்கலையும் வடகலையுஞ் சுழிமுனையென்ப
தொன்றுமிலை பின்ன லில்லை
யங்கமில்லை யாதார மேறுவது
மிறங்குவது மநித்திய பேதம்
சங்கையெலாங் கடந்தசித்தன் கேவலவா
னந்தசுக சாக்ஷி தானே

(பூரண சதகம் : 10 : 11)

இத்துடன் இப்பிறவித் துன்பத்தைப் பேய்க்கு உவமித்துக் கூறும் மச்சரேகை சித்தர் அத்துன்பத்திலிருந்து விடுபட்டு தம்மைத் தாமே அறிவதே பூரணத்துவம் என்கிறார்.

பேரின்ப சதகத்தில் மானுடர்களின் பேரின்ப நிலையை தேசோமயப் பதிகம், சோதிப் பதிகம், தேன் பதிகம், தூதுப் பதிகம், திருவுளப் பதிகம், கருணைப் பதிகம், தற்பரப் பதிகம், நிராசைப் பதிகம், ஆருயிர்ப் பதிகம், வெளிப் பதிகம் என்னும் பத்து நிலைகளாக விளக்குகிறார். நூற்றியொரு செய்யுட்கள் அடங்கியுள்ள இச்சதகத்தில் ஆணவம், மலம் மற்ற குருமயத்தினை ஆசிரியர் பேரின்ப நிலையாகச் சுட்டுவதுடன் இஸ்லாத்தின் அடிப்படை இறைவழிபாட்டு நெறியைப் பேரின்ப நிலைக்குரிய வழியாக வகுத்துக் காட்டுகின்றார்.

ஆட்சியே லாயி லாஹ இல்லல்லா-ஹுவென் றானால்
சாட்சியே முஹம்ம துர்ற சூலுல்லாஹ் தானே தன்னில்
காட்சியே சலிமா வுண்மைக் காரணம் வேறில் லாத
மீட்சிமெய் யறிவே தூது வியாபக விளக்கந் தானே

(பேரின்ப சதகம்: 4 : 6)

இஸ்லாத்தின் அடிப்படை மார்க்கத் தத்துவங்களை உணர்த்தும் களமாகவே மெய்யறிவின் மீட்சிக்குரிய வழியாக மச்சரேகை சித்தர் விளக்குகிறார். 'கலிமா' என்பதன் நேரடியான பொருள் 'சொல்' என்பதாகும். இஸ்லாத்தில் ஆணிவேராக விளங்குவது கலிமா தையிபா, கலிமா ஷஹாதத், கலிமா தம்ஜீது, கலிமா தௌஹீது, கலிமா ரத்துல் குப்ர் எனப்படும் ஐந்து அடிப்படை விஷயங்களாகும். இவற்றை ஒவ்வொரு இஸ்லாமியரும் மனம், மொழி, மெய்யால் ஏற்று விசுவாசித்து நடப்பதே இஸ்லாத்தின் ஐம்பெரும் கடமைகளுள் முதற் கடமையாக வலியுறுத்தப் பெறுகிறது. இவற்றுள் முதலாவது கலிமாவானது 'லாஇலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர் றசூலுல்லாஹி' என்பதையே மேற்குறித்த பாடலில் மச்சரேகை சித்தர் குறித்துள்ளார். 'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு ஒருவருமில்லை, முஹம்மது (இ)றசூலுல்லா (சல்) அவர்கள் அவனுடைய திருத்தூதர் ஆவர்' என்பதே முதல் கலிமாவின் பொருளாகும். இக்கருத்தினை ஏற்றிப் போற்றுவதைப் பேரின்ப நிலைக்குரிய வழியாகவும், மெய்யறிவானது அஞ்ஞானத்தினின்றும் மீட்சி பெற்றுச் சிறப்பதற்கான முறையாகவும் ஆசிரியர் சுட்டிக் காட்டுகின்றார்.

வேதாந்த சதகம் நூறு செய்யுட்களை உள்ளடக்கியுள்ளது. இதில் ஏகப் பதிகம், மித்தைப் பதிகம், நமக்குப் பதிகம், திருவருள் பதிகம், நிவர்த்திப் பதிகம், சுகப் பதிகம், நித்திரைப் பதிகம், பாரேன் பதிகம், பொதுப் பதிகம், நிரங்குசப் பதிகம் முதலான தலைப்புக்களைக் காணலாம். ஞானிகள் ஆண்டவனின் பாதையில் தம்மை முழுக்க முழுக்க ஈடுபடுத்த அவன் வயமாக்கிக் கொள்வதிலேயே பேரின்பம் காண்கின்றனர்.

அல்லாத பேதகத்தின் கற்பனை கடந்திடவே
யில்லல்லா ஹுதானே யேகபர மானந்தம்

(வேதாந்த சதகம்: 1 : 1)

உல்லாச மாக வுலகில் மயங்காமற்
பொல்லாம தங்களெல்லாம் போக்கி யறிவாலே
அல்லாஹு சமதென்ற வறிவதுவுந் தானாகி
யெல்லாம றந்திடவே யேகபர மானந்தம்

(வேதாந்த சதகம்: 1 : 9)

என வேதாந்தத்தின் வழி ஆண்டவன் சித்தமே தன் சித்தமென்னும் நிலைக்கு ஆளாகின்றார் ஆசிரியர்.

ஞான நெறிகளைத் தடுக்கும் பகைகளை நாதந்த சதகத்தில் நூறு பாக்கள் மூலமாக விளக்குகிறார். இதில் பாவப் பதிகம், ஐக்கியப் பதிகம், மனோநாசப் பதிகம், ஏகாந்தப் பதிகம், அன்புருப் பதிகம், நிதார்த்தப் பதிகம், நிச்சயப் பதிகம், அகங்குளிர் பதிகம், நிர்த்தப் பதிகம், அற்ற நிலைப் பதிகம் முதலானவைகள் அடங்கியுள்ளன. ஒரு பாடலில் ஞானப் பகையான மூன்றினைக் குறிப்பிட்டுள்ளார்.

தடுக்கும் ஞானப் பகைமூன்று
தன்னைக் கெடுக்கும் பெண்ணாசைத்
துடுக்கர் வழிவிட் டகல்வதுவே
துச்ச நிவர்த்தி சுகநிட்டை
திடுக்க மற்ற மனங்குளிர்தல்
தீதொன் றில்லா வவகாச
மிடுக்கண் ணீத்த வேகசுகத்
திரண்டற் றைக்ய மன்புருவே

(நாதாந்த சதகம்: 5 : 3)

என அன்புருவாகத் தம்மை ஆக்கிக் கொள்வதற்கு இடையூறுகளாக இருப்பனவற்றை விவரிக்கின்றார். உயிரில் தோன்றும் வியாபகத்தின் திரைநீக்கி மவுனத்தறிவாலே

தீன்றுனியாப் பற்றின்றிச் சித்தநி ரோதமதி
லான்றுசாந் தம்முதிர வகங்குளிர்ந் திருப்போமே

(நாதாந்த சதகம்: 8 : 4)

என மகிழ்ந்திருக்க வேண்டுமாம். இங்கு வைதீகம், லௌகீகம் ஆகியவற்றின் மீது பற்றற்று இருக்கும் நிலையைத்தான் 'தீன் துனியாப் பற்றின்றி' என ஆசிரியர் கூறுகிறார்.

ஒன்பதாவது சதகமான சிதானந்த சதகத்தில் நூற்றியொரு பாடல்களும் மதிவிதிப்பதிகம், அலிபுப் பதிகம், நித்தியாசப் பதிகம், அற்புதப் பதிகம், அர்ப்பணப் பதிகம், தத்துவப் பதிகம், முத்திரைப் பதிகம், அதீதப் பதிகம், சோதிப் பதிகம், சமம் பதிகம் முதலான பத்துப் பதிகங்களில் இடம்பெறுகின்றன. இச்சதகத்தில் ஆன்ம பரிபக்குவ நிலையை தெளிவுற எடுத்துக்கூறுகிறார் ஆசிரியர். ஒரு செய்யுளில் மதவாதப் பிணக்குகளைக் களைந்தெறியும்படி கூறும் ஆசிரியர் அக ஞானங் காண தீனுல் இஸ்லாம் மார்க்கத்தை நோக்கித் திசை திருப்புகிறார்.

அந்ய மநித்ய முபமான
மனுமா னஞ்சொல் லர்த்த வாதம்
பின்னித் தியக்கும் மதவாதப்
பிணக்குங் குணிக்குந் தீதற்ற
மன்னுந் தீனிஸ் லாமார்க்கம்
மகாகா யம்பொற் சுகஞானங்
கன்ன லமுதே புறுக்கானே
கதியே ஞான மதிவிதியே

(சிதானந்த சதகம் : 1:10)

இங்கு உலக வாழ்வில் நிலைப்புத் தன்மைக்கு மதவாதங்களைக் களைந் தெறியக் கூறும் மச்சரேகை சித்தர் இவ்வுலக உண்மையான ஞானத்தைக் கண்டறிய தீனுல் இஸ்லாம் மார்க்கம் போதிக்கும் புறுக்கான் வேதத்தைப் பாதையாகக் காட்டுகின்றார். 'புறுக்கான்' என்னும் இச்சொல்லை சூபிகள் உண்மையையும் பொய்யையும் பிரித் தறிவதற்குப் பயன்படுத்துகிறார்கள். இச் சொல்லின் நேரடியான பொருள் 'பிரிப்பது' என்பதாகும். அல்குர்ஆனின் இருபத்தி ஐந்தாவது அத்தியாயம் இப்பெயர் பெற்றமைகிறது. இறைவனால் அருளப்பட்ட பல்வேறு வேதங்களுள் இறுதியான ஒன்றே புறுகான் என்னும் வேத மாகும். இதனுடைய பிரிவடைந்த பொருள் உண்மையைப் பொய்யி லிருந்து விரித்துக் காட்டும் நேர்வழி என்பதாகும். நாயகம் பெருமானார் (சல்) அவர்களுக்கு அல்லாஹ்வால் அருளப்பட்ட மேற்குறித்த புறுகான் வேதத்தையே ஆன்மீக நெறியில் ஞானமதி பெறுவதற்காக இனம் காட்டுகின்றார் ஆசிரியர்.

இல்லற வாழ்வு, சுயசோதி பெறுவதற்கான முட்டுக்கட்டையாக மச்சரேகை சித்தர் உணர்வதால்

இல்ல றம்நமக் கெவ்வித மும்பகை
நல்ல றம்புவி யோர்க்குயர் நாடகம்
கல்ல றைமட்டுங் கைகால் மலங்காது
தொல்லை யற்றிட வேசுயஞ் சோதியே

(சிதானந்த பதிகம் : 9 : 5)

மச்சரேகை சித்தரின் பத்தாவது சதகமான எதார்த்த சதகத்தில் நூற்றிரெண்டு செய்யுட்கள் அடங்கியுள்ளன. இவையனைத்தும் எழுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தப் பாக்களாகும். உலகில் எதார்த்த விஷயங்களை ஆசிரியர் மக்கட் பதிகம், வாலிபப் பதிகம், ஞானப் பதிகம், சற்குருப் பதிகம், பக்திப் பதிகம், சமாதிப் பதிகம்,

ஆநந்தப் பதிகம், தியானப் பதிகம், துறவறப் பதிகம், முத்திப் பதிகம், முதலான பத்துத் தலைப்புகளில் பிரிவு படுத்திக் காட்டுகின்ருர். வாலிபப் பதிகத்தில் இளைஞர்களுக்கு மெஞ்ஞானம் புகட்டும் போது

அஞ்ஞான சந்தேக விபரீத மூன்று
மகற்றிடக் கேட்டல் சிந் தித்தல்
மெஞ்ஞானந் தெளிதல் வித்தையா நந்த
மேவிடப் பற்றெல்லாம் நசிக்கு
மெஞ்ஞான்று மாறா சதானந்தக் காட்சி
யேகசு பாவந்தற் சாட்சி
விஞ்ஞானத் தீப மறிவுரு வன்பாய்
விளங்கிடு மிளைஞரே யிளைஞர்

(எதார்த்த சதகம் 2 : 4)

என அஞ்ஞானங்களைக் களைந்தெறியத் தூண்டுகிறார். இச்சதகத்தில் இறுதிப் பாடலிலே தம் பெயரையும் இணைத்துப் பாடியுள்ளார் மச்ச ரேகை சித்தர். இச்சதகத்தில் பல தெய்வ வழிபாட்டு நெறிமுறை களையும் சாடுகின்றார்.

பல தெய்வக் கொள்கை யற்பமு மில்லா
பாக்கியத் தீனிசு லாமே
நிலை தெய்வ மொன்றே நிலையிலாப் படைப்பை
நினைப்பவர் புதைகுழிப் பிணமே
கலைதெய்வ மென்று யோகசா தனையிற்
கண்சுழி முனையினை நம்ப
லிலைபொய் வழக்க மியாவும்விட் டின்ப
வேகாந்த முத்தியே முத்தி

(எதார்த்த சதகம்: 10:10)

என முத்திபெறு நிலையைச் சுட்டுகின்றார்.

பொதுவாக மச்சரேகை சித்தரின் சதகங்களில் ஒன்றிறைக் கொள்கை மிகவும் வலியுறுத்தப்படுகிறது. அத்துடன் இறைப்புகழ்ச்சி இறையை ஆன்ம பரிபக்குவ நிலை பெற்று உணர்தல், அறிதல், அடைதல் ஆகியனவும் அழுத்தம் பெறுகின்றன. இத்தகு முறையில் இறையை அடைவதற்கு தன்னையறிதல் வேண்டும். உலகயாக்கை. செல்வப்பற்று, பெண்ணாசை முதலானவற்றிலிருந்து ஒருவன் விடுதல் பெற வேண்டும் என வற்புறுத்துகிறார். இஸ்லாமிய ஐம்பெரும் கடமைகள் ஆங்காங்கே விளக்கம் பெறுவதுடன் சூபித்துவத்தின் மஹரி பத் என்னும் நிலை அடைவதற்கான வழிமுறைகளையும் மச்சரேகை

சித்தர் தம் சதகங்களில் விளக்கிக் கூறுகின்றார். இவரது சதகங்களில் முழுக்க முழுக்க ஞானநெறியே அதற்கெனவுரிய சொற்சித்திரங்களுடன் விளக்கம் பெறுகின்ற காரணங்களால் மொழிநடை சற்று கடினமாகவே உள்ளது. மச்சரேகை சித்தரின் பத்து சதகங்களும் ஆசிரியரின் பேரின்ப வெளிப்பாடு எனவும் ஞான நெறியில், சூபித்துவத்தில் அவரது அனுபவ ஊற்றுப் பெருக்கெனவும் கூறும்படிச் சிறப்புப் பெறுகின்றன.

## பிற இஸ்லாமிய சதகங்கள்

மேற்குறித்த சதகங்களைத் தவிர்த்து இன்னும் ஐந்து சதகங்களை இஸ்லாமியத் தமிழ் பெற்றுள்ளதாக அறியமுடிகிறது. எனினும் இவை பற்றிய உள்ளக்கக் கருத்துக்களை நூல்கள் கிடைக்காத காரணத்தினால் அறிய முடியவில்லை. எனவே இவ்வைந்து சதகங்கள் தொடர்பாகக் கிடைத்த தகவல்கள் மட்டுமே இங்கு குறிக்கப்படு கின்றன.

1893ஆம் ஆண்டு 'குதுபு சதகம்' என்ற பெயரில் கிதுறு முகம்மது மரைக்காயர் நூலொன்றினை இயற்றியுள்ளதாகத் தெரிகிறது. இதன் பின் 1915இல் எச். பி. முகம்மது அப்துல்லா 'வைத்ய சதகம்' என்னும் தலைப்பிலும், 1923இல் மீறான் சாகிபு என்பவர் 'தரிசனமாலை சதகம்' என்னும் தலைப்பிலும் சதகங்களை இயற்றியுள்ளனர். மேற்குறித்த மூன்று சதகங்களிலும் இஸ்லாமியக் கோட்டுபாடுகள் சதக இலககிய வடிவில் இடம்பெற்றிருக்க வேண்டும். இவையன்றி காலம் அறிய முடியாத இரு சதகங்களையும் நாம் காண்கிறோம். அவை 'சலவாத்து சதகம்', 'சீறாச் சதகம்' என்பனவாகும். இவற்றுள் முன்னையதை மீரான் நயினாப் புலவரும் பின்னையதை முகம்மது சுல்தான் இபினு அஹமத் என்பவரும் இயற்றியுள்ளனர். சலவாத்து சதகம் என்னும் சதகத்தின் தலைப்பில் அமைந்துள்ள 'சலவாத்' என்னும் அறபுச் சொல்லின் பொருள் 'புகழ்தல்' என்பதாகும். இறைவனின் திரு மறையை ஓதுவதும் சலவாத்துக் கூறுவதும் ஒரே நன்மை பயப்ப தாகும். இச்சொல் குறிப்பாக இறைவனின் மீதும் அவனது திருத்தூ தர்கள் மீதும் புகழப்படுதலைக் குறிக்கும். இத்தகு முறையிலேயே இச்சதகத்திலுள்ள பாக்களும் அமைந்துள்ளன. இச்சதகத்தில் உள்ள ஒவ்வொரு செய்யுளும்.

ஸல்லல்லாஹு அலா முஹம்மது
ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமே

என்று முடிவுறுகின்றன. இதன் பொருள் நபி (சல்) அவர்களின் புகழ் கூறுவோரிடத்து அல்லாஹ் அருள் பாலித்து சாந்தி பொழிவானாக

என்பதாகும். மேற்குறித்த சதகங்கள் அன்றி. 'சதக இலக்கியங்கள்' என்ற நூலில் ந. வீ. செயராமன் இஸ்லாமிய சமய சதக நூல்களாகக் குறிப்பிடும் ஐந்து நூல்களுள் 'நந்தீசர் சதகம்' என்னும் சதகம் மஸ்தான் சாகிபு அவர்களால் இயற்றப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது. ஆனால் மஸ்தான் சாகிபு பாடற்தொகுதிகளில் இத்தகைய பெயரில் யாதொரு சதகத்தையும் காணமுடியவில்லை என்பது குறிக்கத்தக்க தாகும். இனி இஸ்லாமிய சதக இலக்கியங்தளுள் ஏதாவது ஒரு நூலை விரிவான ஆய்வுக்கு எடுத்துக் கொள்வோம்.

## சதகங்களுள் இறசூல் சதகம்

மேற் குறித்த இஸ்லாமிய சதகங்களுள் காலத்தால் பிற்பட்ட 'இறசூல் சதகம்' என்னும் நூலே இங்கு விரிவான ஆய்வுக்குட்படுத்தப் படுகிறது. முன்னர் குறித்தபடி நாயகம் பெருமானார் மீது பாடப்பட்ட 'ஆசிரியர்திலகம்' என்று அழைக்கப்படும் இலங்கையைச் சார்ந்த அப்துல் காதர் லெப்பையவர்கள் இயற்றியுள்ளார்கள். இச்சதகம் காப்புச் செய்யு ளுடன் கூடிய நூறு பாடல்களைத் தன்னகத்தே கொண்டிலங்குகிறது. காலத்திற்கேற்ப மொழியும், அம்மொழியில் இடம்பெறும் இலக்கியங் களின் உள்ளடக்கமும் மாறிவரும் என்பதனை மெய்ப்பிக்கும் வகையில் கவிஞரின் சமுதாயப் பிணைப்பும் வேட்கையுமே இந்நூலின் உள்ளடக்க மாக அமைந்துள்ளன. இக்கருத்துக்களை சமுதாயத்தில் நிலை நிறுத்து வதையே இந்நூலின் மையமாகக் கொண்டிருப்பினும் கவிஞர் தான் வாழ்கின்ற சமுதாய அமைப்பில் உள்ள குறைபாடுகளையும் தனி மனித சஞ்சலங்களையும் இழித்துரைப்பதிலேயே பெரும் கவனம் செலுத்தி இருக்கின்றார் எனலாம் காரணம் ஒரு சமுதாயத்தில் நற் சிந்தனையும், நற்செய்கையும் நிலைநிறுத்தப்பட வேண்டுமானால் அச்சமுதாயத்தில் முதலில் தீய சிந்தனைகளையும், தீய செய்கைகளை யும் களைதல் வேண்டும். இக் கொள்கை ஆசிரியர் திலகத்தில் ஆழ் மனத்தில் நன்கு வேரூன்றி இருந்திருக்க வேண்டும். இத்தகைய தன் எண்ணத்தை செயல்படுத்தவே ஆசிரியர் திலகம் சதக இலக்கிய வகையை ஒரு கருவியாகப் பயன்படுத்தியிருக்கின்றார் எனலாம்.

## இறசூல் சதகத்தின் பாடுபொருளும் - கவிஞரின் வேட்கையும்

'ஒரு படைப்பாளனின் எண்ணங்களை, உணர்வுகளை அவன் வாழ்கின்ற சமுதாயமே ஆட்கொள்கின்றது' என்ற கூற்றினையே இறசூல் சதகம் மெய்ப்பித்திருக்கின்றது. அறக்கருத்துக்களை நிலை நிறுத்துதலையே இந்நூலுக்கு மையமாகவும் கவிஞர் கொண்டிருப்பினும் இந்நூலுக்கென்று தனித்த பொருட் சுருக்கமாக அறுதியிட்டு எதனை யும் கூறவியலாது. காரணம், இதனுடைய பாடுபொருள் பலவகைப் பட்ட சமுதாயச் சித்திரிப்பாகவுள்ளதேயாகும். ஒவ்வொரு பாடலும்

கவிஞரின் வேட்கைக்கும், சமுதாயப் பிணைப்புக்கும் ஏற்ப வெவ்வேறு பாடல் தலைப்பினைப் பெற்று அதற்கியைந்தவாறு கருத்துக்களையும் தன்னகத்தே கொண்டு விளங்குகின்றது. பாடல்களின் தலைப்புக்கள் அனைத்தும் அந்தந்தப் பாடல்களின் பாடுபொருள்களுக்கேற்ப பொருந்தி வந்திருப்பது கவிஞரின் சிறப்பினை உணர்த்தி நிற்கின்றது. காப்புச் செய்யுள் நீங்கலாக 99 பாடல் தலைப்புகளை இறசூல் சதகம் பெற்றிருப்பினும் ஒவ்வொரு பாடலும் நபிகள் நாயகம் (சல்) அவர்களை முன்னிறுத்தி,

> இறையருள் கொண்ட ஒரு மறைதனை கண்ட நபி
> ஏந்தலே யா றசூலே!

என்று இலக்கண மரபு தழுவிய ஈற்றடியைக் கொண்டு முடிவதாக வுள்ளது. மக்களிடத்துத் தாம் காணும் குறைபாடுகளைப் பொறுக்க முடியாத நிலையில் கவிஞர், சமுதாய வேட்கை உணர்வுடன் ஒவ் வொன்றையும் நபிகள் பெருமானாரிடம் எடுத்துரைத்து மன்றாடுவது போல் பாடல்களின் அமைப்பும் பாடுபொருள்களும் அமைந்துள்ளன. சமுதாய ஏற்றத்தாழ்வுகளைச் சித்திரித்தல், பெண்ணடிமையை எடுத்துக் காட்டுதல் போன்று பல்வேறு நிலைகளில் ஆசிரியர் திலகத் தின் சமுதாய வேட்கை பாரதி, பாரதிதாசனின் சமுதாய வேட்கைக்கு ஒப்பாகவுள்ளது.

## பாடுபொருளில் பகுப்பும் — சமுதாயச் சித்திரிப்பும்

நபிகள் பெருமானார் (சல்) பெயரையே நூலின் பெயராகப் பெற்றி ருப்பினும் இறசூல் சதகத்தில், இஸ்லாமிய மதக் கருத்துக்கள், ஒழுக் கங்கள் வழிமுறைகள் என்ற முறையில் குறிப்பிட்டுக் கூறக்கூடிய எண்ணிக்கையில் செய்திகள் காணப்படவில்லை என்பது குறிப்பிடத் தக்கதாகும். காணப்படும் கருத்துக்களில் பெரும்பாலான, மதத்திற்கு அப்பாற்பட்ட நிலையில் அனைத்துச் சமுதாயத்திலும் காணப்படும் நிலையே ஆகும். சமுதாயத்தில் புரையோடிக் கிடக்கும் உணர்வுகளும், பழக்க வழக்கங்களும், ஆங்காங்கே காணப்படும் சில நற்குணங்களும் நூல் முழுவதும் ஆக்கிரமித்திருக்கின்றன. சில பாடல்களில் தலைப்புக் களையே 'ஏன் வறுமை?' 'எது தர்மம்?' என்பது போன்ற வினாக் களாகச் சமுதாயத்தினரை நோக்கி எழுப்பி, அதற்குரிய விடையளிப்பது போன்று அந்தப் பாடலின் பாடுபொருளையும் ஆசிரியர் அமைத்திருக் கின்றார். இறசூல் சதகத்தில் பாடுபொருள்களை அவற்றின் உள்ள டக்கங்களைக் கருத்தில் கொண்டு கீழ்க்காணும் ஐந்து தலைப்புக்களுள் அடக்கிவிட முடியும்.

1. சமுதாய அமைப்பில் உள்ள குறைபாடுகளைச் சித்திரித்தல்
2. சமுதாய நடைமுறைகள்
3. அல்குர்ஆனின் பொருள் உணராத மக்களைச் சாடுதல்
4. காலத்தின் கோலத்தைச் சித்திரித்தல்
5. தனிமனிதக் குறைபாடுகளும்—ஆசிரியரின் தனித்த சிந்தனைகளும் இடம்பெறும் பாடல்கள்

## சமுதாய அமைப்பில் உள்ள குறைபாடுகளைச் சித்திரித்தல்

இறசூல் சதகத்தில் பெரும்பாலான பாடல்கள் இப்பிரிவில் அடங்கும். மக்களிடம் உள்ள பல தாழ்ந்த பிரிவு வேறுபாடுகளுக்கு சமுதாய அமைப்பினையே கவிஞர் காரணமாக்குகின்றார். யார் அந்த ஏழை? (பா : 13) என்ற பாடலின் தலைப்பினை வினாவாகவே சமுதாயத்தை நோக்கி எழுப்புகின்றார். இப்பாடலில்

காட்டிற் கிடந்த ஒரு கட்டையை மாற்றியொரு
கட்டிலாய்ச் செய்தவன் யார் ? ...
ஏட்டிலே காணாத புதுமைகள் தந்த இவ்
வேழையை யாரறிந்தார்?

என்று மனம் வெம்புகின்றார். இந்நிலையை அகற்ற முயல்வது போல் 'எது தர்மம்'? (பா : 62) என்ற பாடலில்

தள்ளாடு மக்களை எள்ளாது காத்திடல்
தனமுள்ளார்க் குற்ற தர்மம்
பஞ்சத்தில் வாடிடும் மக்களுக் கிரங்குதல்
பக்தருக் குற்ற தர்மம்

என்று கோடிட்டுக் காட்டுகின்றார். முதலாளித்துவ அமைப்பினை இனம் காட்டும்போது

தொழிலாளரைக் கொண்டு செல்வம் பெருக்குவோன்
துட்டிலே கண்ணை வைப்பான் (பா : 49)

என்று குறிப்பிடுகின்றார். சமுதாயத்தில் உள்ள ஏழை, பணக்காரன் என்ற வர்க்க வேறுபாட்டின் அடிப்படைக் காரணத்தை பாமரமக்களின் ஊழ்வினைப் பயனாகக் காட்டிவிட்டு, தாங்கள் மட்டுமே சுகபோக வாழ்வினை அனுபவித்து வருபவர்களுக்குக் கூறுவது போல்

உலகிலே வறுமையில் வாடுவ தவர்களின்
ஊழ்வினை பயனல்ல காண் (பா : 56)

என்று ஊழ்வினைப் பயனால் உலகை ஏமாற்றுபவர்களுக்கு எடுத்துக் காட்டுகின்றார். இந்நிலையில் ஆசிரியரின் இத்தகைய சமுதாய விழிப் புணர்ச்சி பாரதிதாசனின் உணர்வுக்கிணையாகவுள்ளது. பாரதிதாசன் தொழிலாளர் விண்ணப்பமாக சமுதாயத்திற்கு விடும் செய்தியில்,

காடு களைந்தோம் – நல்ல
கழனி திருத்தியும் உழவு புரிந்தும்
நாடுகள் செய்தோம் ...
செப்புதல் கேட்பீர் ! இந்தச்
செகத் தொழிலாளர் மிகப்பலர் ஆதலின் ...
இப்பொழுதே நீர் – பொது
இன்பம் விளைத்திட உங்களின் சொத்தை
ஒப்படைப்பீரே – எங்கள்

உடலில் இரத்தம் கொதிப்பேறு முன்பே
ஒப்படைப்பீரே

(பாரதிதாசன் கவிதைகள்: முதற்தொகுதி: பாடல்: 47)

என்பதாகவுள்ளது. எனினும் பாரதிதாசனின் குரல்போல், கடுமை யாகச் சமுதாயத்தைச் சாடி, ஏற்றத்தாழ்வற்ற சமுதாயத்தைக் காணும் வழிமுறைகளை இறசூல் சதகத்தில் ஆசிரியர் வகுத்துத்தரவில்லை என்பதும் உண்மையாகும். ஆசிரியர் அமைதியான முறையில் அறக் கருத்துக்களின் மூலமாக வேறுபாடற்ற நிலையைச் சமுதாயத்தில் நிலைநாட்டமுடியும் என்ற நம்பிக்கை கொண்டிருப்பதுபோல் உள்ளது. இதற்குக் காரணம் ஆசிரியரிடம் இருக்கும் இறை நம்பிக்கையாக இருக் கலாம். சமுதாயக் குறைபாடுகளை எல்லாம் வல்ல அல்லாஹ்விடம் நபிகள் பெருமானார் (சல்) அவர்களை முன்னிறுத்தி எடுத்துரைப்பதின் மூலமாகத் தம் மனக்குறைகள் நிறைவேறலாம் என்ற எண்ணமாகவும் இருக்கலாம்.

பெண்ணடிமையைக் கவிஞர் சுட்டுகின்றபோது,

பெற்றவரின் வார்த்தையை அன்றியொரு வார்த்தையும்
பேசாத வகையில் வைத்து (பா : 6)

பெண்ணுரிமையைத் தட்டிப் பறிக்கும் நிலையைக் காட்டிவிட்டு, தான் காண்கின்ற இலட்சியப் பெண்ணிற்குத் (பா: 8) தம் கவிதையில் உருவம் தந்திருக்கின்றார். அவள்,

ஆண்களைப் போலவள் வெளியிலே செல்வாள்
...தூண்களைப் போலவள் குடும்பமே
தாங்குவாள்
துலங்கிடும் கல்வி கற்பாள்
துன்பங்கள் வந்திடில் ஆணோடு சரிநின்று
தூக்குவாள் வீரவாளை

என்பதே கவிஞர் காணும் இல்ட்சியப் பெண்ணுருவமாகும்.

## சமுதாய நடைமுறைகள்

தம் வாழ்வில் நடைபெறும் அனைத்துக் காரியங்களுக்கும் காரணம் 'நம் தலைவிதி' என்று எண்ணித் தலைவிதியின் மீது பாரத்தை இறக்கி வைத்து விட்டு இளைப்பாறிக் கொண்டிருக்கும் சமுதாயத்தின் ஒரு பகுதியினரைப் பார்த்து,

சோம்பியிருந்து நாள் தேடிவருமே என்று
சொல்லுவோர்க் கெதுவு மில்லை (பா : 40)

என்று சாடுகின்றார். மக்களிடத்து இன்னது இருப்பின் இன்னது தானே வரும் என்பதை உணர்ந்த கவிஞர்,

அடி பூண்ட மனைவியும் அடிவாரி விடுவாளே
ஆண்பிள்ளை ரோசமற்றால்,
அகத்திலே உள்ளோரும் அன்பாகி விடுவரே
அவன்கையிற் பணமிருந்தால் (பா : 9)

என எடுத்துக் காட்டுகின்றார். மற்றும்

நடிகரைக் கும்பிடும் மக்களிடையே ஒரு
ஞானிக்கு வேலையில்லை (பா : 20)

என்று நடைமுறைகளை நம்முன்னே எடுத்து வைக்கின்றார். இவையுடன் சமுதாய நடைமுறைகளில் எவையெவை பாபங்கள் (பா : 2), தீமைக்கு அஞ்சாதவர்கள் யார்யார் (பா : 24) விளம்பர நாமங்கள் என்னென்ன (பா : 30) நடைமுறைகளில் உள்ள போட்டிகள் என்ன (பா : 17) எப்படி முயற்சி செய்வோருக்குச் செல்வம் தானே வந்து சேரும் (பா : 74) போன்ற இன்னபிற இயல்புகளையும் எடுத்துக் காட்டியுள்ளார்.

## அல்குர்ஆனின் பொருள் உணராத மக்களைச் சாடுதல்

திருமறையின் உண்மைப் பொருள் உணராது திருமறையின் பெயரால் தன்னைத் தானே ஏமாற்றித் திரியும் மக்களைப் பார்க்கும் கவிஞர் 'இவரா முஸ்லிம்?' (பா : 19) என்ற வினாவினை எழுப்பு கின்றார் :

> ஒருவனே இறைவனென் றோதுவார் நோய்வரின்
> ஒரு நூறு தெய்வங் காண்பார்...

என்கின்றார். இஸ்லாமிய மதத்தின் அடிப்படை நாதம் இறைவன் ஒருவனே, அவனுக்கு நிகர் வேறுயாருமில்லை என்பதாகும். இந் நிலையை உணராதவர்கள் தங்களுக்கு இன்னல் வருகின்ற நிலையில் இறை நம்பிக்கை இழந்தவர்கள்போல் வேறு பல நேற்றிக் கடன்களைச் செய்து கொண்டு சுற்றித் திரியும் போக்கினைக் கவிஞர் சாடுகின்றார். இத்தகைய மனநிலையில் சுற்றித் திரிபவர்கள் உண்மை முஸ்லிம் (பா : 39) ஆக வேண்டுமானால் அவர்கள் முதலில் ஏகத்துவத்திலே நம்பிக்கை கொண்டிருக்க வேண்டும் என்று இஸ்லாமிய மார்க்கத்தின் அடிப்படை நாதத்தினை வலியுறுத்திக் காட்டுகின்றார். மார்க்கத் திற்குப் புறம்பான மதுவருந்துதல் (பா : 65) வட்டி பெறுதல் (பா : 50) போன்ற செயல்களையும் சுட்டிச் சாடுகின்றார். இத்தகைய முறையில் மறையின் உண்மைப் பொருள் உணராத மக்களை,

> மன்னிக்க முடியாத தீமைகள் செய்கிறார்
> மறையையும் தள்ளிவிட்டார்
> மாநிலம் அவர் கையிற் சிக்கியே செந்நிற
> மறுமையும் பெற்ற தன்றே...
> இவர்களால் இவ்வுலகமோ சிறைக் கூடமானதே (பா : 5)

என்று தன் மனக் குமுறல்களைப் பாடலாக்கியிருக்கின்றார்.

## காலத்தின் கோலத்தைச் சித்திரித்தல்

சமுதாய மாற்றம் என்பது தவிர்க்க முடியாத ஒன்றாகும். ஆனால் இம்மாற்றத்தின் போக்கு நன்முறையில் அமைகின்றபோதே எந்த வொரு சமுதாயமும் தலை நிமிர்ந்து முன்னோக்கிச் செல்ல இயலும். இன்றைய அருவருக்கத்தக்க பல மாற்றங்களைத் தன் பாடலுக்குரிய உள்ளடக்கமாகக் கவிஞர் கொண்டிருப்பது தெரிகின்றது. இன்றைய போக்கின் கோலத்தினை 'இந்தக் காலம்' (பா : 18) என்னும் பாடலில்

> பாட்டியும் காதலைப் பேசிடும் காலமிது
> படமாளிகைகள் காலம்
> சொந்தம் கதைத்துச் சுரண்டிடுங் காலமிது
> சோரர்கள் மிக்க காலம்
> சுகபோக வாழ்க்கையைக் கும்பிடுங் காலமிது
> சூதுகள் மலிந்த காலம்

என்று குறிப்பிடுகின்றார். மக்களின் மனநிலை மாற்றத்திற்கேற்ப மதிப்பிழந்து நிற்கும் நிலையை 'எதற்கு ஈங்கே மதிப்பில்லை' (பா:20) என்ற தலைப்பில் குறிப்பிடுகின்றார். நாகரிக மோகத்தில் சிக்குண்டு திரியும் பெண்களை அநாகரிகப் பெண்களாகக் (பா:7) காட்டியிருக்கின்றார். பிரிவு மனப்பான்மை, உயர்வு, தாழ்வு எண்ண வேறுபாடுகள் இன்றைய மக்களிடம் மலிந்து காணப்படும் கோலமாகும் என்பதையும் காட்டியிருக்கின்றார்.

## தனிமனிதக் குறைபாடுகளும் ஆசிரியரின் தனித்த எண்ணங்களும்

சமுதாயத்தின் ஓர் அங்கமே தனிமனிதனாவான். ஒவ்வொரு தனி மனித எண்ணத்தின் செயலின் மொத்தவடிவமே அந்தச் சமுதாயத்தின் மொத்த வடிவமாகும். இத்தகைய முறையில், தனிமனிதக் குறைகளையும் பல பாடல்களில் ஆசிரியர்திலகம் சுட்டிக்காட்டத் தவறவில்லை.

பஞ்சத்திலே கொள்ளை லாபம் பெறல் பாபம்
பதுக்குதல் கொடிய பாபம் (பா:2)

என்று சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தித் தன் சுய நலத்தைச் சம்பாதித்துக் கொள்ளும் வியாபாரக் கும்பலை இனங்காட்டுகின்றார். இவர்களைப் போல தம்மைச் சேர்ந்தவரை 'ஏய்த்து நிற்போர்' போன்ற இன்ன பிறர்களைத் தீமைக்கு அஞ்சாதவர்களாகக் (பா:24) காட்டுகின்றார்.

வாழ்நாள் முழுவதும் வாய்ப்பேச்சாலேயே காலம் தாழ்த்தி, செயலில் ஈடுபடாத மனிதர்களை,

நாயினுங் கேவலம் இவர் வாழ்க்கை மண்ணில்
.. வாயினால் திட்டங்கள் போடுவார் ஆடுவார்
வழியெதென் றறிய மாட்டார் (பா: 11)

என்று சாடி இவர்களது இத்தன்மையே சமுதாயத்தின் முன்னேற்றத்திற்குத் தடையாக இருப்பதைப் பாடுபொருளாக்கி உள்ளார்.

தனி மனிதக் குறைகள் பல பாடல்களில் இடம்பெற்றிருப்பதுபோல் கவிஞரின் தனி மனிதச் சிந்தனைகள், எண்ணங்கள், தான் காண்கின்ற எதிர்காலச் சிந்தனைகள், எதிர்கால அமைப்புக்கள் போன்ற கருத்துக்களும் பல பாடல்களில் இடம்பெற்றுள்ளன. எந்த ஒரு படைப்பாளரும் தன் படைப்பிற்குச் சமுதாயத்தை மையமாகக் கொண்டாலும் சரி

அல்லது தனி மனிதப் பிரச்சனையை உள்ளடக்கமாக எடுத்துக் கொண்டாலும் சரி அங்கு தன்னை (படைப்பாளரை) இனங்காட்டு கின்ற விதத்தில் ஏதாவது ஒரு அம்சம் இருக்கத்தான் செய்யும். இந்த 'அடையாள அம்சம்' படைப்பாளன் சமூகத்தை காண்கின்ற தனிப் பார்வையாக இருக்கலாம். அல்லது கருத்து ரூபத்தில் மட்டுமின்றி நடையின் மூலமாகவும் தன்னை இனங்காட்டி விடலாம்.

இவ்வகையில் இறசூல் சதகத்தில் ஆசிரியர் அப்துல் காதர் லெப்பையவர்கள் தாய்மொழிப் பற்றினையும், இறைப் பற்றினையும் வெளிக்காட்டியிருக்கின்றார். தன் முன்னுரையில் குறிப்பிட்டிருப்பது போல் 'பழைய கலசம்' 'புதிய மது' (பக் : 8) என்பதற்கேற்ப பழைய கருத்துக்களைப் புதிய இலக்கிய வடிவத்திலும், புதிய கருத்துக்களைப் பழைய இலக்கிய வடிவத்திலும் சுட்டிக்காட்டும் போதே அது எளிதில் சமூகத்தில் நிலைத்து நிற்க வாய்ப்பு ஏற்படுகிறது. காரணம் முற்றிலும் புதுமையாக, அதாவது கருத்து ரூபத்திலும் (Content) இலக்கிய வகையிலும் (Genre) புதுமையாக இருப்பின் நடைமுறைச் சமுதாயத் தில் அவ்விலக்கியம் நிலைபெறப் பல ஆண்டுகளாகலாம். காரணம் புதுய மாற்றங்களை உடனடியாகச் சமுதாயம் ஏற்றுக்கொள்வதில்லை. எனவே பழமையும் புதுமையும் இரண்டறக் கலந்திருப்பதே எந்தவொரு படைப்பிற்கும் சாலச் சிறந்ததாகும். இவ்வெண்ணம் ஆசிரியர் திலகத்தின் நெஞ்சத்திலுல் ஊறியிருக்க வேண்டும். இதனை

புதுமை எது வென்பதைக் காட்டிடும் அளவுகோல்
பழமையை ஒழிப்பதல்ல (பா : 57)

என்ற அவரது கூற்று மெய்ப்பிக்கின்றது. இத்தகைய அவரது தனிப் போக்கின் காரணமாகவே சமுதாயக் கருத்துக்களையும், நடைமுறை களையும் எடுத்துரைக்க 'சதகம்' என்ற சிற்றிலக்கிய வகையை அப்துல்காதர் லெப்பை பயன்படுத்தியிருக்கின்றார் எனலாம்.

## இறசூல் சதகத்தின் மொழிநடை

இலக்கியச் சிறப்பின் குறிப்பிடத்தக்க அம்சம் ஆசிரியர் பயன் படுத்தும் நடையே ஆகும். படைப்பாளன் வாசகர்களுடன் இரண்டறக் கலப்பதற்கு உறுதுணை செய்வது அவன் எடுத்துக்கொண்ட கருத்தினை வெளிப்படுத்த அவன் கையாளும் நடையே எனலாம். ஒரு படைப் பாளியின் நடையை உருவாக்குவதில் பெரும் பங்கு பெறுபவை அவர் மேற்கொண்ட கருத்து, அக் கருத்தை அவர் பெறுவதற்குக் காரண மாகவிருந்த காலப் பின்னணி, அக்கருத்திற்கு அவர் தந்த வடிவம் ஆகிய மூன்றுமே ஆகும். இவ்வகையில் ஆசிரியரின் கருத்துக்களை

பரிபூரணமாக ஆக்கிரமித்துக் கொண்டிருப்பவை சமுதாயத்தின் நிகழ்வுகளும், இஸ்லாம் வழி இறைநாட்டமும் ஆகும். இக்கருத்துப் பெறுதற்குரிய காலப் பின்னணி தற்காலமாகும். இதற்கு இவர் தந்திருக்கும் வடிவம் சதக இலக்கியத்தில் கையாண்டிருக்கும் ஆசிரிய விருத்தமாகும். இவரது நடை, படித்தவர்கள் மட்டுமின்றிப் போதிய கல்வியறிவு இல்லாத பாமர மக்களும் எளிதில் புரிந்து, படைப்புடன் இரண்டறக் கலக்கும்படி இருக்கின்றது. தம் கருத்துக்களுக்கு உருவம் தருகின்றபோது அந்தந்த நிகழ்வுகளில் இடம் பெறும் சொற்களையே கையாண்டிருக்கும் முறை படைப்பிற்கு எளிமையளித்துள்ளது. இவ்வெளிமைக்கு மற்றொரு காரணம், ஆசிரியர் கருத்துக்களை எடுத்துரைக்கும்போது மிகுதியான உவமைகளைக் கையாளுகின்ற தன்மையே ஆகும். சான்றாக விலைமாதர் வலையிலே சிக்கிய மனிதனைக் குறிப்பிடும்போது 'வேடன் கைப்பட்ட மான்' (பா : 27) என்கிறார். கொடுங்கோலர் கையில் சிக்கிய நாடு 'கொலைகாரர் கையில் சிக்கிய எதிரிக்கு ஒப்பானது' என்கிறார். இவ்வாறு கருத்துக்களை உவமையின் வாயிலாகத் தருகின்றபோது கருத்துக்களின் கனபரிமாணங்கள் சிறக்கின்றன. இவரது நடையில் குறிப்பிடத்தக்க மற்றோர் அம்சம், தான் சொல்லக் கருதுகின்ற பெரும்பாலான செய்திகளை வினாவாக்கி, அதற்கு விடையளிப்பது போல் தம் படைப்பினை விளக்கும் போக்காகும். இவர் ஆசிரியராக இருக்கும் காரணத்தினாலோ என்னவோ 'வினாவிடை' என்ற அமைப்பு, கருத்துப் பரிமாற்றத்திற்குப் பெருமளவில் துணை செய்கின்றது. பல இடங்களில் பாரதி, பாரதிதாசனின் சாயலும் நடையின் போக்கில் தென்படுகின்றது.

ஆசிரியர் திலகத்தின் 'இறசூல் சதக'த்திற்கு தமிழிலக்கிய வரலாற்றில் குறிப்பாக 'இஸ்லாமிய தமிழிலக்கிய வரலாற்றில்' நிச்சயமாகக் குறிப்பிடத்தக்க இடம் உண்டு எனக்கூறின் அது மிகையாகாது.

# திருப்புகழ்

## மக்கள் வழக்குப் பிரபந்தங்கள் :

இலக்கியம் சுவையுடைத்தாயின் அவ்விலக்கியம் மக்களால் பெரிதும் விரும்பப்படும். அங்ஙனம் சுவை மிக்க இலக்கியம் இசையோடு பாடுவதற்கென அமையப்பெறின் மக்கள் அதனை அதிகமாக விரும்புவர். பண்ணமைதி பெற்று அந்த இலக்கியம் இயற்றப்பட்டிருப்பின் அவ்விலக்கியத்தில் மக்கள் பெரிதும் ஈடுபாடு உடையவராய் இருப்பர். இங்ஙனம் இசையோடு பாடக்கூடிய பண்ணமைதி பெற்ற பாடலகளைக் கொண்ட சிற்றிலக்கியங்களே மக்கள் வழக்குப் பிரபந்தங்கள் எனச் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

அத்தகைய மக்கள் வழக்குப் பிரபந்தங்களுள் முதன்மையானதாகக் கணிக்கப்படுவது திருப்புகழ் என்னும் சிற்றிலக்கிய வகையாகும். புகழ்ந்து பாடப்படுவது புகழ் எனப்பெயர் பெற்றது. தெய்வத்தன்மையுடைய அல்லது புனிதமான ஒன்றினைப் புகழ்ந்து பாடப்படும் பொழுது அந்தப் புகழ் அடைமொழி பெற்றுத் திருப்புகழ் எனப் பேசப்படுகிறது. இறைவனை அல்லது இறைவனின் தூதரென நபிகளாரை அல்லது இறைநேசச் செல்வர்களைப் புகழ்ந்து பாடும் புகழ்ச்சிப் பாடல்கள் எப்பொழுதும் திருப்புகழ் என்றே அழைக்கப்படும்; எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே 'அல்ஹம்து லில்லாஹ்' என்கிறது இறைமறை அல்குர்ஆன். அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ் பெயரால் ஆரம்பிக்கும் அல்குர்ஆன் முதல் வாக்கியம் 'அல்ஹம்து லில்லாஹ்' என்றே தொடங்குகிறது. அல்லாஹ்வைப் புகழ்வதை முஸ்லிம் மக்கள் ஒரு மரபாகக் கொண்டு பின்பற்றி வருகின்றனர். உணவு உண்ட பின்னும் எதிர்பார்த்த காரியங்கள் நிறைவேறிய பின்னும் முஸ்லிம் மக்கள் அல்ஹம்து லில்லாஹ் என்றே கூறுவது வழக்கமாகும். வெள்ளிக்கிழமை நண்பகல் நடைபெறும் கூட்டுத் தொழுகையின் பிரசங்க போதனையும் அல்ஹம்துலில்லாஹ் என்றே தொடங்குகிறது. இங்ஙனம் பார்க்கும் பொழுது முஸ்லிம் மக்கள் தமது வாழ்க்கையில் அல்லாஹ்வைப் புகழ்வதற்கு முதலிடம் அளித்திருப்பதைக் காணக்கூடியதாக இருக்கின்றது. இங்ஙனம் புகழ்வதற்கும் முஸ்லிம் மக்களுக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பது புலனாகின்றது. அல்லாஹ்வைப் புகழ்வதோடு அமையாது அல்லாஹ்வின் திருத்தூதர்களையும் முஸ்லிம் மக்கள் போற்றுவர். இறைநேசச் செல்வர்களைக் கண்ணியப்படுத்துவர். புகழ்ந்து போற்றிக் கண்ணியப்படுத்தும் வகையில் தோத்திரப் பாக்கள் பாடி மகிழ்வர்.

தித்திக்கும் திருப்புகழ் 15ஆம் நூற்றாண்டில் படைக்கப்பட்டது. அதனைப் படைத்தவர் அருணகிரிநாதர். அது முருகக் கடவுளைப் போற்றிப் பாடப்பட்டது. அருணகிரிநாதரின் திருப்புகழில் 1300 திருப்பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இத் திருப்பாடல்கள் 1008 வெவ்வேறு சந்தங்களில் பாடப்பட்டுள்ளன. அங்கே இடம்பெற்ற ஓசை நயமும் அவ்வோசை நயத்துக்கு ஏற்றாற் போன்ற பண்ணமைதியும் அறிஞர்களைப் போலவே பாமர மக்களையும் கவரக் கூடியனவாக உள்ளன. அதன் காரணமாக அனைவரும் அதனைப் பயிலத் தலைப்பட்டனர்.

இங்ஙனம் அனைவரையும் கவரக்கூடிய திருப்புகழ் பாடல் ஒன்று எமக்கு இல்லையே என்று முஸ்லிம் மக்கள் சிந்திக்கலாயினர். இந்த இடைவெளியை நிரப்பி முஸ்லிம்களும் தமதென உரிமை பாராட்டக் கூடிய ஒரு திருப்புகழ்ப் பாடலை இயற்ற முன் வந்தார் வரகவி காசிம் புலவர். அதனை இயற்றியதில் வெற்றியும் கண்டார். சுவைக்கச் சுவைக்கத் தெவிட்டாது தித்திக்கும் திருப்புகழாக அது அமைந்துள்ளது அங்கே தமிழ் மரபுக் கியைய முகம்மது நபி (சல்) அவர்கள் புகழப் பட்டுள்ளார்கள், போற்றப்பட்டுள்ளார்கள். தமிழ் இலக்கியப் பரப்பிலே திருப்புகழ் எனக் குறிப்பிடும் பொழுது அது அருணகிரிநாதரின் திருப்புகழ்ப் பாடலையே சுட்டுகிறது. அதேபோன்று முஸ்லிம் களிடையே திருப்புகழ் எனப்படும் பொழுது அது வரகவி காசிம் புலவரின் திருப்புகழையே உணர்த்துகிறது.

காசிம் புலவரின் திருப்புகழிலே 141 பாடல்களே இடம் பெற்றுள்ளன. ஒவ்வொரு பாடலிலும் நபிகள் நாயகம் (சல்) அவர்கள் புகழப்படும் அதே சமயம் ஆசிரியர் தமது பாவச் செயல்களைக் கூறி அவற்றிலிருந்து தம்மைப் பாதுகாக்குமாறு கேட்டுள்ளார். உண்மையிலே உலகத்தவர் புரியும் பாவச் செயல்களைத் தமதாகக் கொண்டு ஆசிரியர் இங்ஙனம் பாடி உள்ளார்.

நபிகள் நாயகம் (சல்) அவர்கள் பேரில் பாடப்பட்ட மற்றொரு திருப்புகழ் அப்துல் காதிறு புலவரால் இயற்றப்பட்டுள்ளது. அதன் பெயர் 'சந்தத் திருப்புகழ்' என்பதாகும். பல்வேறு சந்தங்களில் பாடக் கூடியதாக அந்தத் திருப்புகழ் அமைந்துள்ளது. ஆசிரியர் தம்மை திருப்பத்தூரைச் சேர்ந்தவர் என்று குறிப்பிட்ட போதிலும் அவர் இலங்கையிலிருந்து கொண்டே இச்சந்தத் திருப்புகழை இயற்றியுள்ளார். நூறு பாடல்களைக் கொண்டுள்ளது இந்தச் சந்தத் திருப்புகழ்.

யாழ்ப்பாணத்து சு. அசனா லெவ்வை அவர்கள் பாடியது நவரத்தினத்திருப்புகழ். இதுவும் நபிகள் நாயகம் (சல்) அவர்கள் பேரில்

பாடப்பட்டது. ஞானத் திருப்புகழ் என்பது மற்றொரு திருப்புகழ் நூல். கோட்டாறு ஞானியார் சாகிபு அவர்களால் பாடப்பட்டது. காயல் பட்டினம் கண்ணகுமது மகுதூ முகம்மதுப் புலவர் சுத்தக் கனித் திருப் புகழ் என முகியத்தீன் ஆண்டகை பேரில் ஒரு திருப்புகழ் இயற்றி உள்ளார். முகியித்தீன் ஆண்டகை அவர்கள் பேரில் இரண்டு திருப் புகழ் பாடல்கள் இயற்றப் பெற்றுள்ளன. ஒன்று ஜெகவீரராமமங்கலம் உமறு அசனயினா கலிபா சாகிப் புலவர் அவர்களால் இயற்றப் பெற்றது. மற்றது திருநெல்வேலி மேலப்பாளையம் சையது முகியத்தீன் கவிராஜர் அவர்களால் பாடப்பட்து. சீறாப் புராணத்தில் இடம் பெற்றுள்ள பாடல் ஒழுங்கு முறையை அடிப்படையாக வைத்து சீறாப் புராணத் திருப்புகழ் பாடி உள்ளனர், சித்திரக்கவி பி. வி. அப்துல் கபூர் புலவர் அவர்கள். திருச்சி ஆ. கா. பிச்சை இப்றாஹிம் புலவர் அவர்கள் ஆதமலைத் திருப்புகழ் என்று ஒன்று பாடியுள்ளார். காசிம் புலவரின் மரபினரான காயல்பட்டினம் செய்யது முகம்மது அப்துல் ரஹ்மான் புலவர் மனோரஞ்சிதத் திருப்புகழ் என ஒரு நூலை இயற்றித் தந்துள்ளார். திருப்புகழ் பாமாலிகை என்பது மு. ஆ. சுல்தான் மரைக்காயரால் பாடப்பட்டது என்பது அறியக்கிடக்கின்றது. கவிஞர் மதனீ அவர்களால் இயற்றப்பட்டது திருக்குர்ஆன் திருப்புக ழாகும். இங்ஙனம் பெரியதும் சிறியதுமாகப் பல திருப்புகழ்ப் பாடல்கள் இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்தை அணி செய்து நிற்கின்றது.

கட்டுப்பாடு அதிகம் கொண்டுள்ளது திருப்புகழ்ச் சிற்றிலக்கியம். எல்லா அடிகளும் ஒரே விதமான சந்தக் குழிப்புகள் இடம் பெறல் வேண்டும். ஒவ்வோர் அடியிலும் அமைய வேண்டிய வண்ணமும் அத்தகையதே. திருப்புகழ் பாடுவதற்கு ஆழ்ந்த இசை அறிவு அவசியம். நுண்மையான தாளத் திறமை தேவை. திருப்புகழ் பாடுவோர் பரந்த சொல்லாட்சியைப் பெற்றிருத்தல் வேண்டும். அருணகிரிநாதர் பாடி யுள்ளவாறே காசிம் புலவரும் தமது திருப்புகழ் பாடல்களில் முற் பகுதியில் சிற்றின்பத்தையும் பிற்பகுதியில் பேரின்பத்தையும் சுட்டிப் பாடியுள்ளார். திருப்புகழ் பாடல் ஒவ்வொன்றின் இறுதியிலும் தொங்கல் என ஒவ்வொரு திருப்புகழ்பாடல் தனிச் சொல் வரும். அருண கிரிநாதரின் திருப்புகழில் அந்தத் தனிச் சொல் பெருமானே என முடி கிறது. ஆனால் காசிம் புலவரின் பாடலின் இறுதியில் வரும் தொங்கல் என்னும் தனிச் சொல் இறசூலே என நபிகள் நாயகம் (சல்) அவர்களை விளிப்பதாக அமையும்.

அருள்வாக்கி அப்துல் காதிறுப் புலவரும் தமது திருப்புகழ்ப் பாடலின் இறுதியில் 'இறசூலே' என்ற தனிச் சொல்லைத் தொங்கலாக

அமைத்துள்ளார். சீறாப் புராணத் திருப்புகழிலும் இறசூலே என்பது அங்ஙனமே இடம் பெற்றுள்ளது. முகியித்தீன் ஆண்டவர்களைப் பாடும் திருப்புகழ் பாடல்களில் முகியத்தீனே என்னும் தனிச் சொல் தொங்கலாக அமைகின்றது. கோட்டாறு ஞானியார் சாகிபு அவர் களின் ஞானத் திருப்புகழில் றஹ்மானே என்னும் தனிச் சொல் தொங்கலாக அமைந்துள்ளது.

தொல்காப்பியத்தில் குறிப்பிடப்பட்டுள்ள வண்ணங்களுள் காசிம் புலவர் தமது திருப்புகழில், வல்லிசை வண்ணமும் மெல்லிசை வண்ண மும் இயைபு வண்ணமும் நெடுஞ் சீர் வண்ணமும் குறுஞ்சீர் வண்ணமும் அமையப் பெற்றிருப்பதைக் காணலாம். முதலாம் இரண்டாம் ஏழாம் பாடல்கள் 'தன்ன தனதன தனதன தனதான' என்னும் சந்தக் குழிப்பு அமைய வந்துள்ளன. எண்பத்தொன்பதாம் பாடலும் நூற்றிருபத்தி ரெண்டாம் பாடலும் 'தனன தந்தன தந்த தானன தனதான' என்னும் சந்தக் குழிப்பைப் பெற்றிருக்கின்றன. ஏனைய 139 பாடல்களும் வெவ்வேறான தனித் தனிச் சந்தக் குழிப்புக்கள் அமையப் பாடப் பெற்றுள்ளமையைக் காணலாம்.

காசிம் புலவர் வல்லின வண்ணம் அமையப் பாடி உள்ள ஒரு பாடலை எடுத்துக் கொள்வோம். அதன் சந்தக் குழிப்பு தத்தத்தத் தத்தத் தத்தத் தனதான என அமைந்துள்ளது. அதன் முதலடி

இவ்வாறு அமைந்துள்ளது.

கொத்துக்கட் பச்சைப் பிச்சித்
தட்டப்புட் பத்திற் றத்தக்
குப்பிப் பொற் குச்சுக் கற்றைக் குழல்தாவி
கொப்பொட்டித் தொட்டுச் சற்றுக்
கைக்கொப்புப் பெற்றப் புக்கட்
கொச்சைச் சொற் பச்சைத் தத்தைப் பொதுமாதர்

விலைமாதரின் தன்மையை வருணிக்கவே ஆசிரியர் மேற்காட்டிய முத லடியைப் பயன்படுத்தி உள்ளார் என்பது புலனாகின்றது. முழுப் பாடலும் வருமாறு :

தத்தத்தத் தத்தத் தத்தத்
தத்தத்தத் தத்தத் தத்தத்
தத்தத்தத் தத்தத் தத்தத் - தனதான

கொத்துக்கட் பச்சைப் பிச்சித்
தட்பப்புட் பத்திற் றத்தக்
குப்பிப்பொற் குச்சுக் கற்றைக் குழல்தாவிக்
கொப்பொட்டித் தொட்டுச் சற்றுக்
கைக்கொப்புப் பெற்றப் புக்கட்
கொச்சைச்சொற் பச்சை தத்தைப் பொதுமாத
ரெத்துப்பொய்க் கட்டெட் டெட்டுத்
துத்துக்குட் சிக்கிப் பித்துற்
றெட்டிக்குட் கற்பைக் கைத்திட் டவர்காமத்
தெச்சிற்பட் டைக்கிச் சித்துக்
கட்டிப்பொற் சொற்கத் தைத்தொட்
டெய்த்தெட்டுச் சிட்டிற் பட்டுச் சுழல்வேனோ
புத்தைச்சிட் சித்துச் சுத்தக்
கத்தர்ச்சித் தர்ச்சிக் கப்பெட்
புற்புத்திச் சொற்சொற் கற்பித் தருள்வோரே
புக்கிக்கர் சித்துற் கத்திற்
றுத்திப்பைச் சற்பத் தைக்கைப்
புத்துக்கட் கத்திற் செற்றுக் கறைவோரே
பத்தெட்டுப் பத்தர்க் கொற்றைக்
கைப்பிட்டத் திற்சுட் டத்தைப்
பற்றித்துய்த் துய்ப்பப் பைக்கிட் டருள்வோரே
பத்திப்பொற் பெட்டுக் கற்பச்
சித்திப்பட் டத்தைக் கட்டிப்
பட்சத்திற் சொற்கத் திற்புக் கிறசூலே

அருணகிரிநாதர் தமது திருப்புகழில் பல பாடல்களில் வல்லிசை வண்ணத்தை அமைத்துப் பாடி உள்ளார். ஒரு பாடலின் சந்தக் குழிப்பு தத்தத்தத் தத்தத் தத்தன தனதான என அமைந்துள்ளது. அந்தப் பாடலின் முதலாம் அடி இவ்வாறு உள்ளது.

முத்துக்குச் சிட்டுக் குப்பிமு
டித்தச்சுக் கைப்பிற் சுற்றியு
முற்பக்கத் திற்பொற் புற்றிட நுதல்மீதே
முக்யப்பச் சைப்பொட் டிட்டணி
ரத்நச்சுட் டிப்பொற் பட்டினை
முச்சட்டைச் சித்ரக் கட்டழ கெழிலாட

காசிம் புலவரின் திருப்புகழில் மெல்லிசை வண்ணம் அமையும் பாடலில் சந்தக் குழிப்பு தந்தந்தந் தந்தந் தந்தன -தனதான என வரும், இச்சந்தக் குழிப்பை பெற்ற பாடலின் முதலடி இவ்வாறு அமைந்துள்ளது,

அஞ்செஞ்செங் கஞ்சம் பிஞ்சடி
நஞ்சும்பிஞ் செஞ்சும் தும்பியு
மம்புஞ்சிந் துக்கிஞ் சஞ்சன விழிவேலு
மந்தந்தங் கும்பம் பம்பர
மும்பந்துங் குன்றுக் குன்றிவை
யர்ஞ்செஞ்சும் புஞ்சங் கொங்கையு மிளைஞோர்கள்
கொஞ்சுந்தென் பண்கண் டுஞ்சொலும்
விம்பம்பம் பண்பின் சஞ்சிவி
கொங்குண்டொண் டுஞ்சுங் கிஞ்சுக மலர்வாயுங்
கொண்டங்கந் தங்கஞ் சண்பக
மென்றும்பண் பொன்றும் பெண்சிறு
கொம்பென்றன் கண்கண் டிங்கித முறுவேனோ
வஞ்சம்புன் கண்கண் டம்பவம்
வெம்பும்புன் சிண்டுங் கொண்டிய
வம்புந்துன் பென்பங் கொண்டற வொருநாளே
வந்தின்பந் தந்திங் குய்ந்திட
வென்றுன்றன் றெண்டஞ் செய்பவ
வம்பின்றுஞ் றஞ்சஞ் செஞ்சர ணருள்வாயே
விஞ்சுஞ்சஞ் சந்தங் குங்கும
முங்குந்தண் பொங்குந் திங்களின்
விண்பந்தங் குந்தென் சுந்தர வரமாதர்
வெண்பொன்செம் பைம்பொன் பந்திசெய்
குன்றெங்குந் துன்றுஞ்சம்ப்ரம
விண்சொந்தம் பந்தங்கொண்டரு ளிறைகூலே

அருணகிரிநாதரின் திருப்புகழில் இடம் பெற்றுள்ள மெல்லிசை வண்ணத்துக்கு எடுத்துக் காட்டாக ஒரு பாடலின் முதலடியை இங்ஙனம் குறிப்பிடலாம்.

சந்த னந்திமிர்ந்த ணைந்து குங்கு மங்கடம்பி லங்கு
சண்ப கஞ்செ றிந்தி லங்கு திரடோருந்
தண்டையஞ்சி லம்பலம்ப டுவண்டை யஞ்ச லஞ்சலென்று
சஞ்சிதஞ்ச தங்கை கொஞ்ச மயிலேறி

இந்தப் பாடலில் தந்த தந்த தந்த தந்த தந்த தந்த தந்த தந்த தனதான என்னும் சந்தக் குழிப்பு வந்துள்ளமையைக் காணலாம்.

இயைபு வண்ணத் திருப்புகழ்ச் செய்யுளில் சந்தக் குழிப்பு தனதன தனன தனதன தனன தனதன தனன — தனதான என அமையும். காசிம் புலவரின் திருப்புகழ்ப் பாடல் ஒன்றிலும் அருணகிரி நாதர்

திருப்புகழ்ப் பாடல் ஒன்றிலும் இதே சந்தக் குழிப்பைப் பெற்ற இயைபு வண்ணம் ஒரே விதத்தில் அமைந்திருப்பதைக் காணலாம். காசிம் புலவரின் அந்தப் பாடலின் முதலடி இங்ஙனம் அமைந்துள்ளது:

தனதன தனன தனதன தனன
தனதன தனன - தனதான

மழலையி னிசைய சிறையளி முரல
மதுவுமிழ் சலச மணிமார்பா
மலர்திரி புவன மொருநொடி யளவின்
மனு நிலை புரியு மிறைதூதே
யெழுபது துகிலு மொருபகல் புனையு
மெழிலர மகளிர் மணவாளா
வெளியரி லெளிய பயல்வழி யடிமை
யெனைமன நெகிழ விடலாமோ
வொழுகொளி நிலவ சிபரியி லொருவ
னொகிகொடு வரவுண் மகிழ்நேயா
வொலியெழு கடலி னெழுகதி ரிரவி
யொளிகெட வொளிரு மழகேசா
வழகிய பசிய மரகத கலப
வணிமயில் வடிவ முறுகோவே
யமரர்வி ணுலகு மகிலம ணுலக
மரசுசெய் கருணை யிறசூலே.

அருணகிரிநாதரின் பாடலில் முதலடி இவ்வாறு வந்துள்ளது.

எழுதிகழ் புவன நொடியள வதனி
லியல்பெற மயிலில் வருவோனே
இமையவர் பரவி யடிதொழு அவுணர்
மடிவுற விடுவ தொருவேனா.
வழுதியர் தமிழி னொருபொரு ளதனை
வழிபட மொழியு முருகேசா
மலரடி பணியு மடமகள் பசலை
மயல்கொடு தளர்வ தழகோதான்
முழுகிய புனலி லினமணி தரள
முறுகிடு பவள மிகவாரி
முறையொடு குறவர் மடமக்ள் சொரியு
முதுமலை யழக குருநாதா
பழகிய வினைகள் பொடிபட அருளில்
படிபவ ரிதய முறுகோலே
பருவரை துணிய வொருகணை தெரிவ
பலமலை யுடைய பெருமானே.

நீண்ட சீர்களைக் கொண்டு வருவது நெடுஞ்சீர் வண்ணம். இந்த நெடுஞ்சீர் வண்ணத்தின் சந்தக் குழிப்பு காசிம் புலவர் திருப்புகழில் இவ்வாறு வந்துள்ளது. தானத் தானத் தானத் தானத் தானத்-தனதான. இந்தச் சந்தக் குழிப்பு இடம் பெற்றுள்ள காசிம் புலவரின் சந்தத் திருப்புகழின் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது :

பாலைத் தேனைப் பாகைப் போலொப்
பார்சொற் பாடற் றமிழ்மாலை
பாவிற் சீரிற் போதித் தாசிற்
பாடிப் பாடிப் புவிமீதே
காலபொத் தோடித் தேயத் தேடிக்
காசற் றூன்ற் றறநீசர்
கால்பற்றா தெக் காலத் தேநிற்
கால்பொற் றாமப் பெறுவேனோ
சாலத் தான்மிக் கோர்தற் கோலத்
தாகப் பாவித் திபுலீசோர்
தாலத் தோரைச் சாரத் தானொட்
டாமற் சாபித் திடுகோவே
யாலைக் கார்செக் காடச் சோலை
காலித் தாடச் சிறுதோகை
யாவிச் சேல்செய்க் காட்சிச் சீர்மக்
காவித் தாரத் திறசூலே

அருணகிரிநாதரின் திருப்புகழில் இடம் பெற்றுள்ள நெடுஞ்சீர் வண்ணச் சந்தக் குழிப்பும் தானத் தானத் தானத் தானத் தானத் -தனதான என்று அமைந்துள்ளது. அந்தச் செய்யுள் வருமாறு :

ஆகத் தேதப் பாமற் சேரிக்
கார்கைத் தேறற் கணையாலே
ஆலப் பாலைப் போலக் கோலத்
தாயக் காயப் பிறையாலே
போகத் தேகற் றேதற் பாயற்
பூவிற் றீயிற் கருகாதே
போதக் காதற் போகத் தாளைப்
பூரித் தாரப் புணராயே
தோகைக் கேயுற் றேறித் தோயச்
சூர்கெட் டோடப் பொரும் வேலா
கோதிக் காலைப் போதகக் கூவத்
தூவற் சேவற் கொடியோனே

யாகத் தோசாற் பாகத் தாளைப்
பாரித் தாறறற் குமரேசா
பாரிற் காமத் தூரிற் சீலப்
பாவத் தேவப் பெருமானே

குற்றொலிகளைக் கொண்டதாய் குறுஞ்சீர்களை உடைத்தாய் அமையும் குறுஞ்சீர் வண்ணம் அமைந்த திருப்புகழ்ப் பாடல் குறுகிய ஓசையைக் கொண்ட உயிர்மெய் எழுத்துக்களையே கொண்டதாயிருக்கும். இங்கு நெட்டெழுத்து வராது. இத்தகைய குறுஞ்சீர் வண்ணத்தின் சந்தக் குழிப்பு தனனதன தனனதன தந்தத் தனத்ததன - தனதான என வரும். இந்தச் சந்தக் குழிப்புடைய காசிம் புலவரின் திருப்புகழ் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

தனனதன தனனதன தந்தத் தனத்ததன
தனனதன தனனதன கந்தத் தனத்ததன
தனனதன தனனதன தத்தத் தனத்ததன — தனதான

எவரைமடி தடவிமுத றண்டிப் பறிப்பதினி
யெவரையிடை வழியின்மிக நம்பிச் சதிப்பதினி
யெவ்ரையினி துயிர்பிரிய நஞ்சைக் கலப்பதினி நடுவூர்போ
யெவரைவளர் துயிலினிதி வஞ்சித் தெடுப்பதினி
யெவரையுறு படிறுசொலி யண்டிப் பிழைப்பதினி
யெவரையின முறையெனவி ணங்கிக்கெடுப்பதினி யெனநாடி
யவனிதனி லிரவுபக லிந்தப் பலத்தொழிலி
னொழுகுமன நிலையுமொரு வஞ்சப் புலைக்கயவ
னவகுணமு மலமுமற நிந்தித் துமக்குரிய வடியோர்க
ளவர்செயலு மியலுமுய லுந்தத் துவத்தினொடு
பொறையறிவு நிறையுறுதி யும் பெற் றிருக்கவில்லை
யடிமைதனை யடியிணையி லன்புற் றிரக்கமுட ளருள்வீரே
களமெ ழுந்திசை கொம்பு தூரிய
முருடு டுண்டுடு டுண்டு டுடுடு
தனன தந்தன வென்று மோசுர மடர்தாளந்
தகுணி துந்துமி திந்தி தோதிமி
டிகுகு டிங்குகு டிங்கு பேரிகை
தமர கிண்கினி கிண்கி ணாரமு மிகுமோதை

மற்றொரு திருப்புகழ் பாடலில்

சித்தித்தடர் துட்டர் குபிரரை
வெட்டிச்சிறை யிட்டுப் புவிமக

டிக்கத்துநெ ளிக்கத் தகுதகு திருதாதோ
தித்தித்திமி தித்தித் திமிதிமி
தொக்குத்தொகு தொக்குத் தொகுதொகு
திக்குத்திகு திக்குத் திகுதிகு வெனவாடி

எனச் சொற்கட்டு அமைந்துள்ளது. இன்னும் பல பாடல்களில் காசிம் புலவர் சொற்கட்டுகளை அமைத்துப்பாடி உள்ளார், மற்றொரு பாடலில் ரரரரர ரிரிரிரிரிரி என்னும் சுரத்தினையும் காசிம் புலவர் அமைத்துப்பாடி உள்ளர். அந்தப் பாடலின் பகுதி இவ்வாறு அமைந் துள்ளது:

முழவுமுதிர் பதலைதுடி வங்கியம் பொங்கியெழ
ரரரரர ரிரிரிரிரிரி யென்றென்று டுங்கைசதிர்
முறையினொடு கணிகையர் பதம் பெயர்ந்ததும்பரத விதமாட

அருணகிரி நாதரும் தமது திருப்புகழில் சொற்கட்டுகளை இவ்வாறு பயன்படுத்தி உள்ளார் என்பதும் ஈண்டு நோக்கற் பாலதாம்.

திமிதோதிமி திமிதோதிமி தாங்கண தீங்கணதொந்
தகுதோதகு தகுதோதகு டாங்குட தீங்கட தொந்
திகு டோடிமி டிமிடோடி டாங்குட தீந்தகமைன் றியல்பேரி

அருணகிரி நாதரின் மற்றொரு பாடலில்

குகுகுக் குகுக் குகுகுகு குகுவென
திமிதித் தீதித் திமிதியென் முரசொடு
குமுமிச் சீறிச்சமர்செயு மசுரர்கள் களமீதே

எனச் சொற்கட்டினைப் பயன்படுத்தி உள்ளார்.

காசிம் புலவர் தமது திருப்புகழில் மேற்கொண்டுள்ள சொல்லாட்சி கற்றோரைப் பிரமிக்கச் செய்யும் தன்மையது. தத்த தனதன தனதன தனதன - தனதான என்னும் சந்தக் குழிப்பில் வரும் காசிம் புலவரின் திருப்புகழ்ப் பாடல் ஒன்றை இதற்கு எடுத்துக்காட்டாகச் சுட்டலாம்.

தத்த தனதன தனதன தனதன
தத்த தனதன தனதன தனதன
தத்த தனதன தனதன தனதன - தனதான
கைக்கு ளெழுதிய மடலிகள் நடலிகள்
புட்ப மலர்புனை குழலிகள் விழலிகள்
கற்பி னிலைதரி யசடிகள் கசடிகள் பலகுது

கற்கு மவகுண முகடிகள் விகடிகள்
பற்கள் கடிபடு முதடிகள் பதடிகள்
சைச்ச ரசமொடு கருவிகள் மருவிக ளிளைஞோர்பால்
மிக்க பொருள்கவர் தொழிலிக ளெழிலிகள்
நித்த மலரடி வருடிகள் திருடிகள்
மெச்சு கலவியின் விரகிகள் துரகிக ளுறவாலே
மெத்த மயல்கொளும் வெறியனை வறியனை
நட்பி னொடுமன விருள்கெட வருளொடு
வெற்றி மலரடி யிருமையி னொருமையி னருள்வீரே
முக்ய வுயிர்தெரி லெவுகொடு கலமென
ரத்னமணியொளி ரறுசொடு குறுசென
மொய்த்த கதிரிள வெயிலென நிலவென நெடுவானோர்
முத்தி தருமெழு சுவனவி னுலகென
நெய்த்த முகிலென வுயர்குல வரையென
முத்து திரையென வகிலபு வனமென நபிமார்கள்
மக்களெனவரு பொருளுயர் திணையென
நிற்கு முயிருள பொருளுயி ரிலவென
மற்று முளபொரு ளஃறிணை யெனவும தொளிவாலே
வற்க முடையப லுயிரையும் வடிவின
மைத்த பெரியவ னுமையொரு துணையென
மக்க நகரினில் வரவிட வரநபி யிறசூலே

இந்தப் பாடலில் மடலிகள் நடலிகள், குழலிகள், விழலிகள், அசடிகள், கசடிகள், முகடிகள், விகடிகள், முதடிகள், பதடிகள், வருடிகள் திருடிகள், விரகிகள் துரகிகள், வெளியனை வறியனை, என வந்துள்ளமை காசிம் புலவரின் சொல்லாட்சியை எடுத்துக்காட்டுகின்றது. காசிம் புலவரின் திருப்புகழில் உள்ள மற்றொரு பாடலில் இடம் பெற்றுள்ள சொல்லாட்சியும் எவரையும் பிரமிக்கச் செய்ய வல்லது எனக் கூறின் அது மிகையாகாது. அந்தச் செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

தத்த தனதன தனனா தனனா
தத்த தனதன தனனா தனனா
தத்த தனதன தன்னா தனனா
தத்த தனதன தனனா தனனா - தனதான
செப்பு முலைமா கரியோ கிரியோ
பத்ம வரைகடி தடமோ படமோ
செச்சை நறுநுதல் சிலையோ கலையோ நடைதானோர்
செய்க்க ணனநடை படியோ பிடியோ
விக்கு மொழிகடே னளியோ கிளியோ
செக்க ரிதழ்துவ ரிலவோ வலவோ ுழைநுரு

மப்பு மதர்விழி வடுவோ கடுவோ
நெய்த்த குழலணி யினமோ கனமோ
வற்ப நுணுகிடை கொடியோ துடியோ வெனமாத
ரற்பின் வடிவிய றனையே வினையே
னித்த மனதினி நிலையா துனையே
யச்ச மறமலர் புரைசீ ரடியே தொழுவேனே
முப்பு வனமொளிர் மதியே நிதியே
பச்சை மயிலிய லுருவே குருவே
முத்தின் வளர்திரு வொளிவே தெளிவே கிடையாத
முத்தி தருமொரு கருவே தருவே
பத்த ரமரர்கண் மணியே யணியே
முற்று மடியவர் பொருளே யருளே வருபேறே
மைப்ப டலமுகி லினமே வனமே
னட்பி னுழுனர்கள் படைமேன் மடைமேன்
மட்டு விரிமல ரளிமேல் வெளிமே னெடுமாட
வச்சிர மணிபுனை கொடிமேன் முடிமேன்
மொய்த்து மிகவுகழ் கயலூர் வயலூர்
மக்க நகர்வளர் பெருமான் மருமா னிறசூலே.

ஒரே விதமான உச்சரிப்பை உடைய சொற்களை நயம்பட ஆளுவதில் கைதேர்ந்தவர் காசிம்புலவர் எனக் கூறலாம். பெருமானார் முகம்மது (சல்) அவர்களின் சிறப்பியல்புகளைக் கூற வந்த காசிம் புலவர் தமது திருப்புகழ் பாடல் ஒன்றில் ஒரே மாதிரியான ஓசை நயம் பெறக்கூடிய வகையில் சொல்களையும் சொற்றொடர்களையும் பயன் படுத்தி அண்ணலார் பெருமையைச் சுட்டிக்காட்டி உள்ளார். அந்தப் பாடலின் பிற்பகுதி இங்ஙனம் அமைந்துள்ளது :

யெங்கள் குல தீபமகி மைக்கார
முந்தவரு தேவர்முது மைக்கார
வென்றுமக லாதவின மைக்கார புவனாதி
யெங்குமொரு வேதசமையக்கார
செம்பொனுல காளுநில மைக்கார
வெண்டிசைய ளாவுவிரு துக்கார மதினாவாழ்
தும்பிமிகு முதினுதை யக்கார
வஞ்சுபொழுதானதொழு கைக்கார
துன்றுகலை ஞானமுறை மைக்கார விறசூலே.

இந்தத் திருப்புகழ்ப் பாடல் தந்ததன தானதன தத்தான - தனதான என்னும் சந்தக் குழிப்பைப் பெற்றிருப்பதைக் காணலாம். மற்றொரு திருப்புகழ்ப் பாடலில் விலை மாதர்களின் தன்மைகளைக் கூறி விட்டு

அத்தகை பரத்தை யரிடமிருந்து தாம் விடுதலைபெற அருள்புரியுமாறு நபிகள் நாயகம் (சல்) அவர்களை வேண்டுகிறார் காசிம் புலவர். ஒரே சொல்லைப் பல தடவை பயன்படுத்தி ஓசை நயம் அமைய அவர் பாடிய பாடலின் முதல் பகுதி இவ்வாறு அமைந்துள்ளது :

மாயம ருந்துசெய் மோசக்காரிகள்
கூடிய சம்ப்ரம லீலைக் காரிகள்
மானெடு மிந்திர சாலக் காரிகள் பழையோர்மேல்
வாரம றந்திடு சொலிக காரிக
ளாடவர் பின் றொடர் வாடைக் காரிகள்
மாசர சஞ்செய்கு ணாலக் காரிகள் பொருடேடி
நேயமி குந்துழலாசைக் காரிகள்
மாசறு சிந்துர நகமக் காரிகள்
நீடிய சங்கிர்த் தாகக் காரிக ளணிகோவை
நீலந றுந்தன பாரக் கோடுகள்
மார்பில ழுந்தவி சாரப் பேய்தொட
நேமமி குந்துழல் வேனுக் கோரருள் புரிவீரே

இந்தப் பாடலின் சந்தக் குழிப்பு தானன தந்தன தானத் தானன - தனதான என அமைந்துள்ளமையைக் காணலாம்.

அருணகிரி நாதர் முருகப் பெருமானின் சிறப்பியல்புகளைப் பாட மேலே குறிப்பிட்டுள்ள உத்தியைக் கையாண்டுள்ளார், அவருடைய அத்தகைய திருப்புகழ் பாடலின் சந்தக் குழிப்பு காசிம் புலவர் பயன் படுத்தியுள்ள சந்தக் குழிப்பிலிருந்து என அருணகிரி நாதரின் சந்தக் குழிப்பு தந்ததன தானதானத் தான - தனதான என அமைந்துள்ளது. எனினும் இருவரின் பாடல்களிலும் ஒரே ஓசை நயம் பெறப்பட்டிருப் பதைக் காணலாம், அருணகிரிநாதரின் அத்தகைத் திருப்புகழ் பாடலின் பிற்பகுதி இவ்வாறு அமைந்துள்ளது :

அத்தன்மறை வேற்வி காயற்கார
செந்தமிழ்ச்சொல் பாவின் மாலைக் கார
அண்டருப கார சேவற் கார முடிமேயே
அஞ்சலி செய் வோர்கள் நேயக் கார
குன்றுருவ ஏவும் வேலைக் கார
அந்தம் வெகு வான ரூபக் கார எழியான
சிந்துரமின் மேவு போகக் கார
விந்தைகுற மாது வேளைக் கார
செஞ்சொலடி யார்கள் வாரக் கார எதிரான

செஞ்சமரை மாயு மாயக் கார
துங்கரண சூர சூறைக் கார
செந்தினகர் வாழுமாண்மைக் கார பெருமானே.

அருணகிரி நாதரின் மற்றொரு திருப்புகழ்ப் பாடல் காசிம் புலவரின் திருப்புகழ்ப் பாடலுக்குரிய சந்தக் குழிப்பிலிருந்து ஒரு மெய்யெழுத்து மாறிவர அமைந்த சந்தக் குழிப்பைக் கொண்டுள்ளது. காசிம் புலவர் நகர மெல்லின மெய்யெழுத்தைப் பயன்படுத்தி உள்ள இடத்தில் அருணகிரி நாதர் தகர வல்லின மெய்யெழுத்தை உபயோகித்துள்ளார். அருணகிரி நாதரின் சந்தக் குழிப்பு தத்ததன தானதன தத்தான-தன தான என அமைந்துள்ளது. இந்தச் சந்தத் குழிப்பில் அமைந்த அருணகிரி நாதரின் திருப்புகழ்ப் பாடல் இதுதான் :

சித்ரவடி வேல்பனிரு கைக்கார
பத்திபுரி வோர்கள்பனு வற்கார
திக்கினுந டாவுபுர விக்கார குறமாக
சித்த அனுராகய லிக்கார
துட்ட அசுரேசர்கய கக்கார
இட்டர்பரி பாலலளி தக்கார அடியார்கள்
முத்திபெற வேசொல்வச னக்கார
தத்தைநிகர் தூயவனி தைக்கார
முச்சகர்ம ராவுகர ணக்கார இனிதான
முத்தமிழை யாயும்வரி சைக்கார
பச்சை முகில் தாவுபரி சைக்கார
முத்துலவு வேளைநகர் முத்தேவர் பெருமானே.

அருணகிரி நாதரின் மற்றொரு திருப்புகழ் பாடலில் அதே சந்தக் குழிப்பை வேறு விதமாக அமைத்துப்பாடி உள்ளார். அந்தச் சந்தக் குழிப்பு தந்தனன தானதன தந்தான - தனதான என வந்துள்ளது. அத்தகைய பாடலின் இரண்டாம் பகுதி இங்ஙனம் அமைந்துள்ளது :

இந்த்ரபுரி நாவன்முதன் மைக்கார
சம்பரமம யூரதுர கக்கார
என்றுமக லாதவிள மைக்கார குறமாதின்
இன்பஅனு போகசர சக்கார
வந்தஅசு ரேசர்கய கக்கார
எங்களுமை சேயெனரு மைக்கார மிகுபாளன்
செந்தமிழ்சொல் நாலுகவி தைக்கார
குன்றெறியும் வேலின்வலி மைக்கார
செஞ்சொலடி யார்களெளி மைக்கார எழில்மேவும்

திங்கள்முடி நாதர்சம யக்கார
மந்த்ரவுப தேசமகி மைக்கார
செந்திநகர் வாழுமரு மைதேவர் பெருமானே.

பெருமானார் முகம்மது (சல்) அவர்களின் அருளைப் பெறுவதே காசிம் புலவர் திருப்புகழ் பாடியதன் நோக்கமாகும். அந்த அவர் தம் நோக்கம் நிறைவேற அவர் கனிந்துருகிப் பாடியுள்ளார் :

தனனதன தானதத்த
தனனதன தானதத்த
தனனதன தானத்த – தனதான

என்னும் சந்தக் குழிப்பைக் கொண்டு அந்தப் பாடல் இங்ஙனம் அமைந் துள்ளது.

நினதுவழி யேநடக்க நினதுபெயரேவழுத்த
நினதுபுக ழேபடிக்க மறையோதி
நினதுஜெப மேஜெபிக்க நினதடிமை யாகிநிற்க
நினதுபத மேதுதிக்க வதனாலே
யெனதுபவ மேதுடைக்க வெனதுமல மேகெடுக்க
வெனதுபகை யேதுடைக்க வொழியாத
யெனதுகலி யேதடுப்ப வெனதுதுய ரேதணிப்ப
வெனதுவச மேகடைக்க ணருள்வாயே
வினைமுரச மேயொலிப்ப வணிகவிகை யேகவிப்ப
விரிகவரி காலசைப்ப விருபாலும்
விருதடவி டால்பிடித்து வருமரசர் மோலிதத்த
விடுபடைஞர் மாளவெட்டி யடர்சேனை
முனையழிய வீழ்பிணத்தை நரிகழுகு நாயிழுப்ப
முடுகியடு பேய்புசிக்க வடிவாளான்
முழுதுமம ராடிவெற்றி கொளுமபுது லாசுபுத்ர
முதன்மையர சாளுமக்க விறசூலே.

காசிம் புலவரின் சொல்லாட்சித் திறனின் எடுத்துக்காட்டாக மற்றொரு திருப்புகழை எடுத்துக்காட்டலாம். ஒவ்வோர் அடியிலும் ஒரே உச்ச ரிப்பை உடைய இரண்டு சொற்கள் இடம் பெற்றுள்ளன. உச்சரிப்பு ஒரே விதமாக இருந்தாலும் இரட்டைச் சொற்கள் ஒவ்வொன்றினது தொடக்க எழுத்து வேறுபட்டுவருவதைக் காணலாம். இதுதான் அந்தத் திருப்புகழ்ப் பாடல் :

செப்பு முலைமா கரியோ கிரியோ
பத்ம வரைகடி தடமோ படமோ
செச்சை நறுநுதல் சிலையோ கலையோ நடைதானோர்

செய்க்க ணனநடைபடியோ பிடியோ
விக்கு மொழிகடே னளியோ கிளியோ
செக்க ரிதழ்துவ ரிலவோ வலவோ குழையூரு

மப்பு மதர்விழி வடுவோ கடுவோ
நெய்த்த குழலளி யினமோ கனமோ
வற்ப நுணுகிடை கொடியோ துடியோ வெனமாத

ரற்பின் வழிலிய றனையே வினையே
னித்த மனதினி நினையா துனையே
யச்ச மறமலர் புசைசீ ரடியே தொழுவேனே

முப்பு வனமொளிர் மதியே சிதியே
பச்சை மயிலிய லுருவே குருவே
முத்தின் வளர்திரு வொளிவே தெளிவே கிடையாத

முத்தி தருமொரு கருவே தருவே
பத்த ரமரர்கண் மணியே யணியே
முற்று மடியவர் பொருளே யருளே வருபேறே

மைப்ப டலமுகி லினமே லனனே
னட்பி னுமுனர்கள் படைமேன் மடைமேன்
மட்டு விரிமல ரளிமேல் வெளிமே னெடுமாட

வச்சிர மணிபுனை கொடிமேன் முடிமேன்
மொய்த்து மிகவுகழ் கயலூர் வயலூர்
மக்க நகர்வளர் பெருமான் மருமா னிறசூலே.

இந்தத் திருப்புகழ்பாடலுக்கு தத்த தனதன தனனா தனனா - தனதான என்னும் சந்தக் குழிப்பு அமைந்திருப்பதைக் காணலாம். தமிழ் இலக்கியத்தில் உள்ளன போல பல்வேறு இலக்கியவடிவங்களில் முகம்மது நபி(சல்) அவர்களைப் பாட அருள்புரிய வேண்டும் என்று முறை இரங்குகிறார், காசிம் புலவர், தமது திருப்புகழ் பாடலொன்றில். தான தத்தன தந்தன தாத்த — தனதான என்றும் சந்தக் குழிப்பில் அமைந்த அந்தக் திருப்புகழ் பாடலின் முதற் பகுதி இவ்வாறு அமைந்துள்ளது:

பாவி தத்தமிழ் பிங்கல வாக்ய
நாலு ரிச்சொனி கண்டுரை வாய்த்த
பாடி லக்கிய மும்பல சூத்ர நிலையான

பாக முற்செயு ளும்பிற பாட்டு
நாட கப்பொருண் முந்து தொல் காப்ய
பார லக்கண முந்தொகை பார்த்து வழுவாதே

காவி யத்துறை யும்பரி பாட்டு
மேப டித்தணி செந்தொடை யார்த்த
காரி கைப்பொருள் கண்டுத ழீஇச்சொன் மடல்கோவை

காரிகை சொல்பிர பந்தமெய் கீர்த்தி
பாடு தற்கிரு பங்கச சூட்ச
கார ணக்கழ றந்துநல் வாக்கை யருள்வீரே.

மொழி சார்பான திசைச் சொற்களை எடுத்துக்காட்டுவது இன்றியமை யாததாகின்றது. இக்கருத்தினைக் கொண்டே மதுரை கமாராசர் பல்கலைக்கழகத்தில் 'இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்தில் காணப்படும் அறபுப் பார்சிச் பொறகளின் அகராதி' ஒன்று தயாரிக்கப்பட்டுள்ளது. இன்று இத்தகைய முயற்சியின் முக்கியத்துவம் பெரிதும் உணரப்பட்டிருப் பதைக் காணமுடிகிறது. இன்று வெளியாகும் இஸ்லாமியத் தமிழ் நூல்கள் பெரும்பாலானவை அவற்றில் இடம் பெரும் அறபுப் பார்சிச் சொற்களை அகரவரிசைப்படுத்திக்காட்டத் தவறுவதில்லை. இந்த அடிப்படையில்தான் இம் முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது,

இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்தில் இடம் பெற்றுள்ள திசைச் சொற்களான அறபு. பார்சிச் சொற்களுள் முதலில் காசிம் புலவரின் திருப்புகழில் இடம் பெற்றுள்ள அறபு இயற்பெயர்களை எடுத்துக் கொள்வோம். அவற்றை அகர வரிசைக் கிணங்க பார்ப்போம்.

அகுமது என்னும் சொல்லை முதலில் எடுத்துக் கொள்வோம். நபிகள் நாயகம் (சல்) அவர்களையே இச்சொல் குறிக்கிறது. முகம்மது, அகமது என்பன ஒரே அடிச் சொல்லிலிருந்து பிறந்தவை. புகழ் எனப் பொருள்படும் ஹம்து என்னும் அறபுச் சொல்லிலிருந்து உருவானவை இஞ்சீல் வேதத்தில் நபிகள் நாயகம் அவர்களைச் சுட்ட அகமது என்னும் சொல் பயன்படுத்தப்பட்டது. இறுதி நபியாக எதிர்காலத்தில் அகமது என்னும் பெயருடன் ஒரு நபி என்னும் தீர்க்கதரிசி தோன்றுவார் என இஞ்சீல் வேதம் குறிப்பிட்டுள்ளது. இச்சொல் அஹமது என்றும் எழுதப்படும் (1, 97, 109, 140)

நபிகள் நாயகம் (சல்) அவர்களின் அருமைத் திருமகளார் பாத்திமா(றலி) அவர்களுக்கும் இஸ்லாமிய பேரரசின் நான்காம் கலீபா வாகத் திகழ்ந்த அலி(றலி) அவர்களுக்கும் இருகண்மணிகளாகப் பிறந்த வர்கள் அசன் (றலி) அவர்களும் உசைன் (றலி) அவர்களும்.

பெரும்பாலும் இவர்கள் இருவரும் ஒன்றிணைக்கப்பட்டே ஜிப்ரீல் (அலை) என்றும் அமரர்கோன் அளித்த சிவந்த பட்டை அசன் (றலி) அவர்களுக்கும் பச்சைப் பட்டை உசைன் (றலி) அவர்களுக்கும் அணிவித்து பெருமானார் நபி (சல்) அவர்கள் மகிழ்ந்தார்கள் என்று ஒரு பாடலில் (95) காசிம் புலவர் குறிப்பிட்டுள்ளார். தமிழ் படுத்தப் பட்டுள்ள அசன் என்பதை ஹஸன் என்றும் உசைன் என்பதை ஹுஸைன் என்றும் அறபில் எழுதுவது வழக்காறாகும்.

முகம்மது நபி (சல்) அவர்களின் தந்தையார் பெயர் அப்துல்லாஹ். அப்துல் முத்தலிப் என்பவரின் புதல்வர். இப்பெயரையே யாப்பமைதிக்காக அபுதுலா என்று காசிம் புலவர் தமது திருப்புகழில் குறிப்பிட்டுள்ளார். (50, 66. 105, 117, 141).

நபிகள் நாயகம் (சல்) அவர்கள் திருமணம் புரிந்த அம்மையாருள் ஒருவரே கன்னிப் பெண்ணாக இருந்தார். அவர்தாம் ஆயிஷா (றலி) அவர்கள். முதலாவது கலிபாவாகத் திகழ்ந்த அபூபக்கர் (றலி) அவர்களின் புதல்வி. அன்னை ஆயிஷா (றலி) அவர்களை அறிமுகப்படுத்த ஓர் இடத்தில் (17) அபூபக்கர் (றலி) அவர்கள் குறிபிப்பிடப்பட்டுள்ளார்கள். நான்கு கலிபாக்களையும் சேர்த்து மற்றொரு பாடலில் (16) அபூபக்கர் (றலி) இடம் பெற்றுள்ளார்கள். தௌர் குகையில் பெருமானார் (சல்) அவர்களுடன் அபூபக்கர் (றலி) அவர்கள் தங்கியிருந்த பொழுது நடந்த நிகழ்ச்சியைக் குறிப்பிடும் பாடலில்(63) அவர்தம் பெயர் இடம்பெற்றுள்ளது, அளவோடு பேசும் இயல்பை உடையவர்கள் அபூபக்கர் (றலி) அவர்கள் என மற்றொரு பாடலில் (76) அவர்கள் குறிப்பிடப்பட்டுள்ளார்கள்.

இஸ்லாத்தை எதிர்ப்பதையே வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டவன் அபூஜஹல். 'அறியாமையின் தந்தை' என்பதே அச் சொற்றொடரின் பொருளாகும். அறிவின் தந்தை-அபுல்ஹகம் என ஒரு காலத்தில் பாராட்டப் பட்டவன். ஆரம்ப காலத்திலிருந்து இஸ்லாத்தை எதிர்த்தமையால் அபூஜஹல் என அழைக்கப் பட்டான். காசிம் புலவரின் திருப்புகழில் இப்பெயர் அபுசகல் என்றும் அபுஜகல் என்றும் பலவாறு வந்துள்ளமையைக் காணலாம். (3, 28, 54, 62, 63, 67, 86. 122. 128, 139)

நான்காவது கலிபாவாகத் திகழ்ந்தவர் அலி (றலி) அவர்கள். நான்கு கலிபாக்களையும் குறிப்பிடும் பாடலிலும் (36) அவர்களுடைய ஆற்றலைக் கூறும் மற்றிரு பாடலிலும் (101, 119) அவர்கள் குறிப்பிடப் பட்டுள்ளார்கள். அலி (றலி) அவர்களின் பெயர் ஆலி என மற்றொரு பாடலிலும் [60] குறிப்பிடப்பட்டுள்ளமையையும் காணலாம்.

அலிமா அம்மையார் பெருமானாரின் செவிலித்தாய். பாலூட்டி வளர்த்த அம்மையார் அறபியில் ஹலிமா என வழங்கப்பட்டார். அலிமா அம்மையார் பெருமானார் அவர்கள் குழந்தையாயிருந்த பொழுது செவிலித்தாயாக அமைந்தமையினால் உடலும் பொருளும் வளம் பெற்றமையும் பெருமானார் அவர்கள் பால் அருந்தியமையும் பற்றிய செய்தி இரண்டு பாடல்களில் (42, 86) இடம் பெற்றுள்ளது.

இம்றான் என்பவர் மகள் மறியம் என்றும் மசாகு மகள் ஆசியா என்றும் திருமணக்காட்சி என்னும் காப்பியம் குறிப்பிட்டுள்ளது. இறுதி நாளில் மறியம் என்பவரும் ஆசியா என்பவரும் அடையும் மகிழ்ச்சி ஒரு பாடலில் [113] குறிப்பிடப்பட்டுள்ளது. ஆசியா பிர்அவுனின் மனைவி. நான்கு சிறந்த பெண்மணிகளானோர் ஆசியா, மர்யம், கதீஜா, பாத்திமா ஆகியோராவர். ஆசியா அவர்கள் தம்மைக் காப்பாற்றும் படி அல்லாஹ்வை வேண்டிய வேண்டுகோள் அல்குர்ஆனிலே இடம் பெற்றுள்ளது. [16 : 11] மறியம் அம்மையாரைப் பற்றியும் அல் குர்ஆனைப் பற்றியும் பல இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. [3 : 35, 37]

ஆத் கூட்டத்தினர் [44] நூஹ் நபி [அலை] அவர்களின் சந்ததி யினர் தென் அறாபியாவில் வாழ்ந்தவர்கள். அவர்களும் அவர் களுடைய நபி ஹூது [அலை] அவர்களும் பல முறை அல்குர்ஆனிலே குறிப்பிடப்பட்டுள்ளனர். இலங்கையிலுள்ளது ஆதமலை. அங்கே எழுந்தருளிய இறசூலே [40] எனத் திருப்புகழ் பெருமானாரைச் சுட்டு கிறது. பெருமானாரின் தாயார் பெயர் ஆமினா. அவர்களுடைய மகிழ்ச்சியும் ஒரு பாடலில் [113] குறிப்பிடப்பட்டுள்ளது.

இஸ்றாயீல் (அலை) அவர்கள் அமரர்களுள் ஒருவர். இஸ்லாமிய மார்க்கத்துக்கமைய உயிர் வாங்குபவர் இஸ்ராயீல் [அலை] என அழைக்கப்படுவார். அவரே ஒரு பாடலில் [40] சுட்டப்பட்டுள்ளார்.

உலகில் நடக்கும் தீயவற்றை ஏவுபவன் பெயர் இப்லீஸ். அவன் அல்லாஹ்வால் சபிக்கப்பட்டவன். செய்த்தான் என்றும் அழைக்கப் படுவான். தமிழில் அவன் சாத்தான் என்று அறிமுகமானவன். இதே உச்சரிப்புடைய சொல்லாலே ஆங்கிலத்திலும் சுட்டப்படுபவன். இந்த இபுலீசு எனப்படுபவன் தீய நடத்தையைத் தூண்டுந்தன்மையே இரண்டு பாடல்களில் [48, 117] காசிம் புலவர் சுட்டி உள்ளார்.

திருப்புகழில் உள்ள எல்லாப் பாடல்களிலும் ஒரு பொதுச் சொல் இறசூல் என்பதாகும். [இ]றசூலுல்லாஹ் என்பது முஹம்மது நபி சல்] அவர்களுக்கே உரிய ஒரு சிறப்புப் பெயராகும். முஸ்லிம்களின்[

கலிமாவிலும் [இ] றசூலுல்லாஹ் என்னும் சொற்றொடரும் இடம் பெற்றுள்ளமையைக் காணலாம். இச்சொல் அல்லாஹ்வின் தூதுவர்களைக் குறிக்குமெனினும் முகம்மது நபி [சல்] அவர்களின் சிறப்புப் பெயராக அமைந்துள்ளது. காசிம் புலவரின் திருப்புகழில் உள்ள எல்லாச் செய்யுள்களும் 'இறசூலே' என்றே முடிவடைகிறது. காப்புச் செய்யுளில் மாத்திரம் இறசூலுல்லா' என வந்துள்ளது.

உமறு [றலி] அவர்களும், உதுமான் [றலி] அவர்களும் இஸ்லாமியப் பேரரசின் முறையே இரண்டாம் மூன்றாம் கலிபாக்களாகத் திகழ்ந்தவர்கள். நான்கு கலீஃபாக்களும் குறிப்பிடப்படும் பாடலிலே [36] இவ்விருவருடைய பெயர்களும் இடம் பெற்றுள்ளன.

அபூசுபியான் என்பவர் முன்னர் இஸ்லாத்தை எதிர்த்துப் பின்னர் முஸ்லிமானவர். அவருடைய மகள் உம்முகபீபா [றலி] அவர்கள் பெருமானார் முகம்மது [சல்] அவர்களின் மனைவியருள் ஒருவர். அவர்களும் ஒரு பாடலில் [133] குறிப்பிடப்பட்டுள்ளார்கள்.

கபீபு என்பது இயற்பெயர் ஒன்றன்றாயினும் பெருமானார் முகம்மது (சல்) அவர்களைச் சுட்டப் பயன்படுத்தப்படும் ஒரு அறபுச் சொல்லாகும். தோழர் என்ற பொருளில் இச்சொல் இங்கு பயன்படுத்தப்பட்டுள்ளது. (50, 119) காப்புச் செய்யுளில் 'கபீபிறசூல்' என வந்துள்ளது.

காசிம் என்னும பெயர் பெருமானார் (சல்) அவர்களைச் சுட்டப் பயன்படுத்தப்பட்டுள்ளது. முகம்மது நபி (சல்) அவர்களுக்கு காசிம் என்று ஒரு புதல்வர் இருந்தார். அக்காலத்தில் பெருமானாரின் மனைவி கதீஜா அம்மையார் அவர்கள் பெருமானார் அவர்களை அன்பாய் அபுல்காசிம் என்றே அழைத்தனர். புலவர்கள் பிற்காலத்தில் காசிம் என்று சுட்டத் தலைப்பட்டார்கள். பெருமானார் (சல்) அவர்கள் காசீம் என இவ்வாறு சுட்டப்பட்டுள்ளார் (24,82). திருப்புகழ் ஆசிரியரின் பெயரும் காசிமே. எனவே பெருமானாருடைய திருப்பெயர்களுள் ஒன்றான காசிம் என்பது தன் பெயராக அமைந்திருப்பதனாலும் தமக்கு அருள் புரிய வேண்டும் என்று ஒரு பாடலிலும் (38) பெருமானாருடைய தலைமகனுடைய பெயரான காசிம் என்னும் பெயரைத் தன் பெயராகக் கொண்ட காரணத்தினால் தமக்கு அருள் புரிய வேண்டும் என்றும் மற்றொரு பாடலிலும் (100) குறிப்பிட்டுள்ளார். காசீம் என்ற பெயரும் பெருமானார் (சல்) அவர்களின் சிறப்புப் பெயராகக்கொண்டு இங்கே ஆளப்பட்டுள்ளமையைக் காணலாம்...(21)

முகியத்தீன் ஆண்டவர் அவர்களைக் குறிப்பிட காதிர் என்னும் சொல் முகியித்தீன் அப்துல் காதிர் ஜீலானி (றலி) அவர்களைக் குறிப்

பிடப் பயன்படுத்தப்பட்டுள்ளது. எமன் வினைத் துயரொழித் தொரு வருக் குயிர் கொடுத்தருள் காதிர் (4) என வந்துள்ளமையைக் காண்க.

சிபுறில் (அலை) அவர்கள் அமரர்கள் தலைவர். முகம்மது நபி (சல்) அவர்களுக்கு இறைவாக்கினை கொண்டு வந்தவர். நாமூசுல் அஃலம் என்றும் அழைக்கப்பட்டவர் (16, 17, 19, 22, 29).

ஆத் மக்களைத் தொடர்ந்து வந்தவர்கள் தமூத் கூட்டத்தினர் (44) அறபு நாட்டில் வடமேல் மூலையில் அவர்கள் வாழ்ந்தனர். கி. மு. 85ல் அவர்கள் டமஸ்கஸில் ஆட்சி புரிந்தனர்.

நபிகள் நாயகம் [சல்] அவர்களின் மற்றொரு பெயர் மகுமூது என்ப தாகும். அகுமது, முகம்மது, மகுமூது என்பன ஒரே பொருளைக் குறிக் கும் சொற்களாகும். மகுமூது என்பது புகழ் எனப் பொருள்படும் ஹம்த் என்னும் சொல்லிலிருந்தே வந்துள்ளது மூஸா நபி [அலை] அவர் களுக்கு அருளப்பட்ட தவ்றாத் வேதத்தில் எதிர் காலத்தில் தோன்ற இருக்கும் இறுதி நபியின் பெயர் மகுமூது என்றே குறிப்பிடப்பட் டுள்ளது. இறுதி நாளில் நபிகள் நாயகம் [சல்] அவர்கள் பவனிவரும் யானையின் பெயரும் மகுமூது என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. மகுமூது என்னும் சொல்லைப் பெருமானார் [சல்] அவர்களைச் சுட்டவே [36, 104, 109, 117, 141] காசிம் புலவர் பயன்படுத்தி உள்ளார். 'தும்பி மகுமூதி னுதையக்கார' எனக் குறிப்பிடும் பொழுது [53] மகுமூது என்னும் பெயரால் அழைக்கப்படும் யானை குறிப்பிடப்பட்டுள்ளது.

முகமது என்னும் பெருமானார் [சல்] அவர்களுடைய பெயர் இரண்டு பாடல்களிலும் [80, 140] அல்லாஹ்வின் முகம்மது என்னும் பொருளில் முகம்மதுல்லா எனக் காப்புச் செய்யுளிலும் 'அல்லாஹ்வின் திருத்தூதர் முகம்மது' என்னும் பொருளில் 'முகம்மதுறசூலுல்லாஹ் என்று ஒரு செய்யுளிலும் வந்துள்ளமையைக் காணலாம்.

யாசீன் என்பது ஓர் அறபுச் சொல். அதன் கருத்து யாது என்று இன்னும் திட்டவட்டமாக ஒருவராலும் கூறமுடியாத நிலை இருக் கின்றது. அல்குர்ஆனின் 36வது அத்தியாயம் யாசீன் என அழைக்கப் படுகிறது. அல்குர்ஆனின் இதயம் எனக் கருதப்படும் இவ்வத்தியாயம் 'யாசீன்' என்னும் சொல்லுடனே ஆரம்பிக்கிறது. அது மர்மமான ஓர் அறபுச் சொல் என்றே பலரும் கருதுவர். இந்த யாசீன் என்னும் அறபுச் சொல் நபிகள் நாயகம் [சல்] அவர்களின் பெயர்களில் ஒன்று எனச் சிலர் கருதுகின்றனர். இதே கருத்திலேதான் முகம்மது நபி [சல்] அவர்களின் பெயராகக் காசிம் புலவர் தமது திருப்புகழில் உள்ள ஒரு பாடலில் [24] அச்சொல்லைப் பயன்படுத்தி உள்ளார்.

ஷத்தாது என்பதும் ஓர் இயற்பெயர். இவன் ஹூது நபி [அலை] காலத்தில் வாழ்ந்தவன். உலகத்திலே சுவனபதியைத் தாபிக்க முற்பட்டவன். ஆத் இனத்தைச் சேர்ந்தவன். ஆத் மக்களின் தலைநகராக விளங்கியது இரம் என்னும் ஊர். விழுமிய தூண்களைக் கொண்ட மாளிகை குறிப்பிடப்படுகிறது. 'விழுமிய தூண்களை உடைய இரம்' என அல்குர்ஆன் (89 : 7) இக்கட்டடத்தைச் சுட்டுகிறது.

தான் கட்டி எழுப்பிய விழுமிய மாளிகையில் ஷத்தாதுக்கு வாழும் வாய்ப்பு கிட்டவில்லை. அவனுக்கோ அவனுடைய கூட்டத்தாருக்கோ அங்கு வாழ முடியவில்லை, அதற்கு முன்னர் அவர்கள் அழிந்து விட்டனர். அவன் மறைவையே ஒரு பாடல் (123) குறிப்பிட்டுள்ளது.

காயல்பட்டணத்தில் வாழ்ந்த இபுறாகீம் ஆலிம் அவர்கள் புதல்வர் செய்னுலாபிதீன் ஆலிம், காலி என்னும் நீதிபதியாகக் கடமையாற்றிய நூறுத்தீன் என்போர் தம்முடைய மூதாதையர் (141) எனக் காசிம் புலவர் குறிப்பிட்டுள்ளார்.

அன்னை செயினபு (றலி) அவர்களை முகம்மது நபி (சல்) அவர்கள் மணம் முடித்த செய்தியும் ஒரு பாடலில் (141) இடம் பெற்றுள்ளமையைக் காணலாம்.

இனி, திருப்புகழில் இடம் பெற்றுள்ள இடப் பெயர்களை எடுத்துக் கொள்வோம். அவை அறபு நாட்டோடும் இஸ்லாத்தோடும் தொடர்புடைய இடப் பெயர்களாகவே அமைந்துள்ளன. பெரும்பாலும் இவ்விடப் பெயர்கள் பெருமானார் எழுந்தருளியிருந்த இடங்களாகவே இருக்கின்றன. அவற்றுள் ஒன்று அறபாத். 'சந்தித்தல்' என்பது அறபாத் என்னும் அறபுச் சொலின் நேரடிப் பொருளாகும். ஆதிபிதா ஆதம் நபி(அலை) அவர்களையும் ஹவ்வா(அலை) அவர்களையும் சுவன லோகத்திலிருந்து எறியப்பட்டு பல ஆண்டுகளுக்குப் பின்னர் அவர்கள் இருவரும் முதன்முதல் இவ்வுலகில் சந்தித்த இடம் அறபாத் ஆகும். இஸ்லாத்தைப் பொறுத்த வரையில் இது மிக முக்கியமான ஓர் இடம் ஆகும். ஹஜ் கடமையை நிறைவேற்ற மக்கமா நகர் செல்வோர் ஒருநாள் தங்கி இருந்து அல்லாஹ்விடம் குறை இரங்க வேண்டிய இடமாக அமைவதும் அறபாதான். நபிகள் நாயகம் (சல்) அவர்கள் தங்களது இறுதி ஹஜ்ஜின் போது ஹஜ்ஜதுல் விதா என்று வழங்கப்படும் பிரியாவிடை ஹஜ்ஜின்போது நிகழ்த்திய பிரியாவிடைப் பிரசங்கம் அறபாவிலேதான் ஒலித்தது. அங்கிருந்துதான் பின்னர் எதிரொலித்தது. காசிம் புலவர் அறபாத் என்பதைக் குறிப்பிட வல்லின றகரத்தைப் பயன்படுத்தி இருப்பது ஈண்டு நோக்கற்பாலது. அறபு மொழியில் உள்ள றகரம் எப்பொழுதும் வல்லின றகரமாய் இருப்பதை இது வலியுறுத்துகிறது, 'அறபாத்திலிருந்த வெம்மிறசூலே' (51) என இப்பாடல் முடிவுறுகிறது.

உகுது என்னும் இடமும் இஸ்லாமிய வரலாற்றிலே முக்கிய இடத்தைப் பெறுகின்றது. இஸ்லாமிய வரலாற்றிலே இரண்டாவது போர் இங்கேதான் நிகழ்ந்தது. இஸ்லாத்தின் எதிர்காலம் இஸ்லாத்துக்குச் சாதகமாக நிர்ணயிக்கப்பட்ட இடங்களுள் இரண்டாவது இடம் இது எனலாம். இறுதியில் முஸ்லிம் மக்கள் வெற்றி பெற்றதே இதற்குக் காரணமாகும். உலா வருகின்ற சந்திரனும், மழைபொழியும் மேகமும் சூரியனும் தவழுகின்ற உகுது மலையில் எழுந்தருளிய இறை தூதர் என இறசூல் நாயகம் [சல்] அவர்கள் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளார்கள்.

உலவுமதி சூலுளைந்த புயல்பருதி யேதவழ்ந்த
உகுதுமலை மீதினின்ற இறசூலே [6]

கஃபா என்பது மக்க மாநகரில் உள்ளது. கூம்பு வடிவமானது. அறபாத், உகுது என்னும் இடங்களைக் குறித்த முறையில் கஃபாவைக் குறிப்பிடவில்லை காசிம் புலவர். முஸ்லிம்களின் கட்டாய கடமையுடன் தொடர்புபடுத்தியே குறிப்பிட்டுள்ளார். முஸ்லிம் மக்கள் ஐந்து கட்டாய கடமைகளுள் ஒன்று ஹஜ்ஜாகும். அந்தக் கடமையின் முக்கிய நிகழ்ச்சிகளுள் ஒன்று புனித கஃபாவை வலம் வருதலாகும். ஹஜ்ஜு என்பது குறிப்பிடாது கஃபாவை வலம் வருதலையே ஹஜ்ஜு என்பதற்குப் பதிலாகக் காசிம் புலவர் சுட்டிக்காட்டியுள்ளார்கள். இங்கே முஸ்லிம்களுக்கென விதிக்கப்பட்டுள்ள கட்டாய கடமைகளான 'கலிமா'வை மொழிதல், தொழுகை, கட்டாய கடமையான சக்காத் வழங்கல், ஆண்டுக்கொருமுறை றமளான் மாதம் முழுவதும் நோன்பு நோற்றல், வாழ்க்கையில் ஒரு முறை மக்க மாநகர் சென்று ஹஜ்ஜினை நிறைவேற்றுதல் என்பனவற்றை குறிப்பிடும்பொழுதே ஆசிரியர் கஃபாவை இவ்வாறு குறித்துள்ளார்.

வாக்கிற் கலிமாவை வழங்கிட
ஏத்திப்பெரி யோனைவணங்கிட
வாழ்க்கைப் பொருளான கடன்கொடை யதுவீச
வாய்க்கப் பறுளாம்வி ரதங்கள்
யாட்டைக் கொருமாத முயன்றிட
வாழ்த்திக் கஃபாவலம் வந்திட [54]

இங்கு ஆண்டு என்பதைக் குறிக்க ஆட்டை என்னும் சொல்லைக் காசிம் புலவர் அருமையாக உபயோகித்துள்ளார்.

காகா என்பது ஒரு நகரின் பெயர். அங்கே ஆட்சி புரிந்த அரசனின் மனைவியின் மகளை மணமுடித்தவர் பெருமானார் (சல்) அவர்கள் என காசிம் புலவர் குறிப்பிட்டுள்ளார்.

............ நகர்காகா

முதல்வன்மனை யாட்டி மகவைமண நாட்டி
முனம்வதுவை வேட்ட விறகூலே (61)

என்பது காகா நகர் பற்றிய குறிப்புள்ள பாடலின் பகுதி.

குபைசு என்பது மக்க மாநகருக்கு அருகில் உள்ள ஒரு மலை. இது அபூகுபைசு என வழங்கப்பட்டது. மலைகளுக்கெல்லாம் தந்தை என்பது அதன் பொருள். அங்கிருந்துதான் பெருமானார் முகம்மது (சல்) அவர்கள் தவமியற்றினார்கள் என்பது

......... உயர்வின

குபைசும லைக்கணி ருந்தே தவமுய லிறகூலே (22)

என காசிம் புலவர் குறிப்பிட்டுள்ளார்.

தவுறு என்பது மக்காவுக்கு அருகில் உள்ள மற்றொரு மலை. மக்கா நகரக் குறைஷியரின் இன்னலைப் பொறுக்க முடியாது நபிகள் நாயகம்[சல்] அவர்கள் தோழர் அபூபக்கர்[றலி] அவர்களுடன்மக்கரவை விட்டு மதினா செல்லப் புறப்பட்டார்கள். குறைசிப் பகைவர் பின் தொடர்ந்தனர். இருவரும் தங்கள் பயணத்தைத் தொடர முன்னர் தவுறு மலையில் உள்ள குகையிலே ஒளிந்திருந்தார்கள். அவ்வாறு குகைக்குள் இருவரும் புகுந்த பின்னர் குகையின் நுழைவாயிலில் சிலந்திப் பூச்சி வலை பின்ன பாதச்சுவட்டை மறைக்கப் புறா வந்து முட்டையிட கண்டுயின்றார் முகம்மது நபி [சல்] அவர்கள். அத்தகைய தவுறுக் குகையில் வாழ்ந்தவரே என்று காசிம் புலவர் தமது திருப் புகழில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளமை நயக்கப்பாலது.

திருந்து அஞ்சநெ டுங்குபி ரண்டனவர்
தொடர்ந்து பின்வரல் கண்டுபொ தும்பறை
திறந் திடந்தர சென்று புகுந்திட முறைவாய் நூல்
சிலம்பி வந்திட அண்டச மென்கவ
டவன் கரந்திட வன்புயல் கண்டுயில்
சிறந்ததிந்ததவு றென்றொரு குன்றுறை யிறகூலே [23]

இங்கே அண்டசம் என்பது புறாவைக் குறித்தது.

மக்கா மதினா என்னும் இரண்டு இடப் பெயர்களும் திருப்புகழில் பல தடவைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. நபிகள் நாயகம் [சல்] அவர் களின் பிறப்பகம் மக்கா. புக்ககம் மதினா. மக்காவிலிருந்து விரட்ட புக்ககத்தார் அவர்களைக் கைநீட்டி அன்புடன் உதவி புரிந்தவர்கள் என்றும் சிறப்புப் பெயரால் மதீனா மக்கள் அழைக்கப்படலாயினர்,

திருப்புகழில் மக்கா ஐம்பது தடவைகளும் மதினா முப்பத்தேழு தடவை களும் வருணிக்கப்பட்டுள்ளமையைக் காணலாம். ஆனால் திருப் புகழில முதலில் வருணிக்கப்படுவது மதீனா மாநகர்.

தாமரையின் மொட்டுக்கள் மலர்கின்றன. வண்டுகள் அவற்றினுள் செல்கின்றன. அதன் பலனாக மலர்களிலிருந்து வடியும் தேன் அருவி போன்று உருவெடுத்து ஆறுபோல பாய்கின்றது. அதனால் பின்னிப் பிணைந்த நெற்கதிர்கள் வளைந்திருக்கின்றன. வரப்புக்களிலே முத்துக்கள் சிதறியிருக்கின்றன. சந்திர உதயம் காரணமாகப் பின்னர் குமுதமும் குவளையும் மலர்கின்றன. அவற்றை எருமைகள் கடிக் கின்றன. அவ்வெருமைகளின் மடியிலிருந்து மிகுதியாகப் பால் ஒழுகு கின்றது. அப்பாலைப் பிரித்தெடுத்து அன்னப் பறவைகள் நுகரு கின்றன. அத்தகைய அன்னங்களும் மீன்களும் நிறைந்திருக்கக்கூடிய வயல்களை உடையது மதீனமா நகரம். அத்தகைய சிறப்புப் பொருந் திய மதீனமா நகரிலே எழுந்தருளியுள்ள இறசூலே எனக் கற்பனை நயம் சிறக்க திருப்புகழில் காசிம் புலவர் இவ்வாறு பாடி உள்ளார்.

சலசமுகை கிழியவறு கால்வண் டுழப்பவழி
நறவருவி கடவுணதி நீரென் றுவட்டவளர்
சடைகள் பிரி முடவிய நென்முடெங்கு முத்துகவெண் ணிலவாலே
சலி மலர் குமுதநறு நீலங் கறித்தெருமை
முலைமுறுகி யொழுகிவிடு பாலுண்டனப் பெடைகள்
சலசரமொய் பழமை மதினாமண் டலநதுறையு மிறசூலே (3)

இங்ஙனம் மதீனமா நகரம் குறிக்கப்படும். பல செய்யுட்களில் அந் நகரின் இயற்கை வளம் வெகுவாக வருணிக்கப்பட்டுள்ளது. அங்கே குறிப்பிடப்பட்டுள்ள ஒழுகு என்பதும் அதன் பெயரான ஒழுக்கு என்ப தும் இப்பாடலில் சுட்டப்பட்ட பொருளிலே இன்றும் ஈழத்து முஸ்லிம் கள் தம் பேச்சு வழக்கில் பயன்படுத்துவதைக் காணலாம்.

இதேபோன்று மக்கமாநகரின் இயற்கை வளமும் கற்பனை நயத் தோடு வருணிக்கப்பட்டுள்ளமையைக் காணலாம். தமிழ் இலக்கியத் திலே முக்கனிகள் முதன்மை இடம் பெறுவன. அம்முக்கனிகளைக் குறிப்பிட முஸ்லிம் புலவர்களும் தவறவில்லை. காசிம் புலவர் தம் திருப்புகழிலும் முக்கனிகளைக் குறிப்பிட்டுள்ளார். முக்கனிகள் மக்கா வில் நிறைய உண்டு என மக்காவைப் பற்றிக் குறிப்பிடுகையில் வருணித்துள்ளார்.

மக்காவிலே மாமரங்கள் இருந்தன. அவை கனிகளைக் கொண்டன வாய் காட்சி அளித்தன. பூக்கள் நிறைந்த வாழை மரங்கள் இருந்தன.

சிறந்த இனத்தைச் சேர்ந்த வருக்கைப் பழங்கள் மலிந்த பலா மரங்கள் நிறைய இருந்தன. முக்கனிகளும் சுனிந்து இருந்தன. அவற்றிலிருந்து தேனும் அமிழ்தமும் ஒழுகிக் கொண்டிருந்தன. அந்தத் தேன் வழிந்து ஆறாக ஓடியது. பெருக்கெடுத்துப் பாய்ந்தது. அவ்வாறு தேனாறு பாய்தலினால் அவ்வாறு பாய்தலுக்கு இலக்கான வயல்கள் குளிர்ச்சி பொருந்தியனவாகத் திகழ்ந்தன. அவ்வயல்களிலே சிவப்பு நிறப் பசுக்கள் இருந்தன. அப்பசுக்களின் மடியின் காம்புகள் பாலைச் சுரந்து கொண்டிருந்தன. அந்தப் பாலாறு தேனாற்றோடு கலந்து பாய்ந்தது. அங்கே அதனைப் பயன்படுத்த அன்னப் பறவைகளின் கூட்டம் கூடி இருந்தன. அங்கும் இங்கும் நடந்து கொண்டிருந்தன. நடை பயின்று கொண்டிருந்தன. அங்ஙனம் பாலாறும் தேனாறும் கலந்து பாயும்பொழுது மீன்கள் அங்கே நிறைந்திருந்தன. அத்தகைய நீர் வளம் சூழப்பெற்றது மக்க மாநகரம். இங்ஙனம் கற்பனையின் உச்ச நிலையை அடைந்த காசிம் புலவர் மக்கமா நகரத்தை வருணித்துள்ளார். அத்தகைய வருணனை இடம் பெற்ற பகுதி இவ்வாறு அமைந்துள்ளது :

தேமா அமுதய் பழுத்தொழு குங்கனி
பூவார் கதலிவ ருக்கைத ருங்கனி
தேனா றொழுகியு வட்டெழு தண்பனை வயலூடே
சேதா முலையின் மடுக்கள்சு ரந்திடு
பால்வீர் விடலொரு மித்தெகி னம்பயில்
சேலார் புனல்வள மக்கமி குந்தவெ மிறசூலே (30)

இங்ஙனம் மக்கா வருணனை இடம் பெற்ற பல பாடல்கள் திருப்புகழில் அமைந்துள்ளன.

சித்றத்துல் முந்தஹா, ஹாவியா, லௌகு மகுபூல், கலம், ஹவ்லுல் கவுதர் என்னும் சிறப்புப் பெயர்களும் திருப்புகழில் இடம் பெற்றுள்ளன. சித்ரத்தும் முந்தஹா என்னும் ஒரு மரம் பேரறிவின் எல்லையாகக் கணிக்கப்படுகிறது. அது சுவர்க்கத்தில் உள்ளது. அமரரோ மனிதரோ அதனைத் தாண்டிச் செல்ல முடியாது. அம் மரத்தை இலந்தை மரம் என மொழிபெயர்ப்பாளர் குறிப்பிடுவர். அல்குர்ஆன் இதனைக் குறிப்பிட்டுள்ளது. (53 : 14)

சினநெட் டிலந்தை மாமர மானதோர்
குதறத் தினின்ற வாசனை வீசிய
சிதறத் தின்முந்த காவின் மேவிய விறசூலே (126)

எனத் திருப்புகழில் பாடப்பட்டுள்ளது.

லௌகும், கலமும் சேர்ந்து ஒரு பாடலில் [116] வந்துள்ளது. லௌகு என்பது தனிமையாகப் பயன்படுத்தப்பட்டாலும் அது லௌகுல் மகுபூல் என்பதையே சுட்டும். இச்சொற்றொடரின் பொருள் 'பாதுகாக்கப்பட்ட பலகை' என்பதாகும். மகுபூள் [40] என்று தனியே வருணித்தும் அது லௌகுல் மகுபூளையே குறிக்கும். அங்குள்ள எழுத்து அழிந்தால் தூபா என்னும் மரத்தின் [துவா - 40] இலையில் எழுதப்பட்டுள்ள பெயர் உரித்தானவர் மரணமாவார் என்பது பொருள். துபா மரத்தில் ஒவ்வொருவருடைய பெயரும் ஒவ்வொரு இலையில் எழுதப்பட்டிருக்கும் என்று கூறப்படுகிறது. புகழ்க் கொடி எனப் பொருள்படும் 'லிவாவுல் ஹம்து' என்பதே 'லிவா' [70] எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இறுதி நாளில் இக்கொடியின் கீழ் இறை நம்பிக்கையாளர் நிற்பர் எனக் கூறப்பட்டுள்ளது. சுவர்க்கத்தில் உள்ள நீரோடை ஹவ்லுல் கவ்தர் என அழைக்கப்படுகிறது. அதன் பண்புகளும் தன்மைகளும் ஒரு பாடலில் [129] தரப்பட்டுள்ளன.

திருப்புகழில் இடம் பெற்றுள்ள ஏனைய அறபு பார்சிச் சொற்களை எடுத்துக் கொள்வோம்.

அசர் என்பது முஸ்லிம் மக்கள் மாலைப் பொழுதின் நடுப்பகுதியில் நிகழ்த்தும் ஒரு தொழுகை. நண்பகலுக்கும் பொழுது படும் வேளைக்கும் நடுப்பட்ட கால எல்லையில் நிறைவேற்றும் தொழுகை. நண்பகலுக்குப் பின்னர் ஒரு மனிதனின் உயர அளவு அவருடைய நிழலின் அளவுக்குச் சமமெனின் அதுதான் அசர் தொழுகைக்குரிய வேளை எனக் கூறுவர். அசர்த் தொழுகை தவறிய ஒருவர் அத் தொழுகையை நிறைவேற்ற நபிகள் நாயகம் [சல்] அவர்கள் எவ்வாறு துணை புரிந்தார் என்பதைக் குறிக்கும் விவரம் இப்பாடலில் [97] இடம் பெற்றுள்ளது.

'வக்த்' என்னும் அறபுச் சொல் வேளை அல்லது நேரம் எனப் பொருள்படும். அல்குர்ஆனிலே வக்த் என்னும் சொல் வேளையைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது. (7;187; 15:38) நேரம் என்னும் பொருளிலும் பயன் படுத்தப்படும். வகரத்தை முதலெழுத்தாகக் கொண்ட இதனையும் ஒகரத்தை முதலெழுத்தாக்கி எழுதி உள்ளனர். ஒகுத்து என்று பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம். இச்சொல் இவ்வாறு ஒரு பாடலில் அமைந்துள்ளது:

அகவிடத்தினி லுயர்தீ னவர்களில்
ஒருவர் எற்குறு பறுலா னதுதொழு
அசறொ குத்திலை யரசே யெனவவர் மருண்மாலை (97)

முன் குறிப்பிட்ட முறைப்படியே வலி எனபது ஒலி என அமைந்துள்ளது. இறை நேசர்களைக் குறிப்பிட வலி என்னும் அறபுச் சொல் பயன்படுத்தப்படுகிறது. வலி என்றால் நெருக்கமானவன் என்பது பொருள். இறைவனுக்கு நெருக்கமானவன் என்பதைக் குறிக்கும். கெட்டிக்காரத் தன்மையைக் குறிப்பிடக் கெட்டித்தனம் என்னும் சொற்றொடர் பயன்படுத்தப்படுவதைக் காண்கின்றோம். இங்கே தனம் என்பது தன்மையைச் சுட்டிற்று. இறைநேசத் தன்மையைக் குறிப்பிட அறபுச் சொல்லான வலி என்பதுடன் தமிழில் பயன்படுத்தப் படும் தனம் என்பதைச் சேர்த்து வலித்தனம் என்பர். இதனையே ஒலித்தனம் எனக் காசிம் புலவர் குறிப்பிட்டுள்ளார்.

ஒருவருக் கெளிதினிற் பெற ஒலித் தனம தருளோடு மற்றொரு பாடலில் ஒலிமார் என இறை நேசர்களை இவ்வாறு சுட்டி உள்ளார்.

நபிகளொலி மார்களுந் தவஞ்செய் (121)

மரணமான ஒரு முஸ்லிம் நல்லடக்கம் செய்யப்படும் புதைகுழி அறபில் கப்று எனப்படும். அல்குர்ஆனிலே இச்சொல் இதே கருத்தில் ஆளப்பட்டுள்ளது. (9:84) தீயவை செய்த முஸ்லிம் கபறில் நல்லடக்கம் செய்யப்பட்டால் அவன் துன்புறுத்தப்படுவான்.

அத்தகைய தண்டனை தம்மை அடையக் கூடாது என்று காசிம் புலவர் இவ்வாறு வேண்டியுள்ளார்.

விடங்கொளித் தரவு தேளுறாதுட
னெரிந்திடக்கபுற தாபு றாதெழில்
விளங்கு சொற்க மண வாடைவீசருள் புரிவீரே (131)

கலம் என்பது எழுதுகோல். சுவனலோகத்தில் உள்ள எழுது கோலைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது. (116)

கலால் என்னும் சொல் ஹலால் என்னும் அறபுச் சொல்லின் தமிழ் வடிவமாகும். சட்ட ரீதியானவை என்றும் அனுமதிக்கப் பட்டவை என்றும் இச்சொல்லுக்குப் பொருள் கூறலாம். ஒரு முஸ்லிமுக்கு ஒரு பெண்ணைத் திருமண நிக்காகு நடத்தப்படும் பொழுது அப் பெண்ணை அவருக்கு ஹலால் பெண்சாதியாகவே அனுமதிக்கப்பட்ட சட்டபூர்வமான மனைவியாகச் சடங்கு நிறைவேற்றப்படும். திருப் புகழிலும் 'கலால் பெணாக' (141) என வந்துள்ளது.

கலிமா என்னும் சொல்லின் நேரடிக் கருத்து, சொல் என்பதாகும். சொல் என்னும் பொருளிலே கலிமா என்னும் சொல் அல்குர்ஆனிலும் பயன்படுத்தப்பட்டுள்ளது. (3:39) திருப்புகழிலும் பல இடங்களில் இச்சொல் ஆளப்பட்டுள்ளது.

கலிமா என்னும் பதம்

உலகு தனி லுமதுகலி மாவிண் டுமக்ககுரிய (3)

என்றும்

......................... கலிமாநீள்
பிரியமுடன் உணர்ந்து (27)

என்றும்

விஞ்சுகலி மாவை யோத ... (105)

என்றும்

அமுதகலி மாப்பயின்று ... (109)

என்றும்

சாரம்கனி கலிமா விண்டு ... (117)

என்றும்

...................... இன்பமென்சொ
வமுத கலிமா வழங்க லன்று (121)

எனப் பலமுறை வந்துள்ளது.

கஸ்தி என்னும் சொல் துன்பம் என்னும் பொருளில் ஒரு பாடலில் வந்துள்ளது.

தக்திக் கஸ்திப்பட்டழிதர [11]

என வந்துள்ளது.

இஸ்லாம் அல்லா தன்மையினரைக் குறிப்பிடக் காபிர் என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

பரசமைய காபிர் கலகக்கார [25]

எனக் காபிர் எனும் சொல் பிற சமயத்தவரைக் குறிக்கப் பயன்படுத்தப் பட்டுள்ளது.

திருமண ஒப்பந்தம் பதிவு செய்யும் பணி காவின் எழுதுதல் எனச் சுட்டப்படுகிறது.

செயினபெனு மாதை யாதிகாவி
னெழுதி ... ... ... [141]

என இச்சொல் பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம்.

நீதிபதி இஸ்லாமிய வழக்கில் 'காழி' என வழங்கப்படுவார். திருப்புகழிலும் அதே கருத்தில் [141] வழங்கப்பட்டுள்ளது.

கிந்தில் என்பது விளக்கு. அல்லாஹ்வின் விளக்காக வளர்ந்தவர் முகம்மது [சல்] என்பதனை குறிப்பிட முற்பட்ட காசிம் புலவர் தமது திருப்புகழில் இவ்வாறு பாடியுள்ளார்.

செம்பொன் றிகழ் வெண்பொன் பயினகர்
நம்பன் புகழ் தம்பால் கொடுமிளிர்
தென்சுந்தர நன்கிந் திலின்வள ரிறசூலே [111]

மிகுந்த ஆற்றலினை குத்றத் என்பர். அல்லாஹ்வின் ஆற்றலைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது அல்லாஹ்வின் குத்றத் என சுட்டப்படுவ துண்டு.

குதறத்தினின்ற வாசனை வீசிய (126)

என ஒரு பாடலில் இச்சொல் ஆளப்பட்டுள்ளது:

இஸ்லாம் அல்லாத தன்மை குபிர் என அழைக்கப்படும். அன் என்னும் ஆண்பால் விகுதியும் அர் என்னும் பலர்பால் விகுதியும் பெற்றும் குபிர் என்னும் சொல் குபிரன், குபிரர் என வருவதுண்டு.

குபிர்நிலை பெயரப் பெயர (15)

என குபிர் என்னும் சொல்லும்

................துட்டக்குபிரர் களடர்சேனை (11)

என குபிரர் என்பதும் பல இடங்களில் வந்துள்ளன.

முஸ்லிம் மக்களின் வேத நூல் குர்ஆன் ஆகும். குறான் என்னும் சொல் அதே விதத்திலும் குறுஆன் எனத்திரிந்தும் திருப்புகழில் பயன் படுத்தப்பட்டுள்ளது.

எழுத்தொன் றேயறி யாதுகு றானதை
வடித்தன் பாலுணர் காரண வானவர் (19)

எனக் குறான் என்பதும்

..........................குறுஆன்வாய்
புகச் சொற்குலுக்கிப் புகட்டக் (81)

எனக் குறுஆன் என்பதும் ஒரே பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம்.

குர்ஸி என்பதும் 'சிங்காசனத்தை'யே குறிக்கும். திருப்புகழிலே இச்சொல் குறுசு என இவ்வாறு ஆளப்பட்டுள்ளது.

குறுசினு றைந்தருள் காசீ மே நபி யிறசூலே (24)

நபிகள் பெருமானார் அவர்கள் பிறந்த குலம் குறைஷிக்குலம். அந்தத் குறைஷிக் குலத்தில் பிறந்த திலகம் என (1) நபிகள் நாயகம் (சல்) அவர்கள் வருணிக்கப்பட்டுள்ளார்கள். 'குறைஷிக்குல அற்புத வுற்பன, நபிகட்கொரு கற்பக மொத்திடும்' (21) எனப் பல இடங்களில் அவர்கள் சுட்டப்பட்டுள்ளார்கள்.

விண்ணக மகளிர் ஹூறுல் ஈன் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. தமிழில் அவர்கள் கூறுலின் என எழுதப்படுகின்றனர். 'இனிய கூறுலினாட(113) என ஒருபாடலில் கூறுலீன்கள் சுட்டப்பட்டுள்ளனர்.

சலாம் என்பது அமைதி எனப் பொருள்படும். சலாம் சொல்லுதல் என்பது முஸ்லிம்களிடையே உள்ள சர்வசாதாரணமான வழக்காறாகும் திருக்குர்ஆனிலும் இச்சொல் வந்துள்ளது (10 : 10) சலாம், சபாசு என்பன அருணகிரி நாதர் திருப்புகழிலும் இடம் பெற்றுள்ளன. நாள் தோறும் சந்திரன் வேறுருக் கொண்டு வானிலிருந்து இறங்கி இருட் டான பின்னர் இவ்வுலகில் வந்து நபிகள் பெருமானார் சிறு பிள்ளை யாக இருந்த பொழுது சலாம் உரைத்தது என்பது இவ்வாறு ஒரு பாடலில் இடம் பெற்றுள்ளது.

இந்துதி னந்தொறும் வேறு ருக்கொடு
மங்குலி ழிந்திருண் மாலை யிற்றனி
இன்பரின் வந்துச லாமுரைத்தினி தருகாகி (75)

சட்டம் என்பது ஷறஉ என அறபில் வழங்கும். இதனைத் தமிழ்ப் படுத்தி சறகு என்பர். காசீம் புலவரும் தமது திருப்புகழில் 'மார்க்க வழி' என்னும் பொருளில் சறகு என்னும் சொல்லை இவ்வாறு ஒரு பாடலில் பயன்படுத்தி உள்ளார்.

சறகு நெறிபுகு மிநமிலி பதமினி (2)
தலைமையிற் புலமையில் சுருதியிற் சறகினிற் றெளிவான (4)
சறகினீதி.................................................... (20)
சறகிநெறி.................................................... (121)

இவ்வாறு இச்சொல் அமைந்துள்ளது.

பாவமன்னிப்பு தவ்பா எனப்படும். தான் செய்த பாவத்திலிருந்து மீட்சி பெறுவதற்காக இறைவனிடம் முஸ்லிம் மக்கள் குறை இரங்கல் வேண்டும். இவ்வாறு குறை இரங்கலையே தவ்பாச் செய்தல் என்பர். தவ்பா என்னும் இச்சொல் தமிழில் தவுபா என எழுதப்படுகிறது. பாவ மன்னிப்பைக் கேட்க வேண்டியதுதான். அவ்வாறு கேட்காமல் இருந் தமையினால் பாவியாகிவிட்டேன் என்றும் ஆதலால் தன்னை ஆட் கொள்ளுமாறு நபிகள் நாயகம் (சல்) அவர்களிடம் நல்லருள் பாலித்து ஆட்கொள்ளுமாறும் கேட்டுள்ளார் காசிம் புலவர்.

அழுதுபவ மறவிரவு தவுபாவ ழுங்கிலனை (98)

தண்டல் என்பது தலைவனைக் குறிக்கின்றது. சிறப்பாகப் படகுத் தலைவனைச் சுட்டுகிறது. காசிம் புலவர் இச்சொல்லை

தண்டலி னேவல் பணித்தாள் பெரியோரே (138)

என அமைத்துப் பாடி உள்ளார்.

முஸ்லிம் மக்களிடையே பெருவழக்கைப் பெற்றுள்ள மற்றொரு சொல் தீன் என்பதாகும். தகரம் இங்கே வல்லொலியாகவே உச்சரிக் கப்படுகின்றது. இங்குள்ள தகரத்தை மெல்லொலியாக உச்சரிப்பின்

அது உணவு என்பதைச் சுட்டும். முஸ்லிம் பரிபாஷையிலே வல்லொலி யாக உச்சரிக்கப்படும் தீன் என்பது இஸ்லாம் மார்க்கத்தைக் குறிக்கும்.

நபிகட் கொரு வித்துக் குருநபி யுயர்தீனின்
நலசத்ய மதம்......... ......... (88)

இதே சொல் தமிழில் வழங்கும் ஆண்பால் பலர் பால் விகுதிகளைப் பெறும்பொழுது இஸ்லாம் மார்க்கத்தைச் சேர்ந்தவர் எனப் பொருள் படும். தீனவர் எனக் கூறும்போது அது முஸ்லிம்களையே குறிக்கும். தீனைப் பின்பற்றியவர்கள் எனப் பொருள்படும். இங்கு தீன்+அவர் என்பது தீனவர் என வந்துள்ளது எனலாம். இங்ஙனம் அறபுச் சொற் கள் தமிழ் மொழிக்குரிய விகுதிகளைப் பெற்று வரும் சந்தர்ப்பங்கள் பல. நரகத்தில் விழாத வண்ணம் தீனவர்களைக் காத்தருளும் நபிகள் நாயகத்தை இவ்வாறு புகழ்ந்து பாடியுள்ளார் ஆசிரியர்.

...... ...... ...... நரகங்குடி புகுதாதே
காத்துப் புகழ் தீனவர் தங்களை
மோட்சப்பதி வாழ்வுபெறும்படி
காட்சிப்பரலோகம் அடைந்தருள் இறசூலே. (54)

தீன் என்னும் சொல் பலர்பாலைக் குறிக்கும் மற்றொரு விகுதி யான 'ஓர்' உடன் வந்தால் தீனோர் என வழங்கப்படுகிறது. இதுவும் முஸ்லிம் மக்களையே சுட்டும். தனது குறைகள் பலவற்றைக் குறிப் பிட்ட ஆசிரியர் தன்னை 'தீனோர்கள் நீசன்' (18) என்று குறிப்பிட் டுள்ளார். அத்தகைய தன்னை ஆட்கொண்டு அருளுமாறு நபிகள் நாயகத்திடம் மன்றாடி உள்ளார். முஸ்லிம்கள் எத்தகையர் என்பதை ஒரு பாடலில் விளக்கியுள்ளார். ஐம்புலன்களும் வெளியே அவற்றின் விருப்பப்படியே திரிகின்ற பொறிகளை வெறுத்து அடக்கிக்கொண்டுள்ள நேர்வழியாளர்களான தீனோர் கூட்டம் முஸ்லிம்கள் என்பதை அமைத்து இவ்வாறு பாடி உள்ளார்.

...... ஐந்துபொறி வெளிமேய
புலன் வெறுக்கப்பட்ட தீனோரி னங்களோடு (82)

துல்துல் என்பது அலி (றலி) அவர்களுடைய குதிரையின் பெயர். வேகமாகச் செல்லக்கூடியது. அக்குதிரை அலி (றலி) அவர்களின் வெற்றியைக் குறிப்பிடும்பொழுது துல்துல் குதிரையின் ஆற்றலும் பேசப்படுகிறது. பெரும் பெரும் மலைத் தொடர்கள் கிடுகிடு என்று அதிரவும் நெருங்கி இருக்கும் எட்டுத்திக்கு யானைகளும் இடம் பெயர்ந்து போகும்படியாயும் வியப்புக்குரிய வகையிலே நடைசெய்வது துல்துல் என்னும் குதிரை. இதனையே இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர்.

குலவரைகள் கிடுகிடென மண்டுந் திரைக் கரிகள்
புடைபெயர வியனடமி டுங்கந்துகத் துல்துல் மிசையேறி (67)

இன்னொரு பாடலில் யுத்தம் புரிய துல்துல் முற்படுபொழுதும் அது நடனம் புரிய முற்படுவதாகக் குறிப்பிடுவர். அம்பின் வேகத்தைப் போல் செல்லக் கூடியது அக்குதிரை என்பதனை இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

அத்தத்தைவி ளைத்துப் பவுரிகொள்
நிர்த்தப்பதம் வைத்துச் சரகதி
அத்தைக்கொடு தத்தைத் துல்துலு மிசையேறி (101)

அலி (றலி) அவர்களுடன் நெருங்கிய தொடர்புடையது துல்புக்காறு. அவர்களுடைய வாளை இது குறிக்கும். போர்க்களங்களில் ஈடுபடும்பொழுது அலி (றலி) அவர்கள் துல்புக்கார் என்னும் வாளையே பயன்படுத்தி உள்ளார்கள். இவ்வாள் பெருமானார் முகம்மது (சல்) அவர்களால் அலி (றலி) அவர்களுக்கு அன்பளிப்புச் செய்யப்பட்டது.

ஆடற் போதுல்பு காறெனும் வாளது உடையோர்சீர் (60)

நசறத் என்னும் ஊரினைச் சேர்ந்தவர்கள் என்று பொருள்பட கிறித்தவர்கள் நசுறாணிகள் என அழைக்கப்பட்டனர், காசிம் புலவரும் ஒரு படாலில் கிறித்தவர்களைக் குறிக்க நசுறானி என்னும் சொல்லைப் பயன்படுத்தி உள்ளார். வீட்டின் முன்பக்கத்தில் இருநத ஈச்ச மரத்தை ஒரு சச்சரவு காரணமாக வீட்டின் பின்புறத்துக்கு இடம் பெயரச் செய்தனர் எம்பெருமானுர் (சல்) அவர்கள் என அவர்கள் இங்கே புகழப் பட்டுள்ளனர்.

உலக வழக்கத் தெருத்த லைக்கடை
குலைணெ ரித்துப் பழுத்து திர்த்தினி
யுதவு மரத்தைக் கணித்த தற்குறு நசுறானி
யுடையவகத்திற் புறக்கடைத் தலை
நிலைபட நிற்கச் சபித்து மிக்கறி
வுறுதியு றுத்திப் பணித்து விட்டருள் பெரியோரே (105)

நபி என்னும் அறபுச் சொல் இஸ்லாமிய இலக்கியங்களிலே சிறப்பிடத்தைப் பெறுவதொன்றாகும். தீர்க்கதரிசி எனப் பொருள் கொண்டாலும் உண்மையிலே நபி என்னும் சொல் குறிக்கும் பொருளை அது முழுமையாகச் சுட்டாது. இஸ்லாமிய இலக்கியங்கள் தோன்றிய எந்த மொழியிலும் அச்சொல் அவ்வாறே பயன்படுத்துவதற்கும் காரணம், அதனை வேறெந்த மொழியிலும் பெயர்க்க முடியாது. என்பதேயாகும்.

இஸ்லாமிய அடிப்படையில் தமிழில் தோன்றிய கவிதையிலாயினுஞ் சரியே உரை நடையிலாயினுஞ் சரியே நபி என்னும் சொல் பெயர்க்கப்படாமல் அதே உருவில் பயன்படுத்தப்பட்டிருப்பதைக் காணலாம். திருப்புகழ் ஆசிரியரான காசிம் புலவரும் இதே முறையைத்தான் பின்பற்றியுள்ளார். இருபத்தொன்பது செய்யுள்களில் நபி என்னும் சொல் இடம் பெற்றுள்ளது. ஒரு செய்யுளில் மாத்திரம் இச்சொல் பத்தொன்பது முறை பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம். இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய எந்த இலக்கியத்திலும் நபி என்னும் சொல் அடைமொழி எதுவும் இன்றி அமையப்பெற்றால் அது பெருமானார் முகம்மது(சல்) அவர்களைச் சுட்டுவதாகவே உள்ளது.

சரத மொழி புகழ் புவியினில் நபியென வருவோரே (7)

என்னும் சந்தர்ப்பத்தில் நபி என்னும் சொல் முகம்மது நபி(சல்) அவர்களைச் சுட்டவே பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம்.

அல்குர்ஆனிலே இருபத்தைந்து நபிமார் குறிப்பிடப்பட்டுள்ளனர். காசிம் புலவர் ஒரு பாடலில் (44) பத்தொன்பது நபிமாரைக் குறிப்பிட்டுள்ளார். அவ்வாறு நபிமாரைக் குறிப்பிடும்பொழுது ஒரு பொதுவான உத்தியைக் கையாண்டுள்ளார். பத்தொன்பது நபிமார்களையும் அவர்களுடைய பெயரைக் குறிப்பிட்டு அவர்களை அவர் வருணிக்கவில்லை. அவர்கள் ஒவ்வொருவரினதும் வாழ்க்கையில் சிறப்பாக அமைந்த ஒரு நிகழ்ச்சியைக் குறிப்பிட்டு அந்நபிமார்களைச் சுட்டுகிறார். அத்தகைய நபிமார் யாவர் என்பதைப் படித்தோர் உய்த்துணர வைத்துள்ளார். காசிம் புலவர் சிறப்பு நிகழ்ச்சியை மாத்திரம் குறிப்பிட்டுள்ள நபிமார் யாரெனப் பார்ப்போம். அல்குர்ஆனில் அவர்கள் சுட்டப்பட்டுள்ளனரா என்பதையும் பார்ப்போம்.

முதலில் முதல் நபியை இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் :

பண்டி லங்கைமலை மீதுதவ நின்றநபி

ஆதிகாலத்தில் இலங்கையில் உள்ள மலைமீது தவம் செய்ய நின்ற நபியை குறிப்பிட்டுள்ளார். ஆதிநபி ஆதம் நபி (அலை) அவர்களே இங்கு சுட்டப்பட்டுள்ளார். சுவர்க்கத்திலிருந்து எறியப்பட்டதும் அந்த மலையிலே ஒற்றைக் காலிலே நின்று அவர்கள் அல்லாஹ்விடம் மன்னிப்புக் கோரினார்கள் என்று கூறப்பட்டுள்ளது. அதனாலேயே அம்மலை ஆதமலை எனப் பெயர் பெற்றது. அல்குர்ஆனும் ஆதம் நபி (அலை) அவர்களைக் குறிப்பிட்டுள்ளது. (2 : 30)

ஒரு நபியிடம் ஒருவன் வந்து இரந்து நின்றானாம். அங்ஙனம் இரந்து வந்தவனிடம் தம்மை விலை கூறி அந்நபி விற்றாராம். அந் நிகழ்ச்சியே இவ்வாறு

சென்றி ரந்தவன்மெய் கூறிவிலையுண்ட நபி

என அமைந்துள்ளது. அவர்கள்தாம் கிலுறு நபி (அலை) என்று கூறப்படுகிறது.

ஒரு காலத்தில் பஞ்சமேற்பட்டது. உணவு இல்லாமல் போய் விட்டது. அந்தக் காலத்தில் வாழ்ந்த ஒரு நபி பஞ்சத்தால் வாடியிருந்த மக்களுக்கு ஒரு மரவை நிறைய உணவை அளித்து வந்தார்கள். இதனையே ஆசிரியர்,

பஞ்ச மன்றளவி நீள் மரவை தந்தநபி

எனக் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு ஈந்தவர்கள் ஈசா நபி (அலை) எனக் குறிப்பிட்டுள்ளார். உணவுப் பண்டங்களை வைக்கும் தட்டு என்னும் பொருளில் மரவை என்னும் சொல் இன்றும் இலங்கை முஸ்லிம் மக்களுடைய பேச்சு வழக்கில் இடம் பெற்றுள்ளதைக் காணலாம். இஞ்சீல் வேதம் அருளப்பட்ட ஈசா நபி (அலை) அவர்கள் அல் குர்ஆனில் குறிப்பிடப்பட்டுள்ளார்கள். (19 : 30)

ஆகாயத்திலுள்ள நட்சத்திரங்களின் கூட்டத்தைக் கண்டு அதனை ஆராய முயன்றூர்கள் ஒரு நபி. அதனை அவர்கள் முதன்முதலில் உருவாக்கினார்கள்.

வெளிமீனின்
பந்தி கண்டுலகி னூன் முயல்செ ய்கின்ற நபி

என இச்சொல் செய்தியையே காசிம் புலவர் இவ்வாறு சுட்டியுள்ளார். அவர்தாம் இத்ரீஸ் நபி (அலை) அவர்களாவார்கள். அல்குர்ஆனில் (19 : 56) அவர்கள் பெயர் இடம் பெற்றுள்ளது.

தாவூது நபி (அலை) அவர்கள் வேதம் அருளப்பட்டவர்கள். சபூர் வேதம் அவர்களுக்கு அருளப்பட்டது. அல்குர்ஆனிலும் (38 : 17) அவர்கள் குறிப்பிடப்பட்டுள்ளார்கள். இரும்பு வலிமையானது. இத்தகைய வலிய இரும்பையும் மெழுகாக உருக்கக் கூடிய ஆற்றலைப் பெற்றிருந்தார்கள் நபி தாவூது (அலை) அவர்கள். அவர்களைக் குறிப்பிடும் [நோக்கமாக அவர்களின் ஆற்றலைக் காசிம் புலவர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

பொங்கி ரும்பைமெழு காய்வரவி யன்றநபி

தாவூது நபி (அலை) அவர்களுடைய வலிமை அல்குர்ஆனிலும் சுட்டப்பட்டுள்ளது.

அடுத்துக் குறிப்பிடப்படுபவர் யூனுஸ் நபி [அலை] அவர்கள். அல் குர்ஆனில் [37 : 139] யூனுஸ் நபி [அலை] அவர்களைப்பற்றிக் குறிப்

பிடப்பட்டுள்ளது. அஸ்ஸீரியத் தலைநகரான நினவே மக்களை அச்ச மூட்டி எச்சரிக்கை செய்வதற்காக அல்லாஹ்வினால் அனுப்பப்பட்டவர்கள் யூனுஸ் [அலை] அவர்கள். யூனுஸ் நபி [அலை] அவர்களின் போதனைகளை அம்மக்கள் ஏற்க மறுத்தனர். பின்னர் அவர்கள் தாம் செய்த பிழைக்காகத் தம்மை மன்னிக்கும்படி வேண்ட அல்லாஹ் அவர்களை மன்னித்தான். அன்பு பாலிப்பவனும் மன்னிப்பவனுமாக இருப்பவன் அல்லாஹ் என்பதை மறந்த யூனுஸ் [அலை] அவர்கள் தமது முயற்சி தோல்வியுற்றதைக் கண்டதும் கோபித்தவர்களாக அங்கிருந்து புறப்பட்டார்கள். ஒரு கப்பலிலே சென்று விட்டார். கப்பல் நிறையப் பண்டம் இருந்தது. கப்பல் செல்வதற்குக் கால நிலை சாதகமாக இருக்கவில்லை. புயலில் சிக்கியது. கப்பற் பயணம் அபாயகரமானதாக இருந்தது. துர்அதிர்ஷ்டம் கொண்டு வந்தவர் யூனுஸ் [அலை] அவர்கள் என்பதாக நினைத்த கப்பலோட்டிகள் அவர்களைக் கடலில் தள்ளிவிட்டனர். ஒரு பெரிய மீன் அவர்களை விழுங்கிவிட்டது. மீனின் வயிற்றினுள் இருந்துகொண்டே யூனுஸ் [அலை] அவர்கள் தங்கள் குறையைக் கூறி அல்லாஹ்விடம் மன்னிப்புக் கேட்டார்கள். மன்னிப்பை ஏற்ற அல்லாஹ், அவர்களை மீனின் வயிற்றிலிருந்து காப்பாற்றினான். 'மீனின் மனிதன்' என்று பொருள்படும் 'யூனுஸ்' என அவர்கள் அழைக்கப்பட்டார்கள். இதனைச் சுட்டவே காசிம் புலவர் தமது திருப்புகழில்,

பைங்கருங் கடலின் மீனதுவி ழுங்குநபி

எனக் குறிப்பிட்டுள்ளார்.

ஆத் மக்கள் நூஹ் நபி [அலை] அவர்களின் நான்காவது தலைமுறையினர். அவர்கள் உபாயம் மிக்கவர்களாக இருந்தார்கள். அவர்களுடைய உயரம் நூறு முழுங்களாக இருந்தது எனக் கூறப்பட்டுள்ளது. அவர்கள் அல்லாஹ்வை மறந்தனர். மக்களைத் துன்புறுத்தினர். மூன்றாண்டுகாலம் நிலவிய பஞ்சத்தையாவது எச்சரிக்கையாக அவர்கள் கொள்ளவில்லை. இறுதியில் கொடுமையான காற்று வீசி அவர்கள் அழிந்து போயினர். ஹூது நபி [அலை] அவர்கள் ஆது மக்களிடையே தோன்றினார்கள். ஹூது நபி (அலை) அவர்களின் கல்லறை ஹளறல் மவ்த் என்னும் இடத்தில் இருப்பதாகக் கூறப்பட்டுள்ளது. ஹூது நபி (அலை) அவர்கள் போதித்தவற்றை ஆது மக்கள் ஏற்க மறுத்தனர். அதன் பயனாக அவர்கள் அழிந்தொழிந்தனர். இந்நிகழ்ச்சியையே (அல்குர்ஆன் : 26 : 123-140) காசிம் புலவர் இவ்வாறு சுட்டி உள்ளார்.

முழநூறு

கொண்டெ ழுந்தவுட லாதுகள டர்ந்தநபி

காசிம் புலவரின் திருப்புகழில் நபி எனக் குறிப்பிடப்படுபவர் உசைர் என்பவர். அல்குர்ஆன் (9:30) அவரைச் சுட்டி உள்ளது. உசைர் நபி (அலை) அவர்களை 'அல்லாஹ்வின் மகன்' என யூதர் அழைத்தனர் என அல்குர்ஆன் குறிப்பிட்டுள்ளது. அது பிழை என் பதையும் குர்ஆன் வலியுறுத்துகிறது. நூறாண்டுகளாக உறங்கி இருந்தவர் தாம் உசைர் நபி (அலை) என்பது திருப்புகழில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

துஞ்சியும் பருவ நூறளவி லுயர்ந்த நபி

உசைர் என்பவரை அல்லாஹ் நூறு வருடங்கள் வரையில் மரித்திருக்கச் செய்து பின்னர் அவரை உயிர்ப்பித்தான் என்றும் 'நீர் நூறு வருடங்கள் இந்நிலையில் இருந்தீர்' எனவும் அல்குர்ஆனிலே (2:259) வந்துள்ள மையைக் காணலாம். உயிர்பெற்றெழுந்த உசைர் அவர்களை அக் கால மக்கள் முதலில் அடையாளங்கண்டு கொள்ளவில்லை. பின்னர் ஏற்றுக் கொண்டனர். காணாமற்போன தௌராத் வேதத்தை மீள எழுதினவரும் இவரே எனக் கூறப்பட்டுள்ளது.

நபிமார்களுள் மிகவும் வருந்தியவர் ஐயூபு நபி (அலை) அவர்கள். அல்லாஹ் மீது அசையாத நம்பிக்கை கொண்டிருந்தவர். எனினும் அவர்களுடைய மந்தைகள் அழிந்தன, ஏவலாளர் கொல்லப்பட்டனர். அவர்களது இல்லத்திலேயே அவர்களுடைய குடும்பத்தினர் துன்புறுத்தப்பட்டனர். அவர்களைத் தானும் துன்பம் விட்டு விடவில்லை. தலையிலிருந்து கால்வரை அவர்களுடைய உடல்முழு வதும் புண்மயமாய் இருந்தது. அல்லாஹ் மீதிருந்த அவருடைய அசையாத நம்பிக்கை காரணமாக ஐயூபு நபி (அலை) அவர்கள் தங்களது முன்னைய நிலைமையையும் செல்வங்களையும் பெற்றார் கள். எல்லாமே இரட்டை மடங்காயின, ஐயூபு நபி [அலை] அவர்கள் பிணி காரணமாக வருந்தினார்கள் என்பது

கொண்டி ரும்பிணியி னாலுயிரி ழைந்தநபி

எனச் சுட்டப்பட்டுள்ளது.

அடுத்துப் பேசப்படுபவர் நபி இப்றாகீம் (அலை) அவர்கள்: பெருமானார் முகம்மது நபி (சல்) அவர்கள் காலத்தில் அபூஜகுல் என் பவன் வாழ்ந்தது போல் இப்றாகீம் நபி (அலை) அவர்களை எதிர்த் தவன் நமுறூது என்பவன். பெருஞ்சுவாலை உடைய தீயை ஒரு கிடங் கிலே மூட்டினான்.

அந்நெருப்புச்சுவாலையிலே நபி இப்றாகீம் (அலை) அவர்களை இட்டான். அதற்குள் வீசி எறிந்தான். ஆனால் நெருப்பு இப்ருகீம் நபி (அலை) அவர்களை எவ்விதத் தீங்கும் செய்யவில்லை. அத் தீச்சுவாலை அவர்களுக்கு மெல்லணையாக மாறியது. இந்த நிகழ்ச்சி யையே காசிம் புலவர் தமது திருப்புகழில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

நமுறூது

குன்ற முன்றெரிசு வாலையமெ றிந்தநபி

இப்றாகீம் நபி (அலை) அவர்களைப் பற்றிப் பல இடங்களில் அல்குர்ஆன் (21 ; 51) குறிப்பிட்டுள்ளது :

தமூது கூட்டத்தினருக்கு நபியாக அனுப்பட்டவர்கள் சாலிஹ் நபி (அலை) அவர்கள். தம் மக்கள் நல்ல பாதையில் செல்ல அவர்களைப் பெரிதும் திருத்த முயன்றார்கள். தமூது மக்கள் இரண்டு பிரிவினர் களாகப் பிரிந்து விட்டனர். செல்வந்தர் வறியவர்கள் துன்புறுத்த லாயினர். வாழ்க்கையின் நற்பலன்களை வறியவர்களைத் பெறாமற் செய்துவிட்டனர். சாலிகு நபி [அலை] அவர்களின் போதனைகளை அம்மக்கள் ஏற்கவில்லை. அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள், ஒரு குடும்பத்தைச் சேர்ந்த ஒன்பது பேர்களே, [அலகுர்ஆன் 27 : 48] அவர்கள் நீதியை அழிக்க முற்பட்டனர். நாட்டில் தீமை விளைத்தனர். தம்மைத் திருத்திக்கொள்ள விரும்பவில்லை. எனினும் நீதி அழிய வில்லை ஆனால் நீதி அவர்களை அழித்துவிட்டது. இந்த ஒன்பது பேரும் அழிவுறும்படி தொடர்ந்து வரச்சென்றவர் சாலிஹ் நபி [அலை] அவர்கள் என்பது திருப்புகழில் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

நந்த வொன்பதுத மூதிகடொ டர்ந்தநபி

சாலிஹ் நபி[அலை] அவர்கள் அல்குர்ஆனிலே [26 : 142] பல இடங் களில் குறிப்பிடப்பட்டுள்ளார்கள்.

சுலைமான் நபி [அலை] அவர்கள் அல்குர்ஆனிலே பல இடங் களில் குறிப்பிடப்பட்டுள்ளார்கள்[27 : 15]. காசிம் புலவர் சுலையு மான் நபி [அலை] அவர்களைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது கொஞ்சு கின்ற தம் மனைவியால் தமது அரசினை இழந்தவர்கள் சுலையுமான் நபி[அலை] அவர்கள் என்பது சுட்டப்பட்டுள்ளது. இப்பாடலின் பகுதி இவ்வாறு அமைந்துள்ளது.

கொஞ்சு தன்றுணைவி யாலரசி ழந்தநபி

இல்யாஸ் நபி [அலை] அவர்கள் இரண்டிடங்களில் அல்குர்ஆனில் [37 : 123] சுட்டப்பட்டுள்ளார்கள். அவர்களுடைய தனிச் சிறப்பாய் அமைந்த தன்மை மிகுந்த ஒளியை உடைய மண்டலத்திலே குடியிருந் தமையாம். இதனையே அந்நபி அவர்களைக் குறிப்பிடக் காசிம் புலவர் தமது திருப்புகழில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

யதிசூர்ய
மண்ட லங்குடிய தாயினிதி ருந்தநபி

முதிர்ந்த வயதில் இப்றாகீம் நபி (அலை) அவர்களுக்குப் புதல்வ ராய்ப் பிறந்தார்கள் இஸ்மாயில் நபி (அலை) அவர்கள். தங்களது அருமைப் புதல்வரை அறுத்துப் பலியிட முற்பட்டார்கள். அத்தரு ணத்தில் இப்றாகீம் நபி (அலை) அவர்கள் தமது புதல்வர் இஸ்மாயில் (அலை) அவர்களின் கழுத்தில் கத்தியை வைத்து அறுக்க முற்பட்ட சமயத்தில் அமரர் கோன் ஜிபுறீல் (அலை) அவர்கள் ஓர் ஆட்டினைக் கொண்டுவந்து வைத்தார்கள். இஸ்மாயில் நபி (அலை) பலியிடப்பட வில்லை ஆடுதான் பலியிடப்பட்டது. இப்றாகீம் நபி (அலை) அவர்கள் மறைக்கப்பட்டு ஆடு அவர்களிடத்தில் வைக்கப்பட்டது. இக் கருத்தினையே காசிம்புலவர் இவ்வாறு பாடி உள்ளார்.

தந்தை முன்புதலை யீர்முனம றைந்த நபி

அல்குர்ஆனில் இஸ்மாயீல் நபி (அலை) அவர்கள் குறிப்பிடப்பட்டுள் ளார்கள் (19 : 54)

நூஹ் நபி (அலை) அவர்கள் தங்கள் கூட்டத்தினரை நேர்வழிப் படுத்த பெரிதும் முயன்றார்கள். அவர்களால் முடியவில்லை. அல்லாஹ் மீதான அவர்களுடைய நம்பிக்கை அசைக்க முடியாததொன்றாய் இருந்தது. அவர்கள் தங்கள் மக்களுடன் நடத்திய வாதப் பிரதிவாதங் கள் அல்சூர்ஆனிலே (11 : 25-49) தரப்பட்டுள்ளன. நூஹ் நபி (அலை) அவர்களும் அவர்களிடம் பற்றாய் இருந்தவர்களும் கப்பல் ஒன்றில் இருந்தமையால் தப்பிப் பிழைத்தனர். இதனைக் கருத்தில் வைத்தே காசிம் புலவர் தமது திருப்புகழில் இவ்வாறு பாடி உள்ளார்.

வங்க மொன்றி னெடு வாரியின லைந்தநபி

அழகிலே ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவர்கள் யூசுபு நபி (அலை) அவர்கள். ஒருமுறை தங்களது சகோதரர்களுடன் யூசுபு (அலை) அவர்கள் காட்டு வழியே சென்றார்கள்.

சகோதரர் யூசுப் நபி (அலை) அவர்களை ஒரு கிணற்றிலே தள்ளி விட்டார்கள். ஓநாய் அவர்களைக் கொன்றுவிட்டது எனத் தந்தையா ரிடம் சென்று பொய்யொன்றைக் கூறினர். பின்னர் அவர்கள் அவ் வழியே சென்ற ஒரு வணிகக் கூட்டத்தினரால் காப்பாற்றப்பட்டார்கள். கொடிய எண்ணங்கொண்ட சகோதரர் யூசுப் நபி (அலை) அவர்களைப் பாழுங் கிணற்றில் தள்ளியமையையே காசிம் புலவர் இவ்வாறு குறிப் பிட்டுள்ளார்.

முதுகூவல்
வன்பு றுந்தமைய மார்தளவி ழுந்தநபி

அல்குர்ஆனின் ஓர் அத்தியாயமே (12) யூசுப் எனப் பெயரிடப்பட்டது. இங்கே குறிப்பிடப்பட்டுள்ள நிகழ்ச்சி அந்த அத்தியாயத்திலே உள்ள 15ஆது திருவசனத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

முன்பு சக்கறியா நபி (அலை) அவர்கள் மரத்தில் ஒளிந்து கொண்டார்கள். அந்த மரம் அறுக்கப்பட்டபொழுது அவர்களும் அம்மரத்தோடு சேர்ந்து அறுக்கப்பட்டார்கள் இதனையே காசிம் புலவர்.

முந்து செந்தருவொ டீர்ந்துபிள வுண்டநபி

எனக் குறிப்பிட்டுள்ளார். அல்குர்ஆனில் ஸக்கரியா நபி (அலை) அவர்கள் குறிப்பிடப்பட்டுள்ளார்கள். (19 : 2)

பிர்அவுன் என்பவன் கொடுங்கோலன் மூசா நபி (அலை) அவர்கள் காலத்தில் வாழ்ந்தவன். இவர்கள் இருவரையும் பற்றி அல்குர்ஆனில் 28ஆம் அத்தியாயத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வத்தியாயத்தில் உள்ள 7ஆந் திருவாக்கியத்தில் மூசா நபி (அலை) அவர்கள் பிர்கவுன் என்பவனை எதிர்த்து வெற்றி பெற்றவராவார்கள்.

மன்பு ரந்தபிர கூனொடுமெ திர்ந்தநபி

கடைசியாக நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்கள் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. எல்லோரும் சேர்ந்து தமக்கு அருளவேண்டும் என்று குறைஇரந்து முடித்துள்ளார் இப்பாடலில் அதன் ஆசிரியர்.

பயித்துல் மகுமூறு என்பது விண்ணுலகத்தில் உள்ளது. அமரர்களின் புகலிடமாக அது அமைந்துள்ளது. பெருமானார் முகம்மது(சல்) அவர்கள் தங்களது மிஃராஜ் என வழங்கப்படும் விண்ணுலகப் பயணத்தின் போது அவ்விடத்துச் சென்றதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனையே காசிம் புலவர்

தனிப்பொருளையே வணங்கி
பயித்துல் மகு மூறிருந்த விறகூலே (72)

எனக் குறிப்பிட்டுள்ளார்.

முழுமையான பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

பண்டி லங்கைமலை மீதுதவ நின்றநபி
பென்றி ரந்தவன்மெய் கூறவிலை யுண்டநபி
பஞ்சமன்றுணவு நீள்மரவை தந்தநபி வெளிமீனின்
பந்தி கண்டுலகி னூன் முயல் செய் கின்றநபி
பொங்கி ரும்பைமெழு காய்வரவி யன்றநபி
பைங்கருங் கடலின் மீனதுவி ழுங்குநபி முழநாறு

கொண்டெ ழுந்தவுட லாதுகள டர்ந்தநபி
துஞ்சியும் பருவ நூறளவி னுய்ந்தநபி
கொண்டி டும்பிணியி னாலுயிரி ழைந்தநபி நமுறூது

குன்ற முன்றெரிசு வாலையமெ றிந்தநபி
நந்த வொன்பதுத மூதிகடொ டர்ந்தநபி
கொஞ்சு தன்றுணைவி யாலரசி ழந்தநபி யதிசூர்ய

மண்ட லங்குடிய தாயினிதி ருந்தநபி
தந்தை முன்புதலை யீர்முனம றைந்தநபி
வங்க மொன்றினெடு வாரியின லைந்தநபி முதுகூவல்

வன்பு றுந்தமைய மார்தளவி ழுந்தநபி
முந்து செந்தருவொ டிர்ந்துபிள வுண்டநபி
மண்பு ரந்தபிர கூனொடுமெ திர்ந்தநபி யிவர்யாரும்

அண்டிடும் பகையு றாதருள்பு ரிந்தவன்மு
னின்றி ரந்துதமி யேன்வினைக ழன்றகல
வஞ்ச லஞ்சலென வோர்பொழுது கண்படையில் வெளியாகி

யன்பு கொண்டருள வேணுமினி யெண்டிசையு
மண்டு கின்றபுக ழாபரண மன்றல்கம
ழைந்து பைந்தருவி ணோர்பதிபு ரந்தநபி யிறசூலே.

பவுஜ் என்பது ஓர் அறபுச்சொல். இச்சொல் குழு அல்லது கூட்டம் என்னும் பொருளினைக் கொண்டது, அல்குர்ஆனிலும் இச்சொல் வந்துள்ளது. (38 : 59)

இச்சொல்லோ நாளடைவில் திரிந்து தமிழில் பவுஞ்சி எனப் பயன் படுத்தப்பட்டுள்ளது. வானவர்களாகிய அமரரின் கூட்டம் எனக் குறிக்கவே இமையோர் பவுஞ்சு என வந்துள்ளது. பாடலில்

வகுத்தனெடு வானினின்று மகத்வநபி மார்கணங்கள்
வழுத்துமிமை யோர்பவுஞ்சின் முனமே போய் (72)

என மகத்துவமிக்க நபிமார்களுக்கும் போற்றுகின்ற வானவர் கூட்டத் தினருக்கும் இமாமாகச் சென்றவர் என முகம்மது நபி (சல்) அவர்கள் போற்றப்பட்டுள்ளதைக் காணலாம்.

இஸ்லாத்தில் கட்டாய கடமைகள் பறுளு என வழங்கப்படும். பறுளான கடமைகளைச் செய்யத்தவறின் அது பாவம் வறுத்தும் செயலாகக் கருதப்படும். கலிமாச் சொல்லுதல், தொழுகை, கட்டாய கொடை, நோன்பு நோற்றல், ஹஜ்ஜுக்கு செல்லுதல் பறுளான கடமைகளாகும். இவை அனைத்தையும் பறுளெனக் கூறும் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

வாக்கிற்கலி மாலவைவ ழுங்கிட
வேத்திப்பெரி யோனைவ ணங்கிட
வாழ்க்கைப் பொரு ளானக டன்கொடை யதுவீச
வாய்க்கப்பறு லாம்விர தங்களை
யாட்டைக்கொரு மாதமு யன்றிட
வாழ்த்திக் கஃபாவலம் வந்திட (54)

இங்கே ஆண்டைக் குறிப்பிட ஆட்டை என்னும் சொல் பயன் படுத்தப் பட்டிருப்பதைக் காணலாம்.

பஜர் என்பது அதிகாலை, வைகறைப் பொழுதைக் குறிக்கும் இருள் மறைந்து ஒளி தோன்றத் தலைப்படும் நேரம் அது. இந் நேரத்தில் முஸ்லிம் மக்கள் நிறைவேற்ற வேண்டிய தொழுகை பஜ்றுத் தொழுகை அல்லது சுப்ஹுத் தொழுகை என வழங்கப்படும். ஒருநாள் பஜ்றுத் தொழுகையின் போது பெருமானார் (சல்) அவர்களுக்கு ஏற்பட்ட இடைஞ்சல் இவ்வாறு சுட்டப்பட்டுள்ளது.

பஜ்றிற் றொழு துற்றுந் திருமதி
யொருபக்க மிருப்பப் பளிமிசை (88)

சுவனங்களுள் மிக உயர்ந்ததைக் குறிப்பிடும் சொல் பிர்தவுஸ் என்பதாகும். அத்தகைய சுவன வாழ்வைப் பெற்றவர் முகம்மது நபி (சல்) அவர்கள் என்பது இவ்வாறு சுட்டப்பட்டுள்ளது.

வெளிய வனமெனனடை கொஞ்சிப் பயின்றவர
மகளிர் பிருதவுசெ னுஞ்சொற் கமென் பதியின் [64]

நபிகள் நாயகம் முகம்மது [சல்] அவர்கள் மிஃறாஜ் சென்றபோது புறாக் என்னும் வாகனத்தைப் பயன்படுத்தியதாகக் கூறப்பட்டுள்ளது. மின் வேகத்தில் செல்லக்கூடியது அது. புறாக் என்னும் சொல்லே மின்னைக் குறிக்கும் பர்க் என்பதனை அடியாக கொண்டது. தனிச் சிறப்பு வாய்ந்த புறாக் ஐந்து வகையான வேகத்தைக் காட்டக் கூடியது. காற்றைக் காட்டிலும் வேகத்தில் கூடியது. இவ்வாறு புறாக் கினைக் காசிம் புலவர் வருணித்துள்ளார்.

வாவு பட்சியு றுந்தலை யாட்ட
மேவும் சித்திர வைங்கதி காட்டும்
வாசி யிற்புகழ் கொண்டபு றாக்கில் வருவோரே [34]

மஹ்ஷர் என்னும் அறபுச் சொல் ஒன்று சேர்தல் என்று பொருள் படும். அச்சொல்லே தமிழில் மகுசறு என வந்துள்ளது. உலகம் அழிந்த பின்னர் உயிர்பெற்று எழும் மக்கள் திரளும் நாள் மஹ்ஷர்

நாள் எனப்படும். ஒன்று திரளும் வெளி மஹ்ஷர் வெளி அல்லது மஹ்ஷர் மைதானம் எனப்படும். இக்கருத்தினையே காசிம் புலவரும் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

விகுதி படவரு கடையுக முடிவினி
லனைய பலபல உயிர்களு மகுசறு
வெளியி னணியணி நிலைபட நிறுவிய யுயிர்யாவும் [2]

மஹ்பூப் [மகுபூப்] என்பது தோழரைச் சுட்டும். அன்பினைக் கூறும். இங்கே அல்லாஹ்வின் அன்பிற்கும் அருளிற்கும் பாத்திரமான முகம்மது நபி [சல்] அவர்களைக் குறிக்க இச்சொல் பயன்படுத்தப் பட்டுள்ளது.

நாளுந் துணைமகு பூபென் றொருதிரு
நாயன் தனியருள் பெறுதூதே [117]

என வந்துள்ளமை காண்க.

மதினாவைப்பற்றி முன்னர் குறிப்பிடப்பட்டது. மதீன மாநகரைச் சார்ந்தவர்கள் மதனியர் எனப்பட்டனர். மதினாவுக்குரியவர் எனப் பொருள் படும். மதனி என்பதுடன் தமிழ் ஆண்பால் விகுதியாக அர் சேர்ந்து மதனியர் என மதினாவாசிகள் சுட்டப்படுகின்றனர். இதைனையே காசிம் புலவர் இரண்டு பாடல்களிலும் இடம் பெறச் செய்துள்ளார்.

படித்த லம்புகழ் மதனியர் தங்கட் கிறசூலே (92)
வரமுறு மதனியர் தங்கட் குத்தம
குறுகலர் மதகஜ சிங்கக் குட்டியெ மிறசூலே (96)

கனவு என்பதை அறபில் மனாம் என்பர். பேச்சு வழக்கில் மனாம் என்றும் பயன்படுவதுண்டு. முகம்மது நபி (சல்) அவர்களைக் கனவில் காண்பது நன்மைபயக்கும் என்பர். பெறுபேறுகள் மலியும் எனக் கூறுவர். ஆகையினாலேயே காசிம் புலவரும்

கையார வெந்தன்விழி கூர வேகன
வுல்லாச மும்பெறம னாமிலேயுற வரவேணும் (134)

எனப் பாடியுள்ளார்.

மிகுறாசு என்பது மிஃறாஜ் என்னும் அறபுச் சொல்லின் தமிழ் திரிபேயாம். பெருமானார் முகம்மது (சல்) அவர்களின் விண்வெளிப் பயணம் மிஃறாஜ் என அறபில் வழங்கப்படுகிறது.

வழுவற் றிலகுந் திங்கள்
முகலக் கனமுமொன் றுங்கள்
வடிவுக் குறியுங் கண்டு மிகுறாசின் (41)

மிஹ்றாப் என்பது தொழுகையை நடத்தும் ஒருவர் நின்று தொழுமிடம். முஸ்லிம் பள்ளிவாசல்களிலே அதற்கென ஓர் இடம் ஒதுக்கப்பட்டுள்ளது. முஸ்லிம் மக்கள் தொழுவதற்காக எந்தத்திசை நோக்கி நிற்கிறார்களோ அந்தத் திசையில் உள்ள பள்ளிவாசல் சுவரின் நடுமத்தியில் அந்த மிஹ்றாபுக்கான அடையாளம் பொறிக்கப் பட்டிருக்கும். மிகுறாப் என்னும் இடம் ஒதுக்கப்பட்டிருக்கும். காசிம் புலவரும் பெருமானார் (சல்) அவர்கள் தங்களது மிஃறாஜ் பயணத்தின் போது அத்தகைய மிஹ்றாபில் நின்று தொழுதார்கள் என்பதை இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

வலுத்தமிகு றாபினின்று தனிப்பொருளை யேவணங்கி
பயிந்தல்மகு மூறிருந்த விறசூலே 27))

மொத்தமாக நபிமார்கள் ஒரு லட்சத்து நாலாயிரம் எனப்படும். அவர்களுள் முறுசலான நபிமார் முன்னூற்றுப் பதின்மூவர் ஆவர். நபிமாராக இருப்பதோடு தூதுவர்களாகவும் வந்தவர்கள் முறுசலான நபிமார், இங்கே முறுசல் என்பது தூதுவர் என்பதையே குறிக்கும். காசிம் புலவர்.

முறுசல் நபி மார்களார்வ மொடு [141]

றப் என்னும் அறபுச் சொல் தமிழில் வரும்பொழுது றப்பு என எழுதப் படுவதுண்டு. அதிபதி என்பதையே இந்த றப் என்னும் அறபுச் சொல் சுட்டும் எனலாம். தான் படைத்த எல்லா உலகங் களையும் உணவு ஊட்டிப் போஷித்துப் பாதுகாப்பவன் அல்லாஹ். உலகங்களைப் படைத்துப் போஷித்துப் பாதுகாப்பவன் என்ற பொருள்கள் அனைத்தையும் கொண்டது றப் என்னும் சொல் எனக் கூறலாம். அகில உலகங்களுக்கும் அதிபதியானவன் என்பதைக் குறிக்கவே றப் என்னும் இச்சொல் பயன்படுத்தப்படுகிறது. முகம்மது நபி [சல்] அவர்கள் மக்காவிலிருந்து மதீனாவுக்கு ஹிஜ்றத் சென்ற பின்னர் நடந்த போரில் எதிரிகளை அழிப்பதற்காக ஒரு பிடி மணலை எடுத்து அல்லாஹ்வைத் தியானித்து எதிரிகள் மீது எறிந்தார்கள். எதிரிகள் அழிந்தொழிந்தார்கள். இங்கே அல்லாஹ் றப் என அழைக்கப்பட்டுள்ளான்.

வைப்பிற் கைப் புக்குப் பிடிமணம்
றப்பைச்சித் தித்துப் பொழிமழை யெனவீசி [11]

ஷாகிது என்பது சாட்சி என்பதைக் குறிக்கும். ஒரு திருமண நிகழ்ச்சி நிறைவேற இரண்டு சாட்சிகள் அவசியம். அத்தகைய சாட்சியைக் குறிப்பிடவே காசிம் புலவர் ஷாகிது என்னும் சொல்லை,

இசையுமொலி யாய்வி ணோர்கள் ஷாகி தெனவோதி [141]
எனப் பயன்படுத்தி உள்ளார்.

அறபு மொழியிலே நபி என்னும் சொல்லை பார்சி மொழியிலே பயகாம்பர் என வழங்குவர். தமிழ் பேசும் முஸ்லிம்கள் அல்லாஹ்வின் தூதரைக் குறிக்க இவ்விரண்டு சொல்லையும் பயன்படுத்துவர். இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ் இலக்கியங்களில் நபி என்னும் சொல்லும் பயகாம்பர் என்னும் சொல்லும் ஒருங்கே பயன் படுத்தப் பட்டிருப்பதைக் காணலாம். திருப்புகழில் ஓர் இடத்திலேயே பயகாம்பர் என்னும் சொல் ஆளப்பட்டிருப்பதை காணலாம்.

ஆம்ப லணிதறை பாம்ப ரியலவே
தாம்ப ருள்பய காம்ப ரியன்மறை [140]

மற்றொரு சொல் யார் என்பது பார்சி, உறுது மொழிகளில் இச்சொல் பயன்படுத்தப்படுகிறது. இயற்பெயர்களுடன், இச்சொல் இணைந்து வருவதும் உண்டு. ஆனால் தனிமையாக யார் என்னும் சொல்லை எடுத்துக் கொண்டால் அது இஸ்லாத்தின் ஆரம்ப கலக் கலிபாக்கள் நால்வரையும் சுட்டுவதாகப் பயன்படுத்தப்பட்டு வருகிறது. அதே முறையில் யார் என்னும் சொல் நான்கு கலிபாக்களையும் சுட்ட இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ் இலக்கியங்களிலும் பயின்று வருகின்றது. அபூபக்கர் [றலி] உமறு(றலி), உதுமான் [றலி], அலி [றலி] ஆகிய நால்வரையும் சுட்ட இந்தப் பதத்தைப் பயன்படுத்தி உள்ளார்.

சேனாப தித்தலைவர் நால்யார்கண் மெய்க்கவெழு
தேசாதி பத்தியமெய்த் திருகோவே [50]

என யார் என்னும் சொல் வந்துள்ளமையைக் காணலாம்.

இங்ஙனம் அறபு, பாரசீக மொழிகளைச் சார்ந்த திசைச் சொற்கள் இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ் இலக்கியங்களிலே இஸ்லாமிய கருத்துக்களை வலியுறுத்த இன்றியமையாதனவாகின்றது.

அருணகிரி நாதரும் தமது திருப்புகழில் சில அறபுச் சொற்களைப் பயன்படுத்தி இருப்பதைக் காணலாம். நாட்டில் குடியேறிய முஸ்லிம் மக்கள் தமிழ் பேச்சு வழக்கில் பல அறபுச் சொற்களைப்

பயன்படுத்துவர். அங்ஙனம் பயன்படுத்தியதன் காரணமாகவே அறபுச் சொற்கள் தமிழ் மொழியில் புகுந்துள்ளன. அருணகிரிநாதர் தமது திருப்புகழில் பயன்படுத்தி உள்ள அறபுச் சொற்களுள் ஒன்று சலாம் என்பதாகும். சலாம் என்றால் அமைதி என்பது பொருள். ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமைச் சந்திக்கும் பொழுது வாழ்த்துக் கூறுவது சலாம் சொல்லுதல் என வழங்கப்படும். கையை உயர்த்தி சலாம் கூறுவதும் உண்டு. இது சலாம் இடுதல் எனவும் குறிப்பிடப்படும். இந்தக் கருத்திலேயே அருணகிரி நாதர் 'சலாமிடு'வது பற்றிக் குறிப்பிட்டுள்ளார். அங்ஙனம் ஆண்டுள்ள திருப்புகழ் பாடலின் இறுதி அடி இவ்வாறு அமைந்துள்ளது.

துவாதச புயாசல சடானன வாசிவ
சுதாஎயினர் மானனன் புடையோனே

சுராதிப திமாலய னுமாலபாடு சலாமிடு
சுவாமிலை வாழும் - பெருமானே.

இங்கே சலாம் என்ற சொல் பயன்படுத்தப்பட்டிருப்பதைக் காணலாம். இது சுவாமிமலைபற்றிய பாடல், தனாதன தனாதன தனாதன தனாதன தனாதனன தான தனதான என்னும் சந்தக் குழிப்பைப் பெற்று அமைந்துள்ளது.

அருணகிரி நாதரின் திருப்புகழில் இடம் பெற்றுள்ள மற்றொரு அறபுச் சொல் 'சபாசு' என்பதாகும். ஒருவனுடைய தீரச் செயல் காரணமாக அவனைத் தட்டிக் கொடுக்கும் முகமாக 'சபாஷ்' என்னும் சொல் கூறப்படுவதுண்டு. தத்தம் மகிழ்ச்சியைத் தெரிவிக்கும் பொருட்டு மக்கள் இவ்வாறு 'சபாஷ்' எனக் கூறுவர். திருநள்ளாறு பற்றிய திருப்புகழ் பாடலில் சபாசு என்னும் அறபுத் திசைச் சொல் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். அந்தத் திருப்புகழ் பாடல் தத்த தந்தன தானன தானன - தனதான என்னும் சந்தக் குழிப்பைப் பெற்று அமைந்துள்ளது. அந்தப் பாடலின் மூன்றாம் அடி இங்ஙனம் தரப் பட்டுள்ளது.

கச்சை யுந்திரு வாளுமி ராறுடை
பொற்பு யங்களும் வேறுமி ராறுள
கட்சி லங்கம லாமுக மாறுள முருகோனே

கற்பநத்திரு நாடுயர் வாழ்வுற
சித்தர் விஞ்சையர் மாகாச பாசென
கட்ட வெங்கொடு ஆக்கிளை வேரற விடும் வேலா

அல்லசல் என்பது முஸ்லிம் மக்களின் தமிழ்ப் பேச்சு வழக்கில் பெருவழக்கைப் பெற்றுள்ள ஒரு சொற்றொடர். அதனை இரண்டு சொற்களாகப் பிரிக்கலாம். அல் அசல் எனக் காட்டலாம். அல் என்பது ஓர் அரபுச் சொல்லுக்கு முன்னால் வருவது. கருத்தை வலியுறுத்தப் பயன்படுத்தப்படுகிறது.

அயல் என்பதைச் சிறப்பாகவும் அயலவர் என்பதைப் பொது வாகவும் சுட்டும் ஒரு சொல் அசல் என்பது. அல் என்பதும் அசல் என்பதும் சேர்ந்து வரும்பொழுது அது அல்லசல் என மாறி அது நெருக்கமான அயலைக் குறிக்கப் பயன்படுத்தப்படுகிறது. 'நாம் அல்லசலைக் கவனிக்க வேண்டும்' என்று கூறும்பொழுது நமக்கு மிக நெருக்கமாக அல்லது மிகச் சமீபமாக அயலால் வாழும் மக்களைத் தான் நாம் கவனிக்க வேண்டும் என்பது அங்கு தொனித்து நிற்பதைக் காணலாம். இன்றும் இதே கருத்தில் முஸ்லிம்களிடையே இச்சொற் றொடர் பயன்படுத்தப்படுவதைக் காணலாம்.

அருணகிரிநாதரும் தமது திருப்புகழ்ப் பாடல் ஒன்றில் 'அல்லசல்' என்னும் சொற்றொடரைப் பயன்படுத்தி உள்ளார். வள்ளி மலையைப் பற்றிய பாடல் அது. தய்யதன தந்த தய்யதன தந்த - தனதான என்னும் சந்தக் குழிப்பில் பாடப்பெற்ற திருப்புகழ்ப் பாடலிலே 'அல்லசல்' என்பது வருகிறது, 'அல்லசல டைந்த வில்லடல னங்கன்' என்னும் சந்தர்ப்பத்திலே அல்லசல் பயன்படுத்தப்பட்டுள்ளது. இங்கே மிக நெருங்கி வந்துவிட்ட வில்லை உடைய மன்மதன் என்னும் பொருளே தரப்பட்டுள்ளது. அந்தப் பாடலில் முதலிரண்டு அடிகளும் இவ்வாறு அமைந்துள்ளன :

அல்லசல டைந்த வில்லடல னங்கன்
அல்லிமல ரம்பு தனையேவ
அள்ளி யெரி இந்த பிள்ளைமதி தென்ற
லையமுது கிண்ட அணையூடே
சொல்லுமர விந்த வல்லிதனி நின்று
தொல்லைவினி யென்று முனியாதே
துய்யவரி வண்டு செய்யமது வுண்டு
துள்ளியக டம்பு தரவேணும்

காசிம் புலவர் தமது திருப்புகழில் சில சமயங்களில் புதிய சந்தங் களை உருவாக்கியுள்ளார். இது அவருடைய ஆற்றலைச் சிறப்பாக எடுத்துக் காட்டுகிறது. இது இவருடைய திருப்புகழுக்கு தனிச் சிறப்பைத் தந்துகொண்டிருக்கிறது எனலாம். சந்தக் குழிப்புகளைக் கொண்டு ஒரு திருப்புகழ்ப் பாடல் விளங்குகிறது. அந்த சந்தக் குழிப்பு

தனன தனதன தனன தனனதன
தனன தனதன தனன தனனதன
தந்தத் தனந்ததன தத்தத் தனத்ததன
தனன தனதன தனன தனதன
தனன தனதன தனன தனதன
தத்தத் தனத்ததன தத்தத் தனத்ததன - தனதான

இந்தச் சந்தக்குழிப்பைப் பெற்ற திருப்புகழ்ப் பாடலின் முதலாம் அடி இங்ஙனம் அமைந்துள்ளது.

இளமை பறிபட முதுமை வயதுவர
வுடலி னுளவியல் வடிவு குடியகல
விற்கட் டுறப்பழைய பற்கட் டுவிட்டகல
இயலு நடைதள ரநுரை கொளுகொளென
உரைரு ழறியிரு கணொளி யறவிருள
மிங்குற் றிளைப்பிடும லொக்கக் குலைத்தழல நெடுவீதி (38)

அதே முறையில் பல சந்தக் குழிப்புக்களைக் கொண்ட மற்றொரு பாடலும் திருப்புகழில் இடம் பெற்றுள்ளது. காசிம் புலவர் அந்தச் சந்தக் குழிப்பை இவ்வாறு அமைத்துள்ளார்.

தாந்த தனதன தாந்த தனதன
தாந்த தனதன தாந்த தனதன
தான தனதந் தான தனன
தான தனதந் தான தனன
தனதன தனதன தனதன தனதன - தனதான

இந்தச் சந்தக் குழிப்பு அமைந்த பாடலின் முதலடி இங்ஙனம் இடம் பெற்றுள்ளது.

காம்பொ டுசலிடு மோம்ப ரிலகிய
காந்தி தருமிருள் கூந்தல் முகில்சுமை
காற ருடன் சிங் கார ருடனே
காலி னொலியுங் கோல மிகல
கரவளை கலகலெ னநடமி டுபவனி விலைமாதர் (140)

பல சந்தக் குழிப்புகள் அமைந்த முதற் திருப்புகழ்ப் பாடலில் முதலாம் அடி மனிதனுக்கு இளமை போய் முதுமை வர உடல், பல், நடை, உரை கண் என்பன வலிவிழக்கும் எனக் கூறப்பட்டுள்ளது. இரண்டாம் திருப்புகழ்ப் பாடலில் முதலாம் அடி இருண்ட கூந்தலும் சிங்கார உடலும் உடைய காற்சிலம்பின் ஒலியும் கை வளையல்களின் கலகலப்பும் கொண்ட நடனம் ஆடி உலாவி வரும் விலைமாதரைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளது.

இனி இரண்டு பாடல்களையும் படித்துப் பயன் பெறுவோம்.

இளமை பறிபட முதுமை வயதுவர
வுடலி னுளவியல் வடிவு குடியகல
விற்கட் டுறப்பழைய பற்கட் டுவிட்டகல
வியலு நடைதள ரநுரை கொளுகொளென
வுரை குறியிரு கணொளி யறவிருள
மிக்குற் றிளைப்பிரும லொக்கக் குலைத்துழல நெடுவீதி

யுளைவு நருமோரு கைதடி மிசைகுவிய
வொருகை தனியசை யவரு கிழவனென
வட்டத் தனந்தியர்கை கொட்டிச் சிரித்திகழ
வுணர்வ ழியமிகு திசல மலமொழுகி
யுயிர்பி ரியவுற வின்முறை யழவடிமை
செத்துக் கிடக்குமுன முத்திப் பதத்தினிணை யருள்வீரே

கனிப டருவிட மனைய கொடியகுபி
ரடல ரசர்கன மகுட முடியிடறி
வெப்பைத் துவைத்துவட வெற்பைக் குலுக்கியடர்
கரட கடமடை படியும் விகடதட
முகப டினகடி னநடை நெடியகடல்
வற்றக் கலக்கிவிடு மொற்றைக் களிற்றுதைய மகுமூதே

வளம லியபசி யவிழ மடல்விரியு
முளரி மிசைவதி யமுது குடவளைகள்
பட்டப் பகத்குள் வெளி முட்டக் கதித்துலவி
வரும தியுகதிர் மதியி னொளிர்புதுவெ
ணிலவு மிழவளர் குவளை பொதியவிழு
மக்கப் பதிக்குமுயர் சொற்கப் பதிக்குமர சிறசூலே

காம்பொடுசலிடு மோம்ப ரிலகிய
காந்தி தருமிருள் கூந்தல் முகில்சுமை
காற ருடன்சிங் கார ருடனே
காலி னொலியுங் கோல ேமிகல
கரவளை கலகலெ னநடமி டுபவனி விலைமாதர்

பாம்பி னுடபட வேண்டி மயல்கொடு
பாய்ந்து வடிதனில் வீழ்ந்து மனமெழு
பார முலைநெஞ் சார கனிவாய்
பாகி னமுதுண் டாக மகிழப்
பரவச முடனது தினமிது தொழிலென வுழல்வேனோ

தேம்பல் தனிசொரி பூம்பொ ழிலழகு
சேந்த மதினாமின் வேந்தர் நலனொடு
சேர வருள்கண் பாரு மினிய
தேரு மறிவுந் தாரு மொழித
சிரசறு சடிபடி முடிதொட திடமுடன் வருவோரே

யாம்ப லணிதறை பாம்ப ரியலவே
தாம்ப ரருள்பய காம்ப ரியன் மறை
யாலநபி கொந் தால நயினா
ராசில் மரபில் காசி மெனையும்
மருளக மகிழகு மதுமுகம் மதுநபி யிறசூலே.

## சந்தத் திருப்புகழ்

பல்வேறு சந்தங்களில் பாடக் கூடியதாக நூறு பாடல்களைத் திருப்புத்தூர் அருள்வாக்கி அப்துல் காதிர் அவர்கள் தமது சந்தத் திருப்புகழில் இடம் பெறச் செய்துள்ளார். பொதுவாகத் திருப்புகழ்ப் பாடல்கள் சந்தத்துடன் பாடக் கூடியவை. எனினும் அருள்வாக்கி அப்துல் காதிர் அவர்கள் தமது நூலுக்குச் சந்தத்திருப்புகழ் எனப் பெயரிட்டுள்ளார். ஒருவேளை ஏனைய திருப்புகழ் நூல்களிலிருந்து தமது நூலை வேறுபடுத்திக் காட்ட அவர் இங்ஙனம் பெயரிட்டிருக்கலாம். அருள் வாக்கி அப்துல்காதிர்ப் புலவரின் சந்தப்பாவன்மையும் சொல் லாட்சியும் பொருட் செறிவும் சந்தத் திருப்புகழில் சிறந்து விளங்கு வதைக் காணலாம். ஆசிரியருடைய சிறப்புத் தன்மையை எடுத்துக் காட்டுவதற்குச் சான்றாக அமைகின்றன சந்தத் திருப்புகழ் என்னும் நூலுக்குத் தரப்பட்டுள்ள சிறப்புப்பாயிரங்கள். பண்டிதரும் புலவருமாக முப்பத்து நான்கு பெரியார்கள் இந்நூலுக்குச் சிறப்புப் பாயிரங்கள் வழங்கி உள்ளனர்.

சந்தத் திருப்புகழ் படிப்பதனால் ஏற்படும் நூற்பயனை ஆசிரியர் ஓர் ஆசிரிய விருத்தச் செய்யுளில் சுட்டிக்காட்டி உள்ளார்.

இதனைப் படித்தால் அறிவு வளரும்; நற்பேறு உண்டாம்; அல்லாஹ் வின் அருள் கிட்டும்; தீமை விளைக்காத நற்பொருளைச் சேர்க்கும்; முகம்மது நபி (சல்) அவர்களின் கருணையைப் பெற்றுத் தரும். இக்கருத்துக்களையே ஆசிரியர் ஒரு செய்யுளில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

திருவளர் ஞான மேவுஞ் செழும்பர கதியிற் சேர்க்குங்
குருபர னருளைப் பூட்டுங் கோதிலா நிதியுண் டாக்குஞ்
கருவளர் முகம்ம தெங்கோன் கருணையுண் டாமெந் நாளுங்
தெருளமைந் துயர்ந்த சந்தத் திருப்புகழ் படிப்போர்க் கன்றே.

அருள் வாக்கி அப்துல் காதிர் புலவரின் ஒரு சந்தத் திருப்புகழ்ப் பாடலை எடுத்துக்கொள்வோம். இந்தப் பாடலுக்குரிய சந்தக் குழிப்பு தனன தனதன தனதன 'தனதன'-தனதானா என அமைந்துள் ளது. இந்தச் சந்தக் குழிப்புக்குடைய திருப்புகழ்ப் பாடலில் உள்ளது போன்று கோடிச் சொற்கள் அமைந்துள்ளன. ஒரே உச்சரிப்பை உடையனவான இரட்டைச் சொற்களாயினும் ஒவ்வொரு சொல்லி னதும் முதல் எழுத்து வேறுபட்டே வந்துள்ளது. காசிம் புலவரின் 13 ஆம் 116 ஆம் திருப்புகழ்ப் பாடல்களுடன் ஒப்பிடலாம். அருள் வாக்கி அப்துல் காதிர் புலவரின் சொல்லாட்சி சிறந்து விளங்கும் பாடலை இப்பொழுது பார்ப்போம்.

நனைகொள் வடமணி நிரையினு முரையினும்
முலவி மனமெனு நடையினு முடையினு
நளின வணிமுலை முகையினு நடையினு மதிமோக

நமனை நிகருட னெளியினு முழியினு
மனம துழலணி மயிலினு மொயிலினு
நறிய முகிலடர் குழலினு நிழலினு மடமாதர்

மனம தினிதுற மருவினு மொருவினு
மலைக ளடியொடு பொடியினு மிடியினு
வலிய திரைகடல் சுவறினு நில்வினு மடல்வானோர்

மருவு புவிமிசை நிறையினு மறையினு
மிடிமை யுறுபவ ருயரினு மயரினும்
வனச மலரடி கனவினு நினைவினு மறவேனே

வினைய மொழியினர் மிடையினு முடையினு
மதுர கவிநிறை பிசகினு மிசைகினும்
விரத துறவலர் விடுகினு முடுகினு மிகலார்கள்

விகட படைகொடு விகலினு மகலினு
மரிய மளைவல ரொழுகினு மிழுகினும்
விஜய முறுதிரு நபியென வுலகினி லுறுவோரே

அனமு மழகிய குருகுக ளுலவிய
கதிர் கொ ளிடனுறு பணைகளு முயர்கழை
யணியி னிறுவிய தெனவளர் துடவையு மழகாக

வலகு மலறிய குடவளை பணிமணி
யொளிரு நதிபதி யுலகணி திலதமெ
னதிக வளமுறு மதினவி ணரசுசெ யிறசூலே.

இங்கே இயற்கையே மாறினும் மாறுபடாத குணங்கள் உடையவர் நபீகள் நாயகம் (சல்) அவர்கள் என்பது சுட்டப்பட்டுள்ளது. இந்தத் திருப்புகழ்ப் பாடலில் கடைசி அடியில் மதீனாவின் இயற்கை வளம் விவரிக்கப்பட்டுள்ளதைக் காணலாம்.

காசிம் புலவர் தமது திருப்புகழ்ப் பாடலில் ஒன்றுக்கு மேற்பட்ட சந்தக் குழிப்புக்களை அமைத்துச் சில பாடல்களைப் பாடியிருப்பது போல அருள் வாக்கி அப்துல்காதிர் புலவரும் தமது சந்தத் திருப்புகழில் பல சந்தக் குழிப்புக்களை அமைத்துப் பாடியுள்ள திருப்புகழ்ப் பாடல் முதலாம் அடி இவ்வாறு அமைந்துள்ளது.

தரும தெறிபெற வமுத நிகர்பர
கதியி னடையவு முகித தளவருள்
பத்தர்க் களித்திருள - றுத்துச் சுகக்கருணை
தருதருவை யனையகர மலரினவ மழைபொழிம
தரிதகலை யுதவுமிறை
தத்வத் துதித் தெழுவி - சித்ரக் கனக்குடையி னமரேசா(36)

இந்தப் பாடலுக்காக பல சந்தக் குழிகள் ஒன்று சேர்க்கப் பட்டுள்ளன. இவ்வாறு அமைந்துள்ளன.

தனன தனதன தனன தனதன
தனன தனதன தனன தனதன
தத்தந் தனந்ததன தத்தந் தனத்ததன
தனனதன தனனதன தனனதன தனனதன
தனனதன தனனதன
தத்தத் தனத்ததன தத்தத் தனத்ததன

சந்தக் குழிப்புகளின் 88 வது பாடலிலும் பல சந்தக்குழிப்புகள் அமைக்கப்பட்டுப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மற்றொரு பாடல் குறுஞ்சீர் வண்ணமாக அமைந்துள்ளது. அதன் சந்தக் குழிப்பு தனதன தனன - தனதானா என வந்துள்ளது. பாடலின் முதலடி இதுதான்.

பயலிவ னயன
பணிபணி பதும
பதமல ரெளிய மதனூடு

பளிரிடு மொளிவு
ளொளிவென வுணரு
பலனனு தினமு மருள்வீரே.

இந்தப் பாடலின் கடைசி அடியில் மதின மாநகரின் இயற்கையை வருணிக்கப் பட்டுள்ளது. மலர்கள் மலிந்த பூஞ்சோலைகளையும் மீன்கள் நிறைந்த நதிகளையும் விளைந்த வயல்களையுமுடைய மதினா மாநகர் பற்றி அங்கு குறிப்பிடப்பட்டுள்ளது. அந்த அடி வருமாறு.

அணிமலர் பொழிலி
வறுசர ணுகள
வளர்மது நதிக ளெனவோடி

அகலிய பணைக
ணிறைவுற விளையு
மழகுநென் மதின விறசூலே

அருள்வாக்கி அப்துல் காதிர் புலவரின் நெடுஞ்சீர் வண்ணம் தானத் தானன தானன தானன - தனதானா என வந்துள்ளது. இந்தச் சந்தக் குழிப்பு அமைந்துள்ள திருப்புகழ்ப் பாடலின் முதலடி இதுதான்.

நீதித் தாயிறை யோனருளேயுற
வோதித் தாழ்மையொ டேதொழு காதிவ
ணீலிப் பூவையர் பாலினி தாய்மிக வுறவாடி

நீளப் பாவம கோததி மூடனை
நேரிப் பூவினி வாருள ரோதவ
நேமத் தாபர மேபெற மாதய வருள்வீர்தண்

இந்த சந்தத்திருப்புகழ்ப் பாடலின் கடைசி அடியில் ஆரிரோ என்னும் குழிப்பு சேர்க்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

மாதர்ப் பாலக ராரிரி ரோவெனு
மோசைக் கேகுயி லேர்துயி லேசெய
வாவிப் பாலன மாதரி னாடிட மலர்ச்சோலை

வாயிற் றேனயி றோகையி னாலரி
காதற் றீமிசை பாடிடு மால்வள
மாமக் காநக ராதிப ராய்வரு மிறசூலே.

இந்த அடியில் மக்காவின் இயற்கை வளம் வருணிக்கப்பட்டுள்ளதை காணலாம்.

அருள் வாக்கி அப்துல்காதிர்ப் புலவரின் சந்தத் திருப்புகழில் மெல்லிசை வண்ணம் உள்ள பாடலும் இடம் பெற்றுள்ளது. அதன் சந்தக் குழிப்பு தந்தந்தந் தந்தந் தந்தன-தனதானா என வந்துள்ளது. அதற்குரிய பாடலின் முதலடி இது :

மஞ்சஞ்சுங் கொங்கங் கொந்தன
முங்கும்பம் பந்தும் பம்பர
மஞ்சந்தண் கஞ்சஞ் செஞ்சிமிழ் முலையாலு

மந்தன்கண் டஞ்சுஞ்சம்பிஞ் சஞ்சன
வம்புங்கஞ் சம்பிஞ் சஞ்சன
வண்டுங்கண் டலிசுங்குஞ்சர விழிமாதர்

சந்தத் திருப்புகழில் வந்துள்ள வல்லிசை வண்ணத்துக்குரிய ஓர் எடுத்துக்காட்டாக இந்தப்பாடலின் முதலடியைக் காட்டலாம்.

விச்சித்ரத் தெட்டுச் சுவனமு
எமட்டுத்திக் கெட்டுக் கிரிதொனி
மிக்குற்றுத் தந்துக திறைகட லுயிர்யாவும்

மொச்சிச் சொர்க் கத்துக் கிறையென
நந்திச்சித் தந்திற் றெளிவுறு
வெற்றிப்பட் டத்தைப் பெறுமரு ளொளிவாலே

என வந்துள்ளது.

மக்கமாநகரினதும் மதீனமாநகரினதும் பல எழிலுறு காட்சிகளைத் தமது சந்தத் திருப்புகழில் ஓவியங்களாகத் தீட்டி உள்ளார் ஆசிரியர் அப்துல் காதிர். இரண்டு நகரங்களிலும் கண்கவர் தோற்றங்கள் மிளிர்கின்றன எனப் படம் பிடித்துக் காட்டி உள்ளார். ஒரு காட்சியைப் பார்ப்போம்.

'பறவையினம் அங்கும் இங்கும் திரிந்தன. பறவைகளின் இறகுகள் ஒளி பொருந்தியவை. உழவர் வயல்களிலே உழுதனர். எருதுகளைக் கட்டி உழுதனர் பறவைகளின் நடமாட்டமும் எருதுகளின் திரிச்சலும் காரணமாக அங்குள்ள உள் முத்துக்கள் சிதறின. சிதறி அங்கும் இங்கும் சிந்தப்பட்டிருந்தன. அந்த முத்துக்களிலிருந்து ஒளி வீசப்பட்டன. அந்த ஒளி, விண்ணிலே வெள்ளிகளின் பிரகாசத்தைப் பெரிதும் ஒத்திருந்தது. அத்தகைய ஒளியால் சூழப்பட்ட பூஞ்சோலைகளில் மயில்கள் அகவின, நடனமாடின, இடைக்கிடையே வண்டுகள் மதுவருந்தி இசை பாடின இத்தகைய உள்ளத்தைக் கொள்ளும் காட்சிகளை உடையன மக்கமாநகரமும் மதீன மாநகரமும். இத்தகைய மதீன மாநகரத்திலிருந்து முகம்மது நபி (சல்) அவர்கள் செங்கோல் ஒச்சி உலகில் இஸ்லாம் பரவ வழிகோலியிருந்தார்கள். இக்கருத்துக்களையே அருள்வாக்கி அப்துல் காதிர் தமது சந்தத் திருப்புகழ்ப் பாடல்களுள் ஒன்றில் விவரித்துள்ளார். அந்தப் பாடலின் இறுதியடி இங்ஙனம் இங்கே அமைந்துள்ளது:

சிறையொளிரு பறவையின மார்தண் டடத்துலவு
முழவருமு பகடினடை யாலுந் தெறிப்பவளை
சிதறுமணி யொளிவுவெளி மீனென் றெறித்தசுட ரதுபோலும்

திவியமல ருறுபொழிலின் மேவும் பசந்தமயி
லகவிநட னமிடலறு கால்வண் டரற்ற வொளி
திகழுமெழில் புடைகொண் மதினாமண் டலத்தரச விறசூலே

இதன் சந்தக் குழிப்பு தனனதன தனனதன தானந் தனத்ததன - தன தானா என அமையும். இங்ஙனம் பல அருமையான சந்தங்களை அடிப்படையாக வைத்து பல திருப்புகழ்ப் பாடல்கள் பாடப்பட்டுள்ளன.

யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த முஸ்லிம் தமிழ்ப் புலவர்களுள் ஒருவர் அசனா லெப்பை அவர்கள், சுல்தான் முகியத்தீன் என்பாரின் புதல்வர். தமிழ், ஆங்கிலம், அறபு மொழிகளில் பாண்டித்தியம் பெற்றவர். அரசாங்க அலுவலகத்தில் எழுத்தராகக் கடமையாற்றியவர். சு. அசனா லெப்பையின் பாடல்கள் புகழ்ப்பாவணி என்னுந்தொகுப்பில் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் ஒன்று நவரத்தினத் திருப்புகழ் நபிகள் நாயகம் முகம்மது(சல்) அவர்கள் பேரில் பாடப்பட்டது. பத்துப் பாடல்களைக் கொண்டது. ஏனைய திருப்புகழ்கள் போன்று நவரத் தினத் திருப்புகழிலும் ஆசிரியரின் சந்தப்பா வன்மையும் சொல்லாட்சி யும், பொருட்செறிவும் திகழ்வதைக் காணலாம். மக்கம், மதீனம் என்பன திருத்தலங்களாகப் பாடப்பட்டுள்ளன.

அசனா லெப்பையின் நவரத்தினத் திருப்புகழ்ப் பாடல்களிலிருந்து ஒரு பாடலைப் பார்ப்போம். அந்தப் பாடல் தனதான தானதத்த தனதான தானதத்த தனதான தானதத்த - தனதான என்ற சந்தக் குழிப்பில் அந்தப் பாடல் அமைந்துள்ளது. அந்தப் பாடல் வருமாறு:

ஒருவாத வாதபித்த வளுரீளை மேகவெட்டை
உழல்மேனி காய்வுவிக்க - சொறிசோகை
உயர்பார்வை கேள்விமற்றை இருகால்கை சேரியக்க
முறையாதி தீரவுற்ற - பலநோய்கள்
வருதீய மார்படைப்பு நலிவார்சு வாதகுத்து
வலிமூல வாயுகுக்கல் - புனல் கோவை
மருண்மேவு ரோககுட்டம் வெருவார்வ சூரியச்ச
மலிபேதி யாதியெற்கு - முடுகாதே
தருமேத பேய்களுட்கு திருவேத போதபத்தி
தவமூவ லாண்மனத்தும் - வருநோய்கள்
தணியாத தீயிறப்பு பகை ஞோர்கை யான்மடிப்பு

தைநிரின் மாய்வு மற்று - நிகழாதே
குருவேயெ னாவிசைத்து மிருபாத போதுபற்று
கொடியேனையாதரித்து - மருடாரீர்
கொடிமாட மீதிரத்ன மணிதூய வாணி முத்து
குலனோடு காலுமக்க இறசூலே (6)

அடரு மணலிய றிரியினு மிரியினு
முதகவி யல்புது சறுகினு மறுகினு
மனலி னுறுகுண மிகலினு மகலினும் விசைமேவு

மரிய வழுமுறை வழுவினு நழுவினு
நிவருமலைநிலை பதறினு முதறினு
மகில மிசைதொடர் குலையினு மலையினு மலையாதி

யிடைகொ ளெழுகடல் புரளினும் வரளினு
மொளிரு முடுவின முதிரினு மதிரினு
மினிய செழுமதி தளரினு முளரினு மகன் மேல்பா

லிரவி யுதயம தியலினு முயலினு
மனது குணதிசை படியினு மடியினு
மிணையில் கதிர்முனை குவியினு மவியினும் விரிநீர்மை

யுடைய ககன்முக டிடியினு மொடியினு
மவனி யொடுககன் விரவினு நிரவினு
முயில்கண் முழுமையு மழியினு மொழியினு மொருபோது

முலக முழுவது மறிதக வெறிதக
நெகிழ நபியென விறைதரு மறைதரு
முவமை தவிர்பெயர் மறைதலில் குறைதலில் மகுமூதே

மடமை குடிகொடு மிடிமைய னடிமையன்
மனதி லிதன்மிசை தினமது குணமது
வளர விருவிழி பொழிதரும் விழிதரு மளிதாரீர்

மதுவி கதியுட னருமைகொள் பெருமைகொள்
முலைகொள் பயநதி விசைகொளு மிசைகொளு
மதின நகர்வயின் வதிதரு மதிதரு மிறசூலே.

வேறு எந்தப் புலவரும் பயன்படுத்தாத இருபத்து நான்கு சோடிச் சொற்களை அசனா லெப்பைப் புலவர் தமது திருப்புகழ்ப் பாடலில் இடம்பெறச் செய்திருப்பது அசனா லெப்பைப் புலவரின் சொல்வன்மையையும் சந்தப் பயிற்சியையும் எடுத்துக்காட்டுகிறது.

## பஞ்சமணித் திருப்புகழ்

சு. அசனா லெப்பைப் புலவரின் அச்சேறாத திருப்பாடல்களும் உண்டு. அவற்றுள் ஒன்று பஞ்சமணித் திருப்புகழ். ஐந்தே திருப்புகழ் பாடல்களைக் கொண்டது அந்நூல். அந்த ஐந்து திருப்புகழ்ப் பாடல்களுக்குரிய சந்தக் குழிப்புகளை ஆசிரியர் குறிப்பிடவில்லை. ஆனால் ஆசிரியருடைய சொல்லாட்சி ஒழுங்கினை நோக்கும் பொழுது அந்தத் திருப்புகழ்ப் பாடல்கள் எத்தகைய சந்தக் குழிப்புகளுக்கு இணங்கப் பாடப்பட்டிருத்தல் வேண்டும் என்னும் முடிவுக்கு வரலாம், இந்த பஞ்சமணித் திருப்புகழ்ப் பாடல்களுள் மூன்றாவதாக அமைந்துள்ள பாடல் தத்தன தத்தன தத்தன தனதான என்னும் சந்தக் குழிப்புக்கமையப் பாடப்பட்டுள்ளது எனலாம். கையேட்டுப் பிரதியில் உள்ள அந்தப் பாடலைப் பார்ப்போம்.

துத்தத கைச்சுதை மிக்கது வர்ப்புள
மட்டொடு விட்டக லப்பினு வப்பொடு
துத்தமெ டுக்கும னப்பரி சற்றன நாவாலே

சொற்றவை கற்றிடு மித்திற லுற்றவ
கற்றறி துத்தியின் தத்தையை யொப்பிடு
சுட்டுநி கர்த்தில னற்பொரு டுற்பொருள் இடும்வேளை

யுத்தம முற்பொருள் விட்டுவி தப்பொடு
கெட்டவை பற்றியெ டுத்திடு மிச்செய
லுற்றிடு மற்றரி பெட்டியை யொத்தன லதனாலே

ஒப்பறு கத்தனை நித்தநி னைக்குத
லத்தனை வர்க்கும்மு ரைத்தவி யற்றுத
லுட்பகை யற்றிட மெய்ச்சம ருற்றிடன் முயலாது

மெத்நம றத்தைய கத்தினு றுத்தலை
முற்றும வப்பொய்வி ருப்பினி சைத்தலை
மிக்கப வத்தொழி னத்தியி யற்றலை நனிதேடி

மித்திர ரற்றெனின் தத்துவ ரற்றிருண்
மொய்த்தச முத்திர மொத்தவி றத்தலில்
வெற்பினி லக்கடி யுற்றிடு மக்கல மதிலேகி

னத்தமொ டுற்கமி டத்தப தித்திசை
யுய்க்குமி வற்றைவி லக்கிவ ணப்பணை
நட்பொடி கைத்துமி றப்பெனு மப்பினை நனிதாவ

நற்கல னொத்தவ ளத்தைய ளித்தும
கிழ்ச்சிமி கைத்தசு வர்க்கம ளிக்குதிர்
நத்தளி முத்தொளிர் மக்கமு தித்தொளி ரிறசூலே.

பஞ்சமணித் திருப்புகழினுக்குக் காப்புச் செய்யுளாக அமைந்துள்ளது, விற்பூட்டுப் பின் முடுகு வெண்பா. அது வருமாறு.

காப்பாத் திருப்புகழைக் காதலுட னற்றமிழின்
யாப்பா னுரைக்க வகவிடத்தைப் —பூப்பான்
மருவுமுத்தி னுருவெடுத்து மயில்வனத்தி னவதரித்த
குருவைமுத்தி தரவமைத்த கோன்

## சத்தரத்நத் திருப்புகழ்

அசனா லெப்பைப் புலவரின் அடுத்த திருப்புகழ்ப் பாடல் சத்தரத்நத் திருப்புகழ் ஏழு பாடலைக் கொண்டமையால் அது அவ்வாறு அழைக்கப் பட்டுள்ளது. அதுவும் இன்னும் கையேட்டுப் பிரதியாகவே உள்ளன. அங்கு இடம் பெற்றுள்ள காப்பு விருத்தம் இவ்வாறு அமைந்துள்ளது.

மலர்மேவு மருவெனவுஞ் சுதைமேவு சலமெனவு மதித்திடாத
நிலைமேவு பொருளெனவு முயிர்மேவி யெவ்விடத்து நிறம்பிமற்றுக்
கலைமேவிக் கருதிடுவோ ரகமேவிக் காட்சிதருங் காரணத்தோ
னலமேவி யெக்காலும் பணிந்திறைஞ்சிப் புகழ்ந்திடுவாம் நசைந்து
மாதோ.

வேறெந்த நூலிலும் கூறாத அவையடக்கத்தை ஆசிரியர் சத்தரத்நத் திருப்புகழில் இடம்பெறச் செய்துள்ளார். கற்றோர் முன்னர் தாம் திருப்புகழைப் பாட முற்படுவது நவரத்தினங்களின் முன்னர் குற்ற முள்ள ஒரு கல்லை வைப்பது போன்றது எனக் குறிப்பிடப்பட்டுள்ள செய்யுள் வருமாறு :

முத்தமிழோர் பாவாணர் கூறிடுநல் யாப்பிசைக்கு முன்யா னொன்று
சத்தரத்நத் திருப்புகழென் றுயர்நாமந் தரித்திசைகள் சாற்றுந்
தோற்றம்

நித்திலமத் துகிர்வயிர மரகதம்பச் சைநீல நிதிகண் முன்றி
வித்தலமா சுறுசிலை யோடுபல மவைக்கேற்ப வெதிருறுவ போன்மே

அசனா லெப்பைப் புலவரின் சத்தரத்நத் திருப்புகழின் முதலாவது பாடலைப் பார்ப்போம். சந்தக் குழிப்பு குறிப்பிடவில்லை யெனினும் அந்தப் பாடல் தனன தனதன தனதன தனதான என்பதற்கிணங்கவே பாடப்பட்டுள்ளது. இனிப் பாடலைப் பார்ப்போம்.

இறைவ னொளிவினி லெழுசுட ரிலகுநன்
மணியின் லடிலமு மயிலின துருவமு
மிசைய லதுவது வினிலுரு பலவென வெளியாகி

இமைய ரிடமுத லறுசொடு குறுசது
மெவையும் வகைவகை பிரிவொளி வதிலுள
விதமு மகித முரைதரு பவரிவ ரெனவாதி

மறையின் மிசையரு ளிடவுல குறுபவ
ரொருமை பெறவக மதிலுணர் பெரியவர்
மறுகு சிறிவர் தெரிதரு முயிரின முதலாக

மருவி வெளிபட லுகதினி லுளபொரு
ளெனவு நலவிறை யிடையினு மொருமுக
மனித ரிடையினு மொருமுக முறுதிரு மகுமூதே

நெறிகொ ளிதமிலி சறகினி னியலிலி
முதிரு மறிலிலி சுருதியி னுணர்விலி
நினது முறையிலி கதியிலி மழயிலி யருளாள

நிலையி னசையிலி தொருசெய லணுவிலி
ஒருவர் துணையிலி யொருபொரு டெரிவிலி
நிமல ருளவிலி யறனிலி திறனிலி வினையான

சிறுமை முழுவது மகலநி னருண்மல
ரடியை யுலகினு மகுசறு வயினரர்
செறிய வரிசுடு பொழுதினு மருள்புரி வரதாதா

திசைக ளெவையினு மரசுறு புரவலர்
கனக நவமணி புனைமுடி யணிபவர்
தினமு நிபுகழ் செயுமகு மதுநபி யிறசூலே.

இக்கையேட்டுப்பிரதிகள் 1973 ஆம் ஆண்டில் மறைந்த பெரியார் அல்ஹாஜ் டாக்டர் எ. எம். அப்துல் அஸீஸ் அவர்களிடமிருந்து பெறப்பட்டது. அவர் ஆசிரியர் சு. அசனா லெப்பைப் புலவரின் சகோதரரின் புதல்வராவார்.

## சீறாப்புராணத் திருப்புகழ்

சீறாப்புராணத்திருப்புகழ் ஓர் அலாதியான படைப்பு. இந்த நூலில் இடம் பெற்றுள்ள திருப்புகழ்ப் பாடல்களுள் முதல் மூன்றும் குறை இரங்கும் பாடல்களாகவே அமைந்துள்ளன. முதலாவது பாடல் ஸ்தோத்திரத் திருப்புகழ் என்றும் இரண்டாவது காப்புத்

திருப்புகழ் என்றும் மூன்றாவது நபிநாயகத்தை வேண்டற் திருப்புகழ் என்றும் பெயரிடப்பட்டுள்ளன. முதல் பாடலில் சீறாப் புராண கடவுள் வாழ்த்தில் குறிப்பிடப்பட்டவர்கள் சுட்டப்பட்டுள்ளனர். காப்புத் திருப்புகழ் பெருமானார் (சல்) அவர்களைப் புகழ்ந்து பாவாகப் பாடத் தமக்கு அருள் புரியுமாறு இறைவனை வேண்டுகின்ற பாடலாக அமைந்துள்ளது. மூன்றாவது திருப்புகழ் நபிகள் நாயகம் (சல்) அவர்களிடம் இத்தகைய இனிய கவிகள் சில பாட அனுமதி வழங்குமாறு கேட்டுப் பாடப்பட்டதாகும்.

இந்த நூலுக்குச் சீறாப்புராணத் திருப்புகழ் எனப் பெயரிடப்படுவதற்கான காரணம் இந்தத் திருப்புகழில் இடம் பெற்றுள்ள நான்காம் திருப்புகழ்ப் படலங்களை அடிப்படையாகக் கொண்டனவாகும். சீறாப் புராணத்தில் உள்ள தலைமுறைப் படலம் அந்தப் பெயராலேயே மூன்று திருப்புகழ்ப் பாடல்களை கொண்டு விளங்குகிறது. ஏழாம் பாடல் திருநபி மனை மகிமையும் நாம கரணமும் எனப் பெயர் சுட்டப் பட்டுள்ளது. இவர்களை தரித்தபடலம் இரண்டு பாடல்களிலும் பாடப் பட்டுள்ளன. ஏனைய படலங்கள் ஒவ்வொன்றிலும் பாடப்பட்ட கருத்துக் கள் ஒவ்வொரு திருப்புகழ்ப் பாடலில் இடம் பெற்றுள்ளன.

காண்ட அடிப்படையில் பார்க்கும் பொழுது சீறாப்புராண விலாதத்துக் காண்டத்தில் இடம் பெற்றுள்ள செய்திகள் முப்பது திருப் புகழ்ப் பாடல்களிலும் விவரிக்கப்பட்டுள்ளன. விலாதத்துக் காண்டத்தில் உள்ள செய்திகள் குறிப்பிடப்பட்ட பின்னர் விலாதத்துக் காண்டம் சம்பூரணம் என்னும் நுபுவ்வத்துக் காண்டத்தில் இடம் பெற்றுள்ளன. பாடல்களாகப் பாடப் பெற்று முடிவடைந்தும் நுபுவ்வத்துக் காண்டம் முற்றுப் பெற்றது என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன. சீராப் புராணத்தில் மூன்றாம் பாகமான ஹிஜ்ரத்துக் காண்டத்தில் உள்ளவை இத்திருப் புகழில் இடம்பெறவில்லை. ஆனால் ஹிஜ்றத்துக் காண்டம் சீக்கிரம் வெளிவரும் எதிர் பாருங்கள் என நுபுவ்வத்துக் காண்டப் பாடல்கள் முடிவடைந்ததும் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். இன்ஷாஅல்லாஹ்' அல்லாஹ் நாடினால் எதிர்பாருங்கள் அஸ்ஸலாமு அலைக்கும் என் பதையும் ஆசிரியர் குறிப்பிடத் தவறவில்லை. அந்தப் பாகம் வெளி வந்தமைக்கு ஆவணக் காப்பகத்தில் எவ்விதக் குறிப்பும் காணப்பட வில்லை.

சீறாப்புராணத் திருப்புகழ் நூலில் உள்ள ஒவ்வொரு பாடலுக்கும் சந்தக் குழிப்பு தரப்பட்டுள்ளது. எல்லாத் திருப்புகழ்ப் பாடல்களுக்கும் அரும்பத உரையும் அளிக்கப் பட்டுள்ளது. பெரும்பான்மையான பாடல்கள் பொழிப்புரையையும் கொண்டுள்ளன.

உமறுகத்தாப் ஈமான் கொண்ட படலத்தில் இடம் பெற்றுள்ள செய்திகள் சீறாப்புராணத் திருப்புகழ் முப்பத்து நான்காவது பாடலாக அமைந்துள்ளது. அதே தலைப்பைக் கொண்டுள்ளது. சீறாப் புராணத்தில் உள்ளவாறே இங்கும் குறிப்பிடப்பட்டுள்ளது, அபூஜகல் பெருமானாரை வெட்டிக் கொன்றவர்களுக்குத் திரவியமளிப்பதாகக் கூற உமறு புறப்பட்டுச் சென்றார். வழியில் ஒரு மலக்கு மாடாக வந்து எதிரே குறுக்கிட்டது. உரையாடல் நடைபெற்றது; மாட்டை வெட்ட முடியுமானால் தான் நபி பெருமானாரையும் வெட்டலாம் என்று மாடு கூறியது. உமறு அவர்களினால் மாட்டை வெல்ல முடியவில்லை. வீடு திரும்பினார் உமறு. அப்பொழுது சகோதரி குர்ஆன் ஓதுவதைப் பார்த்தார். கோபப் பட்டு சகோதரியை அடித்தார். இரத்தம் பீறிட்டது. பின்னர் உமறு அவர்கள் மனமிரங்கி சகோதரி ஓதிக் கொண்டிருந்ததைப் பெற்று ஓதியதும் அது நல்லதென உணர்ந்தார். நபிகளாரிடம் சென்றார். கலிமாச் சொல்லி இஸ்லாத்திலானார். இது தான் சீறாப் புராணத் திருப்புகழ் கூறும் கதை. நுஃமான் என்பவரைச் சந்தித்ததும் அது தொடர்பான செய்திகளும் இங்கு இடம் பெறவில்லை. இனிப் பாடலைப் பார்ப்போம். இந்தத் திருப்புகழ்ப் பாடல் தானன தானன தனதன தத்தன தனனதானா என்னும் சந்தக் குழிப்பைக் கொண்டுள்ளது.

பாவிய புஜகல் முஹமதை வெட்டின
பேர்பெறு வீர்தன மெனவிவை செப்பினன்
பாரொளி வாளொடு நொடிதனில் வெட்டுவ னெனவோதி

பாரிய கோவுமர் செலவிறை சொற்படி
வானவர் காளையி னுருவொடு பொற்புமர்
பாதையி லேகுவ தறைபெய வெட்டுவன் மகமூதி

னாவியு மேஇட வெனவிது தப்பிதம்
நீயுமெ னோடமர் புரியென வெட்டின
ராகவி லொருபொழு தவரைச மர்செய்து முடியாமல்

மேவுரு துதியு முறவுமி ரக்கம
தாய் மறை தரவென மறைதர முத்திய
மிதென வேநபி தனையும டுத்திட வருபோது

மேலவ ரேபலர் சிலையரு குற்றொரு
சேதிசொ லாயென முஹமத் சற்குண
மேபெறு மாநபி யிடமிவை சொற்றிடு மெனவோதக்

காவிடை யேயுமர் சிலையென சத்தியம்
மாதியு மாமன திடைகொடு முந் நாளிற்
கார்முகி நேர் நபி யருகுற வுற்றிடு முதியோர்கள்

காபிரெ னோதிட லதுததி வித்தக
ராமமு ஜாலஸ வழிவிட வத்ததி
காணும ரோடணி மறையையுரைத்திடு மிறசூலே.

அத்தாசீமான் கொண்ட படலம் மற்றொரு திருப்புகழ் பாடலில் இடம் பெற்றுள்ளது. இந்தப் பாடலுக்கான சந்தக் குழிப்பு தானன தத்தா தனதானா என்பதாகும். நபிகள் பெருமானர் (சல்) அவர்கள் பசியாய் இருப்பதைக் கண்ட றபியா என்பவர் அடிமையாகிய அத்தாசு மூலம் அண்ணல் அவர்களுக்குத் திராட்சை அனுப்பினார். அத்தாசும் அப்படியே செய்ய திராட்சையை உண்டு களித்த நபிகள் நாயகம் (சல்) அவர்கள் அத்தாசு யார் என்று கேட்டார்கள். நான் அடிமை என்றார் அத்தாசு. மனிதனுக்கு மனிதன் அடிமையாவது இல்லை. எல்லோரும் அல்லாஹ்வுக்கே அடிமை என்றும் யூனுசு நபி அக் காலத்தில் நபியாய் இருந்தது போல் தாம் இப்பொழுது நபியாக இருப்பதாகவும் கூறினார்கள், நபிகள் நாயகம் (சல்) அவர்கள். அத் தாசும் கலிமா ஓதி இசுலாம் ஆனார். இக்கருத்துக்களே ஒரு பாடலில் இங்ஙனம் இடம் பெற்றுள்ளது. இதுதான் அந்தப் பாடல்:

கோநபி சற்றே
மாபசி யுற்றே
கோலன வத்தே யுறுபோது

கூரயல் றப்யா
பாலர்வ னத்தே
தோகன சத்தா னபிவாதை

தானுணர் வுற்றே
மாமனைபுக்கார்
தாசன வத்தா சையேவித்

தாகறமெ டுத்தே
மாவன முற்றநர்
தானுண வைத்தே கனிதிராட்சை

வாநயமுற்றே
நீயெ லத்தாய்
மாகனி வைத்தா நபியார் முன்

மாமன்பு சித்தே
யாரறி விப்பாய்
வாயி லுரைப்பாய் கலிமாவை

நானபி யிக்கால்
யூனுசு முக்கால்
நாணய சொர்க்கா தியர் போகம்

நாடுக வெற்றே
கூறவு ரைத்தான்
ஞானமு ரைத்தா றிறசூலே.

சீறாப் புராணத் திருப்புகழில் சீறாப் புறாண மணம்புரி படலத்தில் பாடப்பட்டுள்ளவை ஒரு திருப்புகழ் பாடலாக அமைந்துள்ளது. அதன் சந்தக் குழிப்பு இங்ஙனம் தரப்பட்டுள்ளது:

தனதன தானன தத்தன தந்தன - தனதான

இந்தத் திருப்புகழ்ப் பாடலில் தாம் கூறவந்தவை அனைத்தையும் பாடலின் அடியில் அரும்பதவுரையை அடுத்துப் பொழிப்புரையில் தரப்பட்டுள்ளன.

இதுதான் அந்தத் திருப்புகழ்ப் பாடல் :

மணமுர சேநகர் முற்றும றைந்திட
நகருவு மாளிகை மிக்கவி ளங்கிட
மலர்மணி மாலைநி ரப்பிய பந்தலு மிடலானார்

மதிநிகர் மாருக முற்றம டந்தையர்
மயல்கொள மாநபி நற்பரி யொன்றினின்
மழைகுடை யேயிட வக்கண மெங்களி றருமானும்

பணநர கேகத வுற்றடை யென்றிட
நரகதை மூடினர் சொர்க்க மிலங்கின
பணவர்கள் கூறுலீன் பொற்பும டந்தையர் மலர்தூவம்

பலவித மேளமி சைத்திட முன்புள
மறையவர் வேதமொ லித்திட விங்கொளிர்
பணிதிக ளேதிகழ் முத்திடு பந்தலில் நபியேக

குணகுவை லீதுவ ழைத்தருள் தங்கிய
நபியுய ராசன மத்தியு றங்கொளிர்
கொடியன மானிடை யுற்றுயர் நங்கையர் அதிஜானவிர்

குளிர்புன லாடிட வைத்து நலங்கிளர்
பரிமள மாதி, மிட்டெழின் மங்கையர்
குழுவின ராடையுடுத்திந லஞ்சன மதுதீட்டி

அணிதிகழ் பூணணி யிட்டுவி ளங்கிய
மணவறை மீதிலி ருத்தியு யர்ந்தவ
ரதிமா (தர) வக்கண முஞ்சப மணமாக

வகஅதி மேகொடு வுற்றம டந்தையும்
நபியொடு நேயம தைகொடு மொன்றின
ரவனியில் வாழிம டக்கொடி நம்பியெம் மிறகுலே,

இங்கே கதீஜா அம்மையாரின் தந்தையார் பெயர் குவைலீது என்று சுட்டப்பட்டுள்ளது. தேவர்களை குறிக்க பகைவர் என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. தேவமகளிரைக் குறிக்கிறது கூறுலீன் என்னும் அறபுச்சொல். திருமணத்தின்போது ஒரு முஸலிம் மணமகன் ஒரு முஸ்லிம் மணமகளுக்குச் செலுத்த வேண்டிய பணம் மகர் என வழங்கப்படுகிறது.

## முகியித்தீன் ஆண்டகைபேரில் திருப்புகழ்

முகியத்தீன் அப்துல்காதிறு (ஜிலானி) (றலி) அவர்களைப் பாட்டுடைத் தலைவராக் கொண்ட தமிழ் நூல்கள் ஏராளம். காப்பியங்களாயினும் சரி, மரபு வழக்குப் பிரபந்தங்களாயினும் சரி, மக்கள் வழக்குப் பிரபந்தங்களாயினும் சரி, முஸ்லிம் பிரபந்தங்களாயினும் சரி அனைத்துமே முகியத்தீன் ஆண்டவரைப் பாடப் பயன்படுத்தப் பட்டுள்ளன. மக்கள் வழக்குத் தமிழ் பிரபந்தமாக திருப்புகழிலும் முகியத்தீன் ஆண்டவர்களைப் போற்றித் திருப்புகழ் பாடியுள்ளார். செய்யது முகியத்தீன் கவிராஜர் என்பவர் முகம்மதுசைன் புலவரின் புதல்வராவார் அவர். திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த மேலப் பாளையத்தைப் பிறப்பிடமாகக் கொண்டவர்.

திருப்புகழ்ப் பாடல்கள் பெரும்பாலும் ஒன்றை ஒன்றுப் பெரிதும் ஒத்திருக்கின்றன. சந்தக் குழிப்புகளும் ஒரே தன்மையவாய் இருக்கின்றன. வண்ணங்களும் அத்தகையதே. சந்தப் பாவன்மை, சொல்லாட்சி, பொருட் செறிவு ஒரேவிதத்தில் இருப்பதைக் காணலாம். தாம் சொல்லக் கருதிய பொருள் இன்னதென, செய்யது முகியத்தீன் கவிராஜர், காப்புச் செய்யுளாக அமைந்துள்ள கட்டளைக் கலித்துறைப் பாடலில் இங்ஙனம் அமைத்துப் பாடியுள்ளார்.

மருப்புகழ் கொண்ட மகுமூ திறசூல் நபிமர பில்வந்து
கருப்புகழ் கொண்டு துதிக்கின்ற நாளினிற் கதிபெருகப்
பெருப்புகழ் கொண்டு முகியித்தீ னாண்டகை பேரிலருள்
திருப்புகழ் கொண்டு தினந்துதிப் போர்ஜெயஞ் சேருவரே.

முதலில் வல்லிசை வண்ணம் ஆக அமையும் பாடலைப் பார்ப்போம். அந்தப் பாடலின் சந்தக் குழிப்பு தத்தத்தன தத்தத் தனதன தனதான என வந்துள்ளது. இதுதான் அந்தப் பாடல்;

முத்தித்தெளி யுற்றுப் பெரியுவ
னட்பிற்றரு சித்தக் களிநனி
முத்திக்கிரு பைக்குப் பசியமென் மயிலாகி

முற்பட்டப்பொரு ளுக்குத் தெரிசனை
பெற்றுத்துயரம தொக்கப் புரியவெம்
முத்திப்பணி துத்திட் டகுமது எனவோதுஞ்

சத்தத்துட னொக்கப் பலபல
வர்க்கத்தொடு திக்கப் பெறுகுண
சைக்யக்கட லுக்குட் பிரபல மெனும்வாழ்வே

தட்டத்தும திட்டத் துடனென
திட்புத்திக ளிக்கத் திருவரு
டக்கப்பெறு பற்பற் பதவியல் பெறுவேனோ

அத்தத்திடை ரொக்கத் தொடுதொழி
லைப்பற்றிந டக்கச் சொலுமவ
ரத்திக்கிணை புக்கப் பலகண மொடுதானே

அச்சப்படு மொக்கத் துலையவ
ரர்ச்சித்தும கிட்டத் தொடுசெல
வற்றைக்குத வித்துப் புகழ்பெறு நயினாரே

சுத்தக்கரு ணைக்கற் பகமது
வொத்திட்டருள் பற்றிக் கிருபைசெய்
சொக்குக்கடன் வைத்துத் தவமரு ளியகோவே

துட்டக்குபிரைக்கட் டறவடி
வைத்திட்ட நடத்திப் புரிமறை
சொற்றப்பில தற்செப் பியகுரு முகியித்தீனே (2)

மெல்லிசை வண்ணம் முகியத்தீன் ஆண்டவர்கள் பேரில் திருப்புகழ் நூலில் இடம் பெற்றுள்ளது. மெல்லியா முத்துக்களையே பெரும் பான்மையாகக் கொண்டு விளங்குகிறது மெல்லிசை வண்ணத் திருப் புகழ்ப் பாடல். அந்தத் திருப்புகழ் பாடல்

தந்தந் தந்தந்தந் தனதன - தனதான

என்னும் சந்தக் குழிப்பைக் கொண்டிருப்பதைக் காணலாம். அந்தத் திருப்புகழ்ப் பாடல் வருமாறு :

வண்டுஞ் சிந்துஞ்சிந் தியவிழி
விந்துங் கண்டங்கங் குளிநுதல்
மஞ்சம் பிஞ்சஞ்சுஞ் சுரிகுழ லாமீதே

வைங்கண் கொண்டின்பம் புரியுறு
குன்றும் பந்துங்கன் றியமுலை
வண்டுங் கொண்டுந்துங் கடலமு ததுபோல

கண்டுங் கண்டொஞ்சும் பனிமொழி
தந்தின் பங்கொஞ்சும் தெரிவையர்
கண்கொண் டம்புந்தும் பிணையென மெலியாதே

கண்கண் டம்பொன்றும் தவிரு
செம்பங் கஞ்சந்தந் தெனைவழி
கண்டும் பண்பென்புந் தியிலுற வருள்வீரே

விண்டென் றுந்தும்பொன் கொடுமுடி
கண்டங் கன்பின்றுந் தபனனி
லங்குஞ் சம்ப்ரம்பன் பிசையுறு கருபாவாய்

மென்செம் பொன்றஞ்சும் படமிசை
வண்டுண் டன்செங்குங் குமபுய
மிஞ்சுஞ் சந்தங்கொண் டுயர்நபி யிறசூலார்

தண்டிம் பந்துன்றுந்த துணையரொ
டங்கன் பின்றங்கும் பொழுதிறை
தம்பங் கொண்டொன்றும் புரிகில தெதிராவோர்

சண்டங் கண்டிங்கண் டருகென
வந்துந் துஞ்செங்கண் புலிதரை
சங்கஞ் சென்றெஞ்சும் படிசெலு முகியித்தீனே. (4)

முகியத்தீன் ஆண்டவர் பேரில் பாடப்பட்ட திருப்புகழ் பாடல் மற்றொன்றைப் பார்ப்போம். அந்தத் திருப்புகழ் பாடலுக்குரிய சந்தக் குழிப்பு தனதனன தான தான - தனதான என்று உள்ளது. அந்தப் பாடல் இவ்வாறு உள்ளது :

நறுமலர்கள் சூடிச் சூடி
யழகமுது சாயச் சாய
நலகலவை பூசிப் பூசி முலைமானார்

நளிகள்வெளி தோணத் தோண
வொருகைதுயில் பேணப் பேண
நகையினியன் காணக் காண விளைஞோர்கள்

மறுசிவலை பூணப் பூண
முதன்மிகுதி தேடித் தேடி
மதுரகவி பாடிப் பாடி வருமானார்

மருவுசம போகத் தாலே
உளமிகுதி மோகித் தாகி
மலையவிதி யோபொற் பாத மருள்வீரே

கிருபைபுரி யார்வக் கார
வுலகினெறி நீதிக் கார
கிளர்புகழ்வி லாசக் கார முதுநூலோர்

கெழுமுசபை வாய்மைக் கார
குபிரடர்கை வீரக் கார
கிரணமணி மார்புக் கார மரியாதை

பொறுமையுள வேதக் கார
வபயமருள் பாதக் கார
பொறையுல்வு நீர்மைக் கார முறையான

புவியினர சாண்மைக் கார
வெனினருள் சுபாவக் கார
புகல்திருமெஞ் ஞானக் கார முகியித்தீனே (6)

செய்யிது முகியித்தீன் கவிராஜர் தமது முகியித்தீன் ஆண்டவர் பேரில் பாடியுள்ள திருப்புகழ் நூலில் தமது சந்தப் பாவன்மையை சிறப்புறக் காட்டியுள்ளார். இதற்கு ஆதாரமாக அவருடைய மற்றொரு பாடலைப் பார்ப்போம். ஒலிக்குறிப்புக்கள் பலவற்றையும் டுடுடுடு, ரீரிரீ போன்ற சுதிகளையும் அமைத்து அத்தகைய திருப்புகழ்ப் பாடலைப் பாடியிருப்பது ஆசிரியருடைய சொல்லாட்சித் திறனை எடுத்துக் காட்டுகிறது. அத்தகைய திருப்புகழ்ப் பாடலில்

தன தன தனா தனா தன - தனதான

என்னும் சந்தக் குழிப்பு இடம் பெற்றிருப்பதைக் காணலாம். கோடிச் சொற்களாக அமைந்துள்ள பல சொல்கள் ஒலிக் குறிப்புக்களாகவே உள்ளன. இடைக்கிடையே கருத்துள்ள சொற்களும் ஓசைநயம் கருதிச் சோடிச் சொற்களாக வந்துள்ளன. பெரும்பான்மையான ஒலிக் குறிப்புக்கள் வந்துள்ள செய்யது முகியத்தீன் கவிராஜரின் திருப்புகழ்ச் செய்யுள் இங்ஙனம் வந்துள்ளது.

வடமணி பனீர் பனீரென
விருமுலை சிவீல் சிவீலென
மதர்விழி கறேல் கறேலென வொயின் மீதும்

வரிவளை கலீல் கலீலென
முகிலணி விறீல் விறீலென
மணமது குபீர் குபீரென மிர்துவான

உடலெழில் பசீர் பசீரென
வணைவது விறீல் விறீலென
வுகுர்குறி சுறீல் சுறீலென — மதகாம

மொழுகியல் சலால் சலானெ
மெலியர்சு கழூழ் கிழூழ்கியே
யுமதடி மைசோர் வனோ நல — மருள்வீரே

முடலைவ ளைபூப பூவென
சுதிசெய்குழல் ரீரிரீயென
முறைபாத தாத தாவென — விசையார

முழவொலி கணீல் கணீலென
வகல்பறை திடீல் திடீலென
முருடுக டுடூ டு டூவென — விதனோடே

கடலனை யபே ரிபேரியாய்
நளிசெய்பர ராஜராஜராய்
நறுவுதனிமோ திமோதியே — புலிபோல

ககனவர் சபா சபாசென
விறல்செய விபே ரராகிய
கனதைய புல்ஹா சிமோர் கிளை — - முகயித்தீனே.

செய்யது முகியத்தீன் கவிராஜரின் முகியத்தீன் ஆண்டகை திருப் புகழில் பகுதாது, ஜீலான் ஆகிய திருத்தலங்களே பாடப்பட்டுள்ளன. அச்சியற்றப்பட்ட திருப்புகழ்ப் பாடலிலே முப்பத்தொரு பாடல்களே இடம் பெற்றுள்ளன. இத்திருப்புகழ் நூற்றைம்பது பாடல்களைக் கொண்டிருந்தது என்றும் எஞ்சிய பாடல்கள் தமக்குக் கிடைக்கவில்லை என்றும் கிடைக்கப் பெறின் அச்சிடுவதாகவும் திருப்புகழின் அடிக் குறிப்பொன்றில் குறிப்பிட்டுள்ளார், பதிப்பாசிரியர், கண்ணகுமது மகுதூ முகம்மதுப் புலவர். நவநீத புஞ்சம் என்னும் பாடற்றொகுதி யிலேயே இந்தத் திருப்புகழ்ப்பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

பகுதாது நகரின் இயற்கை வளம் விவரிக்கப்பட்டுள்ள ஒரு பாடலை எடுத்துக்கொள்வோம். பகுதாதில் பல குளங்கள் இருக் கின்றன. குளக்கரைகளிலே கமுகு, பனை முதலிய உயர்ந்த மரங்கள் ஓங்கி வளர்ந்து நிற்கின்றன. வாழை மரங்களும் ஆங்காங்கே காணப் படுகின்றன. அங்கே பூஞ்சோலைகளிலே உள்ள பூக்களிலிருந்து தேன் வடிந்துகொண்டிருக்கிறது. அந்தத் தேனை வண்டுகள் பருகி மகிழ்ச்சி அடைகின்றன. மகிழ்ச்சியால் அவை ரீங்காரம் செய்கின்றன.

ஒழுகிக்கொண்டே இருக்கும் தேன், குளங்களிலே பாய்கின்றது. அக் குளங்களுக்கு அருகாமையில் மலைக் குன்றுகள் இருககின்றன. அந்த மலைக்குன்றுகளில் பூத்துக் காட்சியளிக்கின்றன. இத்தகைய பகுதாதின் அழகுமிகு காட்சிகளையே செய்யது முகியத்தீன் கவிராஜர் ஒரு திருப்புகழ்ப் பாடலின் பிற்பகுதியில் வருணித்துள்ளார். இந்தத் திருப்புகழ்ப் பாடலின் சந்தக் குழிப்பு இவ்வாறு உள்ளது.

தானதன தானதன
தானதன தானதன
தானதன தானதன - தனதான.

அந்தப் பாடலில் பிற்பகுதி இவ்வாறு உள்ளது :

தாதவிழ்வி ராலுழன்று
வாளையுட னேயெதிர்ந்து
தாளிகலி யேவுயர்ந்த கமுகூடே

தாவிவெடி பாயவங்கு
வாழைமட லூடசைந்து
தாளைகளிக ளேயுதிர்ந்து ளறைவீசும்

சீததுளி யுறவண்டு
பாடியெழு ராகமண்டு
தேனருவி பாய்வளங்கொ டடமீதே

தேரிவிரி பூவல் கொண்ட
வாசிசமெ லாமுறங்கு
சீர்மைபகு தாதில் வந்த முகியித்தீனே

முகியத்தீன் ஆண்டவர் பேரில் திருப்புகழ்ப் பாடிய ஆசிரியர் செய்யது முகியத்தீன் கவிராஜர் மற்றொரு பாடலில் தமது வறுமைப் பிணியைப்பற்றி மிக உருக்கமாகக் கூறியுள்ளார். தம்மை ஒரு சிறுமைப் பயலாகச் சுட்டி தமது அன்றாடச் செலவுக்குப் போதிய அளவு பணமில்லை என்கிறார். உழைத்துச் சம்பாதிக்க ஒரு வேலையும் இல்லை என வருந்துகிறார். அத்தகைய நிலையில் உள்ள தம்மை இங்ஙனம் அலைய வைப்பது முறையோ என வினாவுகிறார். தமக்குத் துணை புரியும்படியும் தம்மைக் காப்பாற்றும்படியும் முகியத்தீன் ஆண்டவர் அவர்களை மன்றாடிக் கேட்கிறார். துணை வேண்டி நிற்பவர்களுக்குத் துணைபுரிபவர் கௌதுல் அஃலம் முகியத்தீன் ஆண்டகை அவர்களாதலினால் தாம் இவ்வாறு குறை இரங்குவதாகக் குறிப்பிட்டுள்ளார்.

தனன தனதன
தனன தனதன
தனன தனதன - தனதான

என்னும் சந்தக் குழிப்பில் பாடப்பட்ட அப்பாடலில் புலவர் தமது வறுமையைப் பற்றிக் குறிப்பிடும் அப்பாடலின் பிற்பகுதி இவ்வாறு அமைந்துள்ளது :

சிறுமைப் பயலனு
தினமிப் படிவரு
செலவுக் கிலையென விடைவானே
செயல்கட் டுளமது
கவலைக் கடலிடை
திளையப் படவிடல் முறைதானோ

வறுமைத் துயரிலும்
திடமிப் படிசொலி
மறுகித் திரிவது தெரியாதோ
வழிபட் டிடுமென
திடநித் தமுமென
மனதுத் தயவருள புரிவீரே

குறுகிப் பொருமரு
வலர்தட் டழிவொடு
குதிரைத் தளமுறி படவேநீள்
கொடியற் றவர்மணி
முடியற் றிடவிறல்
கொளுநற் புவியலி ருலவாழ்வே

நறுமெய்ப் புளகித
மிரபத் துடரணி
பிலவெற் பணேபுய வலியோரே
நனிபெற் றுடர்திரு
மறைமுற் றியமொழி
நவில்சற் குருபர முகியித்தீனே (20)

முகியித்தீன் ஆண்டவர் திருப்புகழ் போன்ற நூல்கள் திருத்திய புதிய பதிப்புக்களாக வெளிவந்தால் அனைவருக்கும் பயனுடைத்தாய் அமையும். அவற்றைப் படித்துச் சுவைத்து மகிழ வாய்ப்பு ஏற்படும்.

---

# கீர்த்தனம்

இஸ்லாத்தில் இசைக்கு இடமுண்டா என்பது பண்டுதொட்டு விடையளிக்க முடியாததொரு வினாவாகும். சிலர் உண்டு என்பர், இல்லை என்பர் வேறு சிலர். பாலுணர்வுகளைத் தூண்டக்கூடிய இசைக் கருவிகளைப் பயன்படுத்தும் இசைக்கே இஸ்லாத்தில் இட மில்லை எனத் தர்க்கிப்பர் மற்றும் சிலர். தப் (Duff) போன்ற இசை எழுப்பும் கருவிகளைப் பயன்படுத்தலாம் என்று இன்னுஞ்சிலர் கூறுவர். பாலுணர்வைத் தூண்டக்கூடிய இசைக் கருவிகள் பயன் படுத்தப்படவில்லையெனின் இஸ்லாம் இசையை அனுமதிக்கிறது என்பர் ஏனையோர். தஃப் போன்ற இசைக்கருவியைப் பயன்படுத்த லாம் என்று கூறுவோர் பெருமானார் முகம்மது (சல்) அவர்கள் பொன் மொழியொன்றை அதற்கான ஆதாரமாக எடுத்துக்காட்டுவர்.

அன்று ஈதுப் பெருநாள். முஸ்லிம்கள் கொண்டாடிய நன்னாள். ஒருமுறை இரண்டு இளம்பெண்கள் தஃப் அடித்து விளையாடிக்கொண் டிருந்தனர். அதனைக் கண்ட அபூபக்கர் (ரலி) அவர்கள் அதனைக் கடிந்துகொள்ளும் வகையில் நடந்துகொண்டார்கள். உடல் முழுவதை யுமே மறைத்து உறங்கிக் கொண்டிருந்த அண்ணல் நபி முகம்மது (சல்) அவர்கள் அதனைக் கேட்டதும் மூடியிருந்த முகத்தைத் திறந்து பார்த் தார்கள். அப்பொழுது அபூபக்கர் (ரலி) அவர்கள் நபிகள் நாயகம் (சல்) அவர்களிடம் தஃப் அடிப்பது பற்றிக் குறிப்பிட்டார்கள். ‘இன்று பெருநாள் அல்லவா சும்மா விடுங்கள்’ என்பது தொனிக்க நபிகள் நாயகம் (சல்) அவர்கள் குறிப்பிட்டார்கள் என அண்ணலாரின் அருமை மனைவியார் ஆயிசா (ரலி) அம்மையார் குறிப்பிட்டுள்ளார்கள்.

எது எவ்வாறாயினும் இஸ்லாத்தில் இசைக்கு இடமுண்டு என்பதைக் கூறுவோர், முஸ்லிம்களின் மூதாதையரான அரபு மக்க ளிடையே இசை பயிலப்பட்டு வந்தது என்பதைச் சுட்டிக்காட்டுவர். அதற்கு ஆதாரமாக இசையைக் குறிக்க ஆங்கிலத்தில் பயன்படுத்தப் படும் ‘மியூசிக்’ என்ற சொல்லை ஓர் ஆதாரபூர்வமான அத்தாட்சியாக எடுத்துக் காட்டுவர். ஆங்கிலத்தில் இசை என்ற பொருளைக் கொண்ட ‘மவ்சீக்கீ’ என்னும் சொல்லின் மூலச் சொல் அறபு மொழியிலிருந்தே பெறப்பட்டுள்ளன என்பர். மியூசிக் (Music) என்பதே அரபுச் சொல் என்பதை எடுத்துக் காட்டி வாதாடுவர். இவற்றை எல்லாம் கருத்தில் கொண்டு பார்க்கும்பொழுது வரையறுக்கப்பட்ட, வரம்பு மீறாத இசைக்கே இஸ்லாத்தில் இடமுண்டு என்று கூறலாம். அத்தகைய வரம்பு மீறாத இசை எது என்று கண்டுபிடிப்பதிலும் கருத்து வேறுபாடு ஏற்படலாம்.

இசைக்கலை இஸ்லாத்துக்குப் புதியதன்று. இஸ்லாம் உலகில் பரவுவதற்கு முன்னேயே அரேபியாவில் இசை பயிலப்பட்டு வந்த ஒரு வகுப்பினர் வாழ்ந்து வந்தனர் என்பதை இசையைக் குறிக்க மியூசிக் என்னும் சொல் பயன்படுத்துவதிலிருந்து உணரலாம். இசையைப் பயில்வதுடன் நின்றுவிடாது அந்தக் காலத்தில் அரேபியர் இசைத் துறையில் சிறந்து விளங்கினர் என்றும் கூறப்பட்டுள்ளது. அதன் பயனாக மேனாட்டு இசைக்கலை வளர்ச்சிக்கு அரபியரின் பங்களிப்பு சிறந்து விளங்குகிறது என்று சுட்டிக்காட்டப்படுகிறது.

நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்கள் மக்கா நகரத் தலைவரின் துன்புறுத்தலைத் தாங்கமுடியாதவர்களாய் அந்நகரைத் துறந்து மதீனமாநகர் சென்ற பொழுது மதீனநகர மக்கள் பல வகையான களிப்பூட்டும் இசைகளை மீட்டி பெருமானார் (சல்) அவர்களை வரவேற்றனர் என்று கூறப்பட்டுள்ளது. இஸ்லாம் உலகில் பரவு முன்னரே அரபு மக்களின் வாழ்க்கையில் இசைக்கலை ஓர் உந்து சக்தியாக இருந்தது என்பது இதிலிருந்து புலனாகின்றது என்பர்.

தமிழ் பேசும் முஸ்லிம் மக்களிடையே இசைக்கலை வேரூன்றுவதற்கு மற்றொரு காரணமும் உண்டு. அவர்களுடைய மொழியான தமிழ் மூன்று பெரும் பிரிவுகளாக அமைந்துள்ளது. ஒன்று இயற்றமிழ், மற்றது இசைத்தமிழ்; மூன்றாளது நாடகத்தமிழ். முத்தமிழில் நடுவணாக அமைந்த இசைத்தமிழ் முஸ்லிம் மக்களின் வாழ்க்கையிலும் அதன் செல்வாக்கைப் பதித்துள்ளது. அதன்பயனாக முஸ்லிம் அறிஞர்கள் இசைத்தமிழிலும் சிறந்து விளங்கலாயினர்.

பொதுவாக முஸ்லிம்களின் வாழ்க்கையிலும் சிறப்பாகத் தமிழ் நாட்டிலும் இலங்கையிலும் வாழும் முஸ்லிம்களின் வாழ்க்கையிலும் இராகத்துடன் பாடப்படும் அரபுபைத்துக்கள் என்னும் பாடல்கள் ஒரு தனி இடத்தைப் பெறுகின்றது எனலாம். இங்ஙனம் தமிழ்பேசும் முஸ்லிம் மக்களின் பண்பாட்டில் இசைக்கலை தனிப்பெருஞ்சிறப்புடன் விளங்குகிறது எனக் கூறலாம். ஏதோ ஒரு வகையான இசைக்கு அமைய அவர்களின் அத்தகைய அரபு பைத்துக்கள் பாடப்படும்.

தமிழ் நாட்டிலும், இலங்கையிலும் உள்ள முஸ்லிம் பள்ளிவாசல்களிலும் இல்லங்களிலும் சிறப்பு விழாக்கள் நடைபெறுகின்றன. அத்தகைய விழாக்கள் கந்தூரிகளாக அமையலாம். வேறுவிதமாகவும் உருப்பெற்றிருக்கலாம். அத்தகைய விழாக்களில் இசைக்கலை முதன்மையான இடத்தைப் பெறுகின்றது. அங்கே ஓதப்படும் அரபு பைத்துக்கள் மாத்திரம் அன்றி படிக்கப்படும் தமிழ்ப்பாடல்களும்

இசைக்கு அமையவே பாடப்படுகின்றன. அவை அத்தனையும் வாய்ப்பாட்டாகவே அமைந்து விடுகின்றன. அத்தகைய விழாக்களில் பாடப்படும் பைத்துக்களும் பாடல்களும் இசைக்கருவி எதுவுமின்றியே ஒலிக்கப்படுகின்றன.

கந்தூரி என்பது ஒரு துறுக்குச்சொல் என்பர். நபிகள் நாயகம் (சல்) அவர்களின் அல்லது இறைநேசச் செல்வர்களின் பிறந்தநாளை அல்லது இறந்த நாளைக் கொண்டாடு முகமாக நடத்தப்படும் விழாக் களுக்கே இன்று கந்தூரி என்னும் சொல் பயன்படுத்தப்படுகிறது. முன்பும் விழா என்றும் கருத்திலே தான் கந்தூரி என்றும் சொல் பயன் படுத்தப்பட்டுள்ளது. யாருடைய பிறந்தநாளை அல்லது இறந்த நாளைக் கொண்டாடுகிறோமோ அந்தப் பெரியார் பற்றிய 'மவ்லிது' அந்த கந்தூரி வைபவங்களிலே ஓதப்படுகிறது. மவ்லிது என்றால் பிறப்பு என்றும் பொருள்படும். அங்ஙனம் மவ்லிது ஓதப்படும்பொழுது அந்த மவ்லிது தொடர்ச்சியாக வசன நடையில் இருக்கும், அல்லது இசைக்கக் கூடிய பகுதிகள் இடையிடையே பெற்ற வசனமும் செய்யுளும கொண்ட கலப்பு நடையாக அமையும். பொதுவாக வசனப் பகுதியை ஒருவர் ஓதுவார். செய்யுட் பகுதி வரும்பொழுது பெரும் பாலும் இரண்டிரண்டு பேரால் இராகமாக அந்தச் செய்யுட்பகுதி ஓதப் படும். மௌலிதுக்களரிகளில் மௌலிது ஓதப்பட்ட பின்னர் அன்ன தானம் வழங்கப்படும். அங்ஙனம் அன்னதானம் பரிமாறுவது முஸ்லிம் பரிபாசையில் விளம்புதல் எனப்படும். பாத்திரங்கள் என்று பொருள் படும் கலன் என்னும் சொல்லைப் பயன்படுத்தி விளம்புதல் என்பதுடன் சேர்த்து கலன் வைத்தல் எனவும் வழங்கப்படும். அங்ஙனம் அன்ன தானம் பரிமாறும் வகையில் விவம்பிக் கலன் வைத்து உணவு உட் கொள்ளும் வரையில் அங்கு உணவு உண்பதற்குக் காத்திருக்கும் மக்கள் சுவைக்கும் வண்ணம் வெவ்வேறு இராகங்களில் பாடல்கள் பாடப்படுவதுண்டு. பண்ணோடு அமைந்த பாடல்கள் சந்தத்துடன் பாடப்படுவதுண்டு. சிற்சில சமயங்கள் இங்ஙனம் பாடுதல் போட்டி யிலும் முடிவடையும். பதம் படித்தல் என்னும் இந்த மரபு வழங்கப் படும். இங்கே திருவள்ளுவரின் கூற்று குறிப்பிடத்தக்கது.

செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப்படும். [42 : 2 (412)]

தமிழ் நாட்டிலும் இலங்கையிலும் வாழும் முஸ்லிம் மக்கள் இசை வளர்ச்சியில் ஊக்கத்துடன் ஈடுபட வழிகோலியவர்கள் அவர் களிடையே திகழ்ந்த இசைக்கலை வல்லுநர்களேயாவர். அத்தகைய இசைக்கலை வல்லுநரான முஸ்லிம் புலவர் பலர் எண்ணிறந்த அருமையான இன்னிசைப் பாடல்களை இனிமையாகப் பாடக்கூடிய வாறு யாத்துத் தந்துள்ளனர். இத்தகைய இன்னிசைப் பாடல்களுள்

திருப்புகழ், கீர்த்தனை, சிந்து, கும்மி, தாலாட்டுப் பாடல்கள் அடங்கும் திருப்புகழ்ப் பாடல்களை பற்றி முன்னர் ஆராய்ந்தோம். இப்பொழுது கீர்த்தனங்களைப் பார்ப்போம்.

பல்லவி, அனுபல்லவி, சரணங்கள் என்னும் உறுப்புக்களைக் கொண்டது கீர்த்தனம் என்னும் இசைவடிவம். இத்தகைய கீர்த்தனையை இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ் நூல்கள் பல, கீர்த்தனையைக் கொண்டு திகழ்கின்றன. கீர்த்தனைகள் பாடாத முஸ்லிம் புலவர்கள் இல்லை என்றே கூறலாம். எனினும் சில புலவர்கள் தங்கள் நூல்களைக் கீர்த்தனங்களைக் கொண்டனவாகவே அமைத்துள்ளதைக் காணலாம்.

தமிழ் இலக்கியப் பரப்பில் உள்ள பல காப்பியங்கள் கீர்த்தனங்களாகப் பாடப்பட்டுள்ளன. இராமாயணத்தை அடிப்படையாக வைத்து இராமாயணக் கீர்த்தனையும் பெரியபுராணப் பாடல்களை அடிப்படையாக அமைத்து பெரிய புராணக் கீர்த்தனைகளும் கந்த புராணச் செய்யுட்களைத் தழுவி கந்தபுராணக் கீர்த்தனையும் இயற்றப் பட்டிருப்பதைக் காணலாம். தமிழ் மொழியில் உள்ள பிற காப்பியங் களைத் தழுவி எங்ஙனம் அந்தத்தக் காப்பியக் கீர்த்தனைகள் எழுதப் பட்டனவோ அங்ஙனமே சீறாப்புராணப் பாடல்களைத் தழுவி அவற்றை அடிப்படையாக அமைத்து சீறாக் கீர்த்தனம் இயற்றப் பெற்றுள்ளது. இது சீறாப்பதம் என்றும் வழங்கப்படுவதாக ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

உமறுப் புலவர் அவர்களின் அடியொற்றியே சீறாக் கீர்த்தனம் இயற்றப்பட்டுள்ளது. மூன்று காண்டங்களாகச் சீறாப்புராணம் பிரிக்கப்பட்டிருப்பதுபோல் சீறாக் கீர்த்தனமும் விலாதத்துக் காண்டம், நுபுவ்வத்துக் காண்டம், ஹிஜ்ரத்துக் காண்டம் என்று மூன்று பெரும் பிரிவுகளாகப் பகுக்கப்பட்டுள்ளன. சீறாப்புராணத்தில் படலங்கள் அமையும் ஒழுங்குமுறையிலே சீறாக் கீர்த்தனப் படலங்களும் அமைக் கப்பட்டுள்ளன. படலங்களின் தலைப்புகளும் ஒரே விதமாக உள்ளன. சீறாப்புராணத்தில் ஹிஜ்ரத்துகாண்டம் உறனிக் கூட்டத்தார் படலத் துடன் சடுதியாக முடிவடைவது போன்றே சீறாக் கீர்த்தனத்திலும் ஹிஜ்ரத்துக்காண்டம் பத்துப் படலத்துடன் முடிவடைகிறது. சீறாக் கீர்த்தனத்தின் இறுதியில் உள்ள பதிப்பாசிரியரின் குறிப்பில் 'ஹிஜ்ரத் துக்காண்டம் பாடியதளவு முற்றிற்று' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. எனவே, சீறாப்புராணத்தில் உள்ள எல்லாப் படலங்களிலும் இடம் பெற்ற செய்திகள் சீறாக் கீர்த்தனத்தில் இடம் பெறவில்லை என்பது போதரும். சீறாக் கீர்த்தனத்தில் மொத்தமாக மூன்று காண்டங் களிலும் அறுபத்து மூன்று படலங்களிலும் ஐநூற்றி அறுபத்தைந்து

திருவிருத்தங்களும் இருநூற்றி அறுபத்து மூன்று கீர்த்தனங்களும் அல்லது பதங்களும் உள்ளன. திருவிருத்தங்களினதும் கீர்த்தனங்களினதும் மொத்த எண்ணிக்கை எண்ணூற்றிருபத்து எட்டாகும். ஒவ்வொரு கீர்த்தனையையும் தொடங்குமுன் ஆசிரியர் ஒன்று அல்லது இரண்டு அல்லது மூன்று திருவிருத்தங்களைப் பாடி, தாம் கூறப் போகும் பொருளை அறிமுகம் செய்துள்ளார்.

கோட்டாற்று செய்யிதபூபக்கர்ப் புலவரால் இயற்றப்பட்டது சீறாப் பதம் என்று வழங்குகின்ற சீறாக் கீர்த்தனை. இவர் மலுக்கு முதலியார் புதல்வர். இவருடைய மூதாதையர் ஏழு தலைமுறைகளாகப் புலமையிற்சிறந்து விளங்கி வந்துள்ளார். ஹிஜ்றி 1280 இல் அதாவது கி.பி. 1863 இல் முதலாம் பதிப்பாக சீறாக்கீர்த்தனம் வெளிவந்தது. அந்தப் பதிப்பு வர முன்னோடியாக இருந்தவர் வ. செய்கு மீறான் றாவுத்தர் அவர்கள். அப்பதிப்பைப் பின்பற்றி கண்ணகுமது மகுதூ முஹம்மதுப் புலவர் அவர்களால் சென்னை மனோன்மணி விலாச அச்சுக்கூடத்தில் இந்நூல் ஹிஜ்ரி 1314 ஆம் ஆண்டு (கி·பி. 1896) பதிப்பிக்கப்பெற்றது. அச்சிட்ட வரலாற்றில் கண்ணகுமது மகுதூ முகம்மதுப் புலவர் ஆசிரியரை இங்ஙனம் பாடியுள்ளார்.

உற்றிடு குளமு மொண்டலர்ச் சேலலையும்
சுற்றிட வளங்கள் சூழ்ந்திடு கோட்டா
றென்னுமூ ரினில்வாழ் விலங்கிய நீதர்
மன்னிய கல்வி வகைகளை நேகமும்
பண்டித முறையும் பகரும் விற்பனமும்
எண்டிசை விளங்க வேழ்தலை முறையும்
புலமையிற் சிறந்த புகழ்வழி யுற்றோர்
வலமையா ரெல்லா வரிசையும் சிறந்த
மலுக்கு முதலியார் மாண்தவத் துதித்தோர்
துலக்கமார் கல்வியுஞ் குசுணமும் உள்ளோர்
மக்கமு கம்மதின் வரிசைக ளார்ந்தோர்
திக்கெலாம் புகழுந் தெளிவுள சிந்தையர்
வேதத் தியலை வெறாத மகத்துவர்
ஏதத்தை வீசு மெழிற்கவி தைகளாற்
பல்புரா ணங்கள் பகர்ந்தசீர் கருத்தினர்
நல்வகை தழைக்கும் ராச வசீகரர்
சுயகவி மாரிபோற் றூவிடு வரத்தினர்
பயன்மிகு செய்தபூ பக்கரென் றுரைக்கும்
செவ்விய புலவர் தித்திப்புச் சுவைகள்
ஒவ்விடா தெவர்க்கு மோதுமா நந்தமா
யெணங்கொள வரிய வின்பமா யிசையாய்
வணந்தரு ராக வகையது பலவாய்
விருத்தமும் பதமுமாய் வியன்பெறச் செய்தனர்.

உமறுப் புலவர் புராணமாகப் பாடிய நபி முகம்மது (சல்) அவர்களின் இயற்கையும் செயற்கையுமாகிய சீறாகீர்த்தனத்தைத் தாம் கீர்த்தனையாகப் பாடியதாக ஆசிரியர் அட்டைப் பக்கத்தில் குறிப்பிட்டுள்ளார். முகப்புப் பக்கத்துக்கு முன்னிலிருந்த விருத்த அகராதியும் பத அகராதியும் தரப்பட்டுள்ளன. முகப்புப் பக்கத்திலே ஆசிரியர் தம்மை சங்கீத, சாஹித்ய சமேதரான மகாவித்துவான் என அறிமுகப் படுத்தியுள்ளார்.

ஆசிரியர் விலாதத்துக் காண்டம் ஆரம்பிக்குமுன்னமே இறைவனிடம் பாதுகாப்புக்கோரி ஒரு காப்பு விருத்தப்பாவைப் பாடி உள்ளார். இந்தப் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

திருமணி யொளியி னுள்ளே சிறந்துமுச் சுடரா யோங்குங்
கருமணி யெழுத்தோன் றாலே காலிறி லெனைப்போற் றோன்றி
அருமணி யாகிச் சீவன் அனைத்துமாய் நின்ற கோவே
குருமணி பதசீ றாவைக் கூறநீ காப்புத் தானே

காப்புப் பாடலைத் தொடர்ந்து இரண்டு விருத்தப்பாக்களில் கடவுள் வாழ்த்துக் கூறியுள்ளார் ஆசிரியர். முதற்பாடலில் அல்லாஹ்விடம் பணிந்து பாதுகாப்பு நாடியுள்ளார். அச்செய்யுள் இது :

திருமணி அலரி இந்து தீபமீ தெழுதிட் டாந்தப்
பெருமணி யாகிச் சீவ பேதமாய் நிறைந்து கண்ணின்
இருமணி யாகி நின்றோம் இருதய கமலத் துள்ளே
ஒருமணியாகத் தோன்றும் உண்மையைப் பணிகுவாமே.

இரண்டாவது விருத்தப்பாவில் நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்கள் பாதுகாப்புக் கோரப்பட்டுள்ளது. அச்செய்யுள் இங்ஙனம் அமைந்துள்ளது.

சுருதியின் தலையாய் நின்று துவக்கமு முடிவு மின்றிப்
பருதியில் வருந்திட் டாந்தப் பரிச்சிதப் பொருளாய் நின்று
கருதிய நினைவு போலென் கல்பினி லுதித்துப் பாட
வருதிசெய் பொருளாய் நின்ற முகம்மது காப்ப தாமே

ஒரு செய்யுளில் சீறாக்கீர்த்தனம் இயற்றத் தொடங்கப்பட்ட காலம் குறிக்கப்பட்டுள்ளது. அது மூன்றுவிதமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. சகாத்த வருடமும் கொல்லம் ஆண்டு ஹிஜ்ரி ஆண்டும் அங்கு குறிப்பிடப்பட்டுள்ளன. சகாத்தம் ஓராயிரத்தெழுநூற்றி முப்பத்து மூன்றாம் ஆண்டு இயற்றத் தொடங்கப்பட்டுள்ளதாகச்

சுட்டப்பட்டுள்ளது. அது இயற்றப்பட்ட கொல்லம் ஆண்டு தொளா யிரத்து எண்பத்தேழாம் ஆண்டெனப் பொறிக்கப்பட்டுள்ளது. அது ஆடி மாதம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஹிஜ்ரி ஆண்டு ஆயிரத்து இருநூற்றியிருபத்தேழு எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அந்த ஆண்டை கி.பி. 1812 எனக் குறிப்பிடலாம். ஹிஜ்றி மாதமும் பிறையும் சுட்டப் பட்டுள்ளது. றஜபு மாதம் ஏழாம் நாள் வெள்ளிக்கிழமை என்பது குறிப்பிடப்பட்டுள்ளது எனவே சீறாக் கீர்த்தனம் இயற்றத் தொடங் கப்பெற்றது கி.பி. 1812 ஆம் ஆண்டு.

எழுதத் தொடங்கி ஐம்பத்தொரு ஹிஜ்றி ஆண்டுகளுக்குப் பின்னர் அதன் முதல் பதிப்பு (1863 இல்) தயார் செய்யப்பட்டுள்ளது. அந்தப் பிரதியை அடிப்படையாகக் கொண்டு பிரதி தயாரிக்கப்பட்டு முப்பத்து ஹிஜ்றி ஆண்டுகளுக்குப் பின்னர் (1896) வெளிவந்தது. இந்த மூன்று ஆண்டுக் கணிப்பு முறைமையையும் சேர்த்து ஒரு பாடலில் ஆசிரியர் தாம் தமது சீறாப் பதம் என்னும் சீறாக்கீர்த்தனத்தை இயற்றிய கால கட்டத்தைக் குறிப்பிட்டுள்ளனர். இந்தக் கணிப்பிலிருந்தே ஆங்கில ஆண்டு பெறப்பட்டுள்ளது: அந்தச் செய்யுள் வருமாறு :

அன்பான சகாத்தம்ஓ ராயிரத்
    தெழுநூற்று முப்பத்து மூன்றினாகப்
பின்பான கொல்லந்தொள் ளாயிரத்துப்
    பெருகண்பத் தேழாமாண் டாடிதன்னில்
இன்பான நபிஹிஜுறத் தாயிரத்தி
    இருநூற்றி யிருபத்தே ழிறஜபுமாதந்
துன்பான தகலேழாந் தெய்திவாரஞ்
    சோமனிராப் பதந்துடங்கிச் சொல்லுற்றான்

சீறாப்பதம் அல்லது சீறாக்கீர்த்தனம் நூலின் நான்காம் விருத்தம் அவையடக்கச் செய்யுளாக அமைந்துள்ளது. ஏனைய ஆசிரியமைப்பு போன்றே அவர் அவையடக்கம் பாடியுள்ளார். மூன்று உவமை களைக் கையாண்டு அவையடக்கம் கூறியுள்ளார். செந்தமிழ்ப் புலவர் களைத் தங்கமாமலைகளாகவும், பேரலைக் கடலாகவும், மின்னிக் கொண்டிருக்கும் மின்னலாகவும் குறிப்பிட்டுள்ளார். ஆனால் ஆசிரியர் தம்மை மண்திடராகவும், நீர்க்குமிழியாகவும் மின்மினிப் பூச்சி யாகவும் கொண்டுள்ளார். செந்தமிழ்ப் பாவல்லுநரான தங்க மாமலை முன்னர் தாம் ஒரு மண் திடராக இருப்பதாகவும் அத்தகைய பெரிய அலைகளையுடைய கடலின்முன் ஒரு சிறு நீர்க்குமிழியாகவும் மின்னிக்கொண்டு பிரகாசமாக உள்ள மின்னல்முன் ஒரு மின்மினிப் பூச்சி பறப்பதாகவும் இருப்பதாக அவையடக்கச் செய்யுளை பாடியுள்ளார். அச்செய்யுள் வருமாறு :

மன்னு தங்கமா மலையெதிர் மண்திடர் வரும்போற்
கொன்னு பேரலைக் கடலெதிர் நீருறுங் குழிபோல்
மின்னு மின்னெதிர் மின்மினி பறந்திடும் வியன்போற்
பன்னு செந்தமிழ்ப் புலவர்முன் சொலுஞ் சீறாப் பதமே.

சீறாப்பதம் என்னும் சீறாக்கீர்த்தனம் இயற்றுவதற்கான பொருளையும் பொன்னையும் ஈந்தவர் பற்றி ஐந்தாம் விருத்தப்பா குறிப்பிடுகின்றது. தமது கொடை நாயகர் பூவாறு என்னும் ஊரைச் சேர்ந்தவர் என்றும் போக்கு மூசேந்த்ரன் என்னும் தலைவனின் புதல்வர் என்றும் அவர்தம் பெயர் செய்துமுகம்மது என்றும் குறிப்பிட்டுள்ளார். இங்ஙனம் சீறாப்பதம் என்னும் நூலை இயற்ற கோட்டாற்றில் வாழ்ந்த புலவராகிய தமக்குப் பொற்காசுகளை இல்லையென்னாது வழங்கினமையும் குறிப்பிட்டுள்ளார். கோட்டாற்றுப் பகுதியைக் கோடைத் தேசம் எனக் கூறுவதில் பெருமை கொள்கிறார் ஆசிரியர். பதங்களிலும் பல திருவிருத்தங்களிலும் கொடை நாயகரைக் குறிப்பிடுவதைக் காணலாம். அத்தகைய தியாகம் புரிந்த அன்னாரின் முன்மாதிரியான செயலுக்காக அவருக்காக இறுதித் தீர்ப்பு நாளன்று எங்கள் நாயகம் முகம்மது றசூல் (சல்) அவர்கள் பரிந்து பேச வேண்டும் என்று குறை இரங்குகிறார் ஆசிரியர். அன்னாரின் பாசமும் பாவ வினைகளும் அகல அண்ணல் நபி (சல்) அவர்கள் சபாஅத் என்னும் பரிந்துரை நிகழ்த்த வேண்டும் என்றும் மன்றாடுகிறார். அத்தோடு அவர் அமையவில்லை. தமது கொடை நாயகருக்குச் சுவர்க்கப் பதவியை அளிக்கும்படியும் வேண்டுகிறார். இதுதான் அந்த விருத்தம்:

வாசமலர்ச் சோலைசூழ் பூவாற்றூர்க்கு
மன்னவனாம் போக்குமு சேந்த்ரனீன்ற
நேசனெனும் செய்துமுகம் மதுபூபாலன்
நேர்நபி சீறாப்பதத்தை நிகழ்த்தக் கோடைத்
தேசமுறை புலவருக்குச் செம்பொனீந்த
செயலறிந்து முகம்மதுர் றசூலே அன்னோன்
பாசவினைப் பாவம்அகல்ச பாஅத்தீந்து
பலன் செய்வீர் பொன்னகர்வாழ் நலன்செய்வீரே.

அத்துடன் கடவுள் வாழ்த்து முடிவடைகிறது. கடவுள் வாழ்த்தில்கூட ஒரு பதம் இடம் பெற்றுள்ளது. அதனை முதலாம் பதம் என்றே ஆசிரியர் கூறியுள்ளார். சங்கராபரண இராகத்தில் ஆதிதாளத்தில் பாடக்கூடிய பாடலாக அந்தப்பதம் அமைந்துள்ளது.

கடவுள் வாழ்த்தில் இடம் பெற்றுள்ள மேற்காட்டிய கடைசி விருத்தங்கள் மூன்றிலும் இந்த நூலின் பெயர் சீறாப்பதம் என்றே ஆசிரியர் சுட்டி உள்ளமை ஈண்டு நோக்கற்பாலது.

தலைமுறைப் படலத்துடன் சீறாப்பதம் தொடங்குகிறது. இந்தப் படலத்தில் பதம் இடம்பெற்ற பின்னரே விருத்தப்பாக்கள் மூன்று வந்துள்ளன. முதலாம் பதத்துக்கும் அடுத்துவரும் பதங்களுக்கும் தொடர்பு உண்டாக்கவே ஆசிரியர் அவ்வாறு ஒரு படலத்தைத் தொடக்கத்திலும் இடையிலும் கடைசியிலும் விருத்தப்பாக்களை அமைத்துள்ளார் எனக் கூறலாம்.

இந்தத் தொடர்பு எவ்வாறு அமைந்திருக்கிறது என்பதனைப் பார்ப்போம். சீறாப்புராணத்தில் உள்ள அலிமா முலையூட்டுப் படலம் அதே இடத்தைச் சீறாப்பதத்திலும் பெறுகிறது. அப்துல்லாஹ் பெருமானார் (சல்) அவர்களின் தந்தை. அங்கு ஒரு பெண் நபிகள் நாயகம் பாலனாக இருக்கும்பொழுது பாலூட்டினாள். விலங்கினங் களும் பறவைகளும் வானோர்களும் விண்ணக மகளிரும் முகம்மது என்னும் பாலகனைப் பாலூட்டி வளர்க்கத் தத்தம்மிடம் ஒப்படைக்க வேண்டும் என்று கேட்டபொழுது அலிமா என்னும் பெண்மணியே அன்றி வேறொருவரும் அவருக்குப் பாலூட்டக் கூடாது, பாலூட்டல் தகாது, என இறைவன் பதில் கூறினான். இறைவனின் இந்தத் திரு மொழிக்குப் பதில்மொழி கூறமுடியாது என வானவரும் விண்ணக மகளிரும் வாளாவிருந்தனர். விலங்கினங்களுக்கும் பறவை இனங் களுக்கும் ஒன்றும் கூறமுடியவில்லை. இச்செய்தி சீறாப்புராண அலிமா முலையூட்டுப் படலத்தில் ஏழு செய்யுட்களில் விவரிக்கப் பட்டுள்ளன. ஆனால் சீறாபத ஆசிரியர் இரண்டே விருத்தப்பாக்களால் இதனைச் சுருங்கச் சொல்லி விளங்க வைத்துள்ளார். சீறாப்பதத்தி லுள்ள இரண்டு விருத்தப்பாக்களும் இவ்வாறு அமைந்துள்ளன.

பெரியதந்தை அபூலஹப மனையிலோர்மான்
 பெருமுலைப்பால் உண்டகும திருக்குநாளில்
உரியவிலங் கினம் பறவைக் குலங்கள் விண்ணோர்
 உம்பர்மக ளீரிறையை இரந்துகேட்பார்
அரியநபி முகம்மதை நீ எங்கள்பாலில்
 அளித்திடில்யாம் வளர்ப்பமென அலிமாவென்றும்
சரிமுலைப்பால் ஊட்டிவளர்ப் பதுநன்றல்லாற்
 றகாதுநுங்கட் கெனஇறைவன் சாற்றினானே.

இறைவன்இப் படிச்சாற்ற விலங்குமாந்தர்
 எழில்சுவனப் பதிமடவார் இயல்விண்ணோர்கள்
சிறைவிரிக்கும் பறவையின் குலங்கள் மற்றுந்
 திருமொழிக்கு மறுமொழிசெப் பிலமென்றேக
நறை மலர்த்தேன் பொழில்குனையின் நகரிற்பஞ்சம்
 நணுகியதும் நாரிஅலிமா ஆரீதும்
மறைமுழங்கு மக்கநகர்க் கேகும்வாறு
 மவுலுவாம் வகைவகையாய் நுவலுவாமே.

வானோர் முகம்மது நபி என்னும் பாலகரைப் பாலூட்டி வளர்க்கும் பணியைத் தம்மிடம் ஒப்படைக்குமாறு அல்லாஹ்விடம் விடுத்த வேண்டுகோளைச் சீறாப்புராண ஆசிரியர், உமறுப்புலவர் இவ்வாறு ஒரு செய்யுளில் அமைத்துப் பாடி உள்ளார்.

அறிவத பறமுறை பயிற்றி யன்புட
னெறிவளர் தரவளர்த் திடுவநீ யெமக்
குறுதியாய் முகம்மதை யருளென் றுன்னியே
யிறையுடன் மொழிந்தன ரமரரி யாருமே.

விண்ணக மகளிர் பாலூட்டும் வரம் அருள வேண்டும் என அல்லாஹ் விடம் முறையிட்டனர் என்பதை உமறுப் புலவர் இவ்வாறு பாடியுள்ளார்.

நம்பெறும் பேறெனு நபியைப் பொன்னுல
கம்பொன் னீராட் டிநல்லமு தூட்டியே
யெம்பதிக் கரசென வியற்று வோமென
உம்பர்தம் மகளிர் களுவந் துகேட்டனர்.

இதே போன்று விலங்கினங்களினதும் பறவைகளினதும் பாலூட்டும் வாய்ப்பை அளிக்க வேண்டும் என அல்லாஹ்விடம் விண்ணப் பித்தமையை இரு வெவ்வேறு செய்யுட்களில் அமைத்துப் பாடி உள்ளார் சீறாப்புராண ஆசிரியர். எல்லாப் படலங்களையும் பொறுத்த வரையில் இத்தகைய தொடர்பு முறையை சீறாப்பதம் முழுவதும் காணக்கூடியதாக இருக்கின்றது.

இனி, சீறாப்பதத்திலிருந்து சில பாடல்களைப் பார்ப்போம். அலிமா முலையூட்டுப் படலத்திலுள்ள முதலாம் பதம் அல்லது கீர்த் தனம் பஞ்ச நிலைமை பற்றியது. அறேபியாவில் உள்ள ஓர் ஊர் குனைன். அங்கேதான் பெருமானார் முகம்மது (சல்) அவர்களின் வளர்ப்புத் தாயான ஹலீமா அம்மையார் வாழ்ந்தார். அவருடைய கணவன் பெயர் ஆரீது. அவர்கள் சஃதுக் கோத்திரத்தைச் சேர்ந்த வர்கள். ஒரு சமயம் குனைன் ஊரில் பஞ்சம் தாண்டவமாடியது. மழை இல்லை. பயிர்பச்சை இல்லை. அவை கருகின. தானி யங்கள் அற்றுப் போயின. அன்னதானம் வழங்குவது தடைப்பட்டது. அங்கு நான்கு வகையான சேனைகள் இருந்தன. இலக்கிய மரபிற் கியைய அரசனிடம் ரத, கஜ, துரக, பதாதிகளான தேர், யானை, குதிரை, காலாள் ஆகியோரைக் கொண்ட நாற்படைகள் இருந்தன. பஞ்சம் என்னும் அரசன் ஆட்சி செய்யும் பொழுது பாவச் செய்கை களே குதிரைப் படையாக அமைந்தன. பசியே யானைப் படையாக இருந்தன. துரோகச் செயல்கள் தேர்களாக காட்சி அளித்தன.

தரித்திரம் என்னும் காலாட்படைகள் மிகுதியாக இருந்தன. கலிதான் துணையாக இருந்தது. பொய் தளகர்த்தராக இருந்தது. கோபமே எழுத்தர்களாக இருந்தனர். பகைமை ஏற்றதாக இருந்தது. பறித்தலும் மலைத்திடலும் கொலைத் தொழிலும் ஆட்சி புரிந்தன. அந்தப் பதத்தின் அனுபல்லவியிலே மேற்கூறிய கருத்துக்கள் இடம் பெற்றுள் ளன. முதலாவது சரணத்தில் பஞ்சத்தின் கொடுமையால் ஏற்பட்ட பசிப்பிணியும் அதன் பயனாக ஏற்பட்ட பிச்சை எடுத்தலும் குறிப் பிடப்பட்டுள்ளன. இரண்டாம் சரணத்தில் பஞ்சத்தினால் வாடிய மக்களெல்லாம் ஒன்றுகூடி மக்கமாநகருக்குச் சென்றேனும் தம்முடைய வறுமையைப் போக்கிக் கொள்ளலாம் எனத் தீர்மானித்தனர். அக்கா லாத்தில் அறபு நாட்டிலே ஒரு பழக்கம் இருந்தது. கூலிக்குப் பாலூட்டி பிள்ளைகளை வளர்க்கும் பாங்கு அன்று பின்பற்றப்பட்டது. பஞ்சத் தால் பாதிக்கப்பட்ட மக்கள் கூலிக்கு முலை ஊட்டிப் பிழைக்கலாம் என்று கூறி மக்க மாநகர் செல்லத் தீர்மானித்தனர். இங்ஙனம் தீர்மானித்த குனைன் மக்கள் பயணத்திற்கு ஆயத்தமாகத் தமது இல்லங்களுக்குச் சென்றனர். அச்சந்தர்ப்பத்தில் நித்திரையில் ஆழ்ந் திருந்தபோது கண்ட ஒரு கனவு பற்றி மூன்றாஞ் சரணத்தில் குறிப் பிடப்பட்டுள்ளது. ஒரு மரத்திலிருந்து கனிகள் அந்த ஹலீமா அம்மை யாரின் மடியில் விழுந்தன. மரகத நிறமானது அந்த மரம். ஆரீது என்பவரும் அவர்தம் மனைவி ஹலீமா அம்மையாரும் குனைன் ஊரில் இருந்தவிதம் இங்கு கூறப்பட்டுள்ளது. இரண்டாம் சரணத்தின் பிற் பகுதியில் வல்லொலி எழுத்துக்களை மிகுதியாகப் பயன்படுத்தி ஓசை நயம் பெறப்பட்டுள்ளது. முதலாம் சரணத்தின் இறுதிப் பகுதியிலும் மூன்றாம் சரணத்தின் கடைசிப் பகுதியிலும் மெல்லிசை எழுத்துக்கள் இடம் பெற்றுள்ளமையால் அங்கு இனிமையான ஓசை நயம் பெறப் பட்டுள்ளது. இனி முழுப்பாடலையும் பார்ப்போம். முதலில் பல்லவியும் அடுத்து அனுபல்லவியும் பின்னர் ஒன்றன்பின் ஒன்றாக மூன்று சரணங்களும் அப்பாடலில் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். சாவேரி இராகத்தில் ஆதி தாளத்தில் பாட வேண்டிய பாடல் இது.

பல்லவி

வருமே பஞ்சம் குனையின் ஊரில் — வந்த
வாறு சொல்வேன் இந்தப்பாரில்

அனுபல்லவி

பெருமேக மழைபூவிற் பெய்வதில்லாத நேக
தருநீள் பயிர்புற்பூடு தானுங்கரு கிப்போகத்
திருவூரெங் குந்தவசஞ் சிறுவிலைப் பஞ்சமாக
வரும்நீத ராஜர்தானம் வழங்குவ தும்விட்டேகச்

சொரிபவப் பரிசாரத் துரோக ரதங்களூரத்
தருபசி யானையாரத் தரித்ரக் காலாள்கள் சேரத்
தத்துகலித்துணை பொய்த்தளகர்த்தர்சி
னத்த எழுத்தவர் குத்திர ஒற்றர்ப
திறத்தல் மலைத்திடல் சுற்றுகொலைத் தொழில்
கற்றிடு கொற்றவன் உற்று நடத்த (வருமே)

1. காயிலை கிழங்கெலாம் தின்றும் — மேயுங்
கடுவிலங் கினங்கொன்று மென்றும் — வரு
தீய அப்பசிப் பிணி என்றும் மேன்மேற்
றீராமற் சனமாயச் சிலபேரெல்லாந் தளன்றும்

சிந்தை வருந்திட மைந்தரிலந் தொறும்
வந்து இரந்தத றிந்தவர் தந்தையர்
நொந்திட இந்தவ றந்தனில் நந்தியி
றந்த கருந்தலை வெந்தலை சிந்த (வருமே)

2. சேர்ந்து குனையின் ஊரார் கூடி - மக்கம்
சென்றால் நம்பூவை மாரைத்தேடி - அவர்
ஊர்ந்த மதலை ஈவார்கோடி - முலை
ஊட்டிப் பிழைப்பதுவே உறுதியெனவே நாடி

ஒக்குமெனக்கரு திக்குணதிக்கில
ருக்கனுதிக்குமுன் மக்கள் மடக்கொடி
தக்கவ ரொக்கவு மக்கந கர்க்கெழு
கக்கழ றிக்குறி வைக்க இல் புக்க (வருமே)

3. ஆரிதுமனை அலிமாவுந் - துயில்
ஆகையில் ஓர் கனவுமேவும் - அவர்
வாரமடி மேல்மரத் தாவும் - அந்த
மரகத நிறமாம் மடிமேற் கனிகள் தூவும்

மங்குல்நறுங்குழல் செங்கயல் அங்கண்வ
யங்குமருங்கொளிர் திங்கள் முகங்குவி
சங்கு களங்கம லங்கர மங்கையர்
தங்கள் மனங்களி பொங்கிட அங்கு (வருமே)

பஞ்சத்தால் அல்லல்பட்ட குனைன் வாசிகளுள் பெரும்பாலானோர் ஆரிதுடனும் ஹலிமா அம்மையாருடனும் சேர்ந்து மக்கமா நகரை நோக்கிச் சென்றனர். ஹலிமா அம்மையாரும் அவர் தம்

கணவரும் ஆமினா அம்மையாரின் இல்லத்தை அடைந்தனர். ஆமினா அம்மையாரின் குழந்தைக்குப் பாலூட்டத் தாம் தயாரென ஹலிமா ஆமினா அம்மையாரிடம் கூறினார். அதற்குப் பதிலளிக்கு முகமாக ஆமினா அம்மையார் அவர்கள் தேடிவந்த ஹலிமா அம்மை யாரை விளித்து தமது நிலைமையை எடுத்துக் கூறுகிறார். தாம் வறியவர் என்றும் தகப்பன் இல்லாத அனாதை இந்தக் குழந்தை என்றும் கைவசம் பணமும் இல்லை என்றும் தாய்வழியில் உதவி செய்ய உறவினர்கள் ஒருவரும் இல்லை என்றும் தாமும் வறுமை நோயால் பீடிக்கப்பட்டிருப்பதாகவும் ஹலிமா அம்மையாரிடம் ஆமினா அம்மையார் கூறியதாக ஆசிரியர் குறிப்பிடுகிறார். ஹலிமா அம்மை யாரும் கணவரும் கலந்தாலோசித்துக் குழந்தையைப் பெற்றுக்கொள் கின்றனர். இறைவன் நாட்டப்படி எல்லாம் நடக்கும் என்னும் தத்துவத்தை மேற்கொண்டார்கள் ஹலிமா அம்மையாரும் அவர்தம் கணவரும். இக்கருத்துக்கள் அடங்கிய பதம் மோகன இராகத்தில் ஆதி தாளத்தில் பாடக்கூடியவாறு இங்ஙனம் அமைந்துள்ளது.

பல்லவி

இனிநான்என் செய்கை சொல்வேனே — பொன்மானே
இதுகேள் அலிமா நீதானே

அநுபல்லவி

முனிவேல் கயல்விழி முடியானதும் அளியே
கனிவாய் தருமொழி கவல் வாசகக் கிளியே

சரணங்கள்

1. பெறுபிதாவும் இல்லைப் பிள்ளையும் எத்தீஞ்சேயாம்
பேணுமுதல் இல்லையே பெற்றதும் நானே தாயாம்
உறவுள்ளோர் இல்லையென் உடலும் வறுமை நோயாம்
உதவி செய்வோர் இல்லை ஊராரும் வேப்பங்காயாம் (இனி)

2. வழங்குமுதல் எண்ணி வந்தீரென்பாலில் நீங்கள்
வயிற்றுக் கூனில்லாமல் வறுகிறோமே தாங்கள்
சழங்கொள் உரை கேட்டுத் தையல் ஆரீதைத் தாங்கள்
தாம் அறியிரோ என்று சாற்றினாரேஎத் தீம்கள் (இனி)

3. இம்மகவாற் பிழைப்பதெப்படி இரு பேரும்
எளிமை செல்வம் பாரில் இறைவிதிப்படி சாரும்
நின்மனம் இடைவதேன் நிலம் ஆள்வதா ராரும்
நிகழ்த்தா ரென்றாரீது நிகழ்த்த ஆமினாரும் (இனி)

இங்கே முதலாம் சரணத்தில் ஊரார் வேப்பங்காயாம் என்ற கூற்றி லிருந்து ஊராரும் உதவி செய்யும் தகுதி இல்லாமல் உள்ளனர் என்பது

சுட்டப்பட்டிருப்பதைக் காணலாம். ஆமினா அம்மையாரின் வறுமையை முதற்சரணத்தில் உள்ள கருத்துகளிலேயே உமறுப்புலவர் தமது சீறாப்புராணத்தில் உள்ள அலிமா முலையூட்டுப் படலத்தில் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார்.

உற்ற தந்தையு மில்லை உறுபொருளிலை யெத்தீம்
பெற்ற பிள்ளை யோடு தவிசெய் குவர்பி றரிலைநீர்
பற்ற நற்பொருட் குறித்துவந் தவர்பசி யுடைய
ரிற்றைக் குண்பதற் கிடமிலை யென்னிடத் தென்றார்

இங்ஙனம் சீறாப்புராணத்திலும் சீறாப்பதத்திலும் கருத்தொற்றுமை இருக்கக் காணலாம்.

ஹஜருல் அசுவத் கல்லை எங்ஙனம் பெருமானார் காலத்தில் உரிய இடத்தில் வைக்கப்பட்டது என்பது ஒருபதத்திற்குப் பொருளாய் அமைந்துள்ளது. நடக்க இருந்த ஒரு பெரும் போரைத் தங்களது மதி நுட்பத்தால் தவிர்த்தார்கள் என்பது தொனிக்க இந்தப் பதம் அமைந்துள்ளது. ஹஜறுல் அசுவத் என்னும் கல்லை உரிய இடத்தில் யார் வைப்பது என்னும் பிரச்சனை எழுந்தது. அப்போது ஹஜருல் அசுவத்தை உரிய இடத்தில் நபிகள் நாயகம் (சல்) அவர்களால் வைக்கப்பட்டது. இக்கல் வைக்கப்பட்ட விதத்தையும் ஆசிரியர் விவரித்துள்ளார். தோடி இராகத்தில் ஆதி தாளத்தில் பாடக் கூடிய பாடல் இதுவாகும். பதம் இவ்வாறு அமைந்துள்ளது.

பல்லவி

ஹசுறுல்அசுவ தென்ற
கல்லைத் தாங்கி வைப்பீர் என்றார்

அநுபல்லவி

இசைகுறைசிகளும் விள்ள
ஏகன் தூதருங்கை கொள்ள (ஹசுறுல்)

சரணங்கள்

1. மெய்யின் போர்வை தன்னைவாங்கி
விரித்துக் கல்லிடம் நீங்கிக்
கையால் எடுத்துத் தாங்கிக்
கலைநாப்பண் வைத்தார் ஓங்கி. (ஹசுறுல்)

2. முதல்வரைக் கூவிடக் கிட்டார்
முந்தி நான்குங் கையாற் றொட்டார்
அதை நபியுயர்த்தி விட்டார்
ஆனமுதற் றலத்தில் நட்டார் (ஹசுறுல்)

3. மன்னவர் உரத்தார் என்ன
வள்ளல் முகம்மது உன்னச்
சொன்ன போலநிறுவி முன்னத்
தொட்டு முத்தம் இட்டார் அன்ன (ஹசுறுல்)

நுபுவ்வத்துக் காண்டத்தின் இறுதியிலும் ஆசிரியர் தமது கொடை நாயகரைப் போற்றிப் பாடி உள்ளார். நூற்றி அறுபத்தோறாம் பாடலாக உள்ள அந்த விருத்தத்தில் கொடைநாயகர் இவ்வாறு புகழப்பட்டுள்ளார். அவர் பெயரும் அவர் தந்தை பெயரும் ஊர்ப் பெயரும் இங்கே காட்டப்பட்டுள்ளமையை காணலாம்.

மிக்கவளம் பொருந்து பூவாற்றூர் வாழும்
வேந்தனாம் போக்குமூ சேந்த்ரன் ஈன்ற
தக்கவனாம் செய்யிதுமுகம்ம மதுஞ்சீறாவைத்
தகும்ராகப் பதக்கவியாய்ச் சாற்றுதற்கு
முக்யவிரு கரங்களினால் செம்பொன்னீந்து
முகம்மதரின் முறாதையுளத் திருத்தினாப்போல்
அக்கல் ஹசு றில்அசுவ ததனைத் தூய
அறத்தினார் முற்றலத்தில் நிறுத்தினாரே

கொடைநாயகரைப்பற்றிக் குறிப்பிடும் மற்றொரு விருத்தப்பாவில் ஆசிரியர் தமது பெயரையும் சுட்டி உள்ளார். நூலின் பெயரையும் சுட்டியுள்ளார். நூலின் பெயரையும் சீறாப்பதம் எனத் தொனிக்கக் குறிப்பிட்டுள்ளார். அவ்விருத்தம் வருமாறு ;

பூமானாஞ் செல்விவளர் பூவாற்றூர் வாழ்
போக்குமூ சேந்த்ரனெனு பூபனீன்ற
சீமானாம் செய்துமுகம்மது பொன்னீயச்
செய்யித பூபக்கர்பதக் கவியாய்ச் செப்ப
மாமானம் உறுந்தலீற் செய்யும் நன்றி
பறக்கத்தால் அவன்பவங்கள் மாறினாப்போற்
காமாகால் விலங்கு அலி பார்வை யால்முற்
கட்டறுந்தே சென்றனன்கால் விட்டறிந்தே

பாத்திமா திருமணப் படலம் இருபத்தெட்டு விருத்தங்களையும் பதினான்கு பதங் (கீர்த்தனங்) களையும் கொண்டுள்ளது. கதைத் தொடர்பை ஏற்படுத்தவே விருத்தப் பாக்கள் பயன்படுத்தப்

பட்டுள்ளன. இந்தப் படலத்தில் இடம்பெற்றுள்ள பதங்கள் மிக நீண்டவையாகக் காணப்படுகின்றன. இப்படலத்தின் முதல் விருத்தம் இங்ஙனம் அமைந்துள்ளது.

புதியவன்தூ தெனுநபிசீர் மதினமீதிற்
பொங்குதீன் வளர்த்துநிதம் புதுமையோங்கப்
பதியிடங்கள் தொறும்படரச் செங்கோல்நீதிப்
படியுலகில் அரசியற்றி வாழும் நாளிற்
றுதியுடையோன் மொழிமறா தும்பர்வேந்து
சொலுஞ்சுருதி யவர் போற்றச் சுரர்கள் வாழ்த்த
மதிநுதலின் மங்கைபாத் திம்மாக்குற்ற
மணஞ்சொல்வா மணச்சிறப்பின் குணஞ் சொல்வாமே.

இன்றும் முஸ்லிம் தம் இல்லங்களிலும் பள்ளிவாசல்களிலும் நடைபெறும் விருந்து வைபவங்களிலும் வேறு சந்தர்ப்பங்களிலும் பதம் படிக்கு முன்னர் விருத்தம் படித்தே ஆரம்பிப்பது வழக்கம். புலவர்தாம் இந்த முறையைத் தொடக்கி இருக்கலாம் என்று கூறலாம்.

சீறாப்புராணத்தில் பதுறுப் படலம் அதன் முதலாஞ் செய்யுளில் முஸ்லிம்களுக்கு நோன்பு விதியாக்கப்பட்டது பற்றிய குறிப்பைக் கொண்டுள்ளது. அதேபோன்று சீறாக் கீர்த்தனமும் முஸ்லிம்களுக்கு நோன்பு பறுளென விதிக்கப்பட்டமையையே அதன் முதல் விருத்தத்தில் குறிப்பிடுகின்றது. இது ஹிஜ்ரத்து காண்டத்தின் 219 -வது விருத்தமாகத் திகழ்கின்றது. அது வருமாறு :

நேர்கொள்புறுக் கான்நெறிகள் நிகழுமாண்
டதில்றமளான் நீதி நோன்பை
ஏர்கொள் உம்மத் தனை வோர்க்கும் அனுதினமும்
பறுலாக்கி னேனென் றின்பாய்க்
கார்கொள்குடை நபிக்கிறைவன் அருளின்ஆயத்
திறக்கியபோற் கடனாம் நோன்பை
பேர்கொள் நபி நான்கியாரு மற்றுள்ளோரும்
பிடித்திட்டார் கற்பனைபோல் முடித்திட்டாரே.

பதுறுப் படலத்தில் ஆறு பதங்களே இடம் பெற்றுள்ளன. அந்தப் படலத்தில் முதலாம் பாடலாக அமைந்துள்ள பதம்,

பதுறிற் பொரு சண்டை கேளும் – முகம்மதுவும்
பதுறிற் பொரு சண்டை கேளும் – அபூஜகில்பால்
பதுறிற் பொரு சண்டை கேளும்

என்பதைப் பல்லவியாகக் கொண்டுள்ளது. சரண அநுபந்த அநு பல்லவி பத்து அடிகளால் ஆக்கப்பட்டுள்ளது. அதன்பின் மெட்டு

வேறுபடுகிறது. முப்பத்து நான்கு வெவ்வேறு மெட்டுக்களில் பாடக் கூடிய பகுதிகள் இந்தப் பதத்தில் இடம்பெற்றுள்ளது. மிக நீண்ட பதமாக அமைந்துள்ளது. பதுறுப் போர் நடைபெற்ற முறை முழுவதும் இந்தப் பதத்தில் அமைந்திருப்பதைக் காணலாம். இப்னு மசுஊது (றலி) கூற்றாக ஒரு பதம் பாடப்பட்டுள்ளது. அபூஜகில் என்னும் இஸ்லாத்தின் பரம விரோதி யுத்தகளத்தில் விழுந்து கிடக்கும் பொழுது அபூஜகிலை விளித்துப் பாடப்பட்ட ஒரு பதம் இவ்வாறு அமைந்துள்ளது.

கல்யாணி ராகத்தில் அடதாளத்தில் பாடவேண்டிய பாடல் இது:

பல்லவி

பட்டுப்போகாதே, கேள் அபுஜகிலே — பதைத்தே

அநுபல்லவி

தட்டுப்படப் போறாய் சையிதிறசூலைச்
சங்கைபண்ணாமற் பேசாதே — உன்
அங்கமறந்து யேசாதே மூசாதே (பட்டுப்போ)

சரணங்கள்

1. போர்க்களத்திடை ஊறுபட்டேபவஞ்
சேரக் கிடக்கிறாய் பேயும் — கழு
கோரியருந்துமே நாயும் எடாநீயும் (பட்டுப்போ)

2. புத்தி அநேகம் உரைத்தும் நீ கேட்கிலை
சத்தியமாக என் வாளைக்—கொடு
வெட்டிடுவேன் இதுவேளை எடாஏழை (பட்டுப்போ)

3. பூமிக்குள்ளேஇற சூல்நபியோடுநீ
தாமிப்படிப் பகையாதே - இப்போ
நாமொழிவாக்குப் பொய்யாதே வையாதே (பட்டுப்போ)

இங்ஙனம் கூறியும் வழிக்குவராத அபுஜகிலை இப்னு மசுஊது(றலி) அவர்கள் வெட்டிக் கொன்றார்கள் என்பது இந்தப் பதத்தின் தொடர் பாக ஒரு விருத்தப்பாவில் இங்ஙனம் இடம் பெற்றுள்ளது.

இபுனுமசுகூ திவ்வா றுரைப்பச் சீறி
எதிர்ந்த பூஜகில் மொழிவன் அறிவில் ஆயர்
விபலமதி யுரைத்தனைநின் உயிர் விசும்பி
னிடும் வயவரெனதிடத்தி லில்லையாகிற்
கபமுடைய றென்னுரையா ரெனநயனங்
கனன்று விழித் திகழ்மொழிகள் செவிகொள்ளாது
சபதமுட னுரைத்தனன் கேட்டுளம் வெகுண்டு
தறித்திட்டார் அவன்சிரசை யறுத்திட்டரோ

நூலின் இறுதியில் இடம்பெற்றுள்ள ஓர் இரட்டை ஆசிரிய விருத்தப் பாவில் பதிப்பித்தார் முதலியன குறிப்பிடப்பட்டுள்ளன. சீறாப்பதம் ஹிஜ்ரி 1280 ஆம் ஆண்டில் ஜமாதுல் ஆகிர் மாதம் இருபத்திரண்டாம் நாள் வெள்ளிக்கிழமை தளை பிரித்து எழுதப்பட்டது. பின்னர் அதனை கண்ணகுமது மகுதூ முகம்மது அவர்களால் சென்னை இந்து வித்யா நிலைய அச்சகத்தில் அச்சியற்றப்பட்டது. இதனையே இரட்டை ஆசிரிய விருத்தம் இங்ஙனம் குறிப்பிட்டுள்ளது.

திருமேவு வாசனைம றாதவுடல் நாதராய்த்
  திக்குத்தி காந்த மெல்லாம்
தீனெறிசெ லுத்துநபி நாயக முகம்மதேர்
  சேர்மக்க மூரினின்று
மருமேவு மதினமூ ரேகுஹிஜு றத்தெனும்
  வருடத்தி னெண்ண மதுதான்
வழுத்துமோ ராயிரத்திருநூற்றி யெண்பதில்
  மாதஞ் சமாதுல் ஆகிர்
தருமேவு தெய்தியிரு தசாண்டில் வெள்ளி நாட்
  டனிலாதி யருளி னாலே
தண்பாவ தாமிந்த சீறாப்பதந்தனைத்
  தளைபிரித் தெழுதி நலமாய்
இருமேவு சென்னையினி லிந்துவித் யாநிலய
  மென்றுசொ லியந்திரத்தில்
ஏரச்சி விட்டனன் மகுதூ முகம்மதென்
  றியம்பு நாவலவன் மாதோ

கீர்த்தனத்தின் அல்லது பதத்தின் இலக்கணங்கள் அனைத்தையும் அமையப்பெற்றுத் தோன்றி உள்ளது சுகிர்த மெஞ்ஞானச் சங்கீர்த்தனம். இந்த நூலில் இடம் பெற்றுள்ள கீர்த்தனங்கள் முகம்மது நபி (சல்) அவர்கள் பேரிலும் அவர்களுக்கு அடுத்ததாக வரும் முஸ்லிம் பெரியார்களின் மீதும் புகழ்ந்து பாடப்பட்டுள்ளன. ஆசிரியரே இதனைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். 'நபி பெருமானெம் பெருமான் மீதும் உயரவுலியாக்கள் வாகுபெற்ற திருச்சரணந் துதித்தியற்று பதங்களெல்லாம் வகுத்துச் சேர்த்துப் பாகமுற்ற சுகிர்த மெஞ்ஞானச் சங்கீர்த்தனமிப் பனுவறன்னை' தாம் இயற்றியதாக ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

சுகிர்த மெஞ்ஞான சங்கீர்த்தனம் என்னும் இந்நூல் அப்துல்காதிறு லெப்பைப் புலவரால் இயற்றப்பட்டது. அவர் ஆழ்வார் திருநகரியைச் சேர்ந்த அழகிய மணவாளபுரத்தைச் சேர்ந்தவர். மன்சூறு மீறாசாகிபு

என்பவரின் புதல்வர். அவர் 'நாமணக்குங்கலைஞன்' எனவும் அழைக் கப்பட்டார். ஞானக்கலைகள் பலவற்றிலும் தேர்ச்சி பெற்றவர் என எல்லோராலும் பாராட்டப் பெற்றவர். அன்றி தேர்ச்சியும் பெற்றவர்.

சுகிர்த மெஞ்ஞானக் கீர்த்தனம் நூலுக்குக் கொடை நாயகராய் அமைந்தவர் சு. மீ. முகம்மது அசன் என்பவர். அவர் தலை சிறந்த வணிகராய்த் திகழ்ந்தவர். சாத்தாங்குளத்தைச் சார்ந்தவர். முகியித்தீன் அப்துல் காதிர் என்பவரின் புதல்வர். ஆசிரியரால் கொடை நாயகரை புகழ்ந்து பாடப்பட்ட வினோத விசித்திர கவிகள் பல இந்நூலில் இடம் பெற்றுள்ளன. அத்தகைய வினோத விசித்திர கவிகளுள் ஒன்று 'நாற்றலை யெழுத்தலங்காரம்' இந்த நாற்றலை யெழுத்தலங்காரம் நிலை மண்டிலை ஆசிரியப் பாவில் அமையும். நாற்றலையலங்காரம் அமையப்பெற்ற ஒரு நிலை மண்டில ஆசிரியப் பாவை எடுத்துக் கொள் வோம். கொடை நாயகரின் பெயர் முகம்மது அசன் என்பது தெரிந்ததே. முகம்மது அசன் என்னும் பெயரில் எட்டுத் தமிழ் எழுத் துக்கள் உள்ளன. இந்த எட்டுத் தமிழ் எழுத்துக்களும் இந்த நிலை மண்டில ஆசிரியப் பாவில் முகம்மது அசன் என்பது மூன்று முறை வந்துள்ளது. கொடை நாயகர் பெயரின் முதல் எழுத்து 'மு' என்பது. இரண்டாம் எழுத்து 'க' என்பது. இந்த நிலை மண்டில ஆசிரியப் பாவின் முதலாம் அடியில் 'மு' என்பது மூன்று முறையும் இங்ஙனமே எட்டு எழுத்துக்களும் எட்டு அடிகளிலும் எழுத்தலங்காரம் அமைந் துள்ள நிலை மண்டில ஆசிரியப்பா இங்ஙனம் வந்துள்ளது.

அ முதர் சொரிதருஞ் சி முதசத் திரமுறு
ப கன்ற வானவர்கோன் பு கன்றமறைபுகழ்
வி ம்மிய வற்புத செம்மலாய் கம்மை
ஞ மவூர் புகுத்தும் லா ம மு. கம் மது
ம துகை நாயகர் திருபுது மணிப்பது ம
வா அனர் கழரின மனத்தா அர்ச் சாஅர்
ஆ சனத் திருத்திய நேசவி சுவாசன்
ம னமுகம் மதுஅ சனென் றுரை மன்னே.

இதே போன்று மற்றொரு செய்யுளிலும் முகம்மது அசன் என்பது அமையப் பெற்றுள்ளதைக் காணலாம். அந்தச் செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

மு த்து விளையுங் கமுகு விருட்சமும்
க னகடு ரிஞ்சிய ல கமுந் தகவும்
ம தம்பொழில் மத்தகத்தும் பியுஞ் செம்பி
ம திப்பொரு விரும்புங் காமருங் கமலை
துரைத்தன நடாத்தும் மதுரையும் - மதுரை

அ ருணலம் புரிந்தே யாஅவுங் காஅவுக
ச த்திய நித்திய வசம சராசர
ன வின்முகம்மதுதுஅச னென்பவன் மன்னோ

சுகிர்த மெஞ்ஞானச் சங்கீர்த்தனத்தில் மற்றொரு விசித்திர வினோத கவி இருக்கிறது. அது நடு வெழுத்தலங்காரமாய் அமைந்துள்ளது. நடு எழுத்தலங்காரமாய் கொடை நாயகரின் பெயர் முகம்மது அசன் என அமைந்திருப்பதைக் காணலாம். ஆனால் முன்பு எடுத்துக் காட்டப்பட்ட இரண்டு செய்யுள்களிலும் இடம் பெற்றது போன்று இந்தச் செய்யுளில் அந்தப் பெயரை எளிதில் கண்டு பிடிக்கமுடியாது. வரிசையில் அமைந்துள்ளமையைக் காணலாம். முதலில் கவிதையைப் பார்ப்போம்.

வாசஞ் செறிந்த தேன்பேரும்
வரிசை மிகுந்துவ திட்டமுடன்
நேசர் சிறந்த விளைஞோன் பேர்
நிலத்துக் கதிபன் கீர்த்தனப்பேர்
ஆசைக் குரிய மணம்பெயரு
மழகுக் குரிய சிரஞ் சேர்ந்து
வாசித் தொழுபே ரிடைநடுவில்
மன்னன் முகம்ம தசனாமே.

இனி, இச்செய்யுளில் கொடைநாயகர் பெயர் முகம்மதசன் என்பது எங்ஙனம் அமைந்துள்ளது என்பதை நோக்குவோம். இந்தப் பாடலில் உள்ள தேன், அதிட்டம், இளைஞோன், நிலத்துக்கதிபன், கீர்த்தனம், மணம், சிரம் என்னும் சொற்கள், சொற்றொடர்கள் இந்தப் பெயரைத் தேர்ந்தெடுப்பதில் பயன்படுகின்றன. தேன் என்றால் அமுது என்பது பொருள். அதிட்டம் யோகத்தைக் குறிக்கிறது. இளைஞன் என்றால் தம்பியைக் குறிக்கும். நிலத்துக்கதிபன் என்பதன் பொருள் பூமன் என்பதாகும். கீர்த்தனம் பதம் என்பன ஒரு பொருட்சொற்கள் மணம் என்பது வாசத்தைக் குறிக்கும். சிரம், சென்னி என்பன ஒரே கருத்துடையன. எனவே கருத்துக்களாகப் பெற்ற அமுது, யோகம், தம்பி, பூமன், பதம், வாசம், சென்னி என்னும் ஏழு சொற்களும் மும்மூன்று எழுத்துக்களைக் கொண்டுள்ளன. அந்த ஏழு சொற்களை ஒவ்வொன்றிலுமுள்ள நடு எழுத்துக்களான மு, க, ம், ம, த, ச, ன் என்பதைப் பெற்றுக் கொண்டால் முகம்மதசன் என்பது பெறப் பட்டிருப்பதைக் காணலாம்.

சுகிர்த மெஞ்ஞான சங்கீர்த்தனம் என்னும் நூலில் ஓசைநயம் ததும்பும் பலகீர்த்தனங்கள் இடம்பெற்றுள்ளன. இராக தாளத்துடன் பாடக்கூடியன அப்பாடல்கள். இந்நூலில் இடம் பெற்றுள்ள கீர்த்தனங்களைப் பார்க்கும் பொழுது இசைத்துறையில் நிபுணத்துவம்

பெற்றிருந்தார்கள் முஸ்லிம் புலவர்கள் என்பது ஓரளவிற்குப் புலனா கின்றது. சிற்சில சமயங்களில் ஓசை நயம் கருதி ஒலிக் குறிப்புக் களையும் சுதிகளையும் பயன்படுத்தி உள்ளனர். அத்தகைய ஆசிரியர், அங்ஙனம் பாடும் பொழுது நபிகள் பெருமானார் (சல்) அவர்களே புகழப்பட்டுள்ளார்கள். அந்தக் கீர்த்தனம் இவ்வாறு அமைந்துள்ளது.

வேதா வேதா வேதா அதிபதி
வேதா வேதா வேதா அதிபதி
வேதா விது ஒளிர்ப் போதா விரிமலர்ப்
பாதா நபி மகுமூதா நவமிகும் வேதா

அநுபல்லவி

நீதா நரைமிகு மாமதினா நகர்
நீதா நிதிமணி யாகிய நாயகர்
நத்தல முற்றிறை முத்திரை பெற்றுயர்
சுத்த மதாகிய சுத்தர் முகம்மதுவே.

சரணங்கள்

ஜனன ஜனனஜன ஜனன ஜனனஜன
ஜகுர்த ஜகுர்த ஜகு ஜிகுர்த ஜிகு
டிருட்டு டிங்கு குடிகுடி குடிங்குடு
ஜனன ஜனனஜன ஜெயந்தியாவன : வேதா
மண்ணோடு விண்ணுரை மாதிரமோடுயர்
திண்ணிய மேவிய புண்ணியநாதரே
மருமலியும் புயயசுய தயமுங்கிய
திருவருள் தங்கிய குருமு கம்மதுவே. (ஜனன)

கீர்த்தனங்கள் பலவற்றைக் கொண்ட மற்றொரு நூல் சங்கீத சிந்தாமணி. நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களையும் ஏனைய முஸ்லிம் பெரியோர்களையும் போற்றிப் புகழும் கீர்த்தனங்களாக அமைந்துள்ளன. பல புலவர்கள் பாடிய கீர்த்தனங்கள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. முற்பகுதியில் உள்ள கீர்த்தனங்கள் அசனலிப் புலவ ரால் பாடப்பட்டுள்ளன. அசனலிப் புலவர் என்பவர் கந்தப் புலவரின் பேரர். சீருடையார் புரத்தைச் சேர்ந்தவர். யூசுபு நபி புராணம் பாடிய பெருமை கந்தப்புலவரைச் சாரும். முதலில் இடம் பெறுவது ஆண்டவன் திருநாமத் துதி. அல்லாஹ்வின் அழகுத் திருப்பெயர் களைச் சுட்டும் அஸ்மாஉல்ஹுஸ்னா திக்கீர் என அத்துதி பெயர் பெற்றுள்ளது. அஸ்மாஉல்ஹுஸ்னாவாக வரும் அல்லாஹ்வின் பெயர்கள் அங்கு இடம் பெற்றுள்ளன. அது ஒரு கீர்த்தனமாகப் பாடப்பட்டுள்ளது. கீர்த்தனங்கள் பலவற்றிலும் பண்ணமைதி இருப்ப

தைக் காணலாம். வண்ணங்கள் பல அங்கு இடம்பெற்றுள்ளன. சந்தக் குழிப்புகள், சொற்கட்டுக்கள், சுதிகள் முதலியனவற்றை அடிப்படையாகக் கொண்டே பெரும்பாலான கீர்த்தனங்கள் பாடப்பெற்றுள்ளன. நபிகள் நாயகம் (சல்) முதல் ஏனைய பெரியார்களைப் புகழ்ந்து கீர்த்தனங்கள் பாடிவிட்டு நபிகள் நாயகமே தமக்குத் துணை என கூறி முடிக்கிறார் ஒரு செய்யுளில். கட்டளைக் கலித்துறையில் அமைந்துள்ள அச் செய்யுள் வருமாறு :

காலாதி காலமும் காட்சியைத் தேடிக் கருத் திலெண்ணி
மாலாய னுதின மாமையால் மிஞ்சு திம்மா னிலத்தின்
பாலாலுஞ் சீனி சர்க்கரை தேன்மொழி பயிற் றுமிற
சூலேக தியெனக் கல்லாது வேறில் லைதோத் திரமோ,

அடுத்து வருவது முன்னோர்களால் இயற்றப்பட்ட கீர்த்தனங்கள். அவற்றின் ஆசிரியர் யார் என்பது பதிப்பாசிரியருக்கே தெரியாது. அப் பதங்களும் நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களைப் புகழ்ந்து பாடப்பட்டுள்ளன. அவற்றைத் தொடர்ந்து வருவன சாகுல் கமீதுப் புலவரால் பாடப்பட்ட பதங்கள். சாகுல் கமீதுப்புலவர் திருநெல்வேலிப் பகுதியில் உள்ள மேலப்பாளையத்தைச் சேர்ந்தவர். இவர் முகம்மது சைன் புலவரின் புதல்வரும் முகியத்தீன் ஆண்டகை பேரில் பிள்ளைத் தமிழ்ப் பாடியவருமான முகியத்தீன் கவிராயரின் பேரர். மீறான்சாகிபுப் புலவரின் புதல்வர். நபி நாயகம் (சல்) அவர்கள் பேரில் பல பதங்கள் பாடியுள்ளார். அபுபக்கர்சித்திக் (றலி) உமறுகத்தாப் (றலி), உதுமான் இப்னு அப்பான் (றலி), அலி இப்னு அபித்தாலிபு (றலி) ஆகியோரின் பேரில் பதங்கள் பாடி உள்ளார்.

நவரசக் கீர்த்தனாலங்காரம் என்பது மற்றொரு கீர்த்தனை நூல். இதன் ஆசிரியர் சேகு முகியத்தீன்.இவர் ஸ்ரீ வைகுண்டத்தைச் சேர்ந்த மதாறு சாகிபின் புதல்வர். சங்கீத வித்துவான் மீறான் சாகிபின் சீடர். சில கீர்த்தனங்களே இங்கு இடம்பெற்றுள்ளன.

அலங்காரக் கீர்த்தனம் என்பது வேறொரு நூல். இது கவுது பாவா செய்கு முகம்மதுப் புலவர் அவர்களால் இயற்றப்பட்டது. கோட்டாறு பகுதியைச் சேர்ந்த செய்கு முகம்மது முகிய்யித்தீன் லெப்பையின் புதல்வர். அறபு தமிழ் நன்கு கற்றவர். புலவர் என்னும் பொருளில் ஷாயிர் என அழைக்கப்பட்டவர். இதனை வித்வதீபம் அருள்வாக்கி அப்துல்காதிர் அவர்கள் பரிசோதித்துள்ளார். இருபதாம் நூற்றாண்டின் ஆரம்ப காலத்தில் பாடப்பட்டவை இந்தக் கீர்த்தனங்கள். இந்நூல் வெளியிடப் பொருளுதவி புரிந்தவர் மகுமூது லெப்பை ஹாஜியார். இவர் சம்சு லெப்பையின் புதல்வர். இலங்கை பாணந்துரையைச் சேர்ந்தவர். இந்நூலின் சாற்றுக்கவி இங்ஙனம் அமைத்துள்ளது.

மங்களஞ் சேர்கோட்டாற்றில் மேவும் செய்கு
முகம்மது முகியத்தீன் லெப்பை யீன்ற
திங்கள் நிகர்கும ரரெனப் புவிமேல் வந்தோர்
திகழறு பினிலக் கணமுற்றாய்ந்த ஷாயிர்
துங்கமி ருமலங் காரக் கீர்த்த னத்தைத்
துலங்கிய தேன்மழை சொரிந்தார் கேட்போர்
தங்களி ருசெவிக் கினிக்குங் கல்பா னந்தந்
ததும்பு மெனிலதன் பெருமை சாற்றுவராரோ

இங்கே புலவரைக் குறிக்க ஷாயிர் என்றும் உள்ளத்தைச் சுட்ட கல்பு என்றும் அறபுப் பதங்கள் பயன்படுத்தப் பட்டிருப்பதைக் காண லாம். இந்நூலில் உள்ள முதலாங் கீர்த்தனம் ஆனந்தக் களிப்புக் கீர்த்தனமாக அமைந்துள்ளது. பதினெட்டு சரணங்களைக் கொண்ட பதமாக அமைந்துள்ளது. நபிகள் நாயகம் (சல்) அவர்கள் பேரிலும், இமாம் ஹுசைன் (றலி) அவர்கள் பேரிலும், முகியித்தீன் அப்துல் காதிறு ஜெய்லானி (றலி) அவர்கள் பேரிலும் செய்கு முஸ்தபா ஒலி யுல்லா பேரிலும், பாணந்துரைப் பள்ளிமுல்லை வலியுல்லாஹ் பேரி லும், பண்ணாமத்தைச் சேர்ந்த செய்கு நூறுத்தீன் ஒலியுல்லாபேரிலும், ஹாஜி பாவா செய்கு சுலைமானுல் காதிரி இப்னு செய்கு முகம்மது ஒலியுல்லா பேரிலும், ஹாஜி செய்கு முகியித்தீனுல் காதிரி சாகிபு அவர்கள் பேரிலும், பாடப்பட்ட கீர்த்தனங்களை அலங்காரக் கீர்த்த னம் அதனிடத்தே கொண்டுள்ளது. புகாரிக் கந்தூரி பற்றிய கீர்த்தனம் இறுதியாக இடம் பெற்றுள்ளது. செய்கு முஸ்தபா ஒலியுல்லாவைப் பற்றி இங்ஙனம் ஒரு கீர்த்தனம் பாடி உள்ளார். அது வராளி இராகத் தில் கோசிகதாளத்தில் பாடப்பட வேண்டிய கீர்த்தனம்.

பல்லவி

வாரி நாமந்தரித்த நற்காரணக் குரு
வான சங்கரே

அநுபல்லவி

ஒருவலியோனின் வேதர்-
கலிமாவின் போதர்
முகியத்தீன் நாதர்
பகுதாதில் வாழும்
தினமென்னை யாளும்
பூமீதென்னாளும்
கமழ்வீசு நல் குத்துபாம் இன்னம்
அவர்கள் தரீக்கைத்
தெரிந்த நல் செய்கு
முஸ்தபா ஒலியே (வலி)

சரணங்கள்

1. இலங்கை நன்னகரில்
துலங்கும் பர்பலியில்
முழங்கும் நல்லூரில்
இபுனுபாவா ஆதம்
நல்விசு வாசம்
சுடர் பிரகாசம்

எங்கும் பேரோங்கு மொலி – குரு
செய்யிதகுமத் முபாறக்கு ஒலி
யுல்லா சீசரே (வலி)

2. அஞ்சுமோராறும்
அறிந்துன்னிற் சேரும்
வஞ்சகந் தீரும்
நல்சலவாத்தை
தாத்து சிபாத்தை
நாடும் சிறாத்தைத்
தேடும் எங்கள் ஒலியே-சொந்த
பத்து பூதத்தில்
நாடி எப்போதும்
அஞ்சி வணங்கும் ஒலி (வலி)

3. வடிவுதுலங்கும்
புவிமீதிலங்கும்
நல்மோட்சமெங்கும்
வாசங் கமழும்
அப்துல்லா மகிழும்
நிலத்தில் புகழும்
எங்கள் நபி நாயகர்-புகழ்
ஓது முகம்மது கௌதை
எப்போதும் நீர்
பரகதி சேர்த்தருளும் (வலி)

இன்னோரென்ன பல கீர்த்தனங்கள் இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்தில் காணக் கூடியதாக இருக்கின்றன. இவற்றின் இராகம், தாளம், சுதி, வண்ணம், சந்தக்குழிப்பு என்பனவற்றை நுணுகி ஆராயின் முற்தமிழ்ப் புலவர்கள் சிறந்த இசைவல்லுனர்களாக விளங்கிய தோடு அவர்கள் இசைத் தமிழ் வளர்ச்சிக்கு ஆற்றிய தொண்டு மகத்தானது என்பதை உணர முடியும் எனின் அது மிகையாகாது.

# கும்மி

பண்ணமைந்த பாடல்கள் பலவகையின. இசைத்தமிழோடு நெருங்கிய தொடர்புடையன அவை. இசையோடு பாடக்கூடியவை. இங்ஙனம் இசைத்துப் பாடி ஆடக்கூடியவை. மக்கள் வழக்குப் பிரபந் தங்களாக அழைக்கத்தக்கவை. அத்தகைய மக்கள் வழக்கு பிரபந் தங்களுள் ஒன்று கும்மி எனப்படும்.

கை குவித்துக் கொட்டும் பொழுது அது கொம்மை எனச் சுட்டப் படும். இது பெரும்பாலும் கிராமிய வழக்கு என்பர் கொம்மை என்னுஞ் சொல்லிலிருந்தே கும்மி என்னும் சொல் பெறப்பட்டுள்ளது என்பர். சில சமயங்களில் இது கொம்மி எனவும் வழங்கப்பெறும் என்று கூறுவர். ஏனைய மக்கள் வழக்குப் பிரபந்தங்கள் போலல்லாது கும்மி ஒரு நோக்கத்துக்காகச் செயல்படுவது எனலாம்.

பெண்பிள்ளைகள் வட்டமாய் நின்று ஆடுவர். அங்ஙனம் அவர்கள் விளையாடும் பொழுது கை குவித்துக் கொட்டுவர், ஆடிப்பாடுவர். இங்ஙனம் பாடப்படும் பாடல்களே கும்மிப்பாடல்கள் என வழங்கப் பெறும் கும்மிப் பாடல்கள் பெரும்பாலும் கை குவித்துக் கொட்டி ஆடும் விளையாட்டுக்கே ஏற்றதாய் அமைந்து விடுகின்றன. இசையுடன் பாடக்கூடிய கும்மிப் பாடல்களுக்கு அமையும் சந்தங்கள் உண்டு; தாளம் உண்டு; இராகம் உண்டு.

சித்தர் ஞானக் கோவையில் பல கும்மிப்பாடல்கள் இடம் பெற்றுள்ளன. ஞானத்தையே பொருளாகக் கொண்டு அத்தகைய கும்மிப்பாடல்கள் அறிவின் தாத்பரியத்தை விளக்குவனவாக உள்ளன. தத்துவார்த்த அடிப்படையில் இயற்றப்பட்டனவாய் அமைந்து விடுகின்றன. மெய்ஞ்ஞானமே அவற்றின் கருப்பொருளாக வடிவம் பெறுகின்றன. இஸ்லாமிய அடிப்படையில் தமிழில் பாடப் பெற்ற ஞானக் கும்மிப் பாடல்கள் முஸ்லிம் புலவர்களால் இயற்றப் பட்டுள்ளன. சூபியாக்கள் என வழங்கப்படும் மெய்ஞ்ஞானப் புலவர் களே அத்தகைய ஞானக்கும்மிப் பாடல்களை யாத்துள்ளனர். அத்தகைய மெய்ஞ்ஞானப் புலவர்களைத் தமிழ் வழக்குக்கு இணங்க சித்தர் எனலாம் என்பர். அவை ஒரு வகைக் கும்மிப்பாடல்.

மற்றொரு வகையான கும்மிப் பாடல் உண்டு. அது பெண்பிள்ளை களால் பெருவழக்கில் பாடப்படும் கும்மிப்பாடலாகும். பொதுவாகப் பெண்பிள்ளைகள் வீட்டு அலுவல்களையே முதன்மையான தொழி லாகக் கொள்வர். அத்தகைய தொழிலைச் செவ்வனே செய்து முடிப்பர். சில சமயங்களில் கடுமையான உழைப்பைக் கொடுக்கக்கூடிய நெல்குத்துதல் போன்ற கருமங்களில் பெண்பிள்ளைகள் ஈடுபடுவர்.

அங்ஙனமே கடுமையாக உழைப்பதனால் களைப்பு ஏற்படும். அத்தகைய களைப்பைப் பொருட்படுத்தாமல் தம் பணியைப் புரிய பெண் பிள்ளைகள் ஓர் உத்தியைக் கையாள்வர். பாடிப்பாடி உழைக்கும் பொழுது களைப்பைப் பொருட்படுத்தாமலிருக்க வாய்ப்பு ஏற்படுகிறது. அத்தகைய வாய்ப்பைப் பெறவே அவர்கள் பாடுவர். அங்ஙனம் பாடுவதற்கு அவர்கள் கும்மிப் பாடல்களையே விரும்புவர்.

கும்மிப்பாடல் பாடுவதற்கு நெல் குத்துதல் போன்ற பணிகள் ஏற்றனவாய் அமைகின்றன. இரண்டு பெண் பிள்ளைகள் நெல் குத்தும்பொழுது கும்மிப்பாடல் பாடுவதனால் பாடலிலே பரவசப் பட்டுத் தமது உழைப்பால் ஏற்படும் களைப்பை மறந்து விடுகின்றனர். ஒருவர் மற்றவரின் பாடலிலே பரவசப்பட்டுவிடுவர். நெல் குத்துதலும் அந்தக் கும்மிப்பாடலுக்கு ஒரு வகையான தாளம் போடுவதாக அமைந்துவிடும். பாடிப்பாடி உழைப்பதனால் வேலைப் பளு எளிதாவதோடு வேலையும் விரைவாய் முடிந்துவிடுகிறது. பெண்கள் மட்டுமல்லர், ஏனையோரும் இத்தகைய களைப்பை உணராமல் இருக்கப் பாட்டுப் பாடிக்கொண்டே பணி புரிவர். அத்தகைய பாடல்கள் பெரும்பாலும் நாட்டார் பாடல்களாக மாறிவிடுகின்றன. நெல் குத்தும்பொழுது பெண் பிள்ளைகள் பாடும் கும்மிப் பாடல் இங்ஙனம் தொடங்கும்.

"நெல்லுக்குத்தம்மா நெல்குத்து
சிற்றுலக்கை போட்டுக் குத்து."

இங்ஙனம் தொடங்கி பல அடிகளைக்கொண்டு இத்தகைய பாடல்கள் முடிவடையும். இங்ஙனம் இருவர் பாடும் பொழுது இருவரும் மாறி மாறிப் பாடுவர். இத்தகைய பாடுதல் போட்டியிலும் முடிவடைவதுண்டு.

இனி, இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள கும்மிப்பாடல்களை எடுத்துக் கொள்வோம். அத்தகைய கும்மிப் பாடல்களுள் பெரும்பாலானவை முஸ்லிம் பெரியாரின் வாழ்க்கையினைப் பொருளாகக் கொண்டுள்ளன. அத்தகைய நூல்கள் "சீவிய சரித்திரக் கும்மி"கள் என அழைக்கப்பட்டுள்ளன.

அங்ஙனம் அமைந்த நூல்களில் ஒன்று மாப்பிள்ளை லப்பை ஆலிம் சீவிய சரித்திரக் கும்மி எனப்படும். மாப்பிள்ளை லெப்பை ஆலிம் சீவிய சரித்திரக் கும்மியை இயற்றியவர் முகம்மது முகியத்தீன் என்பவராவார். அவர் வாப்பு மரைக்கார் புதல்வர். காகிறூரைச்சேர்ந்தவர். சீ.பீ. அப்துல் ரகுமான் என்பவர் இக்கும்மிப் பாடலை இயற்றப் பொருள்

உதவி புரிந்தவர் ஆவார். ஒரு கும்மிப் பாடலிலே ஆசிரியர் இவ்வாறு தமது பெயரையும் தகப்பனார் பெயரையும் ஊரையும் குறிப்பிட்டுள்ளார். அந்தப் பாடல் வருமாறு :

வாசரொலியின் மேற்கும்மி சொன்னோன் காகிர்
வாப்பு மரைக்கார் தவப்பாலன்
பாசவினையன் முகம்மது முகியித்தீன்
பாவியானாவல னாவலினே – மிகு
பாவியானாதியின் காவலினே.

காப்புப் பகுதியில் இடம் பெற்றுள்ள கும்மிப் பாடல்களையும் மேற் குறிப்பிட்ட பாடலையும் தவிர ஏனைய கும்மிப் பாடல்கள் ஒவ்வொன்றிலும் கும்மியடியுங்கடி என்னும் சொற்றொடர் இரண்டிரண்டு முறை வந்துள்ளது. காப்புப் பகுதியில் உள்ள இருபது கும்மிப் பாடல்கள் ஒவ்வொன்றிலும் 'காப்பாமே' என்பது இவ்விரண்டு முறை பயன் படுத்தப்பட்டுள்ளதைக் காணலாம்.

சீவிய சரித்திரக் கும்மியைத் தொடங்கு முன்னர் இரண்டு விருத்தப் பாக்களில் தாம் கும்மிப் பாடலைப் பாடுவதற்கு அல்லாஹ் வின் அருளை வேண்டுகிறார். அவற்றுள் அல்லாஹ்வின் அழகுத் திருநாமங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. காப்புப் பாடல்களாகவே முதல் இருபது கும்மிப் பாடல்களும் அமைந்துள்ளன. அவற்றுள் முதலாவது பாடல் இங்ஙனம் அமைந்துள்ளது.

சிரிய தேசிக மெய்ஞ் ஞானரென்னும்
செய்யது முகம்மதாலீம்
ஒலிமேற் காரிய காரணக் கும்மி
சொல்லொடு கந்தனே
நித்தமுங் காப்பாமே — பரிசுத்தனே
காப்பாமே

இங்ஙனம் முகம்மது நபி (ஸல்) அவர்கள் ஏனைய நபிமார்கள், நான்கு கலிபாக்கள், அசன் (ரலி) உசைன் (ரலி), முகியித்தீன் ஆண்டகை, ஆகியோர் அடுத்துப் போற்றப்படுகின்றனர், இறைநேசச் செல்வர்கள் அடுத்துப் போற்றிப் புகழப்படுகின்றனர். சதக்கத்துல்லாஹ் ஆலிம் அப்பா அவர்கள் ஒரு கும்மிப்பாடலில் இவ்வாறு குறிப்பிடப் பட்டுள்ளார்.

திக்குத் திசைகள் புகழ்ந் தேத்து
எங்கள் செய்யிது முகம்மது ஆலிமொலி மேல்
தக்க புகழ் கும்மிப்பாவிசைக்க வல்ல
சதக்கத்துல்லா வொலி காப்பாமே- நல்ல
சதக்கத்துல்லா வொலி காப்பாமே.

ஒரு கும்மிப்பாடலில் கீழக்கரை செய்கு அப்துல் காதிறொலியின் ஆசீர்வாதத்தை நாடுகிறார் ஆசிரியர்.

கீழக்கரை கண்ட செய்யது முகம்மது
ஆலிம் மேற் செந்தமிழ் கும்மி சொல்ல
கீழக்கரை செய்கு அப்துல்காதிறொலிக்கு
பாகதர் என்றுங் காப்பாமே – மிகு
வாகரர் என்றுங் காப்பாமே

கடைசியாக இறைநேசர்களாகிய எல்லா வலிமார்களும் காப்பாக அமைய வேண்டும் என்று இங்ஙனம் ஒரு கும்மிச் செய்யுள் இயற்றி உள்ளார்.

திங்களெனவெங் குந்தீனை விளக்கிய
செய்யது முகம்மதாலீ மொலிமேல்
மங்களஞ் சேர் கும்மிப் பாவுரைக்க வொலிமார்
களெவருங் காப்பாமே – வலியோர்
களெவருங் காப்பாமே.

சீவிய சரித்திரக் கும்மியின் இருபத்தோராம் பாடலிலிருந்து மாப்பிள்ளை லெப்பை ஆலிமின் புகழ் பேசப்படுகிறது. அப்பாடலி லிருந்து 'கும்மியடியுங்கடி' என்னும் சொற்றொடர் இரண்டு முறை பயன்படுத்தப்பட்டுள்ளது. ஒரு கும்மிப்பாடலில் மாப்பிள்ளை லெப்பை ஆலிம் அவர்கள் பிறந்த ஆண்டும் மாதமும் குறிப்பிடப்பட்டுள்ளன. ஒரு கும்மிப் பாடலில் ஹிஜ்ரத் ஆயிரத்து இருநூற்றி முப்பதாம் ஆண்டு ஜமாத்துல் அவ்வல் மாதத்தில் மாப்பிள்ளை லெப்பை ஆலிம் அவர்கள் பிறந்தார்கள் என்பது குறிப்பிடப்பட்டுள்ளது. அந்தக் கும்மிப்பாடல் பின் வருமாறு:

ஆதி நபி கிசுறத் தருமாயிரத்து
இருநூற்று முப்பதினின்
ஓதுஞ் சமாதுலவ்வல் லுதித்தார்
வொத்துமைக் கும்மியடியுங்கடி சொல்லுஞ்
சொல்லுஞ் சுத்த மையக் கும்மியடியுங்கடி

இங்கே குறிப்பிட்ட ஹிஜ்ரத் ஆண்டும் மாதமும் 1814ஆம் ஆண்டுக்கும் ஏப்ரல் மாதத்துக்கும் சமமாகும். பிறந்த பகுதியும் வளர்ந்த பகுதியும் ஒரு கும்மிப்பாடலில் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளன:

காகிறெனும் பதி மீதுதித்தே கீழ்க்கரையெனும்
காகிறு செய்யது முகம்மதாலிம் புகழ்
சாற்றிக் கும்மியடியுங்கடி-பதம்
போற்றிக் கும்மியடியுங்கடி

மாப்பிள்ளை ஆலிம் அவர்கள் சந்தித்துப் பழகிய பெரியார்கள் இங்கே குறிப்பிடப்பட்டுள்ளனர். அவர்கள் முதலில் கண்ணனூர், தானூர், த்லைச்சேரி ஆகிய இடங்களில் வாழ்ந்த பேரறிஞரிடம் கல்வி கற்றமையை ஒரு கும்மிப்பாடலில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

கண்ணூர் தானூர் தலைச்சேரி முதற்
கண்ணுற்றி மாம்களிற் கல்வி கற்றே
கண்ணனூர் கண்டிடும் செய்யிது முகம்மதைக்
காமுற்றுக் கும்மியடியுங்கடி - சொல்லு
நாமுற்றுக் கும்மியடியுங்கடி.

மற்றொரு கும்மிப் பாடலில் அவர்கள் பயிற்சி பெற்ற மொழிகள் குறிப்பிடப்பட்டுள்ளன. தமிழ், பாலி, வடமொழி (சமஸ்கிருதம்) இந்துஸ்தானி, அறபு, பாரசீகம் முதலிய பல மொழிகள் விற்பன்ன ராய்த் திகழ்ந்தார், மாப்பிள்ளை லெப்பை ஆலிம் அவர்கள் என்பது ஒரு கும்மிப்பாடலில் இங்ஙனம் குறிப்பிடப்பட்டுள்ளது.

செந்தமிழ் பாளி கிரந்தாதி வல்ல சீரிய
இந்துஸ்தானி பாரிசெல்லாம் சிந்தையிற் றேர்ந்துணர்
செய்யிது முகம்மதைத் தெளிந்து கும்மியடியுங்கடி
செப்பமாய்க் கும்மியடியுங்கடி – உள
மொப்பமாய்க் கும்மியடியுங்கடி

எல்லா இடங்களிலும் கல்வி பயின்ற பின்னர் வகுதைக்கு வந்து மாப்பிள்ளை லெப்பை ஆலிமவர்கள் அங்கு வாழ்ந்த செய்கு அப்துல் காதிறு ஒலிபால் தீட்சை பெற்றார்கள். முரீது பெற்றார்கள். இதுவே ஒரு கும்மிப் பாடலில் இவ்வாறு வந்துள்ளது.

எங்கெங்குங் கல்விபயின்று வகுதைவந்
தேந்தல் செய்கப்துல் காதிறொலிபால்
சங்கை முரீதுறும் செய்யிது முகம்மதின்
தத்துவக் கும்மியடியுங்கடி - அவர்
உத்தமக் கும்மியடியுங்கடி

அப்பொழுது சென்னையை ஆட்சி செய்த நவாப் இப்பெரியாரின் அறிவு (இல்ம்) நுட்பத்தை அறிந்து அவரிடம் பயின்றார். அத்தோடு அவர் நின்று விடவில்லை. மாப்பிள்ளை லெப்பை ஆலிம் அவர்களுக்குப் பரிசில்கள் ஈந்து அவருக்குப் பரிவட்டமும் கட்டிக் கௌரவித்தார். இதனையே ஒரு கும்மிப் பாடல் இவ்வாறுகூறுகிறது.

சென்னை யூராளும் நவாபிவ ரில்மினைச்
செப்பமாய்க் கேட்டுப் பரிவட்டமும்
சென்னி மகுடாபி சேகமு மீந்திட்ட
சீர்த்தியிற் கும்மியடியுங்கடி - அவர்
கீர்த்தியிற் கும்மியடியுங்கடி

சென்னையில் வாழ்ந்த குணங்குடி மஸ்தான் சாகிபுக்கும் மாப்பிள்ளை லெப்பை ஆலிமுக்கும் இடையே இருந்த தொடர்பு ஒரு கும்மிப் பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது. மஸ்தான் சாகிபின் வாயமுதுண்டவர் மாப்பிள்ளை லெப்பை ஆலிம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது, அந்தக் கும்மிப்பாடல் வருமாறு:

சென்னை நகரத் தமர்ந்த குணங்குடி
செய்கப்துல் காதிறு மஸ்தான் சாகி
பன்னவர் வாயமுதுண்ட ஆரிபென்றே
அஞ்சாமற் கும்மியடியுங்கடி மனந்
துஞ்சாமற் கும்மியடியுங்கடி

மாப்பிள்ளை லெப்பை ஆலிம் எனவும் ஆலிமுல் அறூஸ் எனவும் வழங்கும் செய்யது முகம்மது ஆலிம் அவர்கள் யாரைத் திருமணம் புரிந்தார் என்பதும் ஒரு கும்மிப்பாடலில் இடம் பெற்றுள்ளது. அவர்களுடைய இல்லத்தரசி செய்யது அப்துல் காதிறு ஒலியின் புத்திரி என்றும் செய்யது அப்துல் காதிறு என்ற அவர்கள் குணங்குடி மஸ்தான் என்பவரின் குருவாவார் என இங்ஙனம் அந்தக் கும்மியில் குறிப்பிடப்பட்டுள்ளது.

சித்தர் குணங்குடி மஸ்தானின் குரு
செய்கப்துல் காதி றொலியீன்ற
புத்திரியின் நன் மணாளரென்றே புகழ்ந்
தேத்திக் கும்மியடியுங்கடி - மகிழ்ந்
தேத்திக் கும்மியடியுங்கடி

இலங்கையில் வேர்விலையில் வாழ்ந்தவர் கச்சி என்பவர். அவருடைய இல்லத்திலே மாப்பிள்ளை லப்பை ஆலிம் அவர்கள் விருந்

துண்டார். அப்பொழுது அங்கு அவர்கள் மனைவினை தீர்த்த செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. அந்தக் கும்மிப் பாடலில் இவ்வாறு அமைந்துள்ளது.

வேருவலை கச்சியென் போரவர்
வீட்டில் விருந்துண்ணுங் காலையிலே
சேருமனைவினை தீர்த்திடும் செய்கின்மேல்
தெம்பாய்க் கும்மியடியுங்கடி - உளத்
தன்பாய்க் கும்மியடியுங்கடி

மாப்பிள்ளை லப்பை ஆலிம் அவர்கள் எண்பத்தாறு வயது வாழ்ந் தவர் என்பது மற்றொரு கும்மிப்பாடல்.

வான்கதிர் போலவே யெண்பத்தாறு
வல்லவயதிருந்தே மார்க்க
தீன்வளர் வித்திடும் செய்யது முகம்மதின்
சித்தாந்தக் கும்மியடியுங்கடி - வளர்
வித்தாந்தக் கும்மியடிங்கடி.

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

மாப்பிள்ளை லெப்பை ஆலிமின் நூல்கள் பல தரத்தன. அவற்றில் நம்பிக்கை பற்றியும், நடைமுறை பற்றியும், ஏகத்துவம் பற்றியும், ஞானம் பற்றியும் அவர்களால் எழுதப்பட்ட நூல்கள் பல. அவற்றை எல்லோரும் படித்து மகிழ்ந்து பயன் பெற வேண்டும் என ஒரு கும்மிப் பாடலில் ஆசிரியர் இங்ஙனம் குறிப்பிட்டுள்ளார்.

ஈமானிசுலாம் தௌகீதோடே நல்ல
ஏற்ற மகரிபத்தின் நான்கும்
சீமானுரை செய் கிதாபையுறப்பார்த்துத்
தெளிந்து கும்மியடியுங்கடி - பல
மொழிந்து கும்மியடியுங்கடி

அங்ஙனம் அவர் தமிழ் நூல்கள் எழுதுபவர் என்பதற்கு ஒரு காரணம் கற்பிக்கப்பட்டுள்ளது. வாயினால் நேரடியாகச் சொன்னால் வம்பு ஏற்படும் என்று அறிந்தே அவர்கள் தாம் கூற வேண்டியவற்றை நூல்கள் வாயிலாகக் கூறி உள்ளார் என ஒரு கும்மிப் பாடல் இங்ஙனம் அமைந்துள்ளது.

வாயினாற் சொல்லிடின் வம்பாகுமென்றே
வல்லகிதாபதிற் கோர்த்து வைத்த
தூயராமாம்ல் செய்யது முகம்மதைச்
செப்பமாய் கும்மியடியுங்கடி - மன
மொப்பமாய்க் கும்மியடியுங்கடி.

அவர்கள் இயற்றிய நூல்களனைத்தையும் பார்த்தவர்கள் படித்த வர்கள் அனைவரும் அவர்கள் கூறியவற்றைப் போற்றுவர். கொண் டாடுவர், புகழ்வர், பேணுவர், உண்மையை உணர்வர். இதனையே ஒரு கும்மிப்பாடல் இவ்வாறு பாடுகின்றது.

கோர்த்த கிதாபுகள் பார்த்தோர்களெல்லாம்
கொண்டாடிக் கொண்டாடித் தோத்திரஞ் செய்ய
தார்த்த முணர்த்தும் மாப்பிளை யாலிமே
லாசாரக் கும்மியடியுங்கடி - மிக
வோசாரக் கும்மியடியுங்கடி.

மழையற்ற காலத்தில் மழை பெய்வித்து மகிழ்ந்தமை பற்றிய கும்மிப்பாடல் இங்ஙனம் அமைந்துள்ளது.

வானின் மழைகள் வரந்தொழிக
வந்துசொரியச்செய் காரணராம்
தீனின் விளக்கொளி செய்யத் முகம்மதைச்
சிந்தையாய்க் கும்மியடியுங்கடி - மிகு
விந்தையாய்க் கும்மியடியுங்கடி.

மாப்பிள்ளை லப்பை ஆலிம் அவர்கள் தென்னிந்தியா, இலங்கை முதலிய நாடுகளில் இஸ்லாம் மதத்தைப் பாதுகாத்து வளர்ப்பதில் கண்ணும் கருத்துமாய் இருந்து அரும்பெருந்தொண்டு புரிந்துள்ளார் கள். அறபு மொழியில் உள்ள பல நூல்களைத் தழுவி தமிழில் பல மத நூல்களை யாத்துத் தந்துள்ளார்; இத்தகைய, இஸ்லாம் மார்க்கம் பற்றிய மாப்பிளை ஆலிம் அவர்களின் நூல்கள் இருந்திராவிட்டால் தமிழ் நாட்டிலும் இலங்கையிலும் இஸ்லாத்தின் நிலைமை வேறு பட்டதாய் இருந்திருக்கும். அங்ஙனம் அவர்களால் விஸானுல் அர்வி என்னும் அறபுத் தமிழில் நூல்கள் இயற்றப்பட்டிருந்தமையால் முஸ்லிம் மக்கள் அடைந்த நற்பலன் அளப்பில. பல அறபு அறிஞர் கூட தமது மார்க்கபோதனைகட்கு அத்தகைய நூல்களையே ஆதாரமா கக் கொண்டு உரையாற்றுவர். இந்நூல்களிலே தமிழ்நாட்டு முஸ்லிம் களுக்கும் இலங்கை நாட்டு முஸ்லிம்களுக்கும் இடையே பிரிக்க முடியாத இணைப்பு ஏற்பட்டது என்று கூறின் அது மிகையாகாது.

அவர்களைப் புகழ்ந்து பேசாதவர்கள் இல்லை. என்றாலும் சீவிய சரித்திரக் கும்மியாசிரியர் இங்ஙனம் மாப்பிள்ளை லப்பை ஆலிம் அவர் களைப் புகழ்ந்தோர்களைப் பற்றிக் குறிப்பிடுகிறார். அங்ஙனம் மாப்பிள்ளை லப்பை ஆலிம் அவர்களைப் புகழ்ந்தவர்களுள் ஒருவர் பூக்கோயா தங்கள் என்பவர். இவர் இஸ்லாத்தின் தலைவர் எனப்

பொருள்பட செய்குல் இசுலாம் என அழைக்கப்பட்டவர். பெருமானார் நபி முகம்மது (ஸல்) அவர்கள் வமிசத்தைச் சேர்ந்தவராகையால், பூக்கோயா ஒலீ அவர்கள் செய்யத் என அழைக்கப் பட்டவர்கள். இதனையே ஒரு கும்மிப் பாடலில் இவ்வாறு விவரிக்கப் படுகிறது.

''செய்யிதராகிய செய்குலிசுலா மெனுஞ்
செம்மல்பூக் கோயா ஒலிபுகழ்ந்த
செய்யிது முகம்மதாலி மொலியென்றே
சீராய் கும்மியடியுங்கடி நபி
பேருறுங் கும்மியடியுங்கடி;

என்றென்றும் சிறப்பாகப் புகழப்படுபவர் செய்யிதுமுகம்மது என்று வழங்கப் பெறும் மாப்பிள்ளை லப்பை ஆலிம் அவர்கள். எப்பொழுதும் அல்லாஹ்வின் அருள் அவர்களுக்குண்டு. இக்கருத்துக் களைக் கொண்ட ஒரு கும்மிப்பாடல் இங்ஙனம் வந்துள்ளது.

என்றென்றுமே சிறப் புள்ளோராம் வல்ல
ஏகனருள் காப் புள்ளோராம்
நன்றென்று முத்தம மாப்பிள்ளை ஆலிம்மேல்
ஆங்காரக் கும்மியடியுங்கடி என்றும்
ஓங்காரக் கும்மியடியுங்கடி.

இத்தகைய பல அரியபெரிய பணிகள் புரிந்த மாப்பிள்ளை லப்பை ஆலிம் அவர்கள் இவ்வுலக வாழ்வை எப்பொழுது நீத்தார்கள் என்பது ஒரு கும்மிப்பாடலில் இடம் பெற்றுள்ளது. ஹிஜ்றி 1316 றஜப் 15ஆம் நாள் இறையடி சேர்ந்தார்கள் என்பது ஒரு கும்மியில் குறிப் பிடப்பட்டுள்ளது. இந்நாள் 1898 ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 30 ஆம் தேதி புதன்கிழமை ஆகும். இக்கருத்துக்களை கொண்ட கும்மி இவ்வாறு அமைத்துள்ளது.

ஆலநபிகிசுறத் தாண்டாயிரத்தை
யாறுபத்தீரெட்டில் மதி
சாலறச பைந்து காரிநாள் இறந்து
சார்ந்தனர் கும்மியடியுங்கடி - சொர்க்கஞ்
சேர்ந்தனர் கும்மியடியுங்கடி.

கும்மிப் பாடல்களைக் கொண்டு விளங்கும் மற்றொரு நூல் செய்கு முஸ்தபா ஒலியுல்லா அவர்களைப் புகழ்ந்து பாடப்பட்ட காரண அலங்காரக் கும்மி என்பதாகும். இது அந்தப் பெரியாரின்

வாழ்க்கையைப் பொருளாகக் கொண்டுள்ளது. காரண அலங்கார கும்மியைப் பாடியிருப்பவர் முகம்மது காஸிம் புலவர் ஆவார். இலங்கையின் தெற்கில் உள்ள காலி மாநகரைச் சேர்ந்தவர். இவர் காலிது தம்பி சாஹிப் என்பவரின் புதல்வர். இந்நூலை வெளியிடு வதற்கு வேர்விலை ஓ. எம். அப்துல் லத்தீப் அவர்களின் நன் முயற்சி காரணமாக இருந்தது. முகம்மது காஸீம் புலவரப்பா அவர்கள் தமிழ் சிங்கள, அறபு மொழிகளில் பாண்டித்தியம் பெற்றவர். சிங்களத் திலும் கவிதைகளை எழுதியவர்.

இரண்டு செய்யுட்கள் காப்புச் செய்யுட்களாக அமைந்துள்ளன. ஒன்று வெண்கலிப்பா எனப் பெயரிடப்பட்டுள்ளது. செய்கு முஸ்தபா ஒலிமேல் கும்மி பாட இறைவனின் பாதுகாப்பைக் கோருகிறார் ஆசிரியர். அந்தச் செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

பூவாசம் போலெனினும் பொருந்தும் சூட்சமே
நீவாசம் போலமையும் நேசனே - மாவாச
வாரணத்தின் முஸ்தபா வள்ளல்மேல் கும்மிபாட
காரணத்தின் காரணனே காப்பு.

அதே போன்று காப்புச் செய்யுள் விருத்தமாக அமைந்துள்ளது. இது பெருமானாரிடம் அனுமதி கோருவதாக அமைந்துள்ளது. அந்த விருத்தப்பா இவ்வாறு அமைந்துள்ளது.

தேயமே புகழை யாவும் தீவிரம் பெற்ற கோமான்
காயமே பெருகும் விண்ணர்க் ககனுற வடிவுஞ் சென்னி
தூயமே கடிப மெய்யிற் துவங்கிய நபியுல்லாதன்
நேயமே வாச புட்ப நெடிலடி போற்றி செய்வோம்.

அடுத்த இரண்டு பாடல்களில் தாம் கூறக்கருதும் பொருளை இரண்டு கும்மிப் பாடல்களில் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். அந்த இரண்டு பாக்களும் கும்மி எனத் தலையங்கம் இடப் பெற்றுள்ளது.

எல்லாப் படைப்பும் படைத்தவனே நல்ல
யீரேழுலோகம் நிறைந்தவனே
குல்லும் சமதாக நின்றவனே
குதாயே நின்னருள் தந்தருள்வாய்
பாவா ஆதத்தவ புத்திராய் வந்த
பக்தர் சேகுமுஸ்தபா ஒலிமேல்
பத்தியுடனே தமிழ்க் கும்மிபாட
பராபரமே நீ துணை யிருப்பாய்.

வரலாறு என்னும் தலைப்பில் முதலாவது கும்மிப் பாடலுடன் நூல் தொடங்குகிறது. முதல் பாடல் இங்ஙனம் வந்துள்ளது.

பஞ்சவர்ணக்கிளி வாயழகி - அடி
பாவையரே எந்தன் தோகையரே
கஞ்சித மேவும் சேகு முஸ்தபா ஒலி
காரணமொன்றும் தெரியாதா

சேகு முஸ்தபா ஒலியுல்லாஹ்வின் வாழ்க்கையையும் வாழ்க்கை நெறிமுறைகளையும் சாதனைகளையும் நம்மால் கூறிவிடமுடியாது எனக் குறிப்பிட்டுள்ளார் ஒரு கும்மிப்பாடலில் இங்ஙனம்.

சொல்ல முடியாது என்னாலே இந்த
சொர்க்கத் தரசர் மகிமைதனை
வல்ல பெரியோன் அறிவானடிஅவர்
வாஞ்சைகள் ஒன்றும் தெரியேனடி.

சேகு முஸ்தபா வொலியுல்லாஹ்வின் வாழ்க்கையில் நடந்த ஒரு நிகழ்ச்சியைக் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். ஒரு சமயம் பெரியார் அவர்கள் மார்க்கப் பிரசங்கம் செய்து கொண்டுவந்தார். அந்த மார்க்க போதனையைக் கேட்டுக் கொண்டிருந்தவர்களுள் ஒரு மூர்க்கனும் இருந்தான். உம்முடைய வல்லமையை நான் ஒரு கை பார்க்கிறேன் என்று அவன் கடுஞ் சவால் விடுத்தான். அவனுடைய கடுமையான வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டிருந்தார், பெரியார் செய்குமுஸ்தபா ஒலியுல்லாஹ்; புன்சிரிப்பு பூத்தார். அந்த புன்சிரிப்போடு அவனுக்கு புத்திமதி கூறினார். 'அன்பரே, தாறுமாருகக் கூறாதே, அப்பா. பேதமையாய்ப் பிதற்றுகின்றாய். அப்படிச் சொல்லாதே, அது தகாது' என்றார். அவனுக்கு வந்தது கோபம். 'அப்படியா சொல்லுகிறீர்? உம்மால் நடக்கக் கூடியதை நாமும் பார்ப்போம்' என்று கூறியவனாய் அந்த மூர்க்கன் அவர்களை வெட்டுவதற்காக அவர் மீது பாய்ந்தான். அப்பொழுது ஓர் ஏழை மனிதன் அங்கு வந்து உனது பையன் இறந்தான் என்று கூறினான். மகன் இறந்துவிட்டான் என்று கேட்ட உடனே அவன் கண்தெரியாமல் போய் குருடன் ஆயினான். இந்த நிகழ்ச்சிகளை ஆசிரியர் ஒரு தொடராகக் கூறி உள்ளார், இங்ஙனம்:

மார்க்க நெறிமொழி பேசி வருகையில்
மூர்க்கனொருவன் துரிதாக
பார்க்கிறேன் உம்முட வல்லமை யின்று
பாருமென வலுகூறினான்,

கூறும் செய்தியை ஒலி கேட்டு நின்று
குறுச்சிரிப்பாகவே யேதுரைப்பர்
தாறுமாறாகப் பிதற்றுகிற வார்த்தை
தள்ளிவிடு அப்பா ஆகாது
ஆகாது என்று உரைத்தீரே உம்மால்
ஆகிறதென்னதைப் பார்ப்பே னென்று
வேகமுடனே கரத்தில் சூரிகொண்டு
வெட்டிப் பிளந்திட வந்தானே.
எதிர்த்து வருகிற பாவியின் முன்பாக
யேழை மனுட னொருவன் வந்து
வாதுகள் செய்யப் போறவனே உந்தன்
வாலிபன் அங்கு இறந்து விட்டான்.
இறந்துவிட்டானென்று கேட்டவுடனே
இருவிழிகளும் தெரியாமல்
அந்தகன் போலே தடுமாறி, அவன்
ஐயோ அப்பாவெனக் கூறினான்,

இந்த நிலையை ஆசிரியர் தாம் கண்டது போல ஒரு கும்மிப் பாடலில் விரிக்கிறார். ஒரு பாடல் இவ்வாறு உள்ளது.

தன்னாலே தான்கெட்டுக்கொண்டாண்டி அவன்
தலைமேல கையையும் வைத்தாண்டி
தொல்லையினாலே கலித்தாண்டி அவன்
துன்பத்தை என்னெனச் சொல்வேண்டி

பின்னர் அவன் செய்கு முஸ்தபா ஒலியுல்லாஹ்விடம் மன்னிப்புக் கேட்டு தமது ஜன்ம பாவத்தை அகற்றிடுவீர் என்று பெரியாரிடம் கூறினான். அவனும் மன்னிக்கப்பட்டான். பின்னர் சேகு முஸ்தபா ஒலியுல்லாஹ்விடம் சென்று தான் செய்தது தப்பு என ஏற்றுக் கொண்டான். தன்னைப் பொறுத்து மன்னிக்கும்படி கேட்டான். செய்கு முஸ்தபா ஒலியுல்லாஹ்வும் அதனைப் பொறுத்துக் கொண்டேன் என்று கூறினர். இக்கருத்துக்கள் இரண்டு கும்மிப் பாடல்களில் இவ்வாறு அமைந்துள்ளன.

ஜென்மப் பாவத்தை அகற்றிடுவீர் நான்
செய்த புன்மையைப் பொறுத்திடுவீர்
வம்புகள் செய்யவந்ததினா லிந்த
வல்வினை வந்து சபித்ததையா
பொறுத்தேன் எனஒலி தான் நவின்று
புகழான அரண்மனை வீடுசென்று
கருத்திலிறைவனின் தொழுகை யதை
களாவில்லாமல் செய்து இருந்தனரே,

உரிய காலத்தில் நிறைவேற்ற வேண்டிய தொழுகை முதலியவற்றைக் காலந்தாழ்த்தாமல் நிறைவேற்றுவதைக் 'களா'வில்லாமல் நிறை வேற்றுவதாகக் குறிப்பிடுவர்.

அடுத்து வருவது அவருடைய காரணங்கள், அதிசயம் எனக் கருதும்படி அவர் செய்துகாட்டிய சாதனைகள். மங்கை ஒருத்தி கங்கையில் நீராடினாள். அவளுடைய மூக்குத்தி காணாமல் போய் விட்டது.

முங்கி முழுகிற வேளையிலே பெண்ணே
மூக்குத்தி யங்கே கழன்றுவிழ
அங்கம் பதறியே இன்னாலில் லாஹி என
ஏங்கியே கையை நெரித்தானே.

இறைவனிடம் இறைஞ்சினாள். வேரு விலையில் வாழும் செய்கு முஸ்தபாவின் பொருட்டால் தனது மூக்குத்தி கிடைத்திடவேண்டும் என்று கோரினாள். ஒரு தண்ணீரில் விழுந்த மூக்குத்தி உடனே கிடைக்கப் பெற்றால் மா, பலா, வாழை ஆம் முக்கனியும் பாலும் சீனியும் உவந்து அளிப்பேன் என்று எண்ணம் கொண்டாள். ஏக்கத் துடன் மீண்டும் நீரில் மூழ்கிப்பார்த்தாள். அப்பொழுது பவிச் சென்று மூக்குத்தி தென்பட்டது. வீடு சென்ற பெண்மணி தனது நேர்த்திக் கடனை நிறைவேற்றினாள். இந்தச் செய்தியை ஆசிரியர் இவ்வாறு கூறி உள்ளார்.

முங்கி முழுகிற வேளையிலே பெண்ணே
மூக்குத்தி யங்கே கழன்று விழ
அங்கம் பதறியே யின்னா லில்லாவென
ஏங்கியே கையை நெரித்தாளே.
.........................................
.........................................
விந்தம் செறிவேருவிலை நகர்தனில்
வெற்றிப் புகழாய் வருங்கோவை
சுத்தரே செய்கு முஸ்தபா ஒலியே
துய்யரே உம்மை நினைக்கிறேன்
ஓடும் கலத்தினில் வீழ்ந்த நகையது
உடனே எனக்குக் கிடைத்ததெனில்
முக்கனி சர்க்கரை பாலொடு சீனி
உகப்பாக முறாதுயா னளிப்பேன்

என்று நினைத்து இருதயத்தி லவள்
ஏங்கியே மூழ்கிப் பார்க்கையிலே
மின்ன லொளிபோல் தெரிந்திடவே
விரைவாக விருகரந் தொட்டெடுத்தாள்.

அடுத்து ஆசிரியர் களுத்துறையை அடைகிறார். இயற்கை வளம் மிக்கது களுத்துறை, கரும்பு, தரளம், செந்நெல், முதலியன மிகுதியாக விளையும் நகரம் அது. சேகுமுஸ்தபா ஒலியுல்லா களுத்துறைக்கு வந்த பொழுது ஒரு நிகழ்ச்சி ஏற்பட்டது. அதனைத்தான் ஆசிரியர் இங்ஙனம் குறிப்பிட்டுள்ளார்.

கன்னல் தரளம் செந்நெல் செறிந்திடும்
களுத்துறை என்னும் மாநகரம்
கர்த்தனருள்சேர் சேகுமுஸ்தபா ஒலி
கடாட்சியம் செய்வதைக் கேளுங்கடி.

அந்தக் காலத்தில் ஆங்கிலேயர் புகைவண்டியை அறிமுகஞ் செய்தனர். ஒரு நாள் களுத்துறை புகைவண்டி நிலையத்துக்குப் புகை வண்டி வந்துநின்றது. அனைவரும் பிரவேசபத்திரம் வாங்கிக்கொண்டிருந்தனர். புகைவண்டி நிலையத்தை அடைந்த சேகுமுஸ்தபா ஒலியுல்லாஹ் கூட்டம் குறைந்த பின்னர் தமக்குரிய பிரவேசப் பத்திரத்தை வாங்க முற்பட்டார். ஒருவாறு பிரவேசப் பத்திரத்தைப் பெற்றுக் கொண்டார். புகைவண்டியில் ஏற முயற்சிக்கும் பொழுது அப்பெரியாருக்கு சிறுநீர் கழிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. முஸ்லிம் மக்கள் பரிபாஷையில் சிறுநீர் கழித்தல் என்பது 'இஸ்திங்கா' இருத்தல் என வழங்கப்படும். அதற்குரிய அரபுச் சொல் 'இஸ்திஞ்சா' என்பதாகும். சுத்தமான நீரைத் தேடிக் கடற் கரைக்குச் சென்றார். சிறுநீர் கழித்த பின்னர் சுத்தி செய்தல் முஸ்லிம்களின் நீங்காக்கடமையாகும். அதற்காகவே சேகு முஸ்தபா ஒலியுல்லாஹூம் கடற்கரை நோக்கிச் சென்றார். இதற்கிடையில் பயணிகள் புகைவண்டியில் ஏறிவிட்டனர் புகைவண்டியும் புறப்படத் தொடங்கியது ஊதுகுழல் சப்தித்தது. புகைவண்டியை இயக்க முற்பட்டார் வலவன். ஆனால் சக்கரங்களோ அசைய வில்லை. முயற்சிகள் பலமேற்கொள்ளப் பட்டாலும் புகைவண்டி இயங்க மறுத்தது. எல்லோரும் முயன்றனர். பலன் இல்லை. கடற்கரைக்குச் சென்ற சேகு முஸ்தபா ஒலியுல்லாஹ்வும் விரைவாக வந்தார், வந்ததுமே, புகைவண்டியில் ஏறினர். புகைவண்டியும் உடனே புறப்பட்டது. இயங்கத் தொடங்கியது. அனைவரும் அதிசயம் அடைந்தனர். இந்தச் செய்தியைப் பல கும்மிப் பாடல்களில் பாடி உள்ளார் ஆசிரியர். அவற்றுள் சிலவற்றை மாத்திரம் எடுத்துக் கொள்வோம்.

ஆங்கிலியர் புகை வண்டி ரதமது
அற்புதமாக வருகையில்
மங்களமாக ஸ்டேஷனருகினில்
வந்து நிறுத்தினரந்நேரம்
துங்க சிங்கார அலங்காரமாகிய
தூயசேகு முஸ்தபா ஒலியும்
பங்கய பாதம் துரிதமாகப் பரிவாக
அடைந்தார் ஸ்டேஷனருகில்
..............................
கூட்டங்குறைவுந் தீர்ந்த பின்பு எங்கள்
கொற்றவர் முஸ்தபா ஒலியும்
நற்றவம் செய்யுமிரு கரத்தால்
நலமாகப் பணமெடுத்தேந்தினரே.
ஏந்திய பணத்தை வாங்கியே மனேஜர்
இன்பமாய் டிக்கட்டு தானளிக்க
வாங்கித் திரும்ப வருகையிலே அப்பா
வந்ததே ஸ்திங்கா தானிருக்க
.........................................
சங்கமாய் ஜனங்க ளேறிய பிற்பாடு
சல்தியாய் வண்டியைத் தட்டிடவே
சக்கரம் என்றும் திரும்பவில்லே அந்த
சாற்பொலி பொருட்டாலே
வண்டியில் பாதத்தை வைத்திடவே அப்போ
கொண்டலது போல பறந்திடவே
எண்டிசை யோடு மதைப் பார்த்து அங்கு
எண்ணமா யெண்ணுகிறா ரெண்ணத்தை

மற்றொரு நிகழ்ச்சியும் இங்கு சுட்டப்பட்டுள்ளது. ஒரு முறை சேகு முஸ்தபா ஒலியுல்லா ஒரு பயணத்தில ஈடுபட்டிருந்தார். காட்டு வழியாகச் செல்லும்பொழுது கள்வனை அவர்கள் எதிர் நோக்க வேண்டி இருத்தது. கள்வன் அவர்களிடம் இருக்கும் பணத்தைக் கேட்டான்; கொடுத்துவிட்டார்கள். அதன் பின் நடந்ததை ஆசிரியர் இவ்வாறு கும்மிப்பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

வாங்கிச் செல்வீரெனத் தான்கொடுத்த எங்கள்
வதனரழக ரொலியுல்லாவும் - எங்கள்
கர்த்தன் விதித்த பருளுத் தொழுகையை
காத்திரமாகவே தான் முடித்தார்.

அதன் பின்னர் பார்க்கும் பொழுது கள்வன் அங்கேயே நிற்பதைக் கண்டார். சேகு முஸ்தபா அப்போது கூறியதாக ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

உள்ளத்தைத் தந்தோம் உங்களிடத்தில்
உடுமானந் தவிர வேறொன்றுமில்லை
கள்வரைத் தங்கள் மனம்போல உங்கள்
காரியத்தை நன்றாய்ச் செய்து கொள்ளும்

என்று கூறினார்கள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதுகாறும் கள்வர் ஆற்றிய கைங்கரியங்களை கள்வன் எடுத்துக் கூறினான். 'தம்மிட மிருந்து எவரும் தப்பிப் பிழைக்கவே இல்லை. நிலைமையே மாறி விட்டது. இதுபோன்ற அதிசயத்தை நாம் காணவில்லை' கள்வனின் பார்வை மங்கிவிட்டது. அதனால் அசையமுடியாமல் நின்றான் கள்வன். அங்கிருந்து செல்ல விடையளிக்குமாறு அந்தக் கள்வன் சேகு முஸ்தபா ஒலியுல்லாஹ்வை வேண்டி நின்றான். கள்வனுக்கு புத்திமதி கூறி அங்கிருந்து போகும்படி கள்வனுக்கு அனுமதி வழங்கினார், முஸ்தபா ஒலியுல்லாஹ். அவர்கள் கூறிய புத்திமதி ஒரு கும்மிப்பாடலில் இவ்வாறு அமைந்துள்ளன.

கொள்ளைத் தொழிலை மறந்துவிடும் இந்த
கொலைகளவைத் தொலைத்துவிடும்
எல்லாம் படைத்தாளும் ஏக பெரியவனை
எண்ணி மனதில் தொழுது கொள்ளும்

பார்வை பெற்ற கள்வர் தப்பிப்பிழைத்தோம் என்று அங்கிருந்து தத்தம் இல்லங்களுக்குச் சென்றமை இங்ஙனம் ஒரு கும்மிப் பாடலில் இடம் பெற்றுள்ளது.

தப்பிப் பிழைத்ததே போதுமின்று நம்மள்
தலைபிழைத்ததே காணுமின்று
தையலிருக்கும் மனைதேடி கள்ளர்
தாட்டிக மாகவே நடந்தனரே.

அடுத்து அப்பெரியாரின் மக்காப் பயணமும் மக்காவில் அவர்கள் தங்கள் இறுதி காலத்தையும் கும்மிப் பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

முகம்மது காஸீம் புலவரப்பா அவர்கள் கும்மியடிக்கும் பொருள்களை தமது கும்மிப் பாடலில் அடிக்கடி விவரித்துள்ளார். ஒரு சந்தர்ப்பத்தில் இங்ஙனம் பாடி உள்ளார்.

காந்தளம் பூவடி மேனியரே அடி
கன்னியரே ரத்ன மின்னொளியே
காட்சிபெருகும் சேகுமுஸ்தபா ஒலி
காரணமின்ன முரைப் பேனே.

மற்றொரு பாடல் இவ்வாறு அமைந்துள்ளது :

இனிய சுவைநவ ரஞ்சிதமே அடி
ஏந்திழையே நீயும் கூர்ந்திடக்கேள்
அன்பர் சேகுமுஸ்தபா ஒலிகாரணம்
இன்பமாயானு முரைத்திடுவேன்.

வேறொரு பாடலில் இங்ஙனம் வந்துள்ளது.

வஞ்ச நினைவை கொள்ளாத வடி
வாயொழுகி மலர்த்தே னொழுகி
......................................
......................................

இன்னொரு கும்மிப் பாடலில்

கோவை யிதழ்மட மாமயிலே அடி
கொஞ்சி நடந்திடும் கோமளமே
வஞ்சியே.....................

என இடம் பெற்றுள்ளது. பிரிதொரு பாடலில் இங்ஙனம் குறிப்பிட்டுள்ளது.

குங்கும சந்தன கொங்கையாளே அடி
கோதையகற்றும் குணத்தாளே
..............................
..............................

மற்றொரு கும்மிப் பாடலில் பெண்களை

வஞ்சிக் கொடியிடை மாமயிலே அடி
மாதளம் பிஞ்சி முகத்தாளே
..............................
..............................

ஆசிரியர் வருணித்துள்ள வேறொரு பாடலில் இங்ஙனம் வந்துள்ளது.

கொஞ்சும் ரஞ்சித மாமயிலே அடி
வஞ்சியே இன்சொல் மதுரமே
..............................
..............................

மற்றொரு கும்மிப் பாடலில் பெண்களை இங்ஙனம் வருணித்துள்ளார்.

காரைப் பழிக்கும் கூந்தலாளே எந்தன்
கண்மணியே நலரஞ்சிதமே
..............................
..............................

சேகுமுஸ்தபா ஒலியுல்லாஹ்வின் வாழ்க்கையின் இறுதிக் கட்டம் மக்கமா நகரிலே நிகழ்ந்தமை பற்றியும் காரண அலங்காரக் கும்மியில் தரப்பட்டுள்ளது. அவர்கள் மக்கா மா நகரிலே நல்லடக்கம் செய்யப்பட்டதும் இங்கு குறிப்பிடப்பட்டுள்ளது. காரண அலங்காரக் கும்மியின் இறுதிப் பகுதி உபாத்துக் கும்மி (மறைவுக்கும்மி)யாக அமைந்துள்ளது. அந்தப் பாடல்களில் ஒன்றில் தாம் இன்னாரென ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். இதுதான் அந்தப் பாடல் :

காவியத்தம்பி சாகிப் புதல்வன் முகம்மது
காசின் உரைத்தா ராதலால்
தாவி புனைந்தேன். கும்மியாக யிதை
மேவிப் படிப்பீர்கள் தீனோரே.

கடைசியாக அமைந்துள்ள இரண்டு பாடல்களும் அவையடக்கமாக வந்துள்ளன. அவற்றுள் ஒன்று இது :

சிற்றடியானும் சொற்ற கவிகளின்
முற்றும் பிழைக ளிருந்திடினும்
கற்றவர்க ளிதை குற்ற மகற்றியே
பற்றுதலாகப் படிப்பீரே.

சீனிக்காதிறு முகியத்தீன் புலவரால் இயற்றப்பட்ட நவநீத ரத்நாலங்காரச் சிந்து நூலிலும் கும்மிப் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் ஒன்று சிங்காரக் கும்மி எனச் சுட்டப்பட்டுள்ளது. இங்கு ஒரு பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

கும்மியடி பெண்ணே கும்மியடி முத்துக்
கோவை குலுங்க நற்கும்மியடி
விம்மிதங்கன திந்திதிமி தந்ததந்தன தெந்தித் தோமென
விண்டு நின்று கும்மியடி.

அதனை யடுத்த பாடல் இங்ஙனம் அமைந்துள்ளது.

பாடுங்கடி விளையாடுங்கடி திருப்
பாசிநாத ரைக் கொண்டாடுங்கடி
தேடுமருள் கூடும்பிணி யோடும் புகழ் நீடுங்கன
தேவரீர்மேற் சிந்து பாடுங்கடி.

மற்றொரு பாடல் தனியே கும்மி எனக் குறிப்பிடப்பட்டுள்ளது; பெண்களை விளித்துப் பாடப்பட்ட கும்மிப் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

தேமலர்க் கூந்த லழகியரே திருத்
தெய்வரம் பையை நிகர்த்த பெண்கள்
கோமானயினா முகம்மதொலியுல்லாஹ்
கொற்றவர் மேற்கும்மிப் பாடுங்கடி

சீனிக் காதிர் முகியத்தீன் புலவர் பெண்களைத் தமது கும்மியில் இங்ஙனம் விவரித்துள்ளார்:

வஞ்சியே கொஞ்சிய ரஞ்சிதமே புள்ளி
மானே மதுரச் செழுந்தேனே
செஞ்சொனயினா முகம்மதொலியுடைச்
சீரினையான் சொல்லக் கேளுங்கடி.

பாசிப்பட்டண நயினா முகம்மதொலியுல்லா ஆற்றிய சாதனையை இங்ஙனம் பாடுகிறார் சீனிகாதிர் முகியத்தீன் புலவர்.

மன்னனொருவன் குதிரையில் வந்து
வள்ளலைக் கிட்ட நெருங்கிடவே
யன்னேர வேளை ஒலியுல்லாஹ் நோக்கவே
யத்திரி காலற்று வீழ்ந்திடவே
ஆத்திரங் கொண்டவன் பார்த்திடவே கண்க
ளப்போ குருடாகி விட்டதுவே
நேத்திரங் கெட்டிடவே பயந்து
நெருங்கி ஒலிக்கு சரண் செய்தான்
நாயகமான குலவிளக்கே நவ
ரத்தினமே யித்தல விளக்கே
பேயனான் செய்த பிழைபொறுத்து நல்ல

பேறுங்கிடைக்க வரந்தருவீர்
ஐயாவே என்று வணங்கி நின்றானப்போ
தாண்டகை செய்த புதுமையைக்கேள்
மெய்யாகக் கண்ணைக் குதிரைக்கானாலையும்
வேண்டிச் சுவாத்தியம் செய்துவிட்டார்.

தமது கும்மிப் பாடலை முடிப்பதற்கு முன்னர் ஆசிரியர், பாசிப் பட்டண நயினா முகம்மதொலியுல்லாவின் ஆற்றலும் சாதனைகளும் அளப்பரியன; விரிவஞ்சி விடுத்தனம் என்னும் முறையில் ஆசிரியர் இங்ஙனம் பாடிஉள்ளார்.

மண்மீதிலின்னமு மன்னர் செய்தகோல
மாறாப் புதுமை யநேகமுண்டு
விண்ணகத் தோருடன் வேதருமறிவார்
விண்டேனிது நிஜ மெய்யாமே.

—o—

# சிந்து

இசைத் தமிழில் வரும் மற்றொரு வகைப் பிரபந்தம் சிந்து ஆகும். இதுவும் மக்கள் வழக்குப் பிரபந்தம் ஆகும். இசையில் ஆர்வம்கொண்ட மக்கள் விரும்பிப் பாடுவதனால் அங்ஙனம் ஆயிற்று. சந்தத்துடன் பண்ணமைதி பெற்று இருப்பவையே சிந்து ஆகும். முஸ்லிம் மக்கள் இசைத்தமிழில் ஈடுபாடுள்ளவர்களாக இருந்தமையினால் சிந்து போன்ற இசைத்தமிழ் சார்பான நூல்கள் முஸ்லிம் மக்களிடையே பெருவழக்கைப் பெறலாயிற்று. இஸ்லாமியக் கோட்பாடுகள், கட்டளைகள், தத்துவங்கள் முதலியவற்றை முஸ்லிம் மக்கள் எளிதில் அறிந்து உணர்ந்து பாடிப் பயன் பெறுவதற்கு இத்தகைய இசைத் தமிழ்ப் பாடல்கள் பெரிதும் உதவியாக இருந்தன எனக் கூறின் அது மிகையாகாது.

தமிழ் பேசும் முஸ்லிம்களிடையே வழங்கும் சிந்துக்கள் மிகப்பல. முழுமையான நூலுருவில் சிந்துப் பாடல்கள் அமைவதோடு பல்வேறு புலவர்களும் தத்தம் ஏனைய நூல்களிலும் ஓரிரு சிந்துப்பாடல்களைத் தனித்தனியே பாடியுள்ளமையைக் காணலாம். முஸ்லிம் பெரு வழக்கில் பயிலப்படும் சிந்து நூல்களில் ஒன்று ''நவநீத ரத்நாலங் காரச் சிந்து' என்பதாகும்.

நவநீத ரத்நாலங்காரச் சிந்து என்னும் இந்த நூலில் பாசிப் பட்டணத்தில் நல்லடக்கம் மெய்யப்பட்டிருக்கும் பாசிப் பட்டணத்து நயினா முகம்மது வலியுல்லாஹ் அவர்களின் வாழ்க்கையும் அவர் ஆற்றிய அரும் பெருஞ்செயல்களும் விவரிக்கப் பட்டுள்ளன. இந் நவநீதத் ரத்நாலங்காரச் சிந்துவினைப் பாடியவர் சீனி அப்துல் காதிறு முகியத்தீன் என்பவர். இவர் தொண்டி நகரைச் சார்ந்தவர். மதுரப் பிரசங்கி நயினா முகம்மதுப் புலவரின் மாணவர். முகியத்தீன் சேக்காதிப் புலவரின் புதல்வர். இந்நூலுக்குப் பலர் சாற்றுகவிகள் வழங்கி உள்ளனர். நாகூர் தறுகா மகாவித்துவான் வா. குலாம் காதிறு நாவலர் அவர்கள் வழங்கிய வெண்பா இங்ஙனம் அமைந் துள்ளது.

பாசை நயினா முகம்மதொலி பாதத்தில்
ஆசையொடு பல்பாவலர் புனைந்தான் - மாசையறு
தேனிக்கார் சோலைசூழ் செல்வநகர்த் தொண்டிவாழ்
சீனிக்கா திறுமுகியித் தீன்.

பாசிப் பட்டணமே இங்கே பாசை என வழங்கப்பட்டுள்ளது. இது பாசி ஊர் எனவும் வழங்கப்படுகிறது. திருப்பாலைக்குடி ஆயக்காரன்

கிளையிலுதித்த மதுரை லட்சுமிபுரம் கொல்லன் பட்டரைத் தெருவில் வசித்த கபதிறு றாவுத்தர் குமாரர் சிக்கந்தர் றாவுத்தர் அவர்களால் இயற்றப்பட்ட ஓர் ஆசிரிய விருத்தப்பாவில் நூலின் பெருமையும் நூலாசிரியரின் சிறப்பும் ஒருங்கே அமையச் சாற்றுகவியாகப் பாடி உள்ளார். அது வருமாறு ;

காரிகை நன்னூ லிலக்கண மிலக்கியங்
கற்றக விவாணர் பாடல்
கண்டு தொண்டிச் சீனிக் காதிர் முகியித்தீன்
கவிபா டக்கரு திமனதிற்
பாரிற் சிறந்தநற் பாசிந கர்தன்னிலே
பரிதி மதியென வழங்கும்

பசும் பொன் னிகர் கோட்டைப்பட் டணரா வுத்தர்

பாலர் நயினா ரொலிபுகழ்
காரண நவநீத ரத்தினச் சிந்தென
கவிமது ரமா யிசைத்தான்
கண்ட புலவோ ரெல்லாம் நின்றதி சயித்துளங்
கலங்கி மயங்கி யேங்கித்
தாரணி யிலிது போல வேபுகழ்வ தரிதெனத்
தம்முளத் ததிச யித்துத்
தக்க புகழுக்குரிய ஹக்கைப் புகழ்ந்துகவி
தன்னையுந் தாம் புகழ் வரே.

அவரே மற்றொரு விருத்தப்பாவில் இங்ஙனம் குறிப்பிட்டுள்ளார்.

வண்டினங் களுண்டுமது கீதம் பாடும்
வளர்மலர்ப்பூங் காலமர்ந்து வடியுஞ் செந்தேன்
தொண்டி முகியத்தீன் சேகாதி செல்வன்
துல்யக விச் சீனிமு கியத்தீன்
எண்டிசையும்புகழ் பாசி நயினார் மீதில்
இயற்று நவநீதரத்னா லங்காரந்தான்
பண்டினி தாப்பா டுகவி வாணன் பாவைப்
பார்க்கி லது மதுரமெனச் சொல்லலாமே.

நவநீத ரத்னாலங்காரச் சிந்தில் முதலில் இடம் பெறுவது காப்புச் செய்யுள். அது வெண்பாவாக அமைந்துள்ளது. அது வருமாறு :

ஆதார மாயெவையு மாளு மிறையவனே
நாதா வெனுநபியை நான்வணங்கி - யோதுவேன்
நாட்டமுடன் பாசி நயினார் முகம்மதொலி
காட்டுநல்ல காரணங்கள் காண்,

இங்கே 'இறைவனை வணங்கி' என்று சொல்வது பொருத்தமா யுள்ளது. ஆனால், அதே பாணியில் 'நபியை வணங்கி' என்று சொல்வது இஸ்லாத்தின் வரம்பை மீறியுள்ளதாகத் தோன்றுகின்றது. கடவுள் வாழ்த்து என்று ஒரு படலம் இந்நூலில் இடம் பெறாவிட்டாலும் சீனி முகியித்தீன் புலவர் இரண்டாம் செய்யுளில் முகியித்தீன் அப்துல் காதிறு ஜீலானீ (ரலி) அவர்களைப் பாடி உள்ளார். அந்தச் செய்யுளும் வெண்பாவாகவே அமைந்துள்ளது. அந்த வெண்பா வருமாறு :

வல்லவொலி மாரெவர்க்கு மன்னராய் வந்துதித்த
நல்லமுகி யத்தீனை நான்போற்றிச் - சொல்லுவேன்
சோதிநக ராம்பாசித் தூயநயி னாரொலியி
நீதியற்பு தத்தை நினைந்து.

இந்தச் செய்யுளும் முகியத்தீன் ஆண்டகை வணக்க வெண்பா என இருப்பது பொருத்தமற்றது எனத் தோன்றுகின்றது. நவநீத அலங்கார நூலை எங்ஙனம் தாம் இயற்றப் போவதாக ஒரு செய்யுளில் ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்:

தரைத்தலந் தனிலே நல்லோர்
சரணபங் கயத்தைப் போற்றி
நிரைத்தசொற் புலவோர் தங்க
ணேசமும் விரும்பி வாழ்த்தி
வரத்தகை நயி னார்முகம்
மதுவொ லியுல்லா பேரிற்
சிரத்தையாய் நாவலங்காரச்
சிந்துயான் செப்பு வேனே

ஆசிரியர் தமக்கு உரை தந்தவரைப் பற்றியும் ஒரு செய்யுளில் குறிப்பிட்டுள்ளார். மதாறு சாகிபு லெப்பை என்பவரின் புதல்வர் சின்ன லெப்பை சாகிபு என்பவர் வழங்கிய உரைப்படியே தாம் இந்நூலை இயற்றினார் என்பதை மற்றுமொரு செய்யுளில் இங்ஙனம் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர் :

நீத மிகுநயி னாரொலி தந்நவ நீதமதின் சரிதை
சீத மதாறு சாகிபு லெப்பையின் சிந்தை மகிழ்சுதனே
வேத விவேக சின்ன லெப்பை சாகிபு வேந்த ருரைப்படியே
பூதல மீதினி லோதி னேனிப் புகழ்பூ ரணச் சீருரையே.

ஆசிரியர் இந்த நூலிலே இயற்றப்பட்ட தேதியையும் குறிப்பிட்டுள்ளார். அது ஹிஜ்றி 1322ஆம் ஆண்டு ஜமாதுல் ஆகிர் மாதம் பத்தாம் நாள் திங்கட்கிழமை இயற்றி உள்ளார். அது 1904 ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 22 ஆந்தேதி திங்கட்கிழமை ஆகும். நீதரத் நாலங்காரச் சிந்தை சாதித் தமிழினால் ஆற்றினார் என்பது குறிப்பிடப்பட்டுள்ளது. அந்தச் செய்யுள் வருமாறு ;

ஆதிஹிஜ் றத்துப் பதின்மூன் றுநூற்
றதின்மே லிருபத் திரண்டா மாண்டிற்
சோதிம தியாறு ஜமாதி லாகிர்
தோன்றுந் திகதிபத்திற் சோமவார
நீத மிகும் பாசி யொலிமே நவ
நீத ரத்நாலங்காரச் சிந்தைச்
சாதித் தமிழினா லிசையாகவே
சாற்றி னேனிதம் போற்றி னேனே.

தம்மைப் பற்றியும் நவநீத ரத்நாலங்காரச் சிந்து ஆசிரியர் ஒரு செய்யுளில் குறிப்பிட்டுள்ளார். அந்தச் செய்யுளிலே தாம் மதுரப் பிரசங்கியாகத் திகழ்ந்த நயினாமுகம்மது என்பவரின் சீடன் என்று குறிப்பிட்டுள்ளார். தானும் கற்கண்டு போன்று இனிக்கும் மொழி களில் பேசக்கூடியவன் என்பதைச் சுட்டியுள்ளார். ஒரு வேளை தமது பெயரின் ஒரு பகுதியாக சீனி என்றிருப்பதைக் குறிப்பிடவே 'கற்கண்டு மொழிவாக்யன்' என்று தம்மைக் குறிப்பிடவே அங்ஙனம் பயன்படுத்தி உள்ளார் போலும். 'கண்டு மொழிவாக்யனான சீனிக் காதிர் முகியத்தீன்' எனக் குறிப்பிட்டுள்ளார். அந்தச் செய்யுள் இங்ஙனம் அமைந்துள்ளது :

வண்டுமலர் சூழுந் திருப்பா சியூர்
வாழுநயினார் முகம்ம துமேற்
றொண்டிநகர் மதுரப் பிரசங் கியாம்
துங்கநயி னாமுகம் மதுவின் சீடன்
கண்டுமொழி வாக்ய னான சீனிக்
காதிர்முகி யித்தீ னெனச் சொலும்யா
னென்றும் விளங் கிடச்சிந் தாகவே
யிசைத்தே னிசமான நவநீதமே.

இந்தச் செய்யுளும் எழுதப்பட்ட ஆண்டைக் குறிக்கும் செய்யுளும் தொங்கல் என ஆசிரியர் இந்நூலில் குறிப்பிட்டுள்ளார் என்பது நோக்கற்பாலது.

அவையடக்கம் கூறாவிட்டாலும் அவையடக்கத்துக்கு அடுத்த படியாக அமையும் ஒரு செய்யுளை ஆசிரியர் இயற்றி உள்ளார். அந்தச் செய்யுளிலே தாம் நயினார் ஒலி அவர்களின் சரிதையை இந்நூலில் இடம் பெறச் செய்திருப்பதாகவும் அங்கே தம்மை அறியாது ஏதேனும் பிழை ஏற்பட்டிருந்தால் அந்தப் பிழை களைக் கண்டுபிடிக்கும் அறிஞர்கள் குறைகளைக் களைந்து எடுத்துப் பயனடையுமாறும் அதன் காரணமாகத் தம்மை

இகழாது இருக்குமாறும் அந்தப்பாடல்களை இசை அமைத்துப் பாடிச் சுவைக்கு மாறும் கேட்டுக் கொண்டுள்ளார். அந்தச் செய்யுள் இவ்வாறு ஒரு விருத்தமாக அமைந்துள்ளது.

திருவாசகர் நயினாரொலி ஜெயசீர் சரிதையிலே
தெரியாதுறு பிழைநேருகிற் றெரியும் புலவோர்கள்
குறையோதியு மிகழாதிசை கொடுப்பீர் நலந்தொடுப்பீர்
பெருவாழ்வுகள் பெறலாந்துய ரறலாம் பெரியோரே.

இனி, நவநீதரத்நாலங்காரச் சிந்தில் இடம் பெற்றுள்ள சிந்துக் களை எடுத்துக் கொள்வோம். இங்கே பல சிந்துக்கள் இடம் பெற்றுள்ளன. அவை பல்வேறு மெட்டுக்களால் பாடக் கூடியவை. பெரும்பான்மையான சிந்துப் பாடல்கள் ஒட்ட நாடக மெட்டினில் பாட வேண்டியவை என ஆசிரியர் தமது நூலில் குறிப்பிட்டுள்ளார். ஒட்ட நாடக மெட்டு என்பது சில சிந்துக்களில் வொட்ட நாடக மெட்டு என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

பாடல்களைத் தொடங்கு முன்னர் அந்தப்பாடல்கள் ஒட்டநாடக மெட்டில் பாடவேண்டும் என்று ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். ஒட்ட நாடக மெட்டை அறிவதற்கு ஒட்ட நாடகம் என்றால் என்ன? என்பதை நாம் அறிதல் வேண்டும். ஒட்டநாடகம் என்பதைப் பின் வருமாறு விளக்கலாம். ஒட்டர் அல்லது வொட்டர் என்னும் மக்கள் வகுப்பார் தெலுங்கு நாட்டில் வாழ்கின்றனர். அவர்கள் ஒரிஸ்ஸா மாகாணத்திலிருந்து வந்தவர்கள் எனப்படுவர். ஒரிஸ்ஸா என்பது தமிழ்வழக்கில் ஒட்டம் எனக் குறிப்பிடப்படுகிறது. கிணறு தோண்டல், குளங்கட்டு அணைகட்டல் முதலியன அந்த வொட்டர்களின் பிரதான தொழில்கள் என்பர். தமது தொழிலைச் செவ்வனே செய்து முடித்த பின்னர் அவர்கள் ஆடிப்பாடி மகிழ்வர். அதற்கு முன்னோடியாக கள் குடிப்பர், மதுபானம் அருந்துவர். அங்ஙனம் அந்த ஒட்டர் பாடும் பாடல்களின் மெட்டுக்களே ஒட்டநாடகமெட்டு என வழங்கப் படுகிறது என்பர். அந்த ஒட்டநாடக மெட்டுக்களிலே நவநீத ரத்நாலங்காரச் சிந்தில் இடம்பெறும் சிந்துக்களைப் பாட வேண்டும் என்று ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். ஒட்டநாடகமெட்டில் பாடப்பட வேண்டிய முதலாவது பாட்டு ஏழு பக்கங்களை அடக்கக்கூடிய நீளமானது. அதன் முதலடிகளில் சில இங்ஙனம் அமைந்துள்ளது. அந்தப் பாடலின் முதற்பகுதி இங்ஙனம் அமைந்துள்ளது ;

ஆதிமகா ராஜனே யென்றன் அல்லாகு
அன்புள்ள ஆண்டவனே
நீதியாயுள்ளவனே யென்றன் அல்லாகு
நித்தமுடையவனே
சோதி முகம்மதுவை யென்றன் அல்லாகு
துணையாய் வகுத்தவனே
சாதி மயிலாகவே யென்றன் அல்லாகு
சங்கையுடனே அமைத்தாய்
அமைத்து வெகுகாலமா யென்றன் அல்லாகு
ஆதரவாய் வைத்திருந்தாய்
சமைத்தாய் சில கோலமா யென்றன் அல்லாகு
சங்கையுள்ள தாசீமை
தாசீமுகம்மதுட னென்றன் அல்லாகு
தானுந்துணையாய் நித்தம்
நேசத்துடனிருந்தா யென்றன் அல்லாகு
நீடூழி காலமெல்லாம்
காலமெல்லாம் நீயிருந்தே யென்றன் அல்லாகு
காசினியெல்லாம் படைத்தாய்
கோலங்கணீயேயல்லா லென்றன் அல்லாகு
கூறிடவேறேயில்லை
எல்லாப் புகழ்ச்சிகளு மென்றன் அல்லாகு
ஏகபெரியோனுனக்கே.

இங்ஙனம் தொடர்ந்து சென்று கொண்டிருக்கிறது.

இந்தப் பாடலில் பெருமானார் (ஸல்) அவர்களின் வாழ்க்கையில் மக்காவிலிருந்து மதீனாவுக்கு ஹிஜ்ரத் செல்லும் வரையிலான நிகழ்ச்சிகள் சுருக்கமாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. அடுத்த பாடலும் ஓர் ஒட்ட நாடக மெட்டுப் பாடல். மதீனா மாநகர் சென்ற பின்னர் அவர்களுடைய வாழ்க்கையில் நிகழ்ந்தன குறிப்பிடப்பட்டுள்ளன. அந்தப் பாடலுக்கு முன்னோடியாக அந்தப் பாடலுள் இடம்பெறும் செய்திகளைத் தொகுத்து ஒரு வெண்பாவில் ஆசிரியர் இங்ஙனம் அமைத்துப் பாடி உள்ளார்.

மாமதினஞ் சென்றுநல மாகவெகு பேர்களுடன்
ரூமதமில் லாதுநெறி தானமைத்தோர் - நாமமிக
நாளுமே தீன்பெருக நல்லிசுலா மேதழைக்கத்
தாழ்வொன்று மில்லாது தான்.

இங்கு அமையும் ஒட்ட நாட்க மெட்டுப் பாடல் ஒரு சிறிய பாடலாக வந்துள்ளது. அது வருமாறு :

தானுந்தனியவனே யென்றன் அல்லாகு
தன்சிந்தையினினைந்து
மானமுடநபியு மென்றன் அல்லாகு
வந்தார் திருமதீனம்
மதினத்தரசருக்கு மென்றன் அல்லாகு
மற்றுமுள்ள வூரவர்க்கு
மதிகவுயர் குலமா மென்றன் அல்லாகு
அரசாளுநாளேயிலே
நாளுக்குநாள் தீனு மென்றன் அல்லாகு
நலமாத்தழைத்திடவே
தோழர்கணால் வருட னென்றன் அல்லாகு
சூழவிருந்தனரே
இருந்தாரசுகாபியு மென்றன் அல்லாகு
இன்னும்வெகுபேருடனே
குருவாயிருந்தாண்டன ரென்றன் அல்லாகு
கோமானபியிறசூல்.

அடுத்து, விருத்தப் பாக்களிலும் தொங்கல் செய்யுட்களிலும் அந்நூலின் பாட்டுடைத் தலைவரின் முன்னோர்கள் பற்றி விவரிக் கிறார் ஆசிரியர்.

ஓரிரு பாடல்களில் ஆசிரியர் தம்மைப் பற்றியும் இடைக்கிடையே கூறிக் கொள்கிறார். தம்மைச் சீடராக்கிக் கொண்ட றாவுத்தர் ஒலி மதுரையில் தங்கி ஓதிய பின் அங்கிருந்து கோட்டையூர் சென்றார்கள். அந்த விவரங்கள் பிறிதோர் ஒட்ட நாடகமெட்டில் பாட வேண்டிய பாடலாக அமைந்துள்ளது.

போற்றும் ராவுத்தரொலி யென்றன் அல்லாகு
போதமிகுந்திடவே
சாற்றுமதுரை விட்டே யென்றன் அல்லாகு
தானே நடக்கலானார்
நடந்து வருகையிலே யென்றன் அல்லாகு
நாடெங்கு மேசெழிக்கத்
தொடர்ந்தே யருளையுண்டோ யென்றன் அல்லாகு
துணிகரமாக வந்தார்.

அதன் பின்னர் பாட்டுடைத் தலைவரின் பிறப்பு கூறப்படுகிறது. பல பாடல்கள் பாடிய பின்னர் ஆசிரியர் பாட்டுடைத் தலைவரின் காயற்பட்டணப் பயணத்தைப் பற்றிப் பாடி உள்ளார். ஒட்ட நாடக மெட்டில் அமைந்த அப்பாடலின் முதற்பகுதி வருமாறு ;

அப்போது நாயகமு மென்றன் அல்லாகு
அல்லா கிருபையினாற்
தப்பாமற் காயற்பதி யென்றன் அல்லாகு
தாமே சென்று வருவோம்.

இதனைத் தொடர்ந்து கண்ணிப் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. அவற்றில் பாட்டுடைத் தலைவர் நிகழ்த்திக் காட்டிய அற்புதங்கள் சாதனைகள் விவரிக்கப் பட்டுள்ளன. இரண்டு கண்ணிகள் இவ்வாறு தந்தையார் தனையனை, வாழ்த்தியமை குறிப்பிடப்பட்டுள்ளது.

வாழ்த்தி மகனாரை வந்துமுகந் தடவித்
தாழ்த்திச் சிரமதனைத் தனியோனையும் புகழ்ந்து
தந்தையர் சேயுமித் தரணியிலுகப்புடனே
விந்தையுட னிருக்க வெறொரு புதுமை சொல்வேன்.

பாசிப் பட்டணத்தை அடைந்த நயினாமுகம்மது வலியுல்லாஹ் அங்கிருந்து நீங்கி திருச்சிராப்பள்ளியை அடைந்தார்கள். அங்கே அவர்கள் செய்து காட்டிய புதுமைகள் வருணிக்கப்பட்டுள்ளன. அதனை வருணிக்க ஆசிரியர் நொண்டிச் சிந்தைப் பயன்படுத்தி உள்ளார். நொண்டி நாடகத்தில் நொண்டிச் சிந்து இடம்பெறுகிறது. 'கள்வனொருவன் படையிலுள்ள குதிரை ஒன்றைத் திருட முயன்றான். அந்தச் செய்கையின்போது அவனுடைய கால் தறியுண்டது. பின்னர் அவன் நல்வழி அடைந்தான். இந்தச் செய்யுளில் புனைந்து கூறும் இச்சம்பவமே நொண்டிச் சிந்துக்கு அடிப்படையாக அமைகின்றது. சீதக்காதி நொண்டி நாடகமும் இங்ஙனமே முஸ்லிம்களிடையே வழங்குகின்றது. அந்த நொண்டிச் சிந்துக்குப் பின்வருமாறு சந்தக் குழிப்பும் அமைத்துள்ளார்.

தெந்தினதின தினனா தினனா
தெந்தின தினதினதின தினனா

இங்ஙனம் பாடப்பட்டுள்ளன சில அடிகளை இப்பொழுது எடுத்துக் கொள்வோம்.

கந்திகதலி வளஞ்சூழ் பாசியில் வாழுங்
காமில் நயினாமுகம்மது வொலியு
மிந்திரநிகர் பாசியூர் தன்னி
லிருந்தே யரசு புரிந்திடு நாளில்
காரணம் வெகு கோடி விதவிதமாக்
காட்டுவார் புவியினாட்டுவார்
ஆரணத் தரசரெல்லாம் வந்துவந்தே
யடிதொழுவார் பணிந்துமுடிபணிவார்
இப்படி இருக்கையிலே யொலியுல்லாவு
மேகினார் திருச்சிராப் பள்ளியூர்க்கே
....................................
பள்ளிவிட்டெழுந்தவர்கள் வீடுகள் செல்லப்
பார்க்கையிலாக்ரம பராக்ரமுடன்
துள்ளிப்புலிகள் வரவே கண்டுபயந்தே
துடிதுடித்தார் பதைத்துக் கிடுகிடுத்தார்.
வாய்கை பதறினார்கள் வேங்கையைக் கண்டு
வஞ்சமகற்றுமென்று கெஞ்சினார்கள்
பாயவருகுதய்யா வபயமிந்தப்
பரிதாபந் தீருமகா வரதாபரே
என்று புலம்பும் வேளையி னயினாரொலி
யேறிட்டுப் பார்த்தொரு சொல் கூறிட்டதே
ஒன்றுந் தெரியாப்புலியையிவ் வூரிலுள்ள
வொலிகளுக்கு விலக்கவரிதாமோ
வேங்கைகள் சத்தமிடுதே கோடையிடிபோன்
மேகமண்டல மெல்லா மேகலங்க
....................................
போங்கள் வனங்கள் மீதென்றே யுரைகொடுப்ப
புலிகள் கெர்ச்சித்துக் கெலிப்புடனே
சொந்தவனங்கள் செல்லவே யெல்லார்களுஞ்
சொர்ண மலர்க டூவிக் கருணையென்றார்.

பாட்டுடைத் தலைவர் கானகம் சென்று தவம்புரிந்துவிட்டு றகுமத்தும்மா என்பவரைத் திருமணம் புரிந்தார் என்று ஒரு கட்டளைக் கலித்துறைப்பாவில் ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்:

வானவர் போற்று நயினா முகம்மது வள்ளலுமே
கானகஞ் சென்று தவசு புரிந்தபின் ஹக்கருளால்
மானிழை யான றகுமத் தம்மாளை மணம்புரிந்த
மேனிலை யான சரிதையி னற்புதம் விள்ளுவனே.

இந்நூலில் இடம் பெற்றுள்ள மற்றொரு நொண்டிச் சிந்து வேறொரு சந்தக் குழிப்பைக் கொண்டுள்ளது. அந்தச் சந்தக் குழிப்பு

தெந்தின தின தினனா தினனா
தெந்தின தினதின தினதினனா

என வந்துள்ளது. அதற்குரிய பாடலின் முதலடிகள் இங்ஙனம் அமைந்துள்ளது :

எல்லாம் படைத்தே யிரணங் கொடுத்தே
யேக சமதாக நிறைந்த விறையோன்
வல்லவன் றிருத்தோழராய் வந்த
வரிசைமுகம்மது ரசூல் நபிக்கு (தெந்)
மக்கண் மக்க டிருமரபில் வந்திடும்
வாழ்வு பறக்கத்துள்ள தென்மதுரையில்
தக்கபதியிலிருந்தே வளர்ந்திடும்
தர்ம சிகா மணியாய்வந்த புனிதர் (தெந்)
அறிவுள்ள செய்யிதுமுகம் மதுஅப்துல்
அசீசுல்சல மசுஊத் தவத்தினிலே
வரிசையாப் பெற்ற புதல்வர் நாதாவும்
வையம் புகழுங் கோட்டைப் பட்டணத்தில் வாழ்(தெந்)

நவநீதரத்நாலங்காரச் சிந்து என்னும் நூலில் ஒரு மாதப்பதிகம் இடம் பெற்றுள்ளது. பத்துப்பாக்களைக் கொண்டது பதிகம். ஆனால் இங்கே பாடப்பட்டுள்ள மாதப் பதிகத்தில் பதினான்கு செய்யுட்கள் இடம் பெற்றுள்ளது. இஸ்லாமிய ஆண்டில் வரும் மாதங்களான முகறம், சபர், றபீஉல் அவ்வல், றபீஉல் ஆகிர், ஜமாதுல் அவ்வல், ஜமாதுல்ஆகிர், றஜபு, சகுபான், றமளான், சவ்வால், துல்கஃதா (துல்காயிதா) துல்ஹஜ் (துல்கச்சு) மாதங்களில் வந்து தம்மைக் காப்பாற்றி அருளும்படி ஆசிரியரான சீனி அப்துல் காதிறு முகியத்தீன் வேண்டுகிறார். அந்த மாதப் பதிகத்தின் காப்பு இங்ஙனம் அமைந்துள்ளது.

ஆவலா யேத்தி வாழ்த்தி ஆநந்த ஹூவைப் போற்றி
நாவினா னபியைச் சாற்றி நல்லநாள் மூன்று மாதத்
தாவதின் கார ணத்தை யரிய நற்பதி கமாகப்
பூவில்யா னோத வெங்கும் பொருந்திய புகழே காப்பு.

இஸ்லாத்தின் முதலாம் மாதம் முஹறம் மாதமாகும். இந்த மாதத்தில் வந்து தம்மைக் காப்பாற்றும்படி ஆசிரியர் வேண்டுகிறார் இங்ஙனம் :

வஸ்துமுதல் அவ்வலில் நுக்கத்தில்
வந்தங் கிலங்கிய சோதியாம்
முஸ்தகீ மெனுந்திருப் பொருளே
முழுதுநம் பினேனி துவேளையில்
விஸ்தீ கரமான வரிசை தங்கும்
வேந்தே முகற மாதந் தனியே
கஸ்தியுற வந்து காரு மையா
ஹாமி தகுமது முஸ்தபாவே.

அவ்வல் - முதல், நுக்கத் - புள்ளி, முஸ்தகீம் - நேரான, கஸ்தி கஷ்டம்.

இரண்டாம் பாடலில் இஸ்லாமிய ஆண்டில் வரும் இரண்டாம் மாதமான சபர் மாதம் வந்து தமது வினைகளைத் நீர்த்தருளும்படி ஆசிரியர் அண்ணல் நபி (சல்) அவர்களிடம் இவ்வாறு கேட்கிறார்.

சுபந்தங்கிய ஆதிறருமத் தினா
றுயரப்துல் லாநுதலி லிலங்கித்
தபரஞ்சித வஞ்சிஆ மினம்மா
தாயார்கர்ப் பத்திற் தரித்துவந்த
செபதா பரபூப மணிவிளக்காய்த்
தீர்க்கதரிசியாய் வந்தகோவே
சபர்மாதம் வந்தென்வினைக
டருந்தா சீமுகம்மது முஸ்தபாவே.

(றகுமத் - அன்பு; அப்துல்லா, ஆமினா - நபிகள் (சல்) அவர்களின் பெற்றோர்)

மூன்றாம் மாதமான றபீஉல் அவ்வல் பற்றியது மூன்றாம் பாடம். இந்தப் பாடலிலே அண்ணல் நபி (சல்) அவர்கள் அபூகுஹாபா என்பவரின் புதல்வர் அபூபக்கர் என்பாரின் மருகராய் வந்தவர் என்றும் நபிகள் நாயகம் (சல்) அவர்கள், ஆயிஷா (றலி) அவர்களின் திருமணத்தினால் வந்ததில் உறவு என்றும், அல்லாஹ்வின் ஹபீபாய்த் (தோழராய்) றசூலாய் (தூதராய்) வந்த காத்தமுல் அன்பியாவான (இறுதித்தீர்க்கதரிசியான) வர்கள் அவர்கள் தம்மை வந்து ஆட்கொள்ளுமாறு ஆசிரியர் வேண்டுகிறார், மூன்றாம் செய்யுளில், இவ்வாறு:

அபீ குஹாபா வென்றிடும் பெயரிய
ரண்ணல் தவஞ்செய்தே பெற்ற பாலர்
அபூபக்கர் சித்தீக் கென்னும் வேந்த
ரவர்கண் மருகரும் அல்லாத் தன்னின்

ஹபீ புமாய் றசூல் மார்க்கரசாம்
காத்திமுல் அன்பி யாவு நீரே
றபீஉ லவ்வ லிலெனைவந் தாளும்
நாத முகம்மது முஸ்தபாவே.

நான்காவது செய்யுளில் பெருமானார் முகம்மது (சல்) அவர்கள் புரிந்துகாட்டிய சாதனைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. பெண் ஒட்டகத்தைத் தொடர்ந்து சென்று நதியைக் கடந்தவர்கள் நபிநாயகம் (சல்) அவர்கள். ஆயிசா அம்மையாரின் கணவராக வந்தவர்கள் அவர்கள். பூமியும் வானமும் புகழ வந்தவர்கள். இங்ஙனம் கூறி தம்மை ஆட்கொள்ளும்படி ஆசிரியர் வேண்டுகிறார் ஒரு செய்யுளில்.

நவ்வி நடக்கப் பின் நடந் துசென்று
நதியைக் கடந்த நாயகமே
கொவ்வைக் கனியி தழா யிசாவின்
கொழுநரே வந்த கோவே யிந்தக்
குவ்வுலகும் வானும் புகழ வந்த
கோவே றபீஉல் ஆகிறு மாதத்தில்
செவ்வையுடன் வந்தே யென்னை யாளும்
செம்மன் முகம்மது முஸ்தபாவே

இஸ்லாமிய ஆண்டின் ஐந்தாம் மாதமான ஜமாதுல் அவ்வல் மாதம் இவ்வாறு குறிப்பிடம் பட்டுள்ளது ஒரு செய்யுளில். கவலைகளையும் துயர்களையும் போக்கும் படியும் இரங்கியருளும் படியும் நபிகள் நாதர் (சல்) அவர்கள் இங்ஙனம் வேண்டப் பட்டுள்ளார்.

எமாது கவலையுந் துயரும் போக்கி
இரங்கியாள் கோவே முஸ்லி மானோர்
தமாது வந்தனை நீக்கி யாளத்
தரணி நபியாக வந்த தேவே
யுமாதுநிலந் தோயாச் சுரர்தலை தோய்வுறும்
பூஞ்சர ணெனக்குத வவேண்டிச்
சமாதுல் அவ்வல் வருதல் வேண்டும்
ஷபீஉல் முதுனபீன் முகம்ம துவே.

ஷபீஉல் முத்னபீன் என்னும் அறபுச் சொற்றொடர் பெருமானார் முகம்மது (சல்) அவர்களைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இந்தப் பாடலில் எமது என்பது எமாது என்றும் தமது என்பது தமாது என்றும் உமது என்பது உமாது என்றும் வந்துள்ளது. சமாதுல்

அவ்வலில் உள்ள சமாது என வந்த நான்காம் அடியின் முதற் சீருடன் எதுகை இணைப்பு அமையவே அங்ஙனம் அந்தச் சொற்கள் நீட்டிப் பாடப்பட்டுள்ளன.

இஸ்லாமிய ஆண்டின் ஆறாம் மாதமான ஜமாதுல் ஆகிர் மாதத்தில் மனமிரங்கி தம்மை ஆட்கொள்ளும்படி ஆசிரியர் பெருமானார் முகம்மது (சல்) அவர்களிடம் மன்றாடுகிறார். அந்தச் செய்யுள் வருமாறு:

முத்தாய் மயிலாயி ரத்தினக் கிந்திலாய்
　　முன்னோன் திருமுன் னேதா மிருந்த
வித்தாய் சிபத்துள் ளவிறை தூதான
　　வேந்தே காத்திமு லன்பி யாவே
சற்றா கிலுந்திருக் கடைக்கண் காட்சி
　　தரவே சமாது லாகிறு மாதத்திற்
சித்த மிரங்கி வந்தென்னை யாளுஞ்
　　சிங்க முகம்மது முஸ்தபாவே.

(கிந்தில் - சிறுவிளக்கு, சிபத்-பண்பு; காத்திமுலன்பியா-இறுதித்தீர்க்க தரிசி)

ஏழாம் செய்யுளிலே இந்த உலகத்தினை நாகஞ் சுமந்து கொண்டிருக்கின்றது என்ற தமிழிலக்கிய மரபினைப் புகுத்தி உள்ளார். தம்மை ஆட்கொள்ளுமாறு ஆசிரியரால் பாடப்பட்ட அந்தச் செய்யுளில் இஸ்லாமிய ஆண்டின் ஏழாம் மாதமான றஜபு மாதம் குறிப்பிடப்பட்டுள்ளது. நான்காம் அடியில் முதற் சீராக வரும் றஜபு என்னும் சொல்லுடன் எதுகை நயம் பெற ஏனைய மூன்று அடிகளிலும் முறையே நஜபு (ஒரு நாட்டின் பெயர்) அஜபு (அதிசயம்) நிஜம் என்னும் சொற்கள் பயன்படுத்தப் பட்டுள்ளமையைக் காணலாம். இச் செய்யுள் வருமாறு:

நஜபு முதலான தேயஞ் சூழ்ந்த
　　நாகஞ் சுமந்த விவ்வுல கமெலாம்
அஜபு விளங்கிடப் பிறந்த வேந்தே
　　அல்லா குத்தஆ லாவின் நபியே
நிஜமா கியதீ னையுல கினிலே
　　நிறுத்துந் தாகாவே யென்னை யாள
றஜபு மாதம் வந்தருள்வீர் ஹபீப்
　　றருமான் முகம்மது முஸ்த பாவே.

இங்கே மார்க்கம் என்பது தீன் எனப்பட்டது. தாகா என்பது நபிகள் நாயகம் (சல்) அவர்களைச் சுட்டியது.

எட்டாம் மாதம் சகுபான். எட்டாஞ் செய்யுளின் இறுதி அடியில் முதற் சீராக அமைந்துள்ளது சகுபான் என்பது. இதனோடு எதுகை

யாக அமைய நகுமாவடி, மிகுமாமணம், தகுமாமலர் என்பன பயன் படுத்தப்பட்டுள்ளன. அபுசா (றலி) அவர்கள் உமறுகத்தாபு (றலி) அவர்களின் புதல்வி. அந்த அபுசா அம்மையாரைத் திருமணம் புரிந் தமையால் உமறுகத்தாப் (றலி) அவர்களின் மருகரானார் அண்ணல் நபி (சல்) அவர்கள். அந்தச் செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது :

நகுமா வடிவே லாருமர் கத்தாபு
நாதர் புதல்வியர் ஹபுசாத் தன்னை
மிகுமா மணஞ்செய் தபுனித ரான
வேந்தே குறைசி நற்குல மணியே
தகுமா மலர்ச்சோ லைமக்கா வாழுந்
தருமரப் துல்லாச் சந்த தியே
சகுபான் மாதம் வந்தென்னை யாள்வீர்
தாகா முகம்மது முஸ்த பாவே.

ஒன்பதாம் பாடலில் இஸ்லாமிய ஆண்டின் ஒன்பதாம் மாதமாகிய றமளான் குறிப்பிடப்படுகிறது. இந்தச் செய்யுளிலும் இறுதி அடியின் முதற்சீர் றமளான் என வருவதால் ஏனைய அடிகளின் முதற்சீர்களும் அதற்கிணங்க அமைக்கப்பட்டுள்ளது. இந்தச் செய்யுளில் அலி (றலி) அவர்களின் மாமனார் என நபிகள் நாயகம் (சல்) அவர்கள் விவரிக்கப் பட்டுள்ளார்கள். இந்தப் பாவில் ஆசிரியர் தம்மைப் பாவியாகக் கருதி அத்தகைய நிலையினின்று தம்மைக் காப்பாற்றி அருளும்படி நபிகள் நாயகம் (சல்) அவர்களை வேண்டிக் கொள்கிறார். இந்தச் செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

அமலான் மாண்பொறை குணங்கொடை யாவாய்ந்த
கல்வி யாலும் ஞானத் தாலும்
தமலான் மானிலத் தெவரு மில்லாத்
தகையார் அலியார் தம்மா மனாரே
யுமலான் மிகப்பெரும் பாவி யாமெனக்
குதவி வருகைதந் தாள வேண்டி
றமலான் மாத நீர்வர வேண்டும்
நாதா முகம்மது முஸ்த பாவே.

பத்தாம் பாடலில் உதுமான் (றலி) அவர்களின் மாமனார் என விளித்து நாயகம் முகம்மது (சல்) அவர்கள் விவரிக்கப்படுகிறார்கள். இந்தச் செய்யுளிலும் சவ்வால் என்பதனோடு முரண்பாடில்லாதவாறு எதுகை அமைய ஏனைய அடிகளின் முதற்சீர்கள் அமைக்கப்பட்டுள் ளன. சவ்வால் மாதம் வந்து தம்மை ஆளும்படி ஆசிரியர் அண்ணல் நபி (சல்) அவர்களை வேண்டுகிறார். அந்தச் செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது :

செவ்வாய்க் கனிமொழி மடவா ரென்னுஞ்
செல்வி மார்க ளைமணம் புரிந்து
குவ்வார் புகழ்ந்தே தப்பறு முதுமான்
கொண்ட மாதுல ரான கோவே
தெவ்வார் பகைகெடத் தீன்த ழைக்கச்
செய்தீ ரினியெனை யாள வேண்டிச்
சவ்வால் மாதம் வந்தருள வேண்டுஞ்
சங்கை முகம்மது முஸ்த பாவே.

இஸ்லாமிய ஆண்டின் பதினொராம் மாதம் துல்கயிதா. அந்த மாதத்தில் வந்து அடியேன் ஆகிய தம்மிடம் வந்து அருளவேண்டும் என பதினொராம் செய்யுளில் வேண்டுகிறார், ஆசிரியர் இவ்வாறு:

பாதம் நிலந்தோ யாவீ யெறும்பு
படியாத் திருமே னியிருந் துமணங்
காதங் கமழ்தருங் கார ணீகங்
கடல்சூ ழுலகெலாம் பரந்த கோவே
சாத மலிம தீனா வரசே
தாசனே னையா ளதுல்கயிதா
மாதந் தனிலே வந்தருள வேண்டு
மன்னர் முகம்மது முஸ்த பாவே.

இஸ்லாமிய ஆண்டின் இறுதி மாதம் துல்ஹஜ் மாதமாகும். ஆசிரியர் இம் மாதத்தைத் தமிழ் படுத்தி துல்கச்சு மாதம் என எடுத்துள்ளார். அதற்கிணங்க எதுகை நயத்தை அமைத்துள்ளார். அமாவாசையன்று சந்திரனை அழைத்து இரண்டாகப் பிளக்கச் செய்து மீண்டும் ஒன்றாக்கிய பெருமானாரின் அற்புதமும் சுரத்திலே புனலழைத்த அண்ணலாரின் மகிமையும் இந்தப் பாடலில் விதந்தோதப் பட்டுள்ளது. அந்தப் பாடல் இது:

மல்கச் சந்திரன் இருபி ளவாய்
மறுத்துமொன் றாக்கித் தொடர்ந்தார்க்கு நீர்
நல்கச் சுரந்தனி னதியை யழைத்த
நபிகள் பெருமா னேயென் கவலை
வல்கச் சரண்கொடுத் தாள வேண்டி
யைந்திலோர் கடன் முடியு நாளாந்
துல்கச் சுமாதம் வருவீ ரையாத்
தூதர் முகம்மது முஸ்த பாவே.

இங்கே முஸ்லிம்கள் கட்டாயம் நிறைவேற்ற வேண்டிய ஐந்தாங் கடமையாம் ஹஜ் கடமையின் முக்கியத்துவம் சுட்டப்பட்டுள்ளது.

மாதப்பதிகத்தின் இறுதிச் செய்யுளாக ஆசிரியர் தம்மைப்பற்றியும் தாம் யாருடைய சீடர் என்பது பற்றியும் தாம் எந்த ஊரைச் சேர்ந்தவர் என்பது பற்றியும் குறிப்பிட்டுள்ளார். இதுதான் அந்த இறுதிச் செய்யுள்:

சீத வயல்கள் சூழ் தொண் டிநகர்ச்
செம்மல் பல்கலை நன்னூல்
ஓது நயினா முகம்ம துள்ள
முகந்த மாணாக் கனாஉ சீனிக்
காதிர் முகியித் தீனுரைத் தேனிந்தக்
கவியாம் பதிகத்தை யிசையாகவே
யாதி தூதா கவந்த கோவே
யருள்வீர் முகம்மது முஸ்த பாவே.

இந்த மாதப் பதிகத்தைத் தொடர்ந்து ஆசிரியர் வாரப் பதிகம் ஒன்றும் பாடியுள்ளார். அந்தப் பதிகத்தில் ஒரு வாரத்தில் வரும் ஏழு நாட்களையும் குறிப்பிட்டு அண்ணல் நபி (சல்) அவர்களிடம் துணை வேண்டி நிற்கிறார் ஆசிரியர். தமது எண்ணத்தை ஒரு பின்முடுகு வெண்பாவில் இங்ஙனம் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர்:

வாரப் பதிகமொன்று மாமதுரச் செந்தமிழில்
கூறத் துணைசெய்வாய் கொற்றவனே - நேராக
நீயழைத்தெல் லாமுரைத்து நேயமுற்ற னுப்பிவிட்ட
நாயகத்தை யேதுதித்து நான்.

இந்த வாரப் பதிகத்தில் வாரத்தின் ஏழு நாட்களும் அரபுப் பெயர் களாகவேயே சுட்டப்பட்டுள்ளன. அவை இங்ஙனம் அமைந்துள்ளன. யவ்முல் அகது-ஞாயிற்றுக்கிழமை, யவுமுல் இதுனைன் - திங்கட் கிழமை, யவ்முல் தலாதா - செவ்வாய்க் கிழமை, யவ்முல் அறுபஅ - புதன் கிழமை, யவ்முல் கமீசு - வியாழக்கிழமை, யவ்முல் ஜும் ஆ - வெள்ளிக்கிழமை, யவ்முல் சப்த்-சனிக்கிழமை. செய்யுளில் யவ்முல் என் பது எவ்முல் என்றே பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம். மாதப் பதிகம் வாரப்பதிகம் என்பன புதிய இலக்கிய உத்திகள். தமிழி லக்கியத்தில் வேறெங்கும் காணமுடியாதவை எனின் அது மிகை யாகாது.

''பயஹாம்பர்'' என்பது பார்சி (பாரசீக) மொழியில் உள்ள ஒரு சொல். முஸ்லிம் பெருவழக்கைப் பெற்ற ஒரு சொல். அறபு மொழியில் நபி, இறசூல் என்னும் சொற்கள் குறிக்கும் கருத்தையே பயஹாம்பர் என்னும் பார்சிச் சொல் சுட்டுகின்றது. உருது, ஹிந்தி மொழிகளிலும் பயஹாம்பர் என்னும் சொல் தீர்க்கதரிசி என்பதைக் குறிக்கவே பயன் படுத்தப்படுகிறது. தமிழ் பேசும் முஸ்லிம்களிடையே பயன்படும் 'பயஹாம்பர்' என்னும் சொல் பெருமானார் நபிகள் நாயகம் முகம்மது

(சல்) அவர்களையே சிறப்பாகக் குறிக்கும் ஒரு சொல்லாக உபயோகப் படுத்தப்படுகிறது. பயஹாம்பர் அவதாரம் என்று குறிக்கும் பொழுது அது நபிகளாரின் பிறப்பையே குறிப்பிடுகிறது; அதனாலேயே நபிகள் நாயகம் (சல்) அவர்களின் பிறப்புப் பற்றிய சிந்துக்களைக் கொண்ட தாகப் பயஹாம்பர் அவதாரப் பலவண்ணச் சிந்து என்னும் நூல் விளங்குகிறது. இந்நூலில் உள்ள எல்லாப் பாடல்களும் பண்ணமந்தவை யாக உள்ளன. பல்வேறு வகையான சந்தங்களில் பாடக்கூடியனவாக அமைந்துள்ளன. அவை சந்தக்குழிப்புக்களைக் கொண்டனவாகவும் இருப்பதைக் காணலாம்.

பயஹாம்பரவதாரப் பல வண்ணச்சிந்து என்னும் நூல் செய்கு அப்துல்காதிறுப் புலவரால் பாடப்பட்டுள்ளது. மதுரகவி என அழைக் கப்பெற்றவர் இவர். முத்துப்பேட்டையைச் சேர்ந்தவர் அலியார் ராவுத் தர் அவர்களின்புதல்வர். இந்நூலைப் பாடவும் பின்னர் அதனை அச் சியற்றவும் பொருள் உதவி புரிந்தவர் காதிறு மீரான் நயினார் என்ப வரே. காயல் பட்டணத்தைச் சேர்ந்த கண்ணகுமது மகுதூ முகம்மதுப் புலவரால் திருத்தப்பட்டு இந்நூல் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

இந் நூலில் உள்ள சிறப்புப் பாயிரத்தில் அந்நூலில் கூறப்படும் பொருள்கள் தரப்பட்டுள்ளன. அந் நூலில் என்ன என்ன கூறப்படு கின்றன என்பது:

தலைமுறைப் பேருந் தமதவ தாரமும்
அலிமா முலையில் அமுதுணும் வாறும்
ஆடுகள் மேய்க்க அடவியில் போந்து
பீடிகை மீது பெருமையாய் இருந்தே
அரசதி கார மழகாய்ச் செய்து
குறுசிலைச் சிறுவர் குணமுடன் கூடி
......................
......................
இலாஞ்சினை என்னும் இலங்கிய பொருளைத்
துலாம்பரத் திருத்திச் சுகம்பெற வாழ்த்தி
......................
............ .........
காரண நபியின் கருதரும் புகழைச்
சீரணி யாகச் செகத்தினர் புகழ
பயஹாம் பரவதாரப் பலவண்ணச் சிந்தெனப்
பெயர் கொடுத் தின்பமே பெருகப் பாடும்.

என வந்துள்ளது. காப்பு வெண்பா, கடவுளர்துதி என வந்துள்ளன. அவையடக்கம் போன்று அமைந்துள்ள கட்டளைக் கலித்துறைச் செய்யுள் இவ்வாறு வந்துள்ளது;

மனதுறு மாசை யாம் தமிழ்ப்பிர சங்க மன்னர் மன்னர்
கனமழை பெய்தற் கெதிர்பனி வந்து கவிந்த னபோற்
சொனசொற் பிழையென் றெள்ளா துறுபிழை சொற்றி ருந்திடி
லெனதக மீதினி லன்னோர் பதத்தையு மேத்து வனே.

இந்நூலிலும் சிந்துப் பாடல்களுக்கு முன்னர் அந்த சிந்துப்பாடல் களிலே அமையும் கருத்தினை விருத்தப்பாக்களில் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர்.

வண்ணங்கள் அமையவும் சந்தக் குழிப்புக்கள் பொருந்தவும் இந்நூலாசிரியர் பாடி உள்ளார் சந்தக் குறிப்புகளை ஆசிரியர் சுட்டும் பொழுது இரண்டுக்கு மேற்பட்ட சந்தக் குழிப்புகளைக் கொண்டு ஆசிரியர் இயற்றி உள்ளார் என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது. இத்தகைய பாடல்கள் பல இந்நூலில் இடம் பெற்றுள்ளன. முதலில் ஒரு சிந்துப் பாடலுக்கு அமைக்கப்பெற்றுள்ள சந்தக்குழிப்பைப் பார்ப்போம்.

தானதத்த தத்த தத்த - தானதத்த தத்த தத்த
தானதத்த தத்த தத்த -தானதத்த தத்த தத்த
தனத்தன தந்ததன தனத்தன தந்ததன
தனத்தன தந்ததன தனத்தன தந்ததன
தானதன தானதன-தானதன-தானதன தானதன-தான
தந்ததன தானனா

இந்தச் சந்தக்குழிப்புக்கு அமையப் பாடப்பெற்ற சிந்துப் பாடல் இங்ஙனம் வந்துள்ளது.

ஆதியுத்த ரத்தையுற்ற சோதிவிட்ட சொர்க்கமெட்டும்
காதலைக்கு றித்தசித்ர யாலிரத்ன பட்டுடுத்தித்
திரட்டிய கொந்தழக மிரட்டிய பொன்றிலக
மருட்டிய ரண்டுவிழி புரட்டிய செங்கைவளை
யோலமிட வேதரள மாலைபல கோளமுல கூறுலீனுங் - கூடி
நாகரத்ன மிட்டமுத்து மோகனத்த ளுத்து நத்து
பாக்கிணைந்த சொற்பிறக்க ஆகமுற்றும் வெற்றிபெற்றுத்
தவத்தினி லங்குபொருள் நவத்தின லங்களுற.
இபத்தின மொய்க்கவர சியற்றிய மக்கநகர்.
தாவிமனை யாவுமலர் தூவியிறை யேவுமொழி யாரவுமு-சாவி
ஆமினத்தி டத்துசுற்றி கோமளப்பெ ணுக்கு மிக்க
பூமணத்தி னத்தறொத்த தேமணத்த தின்னமுற்ற

துணைக்கர மங்கையென வனக்கிளி வஞ்சியிரு
தனத்திய ரஞ்சலென வனத்தின ரம்பைதரு
வானவமு தானவலி னானமகு முதுமண வாசனையு
லாவநெடு - மால
மெங்குமண மாகுமே.

இந்நூலிலே மகுட வெண்பாவும் இடம் பெற்றுள்ளது. பொதுவாக வெண்பாக்கள் நான்கடியினை உடையனவாக அமையும். வெண்பாவின் நான்காமடியின் இறுதிச்சீர் நாள், மலர் என ஒரு சீராகவும் பிறப்பு போன்று இரண்டு சீர்களாகவும் இருக்கும். ஆனால் மகுட வெண்பாவில் அத்தகைய வாய்பாடுகள் இணங்க அமையவில்லை. மகுட வெண்பாக்களைக் காண்பது அரிதிலும் அரிது என்பர். மதுரகவி செய்கப்துல் காதிறுப் புலவரோ, பல மகுட வெண்பாக்களுள் ஒன்றை இங்ஙனம் அமைத்துத் தந்துள்ளார்.

வெறுத்தவர்கள் மக்கநகர் மெல்லிதர வாமினத்துங்
கருத்தாருங் காட்சியென்ன காரணமோ-உருத்தாம்
மருவடர்ந்த திருமடந்தை மங்கையாமி னார்தங்கர்ப்பம்
வளருமென்றோ களருமென்றோ களபசொர்க்க
வானவர்க ளீனமற்றார் தானமுற்றார்
வரமிகுந்து கருவமைந்து மகளுரைத்த புகழனைத்தும்
வஞ்சிசபா விஞ்சொல்மா துமஞ்சலாகி
வண்ணமேனி தளரவில்லை வெளிரவில்லை
பருவவுந்தி வயிறடர்ந்து பாரமான கூறுமில்லை.

செய்கப்துல் காதிறுப் புலவர் தமது பாடல்களுக்கு இராகம் தாளம் குறிப்பிடுவதுடன் நின்றுவிடவில்லை. ஒரு பாடலுக்கு புந்நாகவராளி இராகம் எனவும் ஆதிதாளம் எனவும் வண்ணம் குறிப்பிட்டு அந்த இராகத்திலும் தாளத்திலும் பல விதமாகப் பாடக்கூடுமாகையால் அந்தச் சிந்துக்குரிய சந்தக் குழிப்பையும் தந்துள்ளார். இத்தகைய சிந்து ஒன்று பாடப்படவேண்டிய சந்தக்குழிப்பை இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

தனன தானன தந்தத் தனன தந்த
தத்ததத்தன தத்ததத்தன தத்தனத் தனதாந்த

இந்தச் சந்தக் குழிப்புடன் பாடவேண்டிய சிந்து இது.

திருவு லாவிய செம்பொன் னுலக மங்கை
சித்திரத்தினில் வைத்தமுத்திய ரத்தினச் சுடரோங்க
மருவு லாவிய சந்திர கிரணத் தொடி
வளைகள் கலகலென அருகர் மனதுவந் தேத்த

என முதற்பகுதி வந்துள்ளது. இங்ஙனம் பலபாடல்கள் இந்நூலில் இடம்பெற்றுள்ளன. வண்ணக் கொச்சகச் சிந்து ஒன்றுக்கான சந்தக்குழிப்பு இங்ஙனம் தரப்பட்டுள்ளது.

தனதன தனதன தனதன தனன
தனதனந் தனதா தனதனன தான

இதற்கான கொச்சகப்பா இங்ஙனம் வந்துள்ளது.

செலமுறை மரைமலர் பதமெல மெலனத்
திலதமென் னலிமா வலதுமுலை யூறச்
சலசல சலசல வென்றமிர் துதிர்வ
தனையலி மாகண்டு மகிழ்ந்து மேவி
கலகல கலெனச்செங் கரவளை குமுதக்
கனிமுகம் மதுவாம் நபிசைவல மேந்த
மெலமெல மெலமெல நறைகமழ் வாயால்
விரும்பிய வமுதாய் அருந்தி யேக.

ஒலிநாயகரவதாரச் சிந்து என்பது மற்றொரு நூல். அது கு(த்)துபிய்யா மாலை என்றும் வழங்கப்படுகிறது. நபி நாயகம் முகம்மது (சல்) அவர்கள் பிறப்பை அடிப்படையாக வைத்துப் பய ஹாம்பர் அவதார பல வண்ணச்சிந்து பாடப்பட்டுள்ளது போல் முகியத்தீன் அப்துல்காதிறு ஜீலானி (றலி) அவர்களின் பிறப்பு பற்றிய விவரங்களைக் கொண்டுள்ளது, ஒலிநாயகரவதாரச் சிந்து என்னும் நூல். வலி என்பது ஓர் அறபுச் சொல். மிகவும் நெருக்கமானவர் என்பது அதன் நேரடிப் பொருளாகும். எனவே வலி என்று கூறும் பொழுது அல்லாஹ்வுக்கு மிக நெருக்கமானவர் என அது பொருள்படும். இறை நேசச் செல்வர்களைக் குறித்து அச்சொல் பயன்படுத்தப்படுகிறது. தமிழ் மரபிற்கிணங்க 'திருத் தொண்டர்' என அழைக்கப் படக்கூடியவர்கள் அத்தகையோர். முஸ்லிம்களிடையே வலி என்னும் சொல் ஒலி எனவும் வழங்கப்படுகிறது. இத்தகைய ஒலிமார்கட்கெல்லாம் நாயகமாய்த் திகழ்ந்தவர் முகியத்தீன் அப்துல் காதிறு ஜீலானி (றலி) அவர்கள். இங்ஙனம் சிறப்புத் தலைவரையே பாட்டுடைத்தலைவராக, ஒலி நாயகரவதாரச் சிந்து அல்லது குத்பிய்யாமாலை கொண்டுள்ளது. இந்தத் தலைமைத்தகைமை காரணமாகவே இந்நூல் ஒலி நாயகர் அவதாரச்சிந்து எனப் பெயரிடப் பட்டுள்ளது.

ஒலிநாயகரவதாரச் சிந்து என்னும் நூலை இயற்றியவர் மஹ்மூது இப்றாஹீம் லெப்பை கலிபா அவர்களாவார். இவர் அலியார் லெப்பை ஹாஜிப் புலவரின் புதல்வர். இவர் ஜயவீர மங்கலத்தைச் சேர்ந்தவர். திருநெல்வேலிப் பகுதியில் உள்ளது ஜயவீர மங்கலம். ஆசிரியர்

தமது காப்புச் செய்யுளில் இந்நூலைக் குத்பிய்யா மாலை என்னும் பெயர் சுட்டி உள்ளார். அந்தச் செய்யுள் வருமாறு:

திருமணி யொளியாய் முன்னஞ்
சிறந்திட விளங்கி பின்னா
லருமணி யாகப் பூவில்
அவதரித் துதித்த கோமான்
திருமணி முகியித்தீன் மேற்
குத்பிய்யா மாலை பாடக்
கருமணி யாக நின்ற
கத்தனே காப்புத் தானே.

இங்கே ஹக்கன் என்பதே கக்கன் என வந்துள்ளது. ஹக் என்னும் அறபுச் சொல்லும் அன் என்னும் தமிழ் ஆண்பால் விகுதியும் சேர்ந்த தனால் பெறப்பட்டது ஹக்கன் என்பதாகும். ஹக்கன் என்றால் உண் மையானவன் என்பது பொருள். இது அல்லாஹ்வைக் குறிக்கும் ஒரு சொல்.

மகுடம் என்பது ஒரு வகைச் செய்யுளைக் குறிக்கப் பயன்படுத் தப்படும் ஒரு சொல். ஒரே வகையில் முடிவுறும் பல பாடல்களை மகுடப்பாடல் என்பர். மகுடம் என்றால் தொடர்ந்து வரும் பல பாடல்களில் ஒரே ரீதியாக ஏற்படும் முடிவு என்றும் கூறுவர். ஒலிநாயகரவதாரச் சிந்து என்னும் நூலில் அத்தகைய மகுடச் செய்யுட்கள் வந்துள்ளன. எடுத்துக்காட்டாக மகுடவிருத்தம் என அழைக்கப்பட்டுள்ள செய்யுளைப் பார்ப்போம். மகுட இயல்பு அந்தச் செய்யுளில் எங்ஙனம் அமைந்துள்ளது, என்பதை நோக்குவோம். அந்தச் செய்யுள் வருமாறு:

ஆரணத் துரையை அமருல கரசை
அடங்கலும் போற்றிய குருவை
பூரண மதியைக் கவுது நாயகத்தைப்
பொற்புறுந் தந்தைய ரேந்தி
யேரணி அப்துல் காதிறு என்னு
மின்புறு நாமமிட் டனர்பின்
தாரணி புகழுந் தாயவர் வாங்கித்
தாராட் டியே மகிழ்ந்தார்.

தாராட் டித்தொட் டிலிட்டுப்
பாராட் டிமுத்த மிட்டுச்
சீராட்டிப்பட் டமுமே கட்டி
நேராட் டிப்பொட் டுஞ்சுட்டி
தாராட் டியே புகழ்ந்தார் முகியத்தீனை
தாராட் டியே மகிழ்ந்தார்.

(கவுது நாயகம் - முகியித்தீன் ஆண்டகை).

ஒலி நாயகரவதாரச்சிந்து என்னும் நூலில் வரும் ஒரு வண்ணச் சிந்தை எடுத்துக் கொள்வோம். இந்தச் சிந்துப்பாடலிலே தாயார் தமது அருமைப் புதல்வரை ஜீலானியாம் பிறப்பிடத்திலிருந்து கல்வி கற்பதற்காக பகுதாதுக்கு அனுப்பும் பொழுது அவருக்குக் கொடுக்கப்பட்ட பரிசிலும் புத்திமதியும் இந்தச் சிந்தில் குறிப்பிடப்பட்டுள்ளன. தனையர் பகுதாது செல்ல வேண்டும் என்று கூறியதும் தகப்பனார் விட்டுச் சென்ற பொற்காசுகளைப் புதல்வரிடத்து ஒப்படைத்தார் தாயார். அதனைப்பெற்ற தனையர் முகியித்தீன் ஆண்டவர் அவர்கள் அதனை இரண்டாகப் பிரித்து நாற்பது பொற்காசுகளைத் தாம் எடுத்துக் கொண்டு, எஞ்சிய நாற்பது பொற்காசுகளையும் தமது சகோதரனுக்காக வைத்துவிட்டுப் புறப்பட்டார். அப்பொழுது தாயார் தம் புதல்வருக்குச் சில புத்திமதிகளைக் கூறினார். அவற்றுள் முக்கியமானது, எந்த இடத்திலும் எது ஏற்பட்டாலும் எச்சந்தர்ப்ப சூழ்நிலையிலும் பொய் சொல்லக் கூடாது உண்மையையே பேச வேண்டும் என்பதாகும். ஒரு வணிகர் கூட்டத்துடன் ஆண்டவர் அவர்கள் செல்லும் பொழுது கள்வர் கூட்டத்தினர் அவர்களை வழி மறித்தனர். கொள்ளை அடித்தனர். பறித்தனர். முகியித்தீன் ஆண்டவரிடம் என்ன இருக்கிறது என்று கேட்கப்பட்ட பொழுது தம்மிடம் நாற்பது பொற்காசுகள் உண்டு எனக் கூறினார்கள். அவர்கள் சொன்னது உண்மை என்று அறிந்த கள்வர் கூட்டத் தலைவர் அங்ஙனம் உண்மை கூறியமைக்கான காரணத்தை முகியித்தீன் ஆண்டவர் அவர்களிடம் கேட்டார். தாயாரின் நற்போதனையைப் பின்பற்றியதன் காரணமாகவே தாம் உண்மை கூறியதாகச் சொன்னார்கள். இதனைக் கேட்ட கள்வர் தலைவனும் கூட்டத்தினரும் உண்மையை உணர்ந்து அவர்களுடைய முதற் சீடர்கள் ஆகும் பாக்கியத்தைப் பெற்றனர்.

இந்தச் சிந்துப் பாடலிலே பின்வரும் சந்தக்குழிப்பு அமைந்திருப்பதைக் காணலாம்.

தந்தா தன தானன தானந்
தனத்த தானன தனத்த தானன-தந்தா.

இந்தச் சந்தக்குழிப்பு அமைதி பெற்ற சிந்துப்பாடல் இது:

1. என்றேயொலி நாயகர் தாமும்
இசைக்க வேயனை மகிழ்ச்சி கூர்தர
குன்ரு தெழில் நாற்பது பொன்னுங்
கொடுத்து நீரேவ டமடுத்த போதிலும்

2. நந்தா துறு மெய்யதை யன்றி
நவிற்றி டீர்பொய்யுந் தெரிந்தி டாமலே
எந்தே வரிர் மகவே யென்ன
இசைத்து நேர்வழி யனுப்பி னாரனை

3. சந்தோ சம தாய்ப்பரி மானுந்
தவத்தி னாரொலி பொருத்தி யேகொடு
மங்கா மறை தேர்பகு தாதின்
வழிக்கு நேரொலி முழக்க மாகவே

4. சிங்கா ரம ய்ச்செலுதாம் போது
திருட்ட தேசெய்து மருட்டுமோர் கள்வன்
வந்தே கவு தானவர் பாலின்
வலுக்க மாகவே துருக்கின் மேவியே

5. இந்தார் வன மீதுறு வோய்நும்
மிடத்தி லேபொரு ளிருக்கு தோவென
வம்பா கவெ கேட்டிட வேயாலி
லடித்த நாற்பது பொன்னின் காசுகள்

6. எம்பா லுள தென்றொலி நாதரும்
இசைக்க வேகள்வன் சிரித்து கேலியும்
இன்றே இவர் செய்தன ரென்னையென்
றெனெண்ணி யேயவன் பின்னென வேகினன்

7. நன்றாய் விரை கொண்டொலி நாதரும்
நடக்க வேபினு முறுக்கி யோர்கள்வன்
அங்கே யெதிர் கொண்டொலி பாலதி
லடுத்தெ யேதுன திடத்தி லேயென

8. பொங்கா ரம தாயவன் கேட்டனன்
பொலிக்கும் நாற்பது பொன்னென நாணய
முண்டா மெனி லென்றொலி கூறவும்
முனம்செல் சோரனு மடக்கி யேகினன்

9. தண்டார் கர மீர்கள்வர் தாமும்
தனக்கு நேர்மன னிடத்தி லேகினர்
சென்றே மொழி வார்வழி மீதொரு
செழிக்கும் வாலிபர் சார்ந்தோம் நாங்களும்

10. நின்றே பொரு ளானது தானின்
னிடத்தி லேகொளலா மோவென
விண்டோமவர் நாற்பது பொன்னும்
விளக்க மாயென திடத்தி லேயுள
தென்றா ரதை நாங்களுமும
திடத்தி லேசொல வகுத்து வந்தனம்,

இந்த ஒலிநாயகரவதாரச் சிந்து என வழங்கும் குத்பிய்யாமாலையில் பல விதமான பாவகைகள் இடம்பெற்றுள்ளன. பலவகையான கழி நெடிலாசிரிய விருத்தங்கள் அங்கு உள்ளன. ஆசிரிய அகவற் பாக்களும் அமைந்துள்ளன. மஹ்மூது இப்றாகீம் லப்பை கலிபா சாகிபுப் புலவரவர்களால் இயற்றப்பட்ட பயஹாம்பர் அவதாரப் பல வண்ணச்சிந்து நூலிலும் அவருடைய குத்பிய்யாமாலை என்னும் ஒலி நாயகரவதாரச்சிந்து நூலிலும் மகுடவிருத்தப் பாக்கள், மகுடவெண் பாக்கள், மகுடக்கலிப்பா, மகுட இன்னிசை, தாழிசை வண்ண விருத்தம், கந்தாய விருத்தம், பஃறொடை வெண்பா, பின் முடுகு வெண்பா, நெறிவிருத்தம் என்பனவும் வந்துள்ளன. மகுட விருத்தம், மகுடவெண்பா, முதலியன தமிழிலக்கியத்தில் வேறெங்கும் காண முடியாது எனக் கூறுவர்.

இசையுடன் பாடும் எதுவும் அதனைக் கேட்போரின் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் ஆற்றல் வாய்ந்தது. இத்தகைய பாடல்களைப் பாடுவதிலும் பாடுவதைக் கேட்டுச் சுவைப்பதிலும் மக்கள் மட்டற்ற மகிழ்ச்சி கொள்வர். முஸ்லிம் மக்களும் இசை நுணுக்கங்களை அறிந்து அவற்றைப் பயன் படுத்தி பாடல்களைப் பாடித் தாமும் மகிழ்ந்து ஏனையோரையும் மகிழ்விப்பர் என்பதனை அவர்களிடையே பயின்றுவரும் இசைத் தமிழோடு தொடர்புடைய நூல்கள் பல மலிந் திருப்பதைக் கொண்டு சுட்டிக்காட்டலாம்.

ஏனையோரின் வாழ்வில் அமைவது போன்று முஸ்லிம் மக்களின் அன்றாட வாழ்க்கையில் இசையோடு தொடர்புடைய பாக்கள் முதன்மையான ஓர் இடத்தைப் பெறுகின்றது. முஸ்லிம் பெரியோர்களைப் போற்றிப் புகழ்ந்து அளிக்கப்படும் விருந்து விழாக்களிலே அறபு மொழிக்கு அடுத்தபடியாக தமிழிசைப் பாடல்கள் இடம் பெறுகின்றன. பொதுவாக ஒவ்வொரு விழாவிலும் அந்தந்த விழாத்தொடர்புடைய பெரியார்கள் பற்றிய பாடல்களே பாடப்படுகின்றன. சிலர் பொழுது போக்குக்காகவும் தமிழிசைப் பாடல்களைப் பாடி மகிழ்வதும் உண்டு. வானொலியிலும் தொலைக்காட்சியிலும் இத்தகைய பாடல்கள், இப்போது ஒலிபரப்பப்படுகின்றன. இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய பல தமிழ் இசைப்பாக்கள் முஸ்லிம் பாடகர்களால் வானொலியில் ஒலிபரப்பப்படுகின்றன. தொலைக்காட்சியில் ஒளிபரப் பப்படுகின்றன. இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழிசைப் பாடல்களை இதற்காக அத்தகையோர் பயன்படுத்துவர். அல்லது இசைத்தமிழின் வரையறைகளுக்கமைய சிறப்பாக இயற்றப்பட்ட பாடல்களை உபயோகப்படுத்துவர்.

இசைத்தமிழோடு தொடர்புடைய சிந்துப் பாடல்களுள் காவடிச் சிந்து பிரபல்யமானது. சைவ சமயத்தவர்களிடையே பெரிதும் விரும்பிப் பயிலப்பட்டு வருவது. காவடிச் சிந்து அண்ணாமலை ரெட்டியாரால் இயற்றப்பட்டது. இருபத்து நான்கு சிந்துக்கள் காவடிச்சிந்தில் இடம்பெற்றுள்ளது. இந்தக் காவடிச் சிந்தினை மாதிரி நூலாகக் கொண்டு பூவடிச்சிந்து ஒன்று இயற்றப்பட்டுள்ளது. இதனை இயற்றியவர் காளை ஹஸனலிப் புலவர். இவர் மேலப்பாளை யத்தைச் சேர்ந்தவர். காளை முகம்மதலி புலவரின் புதல்வர். முகம்மது நபி (சல்) அவர்கள் பேரிலும் முகியித்தீன் அப்துல் காதிறு ஜீலானி (றலி) அவர்கள் பேரிலும் நாகூரில் அடங்கி இருக்கும் சாகுல்அமீது மீறான் சாகிபு (றலி) அவர்கள் பேரிலும் பாடப்பட்ட சிந்துக்கள் பூவடிச்சிந்தில் இடம் பெற்றுள்ளன.

சைவ சமயத்தைச் சேர்ந்தவர்களிடையே பெரு வழக்கைப் பெற் றிருந்த காவடிச்சிந்தை முஸ்லிம்களும் விரும்பிப் பயிலலாயினர். இதன் பயனாக காளை ஹஸன்அலிப் புலவரின் உள்ளத்தில் தோன்றிய சிந்தனையின் பிரதிபலனே பூவடிச்சிந்து, பெரியோர்களைப் போற்றிப் புகழப்படும் பாடல்களைக் கொண்ட நூல் முஸ்லிம்களுக்கு இன்றியமையாதது என உணர்ந்தார் ஆசிரியர். இதனைத் தமது ஆசிரியரான செய்கு செய்யிது முகம்மது ஹாஜி ஒலியுல்லா பேரில் பாடப்பட்ட சிந்தின் கடைசி அடியில் இங்ஙனம் குறிப்பிட்டுள்ளார்.

காவடிச் சிந் தாவலுற்றோர் பூவடிச்சிந்தே வழுத்த
காளையாம் ஹசனலிசொல் சிந்தையே-யெந்த
வேளையு மகிழ்ந்துரைப்போர் நிந்தையே-யறக்
காவலுற்றிது பூவிடத்தரு
ளேவலுற்றினி மூவிடத்திலுங்
கையணைத்தே மையகற்றும் வந்தையே-ஹாஜி
செய்யதுமு ஹம்மதொலி யெந்தையே

பூவடிச்சிந்து என்றும் நூலை கோட்டாறு மகாவித்துவான் சதாவதானி மகாமதி தேவாமிர்தப் பிரசங்கக் களஞ்சியம் செய்குத் தம்பிப் பாவலர் அவர்களால் பார்வை இடப்பட்டு சென்னை சச்சிதா நந்த அச்சகத்தில் அச்சியற்றப்பட்டது. முதற் பதிப்பு 1919இல் வெளிவந்துள்ளது. செய்குத் தம்பிப் பாவலர் அவர்கள் பூவடிச் சிந்துக்காகச் சாற்றுக்கவி ஒன்று பாடி உள்ளார். அந்தச் சாற்று கவியில் பூவடிச்சிந்தின் பொருளடக்கமும் ஆசிரியரின் வரலாறும் நூலின் பெருமையும் பேசப்பட்டுள்ளன. ஆசிரியரைப் பற்றிக் குறிப் பிடுகையில் அவர் பாவலர் என்றும் செத்தமிழ் பயிற்சியில் சிறந்தவர்

என்றும் எல்லோரும் விரும்பத்தக்க வகையில் நொடியில் பாடும் நுண்ணறிவு உடையவர் என்றும் செய்குத் தம்பிப் பாவலர் அவர்கள் குறிப்பிட்டுள்ளார். அவரால் வழங்கப் பெற்ற சாற்றுகவியின் ஒரு பகுதி இங்ஙனம் வந்துள்ளது.

எஞ்சலி லா நல் லிசைமலிந் தோங்கப்
பூவடிச் சிந்தெனப் பொறித்தன னொருநூ
னாலடிக் கேற்கு நலனெலாஞ் சிறப்ப
வந்தநன் னூலி னருமையென் னென்கோ
செந்தமிழ்த் தொடையின் சீர்மையென் னென்கோ
வுள்ளுந ருள்ளத் துவகையி னளவாய்க்
கொள்ளுமப் பெருமை குறித்திடற் கரிதே.

மற்றொரு சாற்றுகவியை மேலப்பாளையம் வித்வான் வ.அ. மலுக்கான் அலி சாஹிபு இயற்றி அளித்துள்ளார். வெண்பாவாக அமையும் அந்தச் சாற்றுகவியில் முப்பெரும் பெரியார்களின் பேரில் பூவடிச்சிந்து பாடப்பட்டுள்ளது எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அந்த வெண்பா இங்ஙனம் அமைந்துள்ளது:

பூவடிச் சிந்து புகன்றனன்மு வாண்டகைதஞ்
சேவடிக்கென் றெவ்விடத்துஞ் சீர்த்திபெற - நாவடிக்கே
கண்ட நலனுடையான் காளை ஹசனலிப் பேர்
கொண்ட புலவனென்றுங் கூர்ந்து.

மேலப்பாளையம் பிரபல்ய வித்துவான் ஷாஹுல் ஹமீதுப் புலவரவர்கள் குமாரர் மீறான் சாஹிபுப் புலவரும் சாற்றுகவியை வழங்கி உள்ளார். அது பதினான்கு சீர் ஆசிரிய விருத்தமாக அமைந்துள்ளது. பூவடிச்சிந்தின் பொருளடக்கமும் ஆசிரியரின் பெயரும் ஆசிரியர் யார் என்பதும் விருத்தத்தின் பிற்பகுதியில் தரப்பட்டுள்ளன:

நலமேவும் வள்ளலிற சூலோடு முஹ்யித்தீ
னாகைமீ றானொலியின் மே
நற்றாமரைக் கமுகு செஞ்சாலி சூழ்ந்திடு
நகர்மேலப் பாளையத்தி
லிலகுமணி போற்றோன்றுந் தீனோர் குலத்தினி
லிறைவனைத் தொழுதிறைஞ்சு
மிந்துமுகக் காளைஹா பிலுமுஹம் மது அலி
யியறவத் தாலுதித்துக்
கலையோடு நன்னூலும் பன்னூலு மேகற்றுக்
கவிவாண ருளமகிழவே
காசினியிற் பூவடிச் சிந்தொன்று செய்தனன்
காளைஹச னலிக்கவியனே.

பூவடிச்சிந்தைப் புகழ்ந்து பாடப்பட்ட வெண்பா ஒன்றும் இந் நூலின் சாற்றுகவிகளுள் ஒன்றாக அமைந்துள்ளது. அந்த வெண்பாவை வரகவி அ. சுப்பிரமணிய பாரதி அவர்கள் இயற்றி யுள்ளார். அந்த வெண்பா வருமாறு:

பூவடிச் சிந்து புனைந்திந்தப் பூதலத்தின்
மேவிடத் தந்துபுகழ் மேவினனால்—பாவிலிசை
ஆக்கவல்ல காளை ஹசனலிமெய் யன்புள்ளந்
தேக்கவல்ல தீந்தமிழில் தேர்ந்து

அண்ணாமலை ரெட்டியார் அவர்களால் இயற்றப் பெற்ற காவடிச் சிந்தில் இருபத்து நான்கு சிந்துப் பாடல்களே இடம் பெற்றுள்ளன. ஆனால் காளை ஹஸனலிப் புலவரின் பூவடிச்சிந்தில் இருபத்தைந்து சிந்துப்பாடல்கள் அமைந்துள்ளன. நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்கள் பேரிலும் முகியித்தீன் ஆண்டகை பேரிலும் சாகுல்கமீது ஆண்டகை பேரிலும் முறையே எட்டெட்டுச் சிந்துகள் பாடியுள்ள பூவடிச்சிந்து ஆசிரியர் அவருடைய குருவின் பேரில் ஒரு சிந்துப் பாடலைப் பாடி உள்ளார். பூவடிச்சிந்தில் இடம்பெற்றுள்ள இருபத்தைந்து பாடல்களுக்கும் காவடிச்சிந்தில் உள்ள பாடல்களின் முதலடிகளே மெட்டுகளாகத் தரப்பட்டுள்ளன. காவடிச்சிந்தில் இடம்பெற்றுள்ள ஒரு சிந்தின் முதலடி பூவடிச் சிந்துக்கள் இரண்டுக்கும் பொதுவான மெட்டாகக் குறிக்கப்பட்டுள்ளது. இந்தக் காவடிச் சிந்துகள் முதல் எட்டினதும் மெட்டில் முகம்மது (சல்) அவர்கள் பேரில் பாடப்பட்ட சிந்துகள் பூவடிச்சிந்தில் இடம் பெற்றுள்ளன. அடுத்த எட்டுச் சிந்துக்களின் மெட்டில் முகையதீன் ஆண்டகையின் பேரில் எட்டுச் சிந்துகள் பாடப்பட்டுள்ளன. கடைசி எட்டுச் சிந்துகளின் மெட்டில் சாகுல் கமீது ஆண்டகையின் பேரில் எட்டுச் சிந்துக்கள் பாடப்பட் டுள்ளன. ஆசிரியரின் குருவைப்புகழ்ந்து அவர்தம் பேரில் பாடப்பட்ட இருபத்தைந்தாவது சிந்துக்கு மெட்டாக அமைந்துள்ளது பூவடிச் சிந்தின் ஐந்தாம் சிந்தின் மெட்டாக அமைந்துள்ள, சின்னிகுள நன்னகரண்ணாமலை மெட்டே. பூவடிச்சிந்தில் குறிக்கப்பட்டுள்ள காவடிச்சிந்துகளின் முதலடிகள் வருமாறு:

1. திருவுற்றிலகு கங்கை மெட்டு
2. சீர்வளர்பசுந் தோகை மெட்டு
3. தெள்ளு தமிழுக்குதவும் மெட்டு
4. சென்னிகுளநகர் மெட்டு

5. சின்னிகுள நன்னகரண்ணாமலே மெட்டு
6. புள்ளிக் கலப மயில் பாகன் மெட்டு
7. மரகத விகசித மெட்டு
8. செந்தி மாநகரந்தனில் மெட்டு
9. பவனகிரியதனுட் மெட்டு
10. அள்ளியள்ள நீர்குடிக்கும் மெட்டு
11. பாதிராத்திரி யென்ற மெட்டு
12. பூமி மெச்சிடும் மெட்டு
13. செந்திமா நகர் வாழ் மெட்டு
14. நேமமாய்ப் பணியன் மெட்டு
15. ஆறுமுகவடி வேலனே மெட்டு
16. கண்ணாயிரம் படைத்த மெட்டு
17. சந்தவரைவந்தகுகநாதா மெட்டு
18. பாளைவாய்கமுகில் மெட்டு
19. மஞ்சுநிகர் குந்தள மின்னே மெட்டு
20. செந்துர் வளர் முருகா மெட்டு
21. திருச்செந்தூர்ப்பாதையருமடி யன்னமே மெட்டு
22. கன்னல் சூழ் பலனம்புடை மெட்டு
23. வன்னத் திணை மாவைத் மெட்டு
24. என்னடி நான்பெற்ற மங்கை மெட்டு
25. சின்னிகுள நன்னகரண்ணாமலை மெட்டு

பூவடிச்சிந்தின் காப்புச் செய்யுள் இறைவனிடம் பாதுகாப்புத் தேடுகிறது. மூன்று பெரியார்கள் மீதும் பூவடிச் சிந்து பாட—மூவடிச் சரணைப் போற்ற—அல்லாஹ்வின் பாதுகாப்பு வேண்டப்படுகிறது. அந்தக் காப்புச் செய்யுள் வருமாறு:

பூவடிச் சிந்தென் றோதிப் புகழ்வளர் நபியுல் லாவை
சேவடிக் கருணை வள்ளல் செய்யிது முகியித் தீனை
நாவடிக் கினிய தேனார் நாகைமீ றானை இந்த
மூவடிச் சரணைப் போற்ற முதலவா காப்பு நீயே.

பூவடிச்சிந்து நூலில் உள்ள ஒவ்வொரு சிந்தும் எட்டெட்டுப் பகுதிகளைக் கொண்டதாக அமைக்கப்பட்டுள்ளது. ஒன்றைத் தவிர, நபிகள் நாயகம் புகழ்பாடும் நான்காம் சிந்துப் பாடலில் ஏழு பகுதிகளே உள்ளன. ஒவ்வொரு சிந்துப் பாடலிலும் ஆசிரியர் அவருடைய முத்திரையையும் பொறித்துள்ளார். தாம் இன்னார் என்பதைக் குறிப்பிட்டுள்ளார்.

பூவடிச்சிந்தில் முகம்மது நபி (ஸல்) அவர்களைப் புகழ்ந்து பாடப் பட்டுள்ள முதற் சிந்துப் பாடலைப் பார்ப்போம். 'திருவுற்றிலகு கங்கை' மெட்டில் பாடக் கூடியது இது:

திருவுற்றிருநிறைந்த வருவிற் றெளிவுறைந்த
தெருவிற் றிகழெழுந்த தேசூராம்-அந்த
பொருளிற் சிகிசிறந்த வேதராம் - ஒரு
தீதிலாதவன் றூதுளாதியென்
றோதியேபுகழ் நீதி யாயினு
தினமுந் தகைமிகுந்த நேசராம்-பயன்
மனமுந் துதிமலிந்த வாசராம். 1

கருவுட் கருமுதிர்ந்த வுருவுற் றகடணிந்த
கனதிக் குரிய மக்கத் தாமினார்-தவ
மனதைக் குளிரவைக்குந் தேமினார்-ஒரு
காதமேதரு மேத கத்துட
லோத மோதுறு சீத மான்மதங்
கமழுற் றில்கவந்த மாமனார்-குபி
ரமளித் துயரறுத்த மூமினார். 2

உடலுக் குயிரும்பங்கக் கடலிற் கலமுமென்க
வுருவென் றுலகில்வந்த வோகையாம்-கற்ப
தருவென் றருளுயர்ந்த வீகையாம்-தீனோ
ரூழி காலமு மேழிவாயதன்
பாழி டாதுநல் லாழியேபெறு
முபயப் பொருளமைந்த சாகையாம்- நமக்
கபயப் பயனிறைந்த வாகையாம். 3

வனசப்பொழிலுயர்ந்து பனசப் பழமிகுந்து
வளமொய்த்தொளிருமக்க ராசராம் - தீனின்
றளமெய்த்திடவிளக்கும் பாசராம் - நெடும்
வான மேழது தானு மோரிர
வான பாதியிற் போன தோடிறை
வரிசைத் தெளிவணிந்த நேசராம்- உடன்
பிரிசத் தரையிழிந்த போசராம். 4

இலகுங் கதிருதித்து விலகுங் கரை நிகர்த்தே
யிகலுற் றடருமெந்தத் தீங்குமே-யவர்
புகலுற் றிடவொழிந்து நீங்குமே-மிகு

வீகையாரெனுந் தோகையாம் ஹலி
மாசையாகியே சூகைமார்பினை
யிரசித் துடலிலங்கந் தேங்குமே-ரெளப்
பரசித் துதிநலங்க ளோங்குமே. 5

புவனத் துரைகளுக்குஞ் சுவனத்துடையவர்க்கும்
புகழிற் றிருவுறைந்த பூரணர்-எங்கு
மிகழற்றிலகவந்த காரணர்-அருள்
போன்ற மாமறை மூன்று மாறிட
வேன்ற நாலெனத் தோன்ற வேவரும்
புதுமைப் பொருளமைந்த வாரணர்-சொற்கப்
பதுமைப்பரியணிந்த தோரணர்.

வடிவிற் றிகழ்கதீஜா வொடிவற்ற மகராஜ
மணவாள ரெனவந்த நாதராம்-நல்ல
குணவாள ரெனுமந்த வேதராம்-பல
வாவி சூழுமக் காவில் வாழப்துல்
லாவி னேரிய வாவி போலுள
மகவென்றுலகுதித்த போதராம்-தயை
மிகவென் றெவருமொய்த்த நீதராம். 7

புணைசொற்க மெனக்கண்ட வனைவர்க்கு மனமண்டிப்
புகவிக்கிலெனநின்ற வாயகம்-அவர்
மகவிற் கடைசியென்ற சேயகம்-உறப்
பூங்கொடிக்குயர் பாங்க ராயறு
ஷோங்கு மிங்கித வேங்கை யாமலி
புலியைக் கடிமணக்கு நாயகம் - ஹச
னலியைக் கருணைவைக்கும் தாயகம். 8

மக்கம், ஆமினா, ஹலிமா, கதீஜா, அப்துல்லா, அலி, அறபுப் பெயர்கள். மூமின் - விசுவாசி, குபிர் - இஸ்லாம் இல்லாத தன்மை, தீனோர்-தீன் ஓர், தீன் - மார்க்கம், ஓர் பலர்பால் விகுதி. இந்தப் பாடலின் இறுதியில் ஆசிரியர் தமது பெயரைச் சுட்டிஉள்ளமை நோக்கற்பாலது.

முகியித்தீன் அப்துல்காதிறு ஜீலானி (ரலி) அவர்களைப் புகழ்ந்துப் பாடப்பட்டுள்ள ஒரு சிந்துப் பாடலைப் பார்ப்போம். அந்தச் சிந்துப்பாடல் செந்தி மாநகர் வாழ் என்னும் காவடிச்சிந்தின் மெட்டில் பாடுவதற்காக இயற்றப்பட்டுள்ளது. அந்தச் சிந்துப்பாடல் இவ்வாறு வந்துள்ளது.

1. சோதியுறும்பகு தாதினிறையிரு
துங்கப்பதக் கஞ்சமே-நாமுந்
தங்கப்பெறும் தஞ்சமே-யங்கு
தோல்வடையும் வஞ்சமே
சோகமுறிலெந்தக் கேடுமறுமந்த
சுல்தானொலீ நெஞ்சமே.

2. நீதியெனும் புகழ் வேதியர்தம்முடி
நித்திலமாய் மதித்தோர்-நபி
ஜத்திலமா யுதித்தோர்-பத
நேரொலிதோள் பதித்தோர்-நெறி
நீக்ககளுள் நஸா றாக்ககம் போக்கியே
நீளொலியாய் விடுத்தோர்.

3. ஆயர் கபுறதி லேயவராயரென்
றார்துயர் நீங்கிடவே-யம
ரோர் துனி தேங்கிடவே-யல
ராயுத மோங்கிடவே-பறித்
தாரமரோரவர் காரடி மீதடைந் தாரதை வாங்கிடவே

4. ஆண்டுபனிரண்டு பூண்டபடிவந்தோ
டார்தவஞ் செய்தவராம்-ஒலி
மார்பவங் கொய்தவராம்-தயை
யான்மழை பெய்தவராம்-மக
னாவல்கொண்டோருக்குப் பாலைக்கருவதை
யாணாக்கி யுய்த்தவராம்

5. நீதமுரைத்திடும் போதங் கொளுவர்க்கு
நிர்ப்பந்தம் வந்திடவே-மலத்
துர்ப்பந்தஞ் சிந்திடவே-சட்டை
நீள்கைபொ திந்திடவே-செய்து
நீக்கிவெகுதொலை யாக்கி மொழியுற
நேமித்தா ருந்திடவே.

6. துய்யவொலி மீதிலைய மனத்தினுட்
டோணியு ளைந்திடவே-காலி
லாணிது ழைந்திடவே-யதாற்
றுன்பம்வி ளைந்திடவே-வந்து
தோத்திரஞ் செய்தபி னாத்திரந் தீர்ந்திடத்
தொட்டார் களைந்திடவே.

7. வங்கமுடைந்தப்பி லங்கம ழிந்தவன்
வந்தும ணந்திடவே-தாயு
கந்துப ணிந்திடவே-யிந்த
வையம றிந்திடவே-செய்த
வள்ளலெனவென துள்ளினிறைந்தனர்
வாழ்வு சிறந்திடவே.

8. அன்னவ ராராம்ஹ சனலி போற்று மெவ்
வவ்லியார்க்கும் அணியாம்-தலை
மவ்லீ யாகும் பணியாம்-இறை
யாரணத்தின் கு ணியாம்-இந்த
வாலம னைத்தினு மோலமு ழக்குமெய்
யார் முஹ்யித்தீன் மணியாம்.

பருதாது - நகரப்பெயர், சுல்தான் - அரசன், ஒலி - இறைநேசர் நபி - தீர்க்கதரிசி. ஐத்து - பரம்பரை, நஸாறா - வேதமுடையோர் கபுறு - புதைகுழி, அவுலியா - இறைநேசச் செல்வர்கள், ஆலம் முழுஉலகம்.

மீறான் சாகிபு ஆண்டவர் பேரிற் பாடப்பட்டுள்ள பூவடிச் சிந்தில் சாகுல் ஹமீது ஒலியுல்லாஹ்வின் வாழ்க்கையும் சாதனைகளும் எட்டு சிந்துப் பாடல்களில் இடம் பெற்றுள்ளன. ஆண்டகை அவர்கள் மீது பாடப்பட்ட பூவடிச்சிந்துப் பாடலில் ஒரு பாடல் மஞ்சு நிகர் குந்தள மின்னே என்னும் மெட்டில் பாடக்கூடியதாக அமைந்துள்ளது. அந்தச் சிந்துப்பாடல் வருமாறு:

1. வாகையுறு நாகையன் கண்ணே
வளங்க ளென்று நளங்கண் மின்னும்
வாறிற் கொஞ்சங் கூறக்கேள் பெண்ணே-பல
வந்தையாகிய விந்தை யாவையுஞ்
சிந்தை மேவிய தந்தை ஷாஹொலி
வாழ்வு தந்து சூழ்வதை கண்ணே
வணக்க முன்ன விளக்க மன்ன
வந்தனஞ்சி றந்திடப் பண்ணே,

2. சாகையதின் வாகையே பொங்கும்
தகைமிகுந்த வகைசி றந்த
சாதுரியப் போதமி லங்கும். -துதிச்
சந்த மானது சொந்த மாகிட
வெந்த மாந்தரும் வந்து மேவிடும்
வுாஹுல் ஹமீ தோகையே தங்கும்
தயவுறைந்த நயநி றைந்த
தாபரமென்றேபெறுமெங்கும்

3. பற்பல ஜாதிப்பலர் — தேடிப்
பவனியாக வவனி நாகப்
பட்டணத்தை விட்டுடன் கூடி-ஒலி
பம்பையும் பறை யும் பெருங்குழ
லும்ப தங்கொளுந் தம்பு ரும்புனை
பானுபோலே யானைமீ தாடிப்
படிது லங்கக் கொடியி லங்கப்
பாவுமனா றாவுறு நீடி.

4. சந்தனக் கூடெழுந்த தோணுமே
தளத ளென்னப் பளப ளென்னத்
தங்கமலை மங்கக் காணுமே-யதை
சாதிபேதமிலாதி யாவரும்
பாதி ராவதி லேதெ ரிந்திடச்
சந்திரனுஞ் சிந்தை நாணுமே
சகல வீதி யகல மீதிற்
றாவித்தறு காவிற் பூணுமே

5. மஞ்சு றுஞ்செழுஞ்செஞ் சேலையும்
மணிக்கு டையும் பணிக் கடையும்
வண்ணமின்னும் பொன்னின்மாலையும்-அதில்
வச்சிரத் துட னுச்சிதத் தர
ளச்சி ரோமனி யைச்ச மைப்புற
வைத்தமைத்த பந்தர் வேலையும்
வகைவ கையாய்த் தொகைதொகையாய்
வந்துவிற்கு மெந்த மூலையும்,

6. மாமரம்ப லாமரம் துன்னும்
மணக்க னிக ளுணக்கிளிகண்
மாயுமென்ன வீயுமே தின்னும்-படி
வாகை மெய்தரும் பாகைப் பெய்தவை
யீகை செய்துந லோகை யுய்திடும்
வர்க்கமாம்ப ழக்குலை யின்னும்
வழிந்தொழுகும் பொழிந் தொழுகு
மாமதுரத் தேமதுர முன்னும்.

7. பூம்பொழிலி னாம்பன் மேவுமே
பொருவறவே மருவுறவே
பொங்கரிப்ப ழங்க டேவுமே
புங்க வண்டமு தங்கள் ளுண்டுமு
ழங்கி யெண்டிசை மங்க ளந்தரப்
போற்றி ராக மேற்றிக் கூவுமே
புகழ்சிறக்குந் திகழ் பிறக்கும்
புண்ணியரென் றெண்ணந் தாவுமே

8. எங்குமே துலங்கு நகராம்
எழுங்கடலு முழங்கடலு
மேறுநன்மை யூறு நகராம்-அவ
ணெந்த மாந்தரும் வந்து மேன்மைய
ணிந்து மீளவ மைந்த ஷாஹொலி
யேந்தலாட்சி யார்ந்த நகராம்
இசையொலி கொள் ஹசனலிகொ
ளீகை யோங்கு நாகை நகராம்.

(மனறா-உயர்ந்தகோபுரம், தறுகா-பெரியார் ஒருவர் அடங்கப் பெற்றுள்ள நினைவாலயம்.)

பொதுவாகப் பார்க்கும் பொழுது காளை ஹசனலிப் புலவரின் சிந்துப் பாடல்களில் சந்த அமைதியும் ஓசைநயமும் சொல்லாட்சியும் இடம்பெற்றுள்ளன என்பது புலனாகின்றன. ஆசிரியரின் சொல்லாட்சித் திறமையை இப்பாடல்களில் காணலாம். சந்தத்துக்கு இயைபுடைய சொற்களைப் பொருத்தமான முறையில் பயன்படுத்துவதில் ஆசிரியர் வெற்றிகண்டுள்ளார். இங்கு எடுத்துக்காட்டப்பட்ட சிந்துப் பாடல் களில் ஆசிரியரின் சொல்வளமும் பொருட்செறிவும் மிளிர்வதைக் காணலாம்,

மக்கமாநகரத்தின் வளத்தைக் குறிப்பிடும் பொழுது வனசப் பொழிலுயர்ந்த பனசப்பழமிருந்து வளமொய்த்தொளிரு மக்கா' என்று ஓசை நயம் மிக்கதாய் அமைத்துப்பாடி உள்ளார் ஆசிரியர். ஏழு வானங்களையும் கடந்து ஒரே இரவின் பாதி நேரத்தில் விண்ணேற்றம் என்னும் மிஃராஜ் பயணத்தை மேற்கொண்டு முடித்துத்திரும்பியவர் பெருமானார் (ஸல்) அவர்கள் என்பது 'நெடும் வான மேழது தானு மோரிரவான பாதியற் கோடிறை வரிசைத் தெளிவணிந்த நேசராம் உடன் பிரிசத் தரையிழிந்த நேசராம்' என ஒரு சொல்லோவியமாகவே விவரிக்கப்பட்டுள்ளது.

அதே போன்று முகியித்தீன் ஆண்டவர் பிறந்த ஜீலான் நகரம் வானளாவப் புகழப்பட்டுள்ளது. பெரிய மரங்களும் மணங்கமழும் சோலைகளும் வாவிகளும் பெரிய மாடங்களும் அமைந்தது ஜீலான் என்பது. தருக்கள் சோலை மருக்கொள்வாவி பெருக்கு மாடம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. மற்றோர் இடத்தில் செந்தாமரைத் தடாகமும் தோப்பும் பல்கனி செந்தேனுடைந்து பாயுமே யதிலேயுமே வெளிசாயுமே அந்தத் தேனொடு வண்டுந் தோயுமே வயவ்வூர் தெருக்கள் மீதிற் பெருக்குங் காக்கள், அருக்கன் வேனலுருக்கிடாமற் செந்தண்ணிழல்கள் ஈயுமே' என வந்துள்ளது. செந்தாமரை தடாகங்களிலும் தோப்புக்களிலும் கனிகளிலிருந்து தேன் பாய்கின்றது. வெளியே ஓடுகின்றது. அந்தத்

தேனிலே வண்டுகள் தோய்ந்துவிடுகின்றன. அங்கே பலதெருக்கள் உள்ளன.அத்தெருக்களைச் சார்ந்த பூஞ்சோலைகளில் உள்ள அடர்த்தியான மரங்களினால் சூரியனுடைய வெப்பம் கீழே தாவாதபடி மறைக்கப்படுகின்றது. நிழல் அளிக்கப்படுகின்றது. அத்தொடு இயற்கை வருணனை அமையவில்லை. சோலைகளிலே வண்டுகள் பாடுகின்றன; மயில்கள், ஆடுகின்றன, குயில்கள் கூவுகின்றன. இக் கருத்துக்கள் இங்ஙனம் ஒரு சிந்தின் ஒரு பகுதியில் இடம் பெற்றுள்ளது:

ஓயாத சோலை மீதில் வாயார வண்டமு
துண்டே யிராகம் பாடுமே-மயி
லாடுமே குயில் கூடுமே-மிக
வுற்சாக மோங்கி நீடுமே-யதி
லொருங் குறாத மரங்கள் மேவி
நெருங்குஞ் சீரிய விலங்கு யாவு
மொன்றை யொன் றோடித்தேடுமே.

முக்கனிகளும் நிறையக் கிடைக்கும் ஊர் நாகூர். மா, பலா, வாழைக் கனிகள் உண்பதற்காக விழுந்து கிடக்கும். நல்ல மணங் கமழும் தேனைப் பொழிந்து வழங்கும். அந்த ஈகையினாலே உவகை ஏற்படும். அந்தப் பழக்குலைகளிலிருந்து வழிந்தொழுகும் மிக்க இனிமையான தேனை நல்கும். இவற்றைக் கூறும் பொழுது ஓசை நயம் மிளிர்வதைக் காண்கிறோம். 'வாகை மெய்தரும் பாகைப் பெய்தலை ஈகைசெய்து நலோகை யுய்திடும்' எனவந்துள்ள பகுதியில் ஒரே ஒலிக் குறிப்புள்ள சொற்களாக வாகை, பாகை, ஈகை, ஓகை என்பவற்றைச் சுட்டலாம்.

மற்றொரு சிந்துப் பாடலிலே நாகூர் ஆண்டகையின் பிறப்பிடமான மாணிக்கப்பூரின் இயற்கை வருணனை விவரிக்கப் பட்டுள்ளது. அந்த வருணனையை உடைய சிந்துப் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது:

காணிக்கைப்பு கழ்மிகுத்தமாணிக்கபூர் சீரெடுத்துக்
காட்டவொண்ணாதாகினுமென் னெஞ்சமே—யந்த
நாட்டழகைச் சொல்லுகிறேன் கொஞ்சமே.
.........................................
சுந்தரமிகுந்தபல நந்தவ னந்துளிர்ப்பத்
தோகையுங்கலாபம் விரித் தாடுமே—யினு
மோகை கொண்டிராகம் வாண்டு பாடுமே
கந்தரமு வந்துறையுஞ் சந்தனம ரந்திகழுங்
காட்சியின் மலிந்த பெருஞ் சாலையும்—அங்கு

மாட்சியிற் பொலிந்த பல சோலையும்
வாழையுஞ் செவ் வாம்பலுநற் றாழையும் பற் பூம்பொழிலும்
வாசமாய்த் துலங்கனமுஞ் சூழுமே – யதி
னேசமாய்விலங்கினமும் வாழுமே

பூவடிச்சிந்துப் பாடிய காளை ஹசனலிப் புலவர் தம்முடைய குருவான செய்கு செய்யிது முகம்மது ஹாஜி ஒலியுல்லா மீது ஒரே ஒரு சிந்துப்பாடலை இறுதியாகப் பாடி உள்ளார். அதன் மெட்டு காவடிச் சிந்திலுள்ள 'சின்ன குள நன்னக ரண்ணாமலை' என்பதுடன் ஆரம்பிக்கும் சிந்தின் மெட்டை ஒத்திருக்கிறது.

1. பூவடிச்சிந்தாவலுற்றுப் பாவுரைத்தே னோ வொழித்துப்
பூட்சியிற்பண் பாட்சி பூட்டும் போதரே யாயு
ணீட்சியிற் கண் காட்சி காட்டுஞ் சாதரே யிந்தப்
பூதலத்திலும் பாதளித்தெனை
யாதரித்திடக் காதலிப்பதைப்
பொய்யறவே செய்யுங் கஞ்சப் பாதரே – ஹாஜி
செய்''யிதுமு ஹம்மதொலி நாதரே.

2. புண்ணொழியப் பண்ணுமருட் கண்ணுறுமென் நுண்ணினைவு
பூத்துரைத்தேன் பார்த்தகற்றும் வாதையே—யெனைக்
காத்தருளிச் சேர்த்திடுநற் பாதையே– நலம்
பொங்குமாதர வெங்கு மேதரத்
தங்கு மாலடிப் பங்கையந்தனைப்
பொய்யொழித்த மையுந்நெஞ்சிற் சாதையே - யெங்களி
செய்யிது முஹம் மதெனுந் தாதையே..

3. மக்கநபி மெய்க்குமபு பக்கரின் குலக் கொழுந்தாய்
வந்த சுலைமா னொலிச்செங் கோலரே -பெற்ற
சந்ததிகட் கந்தமெனும் பாலரே-யென்ற
வாகுலாவுஸ லாஹுே தீனினந்
தாகு மாலையில் ஷேகுமாரொடு
வையம்புகழ் செய்யுங்கந்தக் காலரே-செய்கு
செயிது முகம்மதனு கூலரே.

4. தேடிய போற் கூடிவர நீடியேறு பாடிநகர்
ஷெய்கென வுதித்தபிர காசரே-யருண்
மெய்கொள் கீழப்பாளையத்தின் வாசரே-யோகச்
செம்மலாமு ஹ ம்மதாமொலி
தம்மின் பாலரென் றெம்மினோர்க் கருள்
செய்ய முரீதுய்யுமுப தேசரே.- ஹாஜி
செய்யது முஹம்மதொலி ராசரே.

5· சோலைமேளப் பாளையத்து ளாகீ ழப் பாளையமாந்
துங்கநகர ங்கிலங்குள் வாசரே-யினு
மெங்களோரி ணங்குமுப தேசரே. பிணித்
துன்பமே தொலைத் தின் பமே கொடுத்
தென்பினோடுளத் தன்பு மேலிடத்
துய்ய மேன்மை யுய்யுமக ரசரரே -யெங்கள்
செய்யதுமுஹம் மதொலி நேசரே.

6. காய்ந்துறை யான்றுளையிட் டோய்ந்தவிரு மாதளையை
கண்டுதங்கை கொண்டநதி யூற்றவே-தளிர்
கொண்டு டனி ரண்டுதீங்கனி தோற்றவேயாருங்
காட்சி கண்டஃதாட்சி யென்றதை
மாட்சிகொண்டொரு காட்சி வண்டுறுங்
கையணிந்தேன் மெய்யை நிறை வேற்றவேயினும்
செயிதுமுஹம்மது நன்காற்றாவே

7. கட்செவியி னச்சறவிறட்சகரிடச் சயத்தைக்
காயக்கடி வாயில் விர னீட்டியே – தொட்டு
மாயக்கொடா தேயுயிரை மீட்டியே-வைத்த
காரணக்கடல் பூரணக்கவ
வாரணக்குணி யேறெனக்குறக்
கையணைந்த தேனை யமுரை-யோட்டியே-அருள்
செய்யதுமு ஹம்மதேநன் றூட்டியே.

8. நஞ்சனைய நெஞ்சினோர் செ யுஞ்சருவ வஞ்சனைக
ணாளுமணு காமலேதூ ராக்குவீர் – பல
கோளுடனெந்த நோய்களையு நீக்குவீர். – பய
னாடியேகலங் கூடியாயுளு
நீடியேகவி பாடியா ருற
நையவெவை யையுமறப் போக்குவீர்—எங்கள்
செய்யிது முகம்மதெனைக் காக்குவீர்.

9. மக்கமதீன க்கதிகி டைக்கதுஆ வைக்கருதும்
வாறுபோலப் பேறுபெற்ற மாட்சியே காறொண்
ணூறுடனாண்டாறுமுற்ற நீட்சியே – திரி
மங்கையோர் செயும் வங்கையே யொழிந்
தெங்கையே நரர் சங்கையார் பெறு
மையுடன மையவுங்கள் காட்சியே—யுருள்
செய்யிது முஹம்மதர சாட்சியே.

கப்பற்சிந்து, எண்ணெய்ச்சிந்து போன்ற பாடல்களையும் பல முஸ்லிம் புலவர்கள் பாடி உள்ளார்கள்.

பண்ணோடு பாடப் பெறக்கூடியவையாகவும் சந்தக்குழிப்புகளைக் கொண்டவையாகவும் இராகம் தாளம் பெற்றனவாகவும் அமைந்த சிந்துப் பாடல்களிலே உள்ளடக்கமாகப் பொதிந்துள்ள இசை நுணுக்கங்களையும் தமிழிசை மரபுகளையும் எல்லோரும் அறிந்து கொள்ளும் வகையில் விரிவான ஆய்வு இன்றியமையாததாகின்றது. அங்ஙனம் ஆய்வோடு நின்று விடாமல் பெற முடியாமல் இருக்கும் இந்த இசைத் தமிழ் நூல்களை யாவரும் பெற்றுப் படித்து பயனடைய அவற்றின் திருத்திய புதிய பதிப்புகள் தேவைப்படுகின்றன. இவற்றை எல்லோரும் அறியச் செய்வது இத்துறையில் ஆர்வமுள்ள எல்லோரினதும் நீங்காக் கடமையாகும்.

❀

# தாலாட்டு

இசைக் கருவிகள் பயன்படுத்தாவிட்டாலும் இசை அமைதியுடன் பாடப்படுபவை தாலாட்டுப் பாடல்கள். இத்தகைய பாடல்கள் தாலேலோ என்று முடிவடையும். குழந்தைகளை உறங்கச் செய்யும் நோக்கத்துடன் தாலாட்டுப் பாடல் பாடப்படுகின்றன. குழந்தைகளை தொட்டிலிலிட்டுத் தொட்டிலை ஆட்டித் தாலாட்டுப் பாடல்களைப் பாடுவர். தாலேலோ என்றும் முடியும் பாக்களைத் தமிழ்ப் பிள்ளைத் தமிழ் நூல்களிலும் காணலாம். மக்களிடையே நன்மதிப்பைப் பெற்றிருப்பதால் தாலாட்டுப் பாடல்கள் மக்கள் வழக்குப் பிரபந்தம் என வழங்கப்படுகிறது. பெரும்பாலும் கண்ணிகளாகவே தாலாட்டுப் பாடல்கள் அமைந்திருக்கும் தாலாட்டுப் பாடல்கள் பெரும்பாலும் பாட்டுடைத் தலைவரை அல்லது பாட்டுடைத் தலைவியைக் கொண்டதாக இருக்கும். அத்தகையோரின் முன்மாதிரியான வாழ்க்கை போற்றிப் புகழப்பட்டுக் குழந்தைகள் தாலாட்டப் படுவர்.

இத்தகைய தாலாட்டுப் பாடல்கள் முஸ்லிம் மக்களிடையே பெரு மதிப்பைப் பெற்றிருக்கின்றன. முஸ்லிம் மக்களின் பெரு வழக்கில் வழங்கப்படுகின்றன. அதன் காரணமாக அவை பேணப்படுகின்றன. தமிழ்த் தாலாட்டுப் பாடல்களையே முஸ்லிம் தாய்மார் தமது குழந்தைகளை ஆராட்டித் தாலாட்டி உறங்கச் செய்வதற்குப் பயன் படுத்துவர். இஸ்லாமிய மரபுக்கியைய முஸ்லிம் குழந்தை பிறந்து ஏழுநாட்களுக்குள் முடிவெட்டப்பட்டு அதன் எடைக்கு தானம் வழங்கப்படவேண்டும். அழகான பெயர்கள் இடப்படல் வேண்டும். இதனைப் பின்பற்றியே முஸ்லிம் பெற்றோர், குழந்தைகள் பிறந்த உடன் அதற்குப் பெயரிடுவர். ஆனால் பெரும்பாலான சந்தர்ப்பங்களில் முஸ்லிம் குழந்தைகள் பிறந்த நாற்பதாவது நாளன்று அக் குழந்தைகளுக்குப் பெயரிடப்படும். குழந்தைகளுக்குப் பெயர் சூட்டுவதற்கு பெரியார்களே அழைக்கப்படுவர். பெற்றோர் விழாக்களையே நடாத்துவர். அங்ஙனம் விழாக்களை நடாத்தி அன்னதானம் வழங்குவர்.பெயர் சூட்டப்பட்டதன் பின்னர் அலங்கரிக்கப்பட்ட தொட்டிலில் குழந்தையை இட்டு முதியவர்களைக் கொண்டு அல்லது நன்றாகப் பாடக்கூடியவர்களைக் கொண்டு தாலாட்டுப் பாடல்களைப் பாட வைப்பர். இங்ஙனம் பார்க்கும் பொழுது முஸ்லீம்களின் அன்றாட வாழ்க்கையிலே தமிழ்த் தாலாட்டுப் பாடல்கள் ஒரு முக்கியமான இடத்தை வகிக்கின்றன என்பது புலனாகின்றது.

தாலாட்டுப் பாடல்கள் பல வகையினவாய் அமையும். ஒரே ஆசிரியர் வெவ்வேறு வகையான தாலாட்டுப் பாடல்களை இயற்றி உள்ளமையைக் காணலாம். அத்தகைய தாலாட்டுப் பாடல்களுள் ஒன்று பஞ்சரத்தினத் தாலாட்டு. பஞ்சரத்தினத் தாலாட்டின் பெயர்

குறிப்பிடுவது போன்று அங்கே ஐந்து தாலாட்டுப் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. பஞ்சரத்தின தாலாட்டு நூல்களை அசனலிப்புலவர் இயற்றி உள்ளார். இவர் இயற்றிய நூல் மிகப்பல. பூவடிச்சிந்து நூலும் இவரால் இயற்றப்பட்டது. இவர் முகம்மதலியின் புதல்வர். மேலப்பாளையத்தை சேர்ந்தவர். மேலப்பாளையம் திருநெல்வேலிப் பகுதியிலே உள்ளது. பஞ்சரத்தினத்தாலாட்டுப் பாடலிலே ஆசிரியரின் மூதாதையர் எகிப்து நாட்டைச்சேர்ந்தவர் என்று அங்குக் காணப் படும் ஒரு சாற்றுகவி கூறுகிறது. நேரிசை வெண்பாவாக அமைந் துள்ள சாற்றுகவியில் உயர்ந்த ஞானமே தாலாட்டுப் பாடல்களிலே பாடப்பட்டுள்ளது எனக் குறிப்பிடுகிறது. அந்த வெண்பா வருமாறு:

தக்கோர் துதிக்குமெய்ச் சாயுட்சி ஞானமதை
சக்கின்றித் தாலாட்டாய்ச் சாற்றினான் — மிக்குவந்தே
ஆரியன் காளை ஹஸனலி யென்பான்றேன்
மாரி வருடிக்கும் வாறு.

சாற்று கவியாக அமைந்துள்ள ஆசிரிய விருத்தப்பா ஆசிரியரின் மூதாதையர் மிஸ்றுநகரைச் சார்ந்தவர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அந்தச் செய்யுளின் ஒரு பகுதி இங்ஙனம் அமைந்துள்ளது:

.........................
எப்பொருட்டும் நற்றவப் பொருட்கொப்பியே
எழில் மிஸ்று நகரின் வெளியாய
எல்லாம மைத்திரவும் படி மீதளிக்கும்பா
மிணையற்ற கடவுளருளால்
..............................

இங்கே மிஸ்று என்பது எகிப்தைச் சுட்டிநின்றது. பஞ்சரத்தினத் தாலாட்டில் ஐந்து தாலாட்டுப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. அவை யாவன: 1. உடற்கூறறியுங் ஞானத் தாலாட்டு, 2. பாத்திமா நாச்சியார் (பாத்திமா (றலி) அவர்கள் பேரில் சுகானந்தத் தாலாட்டு, 3. முகியத்தீன் ஆண்டவர்கள் பேரில் மணிமந்திரத் தாலாட்டு, 4. ஷாஹுல்ஹமீதாண்டவர்கள் பேரில் மீரான் தாலாட்டு, 5. பாலர் களுக்கு வாழ்த்தக் கூடிய பாலகர் தாலாட்டு.

ஞானத்தாலாட்டு எவ்வாறு பாடப்படல் வேண்டும் என்பதையும் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். அது வருமாறு,

ஆரிவரோ எவரோ அகத்தூள் ஆயாதவ ரெவரோ
ஆரிவரோ அறிவாய் விபரம் அறிந்தே யுறங்கி முழி

இந்த ஞானத் தாலாட்டில் உடலின் கூறுகளை அறியும் ஞானம் பொருந்தியிருப்பதைக் காணலாம். இத்தகைய ஞானத்தாலாட்டுப் பாடல்கள் முஸ்லிம் அல்லாத சித்தர்களாலும் பாடப்பட்டிருப்பதைக் காணலாம். பட்டினத்தடிகள் பாடிப்போந்த உடற்கூற்று வண்ணம் என்னும் பாடலுடன் காளை ஹசனலிப் புலவரால் இயற்றப்பட்ட உடற்கூறறியும் ஞானத் தாலாட்டு ஒப்பு நோக்கற்பாலது. பட்டினத் தடிகளின் உடற்கூற்று வண்ணம் சித்தர் ஞானக்கோவையில் இடம் பெற்றுள்ளது. இந்த ஞானத்தாலாட்டுப் பாடலில் காப்பியங்களில் கடவுள் வாழ்த்தில் கூறப்படும் குறிப்புக்கள் இடம் பெற்றிருக்கின்றன. ஒரே கண்ணியில் நான்கு கலீபாக்களையும் குறிப்பிட்டுப் பாடப்பட்டுள்ளது.

வள்ள லபூக்கரினுமறின் மன்னுதுமானலியின்
றெள்ள வருள் பொருட்டால் திக்நடனெப் பொதுமுறங்கிமுழி

ஒருமனிதனின் கண்கள் அவனுக்கு இன்றியமையாதது. அத்த கைய கண்ணைக் கண்ணுக்குள் எதுவும் செல்லாமல் பாதுகாப்பது கண்இமை. கண்ணை இமை காப்பது போல் ஒருவன் தன்னைக் காப் பாற்றிக் கொள்ளவேண்டும்.

ஒருவனுக்குப் பற்பல எண்ணங்கள் ஏற்படலாம். அத்தகைய எண்ணங்களிலே தத்தளித்துவிடக்கூடாது. அச்சிந்தைகளில் மூழ்கி விடாது அல்லாஹ்வை எப்பொழுதும் தியானித்துக் கொண்டிருத்தல் வேண்டும். அத்தகைய ஒழுக்கத்தின் முக்கியத்துவத்தை ஒரு கண்ணியில் இவ்வாறு கூறி உள்ளார் ஆசிரியர்.

கண்ணுக் குள்ளே யணுகா தெல்லத்தையுங்
காக்கு மிமையது போ
லெண்ணுக்குள்ளே மறைவேயுரும்
இறையுடம் தூங்கிமுழி,

பட்டினத்தடிகள் தமது உடற்கூறறியும் வண்ணத்தில் குழந்தைகள் பால் உண்ணுவதை 'மட மயில் கொங்கை யமுத மருந்தி' எனக் குறிப் பிட்டுள்ளார். ஏறத்தாழ இதே கருத்தில் வேறு சொற்களில் அசனலிப் புலவர் பின்வரும் கண்ணியில் அமைத்துப் பாடியுள்ளார்.

இல்லெனுங் கொங்கையிலே பொருதி நல்
லின்புறும் பாலமுதை
சொல்லெனும் வாயசைத்துக் குடித்துச்
சுகித்தே யுறங்கிமுழி.

துணி நெய்வதற்குப் பஞ்சு இன்றியமையாதது. பஞ்சினை ஒருவரும் பொருட்படுத்தாவிட்டால் அது வீணாகிவிடும். அந்த நிலையில் பஞ்

சினால் அடையும் நன்மை கிட்டாது. நல்ல முறையிலே பதம் பண்ணிப் பஞ்சை துணியாக மாற்றினால் அது பெரும் பயனளிக்கும். பஞ்சாக இருந்தது தான் துணியாக மாறும். அதேபோன்று நெஞ்சுக்குள்ளேயும் பொருள்கள் உண்டு. நெஞ்சிலே பலவிதமான எண்ணற்ற எண்ணங்கள் உறைந்திருக்கும். அந்த எண்ணங்கள் நன்கு பயன்படுத்தப்படல் வேண்டும். அந்த எண்ணங்கள் பொருட்படுத்தப்படா விட்டால் அந்த எண்ணங்களால் ஒரு பயனையும் அடையமுடியாது. எண்ணங்களைப் பதப்படுத்தினால் மட்டுமே அவற்றினால் நன்மை விளையும். நெஞ்சுக்குள்ளே உள்ளவற்றை நிலையாக்கி அதாவது ஒரு மனத்தனாய் நடந்தால்மாத்திரமே வெற்றி தானாக வரும். இக்கருத்துக்கள் ஞானத் தாலாட்டில் உள்ள கண்ணியில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது:

பஞ்சுக்குள்ளே யுறைந்த துணியின்
பலன்பெறும் பாவனைபோல்
நெஞ்சுக் குள்ளே யுறைந்த பொருளை
நிலைப்பித்துறங்கிமுழி.

இந்நூலில் இடம்பெற்றுள்ள ஒவ்வொரு தாலாட்டுக்கும்ஒவ்வொரு காப்புச் செய்யுள் அமைந்துள்ளது. நபி நாயகம் (சல்) அவர்களின் மகளாராகிய பாத்திமா (றலி) நாயகியின் பேரில் பாடப்பட்ட அடுத்த தாலாட்டுப் பாடல் சுகானந்தத் தாலாட்டு என வழங்கப்படுகிறது. அந்தக் காப்பு விருத்தத்தில் சுகானந்தத் தாலாட்டுப் பாடினால் துயர் அறுந்து விடும் என ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். அந்த வகையில் தமக்கு உதவி செய்து பாதுகாப்பளிக்குமாறு ஆசிரியர் வேண்டி உள்ளார். அந்தக் காப்பு விருத்தம் இங்ஙனம் அமைந்துள்ளது:

முகா னந்த ஒளிவு வீசும் முகம்மது நபியுல் லாவின்
அகா னந்த மகளாய் வந்த அருளன்னைபாத்தி மாமேற்
சுகா னந்தத் தாலாட் டென்னும் துயரறுங் கவியைப் பாட
மகா னந்தக் கிருபை செய்யுமன்னா நீயே காப்பு

சுகானந்தத் தாலாட்டில் உள்ள எல்லாக் கண்ணிகளும் பாத்திமத்தே என முடிகிறது. உம்மிடத்தே இப்போது வந்தாலும் தப்பாது உதவி செய்யும் பாத்திமத்தே என ஒரு பாடலில் இவ்வாறு பாத்திமா (றலி) அவர்களை விவரிக்கிறார் ஆசிரியர்.

இப்போ தும்பால் வந்தியம் புமடிமை மனம்போல்
தப்பா துதவி செய்யும் தாயான பாத்திமத்தே.

யாராவது ஒரு பிள்ளையை அடிக்கப்போனால் அந்தப் பிள்ளை அந்த அடியிலிருந்து தப்புவதற்காக அதன் தாயிடம் ஓடி ஒளித்துக் கொள்கிறது. அதுபோல் தானும் பாத்திமா (றலி) அவர்களிடம் தஞ்சம்

புகுந்துள்ளதாக ஆசிரியர் கூறி தமக்குப் பாதுகாப்பு அளிக்கும்படி கோருகிறார். இதுதான் அந்தக் கண்ணி

ஆரு மடிக்க வந்தால் அன்னை முந்தி மீதில் மக்கள்
சேரு மதுபோற் புகுந்தேன் செய்யிதத்தே பாத்திமத்தே.

அடுத்தடுத்து வரும் மூன்று கண்ணிகளில் ஆசிரியர் பூக்களின் பெயரைக் கூறி பாத்திமா (றலி) அவர்களை விவரிக்கிறார். தமக்குக் கை தரும்படியும் கை தந்தால் விடுதலை பெறமுடியும் என்றும் கூறுகிறார். கண்ணிகள் வருமாறு.

பெருக்குறுந் தேனார் மலரே பிச்சி மலரே இறக்கும்
மருக்கொழுந் தேறை ஹாமே மாதா வேபாத்திமத்தே
முண்டக மலரே முகிழ் விரிந்த சண்பகமே
தொண்டகம் நிறைந்த துரைம களே பாத்திமத்தே
ஓயாப்பரிமள மேயுச்சிதமாம் பொக்கிஷமே
காயாப் பழச் சுவை யேகை தருவீர் பாத்திமத்தே

இந்தப் பகுதியில் கடைசிக் கண்ணியில் இந்தத் தாலாட்டுப் பாடலைப் பாடிய தமக்கும் இதனைப் பாடுவோர்க்கும் கேட்போருக்கும் ஆபத்துக்கள் வராமல் காப்பீர்களாக என பாத்திமா நாயகியிடம் வேண்டுகிறார் ஆசிரியர். தமது பெயரையே கண்ணியில் குறிப்பிடுகிறார். இந்தப் பாடல்களைப் படிப்போர் என்று கூறவில்லை. இந்தப் பாடல்களை ஓதுவோர்க்கு பாதுகாப்பு அளிக்குமாறு வேண்டுகிறார். அல்குர்ஆன் அல்லது அது போன்றவற்றையே முஸ்லிம்கள் ஓதுவார்கள். அங்ஙனமே இந்தப் பாடலும் ஓதுவதற்காகவே இயற்றப்பட்டது எனக் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர் இவ்வாறு :

ஆதுரங் களண்டா மலசனலிக்கு மிக்க வியை
ஓதுவர்க் குங்கேட் பவர்க்கு முதவி செய்யும் பாத்திமத்தே

பஞ்சரத்தினத் தாலாட்டின் மூன்றாவது தாலாட்டு மணிமந்திரத் தாலாட்டு. இது முகியத்தீன் ஆண்டகை பேரில் பாடப்பட்டது. இங்கும் ஒரு காப்பு - விருத்தம் தரப்பட்டுள்ளது. அதுவருமாறு :

திருவெனும் பொருளாய் வந்த செய்யிது நபியுல் லாவின்
கருவெனும் புகழ் தோங்கும் கவ்தெனு முஹியித் தீன்மேல்
மருவெனும் பலன்க ளேறும் மணிமந்த ரதா லாட்டோத
அருவெனும் பொருளாம் றப்பில் ஆல மீன்துணை செய்வாயே.

மணிமந்திரத் தாலாட்டிலும் அம்மானைக் கண்ணிகளே இடம் பெற்றுள்ளன. இது முகியத்தீன் அப்துல்காதிறு ஜீலானி (ரலி)

அவர்கள் பேரில் பாடப்பட்டுள்ளது, கண்ணிகளின் இறுதியில் முகியத்தீனே! என வந்துள்ளது. தொழில்களைப் பொறுத்தவரையில் வெறும் பாகுபாடு காட்டக்கூடாது. ஒன்று உயர்ந்த தொழில் மற்றது தாழ்ந்த தொழில் என வித்தியாசம் பாராட்டக்கூடாது. எல்லாத் தொழிலும் இலகுவானவை. எல்லாராலும் செய்யக்கூடியவை என்ற மனப்பான்மையை வலியுறுத்துவது போன்று இங்குள்ள ஒரு கண்ணிப் பாடல் அமைந்துள்ளது : அதுவருமாறு :

எந்தத் தொழில்களுமி லேசென வேயான் புரியச்
சொந்தப் பெலன் தந்தரு ளும் செய் குமுகியத்தீனே

மற்றொருபாடலில் தமக்குக்கண்ணேறும் நாவேறும் வேறு நோய்களும் தம்மை வந்தடையாமல் தம்மைக் காப்பாற்றும்படி ஒரு கண்ணியில் ஆசிரியர் முகியத்தீன் ஆண்டவரை வேண்டி உள்ளார் இவ்வாறு:

கண்ணேறுநா வேறுங் கண்டு ளோர் நீங்கிடவே
பண்ணேறுநல்லு தவிபண்ணு முஹியதீனே.

இறுதிப் பகுதியை அடையும்பொழுது ஆசிரியர் தம்மைப் பற்றியும் தம் குடும்பத்தைப் பற்றியும் சிந்திக்கிறார். வாழவேண்டிய மரபு ஒன்று உண்டு. அந்த மரபு வழுவாமல் ஒழுகுவதையே ஆசிரியர் விரும்பு கிறார். மனைவி மக்கள் முதலான குடும்பத்தவருடன் நல்ல முறையில் ஒழுகி வாழவே விரும்புகிறார். அங்ஙனம் வாழ்வதற்குத் தம்மை வளர்க்கும்படி முகியத்தீன் ஆண்டகையிடம் கேட்டு நிற் கிறார் ஆசிரியர். அந்த வேண்டுகோள் அமைந்த கண்ணி வருமாறு :

மனைவி முதன்மக்க ளுடனன் பொழுகி வாழ்ந்தி டவே
எனைவி ருத்தி யாக்கு மையா எங்கள் முஹியத்தீனே

அடுத்து இடம் பெற்றுள்ளது மீறான் தாலாட்டு, இது நாகூரில் அடங்கி இருக்கும் சாகுல் கமீது ஒலி அவர்களின் பேரில் பாடப்பட்டுள் ளது. மீறான் சாகிபு என நாகூர் ஆண்டகை அவர்கள் வழங்கப்படுவ தால் அவர்கள் பேரிலான தாலாட்டுப் பாடலுக்கு மீறான் தாலாட்டு என்றே அதன் ஆசிரியர் காளை ஹசனலிப் புலவர் பெயரிட்டுள்ளார்.

மீறான் தாலாட்டில் காப்புச் செய்யுள் அமையவில்லை. ஆனால் ஏனைய தாலாட்டுப் பாடல்களில் இடம் பெற்றுள்ளதுபோல் மீறான் தாலாட்டிலும் ஒவ்வொரு கண்ணியிலும் இறுதியில் 'மீறானே' என்பது வந்துள்ளது. நாகூர் ஆண்டகையின் வாழ்க்கையும் வீரதீரச் செயல்

களும் மீறான் தாலாட்டில் பாராட்டப்பட்டுள்ளன. அவர் தம் பிறப் பிடமாகிய மாணிக்கப்பூரை இவ்வாறு குறிப்பிடுகிறார்.

பாணிக்கப் புல்லாப் பழஞ்சொரியுங் காலணிந்த
மாணிக்கப் பூரிற்பிறந்த மன்னரொலி மீறானே.

ஒரு பாத்திரத்திருந்த பாலை அனைவரும் குடித்தபின்னர் கூட பாத்திரத்தில் அந்த அமுதினைப் பெறக்கூடியதாக அமைந்தவர் சாகுல் கமீதோலி என்பது,

கோயிலமு தத்தைப் பக்கீர்க் கூட்டமுண்டபின் குடத்தின்
வாயிலமு தைக்காண்க வைத்த வொலி மீறானே.

என வந்துள்ளது. மற்றொரு கண்ணிப் பாடலில் தரை தட்டிய ஒரு கப்பலை மீளவைத்த பெருமை சாகுல் கமீதொலி நாதரைச் சாரும் என ஒரு கண்ணியில் இங்ஙனம் பாடியுள்ளார்.

மேட்டி லுற்ற வங்கமதை மீட்டவுங் களினிடத்தை
நீட்டிற னைவுற்றிருந்த நேசவாளி மீறானே.

மற்றொரு கண்ணியில் தம்மை வாடும் பயிராகவும், நாகூர் ஆண்ட கையை மழைக்கும் உருவகித்துள்ளார் ஆசிரியர். வாடும் பயிர்களுக்கும் மழைபோல தாம் நாடியவற்றை அன்பாய் அருளும்படி நாகூர் ஆண்ட கையிடம் வேண்டி நிற்கிறார் ஆசிரியர். அந்த கண்ணிப் பாடல் இங்ங னம் அமைந்துள்ளது:

வாடும் பயிர்களுக்கு வாய்க்கு மழைவருவது போல
நாடும் பயிறகண் பருளு நண்பொளி மீறானே.

பஞ்சரத்தினத் தாலாட்டின் ஐந்தாவது தாலாட்டுப் பாடலாக அமை வது பாலகர் தாலாட்டாகும். இது உண்மையிலேயே பாலகர்களைப் பாராட்டிச் சீராட்டி ஆராட்டிப் பாடும் தாலாட்டுப் பாடலாக அமைந் துள்ளது. இந்த பஞ்சரத்தினத் தாலாட்டில் முதலாவதாக அமைந்த உடற்கூறறியும் ஞானத் தாலாட்டில் இடம் பெற்றுள்ளது போல பாலகர் தாலாட்டின் ஒவ்வொரு கண்ணியிலும் இறுதியில் உறங்கிமுழி என்பது வந்துள்ளது. காப்புக்கண்ணியாக அமையும் கண்ணியை அடுத்து பாலகரை ஆண்டருளும்படி கேட்கப்படும் கண்ணியாக வந் துற்றது. அது இவ்வாறு அமையும்.

ஆரிரரோ ஆரிவரோ ஆரிவரோ ஆரிவரோ
ஆரிவரோ ஆண்டவன் தந்தாண்டருளும் பாலகரே.

பாலகர் தாலாட்டில் குழந்தையின் பெருமையே பேசப்படுகிறது. அவர்களே புகழப்படுகின்றனர். கடவுள் வாழ்த்துக்களில் புகழப்படும் புண்ணியவான்கள், இந்தக் கண்ணியிலும் போற்றப்படுகின்றனர். நான்கு கலீபாக்களின் ஆசீர்வாதம் குழந்தைகளுக்கு இவ்வாறு பெறப் படுகிறது.

உண்மை யபூபக்கரும றுதுமான லியார்
வண்மை யருளா லெனது பாலா உறங்கிமுழி.

இதே போன்று இறைநேசச் செல்வர்களுள் பலர் பல கண்ணிகளில் குறிப்பிடப்பட்டு பாலகர் மீது அருள் சொரியுமாறு கேட்டுள்ளார் ஆசிரியர். எல்லா இறைநேசர்களையும் ஒட்டுமொத்தமாக வேண்டும் கண்ணி இங்ஙனம் வந்துள்ளது.

எல்லா வொலியு முன்மே லீடேற் றஞ்செய் வதற்கு
அல்லாஹ் உதவி செய்வா னழகா யுறங்கிமுழி.

மற்றொரு கண்ணிப்பாடலில்

பன்னீர் மலரே பரிமளிக்குஞ் சண்பகமே
யென்னீர் விழியாரியல்லை யுறங்கிமுழி.

என மலர்கள் சுட்டப்பட்டுள்ளன. இன்னொரு பாடலில் பாலகரைச் சிரிக்குமாறு கூறுகிறார் ஆசிரியர். மூடியிருக்கும் சிவப்பு நிறமான கொண்டலென வழங்கும் இதழை நீக்கினால் உன் முகம் சிரிக்கும். அழும்பொழுது உதடுகள்நோவும், ஆகவே ஒரு கண்ணியில் பாலகனைச் சிரிக்கும் படியும் அழாமல் இருக்குமாறும் இங்ஙனம் பாடப்பட்டுள்ளது.

செவ்விதழை நீக்கிச் சிரித்தாலி ருளழிந்திடும்
அல்லியிதழ்கள் நோக அழாமலே உறங்கிமுழி.

அங்ஙனம் தூங்கிமுழித்தவுடன் பாலகன் பசியினால் அழுதால் பால கனுக்குப் பாலூட்டப்படும். அத்தகைய நிலைமை அமையப்பாலகனை தூங்கி முழிக்கும்படி ஆசிரியர் 'வெறொரு கண்ணியில் இவ்வாறு வேண்டுகிறார்.

பசித்தழு தாயென் றுனக்குப் பாலூட் டித்தா லாட்டும்
விசித்திர மாந்தொட் டிலிலே வெண்மணியே தூங்கி முழி.

மற்றொரு கண்ணியில் மலர்கள் இங்ஙனம் அமையப்பாடப் பெற் றுள்ளன.

பிச்சி மலரே பிரிய முள்ள மல்லி கையே
வச்சி முல்லை மலரே வாழ்வா யுறங்கி முழி.

இத்தாலாட்டுப் பாடல்கள் போன்றே அறபுத் தமிழில் எழுதப்பெற்ற தாலாட்டு நூல்களும் உண்டு. அத்தகைய தாலாட்டுப் பாடல்களுள் ஒன்று மஅரிபத்தின் தாலாட்டு என்பதாகும். இதனைத் தென் காசியைச் சேர்ந்த செய்து அப்துல் காதிரு லெப்பை ஆலிம் சாகிபு அவர்கள் இயற்றி உள்ளார். இங்கும் ஞானமே முக்கியமான பொருளாய் அமைந்துள்ளது 'சாதகம் பார்த்தல்' முஸ்லிம்களுக் குரிய பாரம்பரியம் அன்று. எனினும் அத்தகைய 'சாதகத்தில்' நம்பிக்கை வைத்தால் முஸ்லிம் மக்களின் புத்திகெட்டுவிட்டும் என்பது அதன் கருத்தாகும். எனவே முஸ்லிம் மக்கள் சாதகம் பார்ப்பதில் நம்பிக்கை வைக்கக் கூடாது என்று வலியுறுத்துகிறது ஆசிரியரின் ஒரு கண்ணி. அது இவ்வாறு அமைந்துள்ளது.

மித்திர பேதத்தால் மிகவும் மருட்டி விடும் சாதகத்தால்-உன்தன்
புத்தியைப் போக்கிவிடாது றங்கிப் பொருந்திக் கொள் ஆராரோ

வஸீலா என்னும் துஆத்தாலாட்டு மாலை மற்றொரு தாலாட்டுப் பாடல். இது அரபுத் தமிழில் உள்ளது. இது ஹாஜ்ஜுல் ஹறமை னிச்சறபைன் அப்துல் ஹமீது இப்னு முகம்மத் என்பவரால் இயற்றப் பட்டுள்ளது. இவர் பற்பலியைச் சேர்ந்தவர். ஸெய்லானில் பர்பலி உள்ளது. இஙகே பர்பலி என்றது வேர்விலை. ஸெய்லான் என்றது இலங்கை. அரபுத்தமிழ் நூல்கள் பலவற்றில் வேர்விலை பர்பலி என்றும் இலங்கை ஸைலான் என்றுமே குறிப்பிடுவதை நாம் இன்றும் காணக் கூடியதாய் இருக்கின்றது. பல்லவி, சரணங்களைக் கொண்டு உள்ளது இந்த துஆத் தாலாட்டுமாலை. இறைவனிடம் குறை இறங்குவதையே அரபில் துஆ என்பர். இந்த துஆ தாலாட்டுமாலை யின் பல்லவி இங்ஙனம் அமையும் என்பது சுட்டப்பட்டுள்ளது:

ஆராஞ்சல்லி சலாம் ஆலநபிக்கும் கிளைக்கும்
ஆரார தோழருக்கும் ஆராரோ ஆராரோ

இந்த துஆ தாலாட்டு மாலையில் பல கண்ணிப் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் ஒன்று இவ்வாறு அமைந்துள்ளது:

வம்பொன் றணுகா துமறை யதனை ஓதுதற்கு
உம்பர் பொருட்டிலே உயர் தக நித்திரைசெய்.

கண்ணிப்பாடல்கள் கண்வளராய், நித்திரைசெய் என்பனவற்றைக் கொண்டு முடிகின்றன. அடுத்தடுத்து வரும் கண்ணிகளில் பெரியார்கள் வாழ்த்தப் பட்டுள்ளனர். அவற்றுள் சில இவ்வாறு அமைந்துள்ளன.

பாணந்துறை நகரில் பள்ளிமுல்லையில் வாழும்
புண்யர் வலி பொருட்டால் பதியேகண்வளராய்
களுத்துரை நகர் வாழும் கருணை செய்கு நூறுத்தீன்
காமிலொலி பொருட்டால் கிருபை மகன் நித்திரைசெய்

மக்கன் நகரில் வாழும் மன்னர் இஸ்மாயில்லரி
மிக்க துஆப்பேறால் மேதினியில் கண்வளராய்
சீர்பெறும் சீனங்கோட்டை குட்டிமலையில் வாழும்
சய்துஜலால்ஜமால் வலிபொருட்டால் நித்திரைசெய்

கச்சிமலை உச்சிதனில் வாழும் சைது அஷ்ரப்வலி
பச்ச முடையோர் பொருட்டால் பார்த்திபனே கண்வளராய்
மருதானை வேர்விலையில் மஸ்ஜிதுக் கருகாமையில்
சைது சிஹாபுத்தீன் வலி பொருட்டால் நித்திரைசெய்

மாளிகாச் சேனை யெனும் தக்கியாவிலே அடங்கும்
சைகு முகம்மது வலி பொருட்டால் கண்வளராய்
பழையதெரு வேர்வில பார்த்திபராய் வாழும்
பக்தர் இஸ்மாயில் வலி பொருட்டில் நித்திரைசெய்

அல்காமம் சீனாதுறை மலிகிப்னுதீனார் வலி
அண்ணல் துஆ பேரால் அருமைமகன் கண்வளராய்
தெருவீதியில் வாழும் சைது ஹஸருருப்னு
மஃதூம் வலிபொருட்டால் மாமதியே கண்வளராய்

வல்துறை நகர் வாழும் வல்ல சைது அலாவுத்தீன்
வல்லோன் வலிபொருட்டால் வரிசை மகன் கண்வளராய்
காலி தனாவலிலையில் காரணர் வலி பொருட்டால்
தாலிதமே உகந்து தாரணியில் நித்திரைசெய்.

கிருந்தை நகர் வாழும் கிருபையுள்ள சாகுல்ஹ மீது
காமில் வலிபொருட்டால் கற்பகமே நித்திரைசெய்
போர்வை நகர் வாழும் பக்கர் முகியத்தீன்
புண்யர் வலி பொருட்டால் வரிசை மகன் நித்திரைசெய்.

இன்னும் பல தலங்களும் அவற்றில் அடங்கப்பட்டிருக்கும் இறைநேசச் செல்வர்களும் குறிப்பிடப்பட்டு அவர்கள் அனைவர் பொருட்டாலும் மகனைக் கண்வளரும்படியும் நித்திரை செய்யும் படியும் ஆசிரியர் வேண்டி உள்ளார். பல கண்ணிகளில் ஆசிரியர் குழந்தைக்கு ஏதும்

துன்பம் ஏற்படுகிறதோ என்று கேட்கும் பாணியில் கருத்துக்கள் வந்துள்ளன. பல பூச்சிகளைக் குறித்து இங்ஙனம் ஒரு கண்ணியில் ஆசிரியர் கேட்கிறார். இந்த பூச்சிகளால் நோவினை ஏற்பட்டதோ என வினவுகிறார் ஆசிரியர்.

சிற்றெறும்பு வண்டு கொசு சேழ் மூட்டை பேன் கரையான்
துத்தினதுவோ உன்தனக்கு குலக்கொழுந்தே நித்திரைசெய்.

ஆசை வார்த்தைகளைக் கூறி இனிமையான பொருள்களைக் குறிப்பிட்டு தாலாட்டுப்பாடும் ஆசிரியர் அதனை இங்ஙனம் தந்துள்ளார்.

கன்னலெனும் கரும்பே கற்கண்டே சர்க்கரையே
இன்பமுறு முக்கனியே என்மகனே நித்திரைசெய்
செந்தாமரை மலரே செவந்தி குங்கும மலரே
நந்தா வனத்தானை நன்மலரே கண்வளராய்

முல்லை மலரே முகக்களல செண்பகமே
மல்லிகை யெனும் மலரே மகனே நீ கண்வளராய்
பொன்னே இரத்தினமே புனைகின்ற ஆணிமுத்தே
மன்னர் முடி தாழ்த்தும் மாமணியே நித்திரைசெய்

செம்பவளக் கொம்பே சிறந்த வைடூரியமே
கம்பமறும் நல்வயிரக் கல்லே நீ கண்வளராய்
தூண்டா மணிவிளக்கே சுடர் மிகுந்த சந்திரனே
காண்போர் மனமகிழும் கண்மணியே நித்திரைசெய்

இங்ஙனம் பல கண்ணிகளில் மகனைக் கண்வளராய் என்றும் நித்திரை செய் என்றும் ஆசிரியர் பாடி உள்ளமை அவருடைய சொல்லாட்சியை எடுத்துக்காட்டிக் கொண்டிருக்கிறது. ஆனால் சில கண்ணிகளில் எதுகை, மோனை நயம் அமையாமலிருப்பது ஒரு பெருங் குறையாகக் காணப்படுகிறது.

ஆசிரியர் யார் என்று அறியப்படாத ஒரு தாலாட்டுப் பாடலும் உள்ளது. அந்தத் தாலாட்டுப்பாடல் பிள்ளைத் தாலாட்டு என அழைக்கப்படுகிறது.

தேனமுதே பாலமுதே தெவிட்டாத தெள்ளமுதே
பான்மை உரைக்க வொண்ணாப் பாலகனே நித்திரைசெய்

இது போன்ற பல தாலாட்டுப் பாடல்கள் அங்கு காணக் கூடியதாக இருக்கின்றது.

ஆல்போல் தழைத்து அரசதுபோல் வேரூன்றி வாழ்வாயாக என்று பாலகனைத் தாலாட்டும் பாடலையும் இந்த ஆசிரியரே பாடியுள்ளமை ஈண்டு நோக்கற்பாலது.

முத்துப்பேட்டை மதுரகவி செய்கப்துல்காதிருப் புலவரால் இயற்றப்பட்ட பயஹாம்பர் அவதாரப்பலவண்ணச் சிந்து என்னும் நூலிலும் ஒரு தாலாட்டுப் பாடல் இடம்பெற்றுள்ளது. அது தாலாட்டுத்தரு (தாலாட்டுப்பாடல்) என்றும் ஆனந்த பைரவி தாளத்தில் ஆதி தாளத்துடன் பாடக் கூடியது என்றும் ஆசிரி.யர் குறிப்பிட்டுள்ளார். சொற்கட்டைக் கொண்டே ஆசிரியர் தாலாட்டுப் பாடலைத் தொடங்கி உள்ளார். அந்தச் சொற்கட்டு இவ்வாறு அமைந்துள்ளது.

ராரிரி ராராரோ- என்கண்மணியே
ராரிரி ராராரோ-நான்பெற்ற மகனே
ராரிரி ரோ ராராரோ ராரிரிராரோ ராரிரிரோ ராராரோ

இந்தச் சொற்கட்டுக் கமையப் பாடவேண்டிய ஈரடிக் கண்ணிகள் ஒவ்வொன்றும் ஆராரிராரா ரோ என முடிகிறது. அங்கு இடம் பெற்றுள்ள சில கண்ணிகள் இதோ

முந்தியிருளா யிருந்தோன்-உன்மகிமை நிறைந்து
முச்சுடரிலே பகிர்ந்து ஆராரிரிரோ.
கிந்தில்வடி வாயிருந்து அல்ஹம் தெனுஞ்சொல்
கிருபையனேகங்க ளமைந்து-ஆராரிரிரோ
அந்தமதி லாகியதம்-நபி முதுகில்
அனேக நெடுநாளம்பது-ஆராரிரிரோ

சீனிக்காதிறு முகியத்தீன் புலவரின் நலநிகரதி நவாலங்காரச் சிந்து என்னும் நூலில் இடம் பெற்றுள்ள தாலாட்டுப்பாடல் வேறு விதமாக அமைந்துள்ளது. பாசிப் பட்டணத்து நயினார் முகம்மது ஒலியுல்லா பேரில் பாடப்பட்டது அந்தத் தாலாட்டுப் பாடல். புன்னாக வராளி இராகத்தில் சாப்புத் தாளத்தில் பாடக்கூடியதாக அந்தத் தாலாட்டுப் பாடல் அமைந்துள்ளது.

பெற்ற பொருளைப் பெருமையாத் தொட்டிலி
லொலியே யென்ற னொலியே
முற்ற துணையென்றே யுண்மையாக வைத்தே
யொலியே யென்ற னொலியே
......................
......................

ஆர்க்கு முபகா ரராடிய தொட்டிலி
லொலியே யென்ற னொலியே
......................
......................
தாலாட்டித் தொட்டிலிலி ராவும் பகலுமே
யொலியே யென்ற னொலியே-யம்கைச்
சீராட்டி முத்தமுர் சிதேவி கொஞ்சலே
யொலியே யென்ற னொலியே.

மகுமூது இபுறாகிம் லப்பை கலிபா சாகிபு அவர்களால் இயற்றப் பட்ட ஒலிநாயகரவதாரச் சிந்து என்னும் நூலில் நாயகரைத் தாலாட்டல் என்னும் ஆதிதாளத்துடன் பாடக்கூடியதாக இயற்றப் பட்டுள்ளது. அந்தத் தாலாட்டுப் பாடலிலும் சொற்கட்டு முதலில் வந்துள்ளது. முகியித்தீன் ஆண்டகையைப் பாடும் அந்தப் பாடலின் சொற்கட்டும் சரணங்களும் இவ்வாறு அமைந்துள்ளது.

ரா-ரா-ரா-ரா-ரா-ரி-ரோ-ரரி
ரா-ரா-ரா-ரா-ரீ-ரோ
வல்லோ னருள் சேருங் குருவே-நல்ல
மதியே நிதியே பரகதியே
நல்லா ரிறசூல் திருப்பேரா-வருள்
நயஞ்சேர் மகவே கண்வளரீர்

முகியத்தீன் ஆண்டவர் அவர்களின் அற்புதச்சாதனைகள் இந்தக் தாலாட்டுப்பாடலிலே இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

வீட்டுக்குத் திருட வந்தவனை அந்த இடத்திலே வைத்துவதைத்த பெருமை முகியத்தீன் ஆண்டகையைச் சாரும் என்பது

மனையிற் றிருட வருவோரை - அவண்
வதைத்த திறமை யுடையோரே
வினையைத் துடைக்க வருமகவே-புவி
வேந்தே கனியே கண்வளரீர் (ராரா)

என வந்துள்ளது. காணாமற் போன மகனைக் கண்டு பிடித்து ஒப்படைத்த பெருமை முகியத்தீன் ஆண்டகையைச் சாரும். அதுவே இங்ஙனம் பாடப்பட்டுள்ளது.

பால னிற்றி யனு தினமும் - புவி
பாரம் பமுமே படும்போது
சீல மிகுந்த தகலாசை - யதைத்
தீர்க்க வந்தோய் கண்வளரீர். (ராரா)

அடுத்தடுத்து வரும் மூன்று தாலாட்டுப் பாடல்களில் அவரது பலவித மான பெருமையும் பேசப்படுவதைக் காணக்கூடியதாக இருக்கிறது. அவைவருமாறு:

திருவேகருவே பேரொளியே - நல
தேனே கோனே திருமகவே
மருவே விரிவே மகுபூவே - கன
வரமே திறமே கண்வளரீர் (ராரா)

நலமா மணியே யணியணியே - நல
நயமே சுயமே நாயகமே
சுவனார் மணியே யுலகணிய - வருந்
துரையே விரையே கண்வளரீர் (ராரா)

வேதா போதா நவநீதா - நல
வித்தே சித்தே யொளிர்முத்தே
நீதா நாதா மலர்ப்பாதா - வரு
நெறியே குறியே கண்வளரீர்.



# ஏசல்

மக்கள் வழக்கில் பயன்படுத்தப்படும் மற்றொருவகைச் சிற்றிலக்கியம் ஏசல் என்பதாகும். தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் இதுவும் ஒன்று. ஏசல் என்ற பதமே பொதுவழக்கில் பரவலாகப் பயன்படுத்தப்படும் ஒரு சொல். தமிழ் பேசும் மக்களுள் சிலர் ஏசல் என்னும் கருத்தில் பேசல் என்பதையே பயன்படுத்துவர். 'அவன் என்னைப் பேசிவிட்டான்' என்று கூறும் பொழுது உண்மையிலே 'அவன் என்னை ஏசிவிட்டான்' என்பதே அதன் பொருள். இங்ஙனம் பேச்சு ஏச்சாவதும் உண்டு. ஆனால் ஏசல் என்பது ஒருபோதும் பேசல் என்பதைச் சுட்டாது. எனவே ஏச்சு பேச்சாகாது.

ஒருவன் மற்றொருவனுடைய குற்றங்களைச் சுட்டிக்காட்டி மற்றவனின் உளம் நோகக் கூறுவதையே ஏசல் என்பர். அதுவே ஏச்சாக வரும். அதே போன்று ஒருவன் தன்னிடம் உள்ள குற்றங் குறைகளைச் சுட்டிக் காட்டும் பொழுதும் அவன் மனம் வருந்தி அவ்வாறு சுட்டிக்காட்டியவனைத் திட்டுவான். இதுவும் ஏசல் என்றே அழைக்கப்படுகிறது.

தமிழ் இலக்கியத்திலே வழங்கப்படும் பள்ளுப் பாடல்களிலே இத்தகைய ஏசல் அதன் ஓர் அமிசமாக அமைந்து விடுகிறது. பள்ளுப் பாடலில் வரும் பாத்திரங்களான மூத்த பள்ளியும் இளைய பள்ளியும் ஒருவரைத் தாக்கிப் பேசுபவர். அவ்வாறு தாக்கும்பொழுது பள்ளியர் இருவரும் ஒருத்தர் மற்றவருடைய சமயச்சார்பினைக் கண்டித்து உரையாடுவர். புகழாப் புகழ்ச்சியாகவும் இது அமைந்து விடுகிறது. இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய பள்ளுப் பாடலில் வரும் பள்ளியர் இருவரும் ஒருத்தி மற்றவளுடைய தனிப்பட்ட பண்பு களையே குறைகூறிகொள்வர். இதுபற்றிய விவரங்கள் இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு முதலாந் தொகுதியில் பள்ளு பற்றிய இறுதி இயலில் இடம் பெற்றுள்ளன.

ஒருத்தர் மற்றவனை ஏசிக்கூறும் கருத்துக்கள் பாட்டாக அமைவதோடு நின்று விடாது அத்தகைய ஏச்சுப் பேச்சு ஒரு சிற்றிலக்கிய பிரபந்தமே உருவாக வழிகோலி உள்ளது. ஆக, ஏசல் என்பது ஒருவர் மற்றவரை ஏசிக் கூறும் பாட்டாக மாறி உள்ளது. ஏசல் பாட்டுக்குப் பொருள் வரையறை இல்லை. எனினும் காதலை அடிப்படையாக வைத்தும் ஏசல் பாடல் தோன்றலாம். அறப் போதனைகளையும் சமயக் கருத்துக்களையும் கொண்டும் ஏசல் பாடல் உருவாகலாம்,

எட்டுகுடி ஏசல், வள்ளி தெய்வானை ஏசல் என்பன, ஏசல் கட்டுக்கோப்புக்கள் அமைய தோன்றியுள்ளவையாகும். அவை காதலையே அடிப்படையாகக் கொண்டுள்ளன போன்று தோன்றினும் உண்மையிலேயே சமயக்கோட்பாட்டுகளும் அறக்கட்டளைகளும் அங்கே பொதிந்திருக்கக் காணலாம். முஸ்லிம் மக்களிடையே பெறு வழக்கைப் பெற்றுள்ள ஏசல் சிற்றிலக்கியப் பிரபந்தங்கள் இஸ்லாமிய சமயக்கோட்பாடுகளையும் ஒழுக்கக் கட்டுப்பாட்டுகளை யுமே விவரிப்பனவாக அமைந்துள்ளன. அத்தகைய இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய ஏசல் பிரபந்தங்கள் தாய்க்கும் மகளுக்கும் இடையே நிகழும் உரையாடலாகவே அமைந்திருக்கும். மெய்ஞ்ஞான சூபி இலக்கியம் தமிழில் படைத்த நல்லிசைப் புலமை மெல்லியர் ஒருவர் தாய்மகன் ஏசல் என்னும் பாடலை இயற்றித் தந்துள்ளார். ஆசிரியர் பெண்பாலாயிருந்தமையினால் அவர் தாய் மகள் ஏசலுக்குப் பதிலாகத் தாய் மகன் ஏசலை உருவாக்கினார் என்று கூறத் தோன்று கிறது.

இங்ஙனம் ஏசல் சிற்றிலக்கிய பிரபந்தத்தில் அமையும் பாடல்கள் எப்பொழுதும் 'உரையாடல் ஆகவே இருக்கும். மகள் தாயிடம் கேள்வி கேட்கிறாள் என்றால் மகள் 'தாயே' என்று வியந்தும் தாய் அக்கேள்வி கேட்டு விடை பகருவதனால் தாய் 'மகளே' என விளித்தும் உரையாடுவர். தாயே, மகளே எனப் பாடலிலும் அமையும் ஏசல் போன்றல்லாது இஸ்லாமிய அறவுரைகளைப் போதிக்கும் பெண் புத்தி மாலை என்னும் சிற்றிலக்கிய நூலில் கேள்வி கேட்பவர் 'மயிலே' என விளிக்கவிடை கூறுபவர் 'குயிலே' என விளிக்க உரையாடல் நிகழ்கிறது. இதே அமைப்பினை தக்கலை பீர்முகம்மது ஆலிம் அப்பா அவர்கள் இயற்றிய ஞானரத்தினக் குறவஞ்சியில் வினாக் கேட்பவரும் விடைபகருபவரும் ஒருவரை ஒருவர் சிங்கீ, சிங்கா என விளிப்பதைக் காணலாம். ஏசல் சிற்றிலக்கிய பிரபந்தத்தில் உரையாடலில் பங்கு பற்றும் தாயும் மகளும் இருவருமே பெண் பாலராய் இருக்கின்றனர். ஆனால் ஞானரத்தினக் குறவஞ்சியில் நடைபெறும் உரையாடல் பெண்பாலாரான சிங்கிக்கும் ஆண்பாலரான சிங்கனுக்கும் இடையே நடைபெறுவதை காணலாம்.

முஸ்லிம் புலவர்களால் இயற்றப்பட்ட பெரும்பாலான ஏசற் பாடல்கள் அப்புலவர்களுடைய ஏனைய பாடல்களுடன் சேர்த்து அச்சிடப்பெற்றுள்ளன. தனிமையாக அவற்றை அச்சிட்டு வெளியிடு வதற்கு அவை போதியனவாக அமையவில்லை.

பீருசா அம்மாள் ஹதீது என்னும் கிரந்தத்திலே தாய் மகள் ஏசல் பாடல் ஒன்று இடம் பெற்றுள்ளது. காயல் நகரைச் சேர்ந்த ஷிகா

புதீன் சாம் என்பவரால் இயற்றப்பட்டது, பீருசா அம்மாள் ஹதீது என்னும் நூல். இந்நூலிலே பீருசா அம்மாள் தமது மகள் நரகத்திலே துன்புறுத்தப்படுவதைத் தான் கனவில் கண்டதாகவும் இதனைப் பெருமானார் (சல்) அவர்களிடம் அவள் முறையிட்டதாகவும் குறிப் பிடப்பட்டுள்ளன. இங்கே நபிகள் நாயகம் (சல்) அவர்களின் பொன் மொழிகள் பல இடம் பெற்றுள்ளன. தோகை மாலை என்னும் பகுதியும் பீருசா அம்மாள் ஹதீதில் இடம் பெற்றுள்ளமையைக் காணலாம்.

இதே நூலில் இடம்பெற்றுள்ள பிறிதொரு பகுதி ஏசல் என அறி முகப் படுத்தப்பட்டுள்ளது. இது காமிலொலி சாமு நயினா லப்பை ஆலிம் சாகிபு அவர்களின் குமாரர் அகுமது லப்பை ஆலிம் சாகிபு அவர் களால் பாடப்பட்டுள்ளது. இந்த ஏசல் பாடலின் கருப்பொருளை ஆசிரியர் ஒரு செய்யுளில் குறிப்பிட்டுள்ளார். செய்யுள் வருமாறு:

நயந்துரைப்பேன் அகுமதுயான் நாயனருள் செய்கானோர்
செயம்பெற்ற நல்லசன்பஸ் றியிடம்-பயமுற்ற
பாத்திமா வந்துரைத்த பாவியாம கள்விசயம்
ஏத்தமாயு ரைக்கவிறை காப்பு.

இங்கே ஹஸன் பஸ்றி (றஹ்) என்னும் பெரியாரிடம் வந்து பாத்திமா என்னும் பெண் தனது மகள் நரகத்தில் கொடுமை செய்யப்படுகிறாள் என்பதைத் தன் கனவில் கண்டதாக அப்பெரியாரிடம் அப்பெண் கூறினாள். இந்தக் கூற்றுக்கு அடிப்படையாக அமைந்த கனவிலே தாய்க்கும் மகளுக்கும் உரையாடல் நிகழ்கிறது. கனவிலே தனது மகளைக் கண்டவுடன் தாய்க்குத் தனது கண்களையே நம்பமுடிய வில்லை. தனது மகளின் கூந்தல் நெருப்பில் வெந்து கருகுண் டிருந்ததை தாய் கண்டாள். அங்ஙனம் கருகுண்டிருப்பதற்கான காரணத்தை மகளிடம் கேட்டாள். மகளும் தான் உயிரோடிருந்த காலத்தில் தனது தலைமயிரை வாரிக்கட்டி அதன்மீது மலர்கள் சூடி அலங்கரித்து ஆண்கள் நடமாடும் இடங்களில் தலையை மறைக்காமல் திரிந்ததினாலேயே இப்பொழுது நரகத்தில் துன்புறுத்தப்படுகிறேன் என்று விடை அளித்தாள். இங் ஙனம் தாயின் வினவும் மகளின் விடையும் ஒரே பாடலில் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். இந்த வினவும் விடையும் இவ்வாறு ஒரு பாடலில் இடம் பெற்றுள்ளன.

மையை வெல்லுங் குழல்க ளெல்லாம்
வன்னி நெருப்பெரி வதேது—மகளே—அதுகேள்
வார்ந்து முடிமலர் சூடி விளையாடி
வெளியில் நின்றேன் ருயே. (1)

பெண்கள் குழலை வார்ந்து சிரசிலே பூச்சூடி விளையாடுவதும் அங்ஙனம் ஆண்கள் நடமாடும் இடங்களில் திரிவதும் பெண்களைப் பொறுத்தவரையில் பெருங்குற்றம் என்பதைச் சுட்டவே இங்ஙனம் அந்தப் பாடலைப் பாடி உள்ளார்.

இவ்வாறு இரு பாடலிலும் தாயின் வினுவும் மகளின் விடையும் இடம் பெற்றுள்ளன. பொதுவாக இந்தப் பாடல்களிலே நரகத்தில் செய்யப்படுவனவாக கருதப்படும் இன்னல்களும் அங்ஙனம் துன்புறுத் தப்படுவதற்கு உலக வாழ்க்கையில் பெண்கள் ஒழுக்கமான முறையில் இஸ்லாம் விதிக்கும் கடமைகளை ஏற்று நடவாமை காரணமாகும் என குறிப்பிடப்பட்டுள்ளன. ஒவ்வொரு பாடலிலும் ஒரு பெண் செய் யக் கூடாத ஒரு பாவச் செயலும் அத்தகைய செயலைச் செய்ய முற் பட்டால் மறுமையில் நரகில் அனுபவிக்க வேண்டிய தண்டனையும் குறிப்பிடப் பட்டுள்ளது. மக்கள் அத்தகைய பாவச் செயல்களில் ஈடு படக் கூடாது என்பதை வலியுறுத்தவே இந்த ஏசல் பாடப்பட்டுள்ளது எனக் கூறிவிடலாம்.

மற்றொரு பாடலை எடுத்துக் கொள்வோம். அந்தத் தாய் தன் கனவில் காணும் மகளின் இளம்பிறை போன்ற நெற்றியில் இரத்தக் கறை இருப்பதைக் கண்டாள். அங்ஙனம் இரத்தக்கறை ஏற்படக் காரணமென்ன என்று தாய் கேட்டாள். அதற்கு மகள் நெற்றியிலே பொட்டு இட்டு அதனை எல்லோரும் பார்க்க வேண்டும் என்று எல்லா இடங்களிலும் உலகில் திரிந்து கொண்டிருந்தமையால், நர கில் நெற்றி தாக்கப்பட்டு இரத்தக் குறி நெற்றியில் படிந்திருக்கிறது என்று விடை கூறினுள். இக்கருத்துக்களே ஒரு செய்யுளில் இவ்வாறு இடம் பெற்றுள்ளன.

இளம்பிறை போல்நுதல் தனிலே இரத்தக்குறிகாண் பதேது – மகளே
அதுகேள்
இலங்கு கின்றபொட் டெழுதி துலங்க வெளிதனிற் திரிந்தேன் – தாயே
(3)

தனது மகளுடைய கண்ணிமை முன்பு மைதீட்டப் பட்டிருந்தது. இப்பொழுது நரகில் அந்தக் கண்ணிமையை வானவர்கள் அரிந்து கொண்டிருப்பதைத் தாய் கனவில் காண்கிருள். அவ்வாறு கண்ணிமை அரியப்படுவதேன் எனத் தாய் கேட்கிருள். பலரைத் தான் ஏமாற்றி விட்டதாகவும் அவ்வாறு ஏமாற்றப்பட்ட ஊரார் கணவர்தமை தான் மயக்கி விட்டதாகவும் அவ்வாறு மயக்கியதன் காரணமாகத் தோஷம் ஏற்பட்டதென்றும் மகள் விடை பகர்கின்ருள். இக்கருத்துக்களைக் கொண்ட ஏசல் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

மையெழுதுங் கண்ணிமையை வானவர் களரிவ தேதுமகளே அதுகேள்
மருட்டி யூரார் கணவர் தனைமயக்க வைத்த தோஷமடி தாயே

சினா என்பது அறபுச் சொல். பரத்தமை, களவுறவு சட்டபூர்வ மல்லாத ஆண் பெண் களவொழுக்கம் என்பன இச்சொல்லின் பொருள்களாகச் சுட்டலாம். இதனை ஆண் பெண் இருபாலருமே தவிர்த்துக்கொள்ளுதல் வேண்டும். ஒருவனோ, ஒருத்தியோ சினாச் செய்தால் அவனுக்கு அல்லது அவளுக்காக கடுமையான தண்டனை வழங்கப்படும். இந்த ஏசல் பாட்டிலே ஒருத்தியினுடைய சினாவில் ஈடுபட்டமை குறிப்பிடப்பட்டுள்ளது. அங்ஙனம் சினாச் செய்வதற் குரிய தண்டனை நரகலோகத்தில் எவ்வாறு வழங்கப்படுகிறது என்பதும் சுட்டப்பட்டுள்ளது. பாம்பின் படம் போன்றது அல்குல். தனது மகளின் அல்குலை ஒரு பாம்பு தீண்டுவதைத் தாய் கனவில் காண்கிறாள். கனவிலேயே தனது மகளிடம் விடை பகர்கின்றாள். 'நல்லவர்கள் செய்யக் கூடாது என்று கருதப்பட்டுள்ளது சினா. அங்ஙனம் விலக்கப்பட்ட கருமத்தை தட்டிவிட்டவள் நான். விலகலைத்தட்டி சினாவில் ஈடுபட்டமையாலே இத்தகைய தண்டனை எனக்கு வழங்கப்படுகிறது.' இதுதான் அவள் பகரும் விடை. இக் கருத்துக்களே ஒரு பாடலில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

நாக வண்ண அல்குல் தன்னில் நாகமொன் றுதீண்டுவதேன்-மகளே
அதுகேள்
நல்லோர் விலகல் தட்டி நடந்து சினாச் செய்தனடி தாயே (24)

முப்பத்திரண்டு பாடல்களில் இங்ஙனம் கேசாதிபாதமாக பெண் ணின் ஒவ்வோர் உறுப்பும் குறிப்பிடப்பட்டுள்ளது. வெவ்வேறான ஒவ்வொரு பாவச் செயலுக்கும் ஒவ்வோர் உறுப்பும் தண்டிக்கப்படும் என்பதை எடுத்துக்காட்டவே இவ்வாறு பாடப்பட்டுள்ளது. ஒவ்வொரு வரும், சிறப்பாகப் பெண்கள் தவிர்த்துக் கொள்ள வேண்டிய குற்றங் களும் அங்ஙனம் அக்குற்றங்களை தவிர்த்துக் கொள்ளா விட்டால் நரகில் வழங்கப்படும் தண்டனையும் அத்தண்டனையின் இயல்பும் ஒவ்வொரு பாடலிலும் குறிப்பிடப்பட்டுள்ளது.

பீருசா அம்மாளுடையதும் அவள்தன் மகளுடையதுமான கதையை தமது தந்தையான சாமுநயினா லெப்பை ஆலிம் அவர்கள் முழுமையாகத் கடல் போல கூறி உள்ளார். அதில் இருந்தும் ஒரு துளியைத் தாம் எடுத்து இங்கு கூறியுள்ளதாகவும் ஆசிரியர் அகுமது லெப்பை ஆலிம் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். இந்தப் பாடல் களின் மூலம் நல்லொழுக்கமுடைய பெண்களின் வரிசை தொனிக்கப் பட்டுள்ளது என்றும் ஆசிரியர் சுட்டி உள்ளார். அவருடைய இக்

கருத்துக்களை ஏசல் பாடலில் உள்ள கடைசிப் பாடலுக்கு முன் உள்ள கவிப்பாவில் இங்ஙனம் குறிப்பிட்டுள்ளார்.

விருத்தியெனும் பீருசா மெதுவான மகள்கதையைத்
திருத்தமா யென்றந்தைதான் செப்பினார் கடல்போலாய்
வருத்தமில் லாமல் யானு மனத்தாளி போலே சரிதை
பொருத்தமாய் பாடலுற்றேன் பெண்ணினத்தோர் வரிசையே (31)

பெண்களுக்குப் புத்திமதி கூறும் ஒரு பாடலாக இந்த ஏசல் பாடல் அமைந்துள்ளது. தவிர்க்கப்பட வேண்டியவை, இவை. இவற்றைத் தவிர்க்காவிட்டால் அவற்றிற்கான நரகலோக தண்டனை இவை எனக் குறிப்பிட்டு பெண்ணினத்தின் விமோசனத்துக்காகவும் பெண்கள் இந்நூலை படித்துப் பயன் பெறவும் தான் இதனை இயற்றி உள்ளார் என ஆசிரியர் இந்நூலிலே குறிப்பிட்டுள்ளார்.

ஞானவழியை விளக்கும் நோக்கத்தோடு ஓர் ஏசல் சிற்றிலக்கியம் வெளிவந்துள்ளது. அதன் ஆசிரியர் பாபா—பகுறுத்தீன் மஷாயிஃப் புலவர் என்னும் பெயரினர். வெம்மனூர் என்னும் ஊரில் வாழ்ந்தவர். கிள்ளனூரிலும் வாழ்ந்துள்ளார். இதனை அச்சிட்டு வெளியிட்டவர் ஹாஜி எம். ஏ. சாகுல் அமீது அவர்கள். அவருடைய ஷாஹுல் ஹமீதியா அச்சகத்தில் அச்சியற்றப்பட்டுள்ளது. அதனை அச்சிடப் பொருளுதவி வழங்கியவர் செய்கு முகம்மது சாகிபு என்பவர். அவர் ஹஸன் முகம்மது சாகிபு என்பவரின் புதல்வர். அவர் திருப்பாதிருப் புலியூரைச் சேர்ந்தவர். மகுதூமுகம்மதென்பவர் இந்நூலை அச்சியற்றி உள்ளார். இந்த விவரங்களைச் சாற்றுகவி கொண்டுள்ளது.

ஞானத் தாய் மகளேசலாதலால் அங்குள்ள பாடல்கள் உயர்ந்த ஞானத்தையே போதிப்பதாக அமைந்துள்ளது. எளிதில் விளக்க முடியாத ஒரு வினாவைக் கொண்டே நூலாரம்பமாகிறது. மகள் தாய் வினா விடையாதலால் மகள் முதலில் வினாவை எழுப்புகிறாள். தாய் அதற்கான விடையை அளிக்கிறாள். முதல் வினாவுடன் தொடர்புடையதாக அதனை அடுத்துவரும் வினா அமைகிறது. முதலாவது வினா விடையை அடிப்படையாக வைத்து அடுத்த வினா தொடங்குகிறது. முதலாவது பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

அன்னை யேயென் தாதை யுன்னை
அரிய விரைமா லீயிடும் பொழுதில் — நான்தான்
அமர்ந்தி ருந்த தலந்த னைநீ
அறிவிப் பைமுன்றெளிந் திடவென் — தாயே

குன்னஹுது தாத்து கையின்
கூறும் வுஹுதை யுன்னவ் வலோடே — சேர்ந்து
கொண்டது பின்வா ஹிதிலே
குறித்த தையின்சா னியிலா — மகளே. (1)

இந்தப் பாடலில் முதற்பகுதி மகளின் வினாவாகவும் இரண்டாம் பகுதி தாயின் விடையாகவும் அமைந்துள்ளன. முதற் பகுதி தாயே என விளிக்க இரண்டாம் பகுதி மகளே என விளிக்கிறது. இந்தப் பாடலிலும் இதனைத் தொடர்ந்து வரும் ஏனைய பாடல்களிலும் சூபி மெய்ஞ்ஞானத் தத்துவத்தைச் சார்ந்த பல அறபுக் கலைச் சொற்கள் இடம்பெற்றுள்ளன. இங்கே குறிப்பிடப்பட்ட பாடலில் குன், அஹுது, தாத்து, வுஹுது, அவ்வல், வாஹிது, இன்சானி என்னும் அரபுச் சொற்கள் வந்துள்ளன. இந்தப் பாடலில் தொடங்கி ஏனைய பாடல்களின் உயிரினதும் உடலினதும் ஆரம்பம் பற்றி மகளுக்கும் தாயுக்கும் இடையே உரையாடல் நடைபெறுகிறது.

ஒரு பாடலில் நோன்பைப்பற்றிக் குறிப்பிடப்படுகிறது. இஸ்லாமிய ஆண்டுக்கணிப்பாராய்ச்சியில் பன்னிரண்டு மாதங்களுள் ஒன்றாக வருவது றமளான் மாதம். றமளான் மாதத்தில் முஸ்லிம் மக்கள் நோன்பு நோற்பது கடமையாகும். நோன்பைப் பற்றித் தனது மனதில் பதிந்து கொள்வதற்காக அதன் இரகசியங்களைத் தன்னிடம் கூறுமாறு தாயை விளிக்கிறாள் மகள். முதலில் ஒருவன் தன்னையுணர வேண்டும். ஆசைகளை மறக்க வேண்டும். தன்னடக்கம் இன்றியமையாதது. இவ்வாறு செயல்பட்டால் நோன்பை அனுஷ்டித்து நோன்பின் இரகசியங்களை அறிந்து கொள்ளலாம் என ஆசிரியர் இங்ஙனம் ஒரு பாடலை அமைத்துத் தந்துள்ளார்.

பன்னி ரண்டு திங்க ளொன்றிற்
பறுலி னியறம லானி நோன்பின் — சிந்தைப்
பகரினி திலென மனது
பற்றிநிலை கொள்ள லென்றன் — தாயே
தன்னை யுணர்ந்தி ருப்ப தற்குச்
சமதியத்தைமனசில் பெறவேண்டில் — மிக்க
தம்ஹவா வாம்ந புசுடைய
தன்குணத் தைவிடு வதுமே — மகளே (21)

இல்முல் எக்கீன், ஐனுல் எக்கீன், ஹக்குல் எக்கீன் என்னும் மூன்று வகையான ஞானங்களையும் ஒரு பாடலில் ஆசிரியர் குறிப்பிட்

டுள்ளார். புத்தியினால் பெறப்படும் அறிவு இல்முல் யக்கீன் எனப்படும். இதனாலேயே ஆசிரியர் இல்முல் எகீன் எனக் குறிப்பிட்டுள்ளார். பார்வையினால் பெறப்படும் அறிவு ஐனுல் யக்கீன் எனப்படும். ஐனுல் எக்கீன் என இதனை ஆசிரியர் சுட்டி உள்ளார். ஹக்குல் யக்கீன் என்பது இதய பூர்வமாகப் பெறப்படும் அறிவாகும். இதனையே ஆசிரியர் ஹக்குல் எக்கீன் என்றுவழங்கி உள்ளார். 'இல்முல் யக்கீனை உணர்ந்து கொண்டேன். இனி ஐனுல் யக்கீன் இன்னதென அறியச் சொல்' என மகள் கேட்கத் தாய் இதயபூர்வமான அறிவு என்பது அது என விடை பகருகிறாள். இதனையே ஆசிரியர் இவ்வாறு பாடியுள்ளார்.

இத்தனை நேருரைத்த தெல்லாம்
இல்முல் எக்கீ னிதையுடந் தையாக்கிக்—கொண்டு
எடுத்து யர்த்த ஐனுல் எக்கீன்
இடமறியச் சொல் லடியென் தாயே
நித்தி ரையின்மு ழிப்பினடு
நேரம் லுகாவில் வொகுத்தில் அகத்துள்—கொள்ளா
நினைவதுமேல் வழிதி றந்து
நிற்கும் ஹக்குல் எக்கீ னளவில்—மகளே (62)

எல்லாமாக அறுபத்துநான்கு பாடல்களைக் கொண்டது தாய் மகளேசல் சிற்றிலக்கியம். அரபுச் சொற்கள் இடம் பெறாத பாடலே இல்லை. பெரும்பான்மையான பாடல்களில் மகள் தாயை விளக்கும் பொழுது 'சொல்லடி தாயே' என வந்துள்ளது. ஒரு மகள் தனது தாயை மரியாதைக் குறைவாகச் 'சொல்லடி' என வழக்கமாக சொல்லுவதில்லை. அது தரக்குறைவும்கூட. தாய் மகளை 'சொல்லடி' எனக் கூறலாம். தாயை மகள் அவ்வாறு கூறக் கூடாது. இந்த ஞானத் தாய் மகளேசல் நூலில் அதன் ஆசிரியர் பாபா—பக்ருத்தீன் மஷாயிஃப் புலவர் ஏன் அப்படி 'சொல்லடி' எனத் தாயை விளித்துப் பாடினார் என்பது புரியவில்லை. இப்பாடல்கள் ஒவ்வொன்றினதும் முதற் பகுதி மகள் கூற்றாக அமைந்திருந்த போதிலும் ஆசிரியர் தமது சொற்களில் கூறுவதனால் 'சொல்லடி' என்ற சொற்றொடரை அவர் உபயோகித்திருக்கலாம். அங்ஙனம் உபயோகிப்பதனால் மரியாதைக் குறைவோ தரக்குறைவோ ஏற்படாது என அவர் நினைத்திருக்கலாம். தாயும் ஒரு பெண் ஆனபடியால் பெண்களை அப்படி அழைத்தல் தவறன்று என்று ஆசிரியர் எண்ணி இருக்கலாம். மெய்ஞ்ஞானத்தின் உச்சி நிலையை அடைந்த பிறகு இத்தகைய மானுஷீக வேறுபாட்டை அவர்

உணராமல் இருந்ததனாலேயே அவர் 'சொல்லடி' என்பதை மகள் கூற்றில் அமைத்துப்பாடி இருக்கலாம். சூபி மெய்ஞ்ஞானிகளின் சொற் பிரயோகத்திலோ பொருளமைப்பிலோ கருத்து வெளிப்பாட்டிலே நாம் குறைகாண முயல்வது ஏற்புடைத்தன்று என்ற கொள்கையை யும் நாம் நினைவு கூரற்பாலது.

ஞானாந்தரத்திநம் திருமணியுரை என்னும் நூலிலே ஒரு தாய் மகள் வினா விடை இடம் பெற்றுள்ளது. அது ஏசல் என வழங்கப்பட வில்லை. பதாயிகுப்பதியில் பிறந்து சிறந்து விளங்கிய ஆன்மீக குரு செய்யது அகமது கபீறு றிபாய் (றஹ்) அவர்களை அறிமுகம் செய்யும் முகமாகப் பாடப் பெற்றுள்ளது. இரண்டு பகுதிகளாகக் கொண்ட ஒவ்வொரு பாடலிலும் முதற் பகுதி மகளின் வினாவாகவும் பிற்பகுதி தாயாரின் விடையாகவும் அமைந்துள்ளது. ஒவ்வொரு பாடலிலும் றிபாய் ஆண்டகையின் சிறப்புக்கள் மகள் கூற்றாகவும் அச் சிறப்பியல்புகளை உடையவர் அகமது கபீரு றிபாய் (றஹ்) அவர்கள் எனத் தாயின் கூற்றாகவும் அமைந்துள்ளது. ஆரிபு நாயக ரின் சிறப்புக்களைக் கூறி அத்தகைய சிறப்புக்குடையவர் யார் என மகள் கேட்க அவர்தான் ஆரிபு நாயகம் என்று கூறி அவர்களின் வேறு சிறப்புக்களையும் குறிப்பிட்டுத் தாய் விடை அமைத்துள்ளாள். முதலாவது பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

ஆதி யிரசூல் பேர
ரகமதுல் கபீ றவர் யார் தாயே—உயர்
சோதி மஉரூக் குல்லாவென்
றுய்யபெயர் வாய்ந்தவ ரென்மகளே

மற்றொரு பாடலில் மக்கா, மதீனா நகரங்களுக்குச் சென்று மிகுந்த மகிமைகளைப் பெற்றவர் யார் என மகள் கேட்க சுல்த்தான் அகமது கபீறு (றஹ்) அவர்களே ஆவார் எனத் தாய் விடை பகர் கிறாள். இந்தக் கருத்துக்களை உள்ளடக்கிய பாடல் இது.

மக்க மதினா வடைந்து
மகிமை மிகப்பெற் றவரார் தாயே—உயர்
சொர்க்கமதைப் புவியில் விற்ற
சுல்த்தானகு மதுல்கபீரென் மகளே.

இதனை இயற்றியவர் அப்துல் கனி சாகிபு அவர்கள். ஐயம்பேட் டையைச் சேர்ந்தவர். ஆசிரியரைப்பற்றிய தாய் மகள் வினாவிடைப் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

இவ்விதக் காரணங் களெல்லா
மியல்புட னேபடித் தவரார் தாயே—ஜெய
நவ்வி வளர் ஐயன் பேட்டை
நகர னப்துல் கனிதா னென்றாள் மகளே

தாய் மகள் வினா விடையின் இறுதிப் பாடல் வாழ்த்துரையுடன் முடிவடைகிறது. தாயும் மகளும் இருவரும் அகமது கபீர் றிபாய் (றஹ்) அவர்களை வாழ்த்துவதாக அப்பாடல் அமைந்துள்ளது. இறுதிப் பாடல் இது:

வாழி யவர்ம லரடிகள்
வாழியென வாழ்த்துரைப்பாய் தாயே—நீ
வாழி யகுமதுல் கபீறு
மாதவத் தோர்மல ரடிகள் மகளே.

தாய் மகளேசல் என்ற பெயருடன் அல்லாது ஏசல் கண்ணிகள் என்றும் பாடல்கள் இயற்றப்பட்டுள்ளன. அந்த ஏசல் கண்ணிகள் நபிநாயகத்தின் பேரில் ஏசல் கண்ணிகள் எனப் பெயரிடப்பட்டுள்ளன. நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களின் வாழ்க்கையைப் பற்றியே ஏசல் கண்ணிகள் பாடப்பட்டுள்ளன. இந்த ஏசல் கண்ணிகளை இயற்றியவர் சாகுல் ஹமீதுப் புலவர். இவர், மீறான் சாகிபுப் புலவர் தம் புதல்வர். நவநீதபுஞ்சம் என்னும் கவிதைத் தொகுப்பின் ஆசிரியர் செய்யிது முகியித்தீன் கவிராசரின் பேரர். செய்யிது முகியித்தீன் கவிராசர் அவர்கள் திருநெல்வேலியைச் சார்ந்த மேலப்பாளையம் முகம்மது உசைன் புலவரின் புதல்வர். சாகுல் அமீதுப் புலவர் ஏசல் சிற்றிலக்கியம் ஒன்றையும் இயற்றி உள்ளார். முகியித்தீன் ஆண்டகை பேரில் தாய் மகளேசல் என அது அமைந்துள்ளது. அவருடைய ஏசல் கண்ணிகளும் முகியத்தீன் ஆண்டகை பேரில் தாய் மகளேசலும் நவநீதபுஞ்சத்தில் இடம் பெற்றுள்ளன போலவே சங்கீத சிந்தாமணியிலும் இடம்பெற்றுள்ளன.

நபிகள் நாயகத்தின் பேரில் ஏசல் கண்ணிகள் தாய் மகள் உரையாடலாக அமையவில்லை. வெறுமனே இரண்டு பெண்களுக்கிடையே நடைபெறும் உரையாடலாக அமைந்துள்ளது. ஒரு கண்ணியின் முதற் பகுதி ஒரு பெண் கேட்கும் கேள்வியாகவும் பிற்பகுதி மற்றப் பெண்ணின் அந்தக் கேள்விக்களிக்கும் விடையாகவும் அமைந்துள்ளன.

நபிமார் அனைவருக்கும் அரசராக வந்த நபி யார் என்று ஒரு பெண் கேட்க அவர் தாம் நான்கு வேதத்துக்குமுரிய முகம்மது றசூல் (சல்) என மற்றப் பெண் விடை பகருகிறாள். 'எவராமெடி' என்று ஒரு பெண் கேட்க 'றசூலுதாமெடி' என மற்றவள் விடை இறுக்கிறாள். இரு பெண்களும் ஒரே தன்மையாய் இருப்பதனால் இங்ஙனம் 'எடி' எனக் கேட்பதும் விடையளிப்பதும் தவறன்று என்று கூறலாம். அந்தக் கண்ணிப் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

ஆதியருள் கொண்டநபி மார்தமக் கரசராக
அம்புவியில் வந்துதித்தவ ரெவராமெடி
சோதிவடிவாகிச் சதுவேதத்துக் குரியவராய்த்
துலங்கிடு முகம்மதுற சூலுதாமெடி (1)

முதற்பகுதியில் உள்ள வினாவிலும் இரண்டாம் பகுதியில் வரும் விடையிலும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் சிறப்பியல்புகளே பேசப் பட்டுள்ளன.

முஸ்லிம் மக்கள் பின்பற்றி ஒழுகவேண்டிய ஐவேளைத் தொழுகை முப்பது நாள் நோற்கும் நோன்பு என்பனவற்றைஅறிவுள்ளவர்களுக்கு அளித்தவர் யார் என முதற்பெண் கேட்கிருள். நஞ்சு கொட்டும் பாம்பை வதைத்தவரும் தஞ்சம் புகுந்தோருக்கு அப்யமளிப் பவரு மான நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களே அத்தகைய புண்ணி யர் என்று இரண்டாம் பெண் விடை அளிக்கிருள். இக்கருத்துக்கள் இவ்வாறு அமைந்துள்ளன.

அஞ்சுநேரந் தொழுகையை யாறுநோன்பு வைத்திடவு
மறிவுள்ளோர்க் களித்திடுவோ ரெவராமெடி
நஞ்சுறும் பாந்தள் வதைத்துத் தஞ்சம்வைத்த பேரைக்காக்கும்
நாதரா முகம்மதுற சூலுதாமெடி (13)

முகியத்தீன் ஆண்டகை பேரிலான தாய்மகளேசல் ஒரு வெண்பா வுடன் ஆரம்பித்துக் கண்ணிகள் பலவற்றுடன் முடிவடைகிறது. அல் லாஹ்விடம் உதவி கோரும் காப்புச் செய்யுளாக அந்த வெண்பா இங் ஙனம் அமைந்துள்ளது.

பூதலஞ்சி றந்தபுகழிறசூல் பேரரப்துல்
காதிர்மு கிய்தீன்மேற் காதலா-யோது
யேசல்தனைக் கூறுதற்கே யெங்கும்ஸம தாய் நிறைந்த
நேசறகு மானுதவி நீ.

முகியத்தீன் ஆண்டகை அவர்கள் தாயின் கர்ப்பத்திலே இருக்கும் பொழுது திருடன் ஒருவனைத் துன்புறுத்தியதாக உள்ள செய்தியை ஒரு கண்ணிப் பாடலில் இங்ஙனம் அமைத்துத் தந்துள்ளார் ஆசிரியர்.

தாயகத் திருக்கச் சோரன்
றன்னை வதைசெய் தவரார் தாயே-அதுகேள்
நாயக மாகவந் துதித்த
நாதர் முகியித்தீ னல்லவோ-மகளே.

வழக்கம் போலத் தாய் மகள் ஏசல் சிற்றிலக்கியத்திலே வரும் உரையாடல் இடம்பெற்றிருப்பதைக் கரணலாம். மகள் முதலில் விஞவுகிருள். பின்னர் தாய் அவ்விஞவுக்கான சரியான விடையை அளிக்கிருள். இரண்டு பகுதிகளிலும் முகியத்தீன் ஆண்டகையின் சிறப்பு வலியுறுத்தப் படுவதைக் காணலாம்

முகியத்தீன் ஆண்டகை அவர்களின் பிறப்பிடம் ஜெயிலானி. உயர்கல்வி கற்கச் சென்றவிடம் பகுதாது. அங்கே தான் அவர்கள் இறுதிவரை வாழ்ந்தார்கள். எனவே தான் அவர்கள் பகுதாதிலே ஆட்சி செய்தார்கள் எனக் கணிக்கப்பட்டார்கள். அத்தகையவர் யாரென மகள் கேட்கிருள். அவர்கள் தாம் முகியித்தீன் ஆண்டகை எனத் தாய் பதிலிறுக்கிருள். இக்கருத்தே ஒரு கண்ணிப் பாடலில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

ஜெயிலானி தனிற்பிறந்து
சீர்பகுதா தாள்பவ ரார்தாயே-அதுகேள்
முயலா யிருந் தோர்க்கு
மோட்ச முகியத்தீ னல்லவோ-மகளே.

மற்றொரு கண்ணிப் பாடலில் முகியத்தீன் ஆண்டகை அவர்கள் நபிகள் நாயகத்தின் பேரர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் வழிவந்தவர்கள். அவர்களின் தாயாரும் தந்தையும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் பேரர்களான ஹஸன் (ரலி) அவர்களையும் ஹுசைன் (ரலி) அவர்களையும் முன்னோர்களாகக் கொண்டவர்களாவர். எனவே முகியத்தீன் அப்துல் காதிறு ஜீலானி (ரலி) அவர்கள் முகம்மது நபி (சல்) அவர்களின் பேரராகச் சுட்டப்பட்டுள்ளார்கள். வினாவும் விடையும் அமைந்த கண்ணிப் பாடல் இது.

ஒருநேர மெழுபதுபே
ரூணருந்தி வந்தவரார் தாயே-அதுகேள்
கருமேகக் குடை நபியின்
பேரர்முகி யித்தீ னல்லவோ-மகளே (26)

நவநீத புஞ்சம் என்னும் கவிதைத் தொகுதியையும் சங்கீத சிந்தா மணி என்னும் பாடல் தொகுதியையும் பதிப்பித்தவர் காயல்பட்ட ணத்தைச் சேர்ந்த கண்ணகுமது மகுதூ முகம்மதுப் புலவரே என்பது ஈண்டு குறிப்பிடத் தக்கது.

ஏசல் சிற்றிலக்கியப் பிரபந்தங்களைப் போன்றவையும் அவற்றை விட அளவில் சிறியனவையுமான பல பிரபந்தங்கள் தமிழில் இஸ்லா மிய அடிப்படையில் தோன்றி உள்ளன. அவற்றையும் விளக்கின் பெருகும்.



# குறவஞ்சி இலக்கியங்கள்

சிற்றிலக்கியத்தின் ஒரு வகையாகத் திகழும் குறவஞ்சி என்னும் பிரபந்த வகைக்குரிய இலக்கணத்தை எந்தவொரு பாட்டியல் நூல்களும் கூறவில்லை. குறவஞ்சி என்னும் பிரபந்த வகையில் உள்ள சொல் குறப்பெண், குறமகள் என்னும் பொருள்தந்து குறத்தியை குறிப்பதாக அமைந்துள்ளது. குறத்தி குறி கூறுவதும் குறவனுடன் பேசி அளவளாவுவதுமாகிய செய்திகள் இதில் தலைமை பெறுதலால் குறவஞ்சி என்னும் யெர் உண்டாயிற்று. குறவஞ்சி என்றும் இலக்கிய வகையால் பாட்டுடைத் தலைவனும், தலைவியும் யாராக இருந்தாலும் குறத்தியின் செயல்களும் குறி வகையுமே முக்கிய இடம் பெறுவதால் அவளது பெயர் குறிக்கும் வகையிலேயே குறவஞ்சி என்னும் பிரபந்த வகை தமிழிலக்கியத்துள் தனித்தொரு பிரிவாக இடம் பெற்றுள்ளது.

குறவஞ்சி பிரபந்த வகைகள் முதன் முதலில் கடவுளரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு பாடப்பெற்று வந்தது. இதற்குச் சான்றாக தமிழிலக்கியத்துள் பெரும்புகழ்பெற்ற திருக்குற்றாலக் குறவஞ்சியைக் கூறலாம். ஆனால் இடைக்காலத்தில் நாளடைவில் அரசர்கள் மீதும் வள்ளல்கள் மீதும் குறவஞ்சி இலக்கியங்கள் பாடப்பெற்றுள்ளன. இதற்குச் சான்றாக சரபேந்திரபூபால குறவஞ்சியைக் கூறலாம். இஃது தஞ்சையை ஆண்ட மன்னரான ஸ்ரீசரபோஜியைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டுள்ளது. அதேபோல் தமிழில் தோன்றியுள்ள பிறிதொரு குறவஞ்சி இலக்கியமான பாம்பண்ணக் கவுண்டன் குறவஞ்சி, வள்ளல் மீது பாடப் பெற்றதாகும்.

பொதுவாக குறவஞ்சியின் நூற்பெயர் பாடப்பட்ட தலத்தைச் சார்ந்தோ அல்லது பாட்டுடைத் தலைவனை சார்ந்தோ பெயர் பெறுவதுண்டு. தமிழில் பாட்டுடைத் தலைவியின் பெயரைச் சார்ந்து தமிழரசி குறவஞ்சி என்றும் ஓர் இலக்கியம் காணப்பெறுகிறது. குறவஞ்சி பிரபந்த வகையை ஒரு நாடக இலக்கிய வகை என்று கூறத்தக்க அளவில் அதனுடைய இயல்புகள் அமைந்திருத்தலைக் காணலாம். இஃது தலைவன் உலா வருதலைக்கண்டு காமுற்றுப் புலம்பும் தலைவி ஒருத்திக்குக் குறி கூறுதல் ஆகிய செய்தியைக் கொண்டதே குறவஞ்சி இலக்கியம். குறவஞ்சி இலக்கிய வகை காலத்தால் சிற்றிலக்கியங்களுள் பிற்பட்டதாக இருப்பதால் ஏனைய மரபு வகை சிற்றிலக்கியங்களான ஆற்றுப்படை, கோவை, உலா, தூது, கலம்பகம் போன்ற இன்னபிற பிரபந்தங்களின் தாக்கத்தை குறவஞ்சி இலக்கியங்களுள் காணமுடிகிறது. இதற்குச் சான்றாக கலம்பக

இலக்கியத்தின் உறுப்புகளுள் ஒன்றாக குறம் திகழ்வதை இங்குச் சுட்டிக் காட்டலாம்.

குறவஞ்சி இலக்கியங்களுள் ஒரு குறிப்பிட்ட அமைப்பு முறை இடம் பெற்றிருப்பதைக் காணமுடிகிறது. தமிழில் தோன்றியுள்ள குறவஞ்சி இலக்கியங்கள் பொதுவாக கடவுள் வாழ்த்து—தோடையம் – மங்களம் – நூற்பயனும் அவையடக்கமும் – கட்டியக்காரன் வருகை —பாட்டுடைத் தலைவர் பற்றிய செய்தி – குறத்தி வருகை—சிங்கன் வருகை – சிங்கன் சிங்கி உரையாடல் என்ற முறைகளில் அமைந்துள் ளன. குறவஞ்சி இலக்கியங்களுள் சிறப்பிடம் பெறுவது சிங்கன் சிங்கி உரையாடல் பகுதியே. சிங்கன் சிங்கி உரையாடல் பகுதியின் மூலமாகவே புலவன் தான் கூறக் கருதும் கருத்தையோ அல்லது பாட்டுடைத் தலைவரின் சிறப்பையோ எடுத்துக் கூறுகின்றான். இத்தகைய அமைப்பு முறையில் தோன்றிய குறம் இலக்கியங்கள் தமிழ்ச் சிற்றிலக்கியப் பிரிவுகளுள் முக்கியப் பங்கினைப் பெற்றுள்ளன.

குறம் சிற்றிலக்கிய வகைகளுள் சில இலக்கியங்களை முஸ்லிம் புலவர்கள் படைத்துள்ளார்கள். இவற்றுள் முக்கிய இடம் பெறுவன மீறான் கனி யண்ணாவியாரின் குறமாது மற்றும் பீர்முகம்மது புலவரவர்களின் ஞானரத்தினக் குறவஞ்சி, பிசுமில் குறம் முதலானவைகளாகும். மீறான் கனியண்ணாவியாரின் குறமாது 1842ஆம் ஆண்டு பதிப்பிக்கப்பட்டுள்ளது. இதற்குப்பின் இந்நூலுக்கு 1880, 1883, 1887, 1890 ஆகிய ஆண்டுகளில் வெவ்வேறான பதிப்புக்கள் கண்ணகுமதுப் புலவரால் பதிப்பிக்கப்பட்டுள்ளது. பீர்முகம்மது புலவரின் பிசுமில் குறம் 1871ஆம் ஆண்டும் இதனைத் தொடர்ந்து 1876, 1877, 1913 ஆகிய ஆண்டுகளிலும் பதிப்பிக்கப்பட்டுள்ளது. பீர்முகம்மது புலவரின் ஞான ரத்தினக் குறவஞ்சிக்கு 1875, 1921 ஆகிய ஆண்டுகளில் பதிப்புக்கள் வெளிவந்துள்ளன. 1916ஆம் ஆண்டில் அப்துல் ஹகீம் காதிரி என்பவர் ஞான ஆசாரக் குறவஞ்சி ஒன்றினை இயற்றிவித்துள்ளார்.

மீறான்கனியண்ணாவியாரின் குறமாது பெருமானார் நபிகள் நாயகம் (சல்) அவர்களைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டுள்ளது. குறமாது இரு காப்பு விருத்தச்செய்யுளுடன் தொடங்குகிறது. இதனைத் தொடர்ந்து கடவுள் துதி விருத்தப் பாக்கள் 14 இடம் பெற்றுள்ளன. இதன்பின் நூலுண்ணுவன்ற வரலாறு ஒரு கொச்சகச் செய்யுளையும் இதனைத் தொடர்ந்து ஏழு கண்ணிகளையும் பெற்றமைந்துள்ளது. இதே போல நூன்முகம் ஒரு கொச்சகக் கவியையும் பதின் மூன்று தருக்கண்ணிகளையும் பெற்றுள்ளது. குறமாது குறவனோடு தம் மன எண்ணத்தை உரைத்தல் பகுதியுடன் மீறான்

கனியண்ணாவியாரின் குறமாது தொடக்கம் பெறுகிறது. பெருமானார் நபிகள் நாயகத்தை காண விழையும் தம் விருப்பத்தை எடுத்துக் கூறும் குறத்தி பின் தம்மை அலங்கரித்து நபிகள் நாயகம் (சல்) அவர்களைக் காணும் பொருட்டு புறப்பட்டுச் செல்கிறாள். நபி (சல்) அவர்களைத் தேடிவரும் குறமாதுவுக்கு ஆண்டவன் அருள் வந்தடைவதை புலவர் பதினேழு செய்யுள்களில் விவரித்துள்ளார். இதன்பின் குறமாது நபிகள்! நாயகம் (சல்) அவர்களை புகழ்ந்து கூறுவதை அகவற்பாவாக புலவர் விவரித்துள்ளார். இப்பா பின்வருமாறு அமைந்துள்ளது.

ஆதிதன் னபியே அகுமது நபியே
சோதிமெய் நபியே துறவலர் நபியே
நீதிசேர் நபியே நேசமார் நபியே
பாதியாய் மதியைப் பகிர்ந்த நந் நபியே

கோதிலா வறிவு கூறிடு நபியே
காதமெய் மணந்தான் கமழ்ந்திடு நபியே
எத்திம்கள் நபியே யாறசூல் நபியே
முஸ்தபா நபியே முகம்மது நபியே

சித்தர்கள் நபியே ஜெயம் வளர் நபியே
கத்தீபு நபியே காசீம்நந் நபியே
எத்திசை யோர்களு மேத்துநந் நபியே
புத்தியில் மிகுந்த புண்ணிய நபியே

அறபிகட் கரசென வந்தமார் நபியே
குறைஷிகள் நபியே குருநெறி நபியே
ஷறகியல் நபியே தருமநந் நபியே
அறிவதற் கரியவி லாஞ்சனை நபியே

அன்பியா மார்க்கு மவுலியா மார்க்குந்
தன்பமா யுதித்த தாஹா நந் நபியே
எம்பிரா னபியே யேழையர் நபியே
சிம்பிடா மலையொடுஞ் செப்பிடு நபியே

அறுஷினி லேறிய வழகிய நபியே
இறையுடன் பேசிய இகபர நபியே
மறைபயில் நபியே மான்மொழி நபியே
முறையுறு மலிமா முலையுணு நபியே

தரையினிற் பாதந் தான்படா நபியே
இறைசலா முமக்கிங் கெடுத்தியான் சொல்கிறேன்
அஸ்ஸலாமு அலைக்கும் அகுமதே யென்று
முஸ்தபா நபிக்கு மொழிந்தனள் சலாமே

(குறமாது : பக்கம் 24)

மேற்கூறிய கொச்சகக் கவி மீறான் கனியண்ணாவியாரின் புலமைத் திறத்தை எடுத்துரைப்பதாக உள்ளது. பெருமானார் நபிகள் நாயகம் (சல்) அவர்களைக் கண்டபின் குறமாது நபிகள் நாயகம் (சல்) அவர்களின் தோற்றத்தைக் கண்டு வியந்து கூறும் பகுதிகளை புலவர் முப்பத்தாறு கண்ணிகளில் விரிவாக எடுத்துரைத்துள்ளார்.

இதனைத் தொடர்ந்து குறத்தியானவள் பெருமானார் நபிகள் நாயகம் (சல்) அவர்களைச் சூழ்ந்துள்ள சபையோர்கள் கேட்கும் ஐயப் பாடுகளுக்கு பதிலளிப்பது போன்று குறமாது இலக்கியத்தின் பிற் பகுதிகள் அமைந்துள்ளன. இதில் தொழுகையில்லாரியல்பு, மகுஷறில் வட்டி முதலிய கெட்ட செயலார், முழுக்கு முதலிய கெடு செயல் உள்ளோரியல்பு, ஸக்காத்து முதலியன பற்றிய இயல்பு, நோன்பு நோற்றலுக்கு இடையூறு செய்பவரின் இயல்பு, தீவினையோர் நரகில் பெறும் துன்பம் முதலான பல பகுதிகள் விவரித்துரைக்கப்பட்டுள்ளன. இப்பகுதிகள் அனைத்தும் படிப் போருக்கு விளங்கும் வண்ணம் குறமாது இலக்கி யத்துள் எளிய முறையில் அறுநூற்றி ஆறு செய்யுள்களில் விவரித் துரைக்கப்பட்டுள்ளன. மீறான்கனி யண்ணாவியாரின் குறமாது இலக்கியத்துள் இடம் பெற்றுள்ள அறுநூற்றி ஆறு செய்யுள் பகுதிகளும் பொருட் செறிவினையும் எளிய நடையினையும் பெற் றமைந்துள்ளன. எனவே இஸ்லாமிய குறவஞ்சி இலக்கியங்களுள் மீறான் கனி யண்ணாவியாரின் குறமாது இலக்கியம் ஒரு குறிப்பிடத் தகுந்த முக்கிய இடத்தைப் பெற்றுள்ளது என்றே கூறவேண்டும்.

தக்கலை பீர்முகம்மது அப்பா அவர்களின் மெய்ஞான இலக்கி யங்களுள் தமிழ்ச் சிற்றிலக்கியப் பிரிவின் ஒருவகையாக அமைந்துள்ள குறம் என்னும் பிரிவினைச் சார்ந்து மூன்று இலக்கியங்கள் இடம் பெற்றுள்ளன. அவைகளாவன: ஞான ரத்தினக் குறவஞ்சி, ஞானக் குறம், பிசுமில் குறம் ஆகியனவாகும். குறம் என்றும் குறவஞ்சி இலக்கியம் என்னும் அழைக்கப்பெறும் சிற்றிலக்கிய வகை சிங்கன் சிங்கி ஆகியோரின் உரையாடல் பாங்கில் மிக எளிய மொழிநடையில் அனைவரும் புரியும் வண்ணம் அமைந்திருக்கும். இதற்கேற்பவே பீர்முகம்மது அப்பா அவர்களும் சூபியச் சிந்தனைகளை பாமர மக்களுக்கும் எடுத்துக்கூறும் வண்ணம் ஞானப்பாக்களை மேற்குறித்த மூன்று குறம் இலக்கியங்களிலும் எடுத்துரைத்துள்ளார்கள்

இவற்றுள் ஞான ரத்தினக் குறவஞ்சி பீர்முகம்மது அப்பா அவர்களின் ஞானப் பாடல்களுள் தனிச் சிறப்பை பெறத் தக்கது. காரணம் பீர்முகம்மது அப்பா அவர்கள் எண்ணற்ற ஞானப்பாடல்களை இயற்றி இருப்பினும் அவர்களது பாடல் தொகுதிகளுள் பதினெண் சித்தர் பெரிய ஞானக் கோவை தொகுப்புடன் சேர்த்துப் பேசும்

தனிச் சிறப்பைப் பெற்றுத் தந்தது, ஞானரத்தினக் குறவஞ்சியே. அப்பா அவர்களின் ஏனைய பாடற்தொகுதிகளை ஒப்பிடும்போது ஞானரத்தினக் குறவஞ்சி பழகு தமிழ் நடையில் அமைந்து மொழிப் பாங்கில் வேறுபட்டுள்ளது. ஞானரத்தினக் குறவஞ்சிக்கு 1875, 1921ஆம் ஆண்டுகளில் பதிப்புக்கள் வெளியிடப்பட்டுள்ளன. அடுத் தடுத்த ஆண்டுகளில் வேறு பதிப்புக்களும் வெளிவந்துள்ளன. இதில் நான்கடி கொச்சகக் கலிப்பாவில் அமைந்த பாடலுடன் ஈரடி கண்ணி களாக அறுபத்து மூன்று பாக்களும் இடம் பெற்றுள்ளன. ஞானரத் தினக் குறவஞ்சியின் தொடக்கத்திலேயே பீர்முகம்மது அப்பா அவர்கள் மெய்ஞ்ஞானக் கருத்துக்களை விளக்கமுற குறவஞ்சி இலக்கிய வகையில் எடுத்துரைக்க விருப்பதைக் குறித்துள்ளார்கள்.

பொன்னுலகு பொருந்துமனப் பொருளறியத் தனமறிய
மின்னுலகில் மெய்ஞ்ஞானம் விளங்கக் குறவஞ்சிதனை
உன்னாமத் தன்னினைவில் உன்னியுதிப் பொருள் நன் காய்ந்த
தன்னிரையைத் தன்னினை வாய் தரிப்பதுவே காப்பாமே

ஞானரத்தினக் குறவஞ்சியில் அமைந்துள்ள கருத்துக்கள்யாவும் பண்ணோடு இசையுடன் தொடர் கேள்விபதில் முறையில் அமையப் பெற்றனவாகும். ஒவ்வொரு கண்ணியான முதல் அடி சிங்கன் கூற்றாக வினாவும் இரண்டாமடி சிங்கனின் வினாவிற்குரிய சிங்கியின் பதிலாகவும் அமைந்துள்ளன. இத்தகு முறையில் ஞானக் கருத்துக் களை விளங்கவைக்க முயற்சித்துள்ள அப்பா அவர்கள் ஞானரத்தின குறவஞ்சியை

ஆதிக்கு முன்ளர் ஆதியு மென்னடி சிங்கி அது
அந்தக் கருக்குழி முந்த விருளறை சிங்கா (கண்ணி : 1)

எனத் தொடங்குகின்றார். பின்னர் முப்பொருள் பற்றிய விளக்கம், ஞானக் கருத்துக்களின் மூலக் குகை பற்றிய விளக்கம் ஆகியன இடம் பெற்றுள்ளன. உடலுக்குள் உயிர் எங்கே இருக்கிறது சிங்கி என்று வினவும் சிங்கனுக்கு, அது,

அந்தர மாயண்ட மாக் கொடி நின்றது சிங்கா

என விடையளிப்பதாக உள்ளது.

மெய்ஞ்ஞானத்திற்கு அடிப்படையாக வேண்டப்படுவது தன்னை உணரும் தகுதி நிலையாகும். இதனை விளக்கமாக உணர்த்தும் போது,

தன்னை யறியுந் தலமேது சொல்லடி சிங்கி அது
கண்ணிடையான நடுநிலை யல்லவோ சிங்கா

என்ன விதமாக தன்னை யறிவது சிங்கி அது
தன்னவன் றாய்த் தந்தை யாகிநா மானது சிங்கா

(கண்ணி : 23, 24)

என எடுத்துக் காட்டி விளக்குவதுடன் இறையை அறியும் வழிமுறையையும் மிக எளிமையாக உரையாடல் பாங்கில் அப்பா அவர்கள் எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

இறையை யறிவது மெப்படிச் சொல்லடி சிங்கி அது
இறையெங்கு நின்றாடுந் தன்நினை வாகுமே சிங்கா

(கண்ணி : 25)

எனக் கூறும் அப்பா அவர்கள் மெய்ஞ்ஞானப் பாடல்கள் இயற்றும் கவிகளுக்கேயுரிய உத்தி முறையில் பல பரிபாஷை சொற்களையும் பீர்முகம்மது அப்பா அவர்கள் ஞானரத்தினக் குறவஞ்சியில் பின்வருமாறு கையாண்டுள்ளார்:

எட்டெழுத் தாக வெழுந்த வெழுத்தென்ன சிங்கி அது
மட்டிலடங்கா வடிவட்ட கோணமே சிங்கா
அஞ்செழுத்தாக வமைந்த வெழுத்தென்ன சிங்கி அது
அஞ்சும் பொருந்திய வாகாய வட்டமே சிங்கா
அன்பத் தோரட்சர மறியநீ சொல்லடி சிங்கி அது
வஞ்ச மகார நடுச்சுழி மூன்றுமே சிங்கா

(கண்ணி : 38-40)

ஞானரத்தினக் குறவஞ்சியின் இறுதிக் கண்ணியில் தம் முத்திரைக் கவியாக இயற்றியுள்ளார் அப்பா அவர்கள்,

உற்ற ஞானப்பொரு ளுத்தியாய்ச் சொன்னதார் சிங்கி அது
உத்தமர் பீருமு ஹம்ம துரைத்தது சிங்கா

(கண்ணி : 63)

என தம் ஞானப் பிரவாகத்தை பீர்முகம்மது அப்பா அவர்கள் சிங்கன் சிங்கி உரையாடல் மூலமாக ஞானரத்தினக் குறவஞ்சியில் எடுத்துக் காட்டியுள்ளார்.

பீர்முகம்மது அப்பா அவர்களது ஞானக்குறம் ஞானரத்தினக் குறவஞ்சியிலிருந்து சற்று மாறுபட்ட இலக்கிய அமைப்பையும்

உள்ளடக்க வேறுபாட்டையும் பெற்றமைந்துள்ளது. நூற்று முப்பத்தைந்து பாடல்களைப் பெற்றுள்ள ஞானக்குறம் குறவஞ்சி சிற்றிலக்கிய மரபை பெரிதும் தழுவி அமைந்துள்ளது. குறத்தி ஒருத்தி குறி கூறுவதாக அமையும் நூல் குறம் அல்லது குறவஞ்சி என அழைக்கப் பெறும். அதற்கேற்பவே ஞானக் குறத்தையும் பீர்முகம்மது அப்பா அவர்கள் அமைத்துள்ளார்கள். இதனுள் குறத்தியின் பாடல்களை ஞானத்தை எடுத்துரைக்கும் அறப்பாடல்களாக ஆசிரியர் அமைத்துள்ளார். சூபியக் கருத்துக்களின் தலையாய ஞானியாகக் கருதப்படும் மெய்ஞ்ஞானி முகையித்தீன் அப்துல் காதிர் அவர்களை புகழ்ந்து பாடுவதாக ஞானக் குறம் அமைந்துள்ளது. பீர்முகம்மது அப்பா அவர்களின் மெய்ஞானக் குருவான மைதீன் ஆண்டவரவர்களிடம் தமக்குள்ள ஈடுபாட்டையும், பற்றையும் காட்டத்தக்க வகையில் ஞானக் குறத்தின் பாடல் கருத்துக்கள் அமைந்துள்ளன. நூலின் தொடக்கத்தே தாம் குறம் பாட வந்ததைக் குறிப்பிடும்போது,

ஊற்றமுள கலிமாவில் உரையெடுத்து
ஓதினேன் குறம் பாடினேன்

(ஞானக் குறம்)

குறம் பாடும் அப்பா அவர்கள் தமிழிலக்கிய மரபுகளுக்கேற்ப குறத்தியின் வாயிலாக மலை, வாசல், நாடு வளங்களை விரிவாக எடுத்துக் காட்டியுள்ளார். நூலின் தொடக்கத்தே இறைத் தத்துவம் பொதுவான நிலையில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. அடுத்த பகுதியில் மைதீன் ஆண்டகை வீற்றிருக்கும் மலை வளமும் இதன்பின் அன்னாரின் வாசல் வளமும் இறுதியாக பெருமானார் நபிகள் நாயகம் அவர்கள் சார்ந்த மக்கமா நகரின் வளமும் எடுத்துரைக்கப் பட்டுள்ளது. குறவஞ்சியிலக்கிய வகையின் மரபை அடியொற்றி ஞானக் குறம் அமைந்திருப்பதால் இதனுள் ஞானரத்தினக் குறவஞ்சியை ஒப்பிடும்போது மிகக் குறைவாகவே ஞானக் கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன என்றே கூறவேண்டும். எனினும் தாம் ஞான தத்துவங்களைப் பாட வருவதாகவே நூலின் தொடக்கத்தே அப்பா அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

இயற்கைக் காட்சிகளை எடுத்துக் காட்டும் போதும்கூட அவைசள் அருளோடு மிளிர்வதாகவே காட்டப்பட்டுள்ளது. பழுதறவே நிற்கும் மலைகள் தொழுது நின்று துய்ய ஸுஜூது ஆன வேளையிலே விழைவு தரும் கிருபையுள்ளோன் வேண்டுகின்ற மலை எனக் குறிப் பிட்டுள்ளார். இதுபோல் வாசல் வளம் பற்றிக் குறிப்பிடும்போது வரலாற்று நாயகர்களைக் குறிப்பிட்டு பெருமை சேர்த்துள்ளார்.

ஆதிதிரு வாசலிது அஹ்மதனார் வாசலிது
சோதி அபுபக்கர் உமர் துரை உதும ான் அலியாரும்
நீதிபீவி பாத்திமாவு நெறி ஹசனார் ஹுசைனாரும்
சாதி அப்துல் காதிறுவும் சாகிபுமார் வாசலிதே

(ஞானக்குறம்)

ஞானக் குறத்தின் இறுதிப் பகுதியில் குறத்தியின் கூற்றின் வழி மைதீன் ஆண்டகையின் பெருமைகள் விரிவாக எடுத்துக் காட்டப் பட்டுள்ளன. பிற குறவஞ்சி இலக்கியங்களில் இருப்பது போல் இன்பச் சுவைகள் ஞானக் குறத்தில் இடம்பெறவில்லை.

பீர்முகம்மது அப்பா அவர்களின் படைப்புக்களுள் குறம் இலக்கிய வகையில் அமைந்த பிறிதொரு படைப்பு ‘பிசுமில் குறம்’ ஆகும். இந்நூல் 1871ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது. இதனைத் தொடர்ந்து பல பதிப்புக்கள் பிசுமில் குறத்திற்கு வெளிவந்துள்ளன. பிசுமில் குறத்தில் முதலில் ஒரு வெண்பா இடம் பெற்றுள்ளது. அத்துடன் பத்து விருத்தங்களும் ஐநூற்றி தொண்ணூறு ஈரடிக் கண்ணிகளும் இடம்பெற்றுள்ளன. பிசுமில் குறத்தில் அப்பா அவர்கள் இஸ்லாத்தின் மூலமந்திரமான கலிமாவின் தத்துவங்களை எடுத்துக் காட்டி விளக்கியுள்ளார். இதேபோல் ஞான மார்க்கத்தில் குருவின் துணைக்குரிய முக்கியத்துவத்தை புலப்படுத்தும் வகையில் பின்வருமாறு பாக்கள் யாத்துள்ளார்.

வழியான குருவில்லாத வணக்கம் முழுதெல்லாம்
வையகத்தில் புருடனில்லாள் வாழ்ந்த சுகமொக்கும்
தெரியாத குருமாரின் திருமொழி கேட்பதுதான்
தெரிவையவர்கள் குசறாவைச் சேர்ந்திருந்த துவமை
சரியான குருவில்லா வணக்கமுள தெல்லாம்
சாவலில்லாக் கோழி முட்டையிட்டது போலுவமை

(பிசுமில் குறம்)

என் எளிய முறையில் விளக்குவதன் மூலம் சூபியக் கோட்பாட்டில் தம்மை வழிநடத்தும் ஷைகுவிற்குரிய முக்கியத்துவத்தைப் புரிய வைத்துள்ளார். பிசுமில் குறம் அப்பா அவர்களது ஞானப்பாடல்களுள் காலத்தால் முந்தியதாகக் கருதப்படுகிறது. எனவே இதில் ஞான மார்க்கத்தின் பல்வேறு நிலைகளை பீர்முகம்மது அப்பா அவர்கள் எடுத்துரைத்துள்ளார்கள் குறிப்பாக ஞானசித்தி மார்க்கங்கள், இம் மார்க்கத்திற்குரிய ஞானப்பாதையில் உடலுள் அமைந்திருக்கும்

மக்காம்கள் (இடங்கள்) எவையெவை என்பனவற்றை அடையாளம் காட்டியுள்ளார்.

பீர்முகம்மது அப்பா அவர்கள் தமது குறம் ஞான இலக்கியங்கள் மூலமாக ஆன்மீகத் தத்துவங்களை இசைப்பாடல்களாகவும், நாடகக் கூத்தாகவும் தரமுடியும் என்பதை நிறுவியுள்ளார்கள். இவ்விலக்கியங் களில் இறைவன் உயிர்களை மயக்குகின்றான். உயிர்கள் இறைவ னிடம் மயங்குகின்றன என்ற அடிப்படை ஆன்மீகக் கருத்துக்களை தெளிவுபடுத்தியுள்ளார் பீர்முகமது அப்பா அவர்கள். இவ்வாறு குறம் சிற்றிலக்கிய வகையின் மூலமாக முஸ்லிம் புலவர்கள் பலவேறான கருத்துக்களை விரித்துள்ளதை முஸ்லிம் குறவஞ்சி சிற்றிலக்கிய வகையின் மூலம் அறிய முடிகிறது!



# பிள்ளைத் தமிழ்

தமிழ்ச் சிற்றிலக்கியங்களுள் ஒரு முக்கிய பிரபந்த வகையே பிள்ளைத் தமிழ் இலக்கியங்கள். தமிழிலக்கிய மரபில் தோன்றிய தாலாட்டுப்பாடல்களும் அவைபோன்ற பிறவும் பிள்ளைத் தமிழ் என்ற தனி வகை பிரபந்தமாக இடைக்கால இலக்கியப் பரப்பில் தோன்றி வளர்ந்தன. ஒவ்வொரு சமயத்தவரும் அவரவர்களின் சமய நெறிக்கு ஏற்பவும் தத்தம் சமய அமைப்பு முறைக்கு ஏற்பவும் கருத்துக்களையும் கடவுளர் நெறியையும் புகட்டவும் பிள்ளைத் தமிழ் இலக்கிய வகையைப் பயன்படுத்தி இருப்பதை நன்கறியலாம். பிள்ளைப் பாசத்தின் அடிப்படையில் எழுந்த பிள்ளைத் தமிழ் பாடல்கள் பிற்காலத்தே சமயநெறிக்கு முக்கியத்துவம் தந்து ஒவ்வொரு சமயத்தவரும் அவரவரின் சமயக் கொள்கைகளை எடுத்துரைக்க பிள்ளைத் தமிழ் இலக்கியங்களை பரவலாக படைக்கலாயினர். இதற்கு விதிவிலக்காக முஸ்லிம் புலவர்களும் அமையவில்லை. பல்வேறான பக்தி இலக்கிய வகைகளைப் படைத்தளித்துள்ள முஸ்லிம் புலவர்கள் கணிசமான எண்ணிக்கை அளவிலான முஸ்லிம் பிள்ளைத் தமிழ் இலக்கியங்களைப் படைத்தளித்திருப்பதை அறிய முடிகிறது. முஸ்லிம் பிள்ளைத் தமிழ் இலக்கியங்களுக்குள் ஆராயப் புகுமுன் பிள்ளைத் தமிழ் இலக்கியங்களின் இலக்கண வரையறையினை அறிவது அவசியமாகும்.

## பிள்ளைத் தமிழ்-ஓர் விளக்கம்:

தமிழிலக்கியத்தில் உள்ள தாய்மை அன்பும் பிள்ளைப் பாசமும் தாலாட்டுப் பாடல்களாகவும் பிள்ளைத் தமிழ் இலக்கியங்களாகவும் உருப்பெற்ற பின் இப்பிள்ளைத் தமிழ் பற்றி பாட்டியலின் இலக்கண நூல்கள் வரையறை செய்து இலக்கண விதிகளை அமைத்துள்ளன. புலவன் தான் போற்ற விரும்பும் தலைவனையோ அல்லது தலைவியையோ குழந்தையாக பாவித்துக் கொள்வான். இவ்வகையில் தெய்வமோ தெய்வ அருள் பெற்ற ஆன்மீகப் பெரியோர்களோ அன்றி, அரசர்களோ அன்றி மனிதர்களுள் சான்றோராகத் திகழும் வல்லமை பெற்றவர்ளோ பாடுபொருளாக அமையலாம். இத்தகு நிலை உள்ள வெவ்வேறான பிரிவினைச் சார்ந்தவர்களையும் பாடவிரும்பும் புலவன் அவர்களைக் குழந்தையாகப் பாவித்துக் கொள்லான். பாட விரும்பும் நாயகன் அல்லது நாயகியின் சிறப்புக்களை தாம் பாவித்துக் கொள்ளும் குழந்தைப் பருவத்துடன் இணைத்து அப்பருவத்தைப் பத்து பருவங்கள், ஒன்றுக்குப் பத்துவீதம், நூறு பாடல்கள் என்ற அமைப்பிற்குள் அடக்கி விருத்தப் பாவால் பாடப் பெறுவதே பிள்ளைத் தமிழ் இலக்கியமாகும். பிள்ளைப் பருவம் மூன்றாம் திங்கள் தொடங்கி இருபத்

ராம் திங்கள் வரையிலான இருபது திங்கள்கள் அடங்கும். இவ்விருபது திங்கள்களும் முறையே ஒவ்வொன்றும் இரண்டு திங்கள்களுக்கு ஒன்றாகப் பகுத்து பத்துப் பருவமாக பிள்ளைத் தமிழ் இலக்கியங்களில் அமையும். அவைகள் மூன்று, ஐந்து, ஏழு, ஒன்பது பதினொன்று, பதின் மூன்று, பதினைந்து, பதினேழு, பத்தொன்பது, இருபத்தொன்று என்ற திங்கள் வரிசையில் பத்து பருவங்களையும் பிள்ளைத் தமிழ் பாடும் புலவன் அமைத்துப் பாடுவான். இப்பத்து பருவங்களுள் முதல் ஏழு பருவங்களும் ஆண் பால், பெண்பால் பிள்ளைத் தமிழுக்கு ஒன்றாகவே அமையும். இறுதி மூன்று பருவங்களும் ஆண் பாலரைத் தலைமையரக் கொண்டு பாடு மிடத்து வேறாகவும் பெண்பாலை தலைமையாகக் கொண்டு பாடுமிடத்து வேறாகவும் அமையும். ஆண் பால் பிள்ளைத் தமிழுக்கு காப்பு, தால், செங்கீரை, சப்பாணி, முத்தம் வருகை, அம்புலி, சிறுபறை, சிற்றில், சிறுதேர் என்ற பத்து பருவங்களும் அமையும். பெண்பாற் பிள்ளைத் தமிழுக்கு இவற்றில் இறுதியில் உள்ள சிறுபறை, சிற்றில், சிறுதேர் என்ற மூன்றனுக்குப் பதிலாகக் கழங்கு, அம்மானை, ஊசல் என்ற மூன்றும் இடம் பெறும். இவ்வாறு பத்துப் பருவங்களாக அமையும் ஒவ்வொரு பருவமும் பத்துப்பத்து பாடல்களைக் கொண்டிருக்கும். சில பிள்ளைத் தமிழ் நூல்களில் இறுதியில் உள்ள மூன்று பருவங்களின் வைப்பு முறை மாறி அமைவதும் உண்டு. இதேபோல் சிலவற்றில் கடைசி மூன்று பருவங்களுக்குத் திங்கள் கணக்கிடுவதற்குப் பதிலாக மூன்று, ஐந்து, ஏழாம் ஆண்டுகளைக் கணக்கில் கொண்டு அதற்கேற்ப பாடு பொருளை அமைத்துப் பாடுவதும் உண்டு. இவ்விலக்கணங்களைத் தொகுத்து பிற்காலத்து முத்து வீரியம் என்னும் பாட்டியல் இலக்கண நூல் பிள்ளைத் தமிழின் இலக்கணத்தை பின்வருமாறு வரையறை செய்து காட்டுகிறது.

''தீதில் காப்பே செங்கீரை தாலே
சப்பாணி முத்தம் வாரானை யம்புலி
சிறுபறை சிற்றில் சிறுதே ரிவற்றை
முறையே யகவல் விருத்தத் தாலே
பப்பத் தாகப் பாடுவ தாண்பாற்
பிள்ளை கவி

(முத்து வீரியம்: 1039)

இதுபோன்ற பிற்காலத்து இலக்கண நூல்கள் பிள்ளைத் தமிழ் இலக்கணத்தை வகுத்துக் காட்டியுள்ளன. இவ்விலக்கணங்களுள் அடங்கி தாம் பாட நினைக்கும் பாட்டுடைத் தலைவரின் பண்பாடு, வீரம், சிறப்பியல்பு, பிற நல்லியல்புகள் அனைத்தையும் தொகுத்துப் பாடப் பெறும் நூல்களே தமிழிலக்கியத்தில் பிள்ளைத்தமிழ் என்னும் இலக்கிய வகையாக உதயமாயிற்று.

## பிள்ளைத் தமிழ் இலக்கியத்தின் தோற்றம்

இன்றைக்கு நூற்றுக் கணக்கான பிள்ளைத் தமிழ் இலக்கியங்களைப் பெற்றுள்ள தமிழிலக்கியப் பரப்பிற்கு முன்னோடியாகத் தோன்றிய பிள்ளைத் தமிழ் இலக்கியம் குலோத்துங்க சோழன் பிள்ளைத் தமிழாகும். இஃது 12ஆம் நூற்றாண்டினைச் சார்ந்தது. இதன் பாட்டுடைத் தலைவன் இரண்டாங் குலோத்துங்கசோழனாகும். பிள்ளைத் தமிழ் என்னும் பிரபந்த வகையின் தோற்றுவாயாக குலோத்துங்கன் பிள்ளைத் தமிழ் அமையினும் தொல்காப்பியப் புறத்திணையில் அமைந்த 'குழவி மருங்கினும் கிளைவதாகும்' என்னும் நூற்பாவே பிள்ளைத் தமிழ் இலக்கியங்களுக்கு தமிழுலகில் வித்திட்டது என்று கூறுவர். குலோத்துங்க சோழனைப் பின்பற்றி பல்வேறு மன்னர்கள் பற்றிய பிள்ளைத் தமிழ் நூல்களும் பல்வேறு கடவுளர் பற்றிய சமயக் கொள்கைகளும் பிள்ளைத் தமிழ் நூல்களாக தோன்றி வளர்ந்தன. இந்த வகையில் இஸ்லாமிய சமயமும் முக்கிய இடம் பெற்றுள்ளது.

## இஸ்லாமிய பிள்ளைத் தமிழ் இலக்கியங்கள் ஓர் அறிமுகம்

இஸ்லாமியத் தமிழிலக்கிய மரபில் மரபுவகை பிரபந்தங்களுள் ஒரு முக்கிய இலக்கியப் பிரிவாகப் பிள்ளைத் தமிழ் இலக்கியங்கள் திகழ்கின்றன. எண்ணிக்கை அளவில் இருபத்தி ஐந்திற்கும் மேற்பட்ட பிள்ளைத் தமிழ் என்ற நிலையில் பல்வேறு சமயத்தவர்களும் தங்கள் தங்கள் சமயக் கருத்துக்களை எடுத்துரைக்க இப்பிரபந்த வகையைப் பயன்படுத்திக் கொண்ட போதிலும் முஸ்லிம் புலவர்கள் ஏனைய பிற சமயப் புலவர்களிலிருந்து முக்கிய அம்சத்தில் வேறுபட்டிருப்பது இங்கு குறிப்பிடற்பாலது. ஏனைய பிற சமயங்களைப் பொறுத்த வரையில் தேசிய விநாயகர் பிள்ளைத் தமிழ், திருமலை முருகன் பிள்ளைத் தமிழ், அழகர் பிள்ளைத் தமிழ், மீனாட்சி அம்மன் பிள்ளைத் தமிழ் என கடவுளர்களின் பெயரால் காணப்படுகிறது. ஆனால் இஸ்லாமிய பிள்ளைத் தமிழ் இலக்கியங்களுள் ஏதேனும் ஒன்றிலேனும் இஸ்லாத்தில் ஏகோபித்த இறைவனாம் அல்லாஹ்வின் பெயரில் காண முடியாது. இந்நிலை ஏனைய பிற சமய பிள்ளைத் தமிழ் இலக்கியங்களிலிருந்து இஸ்லாமிய பிள்ளைத் தமிழ் இலக்கியங்கள் வேறுபட்டிருப்பதைச் சுட்டுகிறது. இதற்கான அடிப்படைக் காரணம் உண்டு. ஏனைய பிற சமயங்களில் முருகன் பற்றியோ, விநாயகர் பற்றியோ, மீனாட்சி பற்றியோ பல்வேறு புராணக் கதைகள் மத்தியில் வழங்குவது போன்று பெற்றோனும் பெறப்பட்டோனும் அல்லாத அல்லாஹ் பற்றிய கதைகள் இஸ்லாத்தில் கிடையாது.

எனவே இறைவன் மீது ஏனைய பிற சமயத்தவர்கள் பாடியது போன்று பிள்ளைத் தமிழ் இலக்கியங்களைப் பாடாது தவிர்த்து தங்களது சமய நெறிக்குட்பட்ட எல்லைப் பரப்பினை அமைத்து, சமயச் சான்றோர்களை மட்டும் தலைவராகக் கொண்டே பிள்ளைத் தமிழ் இலக்கியங்களைப் படைத்தளித்துள்ளனர்.

இஸ்லாமியப் பிள்ளைத் தமிழ் நூல்களின் பட்டியல் எமக்குக் கிடைத்தவரை கீழே தரப்பட்டுள்ளது :

| | பிள்ளைத் தமிழ் நூல்கள் | ஆசிரியர் பெயர் | காலம் |
|---|---|---|---|
| 1. | முகையதீன் பிள்ளைத் தமிழ் | ஜவ்வாது புலவர் | 1772 (ஆசிரியர் மரணம்) |
| 2. | நபி நாயகம் பிள்ளைத் தமிழ் | தொண்டி பீர் முகம்மதுப் புலவர் | 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி |
| 3. | நபிசல்லல்லாகு அலைகிவ சல்லம் அவர்கள் பேரில் பிள்ளைத் தமிழ் | செய்யிது அனபிய்யா சாகிபுப் புலவர், தென்காசி | 1884 |
| 4. | செய்கு தாவுது பிள்ளைத் தமிழ் | நயினா முகம்மது பாவாப் புலவர் | 1895 |
| 5. | முகியத்தீன் அப்துல் காதிர் ஜெயிலானி ஆண்டவர்கள் காரணப் பிள்ளைத் தமிழ் | அப்துல் காதிறு ஆ. பி. அ. | 1895 |
| 6. | சாகுல் ஹமீது ஆண்டவர் பிள்ளைத் தமிழ் | பஸீர் அப்பா நாயகம் | 1903 |
| 7. | தைக்காசாகிபு ஒலியுல்லா பேரில் பிள்ளைத் தமிழ் | அப்துல் காதிறு ஆ. பி. அ. | 1908 |
| 8. | திருச் சந்தப் பிள்ளைத் தமிழ் | அப்துல் காதிறு ஆ. பி. அ. | 1914 |
| 9. | றசூல் நாயகம் பிள்ளைத் தமிழ் என்னும் புகழுதயப் புஞ்சம் | மீரான் சாகிப் புலவர் | 1918 |
| 10. | பாத்திமாநாயகி பிள்ளைத்தமிழ் | மீரான் சாகிப் புலவர் | 1919 |

| | | | |
|---|---|---|---|
| 11. | பிள்ளைத் தமிழ் முகியித்தீனாண்டவர்கள் பேரில் | செய்யிது முகியித்தீன் கவிராஜர் | 1926 |
| 12. | ஞானப் பிள்ளைத் தமிழ் | ஞானியார் சாகிபு | 1936 |
| 13. | நாகூர் பிள்ளைத் தமிழ் | ஆரிபு நாவலர், வா. கு. (இயற்றியது) | 1944 |
| 14. | சாலிஹ் வலியுல்லாஹ் பேரில் திருச்சந்தப் பிள்ளைத் தமிழ் | கடலூர் செய்கு முகம்மது காதிறு மீரா லெப்பை | ஆண்டு தெரியவில்லை |
| 15. | செய்யிது முகம்மது புகாரி பிள்ளைத் தமிழ் | காலங் குடியிருப்பு மீரான் புலவர் | ,, |
| 16. | நபி நாயகம் பிள்ளைத் தமிழ் | செய்கு மீரான் புலவர் | ,, |
| 17. | முகியத்தீன் ஆண்டவர் பேரில் பிள்ளைத் தமிழ் | காதிறு முகியித்தீன் புலவர் | ,, |
| 18. | நத்ஹறொலி ஆண்டவர் பிள்ளைத் தமிழ் | பிச்சை இபுராகீம் புலவர் | ,, |
| 19. | நாகூர்ப் பிள்ளைத் தமிழ் | ஷாகுல் ஹமீதுப் புலவர் | ,, |
| 20. | நாகூர்ப் பிள்ளைத் தமிழ் | பிச்சை இபுராகீம் புலவர், | ,, |
| 21. | நாகூர் மீரான் சாகிபு ஆண்டவர் பிள்ளைத் தமிழ் | பாட்சாப் புலவர் | ,, |
| 22. | நபிகள் நாயகம் பிள்ளைத் தமிழ் | நாஞ்சில் ஷா | ,, |
| 23. | ஆயிஷா நாச்சியார் பிள்ளைத் தமிழ் | கவி கா. மு. ஷெரீப் | 1979 |
| 24. | கேசிஎம் பிள்ளைத் தமிழ் | நாஞ்சில் ஆரிது | 1980 |

இஸ்லாமிய ஆண்பாற் பிள்ளைத் தமிழில் காப்பு, செங்கீரை, தால், சப்பாணி முத்தம், வாரானை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்னும் பத்துப் பொருள்கள் பருவங்களாக அமைந்துள்ளன. ஆண்பாற் பிள்ளைத் தமிழில் உள்ள கடைசி மூன்று பருவங்களுக்குப் பதிலாக கழங்கு, அம்மானை, ஊசல் என்னும் பொருள்களில் பருவங்கள் பெண்பாற் பிள்ளைத் தமிழில் இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

1. குழந்தையைக் காக்க வேண்டும் என்று அல்லாஹ்வை வேண்டுவது காப்புப் பருவப் பாடல்களின் குறிக்கோளாக அமைந்துள்ளது.

2. குழந்தைகளைப் பேசப் பழகுவதற்கு முன் 'இங்கு' என்னும் ஓசையைச் செம்மையாய் ஒலிக்கும்படித் தாய்மார் பயிற்சி வழங்குவர். ஏறத்தாழ ஆறாம் மாதத்தில் மேற்கொள்ளப் படும் நடைமுறையாகும்- மரக்கிளையில் உட்காரும் கிளி ஒரு காலை ஊன்றி ஒரு காலைத் தூக்கி முன்னும் பின்னும் அசைந்தாடுவது போல் குழந்தையும் ஒரு காலை ஊன்றி எழுந்து இரண்டு கைகளையும் நிலத்தில் பதித்து நிமிர்ந்து ஆடுதலைச் செங்கீரையாடல் எனக் கூறுவர் அறிஞர்.

3. தால் என்றால் நாக்கு, தாலாட்டு என்றால் நாக்கை ஆட்டி அசைத்து குழந்தையைத் துயிலச் செய்யப் பாடும்பாடலாகும். தாய்மார் பாடலாகும், தொட்டிலில் கிடக்கும் குழந்தையை துயிலச் செய்யும் பாடலாகும். எட்டாம் மாதத்தில் நடக்கும் நிகழ்ச்சி.

4. குழந்தைகள் இரண்டு கைகளைச் சேர்த்துக் கொட்டுதல் சப்பாணி எனப்படும். சப்பாணி கொட்டச் சொல்லீப் பாடும் பாடல்கள் சப்பாணிப் பருவத்தில் இடம்பெறும். ஒன்பதாம் மாதம் நடக்கும் நிகழ்ச்சி இது.

5. குழந்தைக்கும் பதினொரு மாதம் நிரம்பும் பொழுது முத்தம் தரும்படி குழந்தையைத் தாய்மார் வேண்டுவர். அங்ஙனம் வேண்டும் பாடல்கள் முத்தப் பருவத்தில் இடம் பெறுகின்றன

6. பொதுவாகக் குழந்தையின் பன்னிரண்டாம் மாதத்தில் குழந்தை எழுந்து நடக்கத் தொடங்கும். அப்பொழுது குழந்தையை வாவா எனத் தாய்மார் அழைப்பர். அங் ஙனம் அழைக்கும் பாடல்கள் வாரானைப் பருவத்தில் அடங்கும்.

7. அம்புலிப் பருவம் குழந்தையின் பதினெட்டாம் மாதத்தில் நடக்கும் நிகழ்ச்சிகளை விவரிக்கும் பாடல்களைக் கொண்ட பருவமாகும். அம்புலி எனப்படும் சந்திரனைப் பார்த்து பிறையைக் குழந்தையோடு விளையாட அழைக்கும் பாடல்களைக் கொண்டது இப்பருவம். குழந்தையை அம்புலி யுடன் ஒப்பிட்டும், வேறுபடுத்தியும் விளையாட வந்தால் ஏற்படும் நன்மைகளைக் கூறியும் வராவிட்டால் ஏற்படும்

தீமைகளைக் குறிப்பிட்டும் அழைக்கும் பாடல்களைக் கொண்டது இப்பருவம். சாம, தான பேத, தண்டம் என்னும் நால்வகை உபாயங்களைப் பயன்படுத்தித் தாய்மார்அம்புலியை அமைப்பதாகப் புலவர் பாடுவர்.

8. சிறுமியர் சிற்றில் செய்து விளையாடுவர். சிறுவர் அவற்றை சிதைப்பர். சீண்டி விளையாடுவர். சிறுவர்களின் மூன்றாவது வயதில் இத்தகைய நிகழ்ச்சி நடைபெறுவ தாகப் புலவர் கொள்வர். சிறுமியர் சிறுவரைப் பார்த்து "சிற்றிலைச் சிதைக்க வேண்டாம்'' என்று வேண்டிக்கொள் வதாகப் பாடுவர்.

9. குழந்தைகளின் நான்காம் ஆண்டில் சிறுவர் சிறு தேரோட்ட முற்படுவர், சிறு தேரோட்டி விளையாடும்படிக் கூறுவது சிறு தேர்ப் பருவப் பாடல்களாகும்.

10. பாட்டுடைத் தலைவராகிய பிள்ளையைச் சிறுபறை முழக்கி விளையாடும்படிக் கூறும் பாடல்களைக் கொண்டது சிறுபறைப் பருவம். சிறுபறைப் பருவமும் சிறு தேர்ப்பருவ மும் மாரி வருவதுமுண்டு.

இனி ஒரு பிள்ளைத் தமிழ் நூலை எடுத்துக் கொள்வோம். அது நபிகள் நாயகம் பிள்ளைத் தமிழ் என்பதாகும். அதன் முழுமையான பெயர் நபி சல்லல்லாகு அலைகி வசல்லம் அவர்கள் பேரில் பிள்ளைத் தமிழ் என்பதாகும். நபிகள் நாயகம் அவர்களின் பெயரைக் குறிப்பிடும் பொழுது சல் என அடைப்புக்குள் எழுதுவது மரபு. சல்லல்லாகு அலைகி வசல்லம் என்பதையே சல் எனச் சுருக்கி எழுதப்படுகிறது. அதன் கருத்தாவது அல்லாகுவின் சாந்தியும் சமாதானமும் அவர்கள்மீது உண்டாவதாக என்பதாகும். அது ஒரு பிரார்த்தனையாகவும் அமையும். நபிகள் நாயகம் பிள்ளைத் தமிழ் அண்ணல் நபி (சல்) அவர்களைப் பாட்டுடைத் தலைவராகக்கொண்டு அவர்களைக் குழந்தையாகக் கொண்டு அவர்கள் புகழைப் பாடுவதாக அமைந்துள்ளது. நபிகள் நாயகம் பிள்ளைத் தமிழ் முகம்மது (சல்) அவர்களைக் குழந்தையாகக் கொண்டு பத்துப் பருவங்களில் பாடப் பட்டுள்ளது.

நபிகள் நாயகம் பிள்ளைத்தமிழ் என்னும் நூல் சைய்யது அனபியா சாகிபுப் புலவரால் பாடப்பட்டுள்ளது. அவர் தென்காசியைச் சேர்ந்த வடகரையூரைச் சேர்ந்தவராவர். அனபியா சாகிபு சைது மீறா லெப்பையின் திருப் புதல்வரவார். காப்புப்பாக்கள் மூன்றனுள் மூன்றாவது விருத்தத்தில் ஆசிரியர் தம்மைப்பற்றிக் குறிப்பிட்டுள் ளார். அச்செய்யுள் பின்வருமாறு அமைந்துள்ளது:

மதிகாடா றுமும்மா ரிபொழி தல்சேர்ந்த
வடகரை யூர்தனில் வாழுந்தீனு ளோர்க்கு
விதிமுறை கடல றாமற் றினங்கடோறும்
விருப்ப மதாயுரைக் குஞ்சைது மீறாலெப்பை
துதியுடை யதவப் பலனா லுதித்துவந்த
தோன்றல் சையிதன பியாசா கிபானோன்
கதியுடை யமுகம் மதுநபி மேற்பிள்ளைக்
கவிதை மொழிசிறப் பாகக் கழறினானே. (3)

நபிகள் நாயகம் பிள்ளைத் தமிழை இயற்றியதற்கு ஆசிரியருக்கு பொருளுதவி புரிந்தோர் இருவர். கொடை வள்ளல்களான அவர்களை ஆசிரியர் அனபியா சாகிபு அவர்கள் குறிப்பிட்டுள்ளார். ஒருவர் திருநெல்வேலிப் பேட்டையைச் சேர்ந்த மேத்தர் முகியித்தீன் றாவுத்த ராவர். மற்றவர் முகம்மது நயினார் றாவுத்தார் ஆவார். இங்கே குறிப்பிட்ட மேத்தர் முகியித்தீன் றாவுத்தர் என்பவர் சீறாப்புராணத் தின் ஒரு பதிப்பை வெளியிட்டவராவர். அவர் சீறாப்புராணம் பதிப்பித்த ஆண்டு துந்துபி ஆண்டான கி. பி. 1862 ஆகும். அடுத்த ஆண்டான உருத்ரோற்காரி ஆண்டான கி. பி. 1863ஆம் ஆண்டில் மேத்தர் முகியதீன் றாவுத்தர் முக்கூடற் பள்ளுநூலைப் பதிப்பித்து வெளியிட்டுள்ளார் என்பது ஈண்டு நோக்கற்பாலது. நபிகள் நாயகம் பிள்ளைத் தமிழ் நூல் வெளிவரக் காரணமாயிருந்த இருவரையும் இரண்டு செய்யுட்களில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர் சையிது அனபியா சாகிபுப் புலவர்:-

ஆதநபியைப் படைக்குமுனம் அருமை நபியா யிருந்துதிரை
யலைசூழ்புவ னமனுவடி வாய்ப்பிறந்த நபிபொருட்டால்
சீதசோலை நதிவளஞ்சூழ் திருநெல்வேலிப் பேட்டைதனில்
சிறப்பா யுதித்த மேத்தர்முகி யித்தீன் ராவுத் தர்க்குமவ்வூர்
நீதிவழுவா முகம்மதுநன் நயினாரா வுத்தர்க்குநனி
நிதியேபெருகி யோங்கிவளர் நேராயுள்ள வர்த்தகங்கள்
ஆதியோடே கொடுத்தருள்வாய் அரியபெரிய புகழுடைய
ஆதிமுதலே யிறையவனே யழியாப்பொருளே அல்லாஹ்வே
(காப்புப் பருவம்: 9)

சீர்கொண்ட வாவிவள மேகொண்ட சோலைசூழ் திருவார்ந் திருநெல்வேலி
திகழ்கின்ற உடலினுயி ராய்வந்த மேத்தர்முகி யத்தீன்ராவுத் தரொண்
கார்கொண்ட வண்டமிழ்க் கவிராயர் குலத்தில் காராய் வந்த விடலை யானோன்
கருணையிருவிழிமுகம் மதுநயினார் றாவுத்தர் கல்பாசனத்தினூடு

கூர்கொண்டு விளையாடி வருதுரைச்சிங்கமே குவலையத்தோர் கள்
கூறுல்கீன் கன்னிபரி தேவுஜின் மற்றுமுள கோடானு கோடியுயிரும்
சூர்கொண்ட சோபனமாராய வள்ளலே ஆடியருள் செங்கீரையே
அறுசேறி வசனித்து வந்த மகுமூதரே ஆடியருள் செங்கீரையே
(செங்கீரைப் பருவம்: 10)

இங்கே கல்பு என்பது இருதயத்தைச் சுட்டுகின்றது.

பிள்ளைத் தமிழ் நூல்களில் பத்துப் பருவங்களில் பாட்டுடைத் தலைவர் குழந்தையாகக் கொண்டு பாடப்பட்டுள்ளார் புகழப்பட் டுள்ளார். பருவங்களைப் பொறுத்தவரையில் ஆண்பாற் பிள்ளைத் தமிழுக்கும் பெண்பாற் பிள்ளைத் தமிழுக்கும் ஒரு சிறு வேறுபாடு உண்டு. முதல் ஏழு பருவங்களும் ஆண்பாற் பிள்ளை தமிழ் நூல் களிலும் பெண்பாற் பிள்ளைத் தமிழ் நூல்களிலும் பொதுவானவையாக அமையும். கடைசி மூன்று பருவங்களில் வேறுபடுகின்றன. பொது வாக வரும் ஏழு பருவங்களும் வருமாறு: காப்புப் பருவம், செங்கீரைப் பருவம், தாலப் பருவம், சப்பாணிப் பருவம், முத்தப் பருவம், வாரானைப் பருவம், அம்புலிப் பருவம். இருவகையான பிள்ளைத் தமிழ் நூல்களிலும் வேறுபட்டுவரும் பருவங்கள் வருமாறு:

| ஆண்பாற் பிள்ளைத் தமிழ் | பெண்பாற் பிள்ளைத் தமிழ் |
|---|---|
| சிற்றில் பருவம் | அம்மானைப் பருவம் |
| சிறுபறைப் பருவம் | நீராடற் பருவம் |
| சிறுதேர்ப் பருவம் | ஊசற் பருவம் |

ஆண் பெண் இயல்புகளைக் கருத்தில் கொண்டே இங்ஙனம் வேறு வேறான பருவங்களைப் புலவர் அமைத்துள்ளனர்.

குழந்தைக்குப் பாதுகாப்புக் கோருவதாகக் காப்புப் பருவம் அமைந்துள்ளது நபிகள் நாயகம் பிள்ளைத் தமிழ் நூலில் அல்லாஹ் வின் பாதுகாப்பு குழந்தைபால் வேண்டப்படுகிறது காப்புப் பருவத் தில் உள்ள எல்லாப் பாடல்களிலும் குழந்தைமீது அல்லாஹ்வின் பாது காப்பு மாத்திரமே கேட்கப்படுகிறது. துயருற்ற காலை பல்வேறு நபி மாராம் தீர்க்கதரிசிகளை உரிய நேரத்தில் காப்பாற்றியது போன்று அண்ணல் நபி (சல்) அவர்களைக் காப்பாற்றுமாறு ஆசிரியர் அல் லாஹ்விடம் குறை இரங்குகிருர். முஸ்லிம் அல்லாத அடிப்படையில் தோன்றிய பிள்ளைத் தமிழ் நூல்களில் பல்வேறு தெய்வங்களின் பாது காப்பு நாடப்பட்டிருப்பதைக் காணலாம்.

இரண்டாவது பருவம் செங்கீரைப் பருவம். இங்கே குழந்தையை முன்னும் பின்னுமாக அசையுமாறு கோரும் பாடல்கள் இடம் பெறுகின்றன. ஒவ்வொரு செய்யுளும் 'செங்கீரை ஆடி அருளே' என முடிவுறுகிறது. 'ஆடுக செங்கீரை' 'ஆடி அருள் செங்கீரை' என மாறி வருவதுமுண்டு.

அடுத்த பருவம் தாலப் பருவம். தால் என்றால் நாக்கு. எனவே நாக்கை அசைக்கும்படி வேண்டப்படும் பாடல்களாக தாலப் பருவப் பாடல்கள் அமைந்துள்ளன. தாலேலோ என ஒவ்வொரு பாடலிலும் பலமுறை வந்திருக்கக் காணலாம். அவை தாலாட்டுப் பாடல்களாகவே அமைந்துள்ளன.

கை கொட்டுதல், சப்பாணி கொட்டுதல் எனப்படும். இங்ஙனம் சப்பாணி கொட்டும்படி குழந்தையை வேண்டும் பாடல்களைக் கொண்ட பருவம் சப்பாணிப் பருவம் என அழைக்கப்படுகிறது. இந்தப் பருவத்திலுள்ள ஒவ்வொரு பருவத்திலும் சப்பாணி கொட்டி அருளே என பல தடவைகள் வந்திருப்பதைக் காணலாம்.

குழந்தைகளுடன் கொஞ்சி மகிழும் பொழுது முத்தம் தா எனக் குழந்தையிடம் கேட்பது உண்டு. அங்ஙனம் முத்தம் அருளே எனக் கேட்பதாக அமைந்த பாடல்களைக் கொண்டது பிள்ளைத் தமிழில் உள்ள முத்தப் பருவப் பாடல்கள். முத்தம் அருளே என்றும் முத்தம் தந் தருளே என்றும் முத்தம் அளித்தருளே என்றும் வெவ்வேறு விதமாக முடியும் பாடல்களைக் கொண்டுள்ளது முத்தப் பருவப் பாடல்கள்.

வருக வருகவே என்று குழந்தையை வரவழைக்கும் பாடல்களாக வருகைப் பருவப் பாடல்கள் அமைந்துள்ளன. வருகைப் பருவம் சில வேளைகளில் வாரானைப் பருவமாகவும் அழைக்கப் பெறுகின்றன.

ஏழாவது பருவமாக அமைவது அம்புலிப் பருவம். பிறையை அழைப்பதாக அம்புலிப் பருவம் காட்சி அளிக்கின்றது. பாட்டுடைத் தலைவரான குழந்தையுடன் வந்து விளையாடுமாறு பிறை அழைக்கப் படுவதை அம்புலிப் பருவத்தில் காணலாம். அங்ஙனம் பிறையை அழைக்கும்பொழுது பிறைக்கும் பாட்டுடைத் தலைவரான குழந்தைக்கும் உள்ள ஒற்றுமைகளின் அடிப்படையில் ஒப்பு நோக்கி நடைபெறுகின்றது. பிறையின் இயல்புகள் பாட்டுடைத் தலைவரான குழந்தையின் இயல்புகள் போன்று இருந்தாலும் குழந்தையின் அத்தகைய இயல்புகளே சிறந்தன என அம்புலிப் பருவப் பாடல்களில் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. 'அம்புலி ஆடவாவே' என ஒவ்வொரு பாடலும் முடிவடைகிறது.

இந்த ஏழு பருவங்களும் ஆண்பாற் பிள்ளைத் தமிழ் நூல்களுக்கும் பெண்பாற் பிள்ளைத் தமிழ் நூல்களுக்கும் பொதுவாக அமையும். மற்ற மூன்றும் வேறுபட்ட நிலையில் பாடப்பட்டுள்ளன. ஆண்பாற் பிள்ளைத் தமிழில் எட்டாவது பருவமாக வருவது சிறுபறைப் பருவம். நபிகள் நாயகம் பிள்ளைத் தமிழில் சிறுபறைப் பருவம் எட்டாவது பருவமாக வந்துள்ளது. சிறுபறையை முழக்குமாறு பாட்டுடைத் தலைவரான குழந்தை கோரப்பட்டிருப்பதைக் காணலாம். சிறுபறை முழக்கி அருளே என ஒவ்வொரு பாடலும் முடிவடைகிறது.

சிற்றிற் பருவம் ஆண்பாற் பிள்ளைத் தமிழில் ஒன்பதாவது பருவமாக அமைகின்றது. 'சிறியேன் சிற்றில் சிதையேலே', 'அடியேன் சிற்றில் அழியேலே' என வேறுபட்டுச் சிற்றிற்பருவப் பாடல்கள் அமைந்துள்ளன. தமது விளையாட்டு இல்லங்களை – மணலினால், மண்ணினால் அமைக்கப் பெற்ற தமது சிறிய வீடுகளை அழிக்கவேண்டாம் எனக் கோருவதாக இப்பாடல்கள் அமைந்துள்ளன.

ஆண்பாற் பிள்ளைத் தமிழில் பத்தாவது பருவமாக அமைந்திருப்பது சிறுதேர்ப் பருவமாகும். இப்பருவப் பாடல்களில் பாட்டுடைத் தலைவர் குழந்தைப் பருவத்தில் விளையாட்டுத் தேர்களை— சிறிய தேர்களை நடத்துமாறு – உருட்டுமாறு வேண்டப்படுவதைக் காணலாம். 'சிறுதேர் நடத்தி அருளே' 'தேரை நடத்துகவே' என இப்பாடல்கள் முடிவுறுகின்றன.

சில சமயங்களில் ஆண்பாற் பிள்ளைத் தமிழ் நூல்களில் கடைசி மூன்று பருவங்களும் மாறி வருவதுண்டு. சிற்றில், சிறுதேர், சிறு பறை என்றும் வரக் காணலாம்.

பெண்பாற் பிள்ளைத் தமிழ் நூல்களில் எட்டாம் ஒன்பதாம் பத்தாம் பருவங்கள் முறையே அம்மானைப் பருவம், நீராடற் பருவம், ஊசல் பருவம் என வரும். அம்மானை விளையாட்டில் ஈடுபடத் தூண்டுவதாக அம்மானைப் பருவப் பாடல்கள் அமையும். ஆடுக அம்மானை என்பதை இறுதியிலே கொண்டிருக்கும். பெண் பிள்ளைகளை நீராடத் தூண்டுவதாக நீராடற் பருவப் பாடல்கள் காட்சி அளிக்கும். ஊஞ்சல் கட்டி ஆடும்படி உற்சாகமூட்டும் பாடல்களாக ஊசற் பருவத்தில் காணலாம்.

மேத்தர் முகியத்தீன் அவர்களின் சீறாப்புராணப் பதிப்பு வெளிவந்து 21 ஆண்டுகளின் பின்னரும் முக்கூடற் பள்ளு வெளி வந்து 20 ஆண்டுகளின் பின்னரும் நபிகள் நாயகம் பிள்ளைத் தமிழ் வெளி வந்துள்ளது. அது அச்சிடப்பட்ட ஆண்டு கி. பி. 1883 ஆகும். இதற்கு முன்னரும்

இந்நூல் பதிப்பிக்கப் பட்டிருத்தல் வேண்டும். 'இஃது முன்பதித்த பிரதிக்கிணங்கத் திருவெண்காடு ஆறுமுக சாமிகளால் பரிசோதிக் கப்பட்டுள்ளது, இது வெளியிடப்பட்ட அச்சுக்கூடம் பரப்பிரம்ம முத்தி ராட்ச சாலை எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வச்சுக்கூடம் பரசுராம முதலியாருடையது என்றும் பரசுராம முதலியார் திருவொற்றியூர் இருசப்பமுதலியார் குமாரர் என்றும் அறிய முடிகின்றது.

ஒவ்வொரு பருவத்துக்கும் பத்துப் பாடல்களாக 100 பாடல் களையும் காப்புச் செய்யுட்களாக மூன்று விருத்தப் பாக்களையும் கொண்டு எல்லாமாக 103 பாடல்களைக் கொண்டதாகத் திகழ்கிறது, சையிது அனபியா சாகிபு அவர்களால் இயற்றப்பெற்ற நபிகள் நாயகம் பிள்ளைத் தமிழ் என்னும் நூல்.

நபி நாயகம் பிள்ளைத் தமிழ் நூலில் மக்கமா நகரின் இயற்கைக் காட்சிகள் வருணிக்கப்பட்டுள்ளன. இவ்வாறு இயற்கைக் காட்சிகள் நிறையவுள்ள ஒரு செய்யுளை எடுத்துக் கொள்வோம். அச்செய்யுள் வருமாறு :

சிங்க முழங்கு மொலி களெனச்
    செறுநர் குலத்தைச் செகுத்துலகிற்
சிறப்பாய்த் தீனின் பயிரேற்றச்
    செழுமா முகிலாய் வந்தோரே
மங்குல் முழங்குங் கவிகை நிழல்
    வரிசையுடைய மாதவரே
மணியின் வடிவாய் மயில் வடிவாய்
    மனுவின் வடிவாய் வந்தோரே
சங்க முழங்கும் வயலுழவர்
    தரையில் முழங்குந் தெண்ணீரிற்
சலச முழங்கும் புட்பறக்கத்
    தாவிக் கயற்கள் போய்த் துரத்தச்
சங்கு முழங்க மக்க நகர்த்
    தலைவர்க் கரசே தாலேலோ
தாகா நபியே முகம்மதுவே
    தாசீம் காமீம் தாலேலோ

(தாலப் பருவம் :5 )

''சிங்கங்களின் முழக்கத்தைப் போன்று ஆரவாரித்து இஸ்லாத்தின் பகைவர்களை அழித்து உலகினில் சிறப்புப் பொரு[illegible]ிய இஸ்லாம் என்னும் பயிரை வளர்க்கப் பெரிய[illegible]ல் கூட்டமாய் வந்த உத்தமரே, முகில் கூட்டங்கள் இடி மு[illegible]ய் யும்போது குடையாக நின்று மக்களைக் காப்பாற்றிய[illegible]ய பெரிய தவத்தையுடையவரே, ஆதியில் ஒளிவடிவா[illegible]ல்

வடிவாய்த் திரிந்து பின்னர் மனித வடிவாய்ப் பிறந்தவரே, சங்குகள் முழங்குகின்ற வயலிலே உழவர் தமது கலப்பைகளினால் முழக்கஞ் செய்ய அம்முழக்கத்தைக் கேட்டுத் தெளிந்த நீரையுடைய குளத்தி லுள்ள தாமரையில் வசிக்கும் அன்னப்பறவைகள் பறக்க அதைக்கண்டு கயல்கள் தாவிப்போய் அப் பறவைகளைத் துரத்த சங்குகள் முழங்கும் மக்க நகரத் தலைவர்கட்கரசரே, தாலேலோ,''

''இன்பமாய்த் துயில்வீராக'' என்பது இச்செய்யுளின் பொரு ளாகும். இச் செய்யுளில் மக்காவின் வளம் சிறப்பிக்கப்பட்டுள்ளதைக் காணலாம். இச் செய்யுளைப் போன்று முகம்மது நபி (சல்) அவர் களின் புகழ்ப்பாடும் முகமாக மக்கா நகரின் நீர்வள நிலவளங்கள் சுவைமிக்கனவாய் மிக அழகாக வருணிக்கப்பட்டுள்ள செய்யுட்களை இங்கு காணலாம். அவை படிப்பவருக்கும் இன்பம் பயக்க வல்லவையாம்.

காப்புப் பருவத்தில் இடம் பெற்றுள்ள கடைசிச் செய்யுள் அவை யடக்கச் செய்யுளாக அமைந்துள்ளது. நன்னபி மீது வரிசை மிகுந்த கவிபாட தாம் முன்வந்துள்ளதாகவும் அவ்வாறு தாம் பாடுவது எத் தகைய கவிதை என்பதைத் தன்னடக்கமாகக் குறிப்பிட்டுள்ளார். சிறந்து விளங்கும் ஆற்றல்மிக்க கவிஞர் விண்மணிப்பிரவை(சூரிய ஒளி) போன்ற கவிதையினை இயற்றுவர். அத்தகைய கவிஞர் முன்னிலை யில் தாம் ஒரு மினிட்டான் (மின்மினிப் பூச்சி) ஆக உள்ளதாகவும் ஆகவே அவர்கள் தம் கவிதையோடு ஒப்பிடும் பொழுது தமது கவிதை மின்மினியின் ஒளி போன்றிருக்கும் என்றும் அந்தச் செய்யுளில் பின் வருமாறு பாடி உள்ளார்:

தண்மணி கொழிக்கு மலைகடல் சூழ்ந்த
தரையெலாந் தீனெறி நடத்த
வண்மணி யாக வுதித்தநந் நபிமேல்
வரிசையின் கவிமிக மிகவும்
விண்மணிப் பிரவை யனையபாச் சொல்லி
விண்டிடுங் கவிஞர்முன் மினிட்டான்
கண்மணிப் பிரவை போலுமியான் பிள்ளைக்
கவிமழை சொரிந்தன னன்றே.

(காப்புப் பருவம்: 10)

[illegible] த்த [illegible] லிமா அம்மையாரிடம் பாலுண்ட காட்சியை வரு
ண [illegible] ருவத்தில் ஒரு பாடலைப் பின்வருமாறு பாடி
உ [illegible]

தேனொடு முக்கனி பாலொடு சர்க்கரை தெள்ளமு தொன்ருகச்
சேர்ந்தமு தூறிய செவ்விதழ் வாய்க்கிடத் தித்தம தாகுமுயர்
கானம லர்க்குழ லலிமா விடமுலைக் கலசம ருந்தாமல்
காரண மாகவே தோன்றிய தனமொடு கலசமு துண்டோரே
மானவர் துதிசெயும் வரத சவுந்தர மழைமுகில் தாலேலோ
மறைநெறி பொங்கிய வரத பரம்பர மனுபதி தாலேலோ
தானவர் துதிசெயுஞ் சாக நிரம்பிய தவநிதி தாலேலோ
தனியபு துல்லா குமர சுதாகர தாகா தாலேலோ

(தாலப் பருவம்: 8)

சப்பாணிப் பருவத்தில் வரும் ஒரு பாடலில் தீர்க்க முடியாதிருந்த சிக்கலான ஒரு பிரச்சினையைத் தங்களது திருக்கரங்களால் தீர்த்து வைத்தார்கள் நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்கள். ஒரு யுத்தமே மூளக் கூடிய சூழ்நிலையைத் தவிர்த்தார்கள். கஃபத்துல்லா வெள்ளத்தினால் சேதப்படுத்தப்பட்டு பின்னர் அது புனர்நிர்மாணம் செய்யப்படும் சந்தர்ப்பத்தில் உரிய இடத்தில் ''ஹஜருல் அஸ்வத்'' என்னும் புதைக் கல்லை யார் தூக்கிவைப்பது என்னும் பிரச்சினை குறைசிக் கோத்திரங்களுக்கிடையே தோன்றியது. மறுநாள் யார் கஃபத்துல் லாஹ்வுக்குள் முதன்முதலில் புகுகிறார்களோ அவர்களின் தீர்ப்பை ஏற்பதென்று எல்லோரும் இணங்கினர். குறிப்பிட்ட அந்நாளில் முதன்முதலில் புகுந்தவர் எம்பெருமானார் முகம்மது நபி (சல்) அவர்களேயாவர். எனவே அவருடைய முடிவை எல்லோரும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். எங்கள் நாயகம் முகம்மது (சல்) அவர்கள் ஒரு சீலையைக் கொண்டுவரச் சொன்னார்கள். அது கொண்டுவரப் பட்டதும் அதன் மேல் கல்லைத் தாக்கி வைக்க ஏற்பாடு செய்தார்கள். பின்னர் பல்வேறு குறைசிக் கோத்திரங்களின் தலைவர்களை அழைத்து ஒவ்வொரு மூலையையும் ஒவ்வொரு தலைவரைப் பிடிக்கச் செய்து உரிய இடத்தில் ஹஜருல் அஸ்வத் என்னும் கல்லைத் தூக்கி வைத்தார்கள் அண்ணல் நபி (சல்) அவர்கள். இதனையே சையித் அனபியா சாகிபு அவர்கள் சப்பாணிப் பருவத்தில் உள்ள ஒரு பாடலில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்கள்.

வனமீறு வாரிசூழ் மண்பெறும் பூவினில் வறுமையிட ரணுகாமலே
வளர்கின்ற செல்வமு மறிவோடு பயனுள்ள மறையோர்கள் சிறியோர்களும்
சினமாறி வாழ்கின்ற செயமக்க நாட்டினிற் செயிலெனும் மழை யதனினால்
சேதமாய்ப் போனகது பாவினைக் குறைசிகள் செய்திடு மந்நாளினில்
இனமான வீரியர்க ளெடுத்திடவு மேலாம லிருந்தகச றுல்அசுவதென்
றியம்பிடுங் கல்லதனை யெழுந்தசுவர் தென்கீழின் மூலைக் கெடுத்தேந்தியே

தனதாக வைக்குஞ்செந் தாமரைக் கைகளாற் சப்பாணி கொட்டியருளே
தவமேவு மிக்ககுரு தாகாமுகம்மதே சப்பாணி கொட்டியருளே
(சப்பாணிப் பருவம்: 3)

ஒரு தாய் தம் குழந்தைச் செல்வத்திடம் முத்தம் கோரும் பாடலாக ஒரு செய்யுள் அமைந்துள்ளது. அந்தச் செய்யுளில் முத்தம் என்னும் சொல் இரண்டு கருத்துக்கள் தொனிக்கப் பாடப்பட்டுள்ளது. அன்பின் அடையாளமாக ஒருவர் இன்னொருவருக்கு வழங்கும் ஆலிங்கனம் முத்தமிடுதல் என வழங்கப்படுகிறது. முத்து என்பதற்கும் முத்தம் என்னும் சொல் பயன்படுத்தப்படுகிறது. நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களின் தாமரை இதழ் போன்ற வாயிலிருந்து பெறப்படும் முத்தத்துக்கு வேறெந்த முத்தம் இணையாகும் என ஆசிரியர் கேட்டுள்ளார். எது சிறந்தது? ஒரு மயிலின் தோகையா? முல்லை மலரா? நாரையின் கண்ணா? புட்பராகமா? இளந் தாமரையீனும் முத்தா? மலையிலிருந்து பிறப்பிக்கப்படும் முத்தா? பிரகாசம் குறையாத இளம் பிறையின் முத்தா? யானையின் கொம்பிலிருந்து பெறப்படும் முத்தா? இனிய கரும்பிலிருந்து பெறப்படும் முத்தா? இவை அனைத்தையும் ஒன்று சேர்த்துக் கோத்தாலும் அவை அனைத்தும் ஒன்று சேர்ந்தாலும் அது நபிகள் நாயகம் (சல்) அவர்களின் புனித வாயிதழிலிருந்து பெறப்படும் முத்துக்குச் சரியாமோ என வினா எழுப்பியுள்ளார் ஆசிரியர். ஈடிணையாகாத அத்தகைய திருவாய் மலர்ந்து முத்தம் அளிக்கும்படி குழந்தையாகக் கணித்து முகம்மது நபி (சல்) அவர்களிடமிருந்து முத்தம் வேண்டி நிற்கிறார். நாயகத் தன்மை உணர்த்தும் நபி நாயகம் பிள்ளைத் தமிழ் ஆசிரியர் சையிது அனபியா சாகிபு அவர்கள். இக் கருத்துக்களைக் கொண்ட செய்யுள் பின்வருமாறு அமைந்துள்ளது.

தோகை முருந்து முல்லை நன்றாய்த் துலங்கி யீன்ற கடியரும்புக்
துணிவு வுடைய தொடுப தமுஞ்சுடர் சேர்புட் பராகமொடும்
நாகு வலரி யீன்ற முத்து நாகமிடத்தில் விளைந்த முத்து
நகைதல் குறையா மதியின்முத்து நாகமருப்பில் விளைந்தமுத்தும்
பாகு வுடைய கரும்பின் முத்தும் பலதின் முத்தைக் கோர்த்து வுந்தன்
பதுமத் திகழ்வாய் முத்தினுக்குப் பாவித் துரைத்தல் சரியாமோ
வாகு குறையா தொளிவுடைய மணிவாய் முத்தமளித் தருளே
வல்லோ னிடத்தில் மொழிந்துவந்த மணிவாய் முத்தமளித்
தருளே
(முத்தப் பருவம் : 5)

இந்தச் செய்யுளில் முத்தம் போன்றதை முத்தம் என வருணித்துள்ளார். மயிலின் தோகையர் பெண்மை, முல்லைமலரின் வெண்மை

நாரையின் கண்ணின் அருகின் வெண்மை, புட்பராகத்தின் வெண்மை என்பன வெண்மையாய்ப் பிரகாசம் பொருந்தியனவாய் அமைந்தமை யினால் அவை வெண்முத்து எனக் கொண்டுள்ளார் ஆசிரியர். ஆனால் இந்த முத்துகளும் முத்துக்களாகக் கருதப்படும் எவையும் நபிகள் நாயகம் முகம்மது (சல) அவர்களின் குழந்தைப் பருவத்தினது முத்தத்துக்கு ஒப்பாய் அமையவில்லை என்பதே ஆசிரியர் இங்கே எடுத்துக்காட்டிய கூற்றாகும்.

அடுத்து வருவது வருகைப் பருவம். வாரானைப் பருவம் என்றும் அழைக்கப்படும். வாரானை என்பதும் வருகை என்பதையே சுட்டு கின்றது. முகம்மது நபி (சல்) அவர்களைக் குழந்தையாக மதித்து அவர்கள் வருக என அழைக்கப்படுகிறார்கள். அங்ஙனம் வருகை தந்தால் அன்றலர்ந்த தாமரைமலர் போன்ற பாதத்தின் அடிகளில் சிலம்பினையும் கிண்கிணிகளையும் அணிவதாகவும் பகைவர்கள் மயங்கும் வண்ணம் வீரக்கழல்களை அணிவதாகவும் ஒலிக்கும் அணி கலன்களை அணிவதாகவும் பெரிய மலை போன்ற புயத்திலும் மார்பிலும் நறுமணங் கமழும் அத்தர், பன்னீர், நான்கு வகையான மணப்பொருள்களைத் தடவுவதாகவும் சிறந்த ஆடைகளை அணிவ தாகவும், வந்த பின்னர் தொட்டிலில் வைத்து தாலாட்டிப் பாலூட்டி சீராட்டுவதாகவும் குறிப்பிடப்பட்டுள்ளன. ஆதலினால் உண்மை யுடைய முகம்மதரே வருக வருகவே எனப் பின்வருமாறு பாடியுள்ளார் ஆசிரியர்.

அல்லில் விரியாக் கமலமல ரடியிற்சிலம்பு கிண்கிணியும்
அணிய வருக அவனிதனி லலைவா ரிதிபோ லெதிர்சீறும்
ஒல்லார் மயங்கக் கழன்மணியை யுவந்து வணிய வருகமணி
யொலியி லணிய வருகநெடு வோங்க லனைய புயமார்பில்
நல்ல களப மத்தர்பன்னீர் நாலு வகையின் பரிமளமு
நன்றாய்ப் புலர்த்தக் கலையுடுத்த நாடி வருகத் தொட்டில்தனில்
உல்லா சமதாய் வைத்தாட்ட வுவப்பாய் வருக வருகவே
உண்மை யுடைய முகம்மதுவே வுவப்பாய் வருக வருகவே.

(வருகைப் பருவம்: 4)

இளம்பிறையை, அம்புலியை பிள்ளைத் தமிழில் பாடப்படும் குழந்தையுடன் ஆடவரும்படி அம்புலிப் பருவத்தில் கேட்கப்படுகிறது. முகம்மது நபி (சல்) அவர்களுக்கும் சந்திரனுக்கும் உள்ள பெருமைப் பாடுகள் இங்கே குறிப்பிடப்படுகின்றன. ஆனால் அவை ஒத்த தன் மையனவாய் அமைந்த போதிலும் முகம்மது நபி (சல்) அவர்களிடத் தில் உள்ள அத்தகைய நன்மைகள் சிறப்பானவையாகக் கருதக் கூடியவை எனப் புலவர் விழைந்துரைத்துள்ளார்.

பிறையை விளித்து, அம்புலியே, உன்னைச் சூழவர நட்சத்திரக் கூட்டங்கள் உண்டு. ஆனால் நபிகள் நாயகத்தைச் சூழவர சிறந்த இறைநேசச் செல்வர்களான குத்துபுமார்கள் நட்சத்திரங்களாக உள்ளனர். உன்னிடம் ஒரு முயலுண்டு. ஆனால் எங்கள் நபி நாதரிடம் இறைவசனத் தகுதி முயல்கள் பல உண்டு. இறைவசனங்களைப் பின்பற்ற முயல்கின்றார். பரந்த வானுலகில் மாத்திரம் நீ அதிகாரம் செலுத்துவது உண்மையே. ஆனால் எங்கள் நபிகள் நாயகம் (சல்) அவர்கள் மண்ணுலகிலும் வானுலகிலும் அதிகாரம் செலுத்துகிறார்கள். உனது ஒளி மாறி மாறிவரும். ஆனால் எங்கள் நபிகள் நாயகத்துக்கு, குபிர் என்னும் இஸ்லாம் அல்லாத தன்மையை மாற்ற மறை மொழி என்னும் ஒளி உள்ளது. உன்னிடம் பதினாறு கலைகளே உண்டு. எங்கள் நபிகள் நாயகம் (சல்) அவர்களிடமோ அறுபத்து நான்கு கலைகளும் ஒருங்கே குடிகொண்டிருக்கின்றன. நீயோ விட்டு விட்டுக் குறைகிறாய். விட்டுவிட்டு வளர்கிறாய். எங்கள் நாயகத்திடமோ எவ்வித குறையுமில்லை. அத்தகைய சிறப்புமிக்க நபிகள் நாயகத்துடன் அம்புலியாடவாவே என அம்புலியை அழைக்கிறார் ஆசிரியர். இக்கருத்துக்களைக் கொண்ட பாடல் பின்வருமாறு அமைந்துள்ளது.

தாரகைக் குழுவுண் டுனக்கதிக குத்துபுத் தாரகைக் குழுவுண்டு
சார்ந்தமுய லொன்றுண் டிவர்க்கிறை வசனத்தகுதிமுயல் மிகவுண்டு
மார்பான சேணினுக் கதிகார னீயிவர் மண்விசும்புக் கதிகாரர்காண்
மாற்றவுனக் கொளியுண்டு இவருக்குக் குபிரை மாற்றமறை மொழியுண்கொல்
ஏர்பெருகு மீரெட்டுக் கலையுண் டுனக்கதிக மெட்டெட்டுக் கலையுண்டுகாண்
இடம்பெருக வளர்வதுங் குரைவது முனக்குண்டு யிடர்குறைஇல் லாததிவர்காண்
ஆர்வமுள பொருளான தாகையா லிவருட னம்புலி யாடவாவே
ஆகிறத்தில் மண்நாடி யீடேற்று நபியுடன் அம்புலி யாடவாவே
(அம்புலிப் பருவம் : 4)

சிறுபறைப் பருவம் முகம்மது நபி (சல்) அவர்களை குழந்தையாக வருணிக்கும் பொழுது முழங்கும் சிறுபறையின் சிறப்பு விவரிக்கப்படுகிறது. அந்த சிறுபறையின் முழக்கம் ஒலிக்க விண்ணுலகடங்கலும் தள்ளாடினர். ஏழு மேகங்களும் வெருண்டோடின; விண்ணைத் தொட உயர்ந்த மேரு முதலான மலைகள் எட்டும் நடுநடுங்கின; அவைகளைக் கொண்ட கடல் அதிர்ந்தது; மண்ணுலகு எல்லாம் அசைந்தன. சேடனும் மயக்கமடைந்தது. எட்டுத் திக்கிலுமுள்ள

யானைகள் உணர்ச்சி இழந்தன. மதஞ் சிந்தின; பரந்து விரிந்த ஆகாயம் திடுக்கிட்டது; சந்திரனும் சூரியனும் அவற்றின் நிலையி லிருந்து பெயர்ந்து சென்றன; கலங்கின; கவலையுற்றன; அவற் றோடு அவற்றைச் சார்ந்த குதிரைகளும் தள்ளாடின; ஆகையினால் உங்களுடைய வன்மையான திடகாத்திரமான வடிவான கைகளால் உங்கள் சிறுபறையைக் கொட்டுக, முழக்கியருளுக. இவ்வாறு பாடி யுள்ள ஆசிரியர் இக்கருத்துக்களிலே பிறசமயக் கருத்துக்களையும் இஸ்லாமிய கருத்துக்கள் எனப் படிப்போர் கொள்ளக்கூடிய வகையில் சேர்த்துள்ளார். பிற மதச் செய்திகளை நாம் இஸ்லாமியக் கொள்கை களிலிருந்து பிரித்து அறிந்துகொள்ளுதல் வேண்டும். இக்கருத்துக்கள் ஒரு செய்யுளில் பின்வருமாறு இடம் பெற்றுள்ளன:

விண்ணுல கடங்கலுந் தள்ளாட வெழுமேகம் வெறிகொண்டு
வெருண்டோடவே
விசும்பளவு மட்டகிரி மேருடனடுங்கிட வேலைகடலதிர்
கொள்ளவே
மண்ணுல கடங்கலு மசைந்திடவே சேடனு மயக்கமது மிகக்கொள்ள
மாதிரத் துறைகின்ற யிருநான்கு யானைகள் மதஞ்சிந்தி மருள்
கொள்ளவே
கண்ணொளி விலமையாத ககனமுந் திடுக்கிடக் கனலியொடு
மதியானதுங்
கருத்தினில் கலக்கமது கொண்டுதா னிலையன்றி கற்கியொடு
கலைந்தோடவே
திண்ணமுள மெய்யான வடிவுள்ள கைகொண்டு சிறுபறை
முழக்கியருளே
செழுமுகிலின் கவிகை நிழலுடையமகு மூதரே சிறுபறை
முழக்கியருளே
(சிறுபறைப் பருவம்)

சிற்றில் பருவத்தில் சிற்றிலைச் சிதைக்க வேண்டாம் என்று கூறுபவர்கள் சிறுமியரே. ஏனைய பருவங்களில் பெரும்பாலும் தாய்மாரே உரையாடலை ஆரம்பிக்கின்றனர். சிறுமியர் கடலோரத் தில் மணலினால் இலைகளினால் கடற்சிப்பிகளினால் அமைக்கும் சின்னஞ் சிறிய வீடுகளைச் சிதைக்க வேண்டாம் என்று கேட்பதாகப் பாடல்கள் அமைந்துள்ளன. சிறுமியர் முகம்மது நபி (சல்) அவர் களைக் குழந்தையாகக் கொண்டு பின்வருமாறு கூறுகின்றனர். எமது சிற்றில்களைச் சிதைப்பின் தங்களுடைய சதங்கை அணிந்த கால்கள் நோகாதோ? ஒவ்வொரு நாளும் இறைவனிடம் குறை இரங்கும் இரண்டு கைகளும் சிவக்காதோ? நறுமணங்கமழும் தங்கள் உடல் இதன் பயனாக புழுக்கம் அடையாதோ, வியர்வை கொட்டாதோ? தங்களுடைய ஆடைகளை அதன் பயனாக அழுக்கு வந்து சேராதோ? ஆகாயத்திலுள்ள சந்திரனைப் போன்ற தங்களின் வதனத்தில்

வேர்வை தோன்றி களைப்பை உண்டாக்காதோ? அங்குமிங்கும் ஓடு வதனால் தாகம் மிகுதியாக உண்டாகி நாக்கு உலராதோ? ஆதலினால் தங்க முடி அணிந்த மன்னரே, சிறியேனுடைய சிற்றிலைச் சிதையாது இருங்கள். சையிது முகம்மது ரசூலே சிற்றிலை சிதையாது இருங்கள் என்று ஆசிரியர் பாடியுள்ளார். இக்கருத்துக்களைக் கொண்ட பாடல் பின்வருமாறு அமைந்துள்ளது.

செம்பொற் சதங்கைச் சிலம்பணிந்த செந்தா மரைத்தாள் நோகாதோ
தினமே யிறைபால் துவாக்கேட்குஞ் செழுங்கை யிரண்டுஞ் சிவக்காதோ
அம்பர்மணமு மாறாத அங்கம் புழுக்கங் கொள்ளாதோ
அங்கிச் சருவந்திசார்தனிலே அதனா லழுக்கு மேறாதோ
உம்பர் மதிபோல் வதனமது ஒல்கவியர்வை தோற்றாதோ
ஓடித்திரிந்தால் தாகமிக வுற்றே நாவுமுலராதோ
செம்பொன் மகுட முடிவேந்தே சிறியேன் சிற்றில் சிதையேலே
செய்ய திறசூல் முகம்மதுவே சிறியேன் சிற்றில் சிதையேலே.

(சிற்றில் பருவம்-5)

(சருவந்து-தலைப்பாகை, இசார்-கால்சட்டை)

ஆண்பாற் பிள்ளைத் தமிழில் உள்ள இறுதிப் பருவம் சிறுதேர்ப் பருவமாகும். இங்கே சீர் தேரினை உருட்டி அருளுமாறு குழந்தை யாகிய முகம்மது நபி (சல்) அவர்கள் வேண்டப்படுகிறார்கள். தெரு வில் இருந்து தூசு விண்ணுலகுவரை எட்டியமையால் விண்ணவர்கள் கண் இமைத்தனர். பொதுவாக விண்ணவர்கள் கண் இமைப்பதில்லை. மழை பெய்விக்கும் முகில்கள் மேலெழுந்து குடைபிடித்தன. இடி முழக்கத்தை ஏற்படுத்தின, மின்னின. விண்ணுலகில் சருவந்து என் னும் தலைப்பாகை தலையிலே ஒளிபரப்பியது. நபிகள் நாயகமாம் குழந்தையின் உடலில் உள் ஆடை ஆபரணங்களால் வெளிவரும் பிரகா சத்தினில் சூரியனுடைய ஒளி ஓடி மறையும். இவ்வுலகினிலே அறிவுக் களஞ்சியங்களான புலவர்கள் இறைவனைத் துதித்துப் போற்றுகின்ற னர். புரவலர், துறவலர் போன்ற கோடி கோடி மக்கள் சலாம் உரைக் கின்றனர். உங்கள் பாதையிலிருந்து பலம் வாய்ந்த யானைகளும் குதிரைகளும் அகன்றிடவே சிறுதேருருட்டி யருள்கவே. சிறுதேரை நடத்துகவே. முகம்மது நபி அவர்களே சிறு தேரை நடத்துகவே. இக்கருத்துக்கள் ஒரு செய்யுளில் பின்வருமாறு இடம் பெற்றுள்ளன.

ஆவண மீதினி லெழுதுகள் விண்புக அமரர்கள் விழியிமைக்க
அணிமின் விடுஞ்செழு மழைமுகி லெழுந்தடர்பெறக்கு டைக்கவிக்க
பாவன மீதுள்ள சறுவந்து சிரசினிற் பசுங்கதிரெண் விரிக்கப்
பரிமள மெய்யினி லணிகலை யொளிவுக்குப் பகலவ னொளி யொளிக்க

பூவனமீதொடு வறிவு கடங்கிய புலவர்கள் துதிதுதிக்க
புரவலர் துறவலர் சதசத கோடிப் புருடர் சலாமுரைக்க
சீவனமு ரீயகரிபரியகன்றிடத் தேரைந டத்துகவே
செயசெய சிங்க முகம்மது நந்நபி தேரைநடத் துகவே.
(சிறு தேர்ப் பருவம் : 8)

திசைச் சொற்களாக அரபுச் சொற்கள் ஒரு சிலவே நபிகள் நாயகம் பிள்ளைத் தமிழில் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். தமிழ் நாட்டில் வழங்கும் இஸ்லாத்துக்கு முரணான கருத்துக்கள் இங்கு இடம் பெறாமல் இல்லை. குறை களைந்து குணம் கொள்வதே எமது கொள்கையாக இருத்தல் அவசியமாகும்.

இஸ்லாமியப் பிள்ளைத் தமிழ் நூல்களில் இன்னொன்று முகியித்தீன் ஆண்டவர் பிள்ளைத் தமிழ். இப்பிள்ளைத் தமிழ் நூலில் முகியித்தீன் ஆண்டவர் குழந்தையாக வைத்துப் பாடப் பட்டுள்ளார். நவநீத புஞ்சம் என்னும் நூலிலே இப்பிள்ளைத் தமிழ் நூல் அடங்கியுள்ளது.

இப்பிள்ளைத் தமிழ் நூலை இயற்றியவர் செய்யிது முகியித்தீன் கவிராயர். இவர் திருநெல்வேலியிலுள்ள மேலப்பாளையத்தைச் சேர்ந்த முகம்மது சைன் புலவரின் புதல்வர். இப்பிள்ளைத் தமிழ் நூல் ஒரு சில இடங்களில் நபி நாயகம் பிள்ளைத் தமிழிலிருந்து வேறுபட்டிருக்கக் காணலாம். நபி நாயகம் பிள்ளைத் தமிழிலுள்ள காப்புப் பருவத்தில் அல்லாஹ் ஒருவன் மாத்திரமே புகழப்பட்டுள்ளான். ஆனால், முகையித்தீன் ஆண்டவர் பிள்ளைத் தமிழில் அல்லாஹ், நபி நாயகம் (ஸல்), கலிபாக்கள், வலிமார் முதலிய பலர் புகழப்பட்டு அவர்களின் அருள் இந்நூலில் பாடப்பட்ட குழந்தைக்குக் கிடைக்கும்படி வேண்டப்பட்டுள்ளது.

முகியித்தீன் ஆண்டவரின் பிறப்பிடம் ஜெயிலானி என்னும் நகர். இந்நகர் பகுதாதை அடுத்துள்ளது. பகுதாது இப்பொழுது இறாக்கு என்றழைக்கப்படும் நாட்டின் தலைநகர். முகியித்தீன் ஆண்டவரின் பிறப்பிடமாகிய ஜெயிலான் இப்பிள்ளைத் தமிழ் நூலில் வருணிக்கப் பட்டுள்ளது. அங்குள்ள ஓர் இயற்கைக் காட்சியை செய்யிது முகியித்தீன் கவிராயர் பின்வருமாறு பாடியுள்ளார் :

மடன்முறுக் கவிழும் பொருத்தலர் நறுந்துளி மழைச்செழுங் கமலத்திலே
வரியஞ் சிறைத்துத்தி ஞிமிறுமுறை முறை முதலாச்செழுங் கழுநீரிலே
குடவளை யினம்பூத்த புனலிநெடு
வாளைகள் குதிப்பினின் மலைந்திடைந்து
கூனுகளு டைந்துநடு மடைவாயி லேமணற் குன்றிலே பழனத்திலே
யிடமுடை யமுதுவண் டலிதுசுவர்க் காலிலே
யேறியலைந் தீரத்திலே

யிக்கினொடு கதலிவளர் கேளிப் பரம்பிலே
யேறிமுத் தின்நலம்பும்
திடமுடைய பெருஞ்செல்ஜெயி லானி நகராதிப.

முகியித்தீன் ஆண்டகை பேரில் பிள்ளைத் தமிழ் என்பது மற்றொரு பிள்ளைத் தமிழ் நூலாகும். இது காதிறு முகியித்தீன் புலவர் இயற்றியதாகும். சையிதினா முகியித்தீன் அப்துல் காதிறு ஜீலானி அவர்களின் வாழ்க்கையும் வாழ்க்கையில் நிகழ்ந்த அற்புதங்களும் அவர்கள் ஈட்டிய சாதனைகளும் இங்கு விவரிக்கப்பட்டுள்ளன. ஒவ்வொன்றும் பத்துப்பாடல்களைக் கொண்ட பத்துப் பருவங்களும் காப்புச் செய்யுளும் இங்கு இடம்பெற்றுள்ளன. மொத்தச் செய்யுட்களின் எண்ணிக்கை 102 ஆகும். காப்புப் பருவத்தில் 11 செய்யுட்கள் அமைந்துள்ளன. அம்புலிப் பருவத்தில் முகியித்தீன் ஆண்டவர் குழந்தையாகக் கணித்துப் பாடப்படும் விதத்தைப் பார்ப்போம்.

சந்திரன் அலைந்து திரியும், தேயும், மறையும், தோன்றும் ஆனல் எங்கள் ஒலிநாயகரோ அலைவதில்லை, தேய்வதில்லை, மறைவதில்லை. ஆதலினால் மறைந்து தோன்றும் நியதி அவர்களுக்கில்லை. அத்தோடு அவர்களுக்கு அறிவாற்றல் உண்டு. சந்திரனுக்கு பதினாறு கலைகளே உண்டு. ஆனல் முகியித்தீன் ஆண்டகை அவர்களிடம் அறுபத்து நான்கு கலைகளும் ஒருங்கே அமைந்திருக்கும். அதன் பயனாக உலகின் இருளை அகற்றும் ஆற்றல் பெற்றவர் முகியித்தீன் ஆண்டகை. பொன் போல் இலங்குவார்கள். எல்லா ஒளிகளையும் அழித்து விடுவார்கள். இந்த ஆற்றல்களை கண்டிலாயோ எனச் சந்திரனிடம் கேட்கிருர் ஆசிரியர். அவருடைய பொன் போன்ற அடிகளை சந்திரன் இறைஞ்சலாமே என்கிருர் ஆசிரியர். அவ்வாறு செய்யாது இருப்பது சிறுமை என்கிருர். சந்திரன் அன்பாக வந்து அவருடன் விளையாடினால் மரியாதை உண்டாகும். ஆதலினால் அம்புலியாடவா. இங்ஙனம் அழைக்கும் முறையைப் பின்வரும் பாடலில் காணலாம்.

உன்போலு மலையாது தேயாது மறையா
துயர்ந்தபெரு மதியிவர்க்கிங்
குண்டுகலை அறுபத்தினாலுக்கு மேல்விரித்
துலகெலா மிருளகற்றும்

பொன்போ லிலங்கிவரு கோடிசூ ரியரையும்
புன்னொளி படுத்தியீரேழ்
புவனம் புரக்குமொரு பட்சம் வளர்ப்பரப்
புதுமைநீ கண்டிலாயோ

தன்போ லிவர்க்குள்ள பொற்றா ணடந்ததைநீ
　　தான்வந் திறைஞ்சலாமே
தன்னைமதி யாதிருந் தாயெந்தை பாவலர்
　　தாமதிப் பதுசிறு மைகாண்
அன்பாக வந்துவிளை யாடின் மரியாதையுண்
　　டம் புலியாடவாவே
அகிலநா யகர்குறைஷி யொலிகளுடன்
　　அம்புலி யாடவாவே.

(அம்புலிப் பருவம்: 2)

நயினா முகம்மது பாவாப் புலவர் இயற்றிய ஒரு பிள்ளைத் தமிழ் நூலுண்டு. அது சைகு தாவூது வலியாண்டவர் பேரில் பாடப்பட்ட தாகும். நயினா முகம்மது பாவாப் புலவர் அவர்கள் அதிவீரராமன் பட்டணத்தைச் சேர்ந்தவர். தலைமைப் புலமை மகாவித்துவான் ஜீவ ரத்தினக் கவிராயர் மருகராவர். அவர், சொர்ணகவி என வர்ணிக்கப் பட்டுள்ளார். நயினா முகம்மது பாவாப் புலவரின் மைத் துனர் நவரத்தினக் கவி காதிறு முகியித்தீன் அண்ணாவியார் ஆவார். அவருடைய குமாரர் கபீபு முகம்மது அண்ணாவியார். இந்த பிள்ளைத் தமிழ் நூலை கபீபு முகம்மது அண்ணாவியார் சென்னை அஷ்டலட்சுமி விலாச அச்சியந்திர கலையில் அச்சிட்டு வெளியிட்டார். ஹிஜ்ரி 1313ம் ஆண்டு ஜமாதுல் அவ்வல் மாதம் கி.பி. 1895ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 25ஆம் தேதி அச்சிடப்பட்டது இந்நூல்.

வெண்டரள மாநகர்தனிலே பிறந்தவர் சைகு தாவூது வலி அவர்கள். அவர்களுடைய வாழ்க்கையையும் அவர்தம் வாழ்க்கையில் ஈட்டிய சாதனைகளையும் இப்பிள்ளைத் தமிழ் நூல் விவரிக்கின்றது. இந் நூலில் இடம் பெற்றுள்ள பத்துப் பருவங்களிலும் நூறு பாடல்களே இடம் பெற்றுள்ளன.

பிள்ளைத் தமிழ் நூல்களிலே ஓசை நயப் பாடல்களும் இடம் பெறுவதுண்டு. அத்தகைய ஒரு செய்யுள் இப்பிள்ளைத் தமிழில் தாலப் பருவத்தில் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். சைகு தாவூது ஒலிஅவர்களின் பெருமைகளைக் கூறும் ஒரு செய்யுள் கலிச் சந்த விருத்தமாகத் தாலப் பருவத்தில் வந்துள்ளது. அது வருமாறு:

செந்தா மரைமான் வந்தார் சயமே சீரார் நேரோரே
　　செங்கோலரசே மங்கா நலமே தேனார் தாரோரே
இந்தா ரமுதே செந்தே னதியே யேதார் வீரோரே
　　எங்கோ னொலியே பைங்கார் முகிலே யேரார்பேரோரே

சந்திரோ தயமே ஐந்தார் மருவே தாலோ தாலேலோ
சந்தார் வனமே சிந்தா மணியே தாலோ தாலேலோ
தந்திரா திபரே கொந்தார் புயரே தாலோ தாலேலோ
தனியோ னருள்சைகு தாவூதொலியே தாலே தாலேலோ
(தாலப் பருவம்)

இந்தப் பிள்ளைத் தமிழ் நூலில்இடம் பெற்றுள்ள அம்புலிப் பருவத்தில் உள்ள பாடல்களில் அம்புலியாடவாவே என்று முடிவடையும் பாடல்களும் ஆடவா வெண்ணிலாவே என்று முடிவடையும் பாடல்களும் கலந்து வருகின்றமையைக் காணலாம். முத்து என்னும் சொல்லைக் கொண்டு முடிவடையும் பாடல் அடிகள் ஒரு சிறப்பம்சமாகவே அமைந்துள்ளன. அங்ஙனம் முத்து முத்து என வந்துள்ள அடிகளைக் கொண்ட பாடல் வருமாறு:

எட்டவரி தானபொரு ளாதிதன் னருட்கிருபை
யென்று மகலா தமுத்து
இல்லற முடன்துறவ றங்களும் விளங்கவே
யெழினுதவி யானமுத்து
கொட்டமிடு மடையலர்க ளஞ்சித் திகைக்கவே
கோனரசி யற்றுமுத்து
கொண்டலென வாணர்க டுதிக்கவே பொன்மாரி
கோணா தளிக்கு முத்து
முட்டியடர் துன்பவினை பற்றற விளைக்கவே
முறையமு தருத்து முத்து
மூதறிவி னோர்கள்புகழ் மாதவம் விளங்கிவளர்
முத்துநக ருற்ற முத்து
அட்ட திசைமெய்க்கின்ற வாணிமுத் தாமிவர்முன்
ஆடவா வெண்ணிலாவே
அரசர்புக ழுஞ்சைகு தாவுதொலி நாதர்முன்
னாடவா வெண்ணிலாவே

(அம்புலிப் பருவம் : 8)

(முத்துநகர் – முத்துப்பேட்டை பாட்டுடைத் தலைவர் அடக்கம் பெற்றிருக்கும் ஊர்).



# அகரவரிசைத் தொகுப்பு அட்டவணை

